சிமையில் எடின்பர்க், டப்ளின் கிளாஸ்கோவ் என்ற இடங்களில் ஆயுள்வேத சாஸ்திரங்கற்று, L. R. C. P. & S., L. M., L. F. P. S. முதலிய கௌரவப் பட்டங்கள் பெற்றவரும், இரங்கோன் ஜெனரல் ஆஸ்பத்திரியில் அசிஸ்டெண்ட் சர்ஜனுமான டாக்டர் R. சிவசுப்ரமணிய ஐயரவர்களெழுதுவது:—

ஜான்ஸ் காலேஜ் கனம் சாமிவேல்துரை அவர்களெழுதிய யாவருக்கும் பிரயோஜனமான தமிழ் சாஸ்திரத்தின் சில பாகங்களைப் பார்வையிட்டேன். அவற்றிலும் விசேஷமாய்க் கர்ப்பக்கால நோய்களும், பரிகாரங்களும், கர்ப்பக்கால சுகாதார விளக்கம் முதலிய பாகங்களை நான் ஆராய்ச்சிசெய்ததில் அவைகள் இனியநடையில் எழுதப்பட்ட யாவர்க்கும் பிரயோஜனமான விஷயங்களே. ஒவ்வொரு ரோகத்திலும் அவசரத்திற்குத்தகுந்தபடி அவரவர்களே சமயோசித சிகிச்சை செய்துகொள்வதற் குபயோகமான இவ்வித புஸ்தகம் இதுவரையில் தமிழ்நாட்டில் பிரசுரமாகவில்லையாதலால் இப்புஸ்தகம் அவசியமே. புஸ்தகாசிரியரின் கோரிக்கை நிறைவேற, பகவான் கடாக்ஷிப்பாராக.

---

இரங்கோன் முகல்ஸ்ட்ரீட், க. ரா. ம. அ. ஏஜண்டு

ம-ா-ா-ஸ்ரீ இராமநாதஞ் செட்டியாரெழுதுவது—

ம-ா-ா-ஸ்ரீ பி. ஏ. சாமிவேல்துரையவர்கள் இங்கிலீஷ் தமிழ், வைத்தியம், சோதிடம், கணிதமுதலிய பன்னூலும் நன்காராட்சி செய்து "சிவபுற்பதி சிந்தாமணி." யென்னும் நாமம் வாய்ந்த, "மானிட மர்ம சாஸ்திரத்தை" வெகு அற்புதமாகவும், பாஷை நடை, பொருள் அமைதி மிகவும் தெள்ளிதா யியற்றியிருப்பதை யான வாசித்துப் பார்த்த வளவில் யென்னுள்ளத்தைக் குதூகலிக்கச் செய்தது.

தாமின்புறுவ துலகின்புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந்தார்.

எனும் நீதிக் கிணங்க, சாலவிழுப்பொருள் பயக்கும் இச்சாஸ்திரரத்தினத்தை யாவரும நன்கு வாசித்துணர்ந்தின்புறக்கருதி அச்சிட்டு வெளிப்படுத்துமபடி மேற்படி துரையவர்களிடம் நான்கேட்டுக்கொண்ட பிரகாரம், தகுந்த தொகை செலவிட்டு வெகு பிரயாசையுடன், இந்நூலை அச்சிட்டு வெளிப்படுத்த முயற்சித்திருக்கிறார்கள். வாசித்தறிந்த ஒவ்வொருவரிடத்திலும் இந்நூலிருக்க வேண்டிய ததயாவசியமே, நல்லபொருளை நாளைக்குப பார்ததுக் கொள்ளலாமென்று காலஹரணஞ் செய்வதைவிட உடனே வாஙகி உபயோகிப்பதால் லாபமே யன்றி நஷ்டமேயில்லை.

இலை

கக்கொண்டார் பாங்கர் பற்பல கருமப் பண்டிதரிருத்தல்போ ரக்கமுந் தெளிவு முயர்த்துமென்றெனவும் நினைக்கின்றேன்.

---

சிமையில் எடின்பர்ச்; கிளாஸ்கோவ், டப்ளின் என்ற இடங் ளில் ஆயுள்வேத சாஸ்திரங்கற்று, L. R. C. P. & S., L. M., F. P. S. முதலிய கௌரவப் பட்டங்கள் பெற்றவரும்; இராய ான் ஜெனரல் ஆஸ்பத்திரியில் அசிஸ்டென் சர்ஜனுமாகிய டாக் ர் J. S. லாமெக எழுதுவது:—

"சிசுவுற்பத்தி சிந்தாமணி"யில் கர்ப்பக்கால நோய்களும் பரி ரங்களும் என்ற பாக முழுவதையும் நுட்பமாய் ஆராய்ச்சி ய்தேன். அது வெகு தெளிவாய் எழுதப்பட்டிருக்கிறது. வைத் ப விஷயமாயாவது இல்லற வொழுக்க விஷயமாயாவது இவ் த நூல் இது பரியந்தம் தமிழ்நாட்டில் வெளியாகவில்லை. ஆத ல் மிஸ்டர் சாமிவேல் எழுதிய இச்சிறந்தசாஸ்திரம் ஒவ்வொரு நக்கும் மிக்க அவசியமே. பலநூல் ஆராய்ச்சியின் மூலமாகவும் நுபோகத்தின் மூலமாகவும் தாமறிந்த விஷயங்களை தமிழ் நாட் யர்களுக்கு எளிதில் கிடைக்கத்தக்கதாக மிஸ்டர் சாமிவேல் எடு பிரயாசத்திற்காக அவர்களுக்கு முழு இருதயத்தோடு வாழ்த் ல் கூறுகின்றேன்.

---

(அனேக ஆண்டுகளாகச் சென்னைச் சர்வகலா சங்கத்தின் ழ்த் தலைமைப் பரீக்ஷகரும்,) இராஜகீய பிரதான நியாயஸ் த்துவ பாஷிபரும், மதுரைத் தமிழ்ச்சங்கத்து வித்வ அங்கத் ரு ளொருவருமாயிருந்த வித்வான், "தண்டலம் பாலசுந்தர லியாரவர்க ளெழுதியது:—

ஆங்கிலேயம், தமிழ், ஆகிய உபயபாஷா விற்பன்னர் கனம் ிவேல் துரையவர்க ளியற்றிய மர்ம சாஸ்திரம் என்னும் அரிய ிற் பற்பல பாகங்களை வாசிதலைக் களிப்பெருவகை யெய்தி ன். அறியாமை காரணமாக நெடுங்காலமா யனுசரிக்கப்பட்டு ம் அனேக துர்வழக்கங்களினால் விளையக்கூடிய அளவிறந்த மகளும், அவற்றைப் பரிகரிப்பதற்கேற்ற வழிவகைகளும் ஒரு'ன்றுங் காதலருவர் கருததொக்க வாதாவுப்படக்த ரயம்." எனனுமானமோ ரனுபவ அமுதவாக்கு நிதரிசனமான ியங்களும், இல்வாழ்க்கைத் துணை நலத்திற் கின்றியமையா 'வாயுள்ள சில பரமாகசியங்களும், "பெறுமவற்றுள் யாமறிவ அறிவறிந்த மக்கட் பேறல்லபிற." எனவும் "தம்பொரு ன்பதம் மக்கள்." எனவும் அறிஞர் கூறிய ஈனமக்கட்பேற்றுப்

கும், அன்னோரைப் பேணுதற்கு மனுதுணமான அநேக சாதகங்களும், இடையிடையே, "நின்றுற்ற லறிவிக்கும் நின்னறிய படைப்பே" என்று சர்வஞ்ஞராயும், சர்வ சக்திபாராயுமுள்ள ஜகதீசரைத் தியான பூர்வமாக வியப்பதற்கேற்ற சிற்சில பாகங்களும், இந்நூலிலமைந்து விளங்குகின்றமையால்,

> "இயல்பினானின் வாழ்க்கை வாழ்பவனென்பான்
> முயல்வாருளெல்லாந் தலை."

எனும் முப்பானூலார் கட்டளை கடைப்பிடித்தொழுக விரும்பும் ஒவ்வொரு ஆண் பெண்ணிடத்தும் இந்நூலிருப்பது உசிதமேயாம். அஃது அவ்வாறு நிகழுமாறு திருவருள் முன்னிற்க!

---

THE CHRISTIAN PATRIOT SAYS:—This Sastra, as all Sastras more or less are, is a bulky volume but written in Chaste Tamil and has its own literary value. The book consists of over 500 pages of well-printed matter, dealing with the mysteries of the science of life as every man and woman ought to know. Though it bears a misleading title, yet the book is singularly free from all objectionable matter and vulgar terms so common in treatises of this kind. The hard labour spent on the book in making it at once scientific and popular, has won for the author not only the approbation of the Indian public in Rangoon but as a proof of their approval, the Chintamani Gold Medal also—a medal usually offered to men of scholarly attainments or pundits in olden times. The book was dedicated to Rai Bahadur P. M. Madooray Pillay and the dedication ceremony was recently celebrated with great *eclat*, several leading gentlemen of the Indian Community in Rangoon taking part in the proceedings—a point of recommendaion for the respectable receptioh of the book in the eye of the Indian peoples. The Rev. V. N. Kemp, M.A., Rector of St. Gabriel's Church who presided at the dedication ceremony is of opinion, and we are inclined to concur with him that "the book is bound to be of immense help and of the greatest possible practical usefulness to parents, married people and young men."

---

## சென்னை விவேகபோதினி சொல்லுவது:—

அருமையான ஒரு பெருத்த தர்ம சாஸ்திரமென்றே இதனைச் சொல்லவேண்டும். இத்தகைமை உபயோகமுள்ள அவசியமான கிரந்தத்தைத் தமிழ்ப்பாஷையில் இதுகாறும் நாம் கண்டிலேம். ஆகையால் இவ்வரிய பிரபந்தத்தை யாவரும் வாங்கி வாசித்து ஆனந்திப்பதுடன் அதில கூறிய விதிகளை யனுஷ்டித்து அரோக திடகாத்திராவார்களென்று எண்ணுகிறோம்.

கடவுள் துணை.

# மானிட மர்மசாஸ்திரம்.

[illegible]

## முதலாம் புஸ்தகம்

மானிட ஜீவியத்தின் நான்கு பருவங்கள்.

[illegible]

[illegible]

இவை

[illegible]

அக செல்வ நன்மைகளையும் ... பாக்கிய
சௌக்கியத்தையும் நீடித்து பெறுதற்காக
விரும்பி

[illegible]

[illegible]


எஸ். சாமிவேல், பி. ஏ. அவர்கள்
இயற்றியது.


புதிய பதிப்பு.


சாமிவேல் பிரஸ்,
தென்காஞ்சி, இரங்கோன்.
1921.



All Rights Reserved.




மனித ஜீவியத்தின் பல பருவங்கள்

# மானிட மர்ம சாஸ்திரம்.

## முதலாம் புஸ்தகம்.

## (BOOK I.)

### மானிட ஜீவியத்தின் நான்கு பருவங்கள்.

### (The Four Stages of Life.)

The following is the substance of an address delivered by the author before the members of the Brethren Association, at Pasumalai College, Madura, on the first Sunday in August 1888.

இந்நூலாசிரியன் மதுரைக்கடுத்த பசுமலைக் காலேஜில் மாணாக்கனா யிருக்கும்பொழுது அங்குள்ள சகோதர ஐக்கிய சங்கத்தின் 1888-ம் வருஷ மகோற்சவத்தில் செய்த உபந்நியாசத்துடன் சிற்சில பாகங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

### ஓர் உபந்நியாசம்.

ஆண்டவர் பிறந்த ஆயிரத்தெண்ணூற் றெண்பத்தெட்டாம் ஆண்டில், அதிலுறும் ஆகஸ்ற் மாசம், அதிலுமோர் ஆதியாதித்த வாரந்தன்னில் அரியபகல் நாழிகை பதினெட்டில், அற்புதக்கடவுளை, அன்புடன் தொழுது அனிவர்சரி (Anniversary) கொண்டாட, இன்புடன்கூடி இங்கு வந்திருக்கும் இச்சிறு பாலியர் நடுவில், ஏகனே வந்தும் கிருபையைப் பொழிய ஏகமாயஞ்சலிசெய்கின்றோம்.

அண்டபகிரண்டமும் அடங்க ஒரு நிறைவாகி ஆனந்தமான பொருளாய், இம்மண்டலந்தனிலுறும் மானிடர் தங்களை மறையினு லரவணைத்துக், கோழிதன் குஞ்சினைச் செட்டையின் கீழதாய்க் கொண்டு காப்பாற்றும் வண்ணமாய், குவலயந்தனிலுறும் குழுவினர் தங்களைக் கோதற வழிநடத்தியே, கல்லினுள் தேரைக்கும் கர்ப்பத்துப் பிள்ளைக்கும் கருத்துடனமுதளிக்கும், கர்த்தனும் ஈஸ்வரன் கருணையின் பதங்களைக்கண்யமுடனே துதித்து, போற்றிப் புகழ்ந்திடும் இச்சிறு பாலியர் பிரதான் அசோசியேஷன் (Brethren Association,) புவியினிலென்றுமே.ஓங்கிவளர்ந்திடப்,

புனிதனே கிருபைசெய்யும், பாங்குடன் பசுமலைக் காலேஜினில் கல்வி பயின்றிடும் பாலியர் நல்பக்குவத்துடனே உன் சரண்பணிந் தடி தொழப்பார்த்திபா கிருபை செய்யும்.

எண்ணிறந்த கருணைசங்கலைப் பரிஷ்காரமாய் நம்மில் வருவித்த ரக்ஷா தெய்வத்தைப் பிரதிதினமும் ஆக்ரசேவைசெய் தனுஷ்டித்து மறோ பூஜிதா ஸ்தோத்திரம் புரிந்து கிஷ்களனது புஷ்கள கடாக்ஷமே தம் பூரண மனோருக்ஷமாகக் கொண்டிருந்து, சமயோசிதமாய் எம்பெருமானுக்குப் பிரார்த்தனை மாலை புனைந்து சாந்திப் பரமானந்தமுற்றுப் பரவசமடைந்து பிரார்த்தித்துவரும் மிக்க அருமையும், உரிமையும், பெருமையும் பொருந்திய, சஜ்ஜன, தவன, தவன கனவான்களான மஹான்கள் முன்னிலையில் அடியேன் புளகாங்கிதமாய் ஹிர்தயங் கனிந்துரைக்கக்கூடிய உபந்நியாசம் யாதெனக் கிஞ்சித்து மனதிலெண்ணித் தியானித்துக் கொண்டிருக்கையில்—அநேக ஆண்டுகளுக்கு முன் அரியாசனத்தின் கண்ணே வீற்றிருந்து ஆச்சுக்கோலோச்சி அரசுபுரிந்து வந்தவோர் மகுடாதிபாது நவரத்தினங்க ளிழைக்கப்பெற்ற கிரீடத்திலிருந்தோர் வச்சிரக்கல்லானது காலபேதததால் தவறிவிழவேண்டியதாகிச் சேற்றினுட்கிடக்க, அதனருமை தெரியாத ஓர்சிறுவன் அதைக் கல்லெனக்கருதி யெடுத்து விளையாடிக் கொண்டிருக்குமாப்போல், அநேக காலங்களுக்குமுன் நம் தமிழ்நாட்டு வித்வ சிரோன்மணிகளி லொருவர் மானிட ஜீவிய முழுவதையும் நான்கு சிறந்த பாகங்களாகப் பிரித்து அவற்றை நான்கு இனிய பதத்தினுள்ளடக்கிப் பாடிய நித்திலக்கொத்துக் கொப்பானு ஓர் சித்திரத் தமிழ்ச் சுலோகத்தின் கருத்தொன்று மறியாமல் நம் சிறுவர்கள் சொல்லி விளையாடிக்கொண்டிருப்பது என்மனதில் தோன்றியது. அதாவது:—

"கீச்சிக் கீச்சித் தம்பனம்,
கீயாக் கீயாத் தம்பனம்,
மாச்சி மாச்சித் தம்பனம்,
மாயா மாயாத் தம்பனம்." என்பதே.

பாருங்கள்! எம் நண்பரே! கீச்சி, கீயா, மாச்சி, மாயா என்ற நான்கு பதங்களுக்குள் நம் ஜீவிய முழுவதிலும் நடக்கக்கூடிய விஷயங்களை அடக்கி விளக்கிக் காட்டிய நம் தமிழ்நாட்டு வித்வ சிரோன்மணிகளின் சாமர்த்தியத்தை என்னென்று சொல்வேன்!

இச்சுலோகத்திற்குத் தாற்பரியம் சொல்லப்புகுமுன், சிசுவானது தன் மாதாவின் உதரத்தில் தங்கியிருக்கும் ஒன்பது மாதங்களிலதற்குண்டாகும் மாறுதல்களைப் பற்றியறிய ஆசைகொள்வீரெனக் கருதி அதைப்பற்றிச் சில வார்த்தைகள் * இங்கு கூறுகின்றேன்.



சிசுவானது ஒன்பது மாசக்காலம் தன் தாயினது கும்பியில் சராயு என்னப்பட்ட பையினுள்ளிருக்கும் நீரில் மிதந்துகொண்டிருந்து பத்தாவது மாசத்துவக்கத்தில் இப்பூலோகத்தின் கண்ணே உதித்து, இந்தப் பஞ்சமாபாவிகளுடன் நானுஞ் சேர்ந்து சகல கஷ்டங்களையு மனுபவிக்கப் பரப்பிரமம் என் தலையில் விதித்ததே! என்னும் சஞ்சலத்தைக் குறிப்பிட்டுக் காட்டுமாப்போல் வீர் வீரென்று அல்லது கீச்கீச்சென்று இனிய மதலைக் குரலால் ** கத்துகின்றது. இவ்விதமாய் இந்தச் சிசுவானவன் புலம்பிக் கதறுவதை மாதாபிதாக்கள் பார்த்து வயிற்றுநோயினால் அழுகிறானென்று வேப்பிலை ரசத்தை அல்லது காயத்தை உரைத்துப் பானம் பண்ணுவிப்பார்கள். வயிற்றுநோயினால அழுதால் பசித்தழுகிறானென்று ஸ்தன்னிய பானம் பண்ணுவிப்பார்கள்.

இப்பேர்ப்பட்ட கஷ்டங்களை யடைந்து நிவர்த்தித்துக்கொள்ளச் சக்தியற்றவனாய், எறும்பு, கொசு முதலான ஜெந்துக்களால் இம்சிக்கப்பட்டும், அசுசியான சயனத்தில் படுத்துக்கொண்டும், தன் அவயவங்களைச் சொறிந்து கொள்ளவும், எழுந்து உட்காரவும் சாமார்த்தியமற்றவனாய்ச் சிக்குச் சிரங்கு முதலிய பல நோய்களில் அழுந்தித் துக்ககரமான பாலியத்தை ஐந்து வயது வரைக்கும் அனுபவிக்கின்றான்.

* இதைப்பற்றி இப்புஸ்தகத்தின் ஐந்தாம் பாகத்தில் தெளிவாய் விளக்கிக் காட்டியிருக்கின்றமையால் இங்கு கூறாது விட்டனம்.

** (1) "I wept when I was born, and everyday shows why.
(2) "When we are born we cry, that we are come to this great stage of fools." *Shakespeare*,

என ஆங்கிலேயக் கவிச்சக்கிரவர்த்தியாகிய ஷேக்ஸ்பியரும் கூறுகின்றனர்.



## கீச்சிக்கீச்சிப் பருவம்.

இதுதான் முதற்படி. இந்த ஐந்துவயது வரைக்கும் மாசற்ற குழந்தையா யிருந்து, இனிமேல் இவ்வுலகத்தில் பிரவேசித்துத் தன் வாழுநாளைப்போக்குவதற்குரிய ஏதுக்களைத்தேடிக்கொள்வதற்காகப் பற்பல சாஸ்திரங்களில் அப்பியாசிக்கப்படுகிறான். குழந்தைகள் தங்களுடைய பால் ஒழுகுகின்ற வாயினால் மதுரமான மழலைச் சொல்லைப் பேசத் தொடங்குங் காலமுதல் சிறிதுகால வளவில் தங்கள் நடை, உடை, பாவனைகள், பக்தி, விசுவாசம் முதலான காரியங்களைத் தங்களைச் சுற்றிலு மிருப்பவர்களைப் பார்த்துப் பழகத் தொடங்குவார்கள். "சுற்றும் எப்படியோ முற்றும் அப்படியே." ஆகையால்தான் "ஒழுக்க முயர்குலம்" என்னும் நீதிநூலின்படி ஒழுக்கமுள்ளவர்களாகப் பாலியர்களை வளர்ப்பது உத்தமம்.

"தொட்டிற் பழக்கம் சுடுகாடுமட்டும்." "ஐந்திலே வளையாதது பின் ஐம்பதிலே வளையுமா?" சாண்பிள்ளையா யிருக்கும்போது சரியாய் வளர்த்தால் ஆண்பிள்ளையானபின் ஆள்வோனாவான். சாண்பிள்ளையில் சரிப்படாதவன் வீண்பிள்ளையாவானேயன்றி வேறல்ல. "சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை, பார்த்ததைச் செய்யும் மானிடப்பிள்ளை." பிள்ளைகள்முன் அவர்கள் கண் காணக்குடித்து வெறித்துச் சிரித்துக் களியாட்டுக்கொள்ளும் பெற்றோருடைய பிள்ளைகள், ஜெபதப ஒழுக்கங்களில் வளருவது அசாத்தியம். "மரத்தின் கனி மரத்தடியிலே விழும்" "சிறுமையில் கல்வி சிலையில் எழுத்து." ஆதலால் "ஐந்துவயதில் ஆதியை ஓத அப்பியாசிக்க வேண்டும். சிறு வயதில் பொய் சொல்லவும், புறணி பேசவும், எதிர்த்து நிற்கவும், ஏளனம் பண்ணவும் தொடங்குகிற பிள்ளைகளைப் புண்ணிய வழியில் பழக்குவிப்பது பெற்றோரின் கடமை.

பிள்ளைகள் துர்க்குணத்தில் உருவானவர்கள். பாவத்தில் கர்ப்பந்தரிக்கப்பட்டவர்கள். அவர்கள் துர்க்குணத்தைப் போக்கவும், அவர்களை நற்குண சீலர்களாக்கவும் சிறுவயதே தகுதி. அவர்கள் கற்கவேண்டிய முதற்பாடம் கீழ்ப்படிதல். நமது இரட்சண்யப் பெருமான் பன்னிரண்டு வயதுவரை தமது பெற்றோருக்குக் கீழ்ப்படிந்திருந்ததாக வாசிக்கின்றோம். கீழ்ப்படிதலைப் படிப்பிக்கக் கண்டிப்பு அவசியம். ஏலியின் இளக்காரம் என்னமாய் முடிந்ததென்று நமக்குத் தெரியுமே. "அடித்து வளர்க்காத பிள்ளையும் முறுக்கி வளர்க்காத மீசையும் செவ்வையாகா." ஆனால் கண்டிப்பிலும் கணக்கு வேண்டும். அடிப்பதிலும் அளவு வேண்டும். பிரம்படி தகுதியே யன்றி இரும்படி தகுதியல்ல. தண்டிக்கலாமே யன்றி துண்டிக்கலாகாது. அடிக்கலாமேயன்றி அழிக்கலாகாது. புஸ்தகமும் கையுமா யிருப்பதே பிள்ளைகளுக்கு அழகென்று சொல்வது புத்தியீனம். சீக்கிரப்புத்தி பலவீனம். அதிகப்படிப்பு உடலுக்கிளைப்பு. பாடம் படிக்கும் நேரமுமுண்டு, பந்தடிக்கும் காலமும் உண்டு.



இதற்குத்தான் கீச்சிக் கீச்சிப் பருவம் அதாவது மற்றவர் உதவியை நாடி அவர்களைச் சார்ந்திருக்கும்பருவம் என்றுசொல்வது.

தம்பனம் என்ற பதத்திற்கு அர்த்தமென்னவெனில்- ஜேஜ் மலையாள பகவதி! குட்டிச்சாத்தா! ஓடிவா எனக் கதறிக், கையைத்தட்டிக், கண்ணைக்கட்டி, ஆகாயத்தைக்காட்டி, அரிய பொருள்களை வருவித்து, மூன்றேமுக்கால் நாழிகைக்குள் 'மாயை மாயை எல்லாம் மாயை'யெனப் பிரசங்கி சொல்வதுபோல் சகலத்தையும் மறைத்துக் கைச்சாலம், வாய்ச்சாலம், மயேந்திரஜாலம் செய்யாநின்ற ஸ்தம்பன வித்தைக்காரரைப்போல் சகல பருவமும் மாயையாகக் கடந்து விடுகிறது என்பதே இதன் கருத்து. தம்பனத்திற்குப் பதிலாகத் தம்பலம் என வைத்தால் தோன்றின நாளிலேயே மறைந்துபோகும் தம்பலப் பூச்சியைப்போல் சகல பருவமும் மறைந்துபோகும் என்பதிதன் கருத்தென்றுஞ்சொல்லலாம்.



இனிமேல் கீயாக் கீயாப் பருவம் தோடங்குகின்றது:—



அதாவது மூக்குச் சிவந்து சிறகு தட்டிப் பறக்கப் படிக்கும் காலம். கோழிக்குஞ்சு முதலில் தன் தாய் கொத்திக் கொடுக்கும் இரையை அதன் பக்கத்திலிருந்து பொறுக்கித் தின்னும். ஆனால் சற்று முதிர்ந்து தானே இரைபொறுக்குங் காலம் வந்தவுடன், தன் தாயின் சார்பைவிட்டுச் சற்றப்புறஞ் சென்று இரைபொறுக்கிக் கொண்டிருக்கும். அச்சமயத்தில் அதைப் பட்சிக்கும்படி கருடன் முதலிய பக்ஷிகள் ஆகாயத்தின் கண்ணே சுற்றி உலாவுவதைக் கண்டவுடன், கீயாக் கீயாவென்ற கூக்குரலுடன் தனதன்னையிடம் வந்தடைக்கலம் புகுவதை நாம் பார்த்திருக்கிறோம். இதற்குத்தான் கீயாக் கீயாப் பருவம். இனி மேல் குழந்தைகள் வாலிபராகிவிடுகின்றனர்.

**நீதி நூல்.**

"வளையிள மரந்தனை நிமிர்த்தல் வாய்க்கும்பொன்
னிளகிய பொழுதணி யியற்ற லாகுநல்
வளமுறு கேள்விநூன் மாண்பு நற்குணம்
இளமையினன்றி மூப்பெய்தி னெய்துமோ."

தண்டிலே வளையாதது தடியில் வளையாது. பொன், வெள்ளி முதலிய லோகங்களை உருக்கி, இளகியிருக்கும்போதே ஆபரணங்கள் செய்துகொள்வர். அதுபோல், பெற்றோர் தம்மக்களின் மனமாகிய நிலத்தில் கல்வியாகிய விதையை விதைத்து, பொய், சூது, வஞ்சனை, துர்ச்செய்கை முதலிய களைகளை அகற்றி, கல்வியாகிய

## EARLY EDUCATION.

In the education of children love is first to be instilled, and out of love obedience is to be educed. Then impulse and power should be given to the intellect, and the ends of a moral being be exhibited. For this object this must be effected by works of imagination; that they carry the mind out of self, and show the possible of the good and the great in the human character. The height, whatever it may be, of the imaginative standard will do no harm; we are commanded to imitate one who is inimitable. We should address ourselves to those faculties in a child's mind which are first awakened by nature, and consequently first admit of cultivation; that is to say, the memory and the imagination. The comparing power, the judgment, is not at that age active, and ought not to be forcibly excited, as is too frequently and mistakenly done in the modern systems of education, which can only lead to selfish views, debtor and creditor principles of virtue, and an inflated sense of merit. In the imagination of man exists the seeds of all moral and scientific improvement; chemistry was first alchemy, and out of astrology sprang astronomy. In the childhood of these sciences the imagination opened a way and furnished materials on which the ratiocinative power in a maturer state operated with success. The imagination is a distinguished characteristic of man as a progressive being; and I repeat that it ought to be carefully guided and strengthened as the indispensable means and instrument of continued melioration and refinement —*S. T. Coleridge.*

It is a great art in the education of youth to find out peculiar aptitudes, or, where none exist, to create inclinations which may serve as substitutes. Different minds are like different soils; some are suited only to particular cultivation; others will mature almost anything; others, adapted to a round of ordinary products; and a few are wasted, unless they are reserved for what is most choice.—*Walker's Original.*

Choose betimes the courses and vocations you mean your children should take, for then they are most flexible; not regarding altogether the disposition of the children, as thinking they will take but to that which they have a mind. It is true that if the affection or the aptness of the child be extraordinary, it would be wrong to cross it; but, generally, the precept would be found "**choose what is best, and custom will make it pleasant and easy**"—*Bacon.*

Idle, wandering beggars train up their children in a trade of begging, and lying, and cursing, and filching, and all idleness, and abominable filthiness. Covetous worldlings are ever distilling into the ears of their children precepts of parsimony and good husbandry, reading them lectures of thrift, and inculcating principles of getting and saving . . Wretched and accursed is our supine carelessness, if these wicked men's diligence (whose first care for the fruit of their bodies is to poison their souls, by sacrificing their sons and daughters to idols) shall rise up in judgment against us, and condemn our foul neglect, in not seasoning the tender years of our children with such religi-

## வாலிபப் பருவம்.

இப்பருவத்தில்தான் நம் பாலியர் சௌரிய தைரிய வீரிய சம்பன்னரெனப் பெயர்வாங்கிச் சகல ரூபலாவண்யமும் பொருந்தியிருப்பார். இதுவே மகத்தாய சம்பவத்தின் காலமும் நல்லுணர்வின் வசந்த ருதுவுமாம். இதுவே மகா வீரத்துவ நிபுணாது இதய கமலத்திற் பெருஞ் சிந்தையும் புகழத்தக்க புத்திசாதுரியமும் புஷ்பித்துப் பரிமளிக்கும் பருவம்.

இளமைப் பருவம் நழுவுங்காலைக்
களிமிகு கன்னியருளமும் வாக்கும்
புளியம் பழமும் தோடும் போலாம்.
வளர்கொடிப் பருவமடையில் நட்ட
அருகுள தருவை யளாவும்.




இப்பருவம் எவ்வளவு சிறந்ததோ அவ்வளவு மோசமும் இதிலுண்டு. புதிதாக உண்டு பண்ணப்பட்ட ஓர் வில் வண்டியினது வல்லமையைச் சரியானபடி அறியுமுன் அதில் அதிக பாரத்தை ஏற்றிக் கரடு முரடான பாதையில் நடத்திக்கொண்டுபோயின் வில் தெறித்துச் சேதப்பட்டுப் போவதுபோல், நம் வாலிபப் பிராயமாகிய புது வில் வண்டியை அதிக யோசனையோடு நடத்தாவிடின் வில் தெறித்து நம் பிற்காலமெல்லாம் கேவலமாய் முடியும். புத்தியும், சித்தமும் ஆகிய நமது இரு மட்டக் குதிரைகளுக்கும் பக்தி அடக்க ஒழுக்கமாகிய கடிவாளத்தையும், தெய்வபயம், விசுவாசமாகிய கண்மறைப்பையும் போட்டு அக்கம் பக்கம் விலகவிடாமல் வெகு பக்தியாய் மேடு பள்ளம் பார்த்துவிடவேண்டும்.

மட்டக் குதிரைகள் செவ்வையாய் வண்டியை இழுத்துக்கொண்டு நன்மார்க்கத்தில் செல்லும்படியாகப் பாகன் எவ்வளவு சிரத்தை யெடுத்துப் பழக்குவிக்கின்றானோ அவ்வளவுக்கு தயை, தாட்சண்யம், அன்பு, அடக்கம், வாய்மை, பொறுமை, தெய்வ பக்தி முதலிய நற்குணங்களிலும், இவ் வவனியின் கண்ணே யொருவன் கீர்த்திபெற்றோங்கத்தக்க சகல சாஸ்திரங்களிலும் பயிற்சிப்பதற்காகவே சர்வ நற்குணங்களையும் பூஷணமாகப் பூண்ட புண்ணிய புருஷர் வச்சிரக்கல் மாளிகைகளில் சர்வகலாசாலைகளை யேற்படுத்திச் சாஸ்திரங்களில் சபை மெச்சும் தாஷ்டிகப் பிரசங்க சமர்த்தும் சொற் சாதுரியமுமுள்ள வித்வசிரோன்மணிகளைக் கொண்டு, சாஸ்திரம், வேதாத்தியாயனம், மனோஹா கீதவாத்தியங்கள்

பஞ்சதந்திரம்.

கல்வியுங் குலத்தைக்காக்குங் கருத்துமில்லாத மைந்தர்
செல்வமுங் குணமுமிக்க செவ்விசேருருவும் பெற்றென்
நல்வினையி லாரைப்பெற்ற நங்கைதான் பூத்தகாலே
யில்வரு கருவிலாமற் கருவழிந் திடலுநன்றே.

ஆயிர மகனைப்பெற்று மாவதென் னம்மாமிக்க
தூயநல் லறிவனான சுதனொருவனையே பெற்றால்
தாயொடு தந்தையென்ன தவமியற் றினரோவென்று
மாயிரு ஞாலம்போற்று மரபெலாந் தழைக்குமன்றே

எவ்வனஞ் செல்வமிக்க விராசத மவிவேகத்துள்
ஒவ்வொன்றே கேட்டுக்கெல்லா முறுதுணையாகி நிற்கும்
இவ்வகை நான்குங்கூடி யொருவன்பா லிருந்தவென்றால்
எவ்வகை யாலன்னோனுக் கிகபரங் கிடைப்பதென்றான்.

கல்வியுந் தரும குணமுமில்லாத பிள்ளைகள் இருந்தாவ தென்ன? பால்கொடாத எருமைகளைக் காப்பாற்றினாற் பல னென்ன? வேத சாஸ்திர மறிந்தவனாய் ஒரே பிள்ளையிருந்தாலும் அவனாலே குடும்பமெல்லாம் சுகமடையும். இப்படிக்கில்லாத பிள் ளைகள் கர்ப்பத்திலே அழிந்தாலும், அழியாவிட்டால் பிறந்த வுடனே இறந்தாலும் போகிறது நல்லது. குலத்தில் அயோக் கியமான பிள்ளை இருக்கலாகாது. இந்தப் பிள்ளையைப் பெற்றவர் கள் என்ன தவம் செய்தார்களோ வென்று கண்டோர் சொல்லும் படி நடக்கிறவனல்லவோ பிள்ளை. இளமையும், செல்வமும், இராஜசமும், அறிவில்லாமையுமாகிய இந்த நான்கினுள் ஒன் றொன்றுதானே கேட்டிற்கெல்லாம் ஏதுவாகும். இந்த நான்கும் ஒருவனிடத்தி லிருந்தால் அவனுக்கு இகபர சுகம் எப்படிக் கிடைக்கும்!

சகல சம்பத்தும் பெருகி செல்வபாக்கியந் தங்கியிருக்கும் வீடுகளில் வளரும் பிள்ளைகள் சீர்கெட்டலைவதற்கு அவர்கள் பெற் றோரின் கவலைத்தாட்சியே காரணமென்னலாம்.

பெற்றோர் தம் புத்திரரின் புத்தி தீக்ஷண்யத்தை நன்றாய்க்கவ னித்தறிந்து எவரெவர்க்கெவ்வித தொழிலின்மேல் நாட்டமுண்டா கின்றதோ அத்தொழிலில் பழக்குவிக்க வேண்டியது. சம்பாதிக் கும் பிள்ளைகளின் வரும்படி முழுவதையும் பெற்றோர் கைப்பற்றி அவர்களுக்கு வேண்டிய சகல சம்ரக்ஷணையும் செய்து வருவது அநேக தீங்குக்கு விலக்கிக் காக்கும். பிள்ளையானவன் துஷ்டர் களுடன் சகவாசஞ் செய்தால் அக்கூட்டத்தைக்குலைக்க கூடிய வரைப் பிரயாசைப்படவேண்டும். அப்படிப்பட்ட பிள்ளைக்கு

அவ்விதத் துஷ்ட சகவாசம் இருக்கும் வரையில் பெற்றோர் சம் ரக்ஷணையை நிறுத்தி, அவனுக்குக் காசு, ஆடையாபரணங்கள் கொடுப்பதைக் கட்டோடு நிறுத்தவேண்டும். நிமிஷ நேரமாயினும் அவனைத் தனியே விடாமல் அவன் மனதிற் கிசைந்த வேலையைக் கொடுத்து அவனைக் காலம்போக்கச் செய்யவேண்டும்.

"மாலினால் இருவரும் மருவி மாசிலாப்
பாலனைப் பயந்தபின் படிப்பியா துயர்
தாலமேற் செல்வமாய் வளர்த்தல் தங்கட்கோர்
காலனை வளர்க்கின்ற காட்சி போலுமே."

பிள்ளைகளின் சுபாவத்தையும், விருப்பத்தையும், பெருமையையும் தடுத்தால் அவர்களுக்குண்டாகும் கோபமும், மனவருத்தமும், ஆயாசமும் அளவிட்டுரைக்க முடியாது. ஆதலால்,

"சிறியவர் வேண்டல் இடன்பயன் றாக்கிப்
பெரியவர் கூறல் பெரிது."

தாய் தந்தையர் தமது பிள்ளைகள் விரும்பிக் கேட்கும் விஷயங்க ளுக்குச் சமயமறிந்து பொறுமையோடும் அன்போடும் விடையளி த்து வரல்வேண்டும். இவையன்றி முரட்டுத்தனமாகவும், கோப மாகவும், மரியாதையின்றியும், விடையளித்துவரின் அவர்களும் முரட்டுத்தனமுள்ளவர்களாகித் துஷ்டராவதற் கேதுவாகும். ஆத லால் வாலிபப் பிராயத்திலேயே பிள்ளைகளிடம் கீழ்ப்படிதல், தாழ் மை, உண்மை, தெய்வபக்தி முதலிய சற்குணங்கள் பதிவதற்கான ஏதுக்களைத் தேடவேண்டும். இயேசு கிறிஸ்துநாதர் தமது இள மைப் பருவத்தில் ஞானத்திலும், வளர்த்தியிலும், தேவகிருபையி லும், மனுஷர் தயவிலும் அதிகமதிகமாய் விருத்தியடைந்தார் என்று (பரி. லூக். 2; 52) ல் சொல்லப்பட்டிருக்கிறது.

**Children** ought not to be enervated by too much aid. The instinctive love of self-preservation in children amongst the higher classes is seldom so active as in those who are less objects of care and solicitude; because, being accustomed to depend on the watchfulness of others, they lose that quick perception of danger which is as natural to infants as it is to animals. The eagerness for knowledge also, which is born with all children, becomes surfeited by over-indulgence and enervated by too much aid. But the curiosity of young people should be excited on all useful subjects and ought to receive such assistance as shall encourage their own minds to work out the rest—**Sinclair.**



பட்சிகளுள் மிக்க பராக்ரமமுடையதும், அதிகஉயரத்திற் பறக்கக் கூடியதும், கூரிய பார்வையையுடையதுமான கழுகிற்குப் பட்சிராஜன் என்றுபெயர். அது தன் குஞ்சிக்குப் பறக்கும் வித்தையைப் பயிற்றுவிக்கும் தந்திரம் மானிடப்பிறவிகள் கவனித்துப் பின்பற்றத் தக்கது.

குஞ்சியானது மூக்குச் சிவந்து பறக்கும் பருவம் அடைந்தவுடன் தாய்ப்பட்சியானது தனது செட்டைகளின்மேல் குஞ்சைத் தாங்கி, மேகங்களுக்குமேல் பறந்து, உன்னதத்தை நோக்கிச் சென்று அங்கே தனது அருமைக் குஞ்சை உதறிவிட அது தன் உயிரைக் காக்கும்பொருட்டு ஒருவர் ஒத்தாசையும் கிடைக்காததால் சிறிதுநேரம் தத்தளித்துப் பின்பு தனது செட்டைகளையே விரித்து அடித்துப் பறந்துபோகும். அப்படிச் செல்லுகையில் இளைப்புங் களைப்பும் மேலிட, சிறகு தட்ட முடியாமல் அந்தரத்தில் தவித்து நிற்கையில் தாய்ப்பட்சியானது ஆகாயத்தை ஊடுருவ அம்புபோற் பாய்ந்து தாழ்ந்து வந்து தாங்கிக்கொள்ளும். திரும்பவும் அதே பிரகாரம் உன்னதத்தில் சென்று உதறிவிடும். இவ்விதம் பலதடவைகளில் செய்வதால் கழுகின் குஞ்சு தனது சிறகுகளைத் தட்டித் தானாகவே பறக்கப் படித்துக்கொள்ளும்.

இந்த அற்ப ஜந்து உபயோகிக்கும் உபாயத்தைக் கையாடத் தவறிவிடுவதால் செல்வவந்தரின்பிள்ளைகள்சீர்கெட்டலைகின்றனர்.

Lord Burghley gives the following advice to his son concerning the treatment of children :—

"Bring thy children up in learning and obedience, yet without outward austerity. Praise them openly, reprehend them secretly. Give them good countenance, and convenient maintenance, according to thy ability, otherwise thy life will seem their bondage, and what portion thou shalt leave them at thy death they will thank death for it and not thee. And I am persuaded that the foolish cockering of some parents, and the over-stern carriage of others causeth more men and women to take to evil courses than their own vicious inclinations. "Marry thy daughters in time, lest they marry themselves," As to the sons, Lord Burghley disapproves of sending them to travel, at least he would not have them cross the Alps : he says "If by travel, they get a few broken languages that shall profit them nothing more than to have one meat served in diverse dishes." In point of fact, however, travel is good, or evil, or neither, according to the degree in which the traveller has been previously prepared to turn to good account or bad account, or no account at all, the opportunities which travel offers.

ராஜவத் பஞ்சவர்ஷாணி
தசவர்ஷாணி தாசவத்
ப்ராப்தேத்து ஷோடசேவர்ஷே
புத்ரம் மித்ரவதாச் சரேத்.

அதாவது எவனும் தன்மகனை ஐந்தாம் பிராயம்வரையில் அரசனைப் போலவும், ஐந்துக்குமேற்பட்டு பத்து அல்லது பதினாறுவரையில் ஊழியனைப் போலவும் பதினாறுக்கு மேற்பட்டுச் சிநேகனைப் போலவும் நடத்த வேண்டுமென்று தர்மசாஸ்திரஞ் சொல்லுகின்றது.

## கல்வி.

கல்வியே யாவர்க்கு மொளிகொண்ட வடிவமாங்
கல்வியே புதையலாகுங்
கல்வியே பரதேசகமனவின மாகுமக்
கல்வியே துணையதாகுங்
கல்வியே திசைகொண்ட கனகீர்த்தியைத்தருங்
கல்வியே பெருமையாக்குங்
கல்வியே வேண்டுநற் போகங்களைத் தருங்
கல்வியே இன்பமாக்குங்
கல்வியே நிலைகொண்ட கற்பகத்தருவதாங்
கல்வியே செல்வமாகுங்
கல்வியே யரசராற் பூசைசெய்விக்குமக்
கல்வியே கடவுள் காட்டுங்
கல்விக்கு நிகரான பொருளொன்று மிம்மையிற்
கருதிடினுமில்லை யில்லை
கல்லா னொனைத் தொன்று மில்லாணடக்கு மிரு
காற் பசுவ தென்பர் மாதோ.''

ஆகையால் யாவர்க்கும் எக்காலத்திலும் இம்மையிலும் மறுமையிலும் இன்பத்தை விளைவிக்கும்பொருள் கல்விப்பொருள். சென்ற இடங்களிலெல்லாம் சிறப்பைத்தரும் பொருள் கல்விப்பொருள், பகைவர், கள்வர், பங்காளிகள் முதலியவர்களால் அபகரிக்கப்படாத பொருள் கல்விப்பொருள். கொடுக்கக் கொடுக்க வளரும் பொருள் கல்விப்பொருள்.

## தனிப்பாடற் றிரட்டு

"வெள்ளத்தாலழியாது வெந்தழலால் வேகாது வேந்தராலும்
கொள்ளத்தான் முடியாது கொடுத்தாலு நிறைவன்றிக்குறைவுறாது
கள்ளர்க்கோர் பயமில்லை காவலுக்கு மிகவெளிது கல்வியென்னு
முள்ளபொருளுள்ளிருக்கப் புறம்பாகப் பொருடேடி யுழல்கின்றாரே''

ஏகாந்தத்தில் இன்பமும், சம்பாஷணையிற் சிறப்பும், காரிய நிர்வாகத்திற் சமர்த்தும் உண்டாக்கும் பொருள் கல்விப் பொருள். எந்த இடையூறுகள் நேர்ந்தபொழுதும் கை கொடுத்துதவும் பொருள் கல்விப் பொருள்.

"அறம் பொருளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டு—முறுங்கவலொன்
றுற்றுழியுங் கை கொடுக்குங் கல்வியினூஉங்கில்லை
சிற்றுயிர்க்குற்ற துணை."

என்று நீதிநெறி விளக்கத்தில் சொல்லி யிருப்பதுபோல் கல்வியானது மனிதருக்குத் தர்மத்தையும், செல்வத்தையும், இன்பத்தையும், மோட்சத்தையுங் கொடுக்கும்; இவற்றோடே உலகத்தில் நீங்காத கீர்த்தியையு முண்டாக்கும்; துன்பம் வந்த காலத்தில் கை கொடுத்துதவும்; ஆகையால் அற்பவாழ்நாட்களையுடைய மானிடப் பிராணிகளுக்கு இக்கல்வியைவிட உற்றதுணை வேறொன்றுமில்லை.

சிறு பஞ்ச மூலம்.

"மயிர்வனப்புங் கண்கவரு மார்பின் வனப்பும்
உகிர்வனப்பும் காதின் வனப்பும் – செயிர்தீர்ந்த
பல்லின் வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த
சொல்லின் வனப்பே வனப்பு."

நாலடியார்.

"குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்ச ளழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம் யாமென்னும் நடுவு நிலைமையால்
கல்வி யழகே யழகு."

என்று கூறியபடி, பெண்களுக்குக் கூந்தலினாலும், ஸ்தன்னியங்களினாலும், நகங்களோடு கூடிய விரல்களினாலும், ஆபரணங்களணிந்த காதுகளினாலும், தந்த வரிசைகளினாலும் உண்டாகும் அழகை அழகென்று சொல்லக்கூடாது. ஆனால் கல்வியறிவோடு கூடிய வார்த்தைகளே அவர்களுக்கு அழகென்று சொல்லவேண்டும். மேலும், பொதுவாய் யோசித்துப் பார்க்குமிடத்து, உலகத்தின் மனிதர்களுக்குக் கல்வியே எல்லா நன்மைகட்குங் காரணமாக இருக்கின்றது.

அப்படியே,

"எண்ணுமெழுத்துங் கண்ணெனத்தகும்" என்று ஔவையும்,

"எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டும்
கண்ணென்ப வாழு முயிர்க்கு"

என்று திருவள்ளுவ நாயனாரும்,

"கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்."

ராஜவத் பஞ்சவர்ஷாணி
தசவர்ஷாணி தாசவத்
ப்ராப்தேத்து ஷோடசேவர்ஷே
புத்ரம் மித்ரவதாச் சாரத்.

அதாவது எவனுந்தன்மகனை ஐந்தாம் பிராயம்வரையில் அரசனைப் போலவும், ஐந்துக்குமேற்பட்டு பத்து அல்லது பதினாறுவரையில் ஊழியனைப்போலவும் பதினாறுக்கு மேற்பட்டுச் சிநேகனைப் போலவும் நடத்த வேண்டுமென்று தர்மசாஸ்திரஞ் சொல்லுகின்றது.

கல்வி.

கல்வியே யாவர்க்கு மொளிகொண்ட வடிவமாங்
கல்வியே புதையலாகுங்
கல்வியே பரதேசகமனவின மாகுமக்
கல்வியே துணையதாகுங்
கல்வியே திசைகொண்ட கனகீர்த்தியைத்தருங்
கல்வியே பெருமையாக்குங்
கல்வியே வேண்டுநற் போகங்களைத் தருங்
கல்வியே இன்பமாக்குங்
கல்வியே நிலைகொண்ட கற்பகத்தருவதாங்
கல்வியே செல்வமாகுங்
கல்வியே யரசராற் பூசைசெய்விக்குமக்
கல்வியே கடவுள் காட்டுங்
கல்விக்கு நிகரான பொருளொன்று மிம்மையிற்
கருதிடினுமில்லை யில்லை
கல்லா னெனைத் தொன்று மில்லானடக்கு மிரு
காற் பசுவ தென்பர் மாதோ.''

ஆகையால் யாவர்க்கும் எக்காலத்திலும் இம்மையிலும் மறுமையிலும் இன்பத்தை விளைவிக்கும்பொருள் கல்விப்பொருள். சென்ற இடங்களிலெல்லாம் சிறப்பைத்தரும் பொருள் கல்விப்பொருள், பகைவர், கள்வர், பங்காளிகள் முதலியவர்களாலே அபகரிக்கப் படாத பொருள் கல்விப்பொருள். கொடுக்கக் கொடுக்க வளரும் பொருள் கல்விப்பொருள்.

தனிப்பாடற் றிரட்டு

"வெள்ளத்தாலழியாது வெந்தழலால் வேகாது வேந்தராலும்
கொள்ளத்தான் முடியாது கொடுத்தாலு நிறைவன்றிக்குறைவுறாது
கள்ளர்க்கோர் பயமில்லை காவலுக்கு மிகவெளிது கல்வியென்னு
முள்ளபொருளுள்ளிருக்கப் புறம்பாகப் பொருடேடி யுழல்கின்றாரே''

ஏகாந்தத்தில் இன்பமும், சம்பாஷணையிற் சிறப்பும், காரிய நிர்வாகத்திற் சமர்த்தும் உண்டாக்கும் பொருள் கல்விப் பொருள். எந்த இடையூறுகள் நேர்ந்தபொழுதும் கை கொடுத்துதவும் பொருள் கல்விப் பொருள்.

"அறம் பொருளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டு—முறுங்கவலொன்
றுற்றுழியுங் கை கொடுக்குங் கல்வியினூஉங்கில்லை
சிற்றுயிர்க்குற்ற துணை."

என்று நீதிநெறி விளக்கத்தில் சொல்லி யிருப்பதுபோல் கல்வியானது மனிதருக்குத் தர்மத்தையும், செல்வத்தையும், இன்பத்தையும், மோட்சத்தையுங் கொடுக்கும்; இவற்றோடே உலகத்தில் நீங்காத கீர்த்தியையு முண்டாக்கும்; துன்பம் வந்த காலத்தில் கை கொடுத்துதவும்; ஆகையால் அற்பவாழ்நாட்களையுடைய மானிடப் பிராணிகளுக்கு இக்கல்வியைவிட உற்றதுணை வேறொன்றுமில்லை.

சிறு பஞ்ச மூலம்.

"மயிர்வனப்புங் கண்கவரு மார்பின் வனப்பும்
உகிர்வனப்பும் காதின் வனப்பும் – செயிர்தீர்ந்த
பல்லின் வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த
சொல்லின் வனப்பே வனப்பு."

நாலடியார்.

"குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்ச ளழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம் யாமென்னும் நடுவு நிலைமையால்
கல்வி யழகே யழகு."

என்று கூறியபடி, பெண்களுக்குக் கூந்தலினாலும், ஸ்தன்னியங்களினாலும், நகங்களோடு கூடிய விரல்களினாலும், ஆபரணங்களணிந்த காதுகளினாலும், தந்த வரிசைகளினாலும் உண்டாகும் அழகை அழகென்று சொல்லக்கூடாது. ஆனால் கல்வியறிவோடு கூடிய வார்த்தைகளே அவர்களுக்கு அழகென்று சொல்லவேண்டும். மேலும், பொதுவாய் யோசித்துப் பார்க்குமிடத்து, உலகத்தின் மனிதர்களுக்குக் கல்வியே எல்லா நன்மைகட்குங் காரணமாக இருக்கின்றது.

அப்படியே,

"எண்ணுமெழுத்துங் கண்ணெனத்தகும்" என்று ஔவையும்,

"எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டும்
கண்ணென்ப வாழு முயிர்க்கு"

என்று திருவள்ளுவ நாயனாரும்,

"கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு

என்ற குறளில், கற்றவர்களே கண்ணுடையவர்கள், கல்லாதவர்கள் முகத்தில் இரண்டு புண்ணுடையவர்களென்று திருவள்ளுவ நாயனாரும்,

" இம்மை பயக்குமால், ஈயக்குறை வின்றால்,
தம்மை விளக்குமால், தாமுளராக் கேடின்றால்,
எம்மை யுலகத்தும் யாங்காணேம், கல்விபோல்
மம்மா றுக்கு மருந்து."

என்ற செய்யுளில், கல்வியானது ஒருவர்க்கு இப்பிறப்பில் இன்பந் தரும்; ஈவதினால் குறைதல் இலது; தம்மை இத்தன்மையர் என்று எல்லோருமறிய விளக்கும்; தாம் உயிரோடிருக்கத் தன்னளவி லும் கெடுதல் இராது; ஆதலால் எவ்வித உலகத்திலும் கல்வி போல் பேதைமையாகிய நோயை நீக்கும் மருந்து நாம் கண்டறி யோம் என்று நாலடியாரிலும் சொல்லி யிருக்கின்றனர். அறி வாகிய இரத்னத்தின் ஒளியில் அறிவின்மை என்னும் மாசு பற்றிக் கொண்டிருக்கிறது. கல்வியாகிய சாணைக்கல்லில் ஓயாது தீட்டுவதினால் அறிவைப்பற்றியிருக்கும் மாசுநீங்கி, அதின் சுயப் பிரகாசம் காந்திவிட்டொளிரும். இதனாலேயே கல்வியின் பெரு மையைப் பற்றிப் பேச வந்தவிடத்து

" கல்வியறிவு தருங் கற்பை நிலைநிறுத்தும்
இல்வாழ்வுக் கேற்ற இசைவெல்லாம் சொல்விக்கும்
இந்நிலத்து மேன்மையெல்லா மெய்துவிக்கும் முத்தியெனும்
அந்நிலத்துக் குற்ற துணையாம்." என்றும்,

" கல்வியே நல்லுயிரைக் காப்பதற்கு நற்றுணையாம்
கல்வியே நல்லுடம்பைக் காப்பதாம்—கல்வியே
செல்வப் பொருளின்பஞ் சேர்க்குந் தலைமைசேர்
செல்வமாஞ் செய்யுஞ் சிறப்பு." என்றும்,

" உடையார் முனில்லார்போலேக் கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்." என்றும்,

' தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு." என்றும்,

" மன்னனு மாசறக் கற்றோனுஞ் சீர்தூக்கில்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையான்—மன்னனுக்குத்
தன்றேய மல்லாற் சிறப்பில்லை கற்றோர்க்குச்

பெரியோர் பலவாறுகச் சிறப்பித்துக் கூறி யிருக்கின்றனர். இன்னும் அதிவீராம பாண்டியரும் கல்வியின் அவசியத்தைப் பற்றி,

"கற்கை நன்றே கற்கை நன்றே"
"பிச்சை புகினுங் கற்கை நன்றே"
"கல்லா வொருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுட் பிறந்த பதராகும்மே."
"நாற்பாற் குலத்தின் மேற்பா லொருவன்
கற்றில னாயிற் கீழிருப்பவனே."
"அறிவுடை யொருவனை யரசனும் விரும்பும்"
"எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடியிற் கற்றோரை வருக வென்பார்."

என்று பல நீதி வாசகங்களை எடுத்துரைத் திருக்கின்றனர். இன்னும் நாலடியாரில்,

"கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல—தெள்ளிதின்
ஆராய்ந் தமைவுடைய கற்பவே—நீரொழியப்
பாலுண் குருகிற் றெரிந்து."

என்றும் கூறியிருக்கின்றது.

திருக்குற்றாலப் புராணம்.

இருவிழிகள் வாண் முகத்தி லிருந்தாலும்
வானிரவி யொளிநீங்கி லன்றிக்
கருதுநிலப் பல பொருளைக் காண்டலரி
தாமுலகிற் கண்போல் யாரும்
பெருகிய செல்வமு மறிவும் பெற்றாலு
நூற்கேள்வி பெருவார்க் கன்றித்
திருவளர் புண்ணிய பாவ மிம்மைமறு
மையும் வீடுந் தெரியாதன்றே.

என்றபடி நம் முகத்தி லிரண்டு விழிகளிருந்தும், சூரியனுதவியின்றேல் நிலக்காட்சியைக் காண்டலரிதாதல்போல் ஒருவருக்கு எவ்வளவு செல்வமும் அறிவும் இருந்தபோதிலும், நூல் கேள்வியின்றேல் அவை தாம் ஒரு பிரயோஜனமும் கொடுக்கா வென்க. இஃதுணர்ந்தே,

திருவள்ளுவமாலை

எல்லாப்பொருளு மிதன்பால் உள இதன்பால்
இல்லாத எப்பொருளும் இல்லையால்—சொல்லாற்
பரந்த பாவா லென்பயன் வள்ளுவனார்
சுரந்த பாவையத் துணை.

என்று மதுரைத் தமிழ் நாயனார் அதனை இங்ஙனஞ் சிறந்தெடுத்துக் கூறுவாராயினர். இதனை வலியுறுத்தற் பொருட்டே பரஞ்சோதி முனிவ[illegible]

திருவிளையாடற் புராணம்.

*தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை*
*யுண்ட பாலனை யழைத்தது மெலும்பு பெண்ணுருவாய்க்*
*கண்டதும் மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்*
*தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்.*

என்று கூறுவாராயினர். "இளமையிற் கல்" என்று ஔவை சொன்ன வண்ணம் இளமையிலேயே கல்வியைத் தேடல் வேண்டும். இதனாலன்றோ ஜயின முனிவரும்,

நாலடியார்.

*"கல்லாரே யாயினுங் கற்றாரைச் சேர்ந்தொழுகி*
*னல்லறிவு நாளுந் தலைப் படுவர்—தொல்சிறப்பின்*
*ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலாற் புத்தோடு*
*தண்ணீர்க்குத் தான் பயந்தாங்கு."*

என்று கூறினர்.

"Weak men gain their object when allied with strong associates; the brook reaches the ocean by the river's aid"—*Magha.*

A man must have either great men or great objects before him, otherwise his powers degenerate as the magnet's do when it has been for a long time without being turned towards the right corners of the world.

கல்வியிலே ஒருவர் தேர்ச்சி யடைய வேண்டுமேல் இடைவிடாது கற்றல் வேண்டும். ஒருநாள் ஊன்றிப் படித்தும், மற்றொருநாள் சோம்பலுற்று மிராமல் எப்பொழுதும் தங்கள் தங்கள் சக்திக்கேற்ப கல்வியிலே பயின்றுவரல் வேண்டும். இதனாலன்றோ, "பாடமேறினும் ஏடது கைவிடேல்" என்று திருவாக்குப் பிறந்தன. தாம் படித்த பாடத்தை நாடோறும் போற்றல் வேண்டும். தாங் கேட்ட பொருளைப் பலதடவையும் சிந்தித்தல் வேண்டும். தன்னோடு படித்தவரை யன்பு பாராட்டி நேசித்தல் வேண்டும். நல்லாசிரியரை யடுத்துப் பாடங்கேட்டல் வேண்டும். தாம் ஐயுற்ற பொருளை அவரிடத்து வினவுதல் வேண்டும். அவர் விடை பகர்ந்ததை சிரத்தையோடு மனதில் பதித்தல் வேண்டும். இவைகள் எல்லாம் கல்விபயிலும் நன்மாணாக்கருக்குக் கடமையேயாம்.

நன்னூல்.

*'அன்னமு மாவே மண்ணொடு கிளியே*
*இல்லிக் குடமா டெருமை நெய்யரி*
*அன்னர் தலையிடை கடை மாணாக்கர்'*

என்றபடி, மாணாக்கர் முதன் மாணாக்கர், இடை மாணாக்கர், கடை மாணாக்கர் என மூவகையாவர்:—முதன் மாணாக்கர் அன்னத்தையும் பசுவையும் போன்றவர், இடைமாணாக்கர் மண்ணையும் கிளியையும் போன்றவர், கடை மாணாக்கர் பொள்ளற்குடம், ஆடு,

### முதன் மாணாக்கர்.

அன்னம் நீரோடு சேர்ந்த பாலையுண்ணுமிடத்து நீரைப் பிரித்துப் பாலை மாத்திரம் பருகும் பசு, புல் மிகுதியாக விருக்குமிடத்தைக்கண்டால் வயிறு நிறைய மேய்ந்து பின்னர் ஓரிடத்திலமர்ந்து மேய்ந்த புல்லைச் சிறிது சிறிதாக மென்று தின்னும். அதுபோல் முதன் மாணாக்கர் அன்னம்போல் ஆசிரியரிடத்துள்ள குற்றத்தையும், நூல்களிலுள்ள குற்றத்தையும் நீக்கிக் குணத்தைக்கொண்டு, பசுபோல் கல்வியை தன்னுள்ளம் நிறையக்கேட்டு பின் வேறிடத்தமர்ந்து தாங் கேட்ட விஷயங்களைச் சிந்தித்திருப்பர்.

### இடை மாணாக்கர்.

உழவர் செய்யும் முயற்சிக்குத் தக்கபடி மண் பயனைத்தரும். கிளி தனக்குச் சொன்னதைச் சொல்லும். அதுபோல், ஆசிரியன் கற்பித்த முயற்சிக்குத் தக்கபடி கல்வியைக் காட்டுவர். கிளிபோல் தமக்குக் கற்பித்த நூற்பொருளை யன்றி வேறொரு நூற்பொருளையும் தெரிந்துகொள்ளமாட்டார்.

### கடை மாணாக்கர்.

பொள்ளற்குடம் நீரை வார்க்குந்தோறும் ஒழுகவிடுதல்போலக் கடை மாணாக்கர் ஆசிரியன் கற்பிக்கும் அருமையான விஷயங்களை யெல்லாம, மறந்து விடுவார். ஆடு ஒரு செடி தழைத்திருப்பதைக் கண்டும் அச்செடியிலேயே மேய்ந்து தன்வயிற்றை நிறைத்துக் கொள்ளாது, தன் கண்ணுக்குப் புலப்படுஞ் செடிதோறும் போய் மேய்தல்போல, ஓராசிரியரிடத்து மிகுந்த கல்வி யறிவு நிறைந்திருப்பினும், அவரிடம் புலமை நிறையக் கற்காது பலரிடத்தும் பாடங் கேட்பர். எருமை குளத்து நீரைக் கலக்கிக் குடித்தல்போல் ஆசிரியனை வருந்திப் பாடங் கேட்பார். பன்னாடை, தேன் முதலிய சாரத்தைக் கீழே ஒழுகவிட்டு எறும்பு, ஈ, முதலிய பொருள்களைப் பற்றி நற்றுதல்போல், ஆசிரியர் கற்பிக்கும் நற்பொருளை மறந்து தீயபொருளைச் சிந்திப்பார்.

ஆதலால் செல்வப்பொருளினும் கோடிமடங்கு விசேடமுடையதாகிய கல்விப் பொருளையே நாம் முழு முயற்சியோடு சம்பாதித்துக்கொள்ள வேண்டும். ஏனெனில் கல்வியும் ஒளியுஞ் சரி; செல்வமும் இருளுஞ் சரி. கல்வி புத்தியை வளரச் செய்யும்; செல்வம் புத்தியைத் தளரச் செய்யும். கல்வி மேலே உயர்த்தும், செல்வம் கீழே தாழ்த்தும். கல்வி உபகாரங்களைத் தருவிக்கும்; செல்வம் அபகாரங்களை வருவிக்கும். கல்வி [illegible]

செய்யும்; செல்வம் அரசரது சிறையிலும் ஏறச் செய்யும். கல்வி கொடுக்கக் கொடுக்க நிறையும்; செல்வம் கொடுக்கக் கொடுக்கக் குறையும். கல்வி என்றுமழியாத நித்திய ஜீவனைக் கொடுக்கும்; செல்வம் செல்வோமென்றும், தரித்திரம் தரித்திரோமென்றும் போய்விடும். கல்வியின் பெருமையை இவ்வளவு என்று சொல்லுதலும், மனதால் நினைத்தலுங் கூடாது. ஆதலால் இக்கலூரியில் பயிற்பிக்கப்படும் அழியாச் செல்வமாகிய இரஞ்சித மிஞ்சிய கல்வியை நாம் கற்காது வாணாளை வீணாளாகக் கழிப்போமாயின், நிரக்ஷரக்குக்ஷிகளாய் :

தனிப்பாடல்.

"அள்ளிக் கொடுக்கின்ற செம்பொன்னும் ஆடையும் ஆதரவால்
கொள்ளிக்கும் பட்டகடனுக்கும் என்னைக் குறித்ததல்லால்
துள்ளித் திரிகின்ற காலத்திலே என் துடுக்கடக்கிப்
பள்ளிக்கு வைத்திலனே தந்தையாகிய பாதகனே."

என்று பிற்காலத்தில் நம்மை நொந்து கொள்வதுடன், நமது தாய் தந்தையரையும் நொந்துகொண்டு திரியவேண்டி வரும். ஆதலால் நமது சிறு பிராயத்திலேயே

"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக"

என்று திருக்குறளில் சொல்லியிருக்குமாறு, கற்கவேண்டிய விஷயங்களை யெல்லாங் கற்று அவற்றின்படி நடக்க முயற்சி செய்வோமாயின், நமது புத்தியும், யூகமும், கீர்த்தியும், வளர்பிறைபோல் நாளுக்குநாள் விர்த்தியாகிக்கொண்டே வரும்.

"அழிவுறு முடம்பையென்று மாசையாற் பேணலின்றி
அழிவுறாப் புகழைத் தேடி யன்பொடு பேணூர் மூடர்
விழுமிய கல்வி கேள்வி மிகு கொடை செய்து தேடிக்
கழி பெரும் புகழே நாளுங் காப்பர் நல்லறிவினோரே."

## How to Acquire Knowledge.

A Persian philosopher, being asked by what method he had acquired so much knowledge, answered, "By not being prevented by shame from asking questions where I was ignorant."

## READING.

Some books are to be tasted, others to be swallowed and some few to be chewed and digested—*Bacon.*

It is not what we eat but what we digest that makes us strong.

It is not what we earn, but what we save that makes us rich.

Not what we learn but what we remember that makes us truly learned.

Not what we preach but what we practise that makes us pious.

These are great but common truths often forgotten by the glutton, the spendthrift, the book-worm and the hypocrite.

## KNOWLEDGE Increased by the Use of the Pen.

Young persons, especially, will pardon the suggestion, that in no way perhaps can their store of applicable knowledge be more certainly, though at first almost imperceptibly, increased, than by habitually reading with a pen in the hand. There is much good sense in these doggrel verses, for which we are indebted to no ordinary thinker,—

In reading authors, when you find
Bright passages, that strike your mind,
And which, perhaps, you may have reason
To think on, at another season,
Be not contented with the sight.
But take them down in black and white;
Such a respect is wisely shown,
As makes another's sense one's own. —*Byron.*

One caution, however, is here indispensable; that by deep and diligent meditation, we acquire something which may truly be called our own: for, as Milton says—

Who reads
Incessantly, and to his reading brings not
A spirit and judgment equal or superior,
Uncertain and unsettled still remains;
Deep versed in books, and shallow in himself.

A proper and judicious system of reading is of the highest importance. Two things are necessary in perusing the mental labours of others; namely, not to read too much, and to pay great attention to the nature of what you do read. Many people peruse books for the express and avowed purpose of consuming time; and this class of readers forms by far the majority of what are termed the "reading public." Others again read with the laudable anxiety of being made wiser; and when this object is not attained, the disappointment may generally be attributed either to the habit of reading too much or of paying insufficient attention to what falls under their notice—*Blakey.*

Mr. Johnson had never, by his own account, been a close student and used to advise young people never to be without a book in their pocket, to be read at bye-times, when they had nothing else to do. "It has been by that means," said he to a boy one day, "that all my knowledge has been gained except what I have picked up by running about the world with my wits ready to observe, and my tongue ready to talk. A man is seldom in a humour to unlock his book-case, set his desk in order, and betake himself to serious study; but a retentive memory will do something, and a fellow shall have strange credit given him if he can but recollect striking passages from different books, keep the authors separate in his head, and bring his stock of knowledge and varied information artfully into play. "How else," added he, "do the gamesters manage, when they play for more money than they are worth?"

## Modern Education.

Indiscriminate censure and undistinguishing praise are equally remote from truth. The reason is obvious, since it is scarcely probable that any person should be so utterly destitute of good qualities as to justify illimitable censoriousness, nor such a paragon of excellence as to merit unbounded admiration. This axiom is as true with regard to things as it is to persons. With this conviction, a wise man will not feel disposed to arraign every refinement in manners, or to denounce as unnecessary innovations every attempt at improvement in our habits and pursuits. Folly and prejudice might aim at such an object, but he who has made just and accurate observations on society is aware that its present state has been gained by frequent changes in the established order of things; and that, since the last century, a complete and perhaps permanent revolution has taken place in the whole community.

The authors of the present age no longer assemble, like those of the last in the coffee houses, to hear the condemnation or approval of their last production. Our wits do not congregate together to gather fresh bon-mots, or acquire new *lapsis lingui*, which they may repeat as their own at some convenient opportunity.

The ladies have discarded powder and pomatum for ringlets, and abandoned the hoop and stomacher for the graceful and natural shape of the female form. Our firesides are rendered more cheerful and attractive; the old-established clubs which drew away the master from his family are declining, and the husband and father enjoys the pleasures of domestic converse with a zest unknown to his forefathers. In these and many other respects the present age is infinitely superior to those which have preceded it. But to praise indiscreetly would be forfeiting all claim to impartiality; and it must therefore be conceded that there are other points in which we are far from having improved,particularly in reference to the education of the middle class of society.

This fact must be apparent to every reflecting mind; and although but now beginning to develope its pernicious influence,a few years will soon prove the absurdity and imprudence of qualifying youth for situations they are not destined to occupy, and thus unfitting them for those stations which they might fill honourably and usefully. A system so erroneous will be best illustrated, and its evil tendency exemplified, in the character of its victims; and the history of one sacrifice at the shrine of inordinate ambition and love of display shall be detailed for this purpose:—

Adolphus was the son of a respectable tradesman, west of Temple Bar; he early exhibited considerable shrewdness, which his fond parent regarded as a sure indication of extraordinary talent, and with praiseworthy anxiety resolved on giving him an education corresponding with his abilities. Already had he pictured to himself his son ascending to eminence in the profession to which his inclination might

direct him; and he fancied he beheld him captivating the court with his eloquence, or delivering his judgment with solemn gravity from the bench: sometimes parental fondness discovered the mitre and the apron, and saw him, surrounded by his clergy, delivering a charge at a visitation; or he would anticipate the day when, arrived at eminence as a physician, his mansion should be thronged with patients of all classes bringing their golden offerings for his experience and advice. He was accordingly sent to an academy celebrated for turning out distinguished characters, and here Adolphus proved that although his abilities were not of a first-rate description when put into competition with others, yet he was not deficient in mental energy. He prosecuted his studies with alacrity, and mastered them with delight, and soon became a proficient in the languages, and could talk of Xenophon and the retreat of the ten thousand with the same ease as a schoolboy does of the Exodus of the Israelites. Time passed on, and the period came when he should exchange the school for college. Adolphus was naturally warm and sanguine in his temper, impetuous and ardent, but deficient in firmness and decision of character. His father had made many sacrifices for the accomplishment of his purpose, and he now found that he must be prepared to make still greater if he would eventually succeed, for Adolphus had made choice of the law as his profession.

Adolphus soon proved that a youth at school and a young gentleman at college are widely different. Uniting himself with some worthless, but pleasant associates, the natural gaiety of his disposition predominated over his application to study; he became fond of company, and his excesses compelled him to make repeated calls on the purse of his father to supply the lavish expenditure which he affected, to be necessary, in order to enable him to appear with credit at the University. The readiness with which these supplies were granted produced the lavishness of a spendthrift. His studies were now neglected, and though he passed his degrees, his attainments were barely sufficient to enable him to do so with credit.

On his quitting College, he was entered as a student in the Temple, and when too late it appeared that he was not so pre-eminently gifted as his father had supposed. The dry study of the law disgusted him, the perusal of the statutes at large was very unedifying, and Coke and Blackstone were forsaken for Byron and the Great Unknown. The theatre and subscription room were more frequently visited than his chambers, and he could discuss the merits of a new tragedy or trace the pedigree of a racehorse far better than he could argue upon the criminal code or cite precedents.

It soon appeared that he had received an education which unfitted him for everything; he was too well informed to undertake the drudgery and toil of his father's business, and possessed of too little mind and application to succeed in the arduous profession which he had chosen. The continual applications to his father for fresh supplies to meet his extravagant expenditure compelled him to abridge his own comforts, arguments and exhortations [illegible]

insisted that, having enjoyed a gentleman's education, he must maintain the character. A course of dissipation led him to the gaming table, and having ruined his reputation and his health, he died before he had completed his 25th year. His father, broken-hearted for his loss, and the disappointment of his hopes, neglected his business, his affairs soon became desperate, and it was but too plain that he was ruined; it preyed on his spirits, and he died of grief.

This is no overcharged statement of the evils resulting from educating the young for stations which they have not the ability to fill nor the fortune to sustain. Incalculable injury has already been effected by this practice, and many a young man who has expiated his offence for forgery by a disgraceful death may trace the origin of his misfortune to his injudicious educa ticn. Parents deceive themselves by the false notions they indulge, and when the evil is remediless, awake to all the dangers of the situation to which they have exposed their children, and find that their pecuniary means are insufficient to meet the wants which they have prevented them from satisfying by their own exertions. Many a father has had to behold with grief his property squandered by his son in the haunts of vice, only because he gave him the education of a gentleman instead of furnishing him with one calculated for a man of business. To give an education corresponding to the circle in which they are destined to move is a greater mark of wisdom, and a stronger proof of kindness to our offspring, than to give them an education which will lead them into connections and soceity they can never maintain, and into stations they will never be able permanently to occupy.—*Theodore.*

## Real Education.

If we look to the nature of the human mind itself, if we consider its longings, how comprehensive is its range, how great its capabilities, how little its best and highest faculties are satisfied with the objects that are placed before us upon earth, how many marks this dispensation, bears of being a temporary, and, as it were, an initiatory, dispensation, is it not monstrous to pretend that we are giving to the human being such a cultivation as befits his nature and his destiny, when we put out of sight all the higher and more permanent purposes for which he lives and confine our provision to matters which however valuable (and valuable they are in their own place), yet of themselves bear only upon earthly ends? Is it not a fraud upon ourselves and our fellow-creatures; is it not playing and paltering with words; is it not giving stones to those who ask for bread, if, when man, so endowed as he is, and with such high necessities, demands of his fellow-men that he may be rightly trained, we impart to him under the name of an adequate education, that which has no reference to his most essential capacities and wants, and which limits the immortal creature to objects that perish in the use?—*W. E. Gladstone.*

Wise men are instructed by reason; men of less understanding, by experience; the most ignorant, by necessity; and beasts by nature.
—*Cicero.*

Be as careful of the books you read as of the company you keep: for your habits and character will be as much influenced by the former as by the latter. —*Paxton Hood.*

Knowledge is destroyed by associating with the base; with equals equality is gained, and with the distinguished, distinction.

Experience keeps a dear school, but fools will learn in no other, and scarce in that; for it is true, we may give advice, but we cannot give conduct. —*Franklin.*

Though you may yourself abound in treasure, teach your son some handicraft; for a heavy purse of gold and silver may run to waste, but the purse of the artisan's industry can never get empty.
—*Sa'di.*

What is the most profitable? *Fellowship with the good.* What is the worst thing in the world? *The society of evil men.* What is the greatest loss? *Failure in one's duty.* Where is the greatest peace? *In truth and righteousness.* Who is the hero? *The man who subdues his senses.* Who is the best beloved? *The faithful wife.* What is wealth? *Knowledge.* What is the most perfect happiness? *Staying at home.* —*Bhartrihari.*

He who has more learning than goodness is like a tree with many branches and few roots, which the first wind throws down; whilst he whose works are greater than his knowledge is like a tree with many roots and fewer branches, which all the winds of heaven cannot uproot. —*Talmud.*

By nature all men are alike, but by education very different.
*Chinese.*

A man who has learnt little grows old like an ox; his flesh grows, but his knowledge does not

He who is full of faith and modesty, who shrinks from sin, and is full of learning, who is diligent, unremiss, and full of understanding, the being replete with these seven things, is esteemed a wise man. —*Burmese.*

A man of little learning deems that little a great deal: a frog never having seen the ocean, considers its well a great sea.—*Burmese,*

As the lotus floats on the surface of the pool, so the level of conduct is determined by what a man reads, and the character of those who surround him.

## கடவுள் மகிமை.

"கற்ற தனாலாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்."

கல்வியின் பிரயோசன மெல்லாங்கூடி கடவுளை அறிவதுதான்.

"அகரமுதல வெழுத்தெல்லாமாதி
பகவன் முதற்றேயுலகு."

எழுத்துக்களெல்லாம் அகரமாகிய முதலையுடையன. அது போல உலகு ஆதிபகவானாகிய முதலை யுடைத்து என்னும் கருத்தைத் தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் வெளியிட்டருளியபடி,

சகல வஸ்துக்களுக்கும் மேலானவஸ்துவும், எல்லா ஒளிகளுக்கும் மேலான சோதிப்பிரகாசம் அமர்ந்திருக்கும் உத்தமகுணக் கடலும், மட்டற்ற நன்மைச் சொரூபியுமாகிய தேவனுடைய உன்னத மேன்மையையும், மகிமைப்பிரதாப சோபனத்தையும் தியானித்துணரவே ஆனந்த வெள்ளத்திற் படிந்து பரவசமாகாதவருமுளரோ?

எப்படித் தேவதாசனான மோசே பராபரனுடன் பேசுவதற்காக மேகங்களினிடையிற் புகுந்து உன்னத சிகரத்தின் உச்சிமேலேறி இவ்வுலக வஸ்துக்களை யெல்லாம் தன் கண்ணுக்கு மறைக்கும்படியான அந்தகாரத்திலிருந்து தேவனை அதிகக் காந்திப் பிரபையோடு கண்டாரோ, அப்படியே, கடவுளின் மகிமைப் பிரதாபத்தை உற்றுப் பார்க்க விரும்புவோர் இப்பிரபஞ்ச வஸ்துக்களெல்லாம் நிலையற்ற அநித்திய நீச வஸ்துக்களென்றும், தகைமையற்ற பொருட்களென்றும் எண்ணி அவைகளைப் பாராமல் புறக்கண்ணை மூடிக்கொண்டு அகக் கண்ணால் பாத்தை நோக்க ஸர்வ உத்தம சம்பன்னமும் பொருந்திய சுத்த சுயம்புவாகிய பரம்பொருளைத் தரிசிக்கலாம்.

"அற்றது பற்றெனின் உற்றது மோட்சம்"

இந்தப்பூமி எவ்வளவு பெரிதென்பதை நாமெல்லோரும் காட்சிப் பிரமாணமா யறிந்திருக்கிறோம். இப்பூமியிலும் சூரியன் பதின் மூன்றிலட்சம் பங்கு அதிகப் பெரியது. அச்சூரியனைப்போல அநேக கோடி சூரியர்களும், சந்திரர்களும் ஆகாயவிரிவில் நட்சத்திர வடிவமாக நமக்குக் காணப்படுகின்றன. நாம் பார்க்கிற நட்

சந்திரங்கள் தவிர நம்முடைய பார்வைக்கெட்டாத தூரத்திலும் அதற்கு மேலுங்கீழும் அடுக்கடுக்காக எண்ணிக்கையில்லாத நட்சத்திரக் கூட்டங்களிருக்கின்றன. அவைகள் ஒன்றிற்கொன்று சமீபம்போல் நமக்குக் காணப்படினும் அவைகளுக்கும் இந்தப்பூமிக்கும் எவ்வளவு தூரமோ அவ்வளவு தூரமாய் அவைகள் ஒன்றுக்கொன்று இருக்கின்றன. இந்தச் சூரியனைச் சுற்றிப் பூமி முதலிய பல கிரகங்கள் ஓடுவனபோல், நட்சத்திரம்போல் சிறிதாய் நமது கண்களுக்குத் தோன்றும் ஒவ்வொரு சூரியனையும் பல புவனங்கள் சுற்றி யோடுகின்றன. அப்படியாயின் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட சந்திரர் சூரியர்களையும் புவனகோடிகளையும் எண்ணத் தொலையுமா? ஏட்டில் அடங்குமா? அந்தப் பிரமாண்ட கோடிகளுக்குள் இந்தப்பூமி ஒரு அணுவுக்கும் சமானமல்லவே. சகல புவனங்களையுந் தாங்கிப் படியளக்கிற கர்த்தாவுக்குச் சிறிது கோபம் ஜெனித்தால் அண்ட அடுக்குகள் குலைந்து ஒன்றோடொன்று மோதிச் சூரியமண்டலம் சந்திரமண்டலத்தின்மேலும் சந்திரமண்டலம் பூமண்டலத்தின்மேலும் விழுந்து சின்னபின்னமாய்ச் சிதறுண்டு போமென்பது சந்தேகமா?

பல அண்டகோடிகளும் பரமபதியின் பாதத்துகள். சூரியன், அக்கினி முதலிய சுடர்கள் கடவுளினுடைய திவ்யப் பிரகாசமேனியிலிருந்து சிதறிய சிறு பொறிகள். சமுத்திரங்களும் மேகங்களும் அவருடைய கிருபா சமுத்திரத்திலிருந்து தெறித்த சிறு துளிகள். பிரசண்டமாருதம் அவருடைய சிறுவிரலின் அசைவு. உன்னத பர்வதங்கள் அவர் விளையாடும் பந்துகள். அவருடைய பிள்ளைகளாகிய நமக்காக அவரால் நியமிக்கப்பட்ட ஊழியக்காரரே பஞ்சபூதாதிகள். கற்பகோடி காலங்கள் அவருக்குக் கணப்பொழுது. தமக்குத் தேகமில்லாதிருந்தும் சகல ஜீவன்களுக்கும் தேகங்களைக் கொடுப்பவர் அவரே. தாம் நித்திரை செய்யாமல் மன்னுயிர்களைத் தூங்க வைத்துக் காவலா யிருப்பவர் அவரே. தாம் நடவாமல் திரியாமல் எள்ளுக்குள் எண்ணெய்போல் எங்கும் நிறைந்திருப்பவர் அவரே. தாம் கைவேலை செய்யாமல் நினைத்த மாத்திரத்தில் அண்டகோடிகளை யுண்டாக்கி இரக்ஷிப்பவரும் அவரே. அந்த அண்டகோடிக

ளைச் சாட்டையில்லாப் பம்பரம்போல் ஆட்டுகின்றவரும் அவரே. கண்ணுயிருந்து பொருளைக் காட்டுகின்றவரும் அவரே. பூந்திரி யானந்தங்களை யெல்லாம் நமக்கு ஊட்டுகின்றவரும் அவரே. கிருபா நோக்கத்தால் நம்மைப் பார்ப்பவரும் அவரே. துஷ்ட சத்துருக்கள் மேல் க்ஷாத்திரம் செய்கிற க்ஷத்திரியரும் அவரே. பக்தர்களுக்கு மோக்ஷ வியாபாரம்செய்யும் வைசியரும் அவரே. அண்டங்களை இயக்குகின்ற சூத்திர தாரியும் அவரே. ஜீவகோடிகளுக்கு வேளாண்மை செய்கிற வேளாளரும் அவரே. அண்டவீடுகளைக் கட்டிய தெய்வத் தச்சனுரு மவரே. தாசர்செய்யும் ஜெபத்துக்குக் கட்டுப்படுபவரு மவரே. ஒரு சிறிய வஸ்துவைக்கொண்டு பெரிய விஷயங்களையும், சுக்கில சுரோணிதங் கலந்த சிறுதுளி மூலமாய்ப் பெரிய உடல்களையும், ஒரு தானியத்தைக் கொண்டு கோடி தானியங்களையும் செய்கிற ஜாலவித்தைக்காரரு மவரே. மனுஷர்களுக்கும், விலங்குகளுக்கும், பக்ஷிகளுக்கும், புஷ்பங்களுக்கும் பல வர்ணங்களையும், அலங்காரங்களையும், அமைத்தெழுதிய சித்திரக்காரரு மவரே. ஆத்தும அரசன் குடியிருக்கும் பொருட்டு இருகால் நாட்டி, இரத்த நீர் சேர்த்து, மாம்ஸச்சுவர் எழுப்பி, என்புக்கழிகளைப் பரப்பி, நரம்புக் கயிற்றுகளால் கட்டித், தோலாகிய கூரைவேய்ந்து, ஒன்பது வாயில் அமைத்து, சரீரவீட்டைச் செய்த கொத்தனுரு மவரே. அந்த வீட்டில் பிராணவாயு சஞ்சரிக்கச் செய்த மந்திரவாதியு மவரே. நமக்குத் தெரியாமல் நம்முடைய சித்தங்களில் வசிக்கின்ற சித்தரு மவரே. தேகவீடு தானே வளரவும், நிமிரவும், குனியவும், நடக்கவும், ஓடவும், இருக்கவும், படுக்கவும், தூங்கவும், பலவேலைகளைச் செய்யவும், உண்ணவும், உண்ணுகிற பதார்த்தங்கள் ஜீரணித்து உடலெங்கும் பரவவும், மனமானது சஞ்சரிக்கவும், ஆலோசிக்கவும், சுகிக்கவும், துக்கிக்கவும், பஞ்சேந்திரியங்கள் பல இன்பங்களை அனுபவிக்கவும், நம்முடைய ஸ்வாதீனமில்லாமல் சுவாசந்தானே ஓயாமல் ஓடிக்கொண்டிருக்கவும், இருதயம் ஓயாமல் மணிக் கடியாரம்போல் அடித்துக் கொண்டிருக்கவும், செய்த பரமதயாநிதியும் அவரே.

கடவுளின் மகிமைப் பிரதாபத்தை எடுத்துரைக்கக் கூடியராவும் உள்ளரோ? கடவுள் சர்வக்ஞர், சர்வசக்தர், சர்வேசுரர்,

சர்வகாரணர், சர்வகற்பிதா, சர்வநியந்தர், சர்வாந்திரியாமி; அவர் தீனகிருபாகரர், சீலமனோகரர், ஞானதிவாகரர், நற்குணசாகரர், பரமபவித்திரர், பக்தர்கள் மித்திரர், அவர் தர்மசமுத்திரர், சகல விசித்திரர், அகில நிர்வாகரர், ஆனந்தபோகர், இகபரத்தியாகர், இன்பப் பிரவாகர், அவர் மோட்சதாதர, மூலவேதா, சாட்சாத் மாதா, சர்வஞ்ஞாதா; அவர் ஆதிமத்தியாந்தரகிதர், சோதி நித்தி யானந்தசகிதர், வேதசித்தாந்தவிகிதர், போதவிருத்தாந்த விகிதர், அவர் கபடநாடக சூத்திரர், தபனகோடி காத்திரர், உபஞான நேத் திரர், அபயமோக்ஷக்ஷேத்திரர்; அவர் பாவநாசர், ஜீவநேசர், தேவ ராசர், மகாவிலாசர், இப்படிப்பட்ட அநந்த கல்யாண குணங்களை யுடைய பராபர வஸ்துவினுடைய மகோன்னதப் பிரதாபத்தை யார்தான் அறிவார்?

"அங்கிங் கெனாதபடி யெங்கும் ப்ரகாசமா
யானந்த பூர்த்தியாகி
யருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
யகிலாண்ட கோடியெல்லாந்
தங்கும்படிக் கிச்சைவைத் துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது மனவாக்கினிற்
றட்டாம னின்றதெது சமயகோடிக ளெல்லாந்
தந்தெய்வ மெந்தெய்வமென்
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது
வெங்கணும் பெருவழக்கா
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா
யென்றைக்கு முள்ளதெதுமேற்
கங்குல் பகலறநின்ற வெல்லையுள தெதுவது
கருத்திற் கிசைந்ததுவே
கண்டனவெலா மோனவுரு வெளியதாகவுங்
கருதியஞ்சலி செய்குவாம்."

என்று தாயுமானவரும் சொல்வதுபோல்,

சகல சாஸ்திரங்களும், வேதங்களும், வேதாகமங்களும், சமயகோடிகளும் சொல்வதெல்லாம் கடவுளேயல்லாமல் வேறல்ல.

கல்விமானுக்குத் தெய்வபக்தியே சிறந்த பூஷணமாயிருக்கின்றது. ஒருவன் கல்விமானாயிருந்தாலும், தனவானாயிருந்தாலும், அவனிடத்தில் தெய்வநேசம் இல்லாவிட்டால் அவனைப்போல நிர்ப்பாக்கியர்கள் ஒருவருமில்லை. ஒருவன் தரித்திரனா யிருந்தாலும், பக்திமானா யிருப்பானானால் அவனைப்போல பாக்கியசாலிகள் ஒருவருமில்லை. ஒவ்வொரு நிமிஷமும் கடவுளிடத்தில் நாம் பெற்றுக்கொள்ளுகிற உபகாரங்களுக்குக் கணக்குண்டா? நாம் உண்பது அவருடைய அன்னம்; உடுப்பது அவருடைய வஸ்திரம்; குடிப்பது அவருடைய ஜலம்; நாம் வசிப்பது அவருடைய வீடு; சஞ்சரிப்பது அவருடைய பூமி; நாம் சுவாசிப்பது அவருடைய சுவாசம்; நாம் காண்பது அவருடைய பிரகாசம்; நாம் அனுபவிப்பது அவருடைய சுகம்; அந்தச் சுகங்களை அனுபவிக்கிற நமது தேகமும், பஞ்சேந்திரியங்களும், ஆத்மாவும் அவருடைய கொடை. அவருடைய கிருபை இல்லாவிட்டால் ஒரு நிமிஷமேனும் நாம் ஜீவிக்கக்கூடுமா? அவர் நம்மை அசைக்காமல் நாம் அசையக்கூடுமா? அவர் நம்மை நடப்பிக்காவிட்டால் நாம் நடக்கக்கூடுமா? பூமியைப் பார்த்தாலும், ஆகாசத்தைப் பார்த்தாலும், எங்கே பார்த்தாலும், அவருடைய உபகாரமயமேயன்றி வேறுண்டோ? ஆகாயம் நம்மைச் சூழ்ந்திருப்பதுபோல, அவருடைய உபகாரங்கள் நம்மைச் சூழ்ந்திருக்கின்றன. சமுத்திரத்திலே பிறந்து, சமுத்திரத்திலே வளர்ந்து, சமுத்திரத்திலே ஜீவிக்கிற மீன்கள்போலக் கடவுளது கிருபா சமுத்திரத்துக்குள்ளாகவே நாம் ஜனித்து, வளர்ந்து, ஜீவிக்கிறோம்.

தெய்வத்தை அஞ்சலியா கை நெற்குற்றும் உலக்கை; தெய்வத்தைப் பணியாத முடி கம்பளநார் முடி; தெய்வத்தைத் தரிசிக்காத கண் பாம்புப் புற்றுக் கண்; தெய்வத்தை வாழ்த்தாத வாய் சுண்ணாம்புக் காளவாய்; தெய்வ ஸ்தலத்தைத் தேடிச்செல்லாத கால் புந்தற்கால்; தெய்வ ஸ்துதியைக் கேளாத செவித்தொளை பருத்த நுகத்தொளை. காற்றுக் கெதிரே ஏற்றிய விளக்குபோல, அடிக்கடி யலைந்து ஓயாமலாடும் பம்பரம்போல இடைவிடாது சுழன்று, ஒரு வேலையு மில்லா விட்டாலும் நிற்க நேரமில்லாமல் திரியும் நாய்போல அரைக்கணமுந் தங்காது, காடு மலை

காணுறுக ளெல்லாங் கடந்து, லோகா லோகமெங்கும் ஓடித்திரிகின்ற பொல்லாத மனமென்னுங் குரங்கு அஞ்ஞானமாகிய வேர் கொண்டு, ஆணவமாகிய மரத்திலேறி, பலவகை யெண்ணமாகிய இலைகள் செறிந்த ஆசையாகிய கிளைகளைத் தாவி, தீவினையாகிய கனிகளைக் கொள்ளை கொண்டு, சேஷ்டை செய்யவொட்டாமல், அதனை நிராசையாகிய கயிற்றினாற் கட்டி, அடக்கி வைத்தாலும், தெய்வம் அமைத்த இரக்ஷண்ய மார்க்கத்தை உணரும் ஞானமில்லாதவர்களுக்கும் மோட்சத்திற்கும் வெகுதூரமே.

"ஐயறி வறிந்தவை யடங்கின வரேனு
மெய்யறி விலாதவர்கள் வீடதுபெறுரே."

தெய்வநிலை இத்தன்மைத்தென்று அத்தெய்வத்தின் அருளைக்கொண் டறிந்தாலன்றி, மற்றொரு விதத்தில் தெளியக்கூடாமையால் யானை கண்ட குருடர்போலவும்,

"தோள்கண்டார் தோளேகண்டார் தொடுகழற் கமலமன்ன
தாள்கண்டார் தாளேகண்டார் தடக்கை கண்டாரும்மஃதே
வாள்கொண்ட கண்ணார்யாரே வடிவினை முடியக்கண்டார்
ஊழ்கொண்ட சமயத்தன்னானுருவு கண்டாரை யொத்தார்."

என்பதுபோல், உலகத்திலுள்ள பற்பலசமயத்தாரும் பற்பல அவசரமாகத் தாம் தாம் கண்டதையே பொருளென்று மதித்து அதற்குத் தக்க யுக்தி சாதனங்களைக் கொண்டு சாதிப்பார்கள். பொறிகளாகிய மதயானைகளைப் புலன்களின்மேற் செல்லவொட்டாமல் அறிவென்னும் அங்குசத்தால் அடக்கி, நெஞ்சமாகிய குதிரையைப் பகிர்முகமாகிய வெட்ட வெளியில் ஓடவிடாது, பக்தியாகிய கடிவாளத்தை யிறுக்கி, வைராக்கியமென்ற தளையைப்பூட்டி, அந்தர்முகத்தில் நிறுத்தி, பரமகாருணியராகிய கடவுளைத் தியானித்து, அவருக்கடிமை பூண்டு "அற்றது பற்றெனி லுற்றது வீடு" என்ற வண்ணம், அகங்கார மமகாரமாகிய பற்றுக்களை வாசனையோடே கைவிட்டு, இனி துஷ்கிருத்தியங்களைச் செய்யாது, கடவுள் ஆணைக்கமைந்து அவருடைய திருவடித் தொண்டு செய்து, எனக்கொன்று மில்லையென்னும் உபாயபாதந்திரனு யொழுகினல், பந்தங் கெட்டு மோட்சங் காட்சியாகும்.

கல்விமா lessed are the pure in heart; for they shall see God.) ஒருருதயத்தில் சுத்தமுள்ளவர்கள் பாக்கியவான்கள் அவர்கள் தேவனைத் தரிசிப்பார்கள்" என்றார் இயேசு சுவாமி. தெய்வ பக்தியே தீவினையாகிய உளையைக் கடந்துசெல்லும் ஊன்றுகோல்; தெய்வதரிசனமே இப்பிறவிக் கடலைக் கரைகாணும் நாவாய்; தெய்வத் தியானமே முத்தியாகிய மேல்வீட்டிலேறும் நூலேணி. தெய்வத்தின் அருளுதயமே அஞ்ஞான விருளை யொழிக்கும் ஆதித்தியோதயம்; தெய்வ வணக்கமே நரகவாசலை அடைக்குந் தாழ்; தெய்வத்தை வாழ்த்தும் வாழ்த்தே பாசவிலங்கைத் தறிக்கும் கருவியாம்; தெய்வபக்தி உதிக்காமல் உலகபாசம் ஒழியென்றாலும் ஒழியாது; பாவநிவாரண பலியாக தம்மையே தத்தம் செய்த தெய்வத்தைத் தொழாமற் பாவநிவாரணமாகிறது பிரயாசம். தெய்வத்தை ஆராதிப்பதல்லவோ தவஞ் செய்கை? அதற்கு அந்நியமாகச் செய்வனவெல்லாம் அவஞ் செய்கையே. ஒரு நொடிப் பொழுதாவது தெய்வத்தை ஸ்துதியாத நாவுக்குப்பரிசுத்தமேது? தெய்வச் சிந்தனையிலுலன்றிச் சித்தசுத்தி சொப்பனத்திலும் வருமா? சுயகாரிய துரந்தரனுஞ் சுவாமிகாரிய வழுவழுகனுமாயிருப்பவனுக்குத் தெய்வகடாக்ஷம் எவ்வாறுகிடைக்கும். "குழந்தையுந் தெய்வமும் கொண்டாடுமிடத்தில்" என்கிறார்களே. புறக்கண்ணினாற் கடவுளை நிஜஸ்வரூபமாய்க் காணவே கூடாது; அகக்கண்ணினால் ஒருவாறு காணலாம். அநேகர் அஞ்ஞான விருள் சூழ்ந்து அகங் குருடா யிருப்பதனால், அவர்களுக்கு அகக்கண்ணிலும் புலப்படுகிறதில்லை. என்றாலும், உள்ளமாகிய தகளியில் அன்பாகிய நெய்யைப் பெய்து, அருளாகிய திரியையிட்டு, அறிவாகிய விளக்கை யேற்றினால் அவர்களுக்கும் புலப்படலாம்.

### திருமந்திரம்.

"முகத்துக் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்துக் கண்கொண்டு பார்ப்பதே யானந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றால் சொல்வது எங்ஙனே."

கடவுளைத் தேடியடைந்து அவருக்கு அடிமை பூண்டு அவரைத் தொழுது அவராணையை அதிக்கிரமிக்காமல் நம்பிக்கை கொண்டு

அவர் சொன்ன வண்ணம் அகப்பற்று புறப்பற்றுக்களை ஒழித்துப் பக்தி வைராக்கியத்தோடு நடந்து, நோயாளியானவன் நல்ல வைத்தியனைத் தேடியடைந்து, அவன் சொல்லினிடத்தில் நம்பிக்கை வைத்து, அவன் கொடுத்த மருந்தை யுண்டு, அவன் வைத்த பத்திய பாகந் தவறாதிருந்தால், நோய் நீங்கிச் சரீர சொஸ்தமாய் ஆரோக்கியம் பெறுவதுபோல; துன்பம் அற்றுச் சுகமுற்றுப் பெரும்பேறு பெறுவானென்றும், ஆணவத்தால் தெய்வ கட்டளையை மீறி அந்தத் தெய்வத்தையே நிந்தித்து, அங்குசமில்லாத யானையும், கடிவாளமில்லாத குதிரையும்போல, ஒருவரையு மதியாமல் நினைத்தபடி யெல்லாம் தன்னிஷ்டமாய் நடப்பவன் யுக்தா யுக்தந்தெரியாமல் பாவச்செய்கையே பயின்று யாவராலும் இகழப்பட்டு இகபரார்த்தங்களை யிழந்து பற்றுக்கோடின்றி இடும்பைக்கின்ற தாய்போன்ற குடும்பச் சேற்றி லாழ்ந்து, பெண்டு பிள்ளை பண்ட பதார்த்தங்களையே சதமென்றெண்ணி, விழலுக்கிறைப்பதுபோல, அவற்றிற்கே உள்ள நாளெல்லாம் உழைத்து, வைதீகத்தைப் பகைத்து, லௌகீக லோலனாய்த் தினையளவாவது தெய்வ சிந்தை யில்லாமல் வியர்த்தனுவான். பள்ளமிறைத்தவர்களுக்கல்லவோ பங்குண்டு? உழுகிற காலத்தில் ஊர் திரிந்து அறுக்கிற காலத்தில் அரிவாளை யெடுத்துக்கொண்டு புறப்பட்டால் என்ன கிடைக்கும்? ஈஸ்வரத் தியானம், மனோதத்துவ லக்ஷணமாயிருக்கின்றதாதலின், அதைத் தெய்வ பக்தர் மனங் கலங்காது அபிவிர்த்தி செய்யவேண்டும். பளிங்குபோல் மனமானது எந்தெந்தப் பொருளின் சார்பிலிருக்கின்றதோ அந்தந்தப்பொருளின் தன்மையாகத் தக்கதா யிருக்கின்றதாகையால் சற்குண சமூகமான கடவுள் மூர்த்தத்தின் தியானம் நமக்கு எல்லாவகையாலும் நன்மையைப் பயக்குமென்பதற்கு எள்ளளவும் ஐயமில்லை. உலக சம்பந்தமாகிய பாச பந்தங்கள் ஒழிந்து, உலகத்திலுள்ள துக்கங்களுக் கேதுவாகிய பற்பல விஷயங்களுக் கிணங்காமல் மனக்கிளர்ச்சியுடன் சுகித்திருக்கவும் எவ்வகைப்பட்ட ஆபத்துகளுக்கும் அஞ்சாமல் மனோ தைரியத்துட னிருக்கவும் அது நம்மைத் தூண்டிவிடும். ஈஸ்வரத் தியானத்தில் சதா ஈடுபட்டிருந்த பெரியோர்கள் நாங்கள் ஒருவருக்கும் அடிமைகளல்லவென்னுங் கருத்தை யுள்ளடக்கி,

"நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லால்
இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
தற்பரனின் புத்ரராக்க தாரணியுதித்த
கோமார்க்கே நாமென்று மீளா வாளாய்க்
கொய் மலர்ச்சே வடியிணையே குறுகினோமே."

என்று கூறியிருக்கின்றனர். இதை யோசிக்கையில் பக்தர்களுக்குண்டாகும் தைரியமும், பரிசுத்ததன்மையும், மனக்கிளர்ச்சி முதலிய எல்லாக் குணங்களும் பகவத் தியானத்தினால் பகவானுடைய குண விசேஷங்கள் அவர்களுடைய மனதில் பிரதிபலிப்பதனாலுண்டாகின்றன வென்று தெளிவாய் விளங்குகிறது.

தியான யோக நிரதரான யோபு மகாத்மாவைப்போல் கைம்மாறு கருதாப் பக்தியின் சிறப்பை இந்து புராணங்களிலும் காணலாம். தர்மர், தனது சகோதரரான துரியோதனனுதியாரால் துரத்தப்பட்டு, இமயமலைச் சாரலில், தனது தம்பிமார் நால்வர், திரௌபதி ஆகிய இவர்களோடு வனவாசம் செய்யும் காலத்தில், ஒருநாள் அவரைப் பார்த்து, "நீங்கள் இவ்வளவு கஷ்டப்பட்டுக் கொண்டிருக்குங் காலத்திலும் கடவுளை மறவாது பக்தி செய்து வருகிற தெவ்வாறு?" என்று திரௌபதி வினவினாள். அதற்கு யுதிஷ்டிரர், "பெண்மணி! இதோ இந்த இமயமலையைப் பார். எவ்வளவோ மனோரம்மியமா யிருக்கிறது, எனக்கு இதை எப்பொழுதும் பார்த்துக்கொண்டே இருக்கவேண்டும் என்ற ஆவல் உண்டாகின்றது. எனக்கு எதாவது இந்தமலை பிரதியுபகாரம் செய்கின்றதா? இப்படி யிருந்தபோதிலும், கம்பீரமாயும், மனோரம்யமாயும், இருப்பவைகளிடத்தில் ஆவலிருப்பது என் ஸ்வாபவம், ஆனதினாலேதான் இதனை மிக விரும்புகிறேன். இதுபோலவே நான் கடவுளையும் பக்தி செய்கிறேன். அவர் இந்த உலகிலுள்ள ஸகல காம்பீர்யத்திற்கும் அழகிற்கும் மூல காரணம், மெய்யன்போடு விரும்பத்தக்க வஸ்து கடவுள் ஒருவரே; அவரை விரும்புவது என்னுடைய ஸ்வபாவம். ஆகையால் நான் அவரைப் பக்தி செய்கிறேன். இப்படிச் செய்வதற்கு நான் ஒரு கைம்மாறும் அபேக்ஷிக்கவில்லை. இப்படிப் பக்தி செய்வதே எனக்குத் திருப்திகரமாயும் சுகமாயும் இருப்பதால் நான் இவ்வாறு இருக்கிறேன். இந்தப் பக்தியை வியாபார ரூபமாய்க் கைம்மாறு கருதிச் செய்வது என்னால் முடியாது" என்று மறுமொழி சொன்னார். தெய்வநீதிக்கும் தீயபாவிக்கும் ஒப்புரவுண்டாக்கும்படி மனுடாவதாரமெடுத்த மஹேஸ்வரன் கோடைகாலத்தில் கானலில் வருந்தி கன வியர்வை கொண்டு களைத்து இளைத்துத்தாகித்துச் சோகித்து வந்தவர்களுக்குக் குளிர்ந்த தாமரையோடையும், அதனருகில் சோலை நிழலும்போல தன்னால், பிறரால், தெய்வத்தால் வருவனவாகிய மூவகைத் தாபாக்கினியால் தகிக்கப்பட்டு விடாய்கொண்டு துன்பப் பாரத்தாலிளைத்து நொந்து மூர்ச்சித்து வேறுகதியின்றித் திருவுளமே தஞ்சமென்று உண்மையாய் நம்பிவந் தடைபவர்களுக்குத் தாமே ரட்சகராய், கருணாநிதியாய், ஆபத்பாந்தவராய், தீனசகாயராய், இளங்கன்றுக்

[illegible] குருகும் அன்னை

போலவும் திருவுளமிரங்கி, அவர்கள் பாவித்த வண்ணம் அப்பொழுதே தோன்றி, அவர்களைக் கைநழுவவிடாது அஞ்சேலென்று ஆதரித்து இம்மையிற் சகல பாக்கியமுந் தந்து, மறுமையில் சுடுமெடுப்பு மில்லாத மோட்ச சாம்பிராச்சியத்தையும் அருளிச் செய்வார்.

எத்தன்மைக் குற்ற மியற்றிடினுந் தாய்பொறுக்கு
மத்தன்மை நின்னருளு மன்றோ பராபரமே.

வித்தன்றி யாதும் விளைவதுண்டோ நின்னருளாஞ்
சித்தன்றி யாங்களுண்டோ செப்பாய் பராபரமே.

எவ்வுயிரு மென்னுயிர்போ லெண்ணி யிரங்கவுநின்
றெய்வ வருட்கருணை செய்யாய் பராபரமே.

" துட்ட வஞ்சக நெஞ்சக மேயொன்று
சொல்லக்கேள் கடல் சூழுலகத்தில்
யிட்டமென் கொலிறை யளவேனுமோ
ரின்பமில்லை யிடைக்கிடை யின்னல்க
ணட்டமிக் குறல் கண்டு கண்டேங்கினை
நாணுகின்றிலை நாய்க்குங் கடையை நீ
பட்ட வன்மைக ளெண்ணி லெனக்குடற்
பதைக்கு முள்ளம் பகீலென வேங்குமே."

பொல்லாத வஞ்சகத்தை யுடைய மனமே! நான் சொல்லுவதைக் கேள். அது என்னவென்றால், இவ்வுலகத்தில் உனக்கு வாஞ்சனையேன்? அடிக்கடி துன்பமே யல்லாமல் இன்பங் கிடையாதே. அநேக முறை அநேக ஜனங்கள் நஷ்டத்தை யடைந்து அதினால் வாடுவதைக் கண்டு கண்டு நீயும் வருந்தி யிருக்கின்றாய். அங்ஙனமிருந்தும், உனக்கு இன்னும் கொஞ்சமேனும் நாணம் வரவில்லை. ஆகையால், நீ நாயைப்பார்க்கிலுங் கீழ்ப்பட்டவனாயிருக்கின்றாய். நாமே பட்ட துன்பங்களை யெண்ணி யெண்ணிப் பார்க்கும்போதெல்லாம என்னுடைய உடல் பதைக்கின்றது. நெஞ்சமோ! பகீரென ஏங்குகின்றது. அந்தோ! அந்தோ!! இங்ஙனமிருந்தும் உனக்கு இன்னும் நற்புத்தி வரவில்லையே, ஈதென்ன விபரீதமோ?

" அண்ணலே நின்னை யெண்ணலே னென்னை
யாண்டு கொண்டனை மீண்டும் விண்டனை
னண்ணலே யறியேன் கடையேன்
சிறு நாயனையேன்
பெண்ண லேனிய லாணலே னலிப்
பேயனேன் கொடும் பேதை யேன்பிழை
கண்ணலே புரியா தின்னு மீட்கக்
கருது தியோ."

பெருமையுடைய கடவுளே! உன்னைச் சிந்தியாத என்னையும் ஆண்டு கொண்டாய். அங்ஙனஞ் செய்திருந்தும் நான் உன்னை மறந்தேன். ஆகையால் நான் மீண்டும் உன்னைச் சிந்திக்காமல் விட்டு விட்டேனே யென்றெண்ணி சிறிய நாயினை யொத்தவனும், பெண், ஆண், அலி இவைகளல்லாத பேயினை யொப்பானவனும், கொடிய மூடனுமாகிய என்னுடைய பிழையைப் பொறுத்து மறுபடியும் தீயவழியினின்றும் நீக்கித் திருவருள் செய்ய எண்ணுவாயோ?

"ஆவித் துணையேயென் னாரமுதே நின்வடிவைப்
பாவித் திணையேனிப் பாவியேன் — சேவித்து
வாழ்த்தேனின் பொன்னடியில் வந்தென் றலைகுனித்துத்
தாழ்த்தேனென் செய்கேன் றவம்."

என்னுடைய உயிர்க்குத் துணைவனே! அரிய அமிர்தம் போல்வானே! உன்னுடைய திருவடிகளைப் பாவனைசெய்து மனமிளகேன். அன்றி, சேவித்துந் துதியேன். அன்றி, உன்னுடைய திருவடிகளில் என்னுடைய தலையைக் குனித்து வணங்கேன். ஆகையால், நான் பாவியேயாவேன். இங்ஙன மிருத்தலால் நான் என்ன தவஞ் செய்யப்போகிறேன்? ஒன்றுமில்லை.

"உன்னைநினைந் திங்கே யுலாவுகின்றே னன்றி யெந்தாய்
பின்னை நினைப்பொன்றும் பெற்றிலே — னென்னை
விடாதேநின் பொன்னடியை மேவார்சேர் துன்பங்
கொடாதே யெனையேன்று கொள்."

இறைவனே! நான் உன்னைப் பலகாலுஞ் சிந்தித்தே திரிகின்றேன். ஆகையால், நீயும் என்னை மறந்துவிடாமல் காப்பாற்றவேண்டும்.

"என்னரசே நின்னடிக்கீ ழென்னிடரை நீக்கெனநான்
சொன்னதலாற் றுயுடனுஞ் சொன்னேனோ — வின்னுமிந்தத்
துன்பச் சுமையைச் சுமக்கமுடி யாதென்னு
லன்பர்க் கருள்வோ யருள்."

என்னரசே! நீ உன தன்பர்களுக்குச் செய்யுமாறு எனக்குந் திருவருள்செய் யாது விட்டுவிடுவாயானால் துன்பமாகிய பாரத்தைச் சுமக்க என்னால் முடியாது.

"கண்ணா ரமுதே கரும்பேயென் கண்ணேயென்
னண்ணா வுன் பொன்னருடா னார்ந்திடுமோ வல்லதென்று
நண்ணாதோ யாதுநணுகுமோ வென்றுருகி
யெண்ணாது யெண்ணுமிந்த வேழைமுகம் பாராயோ."

இறைவனே! உன்னுடைய திருவருட்சத்தி என்னிடத்திற் பதியுமோ? பதியாதோ? என்று பன்னாளும் வருந்துகின்ற எனக்குக் கூடிய சீக்கிரத்தில் நீ திருவருள் செய்வாயாக.

1. Thou art the first cause of old, O Lord, and existest in everything. These crystalline veils, woven of beautiful rays of the sun, moon, and stars, are they not the curtains between the heavenly world and this? The discordant elements, sea, fire, earth and air are they not shadows of thy hand? Do they not all proclaim thy praise and the mighty power that encompasses thee? Does not the earth mark thy grandeur in the beauty of its flowers? Does not the wind, repeated in the echoes, proclaim by its accents that thou didst give it birth? The fire and the water fail not in thy praise; in every flame there is a tongue, in every wave there is a tongue to sound thy praise.
—*Calderon.*

2. " And a God there is! over space, over time,
While the human will rocks like a reed to and fro,
Lives the will of the Holy—a purpose sublime,
A thought woven over creation below;
Changing and shifting the all we inherit,
But changless through all one Immutable Spirit!"—*Bulwer.*

3. God is where the sun glows, God is where the violet blooms, is where yon bird is flapping its wings, is where this worm is moving. Though no friend, no man, be with thee, fear nothing. Thy God is here. —*Dinter.*

4. Heaven's gate is narrow and minute,
It cannot be perceived by foolish men,
Blinded by vain illusions of the world.
E'en the clear-sighted who discern the way
And seek to enter, find the portal barred
And hard to be unlocked. Its massive bolts
Are pride and passion, avarice and lust.

5. Nothing can supersede for sweetness the singing of the lark on a summer's day; higher and yet higher as it rises in the air, sweeter and sweeter still is its song—a fitting simile of ourselves. The higher we rise towards God and holiness, the more sweetly shall we chant forth His praises and our thanks. *Ruby Ellis.*

6. As a fond mother, when the day is o'er,
Leads by the hand her little child to bed,
Half willing, half reluctant to be led
And leave his broken playthings on the floor,
Still gazing at them through the open door,
Nor wholly reassured, nor comforted
By promises of others in their stead,
Which, though more splendid, may not please him more:
So Nature deals with us and takes away
Our playthings one by one, and by the hand
Leads us to rest so gently, that we go,
Scarce knowing if we wished to go or stay,
Being too full of sleep to understand
How far the unknown transcends the what we know.
—*Longfellow.*

7. Just to be tender, just to be true,
Just to be glad the whole day through;
Just to be merciful, just to be mild,
Just to be truthful as a child
Just to be gentle, and kind and sweet,
Just to be helpful with willing feet,
Just to be cheery when things go wrong——
Just to drive sadness away with a song,
Whether the hour is dark or bright,
Just to be loyal to God and right.
Just to believe that God knows best,
Just in His promises even to rest—
Just to let love be our daily key,
That is God's will for you and me.

8. Sorrows, joys, worries, troubles, all look so differently when we see in them God's *will*—not our will, nor anybody else's fault, or our own mistakes—simply, this is God's will for me; this is what He has given to me to do; this is what He has given me to bear.
*Mrs. Marshall.*

9. Four things a man must learn to do,
If he would make his calling true;
To think without confusion, clearly,
To love his fellow-men sincerely,
To act from honest motives purely,
To trust in God and Heaven securely. —*Van Dyke.*

10. Every man is set upon an ascending line of human life. You never find God calling a man downwards, diminishing the volume of his manhood, checking his good aspirations, putting him down in the scale of his being. All the divine movement is an upward movement.

11. Some will hate thee, some will love thee,
Some will flatter, some will slight,
Cease from man, and look above thee
Trust in God and do the right! —*Norman Macleod.*

12. If your eye is on the Eternal, your intellect will grow, and your opinions and actions will have a beauty which no learning or combined advantages of other men can rival. —R. *W. Emerson.*

13. The best things in the divine life, as in the natural will not come to us merely for the asking; true prayer is *the whole strength of the whole man going out after his needs*, and the real secret of getting what you want in heaven, as on earth, lies in the fact that you give your whole heart to it or you cannot adequately value it when you get it. —R. *Collyer.*

14. O Thou that sit'st in Heaven, and see'st,
My deeds without, my thoughts within,
Be Thou my prince, be Thou my priest—
Command my soul and cure my sin:
How bitter my afflictions be
I care not so I rise to Thee. —*Quarles.*

## விடாமுயற்சி.

காரிய சித்தி யடைவதற்கு முதல் ஆதாரம் உழைப்பே. "சோம்ப ரென்பவர் தேம்பித் திரிவர்" என்பது பழமொழி. சோம்பலுள்ளவன் ஜீவியப்போரில் நிலைத்திருக்க முடியாது. கண்களைப் பறிக்கும் பிரகாச காந்தி யமைந்த விளக்கானது தன் திரியையும் எண்ணெயையும் செலவழிக்கப் பின் வாங்காமல் இருப்பதினாலேயே அலங்கார மகிமையை யடைகிறது. சுயநலத்தை விரும்பி, எண்ணெயையும் திரியையும் மீதி வைக்காமல் தன்னை மறந்து ஓயாமல் வேலைசெய்வதினாலேயே பிரகாசமுண்டாகின்றது. நாம் க்ஷேம மடைய விரும்பின் நமது தினானுபவச் செய்கைகளில் நமது தேகத்தையும் தசை நரம்புகளையும் நாசஞ் செய்யவேண்டும். உபயோகமென்னும் அக்கினியில் அவைகளைத் தகனஞ் செய்யவேண்டும். தன் மனதையும் தேகத்தையும் சிலுவையில் அறைந்து உழைப்பதே ஜெயமடையும் வழி. உண்மையான எல்லா வேலையிலும் ஓய்வும் அடங்கி யிருக்கிறது. தூரத்துப் பார்வைக்குப் பல வர்ணங்கள் பொருந்தி யிருப்பதாகத் தோன்றும் வானவில்லானது சமீபத்தில் நெருங்கிப் பார்த்தால் ஒன்றுமில்லாததாகத் தோன்றும். ஓய்வில்லாமல் வேலை செய்வதால் அகங்கார மமகாரங்க ளடங்கி சுயநலம் சூன்யமாகி விடுவதால் விடாமுயற்சியே சிறந்த யோகமென்னலாம். நல்ல காரியங்கள் எவற்றில் நாம் பிரவேசிப்பினும் விடாமுயற்சி இன்றியமையாத சாதனமாகும். ஒரு காரியத்தை முடிக்க வேண்டுமாயின், மெய்வருத்தம், பசி, தூக்கம் முதலியவைகளைத் துறத்தல் வேண்டும். எறும்பூரக் கல்லுந் தேயுமாதலால், விடாது முயல்வோமாயின் முடியாத காரியமில்லை. இடைவிடாது முயலுகிறவனே மஹா புருஷன்.

நமக்குள்ளிருக்கும் கோபம், மோகம், அகங்காரம், அமைதியின்மை, சுயநலப்பிரியம், முதலிய சகலவித துர்க்குணங்களினின்றும், இவ்வவனியின் கண்ணே நமக்கு நேரிடக்கூடிய சகல சோதனைகளி னின்றும் தப்புவிக்கும் சிறந்த மருந்து வேலையே. உண்மையாக உழைக்கும்பொழுது ஓர் உறுதியான மகிழ்ச்சி யுண்டாகிறது. இந்த ஆனந்தந்தான் வேலை செய்வதினாலுண்டாகும் உத்தம சம்மானம். சுயநலத்தைக் கருதி, நமது மனதை வேலையில் செலுத்த மோட்ச பொக்கிஷமாகிய பேரின்பம் உண்டாகிறது. இந்த மாசற்ற, தூய இன்பமானது நம்மை கடவுளுக்குகந்த பிள்ளைகளாக்குகின்றது. ஒரு சன்மானத்தையும் எதிர் பாராமல் பற்றில்லா வழியிலே பாடுபடுபவன் பரலோகத்திற்குப் பாத்திரனாகும் பாக்கியத்தை யடைவான். அவனுக்கு இகபர பாக்கிய சிலாக்கியங்க ளனைத்தும் கைகூட கடவுள் துணை செய்வார்.

## உழைமின்! உழைமின்!! ஓயாது உழைமின்!!!

ஊக்கமுடையார் தாமெடுத்த கருமங்கட்கு இடையூறுகள் அடுக்கி வரினும் இடையறாது முயன்று அவற்றை முடித்தேவிடுவர். அதமர் இடையூறுக்கு அஞ்சி ஒரு தொழிலையும் செய்யமுயலார். மத்திமர் தொழிலைத் தொடங்கி, இடையூறு வருங்கால் அதனை விலக்க வகையறியாது எடுத்த காரியத்தை விடுத்து வருந்துவர். உத்தமரோ, தமது கருமத்துக்கு இடையூறுகள் பலவாய் வரினும், அவற்றை அஞ்சிச் சிறிதும் மனந்தளராமல் முயன்று கருதிய பொருளைப் பெறுவர்.

> "மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
> எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
> அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
> கருமமே கண்ணாயி னார்."

என்ற வெண்பாவில் சொல்லி யிருப்பதுபோல், கருமமே கண்ணாயினாராகிய ஊக்கமுடைய உத்தமர் பாயிற் படுக்க நேரினும், பஞ்சணையில் துயில நேரினும், அடைகாய் நுகரவரினும், அறுசுவை உண்டியே உண்ணக் கிடைப்பினும், கந்தையுடுப்பினும், கனகாம்பரம் தரிப்பினும், வெறுப்பு, விருப்புக்கொள்ளாது மனதைச் சமநிலைப்படுத்தி தம் முயற்சி கைகூடுந்தனையும் இன்ப துன்பங்களை இலட்சியம் செய்யார். இன்னும், நன்முயற்சியில் ஊக்கமுடைய உத்தமர் தம்மை ஒருவர் முன்புகழினும், இருவர் பின்பிகழினும், மெய்த்திரு வந்துற்றாலும், வெந்துயர் வந்துற்றாலும், மரணம் இன்றுவரினும், நின்றவரினும் நன்னெறியினின்று ஒருக்காலும் விலகார். வாளின்மேல் நின்றாடுவோர் தமது கண்ணையும் கருத்தையும் அதனிடத்துச் செலுத்தி ஆட்டந் தவறாமலும் பகு ஜாக்ரதையுடன் ஆடி யாவராலும் வியக்கப்படுதல்போல் தாங்கொண்ட கருமத்தில் மனதைச்செலுத்திக் காரியத்தை முடித்துப் பயனடைகின்றனர். அன்றியும் காற்றினால் அசைந்தாடும் சிறிய கொம்பும் வளர்ந்து முதிர்ந்தால் அதுவே மதங்கொண்ட யானையையும் கட்டுதற்குரிய கந்தாதல்போல், ஒருவன் இடைவிடாது முயன்று வருவானாயின் அவனே காரியசித்தியையுங் கீர்த்தியையு மடைவான். ஆதலின் மேலான காரியத்தையே முயன்று முடித்தல் மேலோர் செய்கையாகும். அற்ப காரியத்தில் சிறவருக்குத் திருப்தியுண்டு.

Larger vessels may venture more, but little boats must stick to shore.

சிங்கத்தினின்றும் ஒரு குணத்தையும், கொக்கினிடத்திலிருந்து ஒரு குணத்தையும், கோழியினிடத்திலிருந்து நான்கு குணங்களையும், காக்கையினிடத்திலிருந்து ஐந்து குணங்களையும், நாயினிடத்திலிருந்து ஆறுகுணங்களையும், கழுதையினிடத்திலிருந்து மூன்று குணங்களையும் கிரகிக்க வேண்டும்.







காரியம் அற்பமாயினும் பெரிதாயினும், அதை முழுமுயற்சியோடு செய்வது சிங்கத்தின் குணம். "ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும் வாடியிருக்குமாங் கொக்கு" என்பதுபோல், இந்திரியங்களை அடக்கிக் காத்திருந்து காலம், பலம் முதலியவற்றை அறிந்து எக்காரியத்தையும் செய்வது கொக்கின் குணம். தக்கசமயத்தில் விழிக்கக்

கொள்ளுதலும், சண்டையில் பின் வாங்காமையும் கிடைத்தவற்றைப் பந்துக்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்தலும், தானே வலிய ஆக்கிரமித்தலும் சேவலின் குணங்களாகும். தைரியமும், தக்க சமயத்தில் உணவு சேகரித்தலும், ஜாவதானமா யிருத்தலும், பிறரிடம் விசுவாசமின்மையும் காக்கையின் குணங்களாகும். கிடைத்தவிடத்தில் உண்பதும், அற்ப வுணவைக்கொண்டு மகிழ்தலும், நினைத்தநேரத்தில் தூங்கி விழித்தலும், தலைவனிடம் விசுவாசமும், சௌரியமும் நாயினிடமுள்ள குணங்களாகும். தான் எவ்வளவு சிரமத்தை அடைந்திருந்தாலும் சுமையைத் தாங்குதலும், குளிர் வெப்பத்தைப் பொறுத்தலும், எப்பொழுதும் சந்தோஷமா யிருத்தலும் கழுதையினிடமுள்ள குணங்களாகும். மேற்கூறிய இருபது குணங்களையும் கைக்கொள்பவன் எக்காரியத்திலும் வெற்றி பெறுவான்.

## பகீரதப் பிரயத்தனம்.

உலகத்தில் பெரிய காரியங்களைச் சாதித்தவர் அனைவரும் விடாமுயற்சி யுடையவர்களா யிருந்திருக்கிறார்கள் என்பது பல தேச சரித்திரத்தாலும் நன்றாய் விளங்கும். அரும் பெரும் முயற்சியுடன் அரிய காரியங்களைச் செய்து முடிப்பதற்கு பகீரதப் பிரயத்தனத்தினால் முடிவுபெற்றது என்பது சாதாரண தமிழ் வாக்கியமாயிருத்தலின், அப்பதம் உற்பத்தியான கதையை இங்குவிளக்குவோம். கிருதயுகத்தில் மிகவும் தர்மமாய் ராஜ்ய பரிபாலனஞ் செய்து வந்த ஸகர சக்கிரவர்த்தி இந்திரப் பட்டமடைய வேண்டுமென்று அசுவமேதயாகஞ் செய்யத் தொடங்கினார். அதையறிந்து இந்திரன் பொறாமை மேற்கொண்டு அந்த யக்ஞிய குதிரையைப் பாதாள லோகத்தில் தவஞ் செய்துகொண்டிருந்த கபிலரிஷியின் பின்பக்கத்தில் ஒளித்து வைத்தான். இதனை யறிந்து ஸகர சக்கிரவர்த்தியின் அறுபதினாயிரம் மக்களும் பூமியைப் பரித்துப் பாதாளத்திற்குச் சென்று கபிலரிஷியின் ஆசிரமம் புகுந்தனர். அவர்களுடைய சந்தடியைக் கேட்டு யோக நிஷ்டையிலிருந்த தபசி விழித்துக் கோபத்துடன் அவர்களை நோக்க அந்த அறுபதினாயிரம் பேரும் சாம்பலாயினர். அச்செய்தியைக் கேட்டுச் சக்கிரவர்த்தி துக்கம் மேலிட்டு மனம் புழுங்கி மாண்டனர். பின்பு சக்கிரவர்த்தியின் பேரனான அம்சுமந்தனுக்கு பட்டங் கிடைத்தது. அந்த அம்சுமந்தன் தன் சிற்றப்பன்மார் அநியாயமாய் மரித்துப் போனமையின், அவரது நீறை நீரிற்கரைத்து அவர்களுக்கு நற்கதியுண்டாக்கவேண்டுமென்று எண்ணங்கொண்டு பிரயத்தனப்பட்டான். அச்சமயத்திற் கருடன்தோன்றி "அரசனே! தேவகங்கையைக் கொணர்ந்து அதனில் அந்தச் சாம்பலைக் கரைத்தால் உன் பிதுருக்களுக்கு நற்கதி வாய்க்கும்" என்று சொல்லிப் போயினன். அம்சுமந்தனும் அவன் புதல்வன் திலீபனும் கங்கையைக் கொண்டு வருவதற்குப் பெருமுயற்சிகள் செய்தார்கள். ஆயினும் அவர்களுடைய எண்ணம் கைகூடவில்லை.

கடைசியில் திலீபனுடைய வம்சத்தில் உதித்த பகீரத மகாராஜா சிறிதுகாலம் அரசுபுரிந்து பின்னர் ராஜ்யபாரத்தைத் தன் மந்திரிகளின்

வசம் ஒப்புவித்துத் தம் முன்னோர்களுக்கு நற்கதி உண்டாக்க வேண்டுமென்று பிரம்மாவைக் குறித்துத் தவஞ் செய்தார். பிரம்மா பிரத்தியட்சராகி "உனக்கு இஷ்டமான வரனைக் கேட்டுக்கொள்' என, பகீரத மகாராஜா "தேவகங்கையைப் பூமியில் விடவேண்டும்" என்று பிரார்த்தித்தார். பிரம்மா "ஐயா! கங்கையை யான் பூலோகத்தில்விடின் அவள் மிக்க ஆரவாரத்துடன் வருவாள். பூலோகம் நாசமாய்விடும். அவளது வேகத்தைத் தடுப்பதற்கு ஈஸ்வரரல்லாது மற்றெவராலும் முடியாது. அவளைத் தரிக்குமாறு ஈசுவரரை வேண்டிக்கொள்." என்று சொல்லி மறைந்தார். உடனே பகீரதர் ஈசுவரரைக் குறித்துத் தவம் புரிய அவர் பிரத்தியட்சராகி அரசரது இஷ்டப்படி கங்கையைத் தரித்துக்கொள்ள ஒப்புக்கொண்டார். பின்னர் பிரமலோகத்திலிருந்து அதிக ஆரவாரத்துடன் கங்கை வந்துகொண்டிருக்கையில், அவளுக்கு அவ்வளவு அகங்காரமாவென்று பரமசிவன் கோபமடைந்து தம் சடையினால் அவளைக் கட்டினர். ஒரு துளி நீரும் இப்புறம் வாராததாயிற்று. அப்போது பகீரத மகாராஜர் ஈசுவரரைக் குறித்து மறுபடியும் தவம்புரிந்து பூலோகத்திற்குக் கங்கையைத் தயவு புரிந்து அனுப்ப வேண்டும். இல்லையெனின் தம் பிரயத்தனம் வீண்போகுமென்று முறையிட்டுக் கொண்டார். ஈசுவரர் அதற்கிணங்கி பகீரதரின் பின்னரே செல்லுமாறு கங்கைக்குக் கட்டளையிட்டார். அரசர் பாதாளலோகத்திற்குப் புறப்பட்டு, ஜன்னு என்னும் ரிஷியின் ஆசிரமத்தின் வழியே போய்க்கொண்டிருந்தார். அவர் பின்னரே வந்துகொண்டிருந்த கங்கையானவள் ரிஷியின் ஆசிரமத்தின்மீது பரவிச் செல்வாளாயினள். பர்ணசாலையெல்லாம் மிதக்கலுற்றது. அதைக்கண்டு ரிஷி கோபமூண்டு கங்கையை ஆபோசனம் செய்துவிட்டனர். பகீரத மகாராஜர் "ஸ்வாமி! அநேக வருஷங்களாய் எம் பிதுருக்கள் கதிகாணாது கிடக்கின்றனர். கங்கையைக் கொணர்ந்து அந்த மூலமாய் அவர்களது பிரேதத் தன்மையைப் போக்க வேண்டுமென்று எம் முன்னோர் வெகு பிரயாஸப்பட்டனர். எல்லாம் வீணாயிற்று. நான் ஒருமுறை பிரம்மாவையும், இரண்டுமுறை ஈசுவரரையும் குறித்து அநேக வருஷங்கள் கடுந்தவம் புரிந்து மிக்க பிரயாசைப்பட்டு இந்தத் தேவகங்கையைக் கொணர்ந்தேன்! கடைசியில் எனது சிரமம் பயன்படாததாயிற்றே; இப்போது என் காரியமெல்லாம் கெட்டுப்போயிற்று. இனி எனக்குக் கதியென்ன! தமது கிருபையினாலேயே நானும் எம் பிதுருக்களும் கடைத்தேற வேண்டும்' என்று அந்த ரிஷியை நமஸ்கரித்துத் தம் விருத்தாந்தத்தை யுரைத்துக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டனர். அந்தத் தபசியானவர் மனமிரங்கித் தம் காதின் வழியே கங்கையை வெளிவிட்டனர். சந்தோஷத்துடன் பகீரதர் அந்தக் கங்கையை அழைத்துக்கொண்டுபோய், தம் பிதுருக்களின் சாம்பலின்மீது பாய்ந்தோடுமாறு செய்தனர். அதனால் ஸகர மகாராஜரின் அறுபதினாயிரம் மக்களும் நற்கதி யடைந்தனர். தாம் செய்த மகா பிரயத்தனம் நடந்தேறியதென்னும் மனவெழுச்சியுடன் பகீரதர் பிதுருகாரியங்களை நிறைவேற்றித் தம் ராஜ்யத்திற் கேகிக் குடிகளைப் பாதுகாத்துச் சுகமாயிருந்தனர். எத்தகைய காரியமாயினும் அதனைப் பகீரத மகாராஜரைப்போல் சிரமப்பட்டுச் சாதிக்கவேண்டும். விடாமுயற்சியென்பது நமக்கு இருக்கவேண்டிய நற்குணங்களுள் முக்கியமானது. பெரும் பிரயத்தனங்களுக்கே 'பகீரதப் பிரயத்தனம்' என்று பகீரதர் செய்த விடாமுயற்சியை உதகரித்துச் சொல்வது வழக்கம்.

வெப்ஸ்டர் பெரிய ஆங்கில அகராதி எழுதி முடிக்க முப்பத்தாறு வருஷம்விடாது உழைத்தார். ஸ்டீபென்ஸன் ஆவியில் ரயிலை ஒரு ஒழுங்குபடுத்த பதினைந்து வருஷம் விடாது உழைத்தார். எடிசன் எனபவர் தமது தூர ஸம்பாஷணை யந்திரத்தில் ஸகாரசப்தம நன்ருக உண்டாவதற்கு நாள் ஒன்றுககு 19-மணி விழுக்காடு அனேக மாதங்கள் உழைததாராம். விடாமுயற்சியால் விளையும் பயனுக்கு இவை சாக்ஷிகளன்ரோ ?

1. In God's world, for those who are in earnest, there is no failure. No work truly done, no word earnestly spoken, no sacrifice freely made, was ever made in vain. —*F. W. Robertson*.

2. If you wish for success in life, make perseverance your bosom friend, experience your wise counsellor, caution your elder brother, and hope your guardian genius. —*J. Addison*.

3. The higher must always come through the loss and death of the lower. Manhood can only be gained by the giving up of childhood. If the office and life-work are ever to be reached, the nursery must be left behind. The blossom must die before there can be any fruit. —*M. J. Savage.*

4. Earnestness means willingness to live with energy, though energy bring pain. The pain may be to other people or pain to one's self. —*R. W. Emerson.*

5. Nature never hurries: atom by atom, little by little she achieves her work. The lesson one learns in fishing, yachting, hunting, or planting is the manner of nature's patience with the delays of wind and sun, delays of the seasons, bad weather, excess or lack of water—patience with the slowness of our feet, with the parsimony of our strength, with the largeness of sea and land, we must traverse. —R. *W. Emerson.*

6. It is the slowest and most painful lesson that faith has to learn—faith not indifference—to do steadfastly and patiently all that lies to her hand and there leave it, believing that the Almighty is able to govern His own world. The fool wonders, the wise man asks. —*Lord Beaconsfield.*

7. The men of real power are always men of one idea, who send all the force of their being along one line; and it is possible for any of us to win a true success in life if we will early choose one sphere and persistently labour in it. —*R. W Emerson.*

8. The foolish undertake a trifling act, and soon desist, discouraged, wise men engage in mighty works, and persevere.—*Magha.*

9. There is nothing in this world which a resolute man, who exerts himself cannot attain. —*Somadeva.*

10. All the performances of human art, at which we look with praise or wonder, are instances of the resistless force of perseverance; it is by this that the quarry becomes a pyramid, and that distant countries are united by canals. If a man was to compare the effect of a single stroke of a pickaxe, or of one impression of the spade, with the general design and last result, he would be overwhelmed by the sense of their disproportion; yet those petty operations, incessantly continued, in time surmount the greatest difficulties, and mountains are levelled, and oceans bounded, by the slender force of human beings. —*Johnson*.

11. Patience is the guardian of faith, the preserver of peace, the cherisher of love, the teacher of humility: Patience governs the flesh, strengthens the spirit, sweetens the temper, stifles anger, extinguishes envy, subdues pride; she bridles the tongue, refrains the hand, tramples upon temptations, endures persecutions, consummates martyrdom: Patience produces unity in the church, loyalty in the state, harmony in families and societies; she comforts the poor and moderates the rich; she makes us humble in prosperity, cheerful in adversity, unmoved by calumny and reproach; she teaches us to forgive those who have injured us, and to be the first in asking forgiveness of those whom we haved injured; she delights the faithful, and invites the unbelieving; she adorns the woman, and approves the man; is loved in a child, praised in a young man, admired in an old man; she is beautiful in either sex and every age. —*Bishop Horne*.

12. Accustom yourself to master and overcome things of difficulty; for, if you observe, the left hand for want of practice is insignificant, and not adapted to general business, yet it holds the bridle better than the right from constant use. —*Pliny*.

13. The rewards of life depend upon diligence. —*Confucius*.

14. Our grand business is undoubtedly, not to *see* what lies dimly at a distance, but to *do* what lies clearly at hand. —*T. Carlyle*.

15. Impossible is a word only to be found in the dictionary of fools. —*Napolean Bonaparte*.

16. Upward! upward! let us climb,
In sublime endeavour;
Not forget our work in time
Acts on the forever.

17. An honest man is the noblest work of God. —*A. Pope*.

18. I go at what I am about as if there was nothing else in the world for the time being. That is the secret of all hard-working men. *C. Kingsley*.

19. Tact is the ability to use natural powers, acquisitions, and opportunities to the best advantage. Under its facile sway a single talent accomplishes—more than five, or even ten talents without it. It manipulates moderate abilities so as to outstrip real mental greatness proving that the race is not to the swift, nor the battle to the strong.' —*Thayer*.

20. Never despair nor hurry, but set to work with the steady purpose of one who knows that God is on his side; and that though He bids us "work while it is called to-day," yet the great husbandman is patient. —*Octavia Hill.*

21. Never suffer your energies to stagnate—the old adage of too many irons in the fire, conveys an abominable error. You cannot have too many—poker, tongs and all, keep them all a-going

22. Endeavour at the highest perfection, that not only at your studies, but in whatsoever you attempt; strive to excel in everything and you may perform many things worthy of praise. *Earl of Bedford.*

23. When thou dost purpose aught within thy power.
Be sure to do it, though it be but small,
Constancy knits the bones and makes us stout.—*G. Herbert.*

24. We are born with faculties and powers capable of almost anything—such as at least would carry us further than can be easily imagined; but it is only the exercise of those powers which gives us ability and skill in anything, and leads us towards perfection,
—*John Locke.*

25. Do not gaze backward, nor pause to contemplate anxiously what is in front, but move. If you are faithful, God will carry you through. Work, and you shall believe, work and you shall know. You will be guided to the best convicitions by being heartily. engaged in an obedient service. —*O. B. Frothingham.*

## சுய நம்பிக்கை.

மனிதர்களுக்கு உயர்வு அவரவர்களுடைய சுய முயற்சி, சுய நம்பிக்கை முதலியவற்றை அடுத்ததாகும். ஊக்கமும், மிக்க உரமும், ஒன்றிய சூழ்ச்சியுமுள்ளவனை விட்டு ஆக்கமகலாது. தானும் தனியுமாய் முயல்வதே உறுபயன் கொள்வதற்கு உலையா உபாயம். பக்கத்துணை பார்த்திருத்தல் பயனற்றது. தங்கள் தங்கள் தடக்கைகளே தக்க சமயத்தில் ஆதரிப்பவையாதலின் எக்காலத்திலும் உற்ற துணையாகும். இடுப்பில் கட்டிய துணி கலையும்பொழுது ஒருவனுக்கு உற்ற சமயத்தில் உதவுவன அவனுடைய கைகளன்றோ!

ஊக்கமில்லாதார் உடையவராதலில்லை. இசையாத காரியமாயினும் எவ்விதத்தேனும் தன் ஆற்றல் கொண்டு இயற்றி அசையாது நிற்பதே ஆண்மையாகும்.

"தானே தனக்குப் பகைவனும் நட்டானும்
தானே தனக்கு மறுமையும் இம்மையும்
தானே தான்செய்த வினைப்பயன் துய்த்தலால்
தானே தனக்குக் கரி"

என்றது பழமொழி வெண்பா.

தன் அலுவலை முடிக்க வேறு ஆளை அனுப்புதல் அதமம்; மகனைப் போகவிடுத்தல் மத்திமம்; உடையான் செல்லல் உத்தமம் என்ப. விளைந்த வயலில் கூடுகட்டிக் குஞ்சு பொறித்த வானம் பாடி வயலறுத்தற்குப் பிறருதவியை உடையவன் எதிர்பார்த்துப் பேசிய நாள் தன் குஞ்சுகளை இடம் பெயராமல் படுத்திருக்கச் சொன்னதும், தானும் தன் மக்களுமே கதிரறுக்கத் துணிந்தது செவியிற்படவும் வேற்றிடம் தேடிச் சென்றதும், இவ்வுண்மையை வெளிப்படுத்துதற்கு இயற்றப் பெற்ற கதை. 'உதட்டு ஏழைப் பழத்தை உள்ளே தள்ளுவாருண்டோ' என்றிருப்பார் பசியாலிற க்க வேண்டியவர்களே. பிறன்கை பார்த்து நிற்பவன் பேதையிற் பதர். பொய்க்கால் கட்டிப் பத்தடி நடப்பதற்குள் வெறுங்கால் வெகுதூரஞ் செல்லும். ஏனையோரை எதிர்பார்த்து ஏமாந்து போகாமல் கடவுளை நம்பிக் கையினை காவாமல் கருமம் புரிவோர் கைவிடப்படார்.

கையில் பொருள் மிகுந்திருந்தாலன்றோ காரியங்களைத்தொட ங்க வாய்க்கும், என்று ஏங்கி நில்லற்க. வினைவல்லானை வீசி யெறிந்தாலும் கீழேவிழாமல் குதித்துநின்று வேலைசெய்து வெற்றி கூறுவான். கைம்முதல் கனத்தவர் கடைசியில் கந்தை உடுத்தலு முண்டு.

'முன்பெருகலின் பின் சிறுகாமை சிறந்தது'

'வித்து மேரு முளவா யிருப்ப
எய்த்தல் இருக்குமேழையும் பதரே'

தாய் கைத் தனத்தைவிட தன் கைத் தனமே மேலாம், ஐய லே! என்ற பாடல்போல் தான் தேடிய பொன்னுக்கே மாற்றும் உறையும் உண்டு. தந்தை தேடிவைத்த மணிகளும் கல்லாம், பொன் னும் மண்ணாம். தன்வாழ்நாளை இன்மையோடு தொடங்குவோன் இனிமையோடு முடிப்பான். பசித்தவனுக்கே புசித்தல் சுவையுடை த்து. கடுத்தின்றோனே கட்டியின் சுவை கடிதில் காண்பன். காணி முதலாளி கோடீசுவரன் ஆவதும் உண்டு.

சுய நம்பிக்கையானது அதிசய விநோதங்களை வெளிப்படுத்தும். ஓரே வழி செல்லு மிருவரில் நானென்ன செய்வேனென்று ஏங்கி நிற்பவன் சேற்றில் காலழுந்தி வழிப்போக்கர்களுக்கும் இடறுகட் டையாய் நிற்பான். வருத்தம் பாராமல் முன்னேக்கிச் செல்லும் துணிவோடு நடப்பவன் நிரம்ப மூட்டையடுக்கிய வண்டியைக்கூட கொடிய வழிகளிலும் இழுத்துச் செல்லுவான். மேலுக்கு வர வேண்டுமெனினும் முன்னேக்கமுள்ளவன் இடுப்பில் துணியை யெடுத்துக் கட்டி இடைவிடாது உழைப்பான். தொங்கவிட்டுக் கடடுபவன் தொங்கியே போவான். உறவினை காப்பவன் உயர்வு வேண்டல் பொய். கலப்பையைக் கைப்பற்றிக் காடுகளை உழு

வோர் காணியாளராவதும், குயக்கலம் வனைவோர் குபேரராவதும், திரைகடலோடியுந் திரவியந் தேடுவோர் தேசங்கள் ஆளும் சக்தியடைவதும் சுய முயற்சியின் மாயமேயன்றோ! விருப்பமிருந்தால் வேரிலும் காய்க்கும். ஆதலால் கடவுளை நம்பி தொடுத்த காரியத்தைத் தளராது கைப்பிடித்துச் சோர்வில்லாத ஊக்கமுடையவனை குன்றம் வழி தடுப்பதில்லை. கோழை நெஞ்சுடையோன் கோமள வல்லியைக் கைக்கொள்ளுவதுமுண்டோ!

குப்பைமேடு குப்பைமேடாய்த் திரிவதே மணியமா யிருப்பவன் காலமெல்லாம் கந்தைகட்டிக் கழிக்க வேண்டியவனே. அப்படிச் செய்வதை விட்டு சற்றே புத்தி செலுத்தி இங்கே கொஞ்சம் அங்கேகொஞ்சமாய்க் கைவினை கற்பானாகில காட்டாளும் வீட்டாளாகலாம். 'காலங் கெட்டுப்போச்சுது' என்பார்கள். கசடர்கள். கொட்டாவி விட்டுக்கொண்டு குணம் இல்லாதவனாய்த் திரிவோனுக்கு எந்தக்காலமும் கெட்டுப்போன காலமே' நல்ல காலம் வரவே வராது.

எந்தவிதத்திலும் காரியத்தைச் செய்துமுடித்தே தீரவேண்டும் என்ற மனத்துணிவோடு தொடங்காமையாலேயே மக்களிற் பலர் மேன்மை யடைவதில்லை. அரைப்பணம் சேமிப்பதுதான் கஷ்டம்; பிறகு ஆயிரம் சேமித்தலெளிது. 'முதல்போடு போட்டதும் பாதிப்போர் முடிந்தது' என்பார்கள். 'முயல்வேன்' என்னும் கொடியை யுயர்த்தி வினை செய்வதையே நாடிச் செல்வானாகில் சிறிது சிறிதாக மீத்து வைத்து நிதி சேர்த்துக் கடைசியில் நிகரற்ற கோடீஸ்வரனாகலாம். என் தலைவிதி நான் தரித்திரனாகவே யிருக்க வேண்டும் என்று எண்ணி ஏங்கிநிற்போன் என்மைறக்கும் ஏழையாகவே யிருப்பான். ஆனால் கடையிற் கடையனாகிய வறியனுக்கும் காணியாளனாதற்கு வழியுண்டு; பெண்டாட்டி மைந்தர் காலவிலங்கும் பெற்ற பிள்ளைகள் என்ற கள்ளாணிகளும் கட்டுப்படுத்தாமுன், பகு ஜாக்கிரதையாய் உழைத்து, முன்னதாகவே ஆயத்தம் பண்ணிக்கொண்டவன் பசியாறக் கஞ்சியும் கட்டக் கந்தையும் கிடைத்தால் அதுவே கோடி பாக்கியம் என்று சொல்லவேண்டிய நிமித்தமில்லை. குஞ்சுகள் மிஞ்சினால் கோழி குப்பை கிளறுவதும் அதிகம் தான். நெஞ்சழுத்தமுள்ள நெடியோன் குன்றின் நெடுமை கண்டு உள்ளம் அழிவனோ? மலையேறிச் செல்லல் கஷ்டமானதே. ஆயினும் படி பார்த்துப் பாதை வழியாய்ப் பதனமாய் நடந்து மனத்துணிவோடு மலையேறும் ஊக்கமுடையோன் தப்பாமல் உச்சியடைவான். பட்டபாடெல்லாம் நினைப்புக்கு இனிப்பு. சிறுவயதிலேயே வாலிபர்கள் காலத்தினருமை பாராமல், மெய்வருந்தி, கடிது முயன்று, கஷ்டப்பட்டு, காசு மீத்து வைப்பாரேல், எக்காலத்திற்கும் கஷ்டப்பட்டுக் கஞ்சி குடிக்கக் காரணமிராது.

தன் பொறுப்பு வந்தபிறகும் பிறர் உதவியையும் செயலையும் கொண்டு தம் காரியங்களைச் செய்ய ஆரம்பிப்பவர்கள் அம்மாடித்தன்; அப்பாடிமித்தன்; மித்திரன் டித்தன்; மந்திரி டிமித்தன் என்னப்படுவர். அதாவது, அம்மா சொல்லுகிறபடி நடக்கிறவன்; அப்பா சொல்லுகிறபடி நடக்கிறவன்; ஒரு சிநேகிதன் புத்திப்படி நடக்கிறவன்; ஒரு மந்திரி புத்திப்படி நடக்கிறவன் என்பதாம். இவ்வாறன அம்மா, அப்பா மித்திரன், மந்திரி இவர்கள் நல்லவர்களாக இருந்து நல்வழியிலேயே ஒருவனை நடத்தினபோதிலும் அவனுக்கும், கடியாரத்தில் நாம் நமதிஷ்டப்படி திருப்பி வைத்து ஓட்டும் நிமிஷ முள்ளுக்கும், விநாடி முள்ளுக்கும் வித்தியாசமே இல்லை. தன் ஸ்வய புத்தியைக் கொண்டு ஒரு காரியம் செய்யச் சக்தியற்று மற்றவர்கள் உதவியைநாடுகிறவன் மனிதனல்ல; மனித வடிவங்கொண்ட ஒரு கருவியாவான்.

"கட்டிக் கொடுத்த அமுதும் சொல்லிக் கொடுத்த புத்தியும் எத்தனை நாள் வரும்" "தென்னை மரத்தில் ஏறுகிறவனை எவ்வளவு தூரம் தாங்கலாம்."

'பாடில்லாமல் பலனில்லை.' தேங்காய் பறிக்க வேண்டுமானால் தென்னமரம் ஏறித்தான் தீரவேண்டும். கல்லின் மேல் கல்லை வைத்துத்தான் கட்டடமாக்க வேண்டும். ஒரே தாண்டில் ஊர்போய்ச் சேர முடியாது. தாண்டிக் குதித்துத் தலையுடைவதைப் பார்க்கிலும் அடிக்குப்பின் அடிவைத்து மெதுவாய் நடந்துபோவது நலம்.

"மெல்ல மெல்லப் பாயுந் தண்ணீர்
கல்லு முருகப் பாயும்."

நடக்கப் படிக்குமுன் நகரவேண்டும். ஓடத் துவக்குமுன் நடக்கவேண்டும். கையை யூன்றியல்லவோ கரணம் போடுவார்கள்.

ஒரு வேலையை விட்டு மறுவேலையைத் தேடுவது வாய்த்தவிடம் போய் அடுப்பு நெருப்பும் அவிந்ததற் கொப்பாகும். காட்டிலிருக்கிற குருவியைநம்பி கையிலிருக்கிற குருவியைவிடுவது புத்தியீனம். நாளைக்குவரும் பலாக்காயைவிட இன்றைககிருக்கிற களாக்காய் உத்தமமலலவா? இக்கரைக்கு அக்கரை பச்சை என்றெண்ணுகிற ஆடு போலிருப்பது நன்றல்ல. இங்குள்ள பாடே எங்கும் இருக்கும். ஐங்காதம் போனாலும் தன்பாவம் தன்னோடே. குதித்துக் குதித்து மாவிடித்தாலும் குட்டைச்சிக்கு மூன்று கொழுக்கட்டைதானே கிடைக்கும். எத்தேசம் போனாலும் முகத்தின் வேர்வை நிலத்தில விழப் பாடுபட்டுத்தான் ஆகாரம் சம்பாதிக்க வேண்டும். கழுதை எங்கே போனாலும் மூட்டை சுமந்தே தீர வேண்டும். கறவை மாடு எங்கே போனாலும அதைக் கறவாமல் விடார்கள். அப்பன் வீட்டிலிருநதாலும் கறவைதான், அம்மான் வீட்டிலிருந்தாலும் கறவைதான். அறபமான வேலையென்று அசட்டை பண்ணுவது அடாத காரியம். பாவம் ஒன்றுதவிர பரமன் முன் அசங்கியமானது ஒன்றுமில்லை. யோக்கியன் செய்யும் ஒவ்

தொரு வேலையும் உயர்ந்ததே. ஏரோட்டும் எலிசாவும், ஆடோட்டும் தாவீதும், ஆயக்காரமத்தேயுர், தச்சவேலை யோசேப்பும், மீன் பிடிக்கும் பேதுருவும், தோல் பதனிடும் சீமோனும், சேர்வைகார கொர்நேலியுவும், அரிப்பொறுக்கும் ரூத்தும், தையல்கார தபீத்தாளும், இரத்தாம்பரம் விற்கும் லீதியாளுமாகிய பல வேலையாட்களும் கர்த்தருக்கு உகந்தவர்களே. யோக்கியமாய்ச் செய்யும் தொழிலில் வெட்கமானது ஒன்றுமில்லை. எலும்பு கடிக்க ஆசைப் பட்டு நாயாவோர் எவருமுண்டோ? சோற்றுக்கு ஆசைப்பட்டுச் சோரம் போகலாமா? ஆதாயத்தை நாடி அயோக்கியமாய் நடப்பதும், பணத்தை நாடி குணத்தைக் கெடுப்பதும், பொருளை நாடிப் பொய்வழி புகுவதும் பொருந்தாத விஷயங்கள். உண்மையற்ற முயற்சி இன்மையுற்ற இகழ்ச்சி. அயோக்கிய சம்பாத்தியம் ஆகாப் பேய்க்கு நைவேத்தியம்.

ஆகாயத்துப் பறவைகளுக்கும் ஆகாரங் கொடுப்பது ஆண்டவர். ஆனால் அவர் ஆகாரத்தைக் குருவிக்கூட்டில் கொட்டிவைக்கிறதில்லை. தேடிப்போகும் குருவிக்கு மாத்திரமே ஆகாரம் கிட்டும். சங்கடம் இருக்கிறதென்று முயற்சியில் தளர்வது சரியன்று.

தங்களிரு தோள்களையே தனித்துணையாகக் கொள்ளுவோர்களுக்கே பரம்பொருள் பக்கத் துணையாய் நிற்கும்.

" மணியே பொன்னே மண்ணே பொருளே
அணியே துணியே அகமே நலனே
இகமே சுகமே இவை தாமெல்லாம்
ஊக்கமே யுன்னை யுரைகுறி யன்றே!

துன்மார்க்கருடைய ஆலோசனையில் நடவாமலும், பாவிகளுடைய வழியில் நில்லாமலும், பரியாசக்காரர் உட்காரும் இடத்தில் உட்காராமலும், கர்த்தருடைய வேதத்தில் பிரியமாயிருந்து, இரவும் பகலும் அவருடைய வேதத்தில் தியானமா யிருக்கிற மனுஷன் பாக்கியவான். அவன் நீர்க்கால்களின் ஓரமாய் நடப்பட்டு, தன் காலத்தில் தன் கனியைத் தந்து, இலை யுதிராதிருக்கிற மரத்தைப்போலிருப்பான்; அவன் செய்வதெல்லாம் வாய்க்கும். (சங். 1.)

* 1. Persevere against discouragement. Keep your temper. Employ your leisure in study, and always have some work in hand. Be punctual and methodical in business, and never procrastinate. Never be in a hurry. Preserve self-possession, and do not be talked out of a conviction. Rise early, and be an economist of time. Maintain dignity without the appearance of pride; manner is something with everybody, and everything with some Be guarded in discourse, attentive and slow to speak Never acquiesce in immoral or pernicious opinions. Be not forward to assign reasons to those who have not any right to ask. Think nothing in conduct unimportant or indifferent. Rather set than follow examples. Practise strict temperance; and in all your transactions remember the final account. —*Bp. Middleton.*

## Daily Resolutions.

2. Order and determination are essential to the performance of many of our duties, and highly conducive to regularity and success in our moral and religious course. The following are the resolutions of the celebrated Lavater, who was as estimable for his devotional spirit and heavenly-mindedness as he was celebrated for his essay on physiognomy :—

"I will never, either in the morning or evening, proceed to any business, until I have first retired, at least for a few moments, to a private place, and implored God for his assistance and blessing.

"I will neither do nor undertake anything which I would abstain from doing if Jesus Christ were standing visibly before me; nor anything of which I think it possible I shall repent in the uncertain hour of my certain death.

"I will, with the Divine aid, accustom myself to do everything without exception in the name of Jesus Christ, and as His disciple, to sigh to God continually for the Holy Ghost; and to preserve myself in a constant disposition for prayer.

"Every day shall be distinguished by at least one particular act of love.

"Every day will be especially attentive to promote the benefit and advantage of my own family in particular.

"I will never eat or drink so much as shall occasion to me the least inconvenience or hindrance in my business; and between meal times (a morsel in the evening excepted), I will abstain as much as possible from eating and from wine.

"Wherever I go, I will pray to God that I may commit no sin there, but be the cause of some good,

"I will never lie down to sleep without prayer, nor when I am in health sleep longer than at most eight hours.

"I will every evening examine my conduct during the day, by these rules and faithfully note down in my journal how often I offend against them.

"O God! thou seest what I have here written. May I be able to read these my resolutions every morning with sincerity, and every evening with joy, and the clear approbation of my conscience"

---

3. I recollect, in Queen's County, to have seen a Mr. Clerk, who had been a working carpenter, and when making a bench for the sessions justices at the Court-house, was laughed at for taking peculiar pains in planing and smoothing the seat of it. He smilingly observed that he did so to make it easy for himself, as he was resolved he would never die till he had a right to sit thereupon, and he kept his word. He was an industrious man—honest, respectable, and kind-hearted. He succeeded in all his efforts to accumulate an independence; he did accumulate it, and uprightly His character kept pace with the increase of his property, and he lived to sit as a magistrate on that very bench which he sawed and planed.

—*Sir Johna Barrington.*

4. Gold, though the most solid and heavy of metals, yet may be beaten out so thin as to be the lightest and slightest of all things. Thus nobility, though in itself most honourable, may be so attenuated through the smallness of means, as thereby to grow neglected, which makes our noblemen to practice Solomon's precept. "Be diligent to know the state of thy flock, and to look well to thine herds; for the crown doth not endure to every generation." If not the crown, much less the coronet: and good husbandry may as well stand with great honour, as breadth may consist with height. —*Southey*.

5. Love labour. For if thou dost not want it for food, thou mayst for physic. It is wholesome for thy body, and good for thy mind. —*W. Penn*

6. Idlers cannot even find time to be idle, or the industrious to be at leisure, we must be always doing or suffering. —*Zimmerman*.

7. Undertake some labour, that the devil may find thee always occupied. —*St. Jerome*.

8. An honest man is the noblest work of God. —*A. Pope*

9. No doubt even the angels have errands and tasks given to them which in themselves would be hard, but which become easy, a delight, because they are accepted as parts of the will of God for them. This is the great secret of joy in service.........The angels fly swiftly on the errands on which they are sent, doing with equal alacrity the most stupendous thing and the smallest ministries. It is told in the Koran that Gabriel was once sent eastward to save King Solomon from the sin of pride, and at the same time to help a toiling, weary and to get home to her people with her load of food. So it is ever in heaven—the will of God is done with joy. It consists in happy activities, in joyous services. It is this heavenly standard that is set for our earthly living. —*Dr. J. R. Miller*.

10. Govern your passions, manage your actions with prudence, and, where false steps have been made, correct them for the future. Let nothing be allowed to grow headstrong and disorderly; but bring all under discipline. Set all your faults before your eyes and pass sentence upon yourself with the same severity as you would do upon another, for whom no partiality hath biassed your judgment. —*S. Bernard*.

11. The enemies which rise within body, hard to be overcome—thy evil passion—should manfully be fought: he who conquers them is equal to the conquerors of worlds. —*Bharavi*.

27. The man who every sacred science knows,
Yet has not strength to keep in check the foes
That rise within him, mars his Fortune's fame,
And brings her by his feebleness to shame,—*Bharavi*.

13. By rousing himself by earnestness, by restraint and control, the wise man may make for himself an island which no flood can overwhelm. —*Dhammapada*.

14. The world is full of delights for him who, be he rich or poor, his passions conquered, has a soul at peace. —*Bhartrihare*.

15. Whence comes happiness? From tranquillity and self-control. Men without self-restraint drift before their passions like rudderless boats before the wind. —*Bhagvat Gita*.

16. A mind unshaken by life's vicissitudes, unstirred by grief or passion, is the greatest of all blessings. —*Bhuddist*

17. There is a great difference between one who can feel ashamed before his own soul and one who is only ashamed before his fellow-men. —*Talmud*.

18. A man should never despise himself; for brilliant success never attends on the man who is condemned by himself.-*Mahabarata*.

19. Wisdom is knowing what to do next.
Skill is Knowing how to do it, and Virtue is doing it.
—*David Starr Jordan*.

20. Men talk as if victory were something fortunate Work is victory. Wherever work is done, victory is obtained.—*Shakespeare*.

21. True worth is in being, not seeming.
In doing each day that goes by
Some little good, not in dreaming
Of great things to do by-and-by. —*Alice Cary*.

22. Endure and dare, true heart; through patience, joined with boldness, come we at a crown encircled with a thousand blessings.
—*Spanish Proverb*.

23. Great works are performed, not by strength, but by perseverance. —*Johnson*.

24. Remember now and always that life is no idle dream, but a solemn reality based upon eternity and encompassed by eternity. Find out your task: stand to it; the night cometh when no man can work. —*Carlyle*.

25. Above all other subjects study thine own self, for he who is thoroughly acquainted with himself hath attained to a more valuable sort of learning than if the course and position of the stars, the virtues of plants, and the nature of all sorts of animals had employed his thoughts. —S. *Bernard*.

26. Blesssd be the man whose work drives him. Something must drive men; and if it is wholesom eindustry, they have no time for a thousand torments and temptations. —*H. W Beecher*.

## அணுவே மலை.

சிறு தேனீக்கள் ஒன்றுகூடி 'முயல்வோம்' என்றன. மலையிலும் காட்டிலுமுள்ள பூக்களெல்லாம் மதுரமான தேனாக மாறின. உள்ளங்கை யளவு மேகம் 'முயல்வேன்' என்றது. சிறிது நேரத்தில் உயர எழும்பி, உலகெல்லாம் பரவி, மழையைப் பொழிய, பூமி மலர்ந்து தன் வயிற்றினுள் அடங்கியிருந்த புற்பூண்டுகளை வெளியாக்கிக் கெம்பீரிக்கப் பக்ஷிகள் பாடின. மிருகங்கள் களிப்புற்றன. மக்களும் மகிழ்ச்சி யடைந்தனர். சூரியனது சிறிய கிரணங்கள் 'முயல்வோம்' என்றன. தமது சுடரொளிக் காந்தியை மகிமைப் பிரதாபத்துடன் உலகில் பரப்ப, இருள் ஓட்டம் பிடித்தது. மருள் நீங்கிற்று. மனுமக்கள் மகிழ்ச்சியோடு தத்தம் வேலைக்குச் சென்றனர். புல், பூண்டு முதலிய தாபர சங்கங்க ளனைத்தும் தத்தம் முழுச் சம்பன்னத்தைப் பெறுவதற்குத் தம்மை உதிப்பித்த காரணங்களாகிய சூரிய கிரணங்களை நாடித் தேடி மேலெழும்பின. கீழே தம்மைப்பிறப்பித்த நிலத்தில் வேரூன்றிப் பலக்க முயன்றன. ஆகாயத்திலிருந்து விழும் சிறுமழைத் துளியொன்று 'முயல்வேன்' என்றது. கடலில் ஆழவமுழுந்திக் கிடக்கும்சிப்பி வயிற்றிற் புகுந்து பலநாள் தவஞ்செய்து பிறகு பெருகொளிமுத்தாய் மேம்படலாயிற்று. கண்ணளவில் அடங்கும்உருவமுள்ள சூரியன் 'முயல்வேன்' என்றான். மலையின் கொடுமுடிகளிலுள்ள பனிப்பாறையெல்லாம் தண்ணீராய்க் கரைந்தோடிற்று. முட்டையை விட்டு வெளியே வந்த சிறு பறவைக்குஞ்சுகள் மெள்ளப் பறந்து பார்த்தன. இருக்க யிருக்க தங்களிறகுகள் தங்களை வெகுதூரம் தாங்கிச் செல்லும் வலிமையுள்ளனவென்று கண்டுகொண்டன. ஏரில் கட்டிய கடா 'உம்' என்றது. பாழ்நிலமெல்லாம் பாங்குபட்டுப் பயிர் விளையலாயிற்று. முயற்சியின் மாயமே மாயம். பறக்கின்ற பறவைக்கு எது தூரம்? ஏறிச் செல்லத் துணிந்தவனுக்கு எந்த மலைதான் உயரம்? உழுகிறவன் களிமண்ணென்று விட்டுவிடுகிறானோ? இறைக்கத் துணிந்தவனுக்கு வற்றாத கிணறும் உண்டோ? அல்லது தையல் வேலை செய்வோனுக்கு இணங்காக் கந்தைத்துணி தானுமுண்டோ? எறும்பூரக் கல்லுங் குழியும். அடிமேலடி யடித்தால் அம்மியும் நகரும். ஆற்றுக்கு அணை மலைமலையாய்ப் பிடுங்கிப் போடுகிறார்களா? கூடைமண் கூடைமண்ணாய்த்தானே கொட்டுகிறார்கள். உலகத்தில் ஏதேனும் ஒரு காரியத்தை ஒருவன் செய்து முடிப்பானேயானால் அக்காரியம் மற்றவர்களும் செய்து முடிக்கக்கூடியதே; செய்ய முடியாத காரியம் கூட ஒருவேளை அடுத்து முயல்வோனுக்குப் படிந்துவரலாம்.

"தெள்ளிய வாலின் சிறுபழத் தொருவிதை
தெண்ணீர்க் கயத்துச் சிறுமீன் சினையினும்
நுண்ணிதே யாயினு மண்ணல் யானை
அணி தேர்ப் புரவி யாட்பெரும் படையொடு
மன்னர்க் கிருக்க நிழலாகும்மே."

சிறு புலத்திலும் பெருங்கதிர் விளையும். பெரிய பானையில் காய்ச்சினால்தான் பால் உருசிக்கும் என்பதில்லை. சிறு குடிசைகளிலும் பெருந்தவசிக ளிருக்கலாம். திருடன் வந்தானென்று தட்டியெழுப்பச் சிறு நாயும் போதும். சிறுபொரியேனும் உள்ளிருப்பது நெருப்பே. சிறு குறளிலும் விழுமிய பொருள் ஆழ்ந்துகிடக்கும். செய்வனவற்றைத் திருத்தமாகவும் செவ்வையாகவும் செய்துவிடுத் தினால், பயன் கொடுக்கும் பாரம் பரம்பொருளுடையது ஆகும்.

அந்தோ! விழலுக்கிறைத்த நீர்போலும், காட்டுக்கெரித்த நிலவுபோலும், அநேகர்க்குப் புகட்டும் அரிய புத்திமதிகள் ஆற்றிற் கரைத்த புளியாம். கழுதைக்குபதேசம் காதிலே சொன்னாலும் அபயக் குரலன்றி அங்கொன்றுமில்லை. பருவத்தில் பயிரிடாமல் தூங்கினால் அறுவடைக் காலத்தில் அழவேண்டியவனே. முன்யோசனையின்றிக் கண்டதே காக்ஷி, கொண்டதே கோலம் என்று அன்று கொண்டதை அன்றே அனுபவித்து அழிப்பார்க்கு ஒருநாள் மருந்துக்கும் சோறின்றி படியவேண்டி வரும். உழைப்பில்லாச் சோறு உப்பில்லாச் சோறு. வேலையில்லாச் சாதம் வேப்பங்காய்ச் சாதம். வேர்வையில்லாப் பருக்கை வெட்கங் கெட்ட பருக்கை என்பது நிசம். மேலும், இந்தச் சோம்பேறிகளைப் பரிபாலிக்கிறதும் எவ்வளவு அநியாயம். இவர்களுக்குச் செலவிடுவதை வேறு நல் விஷயங்களில உபயோகித்தால் எவ்வளவு பயனுண்டாம்.

"மாத்திரைக் கோலெறிந்தாலன்றி மாங்காய் விழாது" வித்து இல்லாவிட்டால் சம்பிரதமும் இல்லாததுபோல, கைவினை இல்லாத விடத்துக் கருமங்களும் ஆகா. 'எழுதினவன் ஓலை பழுது' என்பது ஏழைமை. அங்காடித் தெருவில் அலைந்து மேய்ந்த பழங்கன்றும் பின்னுக்குப் பெரிய ஏருதாவ தில்லையோ? காற்றுக்கு அசையும் சிறிய செடியும் காலஞ் சென்று காழடைந்து யானைகள் கட்டும் கட்டுத்தறியாகும் பலம் அடைதலில்லையோ?

அரியதே யாயினும் சிறு முயற்சி செய்து உறுபயன் கொள்ளப் பெறுமாகில் ஒள்ளிய ஒழுக்கமுடையோர் அவ்வினை செய்யத் தாழ்வரோ? தாழார். கருமமே கண்ணாயினவர்கள் மெய்வருத்தம் பார்ப்பரோ? மானம், குலம், கல்வி, வண்மை, அறிவுடைமை, தானம், தவம், முயற்சி, தாளாண்மை, பெண்ணாசை ஆகிய பத்தையும் பறக்கடிக்கும் பசியைத்தான் பொருட்டாக்குவரோ? கண் அஞ்சுவரோ? தமக்கு மாறாய்ப் பிறர் இழைக்கும் தீமையைத்தான் மேற்கொள்ளுவரோ?

இடத்தாழ்வால் இழிவு பெற்றோம், ஆதலால் ஏற்றமடைதல் எமக்கு ஏலாது, என்றல் ஏழைமை. தாழ்ந்த கள்ளியின் வயிற்றில் பிறந்த அகில் கட்டையை அரசரும் ஆதரிப்பர். குப்பையில் கிடந்தது காற்றடித்துக் கோபுரத்தில் ஏறுதலில்லையோ? கைதேர்ந்த வினையாளன் தன் கூர்ந்த புத்தியையும் செலுத்துவானேல் மற்றவர்கள் இழக்கும் எந்தக் காரியத்திலும் தான் பயன் பெற்றுப் பணக்காரனாவான். "சீருடை ஆண்மை செய்கையின் அறிப."

ஆரியக் கூத்தாடினும் காரியத்தின்மேல் கண்ணுடையவர்களாய்ப் பொருளைப்போற்றி வாழ்வோர்கள் ஏற்றமடையாத நாடு எந்த நாடு? கருமம் செய்யுழி மெய்வருத்தம் கண்டு சுழுழ்வோர் கசடர். கனியில கொட்டையுண்டென்று கழிப்பரோ? முள் உண்டென்றுமுழுமணம் கமழும் ரோஜாப்பூவை மோப்பதில்லையோ?

## குசேலோபாக்கியானம்

"மானிடனொருவன் றனக்கருஞ் செல்வம் வாய்க்க வென்றனு தினமுயற்சி
தானுஞற்றுவனேற் கடவுளு மதனைத் தந்தளிக் குவனதா லன்றோ
வானபே ரறிஞர் திருவினை முயற்சியாக்கு மம் முயற்சி யிலாமை
யீன மாரின்மை புகுத்திடுமோ வென்றியாரு நன்குணர் தரநவில் வார்."

"கடவு ளீகுவ னென்றெண்ணி நித்தியமுங் கருதுறு முயற்சி செய்யானே லடலுறு செல்வமடை குவனே கொலருங் கலத்திட்ட பாலடி சின் [ழிப்ப மிடலுடைக் கரத்தா லெடுத்துண தெங்ஙன் வீங்கும் வெம்பசிப் பிணியொ னுடல்பவர் தனக்கோ ராகரமாகு முடனனி வாட்டு மெய்த் தவத்தோய்."

## ஆசாரக் கோவை

"நற்றெறும்பு தூங்கணம் புட்காக்கை யென்றிவைபோற்
றங்கரும நல்லகடைப் பிடித்துத் தங்கரும
மப்பெற்றி யாகமுயல் பவர்க் காசார
மெப்பெற்றி யானும் வரும்."

கப்பலோட்டி காற்றடிக்குமென்றும், கொல்லன் நெருப்புச் சுடுமென்றும், வண்ணான் கைகால் நனையுமென்றும், அம்பட்டன் கத்திபடுமென்றும், சொல்லி அவனவன் தொழிலை விட்டுவிடுவார்களே யானால் காரியம் எப்படி கைகூடும்? பொறுமையோடு கப்பலோட்டினால் காற்றைக் கொடுத்துக் காப்பாற்றுவது கடவுள் கடமை.

அசைவில்லாத ஊக்கமுடையாரிடம் ஆக்கம் அடையும் வழி தேடிச் செல்லும். உள் அடைபட்டுப் படுத்து உறங்கும் நாயைத் தான் உண்ணி உறிஞ்சும். வேட்டைநாய் அதை அறிவதில்லை. வெறுஞ் சோம்பேறி வெள்ளம் வடியும்வரை வழிபார்த்து வீண் போது போக்குவான். முயற்சியுடையானோ வெள்ளம் நீந்திக்கடந்து பட்டினத்தில் பண்டம் மாற்றிப் பயனெல்லாம் பெறுவான். முயற்சிக்கு முதல்தோழன் ஜெபம். ஜெபமில்லாத வேலை சீரழிந்த வேலை. விசுவாச ஜெபம் வெட்கத்தோடு திரும்பாது. ஜெபமோங்க ஜெயமோங்கும்.

1. Little things are the sweetest to hear, little children fly farthest and stay longest on the wing, little lakes are the stillest, little hearts are the fullest and little farms are the best tilled. Little books are read the most, and little songs the dearest loved ; and when Nature would make anything especially rare and beautiful, she makes it little—little pearls, little diamonds, little dewdrops. Agar's is a model prayer, but then it is a little one, and the burden of the petition is for but little. The Sermon on the Mount is little but it is greatest of all truth. Life is made up of littles ; death is what remains of them all. Day is made up of little beams, and night is glorious with little stars. —*Matthew Arnold.*

2. I confess, I love littleness almost in all things ; a little convenient estate, a little cheerful house, a little company, and a very little feast ; and if I ever were to fall in love again, which is a great passion, and therefore I hope I have done with it, it would be, I think, with prettiness, rather than with majestical beauty. —*A Cowley.*

3. The influences of little things are as real and as constantly about us as the air we breathe or the light by which we see ; these are the small—the often invisible—the almost unthought of—strands which are in weaving and twisting by millions, to bind us to character, to good or evil here, and to heaven or hell hereafter. —*E. Hollebeeck.*

4. Little things ! Life and death, prosperity and ruin, happiness and misery, hang upon little things ; they are like the linch-pin to the wheel, on which depends the safety of the vehicle; they are like the rudder to the vast mass which it guides, like the slender nerves to the bulky muscles. —*G .A Sala.*

5. Life is made up of little things, and he that scorns them despises his own real interest. There is an old and true saying, "Take care of the minutes, and the hours will take care of themselves." This may be rendered, take care of the little things, and the more mighty matters will be likely to be well done. —J. *W. Barker.*

6. Life is like patchwork ; every day there is a fresh bit to be put on. We must understand more correctly how to fit in better day by day the bits needed in repairing this patch-work life of ours. —*Platt.*

7. Opportunities for doing greatly seldom occur—Life is made up of infinitesimals. If you compute the sum of happiness in any given day, you will find that it was composed of small attentions, kind looks, which made the heart swell, and stirred into health that sour, rancid film of misanthropy which is apt to coagulate on the stream of inward life, as surely as we live in heart apart from our fellow-creatures. —*F. W. Robertson.*

8 Others are affected by what I am and say and do. And these others have also their sphere of influence, so that a single act of mine may spread in widening circles through a nation or humanity. —*W. E. Channing.*

9. No action, whether foul or fair,
Is ever done, but it leaves somewhere
A record, written by fingers ghostly
As a blessing, or a curse, and mostly
In the greater weakness or greater strength,
Of the acts which follow it, till at length
The wrongs of ages are redressed,
And the justice of God made manifest.-*H. W. Longfellow*

10. Life is a business, not good cheer;
Ever in wars.
The sun still shineth there or here,
Whereas the stars
Watch on advantage to appear.
O that I were an orange tree—
That busy plant;
Then I should ever laden be,
And never want
Some fruit for him that dresseth me. —*G. Herbert.*

11. That low man seeks a little hing to do,
Sees it and does it;
This high man, with a great thing to pursue,
Dies ere he knows it. —R. *Browning.*

12 The daisy is as perfect as the flower that blossoms only once a decade. The small life need not be less beautiful than the great. —*Rev. W. J. Dawson.*

13. What shall I do to gain eternal life?
Discharge aright
The simple dues with which each day is rife;
Yet, with thy might,
E'er perfect scheme of action thou devise,
Will life be fled?
While he who ever acts as conscience cries,
Shall live, though dead. —*Schiller.*

14. Ponderous and marvellous machinery is sometimes thrown out of gear by small obstructions. Express trains can be easily derailed. Either the obstruction is demolishsd; the obstacle is brushed aside, or great disaster follows. Every unpleasant thought must be immediately crushed out and thrown away. We cannot permit it to produce a mental jar, or interrupt our spiritual progress. It is the test of spiritual will. *C. B. Newcomb.*

15. It is not required of every man and woman to be or to do something great; most of us must content ourselves with taking small parts in the chorus, as far as possible without discord.
*Henry Van Dyke.*

16. **The men who did the little things well are doing the big things now.**

## ONE BY ONE.

17. One by one the sands are flowing,
One by one the moments fall ;
Some are coming, some are going,
Do not strive to grasp them all.

One by one thy duties wait thee,
Let thy whole strength go to each ;
Let no future dreams elate thee,
Learn thou first what those can teach.

One by one (bright gifts of Heaven),
Joys are sent thee here below ;
Take them readily when given,
Ready, too, to let them go.

One by one thy griefs shall meet thee,
Do not fear an armed band ;
One will fade as others greet thee,
Shadows passing through the land.

Do not look at Life's long sorrow ;
See how small each moment's pain ;
God will help thee for to-morrow,
So each day begin again.

Every hour that fleets so slowly,
Has its task, to do or bear ;
Luminous the crown and holy,
When each gem is kept with care.

Do not linger with regretting,
Or for passing hours despond ;
Nor, the daily toil forgetting,
Look too eagerly beyond.

Hours are golden links, God's token.
Reaching heaven ; but one by one.
Take them, lest the chain be broken,
Ere the pilgrimage be done.

(MISS PROCTER.)

18 'Tis a Little Thing
To give a cup of water; yet its draught
Of cool refreshment, drain'd by fever'd lips,
May give a shock of pleasure to the frame
More exquisite than when nectarean juice
Renews the life of joy in happiest hours.
It is a little thing to speak a phrase
Of common comfort which by daily use
Has almost lost its sense yet on the ear
Of him who thought to die unmourn'd, t'will fall

Like choicest music; fill the glazing eye
With gentle tears: relax the knotted hand,
To know the bonds of fellowship again;
And shed on the departing soul a sense,
More precious than the benison of friends
About the honour'd death-bed of the rich,
To him who else were lonely, that another
Of the great family is near and feels.

TALFOURD

19. Since trifles make the sum of human things,
And half our misery from our foibles springs;
Since life's best joys consist in peace and ease,
And few can save or serve, but all may please;
Ah! let th' ungentle spirit learn from hence,
A small unkindness is a great offence.
Large bounties to restore, we wish in vain,
But all may shun the guilt of giving pain.
To bless mankind with tides of flowing wealth,
With power to grace them, or to crown with health,
Our little dot denies, but heaven decrees.
To all the gift of minist'ring ease:
The mild forbearance at another's fault;
The taunting word, suppress'd as soon as thought;
On these Heaven bade the bliss of life depend,
And crush'd ill fortune when it made a friend.

HANNAH MORE.

---

## தாழ்மையின் மேன்மை.

ஒருவன் கல்வியில் மகா சமர்த்தனாயினும் செல்வத்திற் சிறந்தோங்கினவனாயும் அல்லது வேறெவ்வகையான உயர்ந்த பதவியடைந்தவனாயுமிருப்பினும், தானென்னும் அகங்காரத்தினால் தலைநிமிர்ந்து நிற்பதைத் தவிர்த்து அடக்கமென்னும் ஆபரணம்பூண்டு தாழ்ந்த இடத்திலேயே தண்ணீர்கட்டுமென்பதை யறிந்து தலைவணங்கி நிற்பானேல், பிறரிடத்தில் மதிப்பு, கௌரவம், லாபம், கீர்த்தியாதிய நல்ல சன்மானங்களைப் பெறுவானென்பதை நாம் இந்த வயதில் அறிந்து நடப்பது அத்தியாவசியம். ஏனெனில் நெற்கதிர் முதிர்ந்து பக்குவமானவுடன் சிரங் கனத்துப் பாரத்தைத் தாங்கி நிற்க முடியாமல் தாள்கள் தரையோடு சாய்ந்து வணக்கங் கொள்ளுகின்றன. இதுபோலவே மனிதருக்குள் விவேக முதிர்ந்தவர்கள்,

"கற்றதிறையளவு கல்லாதுலகளவென்
றுற்றகலமடந்தை ஓதுகிறாள்—மெத்த
வெறும்பந்தயம் கூறவேண்டாம் புலவீர்

என்று ஔவைசொல்லிய வாக்கியத்தை நினைந்து தாம் கற்றதெல்லாம் விரலின் ஓர் இறைக்குச் சமானமானதென்றும், இன்னும் கற்காத விஷயங்கள் சமுத்திரம்போல் ஏராளமாயுள்ளனவென்றும் அறிந்து "நிறைகுடம் நீர்தளும்பலில்" என்னும் பழமொழிப் பிரகாரம் எப்போதும் வணக்கமுடையவர்களாகவே யிருப்பார்கள். இவர்களெப்போதும் கர்வமடையாராதலால் உலகில் மேன்மையையும் கீர்த்தியையும் பெறுவார்கள். ஆனால் சற்று தலை குனிந்து நிற்கும் நெற்கதிரின் அரிசி, சரியானபடி முற்றிப் பருவத்துக்கு வாராததுபோலவே, சொற்ப ஆராய்ச்சி யுடையவர்கள் சில சமயங்களில் தாழ்மையான குணமுடையவர்களாய்த் தோன்றினும், அகங்காரம் முற்றிலும் அவர்களைவிட்டு அறவே தொலைவதரிது. ஏனெனில், கல்விக்கேள்வி ஆராய்ச்சியும், அனுபவமும், தீக்ஷண்ய புத்தியுமாகிய சிரோபாரம் பூரணமாக அவர்களுக்குக் கைவலயமாகவில்லை. ஆகையால் அவர்கள் பிஞ்சில்பழுத்த விவேகிகளென்று அழைக்கப்படுவதுடன் "அறவடித்தமுன்சோறு காடிப் பானைக்குள் விழுவதுபோல்" அடிக்கடி தமதகங்காரத்தையும் மமதையையும் பாராட்டி,

"வான்குருவியின்கூடு வல்லரக்குத் தொல்கறையான்
தேன்சிலம்பி யாவர்க்குஞ் செய்யரிதால்—யாம்பெரிதும்
வல்லோமே யென்று வலிமைசொல வேண்டாங்காண்
எல்லோர்க்கு மொவ்வொன் றெளிது."

என்று ஔவை சொன்னதையும் மறந்து, பெரியோர் வார்த்தைகளை அசட்டை செய்து பட்டிமாடுபோல கெட்டலைந்து தமது கௌரவத்தையும் கண்ணியத்தையும் இழந்து விடுகிறார்கள்.

இது நிற்க, சற்றேனும் தலைவணங்காமல் நின்ற நிலையில் நிமிர்ந்து நிற்கும் கதிரோ பதர் அல்லது சாவி என்று சொல்லப்படும். அது நெருப்பில போட்டெரிப்பதற்கே யன்றி வேறெந்தப் பிரயோசனத்திற்கு முதவாது. இதுபோலவே தானென்னும் அகங்காரப் பேய் பிடித்துத் தலைவிரித்தாடும் மனிதர்களுடைய சிரசில் மூளையாவது புத்தியாவது கிடைக்காது. அவன் ஆடம்பரமாய்ப் பேசும் பேச்செல்லாம் வெறும் பேச்சே.

தாழ்மை விருத்தியாக வஞ்சகமும், களவு, கபடு, மாய்மாலம், இரண்டகம், அகங்காரம், பொறாமை, பெரியோரை மதியாமை முதலிய துர்க்குணங்கள் யாவும் தலைகாட்டாமல் ஓடிவிடும். தாழ்மையே கோபம், சண்டை, சச்சரவு முதலிய நெருப்புக்களை அவிக்கும் ஜலமாகும். "தாழ்மையுற்றோரேழ்மையடையார்" "தாழ்ந்த விடத்திலேயே தண்ணீர் தங்கும்." "தாழ்ந்தது தங்கம் உயர்ந்தது செம்பு" என்னும் பழமொழிகள் கவனிக்கற்பாலன

(1) The bird that soars on highest wing,
Builds on the ground her lowly nest;
And she that doth most sweetly sing,
Sings in the shade when all things rest;
In lark and nightingale we see
What honour hath humility
(James Montgomery.)

(2) Do not be laughed into doing that which you know to be wrong. Be modest and humble, but ever respect yourself. Remember who and what you are, and that it is your duty to excel.
(Lord Beaconsfield.)

(3) Pride and humility are the two master powers, the two kingdoms in strife for the eternal possession of man.
(W. Law.)

(4) If thou seest anything in thyself which may make thee proud, look a little further and thou shalt find enough to humble thee.
(Quarles.)

(5) Stand at thy real height against some higher nature, that shall show thee what the real smallness of thy greatest greatness is
(Phillips Brooks.)

(6) There is nothing so powerful as humble-mindedness. It is stronger even than a rock, and harder than adamant, and places us in a safety greater than that of towers and cities, being too high for any of the artillery of Satan.
(S. Chrysostom.)

(7) Nothing is so simple as greatness: indeed, to be simple is to be great.

(8.) Heaven is not reached at a single bound;
But we build the ladder by which we rise
From the lowly earth to the vaulted skies;
And we mount to its summit round by round.

I count this thing to be grandly true;
That a noble deed is a step toward God—
Lifting the soul from the common clod
To a purer air and a broader view.

We rise by the things that are under our feet;
By what we have mastered of good and gain;
By the pride deposed and the passion slain,
And the vanquish ills that we hourly meet.

We hope, we resolve, we aspire, we pray.
And we think that we mount the air on wings,
Beyond the recall of sensual things,
While our feet still cling to the heavy clay.

Wings for the angels but feet for men?
We may borrow the wings to find the way,—
We may hope, and resolve, and aspire, and pray,
But our feet must rise, or we fall again.

Heaven is not reached at a single bound;
But we build the ladder by which we rise,
From the lowly earth to the vaulted skies,
And we mount to its summit round by round.
(J. G. Holland.)

9. The sweetest birds build near the ground;
The loveliest flower springs low;
And we must stoop for hap piness,
If we its worth would know. —C. Swain.

## மேலான நோக்கம். (Aim High.)

கீர்த்திமானைக விரும்புவோன் தான் எந்தநிலைமையை அடைய விரும்புகின்றானோ அதையே முக்கிய நோக்கமாய் முன்னிறுத்தி உழைக்கவேண்டும். இந் நோக்கத்தையே மேலான நோக்கம், கீழான நோக்கம், நோக்கமின்மை என மூவகையாகப் பிரிக்கலாம். மேலான நோக்கமே சர்வ சித்திக்கும் காரணமாகும். மேல் நோக்கத்துடன் மனவுறுதி எவனிடமிருக்கின்றதோ அவனைக் கண்டால் அவன் தொட்ட காரியம் நடுங்கும். மார்க்கண்டேயரது உறுதியையும் மனநிலைமையையுங் கண்டு யமன் நடுங்கினதாக இந்துப்புராணங்களில் வாசிக்கிறோம். மார்க்கண்டேயர் பதினாறு வயதில் இவ்வித மேல்நோக்கத்துடன் உழைத்தார். சாலமோன் ராஜா தமது இளம்பிராயத்தில் ஞானமுள்ள இருதயத்தைத் தரும்படி ஊன்றி ஜெபிக்க தேவன் அவனை நோக்கி “நீ உனக்கு நீடித்த நாட்களைக் கேளாமலும், உன் சத்துருக்களின் பிராணனைக் கேளாமலும், நீ இந்தக் காரியத்தையே கேட்டு, நியாயம் விசாரிக்கிறதற்கு ஏற்ற ஞானத்தை உனக்கு வேண்டிக்கொண்டபடியினால், உன் வார்த்தைகளின்படி செய்தேன். இதிலே உனக்குச் சரியானவன் உனக்கு முன் இருந்ததுமில்லை, உனக்குச் சரியானவன் உனக்குப் பின் எழும்புவதுமில்லை. இதுவுமன்றி, நீ கேளாத ஐசுவரியத்தையும் மகிமையையும் உனக்குத் தந்தேன். உன் நாட்களில் இருக்கிற ராஜாக்களில் ஒருவனும் உனக்குச் சரியானவன் இருப்பதில்லை. உன் தகப்பனாகிய தாவீது நடந்ததுபோல, நீயும் என் கட்டளைகளையும் என் நியமங்களையும் கைக்கொண்டு, என் வழிகளில் நடப்பாயானால் உன் நாட்களையும் நீடித்திருக்கப் பண்ணுவேன்” என்றார்.

ஒருவன் தனது இளம்பிராயத்திலேயே மனோதைரியத்தாலும் உறுதியாலும் சகல சங்கடங்களையும் வென்று, தான் லக்ஷியம் வைத்திருக்கும் மேலான ஸ்திதிக்கே முயற்சிப்பானாயின், பழுத்த பழம் பாலில் நழுவி விழுவதுபோல் அவன் கொண்ட நோக்கம் அவன் கையில்தானே நழுவிவிழும். "தொட்டிற் பழக்கம் சுடுகாடுமட்டும்" என்பது பழமொழி. புருஷ சக்தியும், உற்சாக சக்தியும், உத்தியோக சக்தியும் நம்மிடம் தோன்றி நாம் நல்முயற்சியில் இறங்கும் காலத்தில் தீயவழக்கங்கள் நம்மை ஆட்கொள்ளாதபடி அவற்றை அறவே அகற்றவேண்டும். ஏனெனில், தீய வழக்கம் உண்டாவது மிக எளிது. உண்டான கெட்ட வழக்கத்தை நீக்குவது மிக்க கஷ்டம். ஜலதோஷமென்று பொடிப்போட ஆரம்பித்து ஒருநாளைக்கு ஒரு அணாப் பொடிபோடும் நண்பர் நமக்குள்ளில்லையா? வேடிக்கைக்காகச் சிகரற் பிடித்து இப்பொழுது கட்டுக்கட்டாய்ச் செலவளிப்பவர்கள் எத்தனைபேர்! இது யாவருமறிந்த விஷயந்தானே. ஆகையால் சிறுபிராயத்தில் நலவழக்கம் எவ்வளவு அவசியமோ, அவ்வளவுக்கு அறியாமையால் கெட்ட வழக்கங்கள் நம்மிடம் வந்து ஆட்கொள்ளவிடாமல் அகற்றுவது அத்யாவசியம். இவ்வித மனிதனையே உலகத்தார் புருஷ சக்தியமைந்த தீரன் என்பார்கள். இரவெல்லாம் கீர்த்திமான்களின சரிதங்களை வாசிப்பதில் செலவிடுவான், பகல் முழுதும் பெரியோர்களது செயல்களைப் பின்பற்றி நடப்பான். ஒரு பந்தய ஓட்டம் ஓடுபவனைப்போல் தன் காரியத்தை முடிப்பதற்குத் துடிதுடிக்கிறான். எவ்வளவு கஷ்டம் வரினும் அதை மேற்கொண்டு உயரக்கிளம்பி அறநெறிப்பட்ட முயற்சியில் தன் ஆண்மையைச் செலுத்தி பெருங் காரியங்களை முடித்து சந்தோஷமடைகிறான். அவன் கீர்த்தி உலகத்தின கோடிவரையிலும் எட்டும்.

1. Look up! and not down;
Out! and not in;
Forward! and not back,
And lend a hand.

2. A man's best things are nearest him,
Lie close about his feet;
It is the distant and the dim
That we are sick to greet.
For flowers that grow our hands beneath
We struggle and aspire,—
Our hearts must die except they breathe
The air of fresh Desire. *Lord Houghton.*

3. Whoever is satisfied with what he does, has reached his culminating point—he will progress no more. Man's destiny is to be not distasisfied, but for ever unsatisfied.

*F. W. Robertson.*

4. So high as a tree aspires to grow, so high it will find an atmosphere suited to it. *H. Thoreau.*

5. We need all our aspirations. The very loftiest of them are absolutely needful to guard us against the very lowest temptations of the everyday world.

6. Never despair nor hurry, but set to work with the steady purpose of one who knows that God is on his side; and that though He bids us "Work while it is called to-day," yet the great Husbandman is patient. *Octavia Hill.*

7. Pitch thy behaviour low, thy projects high,
So shalt thou humble and magnanimous be,
Sink not in spirit; who aimeth at the sky
Shoots higher much than he that means a tree.
*G. Herbert*

8. Nay, falter not—'tis an assured good,
To seek the noblest—'tis your only good.
Now you have seen it; for that higher vision
Poisons all meaner choice for evermore—*George Eliot*

9. Greatly begin! though thou have time
But for a line be that sublime;—
Not failure, but low aim, is crime. —*J. R Lowell.*

10. Find your purpose and fling your life out to it; and the loftier your purpose is, the more sure you will be to make the world richer with every enrichment of yourself. —*Phillips Brooks*

11. Standing on what too long we bore,
With shoulders bent and downcast eyes,
We may discern—unseen before—
A path to higher destinies.

Nor deem the irrevocable past.
As wholly wasted, wholly vain,
If, rising on its wrecks, at last
To something nobler we attain. —*H. W. Longfellow.*

12. As soon as a man becomes satisfied with himself and with what he has done, he has ceased to improve, and has begun to degenerate. —*George Eliot.*

13. We must not lower the level of our aim that we may more surely enjoy the complacency of success. —*J. Ruskin.*

14. He who would build sublime
And lasting work, to stand the test of time,
Must inspiration draw from his full heart:
And he who loveth wisely, well, and much,
The secret holds of the true master-touch. —*E. W. Wilcox.*

15. I am; I ought; I can; I will. These are the steps of that ladder whereby we climb to the higher life.

16. I would be true, for there are those that trust me;
I would be pure, for there are those who care;
I would be strong, for there is much to suffer;
I would be brave, for there is much to dare;
I would be friend of all—the foe, the friendless,
I would be giving, and forget the gift ;
I would be humble, for I know my weakness;
I would look up, and laugh and love, and lift.

17. Higher, higher will we climb
Up the mount of glory,
That our names may live through time
In our country's story,
Happy when her welfare calls,
He who conquers, he who falls.

Deeper, deeper let us toil
In the mines of knowledge
Nature's wealth and learning's spoil
Win from school and college ;
Delve we there for richer gems
Than the stars of diadems.

Onward, onward may we press
Through the path of duty ;
Virtue is true happiness,
Excellence true beauty,
Minds are of celestial birth,
Make we then a heaven of earth—*Montgomerry*

18. Never you mind the crowd, lad,
Or fancy your life won't tell ;
The work is the work, for a'that,
To him that doeth it well.
Fancy the world a hill, lad ;
Look where the millions stop,
You'll find the crowd at the base, lad ;
There's plenty of room at the top

Courage and faith and patience,
There's space in the old world yet ;
The better the chance you stand, lad,
The further along you get.
Keep your eye on the goal, lad,
Never despair or drop ;
Be sure that your path leads upwards;
There's always room at the top.

19. I envy—how I envy him whose soul
Turns its whole energies to some one end,
To elevate an aim, pursue success,
However mean! —*R. Browning.*

20. The weakest among us has a gift, however seemingly trivial, which is peculiar to him, and which worthily used, will be a gift also to his race for ever. *J. Ruskin.*

21. The latest gospel in this world is, **know thy work and do it**............Think it not thy business, this of knowing thyself; thou art an unknowable individual; know what thou canst work at and work at it like a Hercules! That will be thy better plan.—*T. Carlyle.*

22. To affect the quality of the day, that is the highest of arts. Every man is tasked to make his life, even in its details, worthy of the contemplation of his most elevated and critical hour.

—*H. D. Thoreau.*

23. Dear is the work He gives in many a varied way;
Little enough in itself, yet something for every day.—*F R. Havergal.*

24. The mountain can never be appreciated if looked at from its base, It must be climbed. Only as we rise are we fully impressed with its grandeur. No more can we appreciate the glories of the Christian life save as we rise above the levels of our ordinary existence. *W. Wordsworth.*

25. We learn to climb by keeping our eyes, not on the valleys that lie behind, but on the mountains that rise before us.

*T. B. Aldrich.*

26. Oh! what is the pathway white, with parapets of light,
Whose slender links go up, go up and meet in heaven high?
'Tis the road of the Loving Heart from earth to sky.
Choose always the path that seems rightest, however rough it may be.
Kindness does not consist in gifts, but in gentleness and generosity of spirit.

27. He who ascends to mountain-tops shall find
The loftiest peaks most wrapt in clouds and snow;
He who surpasses or subdues mankind,
Must look down on the hate of those below.
Though high above the sun of glory glow,
And far beneath the earth and ocean spread,
Round him are icy rocks and loudly blow
Contending tempests on his naked head,
And thus reward the toils which to those summits led.

—*Lord Byron.*

28. See that no day passes in which you do not make yourself a somewhat better creature; and in order to do that, find out, first, what you are now. —*J. Ruskin.*

29. All great and unusual occurrences, whether of joy or sorrow, lift us above this earth; and we should do well always to preserve this elevation. —*H. W. Longfellow.*

**30. Look one step onwards, and secure that step.**

## மௌனத்தின் ஆதாயம்.

நாம் பிரதிதினமும் ஒருமணி நேரமாவது தனிமையான இடத்தில் போய் மௌனமாயிருந்து தியானஞ் செய்வதின் மேன்மையை என்னென்று சொல்வேன! அருட்பிரகாச ஜோதியுடன் கலந்துறவாடி ஐக்யப்படுவதற்கும், நமக்குள்ளிருக்குங் குற்றங்களை நிவிர்த்திசெய்து நமது ஒழுக்கங்களைச் சீர்ப்படுத்தி முன்னுக்கு வருவதற்கும் மௌன தியானமே தகுந்தது.

பால் மகா முனிவரும் தாம் ஸ்தாபித்த பிலிப்பிய சபைக்கு எழுதிய நிருபத்தில் மௌனதியானத்தின் மகிமையைப்பற்றிச் சொல்வதாவது :—

கடைசியாக சகோதரரே, உண்மை யுள்ளவைகளெவைகளோ, ஒழுக்கமுள்ளவைகளெவைகளோ, நீதியுள்ளவைகளெவைகளோ, கற்புள்ளவைகளெவைகளோ, அன்புள்ளவைகளெவைகளோ, நற்கீர்த்தியுள்ளவைகளெவைகளோ, புண்ணியம் எதுவோ, புகழ் எதுவோ அவைகளையே சிந்தித்துக்கொண்டிருங்கள். பிலி. 4: 8.

நமது மூதாட்டியாகிய ஔவையும் "இனிது, இனிது ஏகாந்தம் இனிது" என்று கூறியிருக்கின்றனள்.

தாயுமானவரும்,

"கனியேனும் வறியசெங்காயேனும் உதிர்சருகு கந்த
　　மூலங்களேனும்
கனல்வாதை வந்தெய்தின் அள்ளிப்புசித்துநான்
　　கண்மூடிமௌனியாகித்
தனியே இருப்பதற்கெண்ணினேன் எண்ணமிது
　　சாமிநீ அறியாததோ?"

என்று கூறியதால மௌனத்தின் மகிமை இவ்வளவென விளங்கும்

இது நிற்க, நமது காரியாதிகளையும் இரகசியங்களையும் மற்றவர்களிடத்தில் சொல்லி மனம் ஆறுவதனாலே யாதொரு பிரயோசனமும் உண்டாவதற்குப் பதிலாகத் தீமையே விளையும்; நன்மையான காரியமாயிருந்தால் பிறர் பொறாமைப்படுவதற்கும் தீமையானதா யிருந்தால் பிறர் நம்மைப் பயமுறுத்துவதற்கும் இடமாகும். ஏனெனில் நமது இரகசியம் பிறனைவிடமானவுடன் எங்கே வெளியாக்கிவிடுகிறானோ வென்னும் பயத்துடனும் நடுக்கத்துடனுஞ் சீவித்து நமது சுயாதீனத்தையு மிழந்து பிறனுக்கடங்கி நடந்து அவன் சிநேகத்தை நாடி அவனுக் கடிமையாக வேண்டியதாகும்.

ஔவை.

"மதியாதார் முற்றம் மதித்தொருகாற் சென்று
மிதியாமை கோடிபெறும்
உண்ணீருண்ணீரென் றுபசரியார் தம்மனையி
லுண்ணாமை கோடிபெறும்
கோடி கொடுத்துங் குடிப்பிறந்தார் தம்மோடு
கூடுதல் கோடிபெறும்
கோடானு கோடி கொடுப்பினுந் தன்னுடைநாக்
கோடாமை கோடிபெறும்"

மூடன் தன உள்ளத்தை யெல்லாம் வெளிப்படுத்துகிறான்; ஞானியோ அதைப் பின்னுக்கு அடக்கிவைக்கிறான். நீதி 29-11.

"கற்றறிவு குலமேன்மை கருணைபெறும்
புகழ்செல்வங் கைம்மாமறண்ணு
துற்றதுவுங் கொடைசீர்மை யொழுக்கமருந்
தவநியம முறவின்கேண்மை
மற்றெதிரிலாத் திண்மை வாய்மைமிகுந்
தூய்மைகுண வனப்பியாவும்
பெற்றிடினு மடக்கமில்லாப் பெருமிதத்தா
லித்தனைக்கும் பிழையுண்டாமால்.

என்று பிரபோத சந்திரோதயத்தில் சொல்லி யிருப்பதுபோல், ஒருவனுக்குக கல்வியறிவு, உயாகுலம, தயை, கீர்த்தி, செல்வம, தர்மசிந்தை, நலலொழுக்கம், தவமுயற்சி, இனத்தாரிஷ்டம், எதிரியை ஜெயிக்கும் வன்மை, சத்தியம் தயாளுமை, பரிசுத்தம், சற்குணத்தினழகு முதலிய சகல சுகாதங்களும் வாய்ந்திருந்தபோதிலும அடக்க வொழுக்கமில்லாதிருக்குமாயின் அவனுடைய சகல நன்மையும் அவமாயப்போகும். ஆனால்,

"பொய்யுரையான் வையான் புறங்கூறான் யாவரையும்
மெய்யுரையான் உள்ளனவும் விட்டுரையான்—நெய்யுரையும்
கூந்தல் மயிலன்னாய்க் குழீஇவான் விண்ணோர்க்கு
வேந்தனு மிவ்வுலகம் வீட்டு."

என்று ஏலாதி வெண்பாவில் சொல்லி யிருப்பதுபோல் ஒருவன் பொய் சொல்வதைக் கட்டோடு நீக்கி மற்றவரை யிகழாமலும், புறங்கூறாமலுமிருந்து கண்ணால் கண்ட விஷயங்களையும நடந்தவைகளையும் தன்னுடைய மர்மஙகளையும் மறறவர்களிடம் சொல்லி அயாராயல் இருக்கின அவன் இவ்வுலகத்தில மாத்திரமல்ல மறுலோகத்திலுங்கூடத் தேவதூதர்களைவிடச் சிறந்தவனாவான்.

## பஞ்சதந்திரம்.

"குருவுபதேசமாதர் கூடியவின்பந் தன்பால்
கருவிய நிதியங்கல்வி வயதுதான் செய்யுந்தன்மம்
அரிய மந்திரிவிசார மாண்மையிங் கிவைகளெல்லாம்
ஒருவரு மறியவொண்ணா துரைத்திடி லழிந்துபோமே."

குருவினிடத்தில பெற்றுக்கொண்ட உபதேசம், மாதரோடு கூடிய இன்பம், தன்னிடத்திலிருக்கும் செல்வம், தனக்குத்தெரிந்த வித்தை, தன் வயது, தான் செய்யும் தர்மம், மந்திரி சொலலும் ஆலோசனை, தன் திறமை முதலியவைகளைப் புத்திமான் வெளிப்படுத்தலாகாது. வெளிப்படுத்தினால் அவையனைத்தும் வீணாகும்.

உலகப் பிரசித்தி பெற்று,தமக்கொருவர் நிகருண்டோவென்னும் புஜபல பராக்கிரமம் படைத்த ருஷியரின் திரளான கூட்டங்களை ஜெயித்துத் தலைகுனியவைத்துத் தாம் வெற்றிமாலை சூடி வீரப்பிரதாபம பெற்று உலகத்தாரால் புகழப்பட்டு மகோன்னததிசை பெற்றிலங்கும் ஜப்பானியரின் ஜெயத்துக்கும் வலிமைக்கும் காரணம் அவர்கள் மௌனமே. எந்தத் தொழிற்சாலைக்குப் போனாலும் அங்கே சந்தடியே கிடையாது. மேலும், மகா பராக்கிரமசாலிகளும் பெருந்தொகையானவர்களுமான ருஷியரோடு யுத்தஞ் செய்கையிலும் ஜப்பானியரின் மர்மரகசியம் ஒருவருக்குந் தெரியாது. திடீரென்று ருஷியர் எதிர்பார்த்திராத சமயங்களில் அவர்கள்மேல புலிபோல் பாய்ந்து அவர்கள் திரளான கூட்டங்களைச் சிதறடித்து ஜெயமடைந்ததாக வாசிக்கிறோம்.

## நீதிசாரம்.

### மௌனம் கலகநாசமெனல்.

"சீர்பயிர் செய்வோர்க்கில்லை வறுமைகள் செபங்களேனும்
பேர்பெறச் செய்வோர்க்கில்லை பாதகமியல்பார் சேர்க்குந்,
தேர்வுறு மௌனர்க்கில்லை கலகமுந் தெளிந்திராவில்
பார்பெறச் சாக்கிரதை பண்ணினாற் பயமுமில்லை."

பயிரிடுகிறவனுக்குத் தரித்திரமில்லை. ஜெபம் பண்ணுகிறவனுக்குப் பாவமில்லை. மௌனமாயிருக்கிறவனுக்குக் கலகமில்லை. இராப்பகல் ஜாக்கிரதையா யிருக்கிறவனுக்குப் பயமில்லை.

"வற்றிய வோலை கலகலக்கு மெஞ்ஞான்றும்
பச்சோலைக்கில்லை யொலி."

என்னும முதியோர் வாக்கின்படி, பசையற்ற உலர்ந்த ஓலையே கலகலவென்று சப்திக்குமே யல்லாது பசையுள்ள பச்சோலைக்கொலி கிடையாது. பண்டமற்ற வெறும்பானைக்கோசை அதிகமென்பதும நாமறிந்ததே. மேலும் பரிகாச நாக்கு பழுவான நாக்கு. பலமுறை சொல்லும் பரிகாசப் பேச்சு பாதகப் பேச்சாகிறது. வேடிக்கைப் பேச்சு வேதனைப் பேச்சாய் முடிகிறது. ஓரக் கண்ணனைப் பழிக்கிறான் ஒற்றைக்கண்ணன். ஒற்றைக் கண்ணனைப் பழிக்கிறான் பொட்டைக் கண்ணன். முடவன் பழிக்கிறான்

தொண்டையை. மணியங்காக்கையைக் கறுப்பென்று பழிக்கிறது அண்டங்காக்கை. திருட்டுத்தொழிலில் தேர்ந்தவன் எல்லாரையும் திருடராக்கப் பார்க்கிறான். விபசாரத்தில் பன்றிபோற் புரளுகிற வன் பலருக்கும் விபசாரப் பட்டம் கட்டி வைக்கிறான். அரைக் காசு கொடுக்க அவகாசம் இல்லாதவன் ஆயிரம் ரூபாய் கொடுத் தவனை அவதூறு பேசுகிறான். அவதூறு நாக்கு அருவருப்பான நாக்கு. பழிக்கிற நாக்கைப்பாதி அறுத்தால் அவதூறு நாக்கை அடியோடே அறுக்கவேண்டும். தூற்று நாக்கு கூற்று நாக்கு உயிரைப் பார்க்கிலும் பெயரே பெரிது. ஆதலால் ஒருவன் பெய ரைக் கெடுக்கிறவன் உயிரைக் கொல்லுகிறான். வில்லம்பு செய் யும் கெடுதியைப்பார்க்கிலும் சொல்லம்புசெய்யும் கெடுதி அதிகம்.

குறள்

“ தீயினாற் சுட்ட புண் உள்ளாறும் ஆறாதே
நாவினாற் சுட்ட வடு.”

தீயைப் பார்க்கிலும் நா கொடிது. கண்ணுக்கு ஒரு மூடி வைத்த கடவுள் நாக்குக்கு இருமூடி வைத்தது எவ்வளவுபெரிய ஞானம். கண்ணையும் காதையும் இரட்டையாய்ப் படைத்தும் நாக்கை ஒற் றையாய்ப் படைத்ததற்குக் காரணமுண்டு. “சளசளவென்னு மாம் சண்டைக்கு நிற்குமாம், அது கிடக்குமாம் பொந்துக்குள் ளே.” ஆதலால வேளையறிந்து விதமறிந்து பேசவேண்டும். காரிய மறிந்து கருத்தறிந்து பேசவேண்டும். அன்பு நிறைந்து அருள் மொழியாய்ப் பேசவேண்டும். கேட்கிறதற்குத் தீவிரமும் பேசு வதற்குத் தாமதமுமாய் இருந்து இருமுறை கேட்டு ஒருமுறை பேசவேண்டும். பொன் நாக்கா யிருக்க வேண்டியதைப் புண் ணாக்காக்குவது தருமமன்று. நமது வாயிலிருந்து புறப்படும் சொற்கள் தங்கச் சொற்களாவென்று முப்புடம் போட்டுப் பார் க்கவேண்டும். முதலாவது அந்தச் சொல்லை இது நிஜமா என் கிற புடத்தில் போட்டுப் பார்க்க வேண்டும். அதற்கு நிற்குமா னால் இது சிநேகமா என்கிற புடத்தில் போடவேண்டும். அதற் கும் இளைக்காதிருக்குமானல் இது அவசியமா என்கிற புடத்தில் போடவேண்டும். இப்புடத்திற்கும் உறுதியாய் நிற்கும் சொல்லே தங்கச் சொல். “யாகாக்கா வாயினும் நாகாக்க,” என்றார் நாய னார். ஆதலால் சுத்த சூனியமான மூளையையுடைய நிரக்ஷரக் குக்ஷிகளாகிய மூடமக்களுக்கே பெரிய வாயும் வணங்காத் தலையு மிருக்குமெனபதை நாம் உறுதியாக மனதிற் கொண்டு “பொறுத் தவர் பூமி யாள்வார்; பொங்கினவர் காடாள்வார்” என்ற வாக் கின்படி, இந்தச் சிறு பிராயத்திலேயே தாழ்மையையும், பொறு மையையும், மௌனத்தையும் கையாடி வருவோமாயின் நாளடை வில் மேன்மையடைவோ மென்பதற்குச் சந்தேகமில்லை.

1. Never tell all you know; for he who tells everything he knows, often tells more than he knows.

Never lay out all you can afford; for he who lays out everything he can afford, often lays out more than he can afford.—*Arab Maxims*

2. Give not thy tongue too great a liberty, lest it take thee prisoner. A word unspoken is, like the sword in the scabbard, thine; if vented, thy sword is in another's hands. If thou desire to be held wise, be so wise as to hold thy tongue. —*Quarles*.

3. Deep waters are still. Wise men generally talk little, because they think much.

4. The Wise man's tongue is in his heart, and the foolish man's heart in his mouth. —*Arabic*.

5. Sweet are the thoughts that savour of content,
The quiet mind is richer than a crown.— R. *Greene*.

6. Silence is a great peacemaker. *H. W. Longfellow*.

7. By all means, use sometimes to be alone;
Salute Thyself—see what thy soul doth wear;
Dare to look in thy chest, for 'tis thine own,
And tumble up and down what thou find'st there.
—*Wordsworth*.

8. These few precepts in thy memory
See thou character. Give thy thoughts no tongue,
Nor any unproportioned thought his act.
Be thou familiar, but by no means vulgar,
Those friends thou hast, and their adoption tried,
Grapple them to thy soul with hoops of steel;
But do not dull thy palm with entertainment
Of each new-hatched, unfledged comrade. Beware
Of entrance to a quarrel, but being in,
Bear't that the opposed may beware of thee.
Give every man thy ear, but few thy voice.
Take each man's censure, but reserve thy judgment
Costly thy habit as thy purse can buy,
But not expressed in fancy; rich, not gaudy;
For the apparel oft proclaims the man.
Neither a borrower nor a lender be;
For loan oft loses both itself and friend,
And borrowing dulls the edge of husbandry. —*Shakespeare*.

9. When from our better selves we have too long
Been parted by the hurrying world, and droop,
Sick of its business, of its pleasures tired—
How gracious, how benign, is solitude! —*W. Wordsworth*

10. An Englishman would live twenty years in a house without knowing his neighbours; a Frenchman would know all of them in twenty-four hours. Let the sociable Frenchman be planted among the tattooed islanders of the South Seas, and in two years he would be found tattooed; put an Englisman in the same position, and he would be king of the island in the time. —*Kossuth.*

11. There are three kinds of silence. Silence from words, is good because inordinate speaking tends to evil. Silence or rest from desires or passions is still better, because it promotes quietness of spirit. But the best of all is silence from unnecessary and wandering thoughts, because that is essential to internal recollection, and because it lays a foundation for a proper regulation and silence in other respects.
—*Molinos.*

12. Let us then labour for an inward stillness,
An inward stillness and an inward healing:
That perfect silence where the lips and heart
Are still, and we no longer entertain
Our own imperfect thoughts and vain opinions,
But God alone speaks in us, and we wait
In singleness of heart, that we may know
His will and in the silence of our spirits,
That we may do his will, and do that only!
—*H. W. Longfellow.*

13. In Silence mighty things are wrought:
Silently builded, thought on thought,
Truth's temple greets the sky;
And, like a citadel with towers,
The soul, with her subservient powers,
Is strengthened silently.

Soundless as chariots on the snow,
The saplings in the forest grow
To trees of mighty girth;
Each nightly star in silence burns,
And, every day, in silence turns
The axle of the earth.

The silent frost, with mighty hand,
Fetters the rivers and the land
With universal chain;
And smitten by the silent sun,
The chained is loosed, the rivers run,
The lands are free again. —*T. T. Lynch.*

14. Why fret you at your work because
The deaf world does not hear and praise?
Were it so bad, O workman true,
To work in silence all your days?

I hear the traffic in the street,
But not the white worlds o'er the town;
I hear the gun at midday roar,
I did not hear the sun go down.

Are work and workman greater when
The trumpet blows their fame abroad?
Nowhere on earth is found the man
Who works as silently as God.

15. When from our better selves we have too long
Been parted by the hurrying world, and droop,
Sick of its business, of its pleasures tired—
How gracious, how benign, is solitude!
—*W. Wordsworth.*

16. There is so much bad in the best of us,
And so much good in the worst of us.
That it hardly behoves any of us
To talk about the rest of us. —R. *L. Stevenson.*

17. Why are we so glad to talk and take our turns to prattle, when so rarely we get back to the stronghold of our silence with an unwounded conscience? —*Thomas a Kempis.*

18. Speak your mind,
But still be kind.

19. If you would be pungent, be brief; for it is with words as with sunbeams—the more they are condensed, the deeper they burn.
—R. *Southey.*

20. For those children of God whom it has been granted to see each other face to face, and to hold communion together, and to feel the same spirit working in both, can never more be sundered, though the hills may lie between. For their souls are enlarged for evermore by that union; and they bear one another about in their thoughts continually as it were a new strength. —*George Eliot.*

21. You who are letting miserable misunderstandings run on from year to year, meaning to clear them up some day, if you could only know and see and feel that the time is short, how it would break the spell, how you would go instantly and do the thing which you might never have another chance to do. —*Phillips Brooks.*

22. Words are things and a small drop of ink falling like dew upon a thought produces that which makes thousands, perhaps millions, think. —*Lord Byron.*

23. A very great part of the mischiefs that vex the world arise from words. —*Edmund Burk.*

24. It may be glorious to write
   Thoughts that shall glad the two or three
  High souls like those far stars that come in sight
   Once in a century.
   But better far it is to speak
   One simple word which now and then
   Shall waken their free natures in the weak and friendless
     sons of men. —*J. R. Lowell.*

## நான்கு வாசல்கள்.

உலகத்தில் முன்னுக்கு வர விருப்பமுள்ள ஒவ்வொருவனும் எப்பொழுதும் முன்னெச்சரிக்கையாய்மூடிவைக்கவேண்டிய கதவுகள் நான்(





(முதலாவது,) வடக்கு வாசல், ஐம்பொறிகளுக்கு மேலாயமர்ந்திருக்கும் அவனுடைய கண்களே. "சர்வேந்திரியாணும் நயனம் பிரதானம்" என்பதற்கிணங்க, இந்திரியங்களெல்லாவற்றிலும் கண்ணே முக்கியமானது, ஒருவன் தன் மனதையும், தன்னையுங்

கெடுக்கக்கூடிய ஆசாபாச அலங்காரங்களையும், கூத்துகளையும் ஸ்திரீகளையும், வீணா கதைகளையும், சிற்றின்பப் பாடல்களையும் தன் கண்களால் பார்க்கத் தலைப்பட்டால், அவசியமான படிப்பில் ஆதாவுகுறைந்து கடைசியில் ஒன்றுக்கும் உதவாத மூடனாவான். மேலும் விற்பனைக்காகக் கடைகளில் பரப்பப்பட்டு, கண்ணைப் பச ப்பி இழுக்கக்கூடியவைகளான பளிங்குபோன்ற பொருள்களின் மேல் தன் கண்ணைச் செலுத்தினவன் ஆபத்துக்கு உதவக்கூடிய தன் காசை யிழந்து தரித்திரனாவான்.

(இரண்டாவது,) கிழக்கு வாசல், கண்களுக்கருகிலிருக்கும் காதுகளே. அஷ்ட சிறுவரின துர்ஆலோசனைகளும், துன்மார்க்கரின் சிற்றின்பப் பாடல்களும், கெட்ட பேச்சுகளும், கோள் சொல்பவரின் புறங்கூற்றுகளும் ஒருவன் காதில் விழும்பொழுது அஜாக்கிரதையா யிருப்பானாயின் அவன் காதில் நுழைந்த துர் விஷயங்கள் யாவும் தமது பரிவாரத்துடன் அவனுக்குள் வந்து குடி யிருந்து அவனைக் கெட்டுக் காளாக்கும்.

(மூன்றாவது) தெற்கு வாசல், காதுகளுக்குக் கீழிருக்கும் வாயே. இது கொடிய வாசல். "பல்லக்கு ஏறுவதும் வாயாலே, பல் தவிர்வதும் வாயாலே." ஆதலால் வசை, வழக்கு, வாது, கோள் குண்டுணிக் கிடமில்லாமல் வாய்க்குப் பூட்டுப்போட்டு வைத்திருந்து, அவசியமான மட்டுந் திறந்து கடவுளைத் துதித்துத் தியானிக்க வேண்டும்.

யாகாவாராயினும் நாகாக்க—காவாக்காற்
சோகாப்பார் சொல்லிழுக்குப்பட்டு———குறள்.

(நான்காவது,) மேற்குவாசல், அதாவது எல்லாவற்றிற்கும் மேலான பிரதான வாசல், சிரசிலுள்ள மூளையின் மூலமாய்த் திறக்கப்படும் மனக் கதவே. இவ்வாசல் பிரதானமானது, மிக விரிவானது, இதை அடைத்துக் காப்பது வெகு கஷ்டம். இப் பழக்கத்திற்காகவே தபோதனரும் ரிஷிகளும் காடுகளுக் கேகுகின்றனர்.

சரியான வாசற் காப்போனில்லாவிடில், நிமிஷத்திற்கு நிமிஷம் இது திறந்துவிடும். சகலவித ஆசாபாசங்களும் இவ்வழி யாகவே உட்செல்லக் காத்துக்கொண்டிருக்கின்றன. ஆனால் சர்வ லோக ரக்ஷகனாகிய ஜெகதீசன் இக்கதவைச் சரியானபடி அடைத்து வைத்து மனுஷனை ரக்ஷிக்கும்படிக்கு, நீதி நூற் சாஸ்திரங்களனைத்தையுங் கலலாமலே யறியும் திறமுடைய தீரனான மனச் சாக்ஷி யென்னும் மகானுபாவனை மனக் கதவைத் திறக்கும் காவலாளியாகச் சிருஷ்டித்தார். அவனொருவனே அக்கதவின் சூக்ஷமத்தை யறிந்து தாழ்ப்பாள் போட்டு வைக்க வல்லவன். அவன்

வலிமையையுந் தடுத்து ஏதாவதொரு விஷயம் உள்ளே புகத் துணியுமாயின், அது பலதடவை உறுத்தியுறுத்தி நமக்குத் தெரிவிக்கும். அதன் அறிவிப்பை நாம் அலக்ஷியஞ் செய்தால் அது தளர்ந்து கடைசியில் கண்டவர்களுக்கெல்லாம் வழி விட்டுக் கண்ணயர்ந்துபோம்.

ஆதலால், நாம் ஜாக்கிரதையுடன் நான்கு புறக்கதவுகளையும் மூடி வைத்துப் பாதுகாப்பது நமது பெருங் கடமை.

1. The fish dwell in the depths of the water, and the eagles in the sides of heaven; the one, though high may be reached with the arrow, and the other, though deep, with the hook; but the heart of man at a foot's distance cannot be known. —*Burmese.*

2. A word rashly spoken cannot be brought back by a chariot and four horses. —*Chinese Proverb.*

3. Weigh all your words lest they be swords,
Those who cry the loudest, have generally the least to sell

4. Talking is one of the fine arts—the noblest, the most important, the most difficult—and its fluent harmonies may be spoiled by the intrusion of a single harsh note. Talking is like playing on the harp; there is as much in staying the hand on the strings to stop their vibrations as in twanging them to bring out their music.
—*O. W. Holmes.*

5. If your foot slip, you may recover your balance, but if your tongue slip, you cannot recall your words. —*Telugu.*

6. A word spoken in quietness, and by way of appeal to the free Judgment and reason of men, can rarely fail to be in season.

7. Speak but little, and that little only when thy own purposes require it. Heaven has given thee two ears but only one tongue, which means: listen to two things, but be not the first to propose one.
—*Hafiz.*

8. Hast thou not perfect excellence, it's best
To keep thy tongue in silence, for it's this
Which shames a man; as lightness does attest
The nut is empty, nor of value is. —*Sa'di.*

9. Words of blame from those who are hostile to a great man cannot injure him. The moon is not hurt when barketh at by a dog.
—*Arabic.*

10. Understand a man by his deeds and words; the impressions of others lead to false judgment. —*Talmud.*

11. In my opinion the want of occupation is no less the plague of society than of solitude. Nothing is so apt to narrow the mind; nothing produces more trifling, silly stories, mischief making, lies, than being eternally shut up in a room with one another, reduced, as the only alternative, to be constantly twaddling. When every-body is occupied,

we only speak when we have something to say; but when we are doing nothing, we are compelled to be always talking; and of all torments, that is the most annoying and the most dangerous. —*Rousseau*

12. Words are mighty, words are living:
Serpents with their venomous strings,
Or bright angles crowding round us
With heaven's light upon their wings:
Every word has its own spirit,
True or false that never dies;
Every word man's lips have uttered
Echoes in God's skies. *A. A. Procter.*

13. Govern the lips
As they were palace doors, the King within;
Tranquil and fair and courteous be all words
Which from that presence win. —*Edwin Arnold.*

14. Boys flying kites haul in their white winged birds;
You can't do that way when your'e flying Words.
"Careful with fire" is good advice, we know;
"Careful with words" is ten times doubly so.
Thoughts unexpressed may sometimes fall back dead.
But God Himself can't kill them when they're said,
—*Will Carleton.*

15. Oh, many a shaft, at random sent,
Finds mark the archer little meant!
And many a word at random spoken,
May soothe or wound a heart that's broken. —*Sir W. Scott.*

16. Kind words are the golden rivets which help to hold together the splintered vase of human happiness.

17. Put a seal upon your lips and forget what you have done. After you have been kind, after love has stolen forth into the world and done its beautiful work, go back into the shade again and say nothing about it. Love hides even from itself. —*H. Drummond.*

18. Good words will do more than hard speeches; as the sunbeams, without any noise, made the traveller cast off his cloak, which all the blustering of the wind could not do, but made him bind it the tighter.

19. What is good in men we should take all occasions to speak of, and often repeat it. What is evil we should make mention of but sparingly, and no more than is needful. —*Matthew Henry.*

20. Think all you speak, but speak not all you think.

21. Not so great is the torment of him who is wounded in body as of him who is wounded in spirit.

22. One small cloud can hide the sunlight;
Loose one string, the pearls are scattered;
Think one thought, a soul may perish;
Say *one word*, a heart may break. —*A. A. Procter.*

23. If you your lips would guard from slips ;
   Five things observe with care:
Of whom you speak, to whom you speak,
And how, and when, and where.

Oh ! heart, be soft and true.
   While thou dost beat ;
Oh ! hands, be swift to do ;
   Oh ! lips, be sweet.

—*M. F. Butts.*

## இனிமையின் ஆனந்தம்.

இப்பிரபஞ்சத்தில் தோன்றிய ஜீவராசிகளனைத்தும் ஆனந்தத்தை நாடி நிற்கும் இயல்புடையன. மலர்ந்த முகமும், குளிர்ந்த பேச்சும், இனிய குரலும், மிருதுவான நடையும், அமர்ந்த குணமும், சாந்தமான நடக்கையும் அன்பே சிவமாய் அமர்ந்திருப்பதின் காரணக் குறிகளாம். உடையவனுக்கும் பெறுபவனுக்கும் ஆனந்தந் தருங் குணங்கள் இவைகளே. ஆசார ஒழுக்கத்தில் சிரேஷ்டமானது இன்சொல் முதலிய பிறரை மகிழ்விக்குங் குணங்களாதலின் இதையே ஓர் பாடமாக மேனாட்டவர், விசேஷமாய் அமெரிக்கர் பயிற்றுவிக்கின்றனர்.

பிறர் மனதைக் குளிரச் செய்யும் அன்பு பொருந்திய அருமையான ஆசாரங்களை சிறுபிராயத்திலேயே அறிந்து ஒழுகுவது. "தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்" என்பதற் கிணங்க, உறுதியாய் வேரூன்றி விடுவதால் அவ்வொழுக்கங்களையுடையவனது பிற்காலம் ஆசீர்வாதமாய் முடியும். ஏனெனில் மலர்ந்த முகத்தைக் கண்டு மகிழ்ச்சி யுறாதவர் எவர்?

அன்பு, சாந்தம், உண்மை முதலிய நற்குணங்களால நமது ஒழுக்கங்களை அழகாக்குவதே முறை. அதற்குப் பதிலாய் பிறர்க்குக் கோபமூட்டலும், வெறுப்புத் துன்பம முதலியவற்றைத் தருதலும் தர்ம நீதி தவிர்ப்பதாகும். "மனுஷர் உங்களுக்கு எவைகளைச் செய்ய விரும்புகிறீர்களோ அவைகளை நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள். இதுவே நியாயப் பிரமாணமும் தீர்க்கதரிசனங்களுமாம்," என்றார் இயேசுபகவான்.

**சீரா புராணம்.** (நாட்டுப்படலம்.)

" அருமறை நெறியும் வணக்கமுங் கொடையு
   மன்பு மாதரவு நல்லறிவுந்
தருமமும் பொறையு மிரக்கமுங் குணமும்
   தயவுஞ் சீரொழுக்கமு முடையோர்
பெருகிய செல்வக் குடியொடு கிளையும்
   பெருத்தினி திருந்து வாழ்வனபோன்
மருமலர்ப் பழனக் காவெலா நெருங்கி
   வளர்ந்தது நெட்டிலை காற்றே."

இதில் நல்லோர் குடியுஞ் செல்வமும் செழித்துப் பெருகும் என்பதைச் சுட்டிக் காட்டி யிருக்கின்றனர்.

"வாணிகர்க்குத் தூரமில்லை வல்லவர்க்குப் பாரம்எனக்
காணுவ தொன்றில்லைக்; கற்றவர்க்குப்—பேணிஉற்ற
நாடெல்லாம் வேறன்று; நல்வார்த்தை சொல்வோர்க்குக்
கூடுபகை இல்லைஎனக் கூறு."

அகமும் புறமும் குளிர்ந்துண்டாகும் மகிழ்ச்சியோடு சொல்லும் இனிய வார்த்தைகள் துன்பத்திலாழ்ந்தவர்களை இன்புறச் செய்யும் குணமிருப்பதால் இன்சொல் வாசகனுக்குத் துக்கமென்னும் சனியன் தலைகாட்டாது ஒழியவே, அவன் சதா உற்சாகத்துடனிருப்பான். முகமலர்ச்சி யுள்ளவனிடம் லக்ஷ்மி கடாக்ஷம் தங்கி யிருப்பதால் அவனுக்குஎப்பொழுதும் பெருமையும் மதிப்புமுண்டாகும். அதுவே வறுமையைப் போக்கும். நல்வினைத்தைச் சேர்க்கும். வன்சொற்களையும் துர்வார்த்தைகளையும் தடுக்கும் அகமகிழ்ச்சியுடன் கூடிய முகமலர்ச்சியே யாவற்றிற்கும் முதன்மையான விளைநிலம். உலகத்திலுள்ளோர்யாவரும் அதைக்கண்டு மகிழ்வார்கள்.

நீதிவெண்பா.

"மென்மதுர வாக்கால் விரும்புஞ் சகங்கடின
வன்மொழியி னாலிகழு மண்ணுலகம்—நன்மொழியை
யோது குயிலேதங் குதவியது கர்த்தபந்தா
னேதபராதஞ் செய்த தின்று."

நன்னெறி.

"இன்சொலா லன்றி இருநீர் வியனுலகம்
வன்சொலா லென்று மகிழாதே—பொன்செய்
அதிர்வளையாய் பொங்கா தழற்கதிரால் தண்ணென்
கதிர்வரலாற் பொங்குங் கடல்."

ஔவை பிராட்டியும், "ஞயம்பட வுரை" "இழிவரினுந் தாழ்வுரை" "கடிவது மற" "அனிக்கச் சொல்லேல்" "வெட்டெனப் பேசேல்" என்னும் அருமையான நன்மொழிகளை உரைத்தனள். அவ்வரிய வாக்கியங்களை நமது சிறுபிராயத்திலேயே கற்றிருக்க, அவற்றின் அரும்பெரும் பொருளையும் அறிந்துள்ள நாமகற்றதனை நிலைநிறுத்தாது அறிவொளி மழுங்கி யழிவது அறியாமையன்றோ! செல்வம், கல்வி, உத்தியோகம் வாய்ந்த சிலர் ஆணவமென்னும் அகங்காரப் பேய்பிடித்து பிறர்க்குத் துன்பம் எய்துவிக்கும் வன்சொல் உபயோகிக்கின்றனர். திருவள்ளுவ நாயனாரும்,

" சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையும்
இம்மையு மின்பந் தரும்."

" அகத்தா னமர்ந்தினிது நோக்கி முகத்தானு
மின்சொ லினிதே யறம்."

என்று சொல்லி இன்சொற் கூறுவதே முதலாவது அறம் என்றும் நவின்றுள்ளார்.

" இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று."

" துன்புறூ உந்துவ்வாமை யில்லாரும் யார்மாட்டும்
இன்புறா உமின்சொல் வாக்கு."

" பணிவுடைய னின்சொலனாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற."

" அல்லவை தேயவறம் பெருகு நல்லவை
நாடியினிய சொலின்"

என்றும் கூறியிருக்கின்றனர்.

நாலடியாரிலும், கரும்பைக் கணுக்கணுவாக வெட்டி சிதைத்தாலும் அதன் ரசம் இனிமையாகவே யிருக்கும். அதுபோல கீழோர் தம்மை இகழ்ந்து வைதபோதிலும் நல்லகுடியிற் பிறந்த மேன்மக்கள் சிதைவான வசனங்களைக் கூறார் என்ற கருத்தை யமைத்து,

" கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி
இடித்து நீர்கொள்ளினும் இன்சுவைத்தே ஆகும்
வடுப்படவை திறந்தக் கண்ணும்—குடிப்பிறந்தார்
கூறார்தம் வாயிற் சிதைந்து."

என்று கூறியுள்ளார்.

நீதிநெறிவிளக்கம்

" ஈகை யரிதெனினு மின்சொலினு நல்கூர்தல்
ஓகோ கொடிது கொடிதம்மா—நாகொன்று
தீவினைக் கம்மியனுல் வாய்ப்பூட் டிடப்படின்மற்
றுவா விவரென் செய்வார்."

நாம் தருமம் செய்வதற்கு ஏலாவிடினும் இனிமையான சொல்லாவது சொல்லாமலிருப்பது ஓகோ கொடிது! கொடிது!! பாவமாகிய கம்மியன் நாவையறுத்து வாயையும் பூட்டிப்போட்டுவிட்டான் போலும்! ஐயோ! பாவமென்று பெரியோர் பரிகசிப்பதற்கிட முண்டாகும். ஆதலால் நாம் எப்பொழுதும் புன்சிரிப்புடன் உல்லாசமான மலர்களாய் உற்சாகத்துடன் தத்தம் வேலையைச்செய்து முடிக்கப் பிரயாசப்படவேண்டும். கடந்துபோனதற்காகத் துக்கப்படுவதும், வருங் காலத்தைப் பற்றிய கவலையும், பாடுபட்ட

தற்குத் தக்க பலன் கிடைக்குமோ வென்ற சந்தேகமும், நமது மனதுள் புகவிடுவோமாயின் நமது உற்சாகம் நாசமாகி முகமலர்ச்சியைக் கெடுத்துவிடும். எதுபோலெனில், நீந்தத் தெரியாத ஜனங்கள் தவறிக் கிணற்றில் விழுந்துவிட்டால், மனநிறைவுடனிருப்பவர்கள் தம்மைக் காப்பாற்றிக் கொள்ளலாம். ஏனெனில் ஒரு மனிதனின் சரீரம் அதேயளவு தண்ணீரைவிடக் கம்மியான நிறையுடையதா யிருப்பதால் மனநிம்மதியுட னிருப்பவன் தண்ணீரின்மேல் மிதந்துகொண்டிருப்பதே இயற்கைப் பிரமாணம். ஆனால் சாதாரண ஜனங்களோ தண்ணீரில் விழுந்தவுடனே மனநிறையை யிழந்து, மிதந்து கொண்டிருக்க முயற்சி செய்து, அதற்குப் பதிலாக தண்ணீரில் முழுகிப் போகிறார்கள். அப்படியே வரப் போகிறதைப் பற்றிக் கவலையடைந்து அடிக்கடி ஜனங்கள் இப்போது செய்யுங் காரியங்களில் தவறிப்போகிறார்கள்.

எதிர்காலத்தைப் பற்றிய கவலையை நீக்கி உற்சாகத்துடன் உழைப்பவர்களுக்கு ஜெயமும் ஆனந்தமும் வளர்த்த நாய்போல் பின் தொடர்ந்து வரும். ஒருவன் தன் நிழலைப் பிடிக்க முயன்று ஓடினால் அவன் ஜீவகாலம் முடியும்வரையில் ஓடினாலும் ஒருநாளும் அதைப் பிடிக்க முடியாது. ஆனால் சூரியனைப் பார்த்து ஓடுகிறவனுடைய நிழல் அவன்பின்னாலேயே ஓடிவரும் அதுபோல் மலர்ந்த முகமும் மகிழ்ச்சியும் உற்சாகமும் நம்மில் குடிகொண்டிருக்குமாயின், நமக்கு வேண்டியவைகளெல்லாம் தாமாகவே நமது பாதங்களில் வந்துவிழும். அவைற்றின் முடிவு ஆனந்தம்.

### நீதிநெறி விளக்கம்.

"கண்ணோக் கரும்பா நகைமுகமே நாண்மலரா
இன்மொழியின் வாய்மையே தீங்காயா—வண்மை
பலமா நலங்கனிந்த பண்புடையா ரன்றே
சலியாத கற்ப தரு."

கண்ணினிருந் துண்டாகும் கிருபாநோக்கமே அரும்பாகவும், புன்சிரிப்புடன் கூடிய வதனமே அன்று பூத்த மலராகவும், சத்யமாகிய இனியசொல்லே மதுரமுள்ள காயாகவும், கொடுத்தலே கனியாகவும் கொண்டு நன்மைகளைப் பயக்கின்ற குணமுடையவர்களன்றோ சலிக்காமல் கொடுக்கின்ற கற்பக விருட்சத்துக்கு ஒப்பாவார்.

### திருமந்திரம்.

"யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை,
யாவர்க்குமாம் பசுவிற்கொரு வாயுறை,
யாவர்க்குமாம் உண்ணும்போ தொருகைப்பிடி,
யாவர்க்குமாம் பிறர்க்கின் னுரைதானே."

## Cheerfulness.

1. We cannot of course, all be handsome,
And it's hard for us all to be good.
We are sure, now and then, to be lonely,
And we don't always do as we should.
To be patient is not always easy,
To be cheerful is much harder still,
But at least we can always be pleasant,
If we make up our minds that we will.

And it pays every time to be kindly,
Although you feel worried and blue :
If you smile at the world and look cheerful,
The world will soon smile back at you.
So try to brace up aud look pleasant,
No matter how long you are down.
Good humour is always contagious ;
You banish your friends when you frown.

— *The Sunday School Herald.*

2. What, indeed does the word "cheerfulness" imply! It means a contented spirit; it means a pure heart; it means a kind and loving disposition; it means humility and charity; it means a generous appreciation of others and a modest opinion of self.

*W. M. Thackeray.*

3. Keep your face with sunshine lit,
Laugh a little bit;
Gloomy shadows oft will flit
If you have the wit and grit
Just to laugh a little bit. —*J. B. Cook.*

4. The men whom I have seen succeed best in life have always been cheerful and hopeful men, who went about their business with a smile on their faces, and took the changes and chances of this life like men facing rough and smooth as it came, and so found the truth of the old proverb, "Good Times, and Bad Times and All Times pass over." —*C. Kingsley.*

5. A cheerful friend is like a sunny day, which sheds its brightness on all around and most of us can, if we choose make of this world either a palace or a prison. —*Lord Avebury.*

6. Wondrous is the strength of cheerfulness, altogether past calculations its powers of endurance. Efforts, to be permanently useful, must be uniformly joyous—a spirit of all sunshine—graceful from all gladness—beautiful because bright. —*T. Carlyle.*

7. A cheerful mind is not only disposed to be affable and obliging, but raises the same good-humour in those who come within its influence. A man finds himself pleased, he does not know why, with the cheerfulness of his companion. It is like a sudden

sunshine that awakens delight in the mind, without her attending to it. The heart rejoices of its own accord and naturally flows out into friendship and benevolence towards the person who has so kindly an effect upon it. —*J. Addison.*

8. Politeness appears to have been invented to enable people who would naturally fall out, to live together in peace.

9. Go cleanse thy heart, and fill
Thy soul with love and goodness.
This is thy task on earth ;
This is thy eager manhood's proudest goal,
To cast all meanness and world-worship forth,
And thus exalt thy soul. —*R. Nicoll*

10. A little smiling through the tears—
That's sunshine ;
A little faith behind the fears—
That's sunshine ;
A little folding of the hand,
A little yielding of demand,
A little grace to understand—
That's sunshine.

A little gold amidst the grey—
That's sunshine ;
A little brightness on the way—
That's sunshine ;
A little spreading of the blue,
A little widening of the view,
A little heaven breaking through—
That's sunshine.

11. Good temper is the philosophy of the heart—a gem in the treasury within, whose rays are reflected on all outward objects—a perpetual sunshine, imparting warmth, light, and life, to all within the sphere of its influence.

12. Cheerfulness is health; the opposite—melancholy—is disease. —*Haliburton.*

13. Consider the bees upon the thyme ; they find there a very bitter juice; yet in sucking it they turn it into honey. —*S. Francis De'Sales.*

14. That man is not himself blessed with a very happy temper who is unable to endure the cross-grained people with whom the world abounds. In the business of life, copper coins as well as gold pieces are necessary. —*La. Bruyere.*

15. Next to the sunlight of heaven is the cheerful face. Who has not felt its electrifying influence? One glance at this face lifts us out of the mists and shadows into the beautiful bright and warm within. A host of evil passions may lurk around the door, but they never enter and abide there; the cheerful face will put them to shame and flight!

16. How much lies in laughter! It is a cipher-key wherewith we decipher the whole man. Some men wear an everlasting barren simper; in the smile of others lies the cold glitter, as of ice; the fewest are able to laugh what can be called laughing, but only sniff and titter, and snicker, from the throat outward, or at least produce some sniffing husky cachination, as if they were laughing through wool. Of none such come good. —*T. Carlyle.*

17. What signifies wishing and hoping for better times? We may make these times better if we bestir ourselves. —*B. Franklin.*

18. Happiness is reflective like the light of Heaven; and carry countenance bright with smiles, and growing with innocent enjoyment, is a mirror transmitting to others the rays of a supreme and ever shining benevolence. —W. *Irving.*

19. We seldom meet with joy and delight by appointment, but unexpectedly they smile on us their sudden welcome round some old corner of life. —*Miss Palmer.*

20. Worldy joy is like the songs the peasants sing, full of melodies and sweet airs. Christian joy has its sweet airs, too; but they are augmented to harmonies, so that he who has it goes to heaven not to the voice of a single flute, but to that of a whole band of instruments, discoursing wondrous music. —*H. W. Beecher.*

21. Without joy we are a member out of joint. We can do nothing well without joy, and a good conscience, which is the ground of joy. —*Sibbes.*

22. The very society of joy redoubles it; so that whilst it lights upon my friend it rebounds upon me, and the brighter his candle burns, the more easily will it light mine. —*R. Southey*

23. Little joys refresh us constantly, like housebread, and never bring disgust, and great ones, like sugarbread, briefly often bring satiety. —*J. P. Richter.*

24. Cheerfulness is a small virtue, it is true, but it sheds such a brightness around us in this life that neither dark clouds nor rain can dispel its happy influence. —*E. V. B. Alexander.*

25. No man need hunt for his mission. His mission comes to him. It is not above, it is not below, it is not far. The neglects of ours in daily, home and homely duties, these, the mission so rarely undertaken, constitute our simple human duty—not to make happy human faces now and then among the children of misery but to keep happy human faces about us all the time. —J. *F. W. Ware.*

26. If you want to be cheerful, jes' set your mind on it an' do it. Can't none of us help what traits we start out in life with, but we kin help what we end up with. When things first got to go in wrong with me, I says, 'Oh, Lord, whatever comes keep me from gettin' sour.".........Since then I've made it a practice to put all my worries down in the bottom of my heart, then set on the lid, an' smile. —*Mrs.* Wiggs.

27. It is a part of my religion to look well after the cheerfulness of life, and let the dismals shift for themselves. —*Louisa M. Alcott.*

28. Did you tackle that trouble that came to you
With a resolute heart and cheerful ?
Or hide your face from the light of day
With a craven soul and fearful ?

Oh ! a trouble's a ton, or a trouble's an ounce,
Or a trouble is what you make it !
And it isn't the fact that your'e hurt that counts,
But only—how did you take it ?

You are beaten to earth ! well, what of that ?
Come up with a smiling face,
It's nothing against you to fall down flat,
But to lie there—that is disgrace.

The harder you're thrown, the higher you'll bounce ;
Be proud of your blackened eye,
It isn't the fact that you're ' beaten ' that counts,
It's how did you fight, and why ?

And though you be done to the death—what then ?
If you battled the best you could ;
If you played your part in the world of men,
Why, the critic will call it good —*Edmund C. Vance.*

29. There are nettles everywhere,
But smooth green grasses are more common still ;
The blue of heaven is larger than the cloud.
—*E. B. Browning.*

30. The habit of viewing things cheerfully, and of thinking about life hopefully, may be made to grow up in us like any other habit. —*S. Smiles.*

31. A habit of cheerfulness, enabling one to transmute apparent misfortunes into real blessings, is a fortune to a young man or woman just crossing the threshold of active life. There is nothing but ill-fortune in a habit of grumbling, which ' requires no talent, no self-denial, no brains, no character. —*O. S. Marden.*

32. From the crushed flowers of gladness on the road of life a sweet perfume is wafted over to the present hour ; as marching armies often send out from heaths the fragrance of trampled plants.
—*Richter.*

33. Let us try to be good humoured for a single day ; if we let the sunlight into our souls, it will generate in our hearts every good motive, and we shall find life strengthened and ourselves armed to fight, on the coming morrow, the battle of every trick of fate. —*James Ellis.*

34. The most manifest sign of wisdom is continual cheerfulness such a state and condition, like things in the regions above the moon is always clear and serene. —*Montague.*

35. A cheerful face is nearly as good for an invalid as healthy weather. —*B. Franklin.*

36. A cheerful temper joined with innocence will make beauty attractive, knowledge delightful, and wit good-natured. It will lighten sickness, poverty, and affliction; convert ignorance into an amiable simplicity; and render deformity itself agreeable.

—*J. Addison.*

## தைரியம்.

ஒருவனது நிழலைப்போலவே, பெருமையும் தன்னைத் தேடிச் செல்பவன் கையில் எட்டாமல் ஓடுகிறது. ஆனால் தன்னைக்கவனியாது காரியமே கண்ணாய்ச் செல்பவனைப் பின்பற்றி வெருட்டுகிறது. பொதுநன்மைக்காகவும், தேச க்ஷேமத்துக்காகவும், தன் பிராணனையும் பரித்தியாகம் செய்யப் பின்வாங்காமல், துணிகரச் செய்கைகள் செய்பவனே கீர்த்திமானாவான்.

ஒட்டகமானது தனது பாட்டையும் பசி தாகத்தையும் சகித்து பாலைவனாந்தரங்களில் சோர்வின்றிச் செல்வதுபோல், தைரியசாலி தனது கஷ்ட நஷ்டங்கள், துரதிஷ்டம், தரித்திரம், நோய் முதலியவற்றை மனவுறுதியோடு ஏற்று தைரியத்தையும் பொறுமையையும் கைபாண்டு வருகிறான்.

## நீதிசாரம்.

"வைத்திடுந் தனத்தாற் சேதம் வளர்ந்திடு முயிர்க்குச் சேதம்
உற்றிடும் வியா கூலங்கள் யாவர்க்கு முளதே யென்று
புத்திமான் றனக்குத் தானே மனதிலே தேறிக் கொண்டு
சுத்தனாய் நகைத்தா னிற் றயரது தோற்கு மன்றே."

கடலில் நிற்கும் கற்பாறைபோல் உறுதியாய் நிற்பவனை உலககல்லோலம்—அலை—அசைப்பதில்லை. குன்றின்மேல் தோன்றும் கோபுரம்போல் அபாயகாலத்தில் அசைடாமல் நிற்பவனே தைரியசாலி. அதிர்ஷ்டத்தின் அம்புகள் அவன் காலடியில் விழும். காலமென்னும் ஆக்ஞா சக்கரம் நம்மையெல்லாம் ஆண்டு வருகிறதென்பதை நாம் அறிவோம். விசனப்படுகிறவர்களுக்கு அவ்விசனத்தை ஒழித்து வைப்பதும், சந்தோஷப்படுகிறவர்களை நெடுநாள் அச்சந்தோஷத்திலேயே இருக்கவிடாமற் செய்வதும் காலத்தின் கோலாகலமன்றோ? அவைகளை அஞ்சாதுநின்று துஞ்சாதுவென்றவனே ஆண் சிங்கம்.

கார்தனைக் கண்டபஞ்ஞை களித்தெழுந் தாடல் போலும்,
மேற்பெறு மதியைக்கண்டா லாம்பலுமலரல் போலும்,
கார்வுறு வசந்தகாலந் தழைத்திடு மடவிபோலுஞ்,
சீர்பெரு குலத்தில்வாழுஞ் செல்வர்க்குத் தைரியஞ்சேரும்,

இ-ள் மேகத்தைக்கண்ட மயில்கள் கூத்தாடுதல் போலும், சந்திரனைக்கண்ட ஆம்பல் மலருகிறதுபோலும், வசந்தகாலத்தில் விருட்சங்கள் தழைக்கிறது போலும், நல்ல குலத்திற்பிறந்த பிள்ளைக்கு தைரியம்வந்து சேரும், எ-று.

## Courage.

1. A great deal of talent is lost in the world for want of a little courage. Every day sends to their graves a number of obscure men, who have only remained in obscurity because their timidity has prevented them from making a first effort: and who if they could have been induced to begin would in all probability have gone great lengths in the career of fame. The fact is' that to do anything in this world worth doing, we must not stand back shivering and thinking of the cold and danger, but jump in and scramble through as well as we can. It will not do to be perpetually calculating risk and adjusting nice chances, it did very well before the Flood, when a man could consult his friends upon an intended publication for a hundred and fifty years; and then live to see its success afterwards; but at present a man waits, and doubts, and consults his brother and his particualr friends, till one fine day he finds that he is sixty years of age; that he has lost so much time in consulting his first cousins and particular friends, that he has no more time to follow their advice. —*Sydney Smith.*

2. Whether ye be men or women, you will never do anything in the world without courage. It is the greatest quality of the mind, next to honour —*James L. Allen.*

3. As it is said that ferocious animals are disarmed by the eye of man, and will dare no violence if he steadily looks at them, so it is when right looks upon wrong. Resist the devil, and he will flee from you; offer him a bold front, and he runs away. He goes, it may be, uttering threats of rage but yet he goes. So it is that all the great efficient men of the world are made. —*H. Bushnell.*

4. Life should surely consist in seizing the fortunate and fighting through the ill moments—else, why should men have heart and nerve? —*H. Seton Merriman.*

5. One who never turned his back, but marched breast forward,
Never doubted clouds would break,
Never dreamed though right were worsted,
Wrong would triumph;
Held, we fall to rise, are baffled to fight better.
—R. *Browning*

6. True joy is a serene and sober motion, and they are miserably out that take Laughing for rejoicing; the seat of it is within, and there is no cheerfulness like the resolutions of a brave mind. —*Seneca.*

7. **Courage consists not in blindly overlooking danger, but in seeing it, and conquering it.** —*Richter.*

8. Courage, the highest gift, that scorns to bend
To mean devices for a sordid end.
Courage, an independent spark from Heaven's bright throne
By which the soul stands raised, triumphant, high alone.
Great in itself not praises of the crowd.
Above all vice it stoops not to be proud.
Courage, the mighty attribute of powers above,
By which those great in war are great in love.
The spring of all brave acts is seated here,
As falsehoods draw their sordid birth from fear.
—*Farquhar.*

9. Our doubts our traitors, are
And make us lose the good we oft might win,
By fearing to attempt. —*Shakespeare*

10. Fear not! Life still
Leaves human effort scope.
But, since life teems with ill,
Nurse no extravagant hope;
Because thou must not dream, thou need'st not then despair!
—*M. Arnold.*

11. The wise and active conquer difficulties,
By daring to attempt them; sloth and folly
Shiver and shrink at sight of toil and hazard,
And make the impossibility they fear. —*Rowe.*

12. When man was multiplied and spread abroad,
In tribes and clans, and had begun to call
These meadows and that range of hills his own,
The tasted sweets of property begat
Desire of more; and industry in some,
To improve and cultivate their just demesne,
Made others covet what they saw so fair.
Thus war began on earth; these fought for spoil,
And those in self-defence. Savage at first
The onset, and irregular. At length
One eminent above the rest, for strength,
For stratagem, or courage, or for all,
Was chosen leader; him they served in war,
And him in peace, for sake of warlike deeds
Reverénced no less. —*Cowper.*

## பரித்தியாகம். (Self-Sacrifce.)

அகிலாண்ட கோடி சராசரங்களனைத்தையும் படைத்துக் காத்து இரக்ஷித்துவரும் பரமேஸ்வரன் தமது சிருஷ்டித்தொழிலானது பரிபூரண பக்குவமடையும் பொருட்டு, தாம் கொண்ட கருத்துக்கிணங்க, சிருஷ்டிப் பொருள்கள் ஒவ்வொன்றும் தத்தம் தொழிலை நிறைவேற்றி அதன் மூலமாய் தமது நோக்கம் நிறைவேற வேண்டுமெனத் திருச் சித்தங் கொண்டார். அவர் நம்மை இவ்வுலகத்திற் கனுப்பியதும், தம் நோக்கம் நிறைவேறும் பொருட்டே. ஆதலால் நாம் சுயப்பிரயோசனத்தை மட்டும் நாடி, இவ்வொன்றை விலைவாகக் கழிப்பது தெய்வத் திருச்சித்தத்திற் கிசைந்ததன்று. சுயநலப் பிரியமானது நாய், கோழி, பன்றி முதலிய தாழ்ந்த ஜாதி ஜந்துக்களிடத்திலும், விபரமறியாத சிறுபிள்ளைகளிடத்திலும், தமது கிரியைகளின் பலனின்னதென்றறியாத அற்ப மனிதரிடத்திலும் காணப்படும் ஓர் துர்ச்சுபாவம்.

பல நாய்களுள்ள இடத்தில் சிறிது போஜனம் வைக்கின், அவைகள் ஒன்றைப்பார்த்து ஒன்று உறுமி, குலைத்துக் கடித்துத் துரத்துவதைக் கவனித்திருக்கின்றோம். சிறுபிள்ளைகளுமப்படியே எல்லாம் தமக்கே வேண்டுமென அவாவுறுவர். "அன்பிலார் எல்லாம் தமக்குரியர்; அன்புடையாரோ தமது எலும்பையும் பிறர்க்குத் தத்தம் செய்துவிடுவர்" என்று திருவள்ளுவநாயனார் உரைத்த வாக்கின்படியே அற்ப மனிதர் தமக்குத் தமக்கெனவே எல்லாவற்றையும் சேர்த்துக்கொள்ள முயற்சிப்பார்.

சுயநலப் பிரியமே சிசுக்களின் முழுச் சுபாவமாயிருந்தபோதிலும், நாம் வாலிபானவுடன் பகுத்தறிவு ஜெனிக்க, நமக்குக் கிடைத்ததை நம் குடும்பத்திலுள்ள மற்றவர்களுக்குப் பகிர்ந்து கொடுத்து உண்ணப்பழகுகின்றோம். சகோதர சகோதரிகள், மனைவி மக்கள், பெற்றோர் முதலிய தம சொந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களின் க்ஷேமத்தைக்கருதி அன்பு மேலிட்டால் சாந்தம், அடக்கம், தூய்மையான நல்லெண்ணம், பொறுமை இரக்கம் முதலிய சற்குணங்களைக் கையாடி, சுயப்பிரயோஜனத்தை மறந்து மற்றவர்களின் நன்மையின் பொருட்டு பரித்தியாக முறையைப் பாவிக்கப் பழகுகிறோம். இன்னும் தேவதா பக்தியும் தேசாபிமானமும் நம் மனதில் குடிகொள்ளவே சகல ஜீவர்களிடத்தும் அன்பைச் செலுத்தி சுயநலத்தைத் துறந்து, சம்மையே பலியிட்டிந்தத் தரணியைக் காக்கவந்த இயேசு பகவானின் முன் மாதிரியைக் கைப்பற்றி மற்றவர்களுக்காக ஜீவிக்கப் பழகுகிறோம். இதைப் பற்றி பால் மகா முனிவர் சொல்லியிருக்கிறதாவது:—

"அவனவன் தனக்கானவைகளையல்ல, பிறர்க்கானவைகளையும் நோக்குவானாக. கிறிஸ்து இயேசுவிலிருந்த சிந்தையே உங்களிலும் இருக்கக்கடவது; அவர் தேவனுடைய ரூபமாயிருந்தும், தேவனுக்குச் சமமாயிருப்பதைக் கொள்ளையாடின பொருளாக எண்ணாமல், தம்மைத் தாமே வெறுமையாக்கி, அடிமையின் ரூபமெடுத்து, மனுஷர் சாயலானார். அவர் மனுஷரூபமாய்க் காணப்பட்டு, மரணபரியந்தம் அதாவது சிலுவையின் மரணபரியந்தமும் கீழ்ப்படிந்தவராகி, தம்மைத் தாமே தாழ்த்தினார். ஆதலால் தேவன் எல்லாவற்றிற்கும் மேலாக அவரை உயர்த்தி, இயேசுவின் நாமத்தில் வானோர், பூதலத்தோர் பூமியின் கீழானோருடைய முழங்கால் யாவும் முடங்கும்படிக்கும், பிதாவாகிய தேவனுக்கு மகிமையாக இயேசுகிறிஸ்து கர்த்தரென்று நாவுகள் யாவும் அறிக்கை பண்ணும்படிக்கும், எல்லா நாமத்திற்கும் மேலான நாமத்தை அவருக்குத் தந்தருளினார். ஆதலால், எனக்குப் பிரியமானவர்களே, நீங்கள் எப்பொழுதும் கீழ்ப்படிகிறபடியே, நான் உங்களுக்குச் சமீபமாயிருக்கும்பொழுது மாத்திரமல்ல, நான் தூரமாயிருக்கிற இப்பொழுதும், அதிக பயத்தோடும் நடுக்கத்தோடும் உங்கள் இரட்சிப்பு நிறைவேறப் பிரயாசப்படுங்கள். எல்லாவற்றையும் முறுமுறுப்பில்லாமலும் தர்க்கிப்பில்லாமலும் செய்யுங்கள்."

பிலி. 2: 4—12; 16.

நாம் வெண்மையான வஸ்துக்களை விரும்புகிறோம். ஆனால் கறுப்பு நிறத்தை உபயோகமற்றதென்று வெறுக்கிறோம். இதற்குக் காரணம் யாதெனில்:—சூரிய கிரணத்திலுள்ள ஏழு வர்ணங்களும் பூமியின் மேலுள்ள பல வஸ்துக்களின் மேல் விழுகையில் அவற்றுள் சில இவ்வர்ணங்களில் பெரும்பான்மையைக் கிரகித்துக்கொண்டு ஒன்றை மட்டும் திருப்பி எறிந்துவிடுகின்றன. எந்தெந்த வஸ்து எந்தெந்த வர்ணத்தைக் கிரகிக்காமல் வேண்டாமென்று திருப்பி எறிந்துவிடுகின்றதோ அவ்வஸ்து அவ்வர்ணமுடையதாகவே நமது கண்களுக்குத் தோன்றும். உதாரணமாக, ரோஜாப் புஷ்பம் சிவப்பாகத் தோன்றுவதற்குக் காரணம் சூரிய கிரணத்திலுள்ள எல்லா வர்ணங்களையும் கிரகித்துக்கொண்டு, சிவப்பு வர்ணத்தை மட்டும் வேண்டாமென்று தள்ளிவிடுகிறது. ஆகவே, அதைச் சிவப்புநிறமென்கிறோம். ஆனால் கறுப்பாயுள்ள வஸ்துக்கள் மட்டும் சூரிய கிரணங்களிலுள்ள எல்லா வர்ணங்களையும் கிரகித்துக்கொண்டு தமக்கு வேண்டாமென்று ஒன்றையும் தள்ளிவிடுவதில்லை. தன்னைய மறுப்பு அவைகளிடத்தில் கிடைக்கவே கிடையாது. அவைகள் தாம் பெற்றுக்கொள்வதினின்று கடுகளவேனும் திருப்பிக் கொடுப்பதில்லை. ஆகையால் அவைகள் இருள் அடைந்ததாயும் கறுப்பாயுமிருக்கின்றன.

வெள்ளை வஸ்துக்களின் உன்னதமான குணத்தைக் கவனிப்போமாயின் அவைகள் சூரிய கிரணங்களில் உள்ள வர்ணங்களில் ஒன்றையும் கிரகித்துக்கொள்வதில்லை. அவைகள் ஒன்றுக்கும் சுதந்தரம் பாராட்டாது யாவற்றையும் பரித்தியாகம் செய்துவிடுகின்றன. அவைகள் ஒன்றையும் உரிமையாக்கிக்கொள்ள முயற்சிக்கிறதில்லை. ஆகையினால் அவைகள் வெள்ளையாயும் பிரகாசமாயுமிருக்கின்றன. ஆகவே, வெள்ளைப்பளிங்கு, வெண்முத்து, வெண்புறா, வெள்ளைப் பனிக்கட்டி முதலானவைகளை தூய்மையான பரிசுத்தத்துக்கு அடையாளங்களாயப் பேசுகின்றோம். "வெள்ளைக்கில்லை கள்ளச்சிந்தை" என்பது பழமொழி. வெள்ளையாயிருப்பதின் மர்மம் பரித்தியாகமே தவிர வேறொன்றுமில்லையென்று விஞ்ஞான சாஸ்திரம் கூறுகின்றது. ஒரு வித்து மரமாக வளர விரும்பின், முதலில் தான் அழிந்தே தீரவேண்டும். முழுப் பரித்தியாகம் செய்வதற்கு முன் நற்பலனை எதிர்பார்க்க இடமில்லை. சுயநலம் பாராட்டாது பிறர்நலங் கருதி உழைப்பதே மகிமையையும் செல்வாக்கையுந் தரும். சரீரத்தைப் பற்றிய கவலையையும், உலோபத்தனமுள்ளதும், அற்பமானதும், சுயநலங் கருதியதுமான ஆசைகளையும் விட்டொழிந்த நிஷ்கேம சம்பூரண மனநிலையையும் சித்த சுவாதீனத்தையும் பெற்றுவிடலாம்,

"நாயாய்ப் பிறந்திடி னல்வேட்டையாடி நலம்புரியும்
தாயார்வயிற்றில் நரராய்ப் பிறந்துபின் சம்பன்னராய்
காயாமரமும் வறளாங் குளமுங் கல்லாவுமென்ன
ஈயாமனிதரை என்படைத்தாய் கச்சி ஏகம்பனே."

என்று பட்டினத்தாரும் சொல்லியிருக்கின்றனர்.

தற்காலத்திலுங்கூட மகாத்மா காந்தியைப்போலொத்த மேதாவிகள் தமது அந்தஸ்து, கல்வி, திரவிய சம்பாதனை முதலிய தமக்குச் சொந்தமான அனைத்தையும் தேசாபிமான மேலீட்டால் பாரத மாதாவுக்கு அர்ப்பணஞ் செய்துவிட்டு, தமது சுதேச சகோதரரின் முன்னேற்றத்தைக் கருதி அரும்பிரயாசையுடன் உழைத்து வருகின்றனரே. அவர்களைப்போல சர்வ பரித்தியாக முறையைக் கையாள்வது யாவர்க்கும் சாத்தியமன்றெனினும், உயர்தரக் கல்வி கற்ற பாரதமாதாவின் புத்திரர் பலர் தமது சுயநல சொகுசைப் பரித்தியாகம் பண்ணிவிட்டு சொற்ப ஊதியத்திற்குப் பல வித்யாசாலைகளிலும் போதனாசிரியராக அமைந்து அறிவைப் பரவச் செய்வதற்காக உழைத்து வருகின்றனர்.

இன்னும், இரங்கூன் வாசி ஆனரபில் ஜமால் என்னும் மகான் திரள் திரளாய்ப் பணத்தைச் சம்பாதித்து தர்மவிஷயத்தில் செலவிட்டு வருவதுடன் டில்லியில் ஸ்தாபமாகியிருக்கும் ஆயுர்வேதிய யூனானி வைத்திய வித்யாசாலைக்கு அரை லக்ஷம் ரூபாய் உதார கெம்பீரத்துடன் பரிசளித்தனர்.

இன்னும் இரங்கோனில் திரவிய சம்பன்னராக வாழ்ந்துவரும் ஸ்ரீமான் ராமநாத ரெட்டியாரவர்கள் தமது அருமைப் பிதா சிதம்பர ரெட்டியாரவர்களின் ஞாபகார்த்த சின்னமாக வெகு பணஞ் செலவிட்டு சிதம்பரம் ரெட்டியார் ஹைஸ்கூல் என்னும் கலாசாலையைக் கட்டி ஆண் பெண் இருதிறத்தார்க்கும் மனமகிழ்ச்சியுடன் வித்யாதானம் செய்து வருகின்றனர்.

சில மாதங்களுக்குமுன் நான் தென்னிந்தியாவில் பிரயாணஞ் செய்தபொழுது, கடம்பூர் வித்யாசாலையின் வருடோற்சவம் வெகு விமரிசையுடன் நடந்தேறியது. அச்சமயம் சில பிராமணோத்தமர்கள் வித்யாசாலைக்காகப் பணவுதவி செய்ய முன் வந்தனர். அப்பொழுது அதின் ஸ்தாபக கர்த்தாவாகிய ஸ்ரீமான் மகாலிங்க நாடார் சொன்ன உதார மொழியாவது:—என் ஜீவனுள்ள பரியந்தம் பிறர் உதவியை எதிர் நோக்காமலே காரியாதிகளை நடத்திவர வேண்டுமென்பது என் விருப்பம். கொடுக்கிறவன் கைம்மேல், வாங்குகிறவன் கை கீழ் இதுவரை மேலஸ்தானத்திலிருந்து கொடுத்த எனது கரங்களை மற்றவர் கரங்களுக்குக் கீழாக்கி எதையும் பெற்றுக்கொள்ள எனக்குச் சம்மதமில்லை. இதுவரை நான் கொடுத்திருப்பேனேயன்றி வாங்கியறியேன். எனக்குக் கடவுள் தந்தது இரண்டு புத்திரர். இந்த வித்யாசாலை எனது மூன்றாம் புத்திரன். என் சம்பாத்தியம் முழுவதிலும் மூன்றிலொரு பாகத்தை இந்த வித்யாசாலையின் அபிவிர்த்திக்காக வைப்பேன், என்றார்.

இரங்கூன் சோலிய முஸ்லீம் சங்கத்தின் தலைவராகிய விஜயன் அப்துல்ரஹிமான் அவர்கள் தமது சொந்த ஸ்தலமாகிய மதுரைக் கடுத்த இளையாங்குடியில் தர்ம வைத்யசாலை ஒன்று வைத்து நடத்தி வருவதுடன், சிறுவரின் கல்வி அபிவிர்த்தியின் பொருட்டு ஏராளமான தொகை செலவிட்டு வருகிறார்.

இவ்வித பரோபகார சிந்தை மிகுந்த புண்யவான்கள் பலர் வசிக்கும் இந்தியா தேசம் கட்டாயம் முன்னேற்றமடையும் என்றெண்ணுவதற் கிடமுண்டு.

## Self-Sacrifice.

1. The law of existence is work—for God, for brethren, for self not for one alone, but for all. Transgress that law, evil must ensue: The stagnant life becomes corrupt, and acts as a corrupter of others. It is vicious and noisome: hurtful to the community, in that it defrauds it of its due from one of its members, and sets up a plague spot of infection which becomes a fertile centre of mischief.

—*Wm. Stainton Moses.*

2. Our fathers to their graves have gone:
Their strife is past-their triumph won;
But sterner trials await the race
Which rises in their honoured place,
A moral warfare with the crime
And folly of an evil time.

So let it be. In God's own might
We gird us for the coming fight.
And strong in Him whose cause is ours,
In conflict with unholy powers,
We grasp the weapons He has given:
The Light, the Truth, the Love of Heaven,

—*J. G. Whittier.*

3. Where sons of God yield up their breath:
There is no gain except by loss:
There is no life except through deat ,
Nor glory but in bearing shame,
Nor justice but in taking blame:
And that Eternal Passion saith
"Be emptied of glory and right and name."

—*W. C. Smith.*

4. That hard road of self-denial, so uncongenial to us all in itself, has proved to every one who has taken his way honestly along it, in very truth the way of light. —*E. Lyall.*

5. Self-sacrifice in whatever cause, in whatever form, is as the struggle of the soul to unfold its wings.

6. Every man and woman trying to be honest, pure and helpful in this world finds that the very highest work set before them is self-sacrifice: very few of us have the chance of heroic self-devotion, but every day brings the petty, wearing sacrifice which weighs full weight in God's scales. —S. *Osgood.*

7. Where there is most of God, there is least of self.

8. Confidence cannot dwell where selfishness is porter at the gate.

## தேசாபிமானம். (Patriotism.)

மானிட ஜென்மம் எடுத்த ஒவ்வொருவனுக்கும் அபிமானம் அவசியமிருக்கவேண்டும். அபிமானம் இல்லாதவனைப் பேமானி என்பார்கள். தான்பிறந்த குடும்பம், குலம், கோத்திரம், தேசம், மதம் முதலியவைகளைப் பற்றி அபிமானங்கொள்வதும், மேன்மை பாராட்டுவதும், சிலாகித்துப் பேசுவதும் யாவர்க்கும் சகஜமே. திரவிய சம்பாதனையின் பொருட்டு அந்நிய தேசத்திற்குச் செல்பவர்களும் அங்கே சில காலமாய்ச் சம்பாதித்து மாடமாளிகை கூடகோபுரங்களில் வாசஞ்செய்து, சம்பிரமமான விருந்துகளையும் இன்சுவை பதார்த்தங்களையும் உண்டு, பொற்சரிகைகள் இலங்கும் தூயநிறப் பூம்பட்டு வஸ்திராபரணக் கோலத்துடன் தகதகவென்று பறத்தத் தோன்றி யாவரிடத்திலும் கண்ணியத்தையும் மதிப்பையும் பெற்று திவ்யமான சௌக்கியங்களுடன் சகல சம்பத்தும் பரிபூரணமாய்ப் பெற்று வாழ்ந்தாலும் மனத்திருப்தியடையாமல் ஜனன பூமியை அபிமானித்தல் மானிட மனோதத்துவ லக்ஷணம். இதற்குக் காரணம் இவ்வுலகில் தோன்றிய சகல வஸ்துக்களும் தத்தம் மூல சம்பன்னத்தைப் பெறுவதற்குத் தம்மை உற்பத்தித்த காரணங்களை நாடி நிற்கிறது சுபாவமுறை. பல், பூண்டு முதலிய தாவரசங்கங்கள் மேலே சூரிய கிரணங்களைத் தேடி, கீழே தம்மைப் பிறப்பித்த நிலத்தில் வேரூன்றிப் பலக்க முயலுகின்றன. ஜலசரங்கள் தாம் உற்பத்தியான ஜலத்தை ஒருபோதும் விட்டகலாது. கோழிக்குஞ்சுகள் பொரித்த மாத்திரத்தில் தன் தாயின் செட்டைகளில் அடைக்கலம் புகுந்து அதன் அடிகளைத் தொடர்ந்து திரிகின்றன. ஆட்டுக்குட்டி தனக்கு உயிர்கொடுத்த தாயாட்டை ஒருபோதும் விட்டகலாமல் ஒரே நிறமுடைய ஆயிரம் ஆடுகளில் பிசகாமல் தன் தாயை அறிந்து எப்போதும் அதனருகே நின்றுகொண்டு, எனக்குள்ளதை எனக்குத் தந்தது இதுவே, எனக்கு இன்னும் குறைவுபடுவதை எனக்குத் தரவிருப்பதும் இதுவே என்று சொல்வதாகத் தோன்றுகின்றது. சகல வஸ்துக்களிடத்திலும் இதைக் காணலாம்.

பாரதி.

செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன் வந்து பாயுது காதினிலே—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே—ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே—எங்கள் (செந்தமிழ்)

வேதம் நிறைந்த தமிழ் நாடு—உயர்
வீரம் செறிந்த தமிழ் நாடு—நல்ல
காதல் புரியும் அரம்பையர் போலிளங்
கன்னியர் சூழ்ந்த தமிழ் நாடு (செந்தமிழ்)

கல்வி சிறந்த தமிழ் நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ் நாடு—நல்ல
பல்வித மாயின சாத்திரத்தின் மணம்
பாரெங்கும் வீசுந் தமிழ் நாடு. (செந்தமிழ்)
வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ் நாடு—நெஞ்சை
அள்ளும் சிலப்பதி கார மென் றோர் மணி
படைத்த தமிழ் நாடு. (செந்தமிழ்)

அன்னிய தேசத்தில் நெடுங்கால மிருந்து தன் ஊரை நோக்கி வருகையில் சிறிது தூரத்திலேயே நம் தேசத்திலுள்ள கோபுரங்களின் சிகரங்களும், விளக்குக் கூடுகளும், மற்றும் உயர்ந்த கட்டடங்களின் மேற்பாகங்களும் நம்முடைய கட்புலன்களுக்குத் தோன்றிய மாத்திரத்தில் நம்மை அறியாத ஒருவித குதூகலமும், மயிர்ச்சிலிர்ப்பும் நம்மிடத்தில் உண்டாவதை நாம் அனுபவ வாயிலாகக் காணலாம். ஜனன பூமியின் ஆசையினாலே இவ்வித அபிமான சின்னங்களுண்டாகி 'இது என் தேசம், இது நான் பிறந்த ஊர், எந்தையும் தாயும் மகிழ்ந்தொரு காலத்தில் வாழ்ந்ததும் இந்நாடே." என்று மனக்கசிவுடன் சொல்லிக்கொள்ளாத கன்னெஞ்சமுடைய மானிடனும் இவ்வுலகத்தில் உயிரோடிருக்கின்றானென்று ஸர் வால்டர் ஸ்காட் என்னும் கவிவாணர் தம்முடைய சிறந்த கவியொன்றில் கூறியிருக்கின்றார்.

ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் பாடிய நாட்டுப்பாட்டில் தோன்றும் சுதேச வந்தனமாவது :—

### காம்போதி ராகம், ஆதிதாளம்.

எந்தையுந் தாயு மகிழ்ந்து குலாவி யிருந்தது மிந்நாடே—அதன்
முந்தைய ராயிர மாண்டுகள் வாழ்ந்து முடிந்தது மிந்நாடே—அவர்
சிந்தையி லாயிர மெண்ணம் வளர்ந்து சிறந்தது மிந்நாடே—இதை
வந்தனை கூறி மனதி லிருத்தியென் வாயுற வாழ்த்தேனோ—இதை
(பல்லவி) வந்தே மாதரம் வந்தே மாதரம் என்று வணங்கேனோ (1)

இன்னுயிர் தந்தெமை யீன்று வளர்த்தரு ளீந்தது மிந்நாடே—எங்கள்
அன்னையர் தோன்றி மழலைகள் கூறி அறிந்தது மிந்நாடே—அவர்
கன்னிய ராகி நிலவினி லாடிக் களித்தது மிந்நாடே—தங்கள்
பொன்னுட லின்புற நீர்விளை யாடியில் போந்தது மிந்நாடே—இதை
(பல்லவி) வந்தே மாதரம் வந்தே மாதரம் என்று வணங்கேனோ. (2)

மங்கைய ராயவர் இல்லற நன்கு வளர்ந்தது மிந்நாடே—அவர்
தங்க மதலைக ளீன்றமு தூட்டித் தழுவிய திந்நாடே—மக்கள்
துங்க முயர்ந்து வளர்கெனக் கோயில்கள் சூழ்ந்தது மிந்நாடே—பின்னர்
அங்கவர் மாய அவருடற் பூர்துகள் ஆர்ந்தது மிந்நாடே—இதை
(பல்லவி) வந்தே மாதரம் வந்தே மாதரம் என்று வணங்கேனோ. (3)

## பூபாள ராகம்.

மன்னு மிமய மலை யெங்கள் மலையே
மாநில மீதது போற் பிறி திலையே
இன்னறு நீர்க்கங்கை யாறெங்கள் யாறே
இங்கிதன் மாண்பிற் கெதிரெது வேறே
பன்னரு முபநிட நூலெங்கள் நூலே
பார்மிசை யேதொரு நூலிது போலே
பொன்னொளிர் பாரத நாடெங்கள் நாடே
போற்றுவ மிஃதை யெமக்கிலை யீடே. (1)

மாரத வீரர் மலிந்தநன் னாடு
மாமுனி வோர்பலர் வாழ்ந்த பொன் னாடு
நாரத கான நலந்திகழ் நாடு
நல்லன யாவையு நாடுறு நாடு
பூரண ஞானம் பொலிந்த நன்னாடு
புத்தர் பிரானருள் பொங்கிய நாடு
பாரத நாடு பழம்பெரு நாடே
பாடுவ மிஃதை யெமக்கிலை யீடே, (2)

இன்னல் வந் துற்றிடும் போததற் கஞ்சோம்
ஏழைய ராகி யினி மண்ணிற் றுஞ்சோம்
தன்னலம் பேணி யிழி தொழில் புரியோம்
தாய்த்திரு நாடெனி லினிக்கையை விரியோம்
கன்னலும் தேனும் கனியுமின் பாலும்
கதலியும் செந்நெலு நல்குமெக் காலும்
உன்னத பாரத நாடெங்கள் நாடே
ஓதுவ மிஃதை யெமக்கிலை யீடே. (3)

இளப்பிராயத்தில் மனம் சஞ்சலமற்று நின்மலமா யிருந்த போது எந்தெந்த விடத்தில் எந்தப்படி பழகினோமோ, அந்தந்த ஷயங்களிலெல்லாம் அபிமானம் பசுமரத்தாணிபோல் வேரூன்றி மக்கேனும் நமக்கு உரிமையாய் உள்ளவர்களுக்கேனும் சம்பந் ப்பட்ட பொருளினிடத்து ஒருவிதப் பிரீதியுண்டாவது யானிட யல்பு. மிருகங்களுக்கும் பறவைகளுக்குங் கூட ஓர் காலத்தில் ழகிய இடத்தைப்பற்றிய அபிமானம் சில சமயங்களிலே கரை ரண்டு மேலெழுகின்றது. இதுவே தேசாபிமானத்திற்கு மூல ாரணமெனச் சொல்லலாம். இவ்வித தேசாபிமானம் நமக்கு யற்கையில் அமைந்திருப்பது ஈஸ்வர கடாக்ஷமென்றே சொல்ல வண்டும். ஏனெனில் ஒவ்வொருவனும் தனனுடைய சுயப்பிர டாஜனம் ஒன்றையே கருதி "என் வீடு, என் குடும்பம், என் அலு ல், என்சொத்து, என்சுற்றத்தார்" ஆகியனமாத்திரம் மேன்மை டைந்தால் போதுமானதென்றும், எனக்கு வருமானமில்லாத

விஷயத்தில் நான் பிரவேசிக்கக்கூடாதென்றும் எண்ணும் தப்பான அபிப்பிராயங்களுக்கிடங் கொடாமல் தன்னுடைய தேசத்தின் க்ஷேமத்திற்கேற்ற காரியங்களைச் செய்வதற்குத் தனது உடல், பொருள், ஆவி மூன்றையும் தன்னால் இயன்றவரையில் தத்தஞ் செய்வதற்குத் தூண்டி விடுவது இவ்வபிமானமே. தேசாபிமானம் நல்லதேயாயினும், தலைக்கேறிய விடத்தில் சில துர்க்குணங்கள் தோன்றுவது இயற்கையே. நம்முடைய தேசத்திலுள்ள சில துர்வழக்கங்களும் நமக்கு அபிமான மேலீட்டினால் நல்லவைகளாகவே தோன்றும். ஏனைய தேசத்தாருடைய நடையுடை பாவனைகளுக்கு ஒத்திட்டுப் பார்க்குமளவில் நம் தேசத்து வழக்கங்கள் சரியானவைகளல்லவென்று தோன்றியமாத்திரத்தில் நடுவுநிலைமையுடன் அவற்றைச் சீர்ப்படுத்திக்கொள்ள வேண்டிய முயற்சிகள் செய்யவேண்டும். இதுதான் உண்மையான தேசாபிமானமாகும். அப்படியின்றி, நம் தேசத்துக் குறைவுகளையும் அபிமானத்தினால் மதிமயங்கிச் சரியென்று சொல்லிக்கொண்டு திரிவது எள்ளளவும் தேசாபிமானமாகாது.

நம்மோடு வந்து வாசஞ் செய்யும் ஏனைய தேசத்தவர்களை இகழ்ச்சியாய்ப் பேசுவதும் நடத்துவதும் சிலதேசாபிமானிகளின் சுபாவம். இவர்கள் ஞாபகத்தில் வைக்கவேண்டிய விஷயம் ஒன்றுண்டு. நம் முன்னோர்களும் ஓர் காலத்தில் அந்நிய நாட்டிலிருந்து வந்து குடியேறினவர்கள்தானே. நாட் செல்லச் செல்ல நாம் நமது சொந்த தேசமாகப் பாவிப்பதுபோல், அந்நியர்களும் நமது நாட்டைச் சொந்த தேசமாகப் பாவிக்குங் காலம் வரும். இப்பொழுது அந்நியரா யிருப்பவர்கள் நம் சகோதரராகும் காலமும் வரலாம். மலையின்மேல் பனி மூடியிருக்கும் சமயம் ஒருவன் நடந்தால் அவனைப் பார்க்க ஓர் பூதம்போல் தோன்றும். சிறிது சமீபத்தில் வந்தவுடன் ஓர் மனிதன் வருவதாகத் தெரியும். இன்னும் சிறிது சமீபத்தில் வர அவன் நமது சகோதரனா யிருக்கக் காணலாம். அதே பிரகாரம், இப்பொழுது நடையுடை பாவனை, ஒழுக்கங் கொள்கை, அபிப்பிராயம் முதலிய விஷயங்களில் முற்றிலும் விகற்பமாகத் தோன்றும் அந்நியர், சிலநாள் பழகினபின் நமது அன்பிற்கும் சகோதரபாந்தத்திற்கும் தகுந்தவர்களாகலாம். ஆதலால் நம் நடுவிலவசிக்கும் அந்நியர்களை அவமதிப்பது அடாத காரியமாகும்.

ஐரோப்பாவிலுள்ள பற்பல ஜாதியாரும் அமெரிக்காவில் போய்ச் சேருகின்றனர். அவர்களெல்லோரும் ஏக ஜாதியாய் அமெரிக்கர் என ஒன்று சேர்ந்து அபிமானங் காண்பித்து வரு

கின்றனரன்றோ? இதைப்பற்றி ஓர் காலத்தில் ஐக்கிய மாகாணத்தின் தலைமை அதிபராக விருந்த 'ரூஸ்வெல்ற்' தான் மரணப் படுக்கையி லிருக்கையில் எழுதி யனுப்பியதாவது:—

"I cannot be with you, and so all I can do is to wish you God speed. There must be no lagging back in the fight for Americanism, merely because the war is over. There are plenty of persons who have already made the assertion that they believe the American people have a short memory and that they intend to revive all the foreign associations which most directly interfere with the complete Americanization of our people.

"Our principle in this matter should be absolutely simple. In the first place we should insist that if the immigrant who comes here in good faith becomes an American and assimilates himself to us, he shall be treated on an exact equality with every one else, for it is an outrage to discriminate against any such man because of creed or birthplace or origin.

"But this is predicated upon the man's becoming in fact an American and nothing but an American. If he tries to keep segregated with men of his own origin and separated from the rest of America, then he isn't doing his part as an American.

"There can be no divided allegiance here. Any man who says he is an American, but something else also, isn't an American at all. We have room for but one flag, the American flag, and this excludes the red flag, which symbolizes all wars against liberty and civilization, just as much as it excludes any foreign flag of a nation to which we are hostile.

"We have room for but one language here and that is the English language, for we intend to see that the crucible turns our people out as Americans, of American nationality, and not as dwellers in a polyglot boarding house; and we have room for but one sole loyalty, and that is loyalty to the American people."

தேசாபிமான மேலீட்டினாலே இன்னுமொரு துர்க்குணம் நம்மிடத்துண்டாவதும் இயற்கையே. அஃதென்னவெனில், நம்முடைய தேசம் க்ஷேமப்படுவதற்காக ஏனைய தேசங்களை அலக்கழித்து அங்குள்ளாரின் க்ஷேமத்தைக் குறைப்பதற்கானவற்றைச் செய்வதேயாம். எப்படி நம்முடைய சொந்த தேசத்திலுள்ளார் யாவரும் க்ஷேமமா யிருந்தால் "நாடெங்கும் வாழக் கேடொன்று மில்லை." என்றபடி நாம் ஒவ்வொருவரும் க்ஷேமமடையலாமோ, அப்படியே உலகத்திலுள்ள எல்லாத்தேசங்களும் க்ஷேமமாயிருக்

தால்தான் நம்முடைய தேசமும் க்ஷேமப்படும். இந்த ரகசியத்தைக் கேவலம் சுயப்பிரயோஜனத்தையே நாடும் சில தேசத்தார் முற்றும் மறந்திருக்கிறார்கள். தனக்கு ஒரு சுகத்தைத் தேடுகிறவன் எவனோ அவன் மற்றவர்களுடைய சுகத்தை முன்னே நாடினால்தான் தன்னுடைய சுயப்பிரயோஜனம் சித்தியாகும். இது சுகத்தைப் பற்றியதோர் பரமரகசியம். மனிதர்களுடைய செய்கைகளை ஈஸ்வரன் இத்தியாதி தந்திரங்களினால் நடத்திக்கொண்டு வருகிறார். உதாரணமாக ஒரு விஷயத்தை எடுத்துக் காட்டுகிறோம்:—

நம்முடைய வீட்டில் வாந்திபேதி, விஷசுரம், வைசூரி முதலிய தொத்துவியாதிகள் வாராமல் நாம் நம் வரையில் சுகஜீவிகளாயிருக்க வேண்டுமென்று எண்ணங்கொள்வோமாகில் சுற்றுப் பக்கங்களிலுள்ள வீடுகள் யாவும் சுசியாகவும், சுகாதாரத்திற்கேற்றனவாகவும் இருக்கின்றனவாவென்று நாம் முன்னே பார்க்கவேண்டும். அவ்வாறின்றி, நாற்புறமும் மற்றவர்களுடைய வீடுகள் யாவும் சுகாதாரஹீனமாயிருக்குமாயின், நாம் நம்முடைய வீட்டை எவ்வளவு சுசியாக அமைத்துக்கொண்டு வைத்திருந்தபோதிலும், அது தொத்து வியாதிகளுக்கொரு தடையாகமாட்டாது. சுயப் பிரயோஜனத்தையே நாடுகிற ஒவ்வொருவரும் இதுபோன்ற நியாயங்களைச் சித்த சமாதானத்துடன் யோசித்துப் பார்ப்பதவசியம்.

இதுபோலவே, ஏனைய தேசங்களெல்லாம் செழித்திருக்குமாயின் நம்முடைய தேசத்திற்கு ஒன்றும் குறைவுவராது. "எல்லாரும் இவ்வுலகில் இன்புற்றிருப்பதுவே, அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே." என்று கொண்டாடுவதே தேசாபிமானம்.

நம்முடைய தேசத்தில் பொய், கொலை, களவு, காமம் என்னும் பஞ்சமாபாதகங்கள் பரவாதபடி தடுக்க முயற்சிப்பதே நம் தேச க்ஷேமத்தைக் கருதி நாம் செய்யத்தகும் பிரதான காரியமாகும். இதற்கு ஆதாரமாக நம்மை நாமே சீர்திருத்திக்கொள்ள வேண்டும். கோர்ட்டிலுள்ளவர்கள் லஞ்சம் வாங்கும் வழக்கத்தை கட்டோடு நிறுத்துவதும், பொய்ச்சாட்சி சொல்லப் புறப்பட்டுத் தயாராயிருக்கும் புல்லர்களைப் போக்கடிப்பதுவும், காசுபறிப்பதற்காக மோசமான விளம்பரங்கள் பிரசுரிக்கும் கசடரைக் கண்டிப்பதற்கான வழி செய்வதும், வெளிப்பகட்டு வேஷதாரிகளால் விளையும் மோசம் போகாமல் காப்பதுவும், முதலிய சீர்திருத்தங்களை தேசாபிமானிகள் செய்யவேண்டிய முக்கிய முதற்கடமை.

"இவன் இந்தியன். ஆதலால் சத்தியந் தவறான். பஞ்சமா பாதகங்களை பாதத்தின் கீழ்போட்டு நசுக்கி உயர்ந்தவர்கள் இந்தியர்களே. சத்தியம், வாய்மை, தூய்மை, நன்மை, பரோபகாரம், தைரியம் முதலிய சற்குணங்களை இந்தியர்களிடத்தில் சிறந்து விளங்கும்" என்று அந்நிய தேசத்தார் நம்மைப் பார்த்துப் புகழ்ச்சியான வார்த்தைகள் சொல்லத்தக்கதாக நடந்துகொள்வோமானால் அதுவே நாம் பாரதமாதாவுக்குச் சூட்டும்கிரீடமாகும். இதற்காதாரமான விஷயங்களை மனோவசிய சாஸ்திரம் 38-ம் பாடத்தில் காணலாம்.

1. There is scarce any folly or vice more epidemical among the sons of men than that ridiculous and hurtful *Vanity* by which the people of each country are apt to prefer themselves to those of every other: and to make their own customs, and manners, and opinions the standards of right and wrong, of true and false. The Chinese Mandarins were strangely surprised and almost incredulous when the Jesuits shewed them how small a figure their empire made in the general map of the world. Now, nothing can contribute more to prevent us from being tainted with this vanity than to accustom ourselves early to contemplate the different nations of the earth in that vast map which history spreads before us, in their rise and their fall, in their barbarous and civilised states, in the likeness and unlikeness of them all to one another and of each to itself.

—*Bolingbroke*

2. This England never did, nor never shall,
Lie at the proud foot of a conqueror,
Come the three corners of the world in arms
And we shall shock them. —*W. Shakespeare.*

3. That country is the richest which nourishes the greatest number of noble and happy beings. —*J. Ruskin.*

4. Honour all men. Love the brother-hood. Fear God.
Honour the King. —*I. Peter.* ii-17.

---

## ஜாதி.

"நருபனை யிரண்டுபாளை யொன்றுநொங் கொன்றுகள்ளு
அறிவினி லறிந்தவர்க்கு அதுவுங் கள் ளிதுவுங்கள்ளே
ஒருகுலை யுயர்ந்ததேனோ ஒருகுலை தாழ்ந்ததேனோ
பறையனைப் பழிப்பதேனோ பாய்ச்சலூர்க் கிராமத்தாரே."

ஒரே பனையில் கள்ளும் நொங்கும் உண்டானபோதிலும் பனையியற்கையில் கொடுப்பது நொங்கு. மனிதன் தன் யுக்தியால்

னொங்குண்டாவதைத் தடுத்து உண்டாக்குவது கள்ளு. அப்படியுண்டாக்கிய கள் மிதமா யருந்தில் கெடுதியற்றதாயினும் பிரயோஜனமிலது. ஆயினும் அதிலுண்டாகும் லாகிரியானது மனிதர்க்கு ஒருவித இன்பத்தை யூட்டுவதால் அதையே பின்னும் நாடி எப்பொழுதும் மிதமிஞ்சி உபயோகிக்கவும அறிவிலியாகிய மனிதன் ஆளாய்விடுகிறான். ஆதலால் மனிதர்க்குண்டாகும் அனர்த்தம் யாவருமறிந்ததே. ஆகையால் ஆன்றோர் அதை யுபயோகிக்கக்கூடாதெனத் தடுத்தனர். இதுபோலவே, மனிதருள் ஜாதி பேதம் உண்டானதும் மனிதராலொழிய கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டதல்ல.

"கள்ளன், மறவன், கனத்ததோர் அகம்படியான் மெள்ள மெள்ள வந்து வெள்ளாளனானான்" என்பதுபோல், ஜாதிக் கட்டுப்பாடானது சுயநலங் கருதிய மனிதர் தமது மேம்பாட்டை நிலைநிறுத்தும்பொருட்டு ஏற்படுத்திய ஓர் கற்பனையாம்.

அவை நாம ரூபமாகிய தேகசம்பந்தமானவைகளே. தேகத்தை நோக்கியே இவன் பிராமணன், அவன் சூத்திரன், இவன் வைசியன், அவன் கிறிஸ்தவன், இவன் சைவன், இவன் வைஷ்ணுவன், அவன் மகம்மதியன் என்று சொல்கிறோம். ஆனால் ஆராய்ந்து பார்க்கின் எல்லாத் தேகங்களும் வித்தியாசமின்றி பஞ்சபூத சேர்க்கையால உண்டான சர்மம், உதிரம், ரசம், மாமிசம், அஸ்தி, மூளை, சுக்கிலம் ஆகிய சப்த தாதுக்களால் அமைந்தவைகளே. மண்ணால் செய்யப்பட்ட பாண்டங்கள் உரு வித்தியாசத்தாற் பல நாமங்களைப்படினும் அவையனைத்தும் மண்ணேயாகும். மனித தேகத்திலோ யாதொரு வித்தியாசமுமில்லாமல் ஒரேவிதமான அங்கங்கள் ஏற்பட்டிருக்கின்றன. மற்ற வித்தியாசங்கள் நம்மால் கற்பிக்கப்பட்டதே. ஆனால் ஆன்மாக்களின் வித்தியாசங்கள் கற்பிக்க வழியில்லாததால் எல்லா ஆன்மாக்களும் ஒன்றாக கடவுள் சொரூபமா யமைந்திருக்கின்றன. அங்கங்கிருந்து ஆட்டிவைப்பவரும் அவரே. அப்படியானால் வித்தியாசம் உண்டென்பதற்கு ஆதாரம் ஒன்றுமில்லையே.

"யார்பெரியர் யார்சிறியர் யாருறவர் யார்பகைஞர்
சீர்பெரிய ரானந்த சிற்சொருபர்—பேர்பெரியர்
எங்கெங்குந் தாமா யிருந்தசட சித்தனைத்தும்
அங்கங் கியற்று வதானல்."

என்ற ஆன்றோர் வாக்கியமும் கவனிக்கத்தகுந்ததே.

தொழில் விர்த்தியைக் கருதி ஒரேவகைத் தொழிலாளிகள் ஒன்று சேர்க்கை இயற்கையாதலால், தொழிற் பிரிவினையைக் கருதியே ஜாதிப்பிரிவினை நேரிட்டதாகத் தெரிகிறது. தவிர, ஆரியக் குடியேற்றத்திற்குப் பின்னே ஜாதிப்பாகுபாடு உண்டானதென அடியில் வரும் பழைய நூலாகிய கபிலர் அகவலால் நன்கு விளங்கும்.

"ஒட்டியர் மிலேச்சர் ஊணர் சிங்களர்
இட்டிடைச் சோனகர் யவனர் சீனத்தர்
பற்பலர் நாட்டிலும் பார்ப்பாரிலையால்
முற்படைப் பதனில் வேறாகிய முறைமைபோல்
நால்வகைச் சாதியிந் நாட்டினில் நாட்டினீர்
மேல்வகை கீழ்வகை விளங்குவ தொழுக்கால்."

ஆரியரிற் சிலர் ஜனசமூகத்திற்கு வேதமோதுவதும் கல்வி கற்பதுமே தொழிலாகக் கொண்டனர். சிலர் நீபகிலங்களுகளாலும் அந்நிய அரசர்களாலும் தீங்குறுவண்ணம் பாதுகாத்தலைத் தலைமேற் கொண்டனர். சிலர் பண்டமாற்றலால் உலகுக் குதவிசெய்தும் தாங்களும் ஜீவித்தும் வந்தனர். எஞ்சிநின்ற சிலர் உணவுப் பொருளை விளைவித்தும் தச்சுவேலை, கொத்துவேலை, பொன்வேலை முதலிய கருமங்களையும் ஏற்றுக்கொண்டனர். நெடுநாள் இவ்வகுப்பினருக்குள் அந்நியோந்ய ஐக்கியம் குறையாமல் ஒருவருக்கொருவர் உதவியாய்க் காரியம் நடைபெற்று வந்தது. நால்வகைத் தொழிலாளருக்குள் யாதொரு உயர்வு, தாழ்வுமின்றி ஒவ்வொருவரும் ஜனசமூகத்தின் சௌக்கியத்தை நோக்கியே பாடுபட்டுவந்தனர். இவ்வாறு பலவாண்டு கழிந்தபின் நாளாகவே தேசவன்மையாலும், அறிவு முதிர்ச்சியாலும், செல்வச் செருக்காலும் ஒருவரையொருவர் விரோதித்து தங்களால் ஜனசமூகத்திற்கு விளையக்கூடிய நன்மையைக் கெடுத்தனர். ஒவ்வொருவரும் தாங்கள் பிறர்க்குச் செய்யவேண்டிய கடமையை மறந்தனர். சுயநலப்பிரியமும் அகங்காரமும் அதிகரிக்கவே ஜனசமூகத்தின் சௌக்கியத்துக்கு நால்வகை வர்ணத்தாரின் ஆழ்ந்த ஒற்றுமையே காரணமென ஒருவரும் கவனிக்கவில்லை. பிராமணன் பிரமாவின் முகத்திலும், க்ஷத்திரியன் மார்பிலும், வைசியன் இடையிலும், சூத்திரன பாதத்திலும் உற்பத்தியாயினன் என்னும் சமஸ்கிருத வாக்கியத்தின் உருவத்தைத் தங்கள் தங்கள் சுயநன்மைக்கேற்ப அர்த்தங் கொள்வாராயினர். தேக, மனோ, சௌக்கியங்கள் மேற்கூறிய நால்வகை அங்கங்களின் சுகநிலைமையை அடுத்ததெனக் கவனிக்கவில்லை.

"வெந்நீர் பொருதெனுடல் காலின்முள் தைக்கவும்
வெடுக்கென்று அசைத்தெடுத்தால்
விழியிமைத் தங்கனே தண்ணருளை நாடுவேன்."

காலில் முள் தைத்தாலும் தேகமுழுவதும் வருந்துமென முதியோர் உரைத்ததையும் கைவிட்டனர்.

பின்னர், சைவம், வைஷ்ணவம், கௌமாரம் முதலிய அறுவகை சமய பேதத்தாலும், அகம்பாவத்தாலும், சுயநலப்பிரியராலும் கணக்கற்ற ஜாதிப்பிரிவுகள் உண்டாயின. "ப்ரமக்ஞியானந்தோ ப்ராமண" "சிறப்பும் சீலமும் அன்றிப் பிறப்பு நலந் தருமோ பேதையீரே" என்னும் கருணை வாக்கியங்களையும் "அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலான்" என்னும் திவ்விய குறளையும் மமதையால் மறந்துவிட்டனர்.

"சத்தியமின்றித் தனிஞானம் தானின்றி
ஒத்த விடயம் விட்டோரும் உணர்வின்றி
பத்தியுமின்றிப் பரனுண்மை யின்றி யூண
பித்தேறு மூடர் பிராமணர் தாமன்றே."

எனும் திருமந்திர பெருவாக்கையும் கவனிக்கிறதில்லை.

ஜாதி மதபேதம் குறைந்துவரும் தற்காலத்திலும் அநேகர் அற்ப சந்தோஷத்தாலும், அகம்பாவத்தாலும் குலத் தர்க்கமிட்டு ஜாதிப் பித்தைத் தலைக்கேற்றி கல்வியிழந்து, தனமிழந்து, பொருளிழந்து, அகாலமாய் ஆவியிழந்து, அல்லலுற்றுத் திரிகின்றனர். இவ்வித மிடியற்ற வாழ்க்கையை கல்வியறிவால் உய்த்துணர்ந்து, கைத்தொழிலால் சீர்ப்படுத்தி, நாணயத்தால் நன்மதிப்புப்பெற்று நம் இந்திய குலோத்தமர்கள் சீர்திருத்தப்பெற்று அந்நிய தேசத்தாராலும் ஒருங்கே மதிக்கப்படும் கண்ணியத்தைப் பெற்றுச் சிறப்புடன் வாழவேண்டாமா? கண்ணியமும் பிரபுத்வமும் பெற யோக்யதையில்லாத ஒருவன் தனது முன்னோர்களது பெருமையையும் தான் பிறந்த ஜாதியையும் சொல்லிக் கௌரவம் தேடுவது, திருடன் ஒருவன் கோவிலுக்குள் நுழைந்துகொண்டு தன்னைக் காப்பாற்ற வேண்டுமென்று பிரார்த்திப்பதுபோலிருக்கிறது. தனது பெற்றோர் பார்வையுடையவர்கள் என்று சொல்வது கண்கெட்ட குபோதிக்கு என்ன பயனைத் தரும்? தன் பாட்டனார் நாவலரானால் வாய் பேசக்கூடாத ஊமைப் பேரனுக்கு என்ன பயன்? அதுபோலவே தமது முன்னோர்கள் நல்ல ஸ்திதியிலிருந்தார்களென்பதுவும், தன் ஜாதி உயர்ந்ததென்பதுவும், தர்ம சிந்தனையில்லாத அற்பருக்கு என்ன பயனைத் தரும்?




பாரதமாதா.

அலைகடற் சூழ்ந்த நிலமகட் கினிய முகமென மிளிரும் பரத கண்டமாகிய புண்ணிய தேசமென பாவலர் பலரால் போற்றப்படும்பாக்கியம் பெற்ற பாரத மாதா தம்புத்திரர் ஜாதி மத பேதங்களால் பற்பல பிரிவுகள் ஏற்படுத்தி ஒற்றுமைநீங்கி இழிவான ஸ்திதிக்கு வந்துவிட்டார்களேயென்று கலங்கி யழும் கண்ணீரானது பிரளயமாகிப் பிரமபுத்திரா, கங்கா நதி, இந்து நதிகளின் மூலமாய் தாரை தாரையாய் சமுத்திரத்துள் பாய்கின்றது. ஓ! சகோதரரே! நாம் ஜாதி மதபேதங்களை வேரோடு களைந்து வேற்றுமை நீங்கி பாரதமாதாவின் புத்திரர் அனைவரும் ஒரே தாயின் பிள்ளைகளான சகோதரர் என்று எண்ணுங் காலம் எப்பொழுது வரும்! அப்பொழுதே மனமகிழ்ச்சியின் நாள்! அதுவே ஸ்வராஜ்ய சுதந்திரத்திற்கு நாம் பாத்தியஸ்தராகுங் காலம்.

“வந்தேமாதரம் என்போம்—எமது
மாநிலத்தாயை வாழ்க என்போம்—வந்தே.

வேறிய ராயினும் ஒன்றே—இன்னும்
வேறுபிரிவின ராயினும் ஒன்றே—வந்தே.

ஜாதி மதங்களைப் பாரோம்—உயர்
ஜென்மமே இந்தியர் யாவரும் என்போம்—வந்தே.

ஒத்திருந்தால் வரும் வாழ்வே—நமக்குள்
ஒற்றுமை நீங்கிடில் யாவர்க்குந் தாழ்வே—வந்தே.

“United we stand, Divided we fall.”

ஜாதிபேதமே நம் தாய்நாடு க்ஷீணதிசைக்குள்ளாகி விட்டதற்குக் காரணமெனக் கண்டு பலரும் விசனித்து, மறுபடியும் இந்தி

யர்கள் ஒன்று சேர்ந்து நம் நாடு க்ஷேமநிலையை அடையும்படி உழைத்து வருகின்றனர். அதற்காகவே ஆரிய சமாஜம், பிரம சமாஜங்கள், ஆசார சீர்திருத்தக்காரர்கள் முதலிய பல கூட்டத்தார் இராப்பகலாய் உழைத்து வருகின்றனர். இதற்கென்று விசேஷமாய் தற்காலத்தில் பாடுபடுவது பிராமணோத்தமர்களில் அனந்தம்பேர் என மனமகிழ்ச்சியுடன் கூறுவோம். ஜாதிக்கட்டுப் பாட்டை ஆதியில் ஏற்படுத்தி அதன்பலனை அனுபவித்தவர்களே அதனால் நம் பாரதமாதாவுக்கு நேர்ந்த இழிவைக் கவனித்து ஜாதிக்கட்டுப்பாட்டை அடியோடு தவிர்க்கும்படி முன்னுக்கு வருவது நம் தாய்நாடு சுயராஜ்யம் பெற்று வாழ்வடையும் நற்காலம் வந்துவிட்டதென்பதற் கறிகுறியாகும். தேசாபிமானம் மிகுந்தவர்கள் நாம் பிறந்த தேசம் கீர்த்தியாலும் வளத்தாலும் ஓங்கி வளர்வதற்கேற்ற உபாயங்களைக் கையாடவேண்டும். அப்படியே ஜாதியபிமானம் உடையவரும் தச்சாதியார் கல்வியும் செல்வமும் கீர்த்தியும் நாகரீகமுமுடையவர்களாகி, அனைத்துயிரொன்றென் றெண்ணி மேன்படுவதற்கேற்ற உபாயங்களைச் செய்தல்வேண்டும். அவ்வித நன்முயற்சிகளி லொன்றும் செய்யாமல், வீணே கூட்டங் கூட்டிக் கலகம் விளைவிப்பதும், ஜாதிக்கர்வம் பாராட்டி பிறஜாதியாரைத் தாழ்வாகப் பேசுவதும், ஹிம்சிப்பதும், அபிமானிகளின் சுபாவமன்று. ஜாதியைக் கெடுக்கச் செய்யும் வழியேயாகும். ஜாதி முன்னேற்றத்திற்காக முயற்சிசெய்வதற்குப் பதிலாய் ஜாதிப் பெருமையைமாத்திரம் பாராட்டிக்கொண்டு, வீண்கர்வங்கொண்டு திரியும் மூடர்கள் யாவராலும் பழிக்கப்படுவார்களன்றோ? அவர்களபிமானிகளன்று, டம்பமானிகளே. அறிவுடையோர் சிந்தித்துப் பார்த்து தக்க வழிகளில் முயல்வார்களானால் நமக்குள் ஏற்பட்டிருக்கும் ஒற்றுமைக் குறைவு ஒழிந்துபோம். நாம் ஒன்று சேர்ந்து உழைத்து வரவேண்டியது பாரதமாதாவின் புத்திரர் ஒவ்வொருவரையும் பொறுத்தக் கடமையாகும். "ஒத்தால் வாழலாம், ஒத்தால் வாழலாம்."

நமசிவாய முதலியார் சொல்வதுபோல்,

மாரிதான் சிலரை வரைந்து பெய்யுமோ
காற்றுஞ் சிலரை நீக்கி வீசுமோ
மாநிலஞ் சுமக்க மாட்டே னென்னுமோ
கதிரோன் சிலரைக் காயே னென்னுமோ.

மேல்நான்கு சாதிக் குணவு நாட்டிலும்
கீழ்நான்கு சாதிக் குணவு காட்டிலுமோ
திருவும் வறுமையும் செய்தவப் பேறும்
சாவதும் வேறில்லைத் தாரணி யோர்க்கே.

குலமு மொன்றே குடியு மொன்றே
இறப்பு மொன்றே பிறப்பு மொன்றே
வழிபடும் தெய்வமும் ஒன்றே யாதலால்
முன்னோ ருரைத்த மொழி தவறாமல்
எந்நா ளாயினும் இரப்பவர்க் கிட்டு
புலையுங் கொலையுங் களவுந் தவிர்த்து
நிலைபெற அறத்தில் நிற்பதை யுணர்ந்து
ஆணும் பெண்ணும் அல்லதை யுணர்ந்து
பேணி யுரைப்பது பிழையெனப் படாது
சிறப்பும் சீலமும் அல்லது...............
பிறப்பு நலந் தருமோ பேதையீரே.

ஔவைப் பிராட்டியார் நல்வழியில்

"சாதி யிரண்டொழிய வேறில்லைச் சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதா ரிழிகுலத்தோர்
பட்டாங்கி லுள்ள படி."

என்று வெண்பாவைப்பாடி உண்மையைப் புலப்படுத்தவில்லையா?

திருவருட் பிரகாச வள்ளலாகிய சிதம்பரம் ஸ்ரீமத்: இராம லிங்க சுவாமிகள் கூறிய திருவருட்பா என்னும் திவ்விய பாடலில் "சாதியிலே மதங்களிலே, சாத்திரச் சந்தடிகளிலே கோத்திரச் சண்டையிலே, ஆதியிலே அபிமானித்தலைகின்ற உலகீர் அலைந்தலைந்து, வீணேநீ ரழிதல் அழகலவே" என்பவை போன்ற இன்மொழி கூறி சத்தியங் காட்டிச் சன்மார்க்கம் விளக்கவில்லையா?

ஆகமே, ஆசாரம், யோக்யதை, தர்மநெறி முதலியவற்றால் மாத்திரமே இவ்வுலகில் பேதங்கள் ஏற்படலாமே யன்றி பிறப்பினாலேயே வித்தியாசங் காண்பிப்பது தர்மநெறிக்கு ஒவ்வாததாகும். கிணற்றுத் தவளை கிணற்றையே பிரபஞ்சமென்று நம்புவது போல் பற்பல தேசத்தவரும் தம் தம் வழக்கத்தையே அருமையாய்ப் பாராட்டிக்கொள்வார்கள். காலத்தையும் யுக்தாயுக்தத்தையும் அனுசரித்தே யாதொன்றையும் செய்யவேண்டுமே யன்றி குருட்டு வழக்கத்தையே முரட்டுத்தனமாய்ப் பிடிப்பது காட்டு வழக்காகும். "பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவலகால வகையினானே" என்று பவணந்தி முனிவரும் பக்குவமாய்ப் பகர்ந்திருக்கின்றனரே.

1. Children we are all,
Of one great Father, in whatever clime.
Nature or chance hath cast the seeds of life—
All tongues, all colours; neither after death
Shall we be sorted into languages
And tints, white, black, and tawny, Greek and Goth,
Northmen, and offspring of hot Africa:

The All Father, He in whom we live and move,
He, the indifferent Judge of all, regards
Nations, and hues, and dialects alike;
According to their works shall they be judged,
When even-handed Justice in the scale
Their good and evil weighs. —*Southey*.

2. God will not seek thy race,
Nor will He ask thy birth;
Alone He will demand of thee,
What hast thou done on earth? —*Persian*.

3. He who mixes with unclean things, becomes unclean himself; he whose associations are pure becomes purer each day. —*Talmud*.

4. The foundations of national glory are set in the homes of the people, and they will only remain unshaken while the family life of our race and nation is strong, simple and pure. —*King George* V.

5. It matters little where I was born;
If my parents were rich or poor;
Whether they shrank at the cold world's scorn,
Or walked in the pride of wealth secure;
But whether I live an honest man,
And hold my integrity firm in my touch,
I tell you, my brother, plain as I am,
it matters much!

6. Custom doth often reason over-rule,
And only serves for reason to the fool. —*Roochester*.

7. What custom wills, in all things should we do't,
The dust on antique time would lie unswept
And mountainous error be too highly heapt
For truth to over peer. —*W. Shakespeare*.

8. Custom doth so bleare us that we cannot distinguish the true visage of things. —*Montaigne*.

9. He serves his country best
Who lives pure life and doeth righteous deed,
And walks straight paths, however others stray.
And leaves his sons as uttermost bequest
A stainless record which all men may read.
This is the better way.

No drop but serves the slowly lifting tide;
No dew but has an errand to some flower;
No smallest star but sheds some helpful ray,
And, man by man, each helping all the rest,
Makes the firm bulwark of the country's power.
There is no better way. —*Susan Coolidge*.

## நன்றி.

"நன்றி யொருவர்க்குச் செய்தக்கா லந்நன்றி
என்று தருங்கொ லெனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான் தருதலால்."

ஒரு தென்னைமரத்தைத் தண்ணீரூற்றி வளர்த்தால் அது பெரிதான பின்பு நாம் ஊற்றிய நீரைமிகத் தித்திப்புடன் இன்பமாகப் பருகும்படி தலையாலே தாங்கிக் கொடுக்கின்றது. நாமும் "முந்தித் தவங் கிடந்து, முந்நூறு நாட்சுமந்து, அந்திபகலாய்ச் சிவனை யாதரித்து, அங்கமெல்லாம் நொந்துபெற்று, பையலென்ற போதே பரிந்தெடுத்து, ஆனபல மருந்தும் அருந்தித் துன்புற்றுங் குழந்தை யழுங்கால் தொட்டிலிலும் தொடையிலும் மார்மேலும், தோள்மேலும் வைத்துக் காதலித்துத் தாராட்டிச் சீராட்டி, முன்பு முலையூட்டி, மூக்குச்சிந்தி, நாசியூதி, செவியுநவி, நீராட்டி, நெற்றிக்கு திலகமிட்டு, விழிக்கு அஞ்சனந் தீட்டி, பலபணிகளும் பூட்டி, கன்னங்கிள்ளி, உச்சிமோந்து, கண்ணோடுகண், வாயோடு வாய், முகத்தோடு முகம் வைத்துக் கொஞ்சி முத்தாடி, மகவுக்கு நோய் காணிற்றான் மருந்தருந்தி, குழந்தையின் குற்றமனைத்தையுங் குணமாகக்கொண்டு, கோழி தன் குஞ்சுகளைச் செட்டையின் கீழ்ச் சேர்த்து அணைப்பதுபோல ஈ மொய்க்காமலும், எறும்பு கடியாமலும், பக்ஷி பறவாமலும், வெயில்படாமலும், காற்று வீசாமலும், பனிபெய்யாமலும், மார்பிலுந் தோளிலும் வயிற்றிலும் அணைத்துத் தன் கன்றுக்கிரங்கும் கறவைபோல் நெஞ்சிரங்கி, நோயணுகாது மருந்தளித்துப் பத்தியமிருந்து கண்ணை இமை காப்பதுபோல் அபாயம் வராமல் காத்து நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து, தன்னுயிரினும் மேம்பாடாகப் போற்றிக் காப்பாற்றிப் பல தீங்குகளினின்றும் காத்து வரும் தாய் தந்தை முதலியோர்களை நாம் பெரியவர்களானபின்பு, தென்னை தனக்கு ஊற்றிய நீரைக் கொடுக்குமாப்போல் நம்மைக் காத்த அவர்களை நாமும் காக்கவேண்டும்.

"பிறப்பித்தோன் வித்தைதனைப் பேணிக்கொடுத்தோன்
சிறப்பி னுபதேசஞ் செய்தோன்—அறப்பெரிய
பஞ்சத்தி லன்னம் பகிர்ந்தோன் பயந்தீர்த்தோன்
எஞ்சாப் பிதாக்களென வெண்."

"தன்னை யளித்தாள் தமையன் மனைகுருவின்
பன்னி யரசன் பயிரேவி—தன்மனையைப்
பெற்றாளிவ ரைவர் பேசிலுலகத் தெவர்க்கும்
நற்றாய ரென்றே நவில்."

நமக்கு நன்மை செய்த பெரியோர்களுக்குப் பிழைசெய்ய நினைப்போமாயின், நமது பெருமைகள் அழிந்து நரகத்திற்காளாவோம். இதையறிந்திருந்தும் நம்மில் எத்தனையோபேர் தம்மை அன்போடு பெற்று வளர்த்து ஆற்றிப்போற்றி அருமையாய்க் காப்பாற்றிவந்த தாய் தந்தையரின் சொற்கேளாமல் பட்டிமாடுபோல் கெட்டலைந்து, தன்மனம்போன போக்கெல்லாம்போய் அவர்களைச் சதா துக்கசாகரத்தில் அமிழ்ந்து தவிக்க விடுகின்றனர். இது தர்மமாகுமா? அநேகர் தம் பெற்றோரை நிந்தித்து வீட்டைவிட்டுத் துரத்துவதை அடிக்கடி பார்க்கிறோம்.

> "தினைத்துணை நன்றிசெயினும் பனைத்துணையாக்
> கொள்வர் பயன்றெரிவார்."

எனத் திருவள்ளுவர் தி வாய் மலர்ந்தருளியதை என்றும் மறவாதிருப்பது நமது கடமை.

நம் முன்னோர் பொ ல் முதலிய விசேஷ தினங்களில், அதிகாலையிலெழுந்து தம்பெற்றோரிடஞ் சென்று, தீர்க்கதண்டஞ்செய்து வணங்கி, அவர்களாசீர்வாதமும் பெற்றுக்கொள்வர். சமுசாரிகளான பின்பும் அப்படியே செய்வார். தற்காலமிதை அநாகரீகமென்றெண்ணி விட்டுவிட்டனர் போலும்! அவர்களைப் போற்றல் மிகவும் அவசியமானது. அவர்களிடம் ஆசீர்வாதம் பெற்றால் அது நம் ஜீவியத்துக்குதவியான சஞ்சீவியாகும். இதற்குப்பதிலாக சிலர் தமது மாதா பிதாக்களை தம்மைப் பெற்றுவளர்த்த அருமை பெருமைகளை எள்ளளவும் நினையாமல், அவர்கள் என்னைப் பெறுகிறதற்கு இரவும் பகலும் உடம்பை யொறுத்து ஊண் உறக்கமின்றி உபவாசித்து ஊசிமுனையில் நின்று தவஞ்செய்தார்களா? "அப்பன் மதப்பட்டான், ஆத்தாள் எதிரப்பட்டாள், நான் வெளிப்பட்டே"னேயல்லாமல் வேறென்ன என்று வாய் கூசாமற் பிதற்றி தம் தாய் தந்தையரை கோல்கொண்டு மாட்டியும் திட்டியும் மனமெரியப் பண்ணுகிறார்கள். "அவர்கள் மனம் நொந்த மாதிரியே இவர்கள் ஜீவியமும் நொந்துபோம்." இவர்கட்கொரு போதும் மீட்சியில்லை.

"மாதா மனமெரிய வாழா யொருநாளும்" பெற்றோரிடுஞ் சாபம், வாழ்க்கையைக் கெடுக்கும் விஷமாகும். அந்தோ! இதற்கோ இவர்களை இவ்வளவு பாடுபட்டு வளர்த்தார்கள். இவர்கள் மக்களல்ல, ஒன்றுக்கு முதவாத வெறுங்கற்களே யாவர்.

"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்பதனாலும் "தந்தை தாய்ப்பேண்" என்பதனாலும், அவர்களைத்தெய்வத்தைப்

போல் பாவித்து இகழாமல் வணங்கி அவர்கள் சொற்கேட்டு அவர்கள் குற்றங்களைப் பிறரிடம் தூற்றாமல் "தாய் சொலிற் சிறந்த வாசகமில்லை" "தந்தைசொன் மிக்க மந்திரமில்லை" என்னும் வாசகங்களுக் கிணங்க, மாதுரு பிதுருவாக்கியப் பரிபாலகனாய் அவர்கள் சொல்லைக் கடவாமற் கைக்கொண்டு அவர்களுக்கு வேண்டிய அன்னவஸ்திராதிகளைக் குறைவில்லாமற் போஷித்து வரவேண்டும். "தாயிடப் பிள்ளையிடத் தானே மனமகிழ" என்கின்றார்களே.

தனது கல்வி, முயற்சி, அறிவு, ஆண்மை, உண்மை, பொறுமை, ஒழுக்கம் முதலியவைகளைப் பார்த்து இந்த மகானுபாவன் அறிவில் ஆதிசேஷனோ? வித்தையில் அகஸ்தியனோ? ஆண்மையில் விக்கிரமாதித்தனோ? மெய்மையில் அரிச்சந்திரனோ? நீதியில் மனுச்சக்ரவர்த்தியோ? பொறுமையில் பூமாதேவியோ? சாந்தத்தில் தர்மராஜனோ? என்று அதிசயிக்கும் இவனைப் பெறுவதற்கு இவன் பிதா என்ன தவத்தைச் செய்தானோ?

> "மகன்றந்தைக் காற்று முதவி இவன் தந்தை
> என்னோற்றான் கொல்எனுஞ் சொல்."

என்று நாயனார் சொல்வதுபோல் பிறர் சொல்லத் தக்கதாக, நல்ல கீர்த்தியைப் பிதாவுக்குச் சம்பாதித்துக் கொடுக்கவேண்டும். தாய் தந்தையர் பெயரை நிலைநிறுத்துவது பிள்ளையின் விசேஷித்த கடமை.

> "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
> சான்றோனெனக் கேட்டதாய்."

தன்மகன் சகல கலைவல்லவன், சாதுரியக்குணச் சம்பன்னன், என்று அறிவுடையோர் சொல்லக்கேட்ட தாயானவள் தன்னைப் பெற்றபொழுதடைந்த மகிழ்ச்சியைக் காட்டிலும் அதிக மகிழ்ச்சியை யடைவாள்." என்றார் நாயனார்.

பாரத மக்களிலொருவராயபீஷ்மர், தன் தந்தையின்பொருட்டு உலகிலனுபவிக்க வேண்டிய அநேக இன்பங்களைத் துறந்து அவரைக் களிக்கும்படி செய்து, பின்வருமாறு வாழ்த்தப்பெற்றார்.

> "தந்தையர்க் குதவுமுதவியிற் சதமடங் குதவினை யுனக்கு
> மைந்தருக் குதவுமுதவியிற் சிறிது மாதவஞ் செய்திலே னுதவச்
> சிந்தையிற்றுறக்கம் வேண்டாமென் றெண்ணிச் செல்லுதுமன்னுயிர்மேன்
> முந்துறக் காலன்வரப் பெறுனென்றே முடிவிலா வொருவரமீந்தான்."

இம்மைந்தன்மேல் தந்தைக்குண்டான ஆனந்தத்தை இது விளக்குகின்றது

ஆதியாகம் 27-ம் அதிகாரத்தில் ஈசாக்கினுடைய அந்தியகாலத்தில் தன் மூத்த மகனாகிய ஏசாவை வாழ்த்தும்படி அழைத்து நான் புசித்து எனக்கு மரணம் வரும் முன்னே கர்த்தரை முன்னிட்டு உன்னை ஆசிர்வதிக்கும்படி நீ எனக்காக வேட்டையாடி அதை எனக்கு ருசியுள்ள பதார்த்தங்களாக சமைத்துக்கொண்டு வா என்று சொல்ல யாக்கோபு எவ்வளவோ பாடுபட்டு ஏசாவை வஞ்சித்து, தானே அந்த ஆசிர்வாதத்தைப் பெற்றானெனச் சொல்லியிருக்கிறது. இவற்றால் பெற்றோரின் ஆசிர்வாதம் எவ்வளவு இன்பகரமானதென்றும், அன்னதானத்தின் மகிமை இன்னதெனவும் விளங்கும். இன்னும் அன்னதானத்தால் கிடைக்கக்கூடிய ஆசிர்வாதங்களைப் பற்றி ஆபிரகாம், லோத்து முதலியவர்களின் சரித்திரத்தால் நன்கு விளங்கும். (ஆதி, 18,19)

இன்னும் அன்னை தந்தையர் நரை, திரை, மூப்பு மேலிட்டு பாயும் படுக்கையுமாய், ஆயுள் குன்றி வருந்துங்கால மக்கள் உதவி அவசியமல்லவா

"சின்னவோர் பொருள்தந்தோரை சீவனுள் ளளவுமுள்ளத்
துன்னவே வேண்டுமென்ன வுரைத்தனர் பெரியோர் தேகர்
தன்னையரு ருயிரைச்சீரார் தரணியின் வாழ்வைத்தந்த
வன்னைதந்தையர்க்குச் செய்யுமருங் கைம்மாறுளதோ வம்மா."

எனப் பெரியோர் கூறியிருக்கின்றார்கள்.

"மனையவள் வீயின் வேறோர் மனைவியைக் கொளலாம்பெற்ற
தனையராகிய பிறப்பிற் றனித்தனிப் பெறலாம்பின்னும்
புனைபொரு ளீங்கின்மற்றோர் பொருளையும் பெறலாமத்த
னனையிறந்திடின் வேறத்தனை வருவாரோ நெஞ்சே."

என்றபடி மாதா பிதாக்கள் தவறிவிடின் அவர்கள் ஸ்தானத்தை நிரப்பத்தக்கவர் எவர்?

எட்னா என்ற எரிமலை கக்கியபோது அரும்பொருட்களைத் தையும் கவனியாது தள்ளாப்பருவத் தந்தையைத் தோள்மேல் சுமந்து ஓடிக்காத்த புத்ரசிகாமணியின் புகழ் உலகெலாம் பரவிற்றன்றோ! அவனைத் தம் நாவினால் வாழ்த்தாதவர் எவர்?

ஐந்தாம் கற்பனையில் உன் தேவனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக்கிற தேசத்திலே உன் நாட்கள் நீடித்திருப்பதற்கு உன் தகப்பனையும் உன் தாயையும் கனம் பண்ணுவாயாக என்று தேவன் தாமே கட்டளையிட்டிருக்க பெற்றோருக்குக் கீழ்ப்படியாமல் அவர்களுடைய விருப்பத்தையும் புத்திமதியையும் தள்ளி அவர்களிட

தில் மூர்க்கத்தனமாயும் கோபமாயும் பேசுகிறதும், அவர்கள் திரவியத்தை நாசம்பண்ணி தன் இஷ்டப்படியே பிடிவாதமாய்த் திரிந்தலையும் பிள்ளைகட்கு தேவாசிர்வாதம் எங்ஙனம் கிட்டும்!

பாலைவனங்களில் திரியும் பக்ஷியாகிய நெருப்புக் கோழியின் வழக்கங்களைக் கவனித்துப் பார்ப்போம். தாயும் தந்தையும் தன் குஞ்சுகளைச் சிறுபிராயத்தில் தமதுசிறகில் தூக்கிக்கொண்டுபோகின்றன. அதேபிரகாரம் குஞ்சுகள் முதிர்ந்தவுடன் வயதுசென்ற தமது பெற்றோரைத் தமது சிறகில் தூக்கிக்கொண்டு போய் பத்திரமான விடத்தில் வைத்து அவற்றிற்கு ஆகாரங் கொடுக்கின்றன. ஒரு அற்ப ஜீவ ஜெந்துவுங்கூட தனக்கு ஜீவனளித்துப் போஷித்த பெற்றோர்க்கு நன்றிபாராட்டும் சுபாவமுடையதாயிருக்க, நமது வாழ்வையும் சுகத்தையும் கருதி வளர்த்த பெற்றோரின்னரை திரை மூப்புக்காலத்தில் தக்க உபசாரணைகள் செய்யாதுவிடுவது மகா பெரிய பாவம்.

மரத்தின் கிளைகளுங்கூடத் தம்மைத் தாங்கும் வேருக்குச் சாரத்தைப் பிரதியாகக் கொடுக்கின்றன. ஆறு தன் ஊற்றுக்கு ஆதாரமாயிருந்த கடலுக்குத் தன் நீரைத் திரும்பவும் கொடுத்து விடுகிறது. இவ்விதமாய் உலகிலுள்ள வஸ்துக்கள் அனைத்தும் தாம் பெற்ற உபகாரத்துக்குப் பிரதியுபகாரம் செய்து செழித்தோங்க வேண்டுமென்பது சிருஷ்டிகரின் கருத்து. இதற்கு மாறாக சுயநலம் பாராட்டுகிறவர்களும் பேராசையுள்ளவர்களும் தமக்குக் கிடைத்த நன்மைகளில் திருப்தியடையாமல் பெய்த மழை முழுவதையும் ஆக்ருஷித்து தனக்குள்ளடக்கிக் கொண்டு ஒரு பலனையும் தராத பாலைநிலத்துக் கொப்பாவார்கள்.

குறள்.

"என்னன்றி கொன்றார்க்கு முய்வுண்டு உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகற்கு"

"நன்றி மறப்பது நன்றன்று அஃதல்ல
தன்றே மறப்பது நன்று."

பழமொழி விளக்கம்.

"நன்றிதரும் பிள்ளையொன்று பெற்றாலுங்
குலமுழுதும் நன்மையுண்டாம்
அன்றி யறிவில்லாத பிள்ளையொரு
நூறுபெற்று மாவதுண்டோ
மன்றில் நடம்புரிவாரே தண்டலையாரே
சொன்னேன் வருடந்தோறும்
பன்றிபல ஈன்றுமென்ன குஞ்சரமொன்
றீன்றதனாற் பலனுண்டாமே."

## பெண்மதிமாலை.

1. மாதா பிதாவை வணங்கு—நாளும்
ஆதாரமாகவே அவர்சொல்லுக் கிணங்கு.

2. தந்தைதாய் சாபம் பொல்லாது—அவர்
சிந்தை நொந்தால் மக்கள் செல்வம்நில்லாது.

3. மாதா பிதாவுக்குத் துரோகம்—செய்யும்
பாதகரைச் சுற்றும் பாவம் அநேகம்.

4. பெற்றவர் நேசத்தைத் தேடி—அவர்
குற்றத்தை நீக்கிக் குணத்தைக் கொண்டாடி'

5. உள்ளதாய் தங்கைக்குத் தீங்கு—செய்யும்
பிள்ளையைத் தன்பிள்ளையே பழிவாங்கும்.

6. கடலைப்போல் மாதா சகாயம்—அதற்
குடலைச் செருப்பாய் உதவலும் நியாயம் (மாதா பிதாவை)

## Gratitude.

1. Gratitude is a virtue disposing the mind to an inward sense and an outward acknowledgement of a benefit received, together with a readiness to return the same, or the like, as occasions of the doer of it shall require, and the abilities of the receiver extend to. Ingratitude is an insensibility of kindness received, without any endeavour either to acknowledge or repay them. Ingratitude sits on its throne with pride at its right hand and cruelty at its left, each worthy supporters of such a state. There neither is, nor ever was, any person remarkably ungrateful who was not also insufferably proud; nor any one proud who was not equally ungrateful.

2. Ingratitude overlooks all kindnesses, and this is because pride makes it carry its head so high. Ingratitude is too base to return a kindness, and too proud to regard it; much like the tops of mountains barren indeed, but yet lofty, they produce nothing, they feed nobody, they clothe nobody, yet are high and stately, and look down upon all the world about them.

3. Friendship consists properly in mutual offices, and a generous strife in alternate acts of kindness. But he who does a kindness to an ungrateful person sets his seal to a flint, and sows his seed upon the sand:—Upon the former he makes no impression and from the latter he finds no production. —*Dr. Smith.*

4. When gratitude o'erflows the swelling heart
And breathes in free and uncorrupted praise
For benefits receiv'd, propitious Heaven
Takes such acknowledgements as fragrant incense,
And doubles all his blessings. —*G. Lille.*

5. Honour to those whose words or deeds,
Thus help us in our daily needs—
And by their overflow
Raise us from what is low. —*Longfellow.*

6. What causes such a miscalculation in the amount of gratitude which men expect for the favours they have done, is—that the pride of the giver and that of the receiver can never agree as to the value of the benefit. —*La Rochefoucauld.*

7. Love rules the universal heart of man,
Through all its range of age, rank, place, and mood;
But thou, since first in heaven her reign began,
Her holiest offspring art, O Gratitude!
Man's hard stern heart grows soft, with thee imbued,
And sweeter swells the fount of woman's love;—
Oh, let thy forms in dwellings wide and rude
Nor doubt, nor scorn in polished bosoms move;
Since, wheresoe'er thou be, thou comest from above!
—*Colton.*

8. Examples of ingratitude check and discourage voluntary beneficence; hence the cultivation of a grateful temper is a considerataion of public importance. A second reason for cultivating in ourselves that temper is—that the same principle which is touched with the kindness of human benefactor is capable of being affected by the divine goodness, and of becoming, under the influence of that affection, a source of the purest and most exalted virtue.

9. On Napoleon's thirty-eighth birth-day, a brilliant party was assembled at the Tuileries. Taking the arm of his faithful friend-Duroc, he wandered about the garden in disguise. A little boy was shouting—'*Vive l'Empereur!*'' Napoleon took the child in his arms, and asked him why he shouted so "Because my father and mother taught me to love and bless the Emperor,' the child answered. Napoleon then spoke to the parents who testified to the blessings he had conferred upon France. The next day a present from the Emperor informed them to whom they had unbosomed their gratitude.
—*Bourrienne.*

10. Gratitude signifies sensibility, generosity, and a feeling of obligation. —*R. Cecil.*

11. The love of God is the sublimest gratitude. It is a mistake therefore, to imagine that this virtue is omitted in the scriptures; for every precept which commands us to love God because He first loved us, presupposes the principle of gratitude, and directs it to its proper object —*Adn. Paley.*

## பெற்றோர்.

### ஆசிரிய விருத்தம்.

" தங்குலம் விளங்கிடப் பெரியோர்கள் செய்துவரு
 தருமங்கள் செய்து வரலும்
தன்மை மிகுதானங்கள் செய்தலுங் கணயோக
 சாதக னெனப் படுதலும்
மங்குத லிலாததன் றந்தைதாய் குருமொழி
 மாறாது வழிபாடு செயலும்
வழிவழி வருந்தமது தேவதா புத்திபுரி
 மார்க்கமுந் தீர்க் காயுளும்
இங்கித குணங்களும் வித்தையும் புத்தியும்
 ஈகையுஞ் சன் மார்க்கமும்
இவையெலா முடையவன் புதல்வனு மவனேயே
 யீன்றவன் புண்யவானும்."

### குறள்.

" தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
 முந்தி யிருப்பச் செயல்."

அதாவது தந்தை புதல்வனுக்குச் செய்யும் நன்மையாவது கற்றோ ரவையத்தின்கண் கல்வியில் வல்லவனென முற்பட்டிருக்கச் செய் தலாம். அவ்வாறின்றி,

" கலை பயிற்றுது காதலர்க்கு மாநிதி
 நிலையென வளித்திட னெறியில பித்தர்க்குக்
 கொலைசெய்வா ளீவதுங் குழவி தன்னைமா
 மலையி னேரத்து வைப்பது மானுமே."

கல்வி கற்பிக்காமல் புதல்வருக்குத் திரண்ட ஐசுவரியத்தை நிலை யென்று கொடுத்தலானது நன்னெறியில்லாத பித்தர்க்குக் கொலை செய்வதற்குரிய வாளாயுதத்தைக் கொடுப்பதையும், குழந்தையை பெரிய மலையின் உச்சியில் வைப்பதையும் ஒப்பாகும்.

### ஞானதீபிகை.

துஷ்டப் பிள்ளை பிதாவுக்கு அவமானத்தைக்கொண்டு வருகி றான். ஆனால், சரியான காரியங்களைச் செய்பவன் தன் வயது சென்ற பிதாவுக்குக் கௌரவத்தைக் கொடுக்கிறான். பூமி யுன் னுடையதே. அது பயிர் செய்யப்படாம லிருக்க வேண்டாம். நீ நட்டபடி உனக்கு அறுவடை யேற்படும்.

உன் மகனுக்குப் பணிவைக் கற்றுக்கொடு; அவன் உன்னை சதாகாலம் மனதார நினைப்பான். அவனுக்குத் தாழ்மையைப்போதி; அவன் ஒருபோதும் அவமானம் அடைய நேராது. அவனுக்கு நன்றியறிவைக் கற்பி; அவன் பயன் பெறுவான். தர்மத்தை யுபதேசி; அன்பு பெறுவான். மிதத்தை யூட்டு; சுகம் பெறுவான். விவேகத்தைப் போதி; அவன் நல்ல ஞானத்தை யடைவான்.

ஊக்கத்தை யூட்டு; அவனது செல்வம் வளரும்; நன்மை செய்யக்கற்பி; அவன் மனம் உயரும். கலைஞானங்களைக் கற்றுக்கொடு; உலகத்துக்கு உபயோகமுள்ளவனயிருப்பான். மதத்தைப்போதி; அவன் மனம் நிம்மதியாயிருக்கும். நீதியைப் போதி; உலகத்தாரால் நன்கு மதிக்கப்படுவான். நோமையைக் கற்றுக்கொடு; அவனது அகமே அவனை நகைக்கக் காரணம் ஏற்படாது.

பிதா என்னும் பெருமை வாய்ந்த புருஷனே! நீ பெற்ற பிள்ளையைக் காப்பாற்ற வேண்டியது உன் கடமையன்றோ?

## நீதிமொழிகள்.

22: 6. பிள்ளையானவன் நடக்கவேண்டிய வழியிலே அவனை நடத்து; அவன் முதிர் வயதிலும் அதை விடாதிருப்பான்.

22: 15. பிள்ளையின் நெஞ்சில் மதியீனம் ஒட்டியிருக்கும்; அதைத் தண்டனையின் பிரம்பு அவனை விட்டகற்றும்.

23: 13-14. பிள்ளையைத் தண்டியாமல் விடாதே; அவனைப் பிரம்பினால் அடித்தால் அவன் சாகான. நீ பிரம்பினால் அவனை அடிக்கிறதினால் பாதாளத்துக்கு அவன் ஆத்துமாவைத் தப்புவிப்பாயே.

23: 24-25. நீதிமானுடைய தகப்பன் மிகவும் களிகூறுவான்; ஞானமுள்ள பிள்ளையைப் பெற்றவன் அவனால் மகிழுவான். உன் தகப்பனும் உன் தாயும் சந்தோஷப்படுவார்கள். உன்னைப் பெற்றவள் மகிழுவாள்.

29: 15. பிரம்பும் கடிந்துகொள்ளுதலும் ஞானத்தைக் கொடுக்கும்; தன் இஷ்டத்திற்கு விடப்பட்ட பிள்ளையோ தன் தாய்க்கு வெட்கத்தை உண்டுபண்ணுகிறான்.

29: 17. உன் மகனைச் சிட்சை செய்; அவன் உனக்கு ஆறுதல் செய்வான், உன் ஆத்துமாவுக்கு ஆனந்தத்தையும் உண்டாக்குவான்.

"ஐயாண்டொரு மரையனு வாண்டுகள்
ஐம்மூன்று காறு மடியனு—எய்ததன்மேல்
மித்திரனுக் கொண்டு மேவுக தாமீன்ற
புத்திரனை யன்பு புரிந்து."

பெற்றோர் தம்புத்திரரை ஐந்து வயதுவரை அரசரைப் போலவும், அதுமுதல் பதினைந்து வயதுவரை அடிமைகளைப் போலவும், பதினைந்து வயதிற்குமேல் சிநேகிதரைப் போலவும் நடத்தவேண்டும்.

"மக்களை மனதிற் காதலிப்பதே மதியுடைமை"யாகுமென்று பெரியோர் சொல்லியிருக்க, பெற்றோர் பிள்ளைகளைச் சிறுபிராயத்திலேயே ஊணும் உடையுந் தந்து ஆதரிப்பதுபோல் இளக்காரங் கொடுத்து துஷ்ட சகவாசம் செய்யவும், ஓடியொளித்துத் துஷ்டனாய்த்திரியவும, சூதாடி, பொய் பேசி புறங்கூறித் திரியவும், தாசிகாந்தனாய் வேசி வீடு நுழையவும், துர்வியாச்சியந் தொடுக்கவும், சோம்பேறிப் பையன்களுடன் பெற்றோர் பணத்தைச் செலவிட்டு உல்லாசமாய்க் காலம் கழிக்கவும், குலத்தைக் கெடுக்கும் கோடாலிக் காம்புபோல் தன்னிச்சையாய்த் திரியவும் விட்டுவிடுவார்களானால், அவ்விதமாய் வளர்க்கப்பட்ட பிள்ளைகள் தமது பிற்காலத்தில் கஷ்டப்படும்பொழுது,

"அள்ளிக் கொடுக்கின்ற செம்பொன்னு மாடையு மாதரவாக்
கொள்ளிக்கும் பட்ட கடனுக்கு மென்னைக் குறித்ததல்லால்
துள்ளித் திரிகின்ற காலத்தி லேயென் துடுக்கடக்கிப்
பள்ளிக்கு வைத்திலனே தந்தை யாகிய பாதகனே."

என்று புலம்பி விசனப்படுவதற் கேதுவாகும்.

## Parents.

1. A man takes contradiction and advice much more easily than people think, only he will not bear it when violently given, even though it be well founded. Hearts are flowers; they remain open to the softly falling dew, but shut up in the voilent downpour of rain.
—*J. P. Richter.*

2. He who is taught to live upon little owes more to his father's wisdom than he that has a great deal left him does to his father's care.
—W. *Penn.*

3. Who that has languished, even in advanced life, to sickness and despondency; who that has pined on a weary bed in the neglect and loneliness of a foreign land, but has thought of the mother "that looked on his childhood, that smoothered his pillow, and administered to his helplessness?" Oh; there is an enduring tenderness in the love of a mother to her son that transcends all other affections of the

heart. It is neither to be chilled by selfishness, ner daunted by danger nor weakened by worthlessness, nor stifled by ingratitude. She will sacrifice every comfort to his convenience; she will surrender every pleasure to his enjoyment, she will glory in his fame, and exult in his prosperity; and if misfortune overtake him, he will be the dearer to her from misfortune; and if disgrace settle upon his name, she will still love and cherish him in spite of his disgrace; and if all the world beside cast him off, she will be all the world to him.

—*Washington Irving.*

4. A mother's love is like fire which burns the hotter the more you stir it. It may be stirred with ingratitude, with disrespect, or even with neglect, but it only burns the brighter, and if possible, lasts the longer, —*Ruby Ellis.*

5. Who can fathom the depth of a mother's love? No friendship so pure, so devoted; the wild storm of adversity and the bright sunshine of prosperity are all alike to her; however unworthy we may be of that affection, a mother never ceases to love her erring child. Often, when alone, as we gaze up to the starry heaven, can we in imagination catch a glimpse of the angels around the "great white throne," and among the brightest and fairest of them all is our sweet mother, ever beckoning us onward and upward to her celestial home.

—R. Smi*th.*

6. The noblest thoughts my soul can claim,
The holiest words my tongue can frame,
Unworthy are to praise the name
More sacred than all other.
An infant, when her first love came,
A man, to find it just the same,
Reverently I breathe her name,
The blessed name of mother.

—*G. Helter.*

## சங்கீதம் (Music.)

இன்னிசை கீதங்களையும் இனிய தாளமேள வாத்திய தொனிகளையும் கேட்டு அகமகிழ்ந்து ஆனந்தமுறாதவரெவர்? புல்லாங்குழலின் ஓசையைக்கேட்டு பசு முதலிய கன்றுகாலிகள் பிரமித்து நிற்கிறதில்லையோ? பாம்பாட்டிகளும் பாம்புகளை வசியஞ்செய்வது அதினாலன்றோ? ஸ்ரீ கிருஷ்ணன் ஸ்ருங்காரவேணுகானம் செய்த சமயம் பக்ஷி ஜாதிகளும், மிருக ஜாதிகளும், செடிகொடிகளுங்கூட சந்தோஷ குதூகலமடைந்து லயித்து நின்றதாக வாசிக்கிறோமே. எல்லார் உள்ளத்தையும் இன்ப வெள்ளத்தில் அழுந்தச் செய்யும் சக்தி அமைந்தது சங்கீதமே.

அற்ப ஜீவ ஜெந்துக்களே அரிய கீத தொனியைக் கேட்டு ஆனந்த பரவசமுறுகின்றனவெனின், அருமையிலும் அருமை

யான சிருஷ்டியாகிய மனிதன் மனோகர கீதங்களையும் இன்னிசை வாத்யங்களையும் கேட்ட மாத்திரத்தில் மெய்மறந்து பரவசமாவது அதிசயமாகுமோ ?

பால் விரும்பி அழுங் குழந்தையை கண் வளரச் செய்வதும், கொடிய விஷமுடைய நாகப்பாம்பைக் கூத்தாடச் செய்வதும் சங்கீதமே. மெய்க்களைப்புற்ற வேலையாளியும் குறுக்கெலும்பு ஒடியப் பாடுபட்ட கிரஷிகனும், பற்பல துன்பங்களால் சிந்தைமெலியப்பெற்ற மானிடரும் சுத்தம் மெய்க்களைப்பும், மனத்துயரும் போகச் சங்கீத நற்றுயிலையே நாடிச் செல்கின்றனர்.

சங்கீதத்திற்கு மனதை ஏகாக்ரப்படுத்தும் சக்தி அமைந்திருப்பதால், பத்தியைக் கூர்மையாக்கும் சக்தியும் அதற்குண்டு. தற்காலத்திலுள்ள வைத்திய நிபுணர்கள் சிற்சில ராகங்களுக்கு சிற்சில நோய்களைக் குணப்படுத்தும் சக்தி அமைந்திருக்கிறதென்று கண்டு பிடித்திருக்கின்றனர். அவர்கள் தங்கள் பாட்டையே மருந்தாகக் கொண்டு சிற்சில வியாதிகளை சொஸ்தம் செய்திருக்கின்றனர்.

சங்கீதம் தெய்வீக சாஸ்திரம். தேவர்கட்கும் தேவதூதர்களுக்கும் பிரியமானது. தேவாதி தேவனுக்குகந்தது. பக்தர்கள் பகவான்மேல் பக்திரசம் நிரம்பிய பாசுரங்களைப் பாடிப் பரவசமாகின்றனர். சங்கீத ராஜனாகிய தாவீதரசன் அநேக சமயங்களில் கர்த்தருடைய பேழையின் முன் ஆடிப் பாடி ஆனந்த பரவசமடைந்தானெனவும், இராவணன் சாமவேதகானம் பாடி பரமசிவத்திடம் வரங்களைப் பெற்றானென்றும் கூறப்பட்டிருக்கிறது. பேரின்ப பரவசமூட்டும் சங்கீதமே, சிற்றின்ப சுகானுபோகங்களுக்கும் மனிதனை மையலுக்குள்ளாக்கும் சக்தியையுமுடையது. இக்காலத்தில் பாடப்படும் ஒரடி ஈரடி மெட்டுகள், டப்பாக்கள், தெம்பாங்கு முதலிய சிற்றின்ப கீதங்களுக்குச் செவி கொடுக்கிறவர்கள் சீக்கிரம சின்னமடைந்து அல்லோல கல்லோலப்படுவர். பக்தி ரசம் பொருந்திய ஆன்றோர்களது தோத்திரப்பாக்களையும் தேவாரங்களையும் பாடி வருவதால் பரமானந்தம் விளையுமேயன்றிச் சிற்றின்பக் கீதங்களால் சீக்கிரம் சின்னமுண்டாகும்.

தேவதூதர்களும், சம்மனசுகளும் சதா தெய்வ சந்நிதியின் முன்னின்று,

"ஆடுவதும் பாடுவதும் ஆனந்தமாய்ப் பரனைத்
தேடுவதுமே தொழிலாய்த் திரிகின்றனர்."

ஓ! கீதமே! சங்கீதமே! நீ மானிடர்க்குச் சதா ஆனந்தத்தையும் அதன் மூலமாய் சுகஜீவனையும் புத்தி தீக்ஷணியத்தையும் உண்டாக்கும் சக்தியை உன்னில் அமைத்த சர்வேஸ்பரனுடைய ஞானம் அளவிடற்கரியதன்றோ? தெய்வசந்நிதியில் கேரூபீன்களும், சேராபீன்களும் இருந்தவரும், இருக்கிறவரும், வருகிறவருமாகிய சர்வ வல்லமையுள்ள தேவனாகிய கர்த்தர், பரிசுத்தர்! பரிசுத்தர்! பரிசுத்தர்! என்று இரவும் பகலும் ஓய்வில்லாமல் பாடிக்கொண்டிருக்கின்றன.

"தோழி! சங்கீர்த இனிமை நற்பாகின்
சுவையு மினையோ கண்ணே—அருள்
சுருதியின் க்யானம் இருதயம் மகிழ
செய்திடும் என் கண்ணே."

"தேனிலும் தேன்கூண் டொழுகல்கள் தனிலும்
திவ்ய மதுர மாமே—அது
ஜீவனுக் கமிர்தம் ஆவிக்குச் சுகிர்தம்
தினம் ருசித்திடு கண்ணே,'

## தெய்வஸ்துதி.

"தூய, தூய, தூயா! ஜோதிப்பிரகாசா
தேவரீர்க் கெந்நாளுஞ் சங்கீதம் ஏறுமே,
தூய, தூய, தூயா! சர்வவல்ல தேவா!
காருண்யரே! தூயத் திரியேகரே!"

சங்கீதம் தெய்வீக சாஸ்திரம். தேவர்கட்கும் தேவதூதாதிகளுக்கும் பிரியமானது. தேவாதி தேவனுக்குகந்தது. பக்தர்கள பகவான்மேல் பக்திரசம் நிறம்பிய பாசுரங்களைப்பாடிப் பரவசமாகின்றனர். சங்கீத ராஜனாகிய தாவீதரசன் அநேக சமயங்களில் கர்த்தருடைய பேழையின்முன் ஆனந்தபரவசமடைந்தானெனவும், இராவணன் சாமவேதகானம் பாடி பரமசிவனிடம் வரங்களைப் பெற்றானென்றும் கூறப்பட்டிருக்கிறது. பேரின்ப பரவசமூட்டும் சங்கீதமே சிற்றின்ப சுகானுபோகங்களுக்கும் மனிதரை வையலுக்குள்ளாக்கும். இக்காலத்தில் பாடப்படும் ஓரடி ஈரடி மெட்டுகள், டப்பாக்கள் தெம்பாங்கு முதலிய சிற்றின்ப கீதங்களுக்குச் செவி கொடுக்கிறவர்கள் சீக்கிரம் சின்னமடைந்து அல்லோல கல்லோலப்படுவர். பக்திரசம் பொருந்திய ஆன்றோர்களது தோத்திரப்பாக்களைப் பாடி வருவதால் பரமானந்தம் விளையுமேயன்றிச் சிற்றின்பக் கீதங்கள் சீக்கிரத்தில் கெடுத்துவிடும்,

## அன்பு.

புருஷன் தன் மனைவிமீது ஏற்படும் அன்பைக் காதல் என்றும், சிநேகிதன்மீது ஏற்படும் அன்பை நேசமென்றும், ஏழைகள் மீது காட்டும் அன்பை கிருபாநோக்கமென்றும், பட்சி, மிருகங்கள் மீதுண்டாகும் அன்பை ஜீவகாருண்யமென்றும், கடவுளிடம் செலுத்தும் அன்பை பக்தியென்றும் இன்னும் பற்பலவிதமாய் அன்பின் மாட்சி விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது.

"முன்பு பின்பின்றி மூவுலகத்தினும்
அன்பி னல்லதோ ராக்கமுண்டாகுமோ"?

என்று கவிச்சக்ரவர்த்தியாகிய கம்பர் கூறியுள்ளார்.

"இறவாத இன்பவன்புவேண்டி" என்றும், "ஈறில்லாப் பதங்கள் யாவையும் கடந்த வின்பமே என்னுடையன்பே" என்றும் அறிஞர் கூறிய அமுத அனுபவ வாக்கியங்களினாலும், நம் அனுபவத்தினாலுமே அன்பே இன்பமென்றும் அறிகின்றோம். ஆதரவற்ற ஒரேழையினிடத்து எவ்வித கைம்மாறும் எதிர்பாராமலே நாம் பரிதாபங்கொண்டு அன்பு செலுத்தி அவனுக்கு உணவாதிகள் தந்து உபசரிக்கும்போது, நம் உள்ளத்தில் இயற்கையிலே ஒருவகையான இன்பம் உண்டாவதை நாம் காண்கிறோம். இது கல்விச் செல்வ சாதுசங்கச்சார்பு, நல்லொழுக்கம் முதலிய நற்செய்கைகளினாலுண்டாகும் ஒரு சம்பத்து. நிஷ்காரணமாய் பிறர்க்குத் துன்பஞ்செய்து வன்புபாராட்டி அவர்களை மனமொழிகளினால் அல்லற்படுத்தும்போது அவர்கள் வருந்துவதைக் கண்டு இன்பமடைகின்றவர்களையும் நாம் உலகத்திற் காண்கிறோம். இவர்கள் மானிட மிருகங்களேயன்றி காசானுஜியவயவங்கள் பெற்றிருக்குங் காரணத்தினாலேயே மானிடராகார்.

உப்பானது பிறர்க்கு உபயோகமாகும்பொருட்டு எவ்விதம் தண்ணீரில் கரைந்து அழிந்துவிடுகிறதோ, அதேவிதமாக தன்னலத்தையும் சுயப்பிரயோஜனத்தையும் முற்றிலும் அழித்து, பிறர்க்கு உபயோகமாகும்பொருட்டுத் தம்மையே தத்தம் செய்து பரித்தியாகம் செய்வதே அன்பின் சிறந்த தன்மையாம்.

அன்பென்னும் வித்து நம் பெருமானருளால் நம் மனமெனும் புலத்தில் மெல்ல அங்குரிக்கும்போது, அதனை நல்லொழுக்கமென்னும் நீர்கொண்டு பாய்ச்சி, அது தலையெடுக்கவொட்டாது தோன்றும் சுயப்பிரயோஜனமென்னுந் தீயகளையைக் கல்வியறிவென்னுங் கோடரியைக்கொண்டு கிண்டியெறிந்து, காமக்குரோதாதி வன்பற

வைகள் அதற்குத் தீங்குசெய்ய அணுகாதபடி, கடவுளாக்ஞை யென்னும் பெரும்பறையை முழக்கியோட்டியபின் அருளென்னும் பயிர் தழைக்க அதில் விளையும் இன்பமென்னும் போகத்தை யனுபவித்துச் சுகிப்பது ஒவ்வொருவருடைய பெருங்கடமையாகும். பிறவுயிர்களை வருத்துஞ் சிங்கம், புலி முதலிய துஷ்ட மிருகங்களும் தம்முடைய குட்டிகளிடத்து அன்புபாராட்டி அவற்றைப் போஷிக்கவில்லையா? ஆகவே, அன்பு என்னும் இவ்வரிய பொருள் பிரதமத்தில் தன் சுயநலத்தையே நாடிநின்று, பிறகு தன் மனைவி, மக்கள் முதலிய தொடர்புடையாரிடத்துப் பரவுவதாகும். இது எனையோரிடத்தும் வியாபித்து எவரையும் நம்மைப் போலவே பாவித்து வாஞ்சை பாராட்டும்போது இவ்வன்புக்கு அருளென்று பெயர். ஆகையாற்றான் அருளென்னும் அன்பீற் குழவி (அன்பென்னும் தாய்பெற்ற அருளென்னும் குழந்தை) என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் கூறுகின்றனர். உலகத்திலுள்ள எல்லோரையும் நம்மவர்களாகப் பாவித்து அவர்களிடத்து அருள் பாராட்ட வேண்டுவது ஒவ்வொருவருடைய செய்கடனாயிருப்பதால், முன்னே நம்மிடத்தும் நமக்கு நெருங்கினவர்களாகிய மனைவி, மக்கள், அவர்கள் மூலமாக வரும் சம்பந்திகள், நண்பர்கள் ஆகிய இவர்கள்பால் இயற்கையிலுண்டாகும் அன்பை வளர்க்கும் நிமித்தமே இல்வாழ்க்கைத் தருமத்தை இன்றியமையாத ஆசிரம தருமமாகப் பெரியோர் ஏற்படுத்தினார்கள். "அறனெனப்பட்டதே யில்வாழ்க்கை" யென்றும், "இல்லற மல்லது நல்லறமன்று" என்றும் அறிஞர் அறுதியிட்டுக் கூறியதன் காரணம் இதுவேயாம்.

"என்பிலதனை வெயிற்போலக் காயுமே
அன்பிலதனை யறம்."

(என்பு அமையப்பெறாத புழுவை வெயிலில் சுட்டெரிப்பது போல் (அறக்கடவுள்) தருமதேவதை அன்பில்லாதவரைக் கோபித்துத் தண்டிக்கும்.) என்று தெய்வப்புலவர் திருவள்ளுவ நாயனார் கட்டளையிட்டிருக்கின்றனர். "அன்பிலவனை" அல்லது "அன்பிலவரை" என்னாது "அன்பிலதனை" என்றமையால், அன்பிலாளரை உயர்திணைப் பொருளாக மதிக்க மனமின்றிக் கேவலம் அஃறிணைப் பொருளாகவே இழிவுபடுத்திக் கூறியதாகும்.

இப்படிப்பட்ட அரும்பொருளாகிய அன்பென்பது தலையன்பு, கடையன்பு, இடையன்பு என மூவகைப்படும். தலையன்பென்பது முதல்தரமான மேலான அன்பு. இது இக்காலத்துக் காண்பதரிது. தன்னை முற்றும் மறந்து பிறரைத் தன்னிலும்

மேலாகப்பாவிக்கும் தன்மையது. தைலதாரைபோல் இடைவிடாது எவ்வகைப்பட்ட இடுக்கணுக்கும் களையாமல் விளங்குவது. கண்ணப்ப நாயனார் தம்முடைய ஆன்மார்த்தமாகிய காளத்தியப்பரைக் கண்டபோது தம்மை மறந்து அவர் வயமாகியே நின்ற நிலைதான் தலையன்பெனப்படும். காளத்தியப்பர் கண்ணில் உதிரம் பெருகுவதைக் கண்ட மாத்திரத்திலேயே தன்னையொரு பொருளென மதியாமல், ஊனுக்கு ஊன்மருந்தாகுமே யென்னும் நினைவுதோன்ற, உடனே அம்பினால் தமது கண்ணை இடந்து அப்பியதும்; பெருமான் அவருடைய பேரன்பின் திறத்தை உலகத்தார்க்கு விளக்கும் பொருட்டு மற்றொரு கண்ணினின்றும் குருதி சோரும்படி செய்ய, அதைக்கண்ட மாத்திரத்தில் "கண்டேன் கண்டேனோர் ஔஷதம்" என்று குதூகலத்துடனே அன்பர் தம்முடைய மற்றொரு கண்ணையும் அம்பினால் தயாரத் தலைப்பட்டதும் தலையன்பாகும்.

"கண்ணப்ப னொப்பதோ ரன்பதனைக்—கண்ணப்பர்
தாமறிதல் காளத்தியா ரறிதலல்லது மற்
றோரறியு மன்பன்றது."

என்று அறிஞர் வியக்கின்றார்கள். இவ்வன்பருடைய தேக முழுவதும் அன்புருவமேயன்றிச் சப்த தாதுக்களாலாகிய சாதாரண தேகமாகக் கொள்ளக்கூடாது. ஆகையாற்றான், "கண்ணப்பனொப்பதோரன்பு" என்று ஸ்ரீ மாணிக்கவாசகப் பெருமான் தம் திருவாசகத்தில் வியக்கின்றனர். "கண்ணப்பனுக்கு மேலான அன்பன்" என்று சொல்ல வேண்டுவது இயல்பாயிருக்க, அவ்வாறு கூறாது, "கண்ணப்பனொப்பதோரன்பு" என்று கூறியதன் காரணம் யாதெனில், கண்ணப்பன் வேறு, அன்பு வேறு என்று கருதுவது கூடாது; கண்ணப்பன் அன்பினுருவேயன்றி வேறல்ல என்னும் பரமரகசியத்தைச் சூசிப்பிக்கும் பொருட்டேயாம். இத்தகைய தலையன்பானது அன்புக்குரிய பொருளைக் காணுங்காலும் காணாக்காலும் இடைவிடாது உயர் நிலையாய்ப் பெருஞ்செல்வமாகும்.

இடையன்பு என்பது அன்புக்குரிய பொருளை நேரிற் காணும்போது மாத்திரம் சுரப்பதொன்றாகும். நெருப்புக்கு முன் அரக்கையாவது மெழுகையாவது காட்டும்போது அது மெல்ல உருகுவதுபோல, நேரிற் காணும்போது மாத்திரம் மனமுருகிப் பரவசமடைதலே இடையன்பாகும். அன்புக்குரிய பொருளைவிட்டுப் பிரிந்தகாலத்து அந்த இடையன்பு சுருங்கும்.

கடையன்பு என்பது இரண்டு கட்டைகளை ஒன்றோடொன்று நெடுநேரம் தேய்க்கும்போதுண்டாகும் தீப்பொறிபோல் அன்ப

னும் அன்புக்குரிய பொருளும் நேரில் நெடுங்காலம் பழகிய பின்னர் தோன்றும் அன்பாகும். இதுவும் பிரியும்போது பையப்பைய மறைவதாகும்.

தன் பிராணநாயகன் இறந்தானென்று கேட்ட மாத்திரம் உயிர் துறக்கும் தலைவியின் அன்பே தலையன்பெனப்படும். பூர்வம் சூரபத்மனென்னும் மஹா சூரனாகிய அசுரேந்திரன் முருகக் கடவுள் வேலாயுதத்தால் மாண்டானென்று கேள்வியுற்றவுடனே அவனது மனையாட்டி பத்மகோமளை உயிர்துறந்தாளென்று அறிகிறோம். இவ்வாறே தலையன்புடைய ஸ்திரீ பூமான்கள், "ஒருவரிய இரண்டெற்கு யிரொன்றுயினர்" என்று கம்பர் சக்ரவர்த்தித் திருமகனையும் ஜானகியாரையுங் குறிப்பிட்டு விபக்கும் விதமாக இருப்பார்கள். இத்தகைய மேம்பாடுடைய தலையன்புக்கு அடியில்வரும் சரித்திரமே நிதரிசனமாகும்.—

## கனகாம்புஜம்.

உத்தமதானபுரம் என்னும் நகரத்தை இராஜதானியாகக் கொண்ட சுசீலமென்னும் பல்வளஞ் சிறந்த பெருநாட்டை மனுமுறை தவறாது பத்மநாபன் என்னும் அரசன் ஆண்டு வந்தனன். தன் அரசாட்சிக்குட்பட்ட உயிர் வர்க்கங்கட்குத தன்னாலாவது, தன் பரிஜனத்தாலாவது, பகைவர்களாலாவது, கள்வர் முதலிய துன்மார்க்கர்களாலாவது, தீய விலங்குகள் முதலியவற்றாலாவது எவ்வித துன்பமும் நேரிடாத வகைக்கு மன்னுயிரைத் தன்னுயிர் போற் கருதிக், காவலனென்னும் பெயர்க்குப் பாத்திரனானான். துஷ்ட நிக்ரமும், சிஷ்டபரிபாலனமுஞ் செய்து செங்கோல் வழுவாது அரசாண்டுவந்த அவ்வரசனுக்கு வாழ்க்கைத் துணையமைந்த மனையாளாகிய பட்டஸ்திரீ கனகாம்புஜம் என்னும் பெயர்பெற்ற கற்பிற் சிறந்தவள். பத்மநாபனும் கனகாம்புஜமும் அன்றிற் பறவைகளைப்போற் பிரியா அன்புடையர்களாகி "காதலிருவர் கருத்தொக்க வாதரவு பட்டதே யின்பம்" என்றபடி இல்வாழ்க்கை யின்பத்தை யெய்தி வருங்காலத்தும,—

> 'வித்தகமாய்க்
> காதிவிளையாடி யிருகை வீசிவந்தாலும்
> தாதிமனம் நீர்க்குடத்தே தான்."

சாதுரியமாகக் கதை பேசிக்கொண்டும், விளையாடிக்கொண்டும், கைவீசிக்கொண்டும் வந்தாளாயினும், தலைமேலிருக்கும் நீர்க்குடம் கீழே வீழ்ந்துடையாதபடி வேலைக்காரி தன் மனத்தை அத

னிடத்தே வைத்துப் போவதுபோல், சர்வேசுவர ரிடத்தில் அயர்
விலா அன்புபாராட்டி வந்தனர். இப்படியிருக்க, ஒருநாள் மாலைப்
போது அவ்விருவரும் சந்திரகாந்த மேடைகளமைந்த மேலுப்பரி
கையிலிருந்து உல்லாசமாக வார்த்தையாடிக் கொண்டிருக்கையி
லே, வடக்கே நெடுந்தூரத்தில் தங்களுடைய அதிகாரப் பிரதேச
எல்லைக்கப்பால் ஒருபெருஞ் சோதியும் வெளிச்சமும் தோன்றின.
அவற்றின் காரணம் அவர்களுக்குப் புலப்படாமையினால் அரசன்
உடனே தன்னுடைய ஒற்ற
ரை அழைத்துக் காரணத்தை
அறிந்து கொண்டுவருமாறு
கட்டளையிட்டனன். அன்
றிரவு சுமார் பதினைந்து நாழி
கைக்கு ஒற்றர் திரும்பிவந்து,
ஐயனே! அரசனேறே! தேவ
ரீர் கட்டளையைச் சிரமேற்றா
ங்கி அதிவிரைவாகச் சென்று
பார்த்தோம். தேவரீருடைய
அரசாட்சிப் பிரதேச எல்லைக்
கப்பாலுள்ள ஒருகிராமத்தில்
ஒருவன் இறந்துவிட்டதாக
வும், அவனைத் தகனஞ்செய்
யுங் காலத்திலே அவனுடை
ய கற்பிற் சிறந்த மனையாள்
இன்னும் ஏராளமாகக் கட்
டைகளை மலைபோற் குவித்
துப் பெருந்தீமூட்டித் தன்
கணவனுடனே இன்றுஉடன்




கட்டையேறுவதாகவும் இருப்பதால், அனேகபிரஜைகள் அவ்வதி
சயத்தைப் பார்க்கப் பெருங்கூட்டமாகக் கூடியிருக்கின்றனர்; அத்
தீயின் சோதியும் அதனால் நெடுந்தூரம்வரையிலே ஆகாயத்தில்
தோன்றிய வெளிச்சமுமே தேவரீர் கண்ணுக்குப் புலப்பட்ட
சோதியும் வெளிச்சமுமாகும். என்று விடைகூறிப் பணிந்து நின்
றார்கள். அரசன் அவர்களை யனுப்பிவிட்டு, அவ்விருத்தாந்தத்
தைக் கேட்டுக்கொண்டிருந்த தன்னருமைக்காதலியாகிய கனகாம்
புஜத்தை நோக்கி—'என்னுயிர்க்காதலியே! அந்தக் கிராமத்தில்
கணவனோடு உடன்கட்டையேறும் மாதுசிரோன்மணியல்லவோ
கற்புடையாள். என்ன அன்பு! என்ன மனவுறுதி! மஹா அதி
சயம்! இத்தகைய அன்பிற் சிறந்த மனையாளும் இக்கலியுகத்தி

ருக்கின்றனளே! பார். இவளுக்கு நிகராக எவளைச் சொல்லக் கூடும்." என்று பலவாறு வியந்துகொண்டிருந்தான். அதைக் கேட்ட பட்டஸ்திரீயாகிய கனகாம்புஜம் கலகலவென்று சிரித்து, அந்த சோதியும் வெளிச்சமும் தோன்றிய திசையை நோக்கிக் காரியுமிழ்ந்து, "இவளும் ஒரு பதிவிரதையா! கணவனிறந்து இரண்டு நாளாகிவிட்டது. இதுவரையிலே உயிர்தாங்கி ஊரெல்லாம் தன்னைப் பார்த்து வியக்கும்படிப் பெருந்தீ மூட்டிக் கணவனுடன் அக்கினிப் பிரவேசஞ் செய்து தன்னுயிரை மாய்த்துக்கொள்ளும் கேவலமான இவளையும் என்னுயிர்க் காதலனே! நீர் வியந்தது எனக்கு வியப்பாயிருக்கின்றது! இவளது அன்பும் அன்பெனப் படுமா, இவள் செய்கை வீண்பெருமை விருப்பத்தைக் காட்டுகிறதே யன்றிக் கணவனிடத்திலிருக்கும் உள்ளன்பைக் காட்டவேயில்லை. தன் பிராணநாயகன் இறந்தானென்று கேட்டபோதே அல்லது கண்டபோதே தன்னை யறியாமலே உயிர் நீங்கப்பெறும் மடந்தையல்லவோ உத்தமி! கற்பிற் சிறந்தவள்! தலையன்புருவானவள்!" என்று விடை பகர்ந்தாள். அதுகேட்ட பத்மநாபன் ஒன்றுந் தோன்றாதவனாகி எவ்வித மறுமொழியுங் கூறாமலே சயனத்திற்குச் சென்றான். கனகாம்புஜமும் ஒருபுறமாகச் சயனித்துக்கொண்டு அயர்ந்து நித்திரை செய்துகொண்டிருந்தனள். அரசனுக்கோ நித்திரை வராமல் பெருங்கவலையும், சந்தேகமும், ஏக்கமும் உண்டாயின.

கணவனோடு உடன்கட்டையேறும் உத்தமியையே அன்பற்றவளென்றும், கணவனிறந்தானென்று தெரிந்தவுடனே உயிர்நீங்கப் பெறுமவளே கற்புடையாளென்றும் வற்புறுத்திக்கூறிய என் மனையாட்டிக்கு என்பால் அத்தகைய தலையன்புண்டா? நானிறந்தேனென்று கேட்ட மாத்திரத்தில் இவளும் உயிர் துறப்பாளோ? என்னுஞ் சந்தேகமும் அதனாலாகிய ஏக்கமும் தூக்கத்துக்கிடையூறாயின. அன்றுமுதல் சிலதினங்களாக அரசனுக்கு இதுவே பெரும் ஏக்கத்துக்குக் காரணமாயிருந்தபடியால் அவன் தன் மனைவியின் அன்பைப் பரிசோதிக்க வேண்டுமென்றெண்ணித் தன்னுடைய அமைச்சனாகிய சுமதி என்பவனிடத்து அந்தரங்கமாக ஆலோசித்து பின்னர் இருவரும் ஒரு சூழ்ச்சி செய்யலுற்றார்கள்.

அஃதென்னவெனில்:—ஒருநாட் காலையில் பத்மநாபனும், சுமதியும் தங்கள் சேனை சகிதமாக வனத்திற்கு வேட்டையாடச் செல்லப் புறப்படும்போது, அரசன் தன் மனைவியை நோக்கி, என் கண்மணியே! ஆரணியத்திலனேக துஷ்ட மிருகங்களிருப்பனவாகவும், அவை நம் பிரஜைகளுக்கு துன்பஞ் செய்வனவாகவும் தெ

றிய வருகிறபடியால், நானும் மந்திரியாகிய சுமதியும் சேனை சகித மாக வேட்டைக்குச் சென்று மாலைப்போது திரும்புவோம்." என்று சொல்லி விடைபெற்றுக்கொண்டு சென்று இருளடர்ந்த காட்டிற் பிரவேசித்தான்.

அரசனும் மந்திரியும் முன்னமே ஒருவருக்குந் தெரியாத வகைக்கு மஹா அந்தரங்கமாகச் செய்துகொண்ட ஏற்பாட்டின்படி சேனையை ஓரிடத்திலேயே யிருக்கும்படியாகக் கட்டளையிட்டுவிட்டு அவ்விருவரும் மாத்திரம் ஒரு புலியைத் துரத்திக்கொண்டு போவதுபோல் நடித்துக் காட்டுக்குள் நெடுந்தூரம் ஒருவர் கண்ணுக்குந் தெரியாத இடத்திற்குக் குதிரைமேலேறிச் சென்றார்கள். அங்கு சுவாசம் நன்றாய் விடுவதற்கேற்ற சிறு துவாரங்களமைந்த பெட்டியொன்று முன்னமே யமைக்கப்பட்டிருந்தபடியால் அதற்குள் அரசன் படுத்துக்கொண்டான். அப்பேழையைக் குதிரைமேலேற்றிக்கொண்டு அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக மந்திரி சைனியமிருந்த இடத்திற்குவந்து, "பரிஜனங்களே! என் சொல்வேன்! என் சொல்வேன்!! என் செய்வோம்!!! ஒரு கொடும் புலி நம் அரசன்மேற் பாய்ந்து கொன்றுவிட்டது. இதோ அவர் பிரேதம் இப்பெட்டியிலிருக்கின்றது. விரைவில் நாம் நகரைப் போய்ச் சேருவோம்" என்றனன். அதுகேட்ட சைனியமெல்லாம் இடியோசை கேட்ட அரவுபோல மனங்கலங்கி மஹா துக்கக் குறிகளோடு சாப்பறைகளை அறைந்துகொண்டும், கறுப்புக் கொடிகளைப் பிடித்துக்கொண்டும் உத்தமதானபுரமாகிய இராஜதானியை நோக்கி வரத் திரும்பினார்கள். அந்தச் சமயம் பட்டஸ்திரீயாகிய கனகாம்புஜம் நறுமஞ்சன நீராடி,

"கட்கினியாள் காதலன், காதல்வகை புரிவாள்,
உட்கொழி மாதரான் பெண்."

(கண்ணுக்கினியவளாகவும், தன்னாயகனுக்கு விருப்பமான பொருள்களையே யணிந்து அவன் தன்னிடத்தன்பு செலுத்தும் வகைக்குத் தன்னை யலங்கரித்துக் கொள்பவளாகவு மிருப்பவளே பெண்.) என்னும் பிரமாணப்படித் தன்னை யலங்கரித்துக்கொண்டும் மேலுப்பரிகையில் தாதிமார்களோடு பந்து விளையாடிக்கொண்டும், தன்னுயிர்க் காதலனாகிய பத்மநாபன் சென்ற திசையை நோக்கிக்கொண்டும், அவனுடைய நல்வருகையை எதிர்பார்த்த வண்ணமாகவே யிருந்தனள். அத்தருணம் சாப்பறை முழங்கிக் கொண்டு துக்கக் குறிகளோடு நகர்நோக்கித் திரும்பிவரும் சைனியத்தை இராஜஸ்திரீ கண்ணுற்றபோது, "ஓகோ! என்னுயிர்க்காதலனாகிய இவ்வூர் ராஜன் இறந்தான்." என்று குறிப்பாலுணர்ந்தும் திடீரென்று கீழே வீழ்ந்து உயிர் துறந்தனள்,

இதைக்கண்ட தாதிமார் "அம்மவோ! நிஷ்காரணமாக மூர்ச்சையாய் விட்டனையே" என்று புலம்பிப் பலவகையான சிகிச்சைகள் செய்தும் பய—றி அவள் பிரேதமாய் விட்டதை யறிந்து கூகாவெனக் கதறத் தலைப்பட்டார்கள். இவ்வாறு பட்ட ஸ்திரீ மரித்தனளென்னுஞ் சங்கதி நகர் முழுவதும் பரவி, அந்நகர்நோக்கித் திரும்பிவரும் சைனியத்துக்கும் சுமதியென்னும் மந்திரிக்கும் பேழைக்குள்ளிருந்த அரசனுக்கும் எட்டிவிட்டது. அக்கசாகர முழக்கமே நகர் முழுமைக்கும் ஒலித்துக்கொண்டிருந்தது.

"செருனலுள னொருவனின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு."

(நேற்றிருந்த ஒருவன் இன்றில்லை யென்னும் அநித்தியப் பெருமை இவ்வுலகுக்குண்டு) என்றும்,

"இன்றைக்கிருந்தாரை நாளைக்கிருப்ப ரென்றெண்ணவோ இடமில்லை" என்றும், பெரியோர் கூறிய அனுபவ வசனங்கட்கு இன்று நாம் இரண்டு பேருதாரணங்களைக் காட்சிப்பிரமாணத்தினால் இதோ கண்டோமே என்று சர்வ ஜனங்களும் ஆரவாரித்துக் கொண்டிருக்கையிலேயே, மந்திரி சேனை சகிதமாக அரண்மனை பண்டை வந்திறங்கியவுடனே, பேழையிலிருந்த அரசவள்ளல் வெளிப்பட்டுத் திடீரென்று, தன்னுயிர்க் காதலியை வளர்த்தி வைத்திருந்த இடத்திற்குச் சென்று பிரேதத்தைக் கண்ணுற்று முகத்திலறைந்துகொண்டு நிலத்தில் அடியற்ற பனைபோல் வீழ்ந்து புரண்டு புரண்டும் பிரேதத்தைப் பன்முறை முத்தமிட்டும், என் கண்ணே! என் கண்ணிற்கருமணியே! கரும்பே! கரும்பின்சுவையே! தித்திக்குந் தெள்ளமுதே! செந்தேனே! பாகே! ஐயகோ! அந்தோ! அசோ! என செய்தேன்! என் செய்தேன்! என் பேதமை இருந்தவாறு என்சொல்லேன்! என் சொல்லேன்! பேதையேன்; உன கற்பினிலக்கணத்தைச் சோதிக்குமாறு செய்த பரீட்[illegible]ஷபரீட்சையாய் முடிந்ததே; தெய்வமே இப்படியுஞ் செய்வா[illegible]! என்னினை இருந்தவாறு என்னே! என்னே! நின்னைப் பிரிந்து ஆற்றகில்லேன்! துணைபிரிந்த அன்றில்போல் யான் வருந்தவதழக்கா; இம்மையை யென்பது எத்துணையும் இதுவரையும் அறியா எனக்கு இப்பரிபடை வாய்ந்ததும் விதிவசமோ! அலலது தெய்வ சங்கற்பமோ! அறியேன்! என்னைப்பிரிந்து எங்குற்றாய! எங்குற்றாய! இனி எப்பிறப்பிலுனைக் காண்பேனோ? பொன்னூட்டின் மடவாருடன் பந்தாடத்தான் சென்றனையோ! இவ்வுலக வாழ்க்கை உனக்குக் கைத்ததோ! என்று பலவாறு கதறி,

"என்னுயிர் நீயேயன்றோ வென்னுளம் நீயேயன்றோ
உன்னையான் பிரியாவின்னுமுயிர் கொடேயிருந் தேனீயென்
முன்னரே வாராயாயின் முடிவனீ யிருக்குந்தானந்
தன்னையே சாற்றுகென்றே தளர்ச்சியோ டழைக்கின்றேனே."

என்னுயிர்நிலை நீயல்லவா. (நம் இருவருக்கும் உண்டாயிருந்த அன்னியோன்னியங் காரணமாக) என்னுள்ளம் நீயேயல்லவா! உன்னைப் பிரிந்து இன்னும் நான் உயிர் தரித்திருக்கின்றேனே! நீ (உடனே!) எனக்கு முன்வாராவிடில் நானும் இறந்துவிடுவேன். நீ (அவ்வாறு வாராவிடினும்) போயிருக்குமிடத்தையாவது அறிவித்தால் அங்கு வந்தேனும் உன்னைக் காண்பேன் என்று உன்னை உள்ளன்போடு அழைக்கின்றேன். எனப் பெரியோர் வாக்கினாலும் பிரலாபித்தும், பிரேதம் பிரேதமாகவே யிருந்தபடியினால், அரசன் மனஞ்சகியாதவனாகித் தன்னுடைவாளை யுருவித்தற்கொலை புரிந்து கொள்ள மார்பினிடத்துக் கொண்டுபோனான். அப்போது சர்வ ஜீவசாட்சிச் சொரூபராகவும், அகிலலோக காரணராகியும், தீர்ந்த "அன்பாய அன்பர்க்கு அவரனபினும் அன்பர்" ஆகியும், சர்வ சக்திபராயிருந்தும் அன்பர் மனமவருந்தச் சகிக்கச்சக்தி இல்லாதவராயுமுள்ள தயாநிதியாம் நம்பெருமான் தம் அருட்சக்தி சகிதமாக அங்கு கோடிசூரியப் பிரகாசத்தோடு எதிர்தோன்றி அவ்வரசனுக்கு தெரிசன மனுக்கிரகித்து, "அன்பனே! நில்! நில்!! நில் !!! பத்மநாப! பதறவேண்டாம். பன்னெடுகொள் நீயும் உன் காதலியாகிய கனகாம்புஜமும் நம்பால் இடையறாத அன்பு செலுத்தியும் நீயே செங்கோல் கோடாது அரசு புரிந்தும் வந்தமையால், யாம் மனமகிழ்ந்தோம். உன் பிராணநாயகியினுயிரை மீண்டும் அனுக்கிரகித்தோம். கற்பிற் சிறந்த அவளும் அன்பிற் சிறந்த நீயும் இன்னும் நெடுங்காலம் சுகஜீவிகளாய் வாழ்வீர்கள்." என்று திருவாய் மலர்ந்தருளினார். உடனே உயிர்நீங்கிய இராஜஸ்திரீ ஓலமென வெழுந்து தனதுயிர்க் காதலனை யணைத்து முத்தமிட அவனும் தன்னைமறந்து பரவசமாகி, இதுகாறும் யான்கண்டவெல்லாம் கனவோ அல்லது நனவோ என்று சிறிதுநேரம் ஐயுற்றுப் பிறகு தெளிந்து தனதுயிர்க்காதலியை யார்வமுடன் ஆ…ஞ் செய்து தன் பரிசோதனை விஷயத்தை மன்னிக்குமாறு வேண்டிய உபசார வார்த்தைகள் கூறி ஆனந்தக்கடலிலாழ்ந்தான்.

"வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
ஊனாகி யுயிராகி யுண்மையுமாயின் மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே!"

என்று அவ்விருவரும் தனித்தனியே பெரியோர் வாக்கால் ஆனந்தக் கண்ணீர் அருவிபோற்பரவவும், சொற்கள் குழறவும்

பன்முறைத் தேவ தேவரை வணங்க அத்தயாநிதியும் அவர்கட்கு வாழ்க என்று ஆசிகூறி மறைந்தனர். "யார்க்கும் முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ!" என்று பெரியோர் பெருமையை உலகறிய விரித்துரைத்த பெரியோர் கூறிய அமுத வாக்கும் பொய்யாமோ? "அன்பின் வழியதுயிர் நிலை" என்று தெய்வப்புலமை வாய்ந்த திருவள்ளுவ நாயனார் கூறிய அற்புத வசனத்திற்கு இச்சரித்திரம் ஒருதாரணமாகயிருத்தலை இதனைவாசிப்போர் கவனித்தல் வேண்டும்.

பால் மஹாமுனிவர் கொரிந்தியருக்கு எழுதிய நிருபத்தில் அன்பின் தன்மையைப்பற்றி சொல்லியிருப்பதாவது:—

நான் மனுஷர் பாஷைகளையும் தூதர் பாஷைகளையும் பேசினாலும், அன்பு எனக்கிராவிட்டால், சத்தமிடுகிற வெண்கலம்போலவும், ஓசையிடுகிற கைத்தாளம்போலவும் இருப்பேன். நான் தீர்க்கதரிசன வரத்தை உடையவனாயிருந்து, சகல ரகசியங்களையும் சகல அறிவையும் அறிந்தாலும், மலைகளைப் பேர்க்கத்தக்கதாக சகல விசுவாசமுள்ளவனாயிருந்தாலும், அன்பு எனக்கிராவிட்டால் நான் ஒன்றுமில்லை. எனக்கு உண்டான யாவற்றையும் நான் அன்னதானம் பண்ணினாலும், என் சரீரத்தைச் சுட்டெரிக்கப்படுவதற்குக் கொடுத்தாலும், அன்பு எனக்கிராவிட்டால் எனக்குப் பிரயோஜனம் ஒன்றுமில்லை. அன்பு நீடிய சாந்தமும் தயவுமுள்ளது; அன்புக்குப் பொறாமையில்லை; அன்பு தன்னைப் புகழாது, இறுமாப்பாயிராது, அயோக்கியமானதைச் செய்யாது, தற்பொழிவை நாடாது, சினமடையாது, தீங்கு நினையாது, அநியாயத்தில் சந்தோஷப்படாமல், சத்தியத்தில் சந்தோஷப்படும். சகலத்தையும் தாங்கும், சகலத்தையும் விசுவாசிக்கும், சகலத்தையும் நம்பும், சகலத்தையும் சகிக்கும், அன்பு ஒருகாலும் ஒழியாது.

இப்பொழுது விசுவாசம், நம்பிக்கை, அன்பு இம்மூன்றும் நிலைத்திருக்கிறது; இவைகளில் அன்பே பெரியது.

"அன்புசிவ மிரண்டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தாருமறிந்திலர்
அன்பே சிவமாவ தாருமறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருப்பாரே."

என்ற திருமந்திரத்தையும நோக்குக.

"அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு."

என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் கூறியதையும் அறிக.

## மாச்சி மாச்சித் தம்பனம்.



இதுகாறும் வளரும் பருவத்தைப் பற்றிச் சிந்தித்தோம். இனிமேல் தளரும் பருவத்தைப் பற்றிச் சிந்திப்போமாக. இதுவரையும் சாலக் களிப்புற்றுத் துள்ளித் துடுக்குடன் கொக்கரித்துத் திரியும்படி மனுஷனை வித்தையாட்டிய வாலப்பருவம் நம்மிடம் வழிமுதலா யனுப்பிக்கொண்டு போகாமல் நம்மைவிட்டு மெல்லக் கடந்துவிடுகிறது.

"நீரிற் குமிழி யிளமை நிறை செல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்—நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்காளென்னே
வழுத்தா தெம்பிரான் மன்று."

நாம் போற்றிப் புனைந்து சீவிச்சிணுக்கெடுத்த முடிகள் நரைத்து உதிருகின்றன. நாம் அத்தர், பன்னீர், ரோஸ்வாட்டர், சுகந்தவர்க்கத் திரவங்களில் கைக்குட்டைகளை நனைத்துத் துடைத்துத் துடைத்து நிலக்கண்ணாடிகளில் அலுக்கிக் குலுக்கி நிமிர்த்துச் சரித்து மீசையை முறுக்கி திரும்பத் திரும்ப அழகுபார்த்த பானிலாக் குழவிபோன்ற முகங்களின் அழகு குறைந்து சுரிப்பு விழத் தொடங்கிவிடுகின்றது. மேலும், சம்சார சாகரமென்னப்படும் இல்லற வாழ்க்கையை அனுசரித்துவருவோர் மிஞ்சிபது நாற்பத்தைந்து வயது மட்டுந்தான் பொருள் சேர்க்கக்கூடும். பின்பு செலவு வரவைவிட அதிகமாகவே யிருக்கும்.

---

## செல்வம்.

"முனிவரும் மன்னவரு முன்னுவ பொன்னான் முடியும்" என்று ஸ்ரீ மாணிக்கவாசகர் திருக்கோவையாரில் கூறுவதுபோல், தபோதனர்களாயினும், அரசர்களாயினும் தாம் விரும்பியவற்றைச் செய்து முடிப்பதற்குப் பொருள் அவசியம். தருமத்திற்கு மின்பத்திற்கும் துணைக்காரணம் செல்வமாகும். அழியாப் பொருளாகிய கல்வியைச் சம்பாதிப்பதற்கும், கற்ற கல்வியைத் தனக்கும் பிறர்க்கும் பயன்படுத்துவதற்கும் கருவி செல்வமே.

## பஞ்சதந்திரம்.

" திரவியந்தானே புத்தி திரவியந்தானே வித்தை
திரவியந்தானே சுத்தந் திரவியந்தானே சித்தி
திரவியந்தானே சத்தி திரவியந்தானே முத்தி
திரவியந்தானே யாதுஞ் செய்வதல்லாது முண்டோ."

" சத்துவம் புத்திவித்தை சதுர்விதார்த் தங்களான
இத்தனை விதமுஞ்செல்வ மில்லையே யில்லையாகுஞ்
சத்துவம் புத்திவித்தை சதுர்விதார்த் தங்களான
இத்தனை விதமுஞ்செல்வ மெய்திடி லெய்துமன்றே."

" நற்பொரு ளறத்தையின்ப நலத்தை ஞானத்தைமிக்க
சொற்பெறு புகழையென்றுந் துகளறு பெருமைதன்னைப்
பற்பல ருறவைநட்பைப் பகைதவிர்த் திடுந் திறத்தைப்
பொற்புறு கதியையெல்லாம் பொருளலாற் றருவதின்றே."

## சீவகசிந்தாமணி.

" வென்றி ஆக்கலும், மேதக வாக்கலும்,
அன்றியுங் கல்வி யோடழ காக்கலும்,
குன்றினார் தமைக் குன்றென ஆக்கலும்
பொன்றுஞ் சாகத்தினாய்! பொருள் செய்யுமே."

## சீறாப்புராணம்.

" குடித்தனம் பெருமைசேர்ந்த குலத்தினுக் குயர்ந்தமேன்மை
படித்தலம் புகழுஞ்செங்கோற் பார்த்திவராத றேய்ந்து
மிடித்தவர் பெரியராதன் மிகுபுகழ் கிடைத்தல்கையிற்
பிடித்திடும் பொருளதன்றி பிறிதில உலகத்தன்றே."

" அறனின்பங் கல்வி யழகுகுல னுண்மை
யுறவுண்டாஞ் செல்வமுளதேன்—முறையாகச்
சேரின் வளமின்றேற் றேயுமிருமைக் கருவி
யாரும் பொருணெறி யிஃதாம்."

என்று நீதியியலில் சொல்லியிருப்பதுபோல் ஒருவனுக்குச் செல்வமுளதேல் தருமமும், இன்பமும், கல்வியும், அழகும், குலப்பெருமையும், ஆண்தன்மையும் உறவும் உண்டாகும். அச் செல்வம் நீதிமுறைப்படி சேருமானால் விர்த்தியாம். அங்ஙனமின்றித் தீயவழியாகச் சேருமாயின் அழியும். இம்மை, மறுமையாகிய இருவகை இன்பத்திற்கும் செல்வமே காரணமாம்.

சிறிய திருமடல்.

" அறம் பொரு ளின்ப மென்
றூராரிவற்றி னிடையதனை யெய்துவார்
சீரா ரிருதலையு மெய்துவார்."

அறப்பளீச்சுரசதகம்.

" மேலான சாதியி லுதித்தாலு மதிலென்ன
வெகுவித்தை கற்றுமென்ன
மிக்கவதி ரூபமொரு சற்குண மிருந்தென்ன
மிகுமானி யாகிலென்ன
பாலான மொழியுடைய வனுயென்ன வாசாரப்
பரனுயிருந்து மென்ன
பார்மீது வீரமொடு ஞானவானு யென்ன
பாக்கிய மிலாதபோது
வாலாய மாய்பெற்ற தாயுஞ் சலித்திடுவள்
வந்தசுற்றமு மிகழுமே
மரியாதை யில்லாம லனைவரும் பேசுவார்
மனைவியுந் தூறுசொல்வாள்
ஆலால முண்ட கனிவாயனே நேயனே
வைய னெமதருமை மதவே
ளனுதினமும் மனதுநினை தருசதுர கிரிவள
ரறப்பளீச்சுர தேவனே."

என அம்பலவாண கவிராயர் கூறியிருக்கின்றனர்.

திருக்குறள்.

" அருளிலார்க் கவ்வுலக மில்லை
பொருளிலார்க் கிவ்வுலகமில்லா தியாங்கு."

இதில் செல்வமில்லாதவர்க்கு இவ்வுலகத்தின்கண் இன்பம் இல்லையாயினர்ப்போல் என்றார் திருவள்ளுவரும். இதனாலேயே ஔவையார், "திரைகடலோடியுந் திரவியந்தேடு" "தேடாதழிக்கிற் பாடாய்முடியும்" எனறனர். ஏனெனில் இவ்வுலகில் பொருளுள்ளவர்களே சிறப்பாக மதிக்கப்படுகின்றனர். அவர்கள் அழகற்ற குரூபியாயிருக்கினும் அழகுற்ற மன்மதனாகவும், அவர்கள் இழிந்த நடையுடையவராயினும் அம்மீதே சிறப்புற்ற ஒழுக்க நடையாகவும் இவ்வுலகோர் எண்ணுவதால், -

### வேமன்னகவி.

"கைப்பொரு ளொன்றுள்ளானை காமவேளென் றுரைப்பார்
அப்பொருள்தான் இல்லா தருந்துயராம்—துய்ப்பானைக்
கள்ளற் சிலைவேளே யானாலும் கைத்திடுவர்
இன்னாற் புலையோனில் ஈங்கு."

எனவும்,

### பழமொழிவிளக்கம்.

"பணந்தானே யறிவாகும் பணந்தானே
வித்தையுமாம் பரிந்துதேடும்
பணந்தானே குணமாகும் பணமில்லா
தவர்பிணமாம் பான்மைசேர்வர்
பணந்தானே பேசுவிக்குந் தண்டலைநீள்
நெறியாரே பாரின்மீது
பணந்தானே பந்தியுறுங் குலங்கீழாங்
குப்பையிலே படுக்குந்தானே."

கல்வியுடையவரும் வறியவராயின் தீராக்கவலையினாலும், பசிநோயினாலும் வருந்துவதுடன் ஏனையோர் சிநேகத்தையும் மறந்துவிட வேண்டியதாகும். மேலும், செல்வமில்லாதவர் "கைத்துடையான் காற்கீழ் ஒதுங்கும் கடல் ஞாலம்." என்பது உண்மையாதலின் செல்வர் வீட்டுவாயிலை நோக்கிச் செல்லுதல் துன்பமும், அவரைக் காணுதல் துன்பமும், கண்டாலும் அவர் மறுத்தபோதுண்டாகுந் துன்பமும், மறுக்காவிட்டதும் அவர் கொடுத்ததை வாங்குதல் துன்பமும், அதனைக் கொண்டுவந்து போஜனத்துக்கு வேண்டுமவைகளைக் கூட்டுதல் துன்பமும் முதலிய பலதுன்பங்களாலும் நாடோறும் வருந்துவர்.



"அன்ன விசார மதுவே விசார மது வொழிந்தாற்
சொன்ன விசாரந் தொலையா விசாரம் நற்றோகையரைப்
பன்ன விசாரம் பலகால் விசாரமிப் பாவி நெஞ்சுக்
கென்ன விசாரம் வைத்தா யிறைவா கச்சியேகம்பனே."

பொருளைத் தேடுவது பெருந்துன்பம், அதைக் காப்பாற்றுவது அதனினுந் துன்பம், அதைச் செலவழிக்கும்போதும் மகாதுன்பம், இவ்விதமாக, செல்வமானது நமது கைக்கு வரத் தொடங்கிய காலமுதல் அது நமது கையைவிட்டு அகன்றுபோகுங் காலம் வரையில் துன்பத்தைக் கொடுத்துக்கொண்டே வந்து பலவகைக் கிலேசங்கட்குங் காரணமாகின்றது. இதுபற்றியே பெரியோரும்,

"இன்னறரும் பொருளை யீட்டுதலுந் துன்பமே
பின்னதனைப் பேணுதலுந் துன்பமே—யன்ன
தழித்தலுந் துன்பமே யந்தோ பிறர்பா
லிழத்தலுந் துன்பமே யாம்."

என்று கூறியிருக்கின்றனர்.

ஆனால் கல்வியும், தருமமும், இன்பமும், கீர்த்தியும், மனிதருக்குள்ளே பெருமையும், உறவும், நினைத்தது முடித்தலும், வெற்றியுமாகிய எல்லாம் திரளாகப் பணங் குவித்தவருக்கேயுண்டு. செல்வமில்லாதவர் உலகத்திலே நடைப்பிணமாவர். எல்லா நன்மையுமுடையவராயினும் பொருளில்லாதவரை அவருடைய தாய் தந்தை, மனைவி, மைந்தர் முதலானோரும் அவமதிப்பர்.

நல்வழி.

"கல்லானே யானாலுங் கைப்பொரு ளொன்றுண்டாயின்
எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வ—ரில்லானை
யில்லாளும் வேண்டாண்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லாதவன் வாயிற் சொல்."

எனவும் கூறினர்.

ஒரு நன்மையுமில்லாதவராயினும் பொருளுடையவரை அவர் பகைஞரும் நன்குமதிப்பர். ஏனெனில், "ஈ—டி எட்டுமட்டுங் குத்தும் பணம் பாதாளம் மட்டும் பாயும்." ஆதலால் தக்க காலத்திலேயே

புண்ணியவசத்தினால்செல்வமதுபெறவேண்டும்;பொருளைரட்சிக்கவேண்டும்
புத்தியுடனது ஒன்று நூறாகவேசெய்து போதவும் வளர்க்கவேண்டும்,
உண்ணவேண்டும் பின்பு நல்ல வஸ்திராபரணம் உடலில் தரிக்கவேண்டும்
உற்றபெரியோர் கவிஞர் தமராதுலர்க்குதவி ஓங்குபுகழ் தேடவேண்டும்
மண்ணில்வெகுதர்மங்கள்செயவேண்டுமுயர்மோட்சவழிதேடவேண்டுமன்றி
வீணில் புதைத்துவைத்தியாத பேர்களே மார்க்கமறியாக் குருடராம்."

என்று சொல்லியிருக்கும் வண்ணம், தருமநெறியாலே சம்பாதிக்கப்படும் பொருளை நான்குபாகமாகப் பகுத்து அவைகளுள் இரண்டு பாகத்தைத் தமது அனுபோகத்திற்காக்கி, ஒரு பாகத்தை ஆஸ்தியின் பொருட்டுச் சேர்த்து எஞ்சிநின்ற ஒரு பாகத்தைக் கொண்டே தருமம் செயல்வேண்டும். "ஏனெனில தருமமே என்றும் தலைகாக்கும். ஆஸ்தியின் பொருட்டுச் சேர்க்காது "வரவாப் போக்கி வரப்போக்கி" என்பதுபோல் தான் சம்பாத்தியம் பண்ணினதை யெல்லாஞ் செலவிட்டவர், பின்பு வியாதியினாலேனும்

திருத்தாப்பியத்தினாலேனும் பொருள் சம்பாதிக்கும் திறமையில்லாதபோது பெண்டிர் பிள்ளைகளோடு வருந்தமடைவர். முதலிற் செலவு சுருங்கினால் பொருள் ஒருகாலத்தும் நீங்காது. எவனுக்கு முதலிற் செலவு மிகுமோ அவன் வாழ்க்கை உள்ளதுபோலத் தோன்றிக் கெட்டுவிடும்.

"ஆனமுதலில் அதிகஞ் செலவானால்
மானமழிந்து மதிகெட்டுப் போனதிசை—எல்லார்க்கும்
தீயனாய் எழ்பிறப்புங் கள்ளனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு."

எனெனில்,

"மெத்தவுந் தானேருவித்து வீட்டில்வைத்த நெல்லதனை
நித்த மெடுக்கிலந்த நெல்லுமற்றுப் போவதுபோல்
பொருள்தேடத் துக்கமதைப் போற்றிவைக்கத் துக்கமதாம்
பொருளைச் செலவழிக்கப் போம்போதும் துக்கமதாம்."

By ever taking out and never putting in, one soon reaches the bottom.

ஆதலால் அறிவும், ஆண்மையும், மானமுமுடையவர்க்கழகுதாமே வருந்திச் சம்பாதித்த பொருளை தாமுமனுபவித்துச் சற்பாத்திரத்தில் செலவிடுவதாம். அப்படிச் செய்பவனுடைய நாமம் இவ்வுலகத்தில் சந்திராதித்தர் உள்ளளவும் கீர்த்திபெற்று ஒங்குவதுமல்லாமல், மறுமையிலும் ஜாஜ்வல்லியமாய்ப் பிரகாசிக்கின்ற சம்மனசுகள் அவனைச் சுற்றிலும் நின்று ஜய! ஜய! விஜீபவ! என வாழ்த்திப் பூமாரி பொழிவார்.

## பழமொழிவிளக்கம்.

"தன்மமது செயல்வேண்டுந் தண்டலைநீள்
நெறியாரே நயவசெய்வார்
வன்மவினை செயல்வேண்டாம் பொய்வேண்டாம்
பிறரையொன்றும் வருத்தல்வேண்டாம்
கன்மநெறி வரவேண்டாம் வேண்டுவது
பலர்க்குமுபகாரமாகும்
நன்மைசெய்தார் நலம்பெறுவர் தீமைசெய்தார்
தீமைபெற்று நலிவர்தாமே.

"விற்பன்னர்க்கு வாழ்வுவந்தால் மிகவணங்கிக்
கண்ணோட்ட மிகவுஞ்செய்வார்
சொற்பருக்கு வாழ்வுவந்தாற் கண்தெரியா
திறுமாந்து துன்பஞ்செய்வார்
பற்பலர்க்கு வாழ்வுதருந் தண்டலையாரே
சொன்னேன் பண்பில்லாத
அற்பருக்கு வாழ்வுவந்தா லர்த்தராத்
திரிகுடைமே லாகுந்தானே.

## ஈகை.

"பரோபகாரார்த்தமிதம் சரீரம்" என்ற சுலோகத்தின்படி பரோபகாரத்தின் பொருட்டு இச்சரீரம் உழைத்து வரவேண்டுமென்னும் ஆன்றோர் மொழியை அணுவளவும் மனதில் நினையாது தாமும் தம் குடும்பஸ்தர்களும் உண்டுடுத்திக் கண்டுகளித்துப் பெண்டு பிள்ளைகளுடன் உலகில் வாழ்ந்திருந்தாற் போதுமானது, பிறர் கெட்டாலென்ன, வாழ்ந்தாலென்ன, அதனால் நமக்கென்ன பயனென்று தற்சுகம் நினைந்து உற்சாகமாய் வாழ்ந்திருத்தல் உத்தமர்க்குற்ற உயர்ந்த வாழ்வாகாதென்பது ஆதிபகவானின் அருங்கருத்தாகிய நீதிநூல்களின் கட்டளையாகும். இதுபற்றியன்றோ?

"எல்லாரும் இவ்வுலகில் இன்புற்றிருப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே."

என்று தாயுமானவரும்,

"நாடெங்கும்வாழக் கேடொன்றுமில்லை."

என்று ஔவையாரும் கூறியிருப்பதோடு,

"ஆறிடும் மேடும் மடுவும்போலாஞ் செல்வம்
மாறிடும் ஏறிடும் மானிலத்தீர்—சோறிடும்
தண்ணீரும் வாருந் தர்மமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து."

என்றும் அதாவது:—செல்வம் ஆறிடு மேடுபோல் அழிந்தழிந்து உற்பத்தியாவதனால்,

"கைத்துண்டாம் போழ்தே கறவாதறஞ்செய்க."

என்னும் முதுமொழிக்கிணங்க, பொருளிருக்கும்போழ்தே புண்ணியந் தேடுதற்கெண்ணி, ஏழைகட்கிரங்கி இனியமொழிகூறி, உண்ணீர் உண்ணீர் என்று உபசாரம்புரிந்து, தண்ணீரும் சோறும் தயையுடனளித்து புண்ணியஞ்செய்யும் புகழுடம்பெடுக்கவேண்டுமென்னும் கருத்தையுள்ளடக்கி, ஔவையானவள், புகழேந்தியென்னும் புலவரைநோக்கி, தன் ஐந்துவிரலையு முடக்காமல் நெருக்கி உள்ளங்கையைக் குவித்தும், ஐந்துவிரலையு முடக்கிப் பிடித்தும், கடைவிரலிரண்டையும் முடக்கி, மற்ற மூவிரலையுங் கோணமாக நிறுத்தியும், நால்விரலை முடக்கிச் சுட்டுவிரலை வார்த்துவமுகமாக நிறுத்தியும, ஐந்துவிரலையும குவித்தும் காட்டி, இந்த ஐந்து சமிக்கையைக் குறித்து ஒரு வெண்பாப் பாடவேண்டும் என்ற மாத்திரத்தில் அவர்,

"ஐயமிடுமின் அறநெறியைக் கைப்பிடிமின்
இவ்வளவேனும் அன்னம் இட்டுண்மின்—தெய்வம்
ஒருவனே யென்று முணர வல்லீரேல்
அருவினைக ளோய்ந்து மறும்."

என்று பாடியிருக்கிறார். அணுவேனும் தர்மம் அன்புடன் செய்ய வேண்டுமென்றும், கடவுளடியைக் கனவிலும மறக்கக்கூடாதென்றும் உபதேசஞ் செய்தாள் ஞானத்தாய் ஔவைபிராட்டி.

"பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர்-விருந்தோம்பி
வேள்வி தலைப்படாதார்."

என்னும் நாயனார் அமுதவாக்கின்படி, பொருளை மிகவிரும்பி அறஞ்செய்யாது சேர்த்து, முடிவிற் புகழின்றி வீணே யிழந்தோமெனறு மிகவுந் தவிப்பவர்கள், பச்சைத்தண்ணீரை வேரிற்காணாத பசலைக்கொடிபோல் வாடி, துயரென்கிற கலியாற் பிடிக்கப்பட்டு, வறுமையென்னு மறலியின் வாதைபாற் சிக்கி, லோபியென்னும் பெயரால் உலகத்தாரிகழ புண்ணியமென்னும் அலங்கரிப்பிலலாப் புருடராகிப் பூமியில் திரிவர். அவர்கள் ஆடையில்லாப் பெண் மணிபோலும், அலங்கரிப்பில்லா அரண்மனைபோலும், அன்பில்லா அறம்போலும், விளையமில்லாத வித்தைபோலும், கூட்டுறவில்லா குடிவாழ்க்கைபோலும், ஒற்றுமையிலலா ஊர்நலம்போலும், கதிரமதியில்லாக் ககனத்தைபபோலும், புலவர்களில்லாச் சபையைபபோலும், வஞ்சகரியற்றும் மாதவம்போலும், இங்கிதமில்லாச் சங்கீதம் போலும், மந்திரியில்லா மங்பனைப்போலும், தொந்தரவடைந்து தெய்வ அருள்பெறாது தவஜென்மமின்றாத அவஜென்மமாய் நரஜென்மமென்பது நரகஜென்மமாகி புகழொளியிலலா இகழிருள் சூழ்ந்து புவியில் வாழ்கின்றனர். பிச்சையிட்டுக் கெட்டவர்களும் பிள்ளைபெற்றுக் கெட்டவர்களும் உலகிலில்லை. ஆதலால்,

"பகுத்துண்டு பல்லுயிரோம் புதல்நூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந்தலை."

ஆதாவது, தனக்குக் கிடைத்த பொருளை பை பையாய் தூக்கிக் கொடுக்கவேண்டு மென்றல்ல, தேகியென்று வந்தவர்களுக்கு நாஸ்தியென்று சொல்லாமல், ஜீவகாருண்யத்தின் பொருட்டு பகிர்ந்து கொடுத்துத் தாலும் உணணுதலானது விதிக்கப்பட்ட உத்தம தர்மங்களிலெல்லாம் முதன்மையான உன்னத தர்மமாகும்.

தாம் சம்பாதித்த பொருளை சத்விஷயத்தில் கிஞ்சித்தேனும் செலவுசெய்யாமல் பாமலோபியா யிருப்பவன் 'எட்டி பழுததென்ன ஈயாதார் வாழ்ந்தென்ன?" என்னும் பழமொழிபோலும்,

"ஈக்கள் தேன்கூட்டி லெடுப்பா ரிடங்கொடுத்துப்
போயலைகின்ற தொருபுத்தி யீனம்போலும்,
சோரத்திற் பெற்றபிள்ளைசொந்தமென்று முத்தாடி
பேரிட்டழைக்கின்ற பேடிதனைப்போலும்."

"காகத்தின் கூட்டில் கருங்குயில்கள் முட்டையிட
மோகமுடன் காகமுந்தான் முட்டையென்றே எண்ணுதல்போல்
இன்னநெடு நாளிருப்போம் இதுவே சதமென்று
பொன்னைமிகத்தேடிப் புதைத்து வைக்கு மாந்தர்களைச்
சீதேவி பூதேவி சிரிப்பாரிவன் றேனியாம்
மூதேவி ஜென்மமென்று மொழிந்தார் மனுநூலோர்."

மேலும்,

"பொன்னாசை யுள்ளவர்க்குப் போசனத்தி லிச்சையில்லை
அன்னைசுற்றம் தருமமானதிலு மிச்சையில்லை
வெட்கமில்லைப் போகலாம் வேளையின்ன தென்றுமில்லை
இக்குணமுள்ளோர்ப் பேய்க்கிணையாகு மென்றனரே."

"தின்னுமலுண்ணுமற் றேடி மிகச்சேர்த்துப்
புண்ணியமுஞ் செய்யாமல் புதைத்துவைக்கும் லுத்தர்பொருள்
தெண்டம் பெரும்பிடிக்கும் தீக்கும் திருடருக்கும்
வண்டமான வேசைகட்கும் வலுவந்தக்காரருக்கும்
இதமிலாப் பேடிகட்கும் எல்லாப் பிசாசுகட்கும்
உதவுமே ஈயாவுலுத்தர் பொருளதுதான்."

"நாயானது கொழுத்தால் காட்டிலதை யார்புசிப்பார்
ஈயாத லோபியர்க்கு எல்லா மிருந்துமென்ன
வாறுகோலானாலும் மாளிகையெல்லாம் விளக்கும்
பேராய்க் குரங்கு பிடித்தாற் குதவிசெய்யும்
ஈயாதார் லோபிகளால் எவர்க்கும் உபகாரம்
வாயாதவர் கொடுக்கமாட்டா ரொருநாளும்."

"சித்திரமும் கைப்பழக்கஞ் செந்தமிழு நாப்பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்—நித்தம்
நடையு நடைப்பழக்க நட்புந் தயையும்
கொடையும் பிறவிக்குணம்."

என்பதுபோல் புண்ணியவசத்தினாற் பெற்ற செல்வத்தைத் தாமு மனுபவித்துச் சத்பாத்திரத்தில் செலவிடாதவர்கள் பொருளினால் யாதொரு பயனும் பெறமாட்டார்கள்.

அவ்விதஞ் செய்யாது ஜீவகாருண்யமின்றித் தாமே அதை உண்ணுதலானது ஒருவனிடத்திற்போய் தாம் ஒன்றுமில்லையென்று இரக்குந் துன்பத்திலும் அதிகமான துன்பமென்றும், இதனை விட சாகுங்காலத்தில ஐம்பொறி மயங்கி அறிவழிந்து அவயவங்க

ளெல்லாம் அயர்ந்து பலவிதமான துன்பமடைவது இதனினும் மிகவும் நல்லதென்று நமக்குப் பொருள் விளங்கும்படி,

"இறத்தலி னின்னாது மன்றநிரம்பிய
தாமேத மியருணல்."—என்றும்,

"சாதலி னின்னாததில்லை இனிது அஃதூஉம்
ஈதலியை யாக்கடை."

என்றும், இயம்பி இருக்கின்றனர். இதனால் வறியவர்க்கு இல்லை யென்பதைவிட வேறு துன்பம் உலகில் இல்லையென்று வற்புறுத் திக் கூறியிருக்கின்றனர்.

"தண்டாமலீவது தாளாண்மை தண்டி
அடுத்தக்காலீவது வண்மை—அடுத்தடுத்துப்
பின்சென்றாலீவது காற்கூலி பின்சென்றும்
ஈயா னெச்சம் போலறு."

"அன்பில்லாரெல்லாந் தமக்குரியர்-அன்புடையார்
என்புமுரியர் பிறர்க்கு."

அன்பற்றவர்கள் எல்லாம் தமக்கு வேண்டுமென்று ஆத்திரத் துடன் சேர்த்துவைப்பர். அன்புடையவர்களோ தமது எலும் பையுங்கூடப் பிறர்க்குத் தத்தம செய்துவிடுவர்.

"உத்தமர்தா மியுமிடத் தோங்குபனை போல்வரே
மத்திமர்தாந் தெங்குதனை மானுவரே—முத்தலரும்
மாங்கமுகு போல்வா ரதமரவர்களே
தேங்கதலியும் போல்வார் தேர்."

பனைமரம் நீரைவிரும்பாமலே பலனைத்தரும், அதுபோல உத்த மர் பயனை எதிர்பாராமலே கொடுப்பார், தெங்கு நீர்விட்டளவுக் குப் பயன்தரும், அதுபோல மத்திமர் பயனளவை விரும்பியே கொடுப்பர். கமுகும் வாழையும் மாறாமல் நீர்விட்டால் பயன் தரும், அதுபோல அதமர் மாறாமல் பயனை எதிர்பார்த்தே கொடுப் பர்.

"உண்ணாவிருந்து முதவிகொள்ளாத வுறவும் பொன்னை
எண்ணாக் கணிகையுமின் புலவோருநல் லேவலரும்
தண்ணாரம்புல்லருந் தாமாவுங் காலுண்ணுஞ் சற்குருவும்
கண்ணாரக்காணின் மகிழ்வார்கள் செல்வக் கயவர்களே."

உண்ணாத விருந்தினரும், உதவியை யேற்றுக்கொள்ளாத உறவின ரும், பொன்னை மதியாத வேசியரும், இனிய புலவோரும், நல்ல ஏவலாளிகளும், குளிர்ச்சிபொருந்திய புல்லைத் தின்னாத குதிரை

யும், காற்றையுண்ணுகின்ற சற்குருவும் ஆகிய இவர்களை செல்வத்தையுடைய கிழமக்கள் கண்ணாரக்கண்டால் களிப்படைவார்கள். அவர்கள் அவ்விதம் மகிழ்தற்குக் காரணம் செலவில்லாமையே.

அன்பு முதிர்ச்சியால் என்புருகிக் கசிந்து இறைவனருளைப் பெறவேண்டுமென்ற எண்ணத்துடன் செய்யாமல் மாய்மால வேஷதாரிகளாய் செய்பவர்கள் சேற்றிலூன்றிய கம்பம்போலும், ஆற்றிற் கிடந்து நாறும் பஞ்சின்றுகளதுபோலும், மாறுநூலுக்கஞ்சும் வறுங்குடிபோலும், சோற்றுவியற்றுத் துணியுமற்று என்பதுபோலும், வேற்றூரிலுமலைந்து விருதாவாக காற்றுடிபோலக் காற்றிலுழன்று, கடையாணியில்லாத் தேரினைப்போலக் கவலையுறுவார்கள். இதுபற்றியன்றோ நாயனாரும்,

"அன்பகத்தில்லா வுயிர்வாழ்க்கை-வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று."

அதாவது பகுத்துண்டு வாழாதவன் இல்வாழ்க்கை நிலையானது கடினநிலத்தில் உலர்ந்த மரந்தளிர்த்தது தழைவதுபோலும் எனக் கூறியிருக்கின்றார். ஆதலால் தறபுகழ்ச்சியையே நாடி செய்யும் தர்மங்களெல்லாம அதர்மமாகும.

சில கிராமங்களில தச்சனடித்த தலைவாசலெல்லாம் உச்சியிடிக்க உலாவித்திரிந்தாலும், எச்சிறகையாலுங் காக்கையோட்டுவாரில்லாமற் பிச்சைக்காரரெல்லாம் பொசசைவற்றி லச்சைகெட்டுத் திரிகிறார்கள். இவ்விதம் தர்மசிந்தை யில்லாத லோபிகளைப்பற்றி பல வித்வான்கள பாடியிருப்பதை இங்கு கூறுவோம.

"தாமுங்கொடார் கொடுப்போர் தம்மையு மீயாதவகை
சேமஞ் செய்வாருஞ் சிலருண்டே—யேமநிழல்
இட்டுமலர் காய்கனிக ளீந்துதவு மாமரத்தைக்
கட்டுபுடை முள்ளெனவே காண்."

"கலையெல்லா முணர்ந்தாரேனும் கரிசறத் தெளிந்தாரேனும்
மலையென உயர்ந்தாரேனு மனமயல கன்றாரேனும்
உலகெலாம் புகழப்பல்லோர்க் குதவிய கையரேனும்
இலகிய விரக்கமின்றே லெழுநர கடைவரன்றே."

என்றும்,

செல்வம் நிலையாமை.

நாலடியார்.

"உண்ணான், ஒளிநிறான், ஓங்குபுகழ் செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான், பொருள்காத் திருப்பானேல், அ ஆ!
இழந்தான் என்றெண்ணப் படும்."

ஒருவன் தானும் அனுபவியாமல், பிறர்க்குங் கொடாமல் பொருளைச் சேர்த்து வைத்திருப்பானாயின், அவன் அந்தப் பொருளை இழந்தவனென்றே சொல்லவேண்டும்.

"கெட்டசாறு தவிடுகஞ்சி கிருமியுண்ட மாவரைக்
கீரைவேர் தெளிந்தமோர் முறிந்தபாகு கண்டிமா
இட்டசோறு கொழியலுப்பி டாதபுர்கை யாயினும்
எங்குமன்ப தாகநுங்க வின்பமா யிருக்குமே
வட்டபாகு பசுவின்நெய் பருப்புமுக் கனிக்குழாம்
பாளிதங் கடாளிதங்கள் பண்ணியார வகையுடன்
அட்டபாற் குழம்புகன்ன லமுதமோடு முதவினும்
அன்பிலோ டளித்திடாத வசனமென்ன வசனமே."

கெட்டசாறு, தவிடு, கஞ்சி, புழுஉண்டமா, அரைக்கீரைவேர், தெளிந்தமோர், முறிந்தபாகு, கேழ்வாருக்களி, உப்புப்போடாத கொழியற் சோறானாலும் எவ்விடத்திலும் அன்போடு இட்டதாக உண்ண இன்பந்தரும். ஆனால் பதப்பட்ட பாகு, பசுவின்நெய், பருப்பு, முக்கனிகள், பாற்சோற்று வகைகள், தாளிதங்கள், பண்ணியாரங்கள், பால் குழம்பு, சர்க்கரை, சோற்றுடனே கொடுத்தாலும் அன்போடு படைக்காத சோறு சோறல்ல.

"நல்லவர்கள் வாயா னவிலுமொழி பொய்யாமல்
இல்லையெனு தன்மைமட்டு மீவார்கள்—நல்லகுணம்
அல்லவர்கள் போவாவென் றாசைசொல்லி நாட்கழித்தே
இல்லையென்பா ரிப்பாரிலே."

"தன்னைப் புகழ்வானுஞ் சாகுமசொல்லி நிற்பானும்
பொன்னை மிகத்தேடிப் புதைப்பானும்—ஒன்னலர்தம்
நண்புத்தி கேட்பானு நாணமில்லா தானும்
பெண்புத்தி கேட்பானும் பேய்."

"கட்டி யடிப்போர்க்குங் கன்மீதி லேற்றுவர்க்கும்
எட்டி யடிப்போர்க்கு மீவரே—திட்டமுடன்
பாடுவோர்க் கீயாரே பல்லுதிரத் தாடையினிற்
போடுவோர்க் கீவார் பொருள்."

"எண்ணான்கு முப்பத்திரண்டு பற்காட்டி யிசையுடனே
பண்ணுகச் செந்தமிழ்பாடி வித்தாலுமிப் பாரிலுள்ளோர்
அண்ணாந்து கேட்ப ரழகழகென்ப ரதன்பிறகு
சுண்ணாம்பு பட்டஇலையுங் கொடார்கவி சொன்னவர்க்கே."

"பாவிதனந் தண்டிப்போர் பாலாகு மல்லதருள்
மேவுபா னன்பர்பான் மேவாதே—யோவியமே
நாயின்பாலத்தனையு நாய்தனக்கா மன்றியே
தூயவருக் காமோ சொல்."

பாவியின் பொருள் தண்டிப்பவர்களிடத்தில் சேருமேயல்லது அருள்பெற்ற தெய்வபக்தரிடத்தில் சேராது. பாவையே! நாயின் பால் முழுதும் நாய்க்குட்டிக்கேயல்லது பரிசுத்தருக்கு உதவுமோ சொல்லு.

"போற்று குருகிளைகள் பொன்னாசை யோர்க்கில்லை
தோற்று பசிக்கில்லை சுவைபாகம்—தேற்றுகவி
நேசற்கில்லை சுகமு நித்திரையுங் காமுகர்தம்
ஆசைக்கில்லை பய மானம்."

பூசிக்கத்தகுந்த குருவும், பந்துக்களும் பொன்னாசையுடையோர்க்கு இல்லையாம். ருசியும் பாசமும் மிகுந்த பசிக்கில்லையாம். சுகமும் தூக்கமும் தெளிந்த கவிவாணருக்கு இல்லை. பயமும் மானமும் காமிகளுடைய ஆசைக்கு இல்லை.

"என்பே விறகாய் இறைச்சி யறுத்திட்டு
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்போ ருருகி அகங்குழைவார்க் கன்றி
என்போன் மணியை எய்தவொண்ணாதே."—என்றும்,

"இருமலும் சோகையும் ஈளையும் வெப்பந்
தருமஞ் செய்யாதவர்தம் பாலதாகும்
உருமிடி நாகம் உரோணி கழலைத்
தருமஞ் செய்வார் பக்கற் றுழுகிலாவே."—என்றும்,

"ஆவியை எத்தினுலென் ஆதித்தன்மய மானாலென்
சேவைசெய் தின்புற்றாலென் திருக்குவாம் விழிபெற்றாலென்
ஓவியம்போ தூற்றாலென் உத்தமோத் தமனானாலென்
சிவகாருணிய மின்றேற் றீயரென் றுரைக்கலாமே."—என்றும்,

"சிவகாருண்ய முள்ளோர் செய்வதே தபஞ்செபங்கள்
சிவகாருண்ய முள்ளோர் செய்வதே தியானந் தானஞ்
சிவகாருண்ய முள்ளோர் செய்வதே தியாகம் யாகம்
சிவகாருண்ய மென்றாற் சிற்சுக மடையலாமே."—என்றும்,

"கற்றவர் கடவுட்டானஞ் சேர்ந்தவர் களைகணில்லார்
அற்றவர் அந்தணாளர் அன்றியு மவர்போல் வாக்கு
உற்றதோ ரிடுக்கண் வந்தால் உதவுதற் குரித்தன்றாகிற்
பெற்ற யிவ்வுடம்பு தன்னாற் பெரும்பய னில்லையன்றே."

என்றும்,

இன்னும் பட்டினத்தாரும்,

"வாதுக்குச் சண்டைக்குப் போவார் வருவர் வழக்குரைப்பர்
தீதுக் குதவியுஞ் செய்திடுவார் தினந்தேடியென்றும்
மாதுக் களித்து மயங்கிடுவோர் விதிமாளு மட்டும்
ஏதுக் கிவர் பிறந்தார் இறைவா கச்சி ஏகம்பனே."—என்றும்

"ஓயாமற் பொய்சொல்வர் நல்லோரை நிந்திப்பர் உற்றுப்பெற்ற
தாயாரை வைவர் சாதியாயிரஞ் செய்வர் சாத்திரங்கள்
ஆயார் பிறர்க்குபகாரஞ் செய்யார்தமை அண்டினர்க் கொன்றும்
ஈயார் இருந்தென்ன போயென்ன காண் கச்சி ஏகம்பனே."

என்றும்,

"ஈயா மனிதரை என்படைத்தாய் கச்சி ஏகம்பனே!"

என்றும், பற்பலவாறு ஈயாதவரைப்பற்றி எடுத்தெடுத்துக் கூறி அவரெடுத்த ஜென்மமும், அவரியற்றுங் குடிவாழ்க்கையும் இன்பிலாதெனை இயம்பி இருக்கின்றார்கள். அன்றியும் நம் ஔவைப் பிராட்டியாரும், "ஐயமிட்டுண்" என்று பொதுவசனமாய் எல்லோர்க்குங் கூறியிருப்பினும் மிகப் பொருளுடையோர் ஏழைகளைக் கவனியாதிருமாந் திருப்பரென்றெண்ணி அவர்கட்குத் தனியே வற்புறுத்தவேண்டுமென்று குறிப்பால் "கையொத்திருந்தால் ஐயமிட்டுண்" என்றும் கூறியிருக்கிறார். ஆதலால் இவ்வுலகிலுள்ள ஒவ்வொரு மனிதர்களும் தத்தம் சக்திக்கேற்ப, சபைகள், வித்தியாசாலைகள், தேவாலயங்கள், அன்னசத்திரங்கள், ஔஷதசாலைகள் முதலிய பொதுஜனோபகாரப் புண்ணிய விஷயத்திற்குப் பொருளுதவிபுரிந்து, தாமெடுத்த மானிடஜென்ம மகிமைக்கேற்ப புருடார்த்தம் என்னும் புகழ்ப்பொருளணிந்து தெய்வ திருவருட் கருணைக்குப் பாத்திரர்களாகி, சென்றித்துத் தமது பூத உடம்பழியினும் புகழுடம்பழியாது தமதுகுலம் என்றுந் தழைத்து இன்புற்று வாழ்வர்.

ஆனால் பாத்திரமறிந்து பிச்சையிடவேண்டும். உண்மையான துறவிகள், குருடர், அங்கவீனர், நோயாளர், அனாதிகள், விருத்தாப்பியர், முதலியோரே தானம் வாங்குகிறதற்கு அருகரான சற்பாத்திரர் என்னலாம். வேஷதாரிகளுக்கும், வேலைசெய்து பிழைக்கக்கூடியவர்களுக்கும் பொருளீதலால் அவர்கள் சோம்பலாண்டிகளாகிப் பூமிக்குப் பாரமும் சோற்றுக்குக் கேடுமாகிவிடுகின்றார்கள். தங்களால் உலகத்திற்கு விளைவிக்கக்கூடிய தானியப் பொருள்களை விளைவியாமலிருத்தலுடனமையாது, பிறரால் விளைவிக்கப்படுக்

தானியங்களையும் தங்கள் வயிற்றிலிடுவதால், அவைகளை மற்றை யோர்க்கில்லாதபடி குறைத்தும் விடுகின்றார்கள். இவர்களைப் பார்த்து ஏனைய தடியர்களும் சோம்பலாண்டிகளும் இதுவே நல்ல பிழைப்பு என்று பற்பல கபடவேடங்கள் பூண்டுகொண்டு உலகத்தைக் கெடுக்கப் புறப்பட்டுவிடுகின்றார்கள். இத்தீமையெல்லாவற்றிற்கும் காரணர் இவர்களை ஆதரித்து ஈவோரேயாதலால் அப்பாத்திரர்க்குக் கொடுப்போரும் பாவசம்பந்தமுறுவர். இக் கருத்துப்பற்றியே சிவப்பிரகாச சுவாமிகள் நன்னெறியில்,

"தக்கார்க்கே யீவர் தகார்க்களிப் பாரில்லென்று
மிக்கார்க் குதவார் விழுமியோர்—எக்காலும்
நெல்லுக் கிறைப்பதே நீரன்றிக் காட்டுமுளி
புல்லுக் கிறைப்பரோ போய்."—என்று கூறினர்.

மேலும், நாம் உபகாரஞ் செய்யின், நல்லோர்களுக்குச் செய்ய வேண்டுமேயன்றி, தீயோர்களுக்குச் செய்யப்படாது. இக்கருத்தை நமது முதாதைகள்,

"வேங்கை வரிப்புலி நோய்தீர்த்த விடகாரி
ஆங்கதனுக் காகார மானாற்போல்—பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த வுபகாரம்
கல்லின் மேலிட்ட கலம்."

என்னும் செய்யுளில் விளக்கியிருக்கின்றனர். இதன் பொருள் யாதெனில், ஓர் ஆரண்யத்தில் ஒரு புலி காலில் முள்தைத்து வருந்துவதைக் கண்ட வேடனொருவன் அதைப்பார்த்து மனமிரங்கி அதன் முள்ளைப் பிடுங்கி அதன் நோயை நீக்கினான். அப்புலி தன் காலில் முள் தைத்திருந்த சிரமத்தால் வெளியிற் செல்ல முடியாமல் உணவில்லாது வருந்திற்று. பின்பு தனக்குதவி புரிந்தவனும் தனதருகிலிருப்பவனுமான வேடனையே கொன்றுதின்றுவிட்டது. ஆதலின், மூர்க்கர்களுக்கும் துஷ்ட விலங்குகட்கும் உபகாரஞ் செய்தல் கல்லின்மேல் போடப்பட்ட குடம்போல் நாசத்திற் கேதுவாகும். நல்லோர்களுக்கு நன்மைசெய்யின் சிலையிற் செதுக்கிய எழுத்துப்போல் என்றும் பிரகாசிக்கும். தீயோர்களுக்கு நன்மை செய்யின் நீரிலெழுதிய வெழுத்துப்போல் அன்றே அழிந்துவிடும். இதுபற்றியே பெரியோர்,

"நல்லா ரொருவர்க்குச் செய்த வுபகாரம்
கல்மே லெழுத்துப்போற் காணுமே—அல்லாத
ஈரமில்லா நெஞ்சத்தார்க் கீந்த வுபகாரம்
நீர்மே லெழுத்திற்கு நேர்."

எனக் கூறியிருக்கின்றனர்.

# கீர்த்தி. (REPUTATION.)

பூரண சம்பன்ன குணச் சுயம்பாப் பொருளுமாய், சகல பொருட்களுக்கும் மேலான வஸ்துவுமாய், எல்லா ஒளிகளுக்கும் மேலான ஒளியுமாய், தன்னொளிக்குமுன் எவ்வொளியும் மங்கி இருளச் செய்யும் சோதிப் பிரகாசமுமாய், எல்லா அழகுக்கும் மேலான அழகுமாய், எச்சமயங்கட்கும் பொதுவாகிச் சிறப்பாகி விளங்கும் கடவுளுக்கே எல்லா மகிமையும் கனமும் புகழ்ச்சியு முரியது. அப்பெரிய பரஞ்சோதியின் அணுப்பிரமாணமான சிற் சோதியாகிய ஆத்மா நமக்குள் அமைந்திருக்கின்றமையால் இப் பிரபஞ்சத்தின்கண் உதித்த மனிதர்களும் புகழ்ச்சியை விரும்பு வார்களேயொழிய இகழ்ச்சியை ஒருவரும் விரும்பார்களென்பது சர்வ ஜன சம்மதமான விஷயம். ஏனெனில் ஒவ்வொரு நோக்கத் திற்காகவே கடவுள் நம்மை சிருஷ்டித்திருக்கிறார். அந்நோக்கம் இன்னதென்பதைக் கண்டு தெளிந்து அதை நிறைவேற்றுவதே நமது கடமையாகும். அதுவே கீர்த்தியைத் தரும். இதுபற்றியே தெய்வப் புலமை திருவள்ளுவ நாயனாரும்,

> "தோன்றிற் புகழொடு தோன்றுக—அஃதிலார்
> தோன்றலிற் றோன்றாமை நன்று."

என்ற சத்தியவாக்கை வெகு திரமாய் வற்புறுத்திக் கூறி யிருக் கின்றனர்.

> "அழிவுறு மூடம்பையென்று மாசையாற் பேணலின்றி
> அழிவுறாப் புகழைத் தேடி யன்பொடு பேணுர் மூடர்
> விழுமிய கல்வி கேள்வி மிகுகொடை செய்து தேடிக்
> கழி பெரும்புகழே நாளுங் காப்பர் நல்லறிவினோரே."

பொன்னாபரணத்திலும் புகழ்ச்சியாபரணமே பெரிதென மதிக் கும் பெரியோர்,

> "புண்ணியவசத்தினால்செல்வமது பெறவேண்டும்; பொருளைரட்சிக்கவேண்
> புத்தியுடனதுஒன்றுநூறாகவேசெய்து போதவும்வளர்க்கவேண்டும், [டும்
> உண்ணவேண்டுமே பின்புநல்ல வஸ்திராபரணம் உடலில் தரிக்கவேண்டும்
> உற்ற பெரியோர் கவிஞர் தமராதுலர்க்குதவி ஓங்குபுகழ் தேடவேண்டும்
> மண்ணில்வெகுதருமங்கள்செயவேண்டுமுயர்மோட்சவழிதேடவேண்டுமென்
> வீணில்புதைத்துவைத்தியாத பேர்களே மார்க்கமறியாக்குருடராம்." [றி

என்ற பாவின் ஆந்தரீகக் கருத்தை உள்ளுணர்ந்து தாம புண்ணிய வசத்தினால் சம்பாதித்த பொருளை வீணிற் புதைத்து வைத்து "வீணன் சொத்து வம்பன் கையாகும்" என்று தம்

ஆயுள் காலத்துக்குப் பின்பு கண்டவர்களெல்லாம் சூறையாடிப் பங்கிட்டுக் கூத்தாடுவதற் கிடங்கொடாமல், தாம் சம்பாதித்த பொருளை தமது ஆயுள் காலத்திலேயே இகபர சிலாக்கியங்களை யடையும் பொருட்டு கல்வி, கேள்வி, ஆராய்ச்சியிலும், புண்ணிய மார்க்கங்களிலும் செலவிட்டுப் புகழ்ச்சியையும் கீர்த்தியையும் அடைவர்.

"மட்டில்லாமல் வட்டிவாங்கி கட்டிப்பைகள் சேர்த்தவன்
இட்டுண்ணாது செட்டதாகப் பட்டினி கிடந்தவன்
திட்டமான கீர்த்திநாட்டத் தினையள வெண்ணாதவன்
மட்டியென்ற பேர்வகித்து துஷ்டனான பாதகன்."

"பாடல் பெறனே பலர்மெச்ச வாழானே
நாடறிய நன்மணங்க ளாடானே—சேடன்
இவன்வாழும் வாழ்க்கை யிருங்கடல்சூழ் பாரில்
கவிழ்ந்தேன்ன மலர்ந்தேன்ன காண்."

என்று சொல்வதற் கிணங்க, புண்ணிய மார்க்க மறியாத மூடர்களோ தமது சரீரமானது அழிந்து மண்ணோடு மண்ணாய்ப்போகுங் காலம் நிச்சய மென்பதை யுணராது சுடலையில் வைக்கும் உடலை வளர்ப்பதற்கு மாத்திரமே செலவிடுவர். சிலர் அதற்குங் கூடச் செலவிடாமல் உண்ணாமல், தின்னாமல், வாயையும் வயிற்றையுங் கருக்கித் திரவியத்தைத் தேடி திடைப்பக்கட்டைபோல் குவித்து வைப்பர். அவர் ஆயுளுக்குப்பின் "நாறுவாயன் தேடினதை நல்லவாயன் அனுபவிக்கிறான்" என்று சொல்லி வீணர்கள் கையாண்டுகொள்ள, அவர்கள் பெண்சாதி பிள்ளைகளோ கோடுங் கச்சேரியுமாய் அலைந்து திரிந்து வக்கீல்களுக்கும் சாட்சிக்காரர் என வரும் பல சண்டாளர்களுக்கும் பங்கிட்டுக் கொடுத்து விட்டு "கோடு கண்டவன் ஓடி எடுப்பான்" என்ற பிரகாரம் ஓலமிட்டுத் திரிவது நாம் அனுபவ சாக்ஷியாய் அறிந்த விஷயம்.

"பெருமையுஞ் சிறுமையுந் தாந்தரவருமே." என்ற முதுமொழிக் கிணங்கப் புகழ்ச்சியடைய விரும்புவோர் அதற்குத் தக்கவாறு நடந்துகொண்டா லொழிய அது சுலபமா கிடைப்பதரிது. ஆதலால் கீர்த்திமானாக விரும்புவோன் பல நன்மைகளை முன்னமே செய்திருக்கவேண்டும். உலகில் பொதுஜன நன்மை யாதேனும் செய்தாலன்றி 'வெறும்பானை பொங்குமோ மேல்." என்பது போல் அரிய பெருங் காரியத்தைச்செய்ய ஏலாதவன் கீர்த்திமானாக முடியாது.

"மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயினார்."

என்னும் நீதிவாக்கியத்துக் கிணங்கப் பிறர் நமக்கு செய்யுந் தீமைக்குப் பிரதி தீமை செய்யாமல்,

"ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்."

என்பதுபோல், அடித்தவர்களுக்கு ஒருநாளைக்கின்பம், பொறுத்தவர்களுக்கோ சாகுமளவும் புகழ் என்று பொறுமையோடு தலை குனிந்துகொண்டு தமது காரியத்தின்மேற் கண்ணாயிருப்பவர்கள் கீர்த்தி யடைவார்க ளென்பதற்குச் சந்தேகமில்லை. நன்மை விதைத்தால் நன்மையும் தீமை விதைத்தால் தீமையும்விளைவது நிச்சயம். "அவரை விதைத்தால் துவரை முளைக்குமா?" ஆகையால் இசையும் வசையும் அவரவர் செய்கையினாலேயே உண்டாகும்.

"பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந்தத்தம்
கருமமே கட்டளைக்கல்."

என்னும் சான்றோர் வாக்கின்படி, மேன்மையும் தாழ்மையும் அவரவர்களுடையசெய்கைகளினாலேயே உண்டாகுமென்பதுதிண்ணம். "உலகத்திலே நாம் ஒன்றும் கொண்டு வந்ததும் இல்லை, இதிலிருந்து நாம் ஒன்றும் கொண்டு போகவும் கூடாதென்பது நிச்சயம்." ஆனால் நாம் விட்டுப் போகும் விஷயங்களோ அனந்தம். நாம் இவ்வுலகிலிருக்கும் நாட்களில் நன்மை விதைத்திருந்தால் அதிலிருந்து அனேகருக்கு நன்மையும், அதின் மூலமாய் பொதுஜன வாழ்த்தே புண்ணியன் வாக்காக நமக்கு அனந்தம் பாக்கியத்தையுங் கீர்த்தியையும் தரும். அந்த பிரகாரம் நாம் தீமை விதைத்திருந்தால் தீமை விளைந்து நமக்கு பெபாவி என்ற பெயரையும் அபகீர்த்தியையுந் தரும்.

ஆகவே நாம் செய்து வந்த பாவ புண்ணியங்கள் இரண்டு மாத்திரமே கடைசியில் நம்மைப் பின் தொடரும். ஆகலால் இவ்வுலகி லிருக்குங் காலத்திலேயே பிறர் பொருட்டு நமது உடல், பொருள், ஆவி, மூன்றையும் தத்தஞ் செய்து, சுயநல வெறுப்பும் பொதுநல விருப்புமுடையவர்களா யிருந்து, நமது சுயநன்மையை பரித்தியாகஞ் செய்து, பொய்யுடம் பழியினும் புகழுடம் பழியாத சதா கீர்த்தியை நிலைநாட்டக் கருத வேண்டும்.

பாரதமாதாவின் புத்திரி னுபயோகத்திற்காக உதார கெம்பீர புண்ணிய கண்ணியம் நிறைந்து கீர்த்திமான்களாக பிரபல்யம் வாய்ந்த சில உத்தமர்களின் ஜீவிய சரிதையை மற்றவர்களுக்கு பிரயோஜனமாக இங்கு கூறுவோம்.

## இராய்பஹதூர்

# பெ. மா. மதுரைப்பிள்ளை.

நம் சென்னைப் பிரதேசத்திற் பிறந்து பர்மா தேசவாசியாகிப் பொருளும் பூசனையும் பெற்று தருமப் பிரபல்ய சீமானாகவும், தேசாபிமானியாகவும், ஜனோபகாரியாகவும், வித்யாதான விசேஷ பூஜிதராகவும் விளங்கிவந்த மதுரைப்பிள்ளையின் பெருந்தகைமையைப் பற்றியும், குண விசேஷங்களைப் பற்றியும், எல்லாரும் நன்கறிந்திருப்பார்கள்.

"கொடையும் பிறவிக் குணம்" என்றபடி இவரது வள்ளல் தன்மையைக் கண்டு வித்வஜனர்கள் இவரை "இராஜா" வென்று அழைத்தனர்; கல்வியறிவுடையோரை மதிக்கும் குணம் இவரிடம் விசேஷமாக விருந்ததால் புலவர்களுடைய வாழ்த்துதலே இவருடைய கேசாதிபாதம் முழுதும் பூஷணமாய் நிறைந்திருந்தன.







நாம் மானிட மர்ம சாஸ்திரத்தைத் தயாரித்துக் காண்பித்த மாத்திரத்தில் அதனருமையை உடனே தெரிந்து நமது மனோபீஷ்டப் பிரகாரம் தமது சொந்த அச்சுயந்திரசாலையில் ஆறுவாரத்திற்குள் புதிய எழுத்துக்களால் அச்சிட்டு வெளியாக்கத்தக்க ஏற்பாடுகளை எளிதில் செய்ததுடன், புஸ்தகம் முடிந்தவுடன் பல வித்வ ஜன சமூகத்தில் அதை அரங்கேற்ற முயற்சித்து நமக்கும் தங்கப் பதக்கம் (*Gold Medal*) ஒன்று பலர் சம்மதத்தின்பேரில்



ராய்பஹதூர் பெ. மா. மதுரைப்பிள்ளை.

பரிசளித்தவரும் இவரே. அந்தப் பதக்கத்தின் பரிமாணமும் அதிலடங்கிய விஷயங்களும் முன் பக்கத்தில் காண்பித்திருக்கிறது.

தமிழின் அருமை பெருமைகளைத் தெரிந்து பெருமழைபோல் நிதி மழை பொழிந்த உதாரகுணமுள்ள இந்தப் புருஷோத்தமரைப் பற்றி வித்வசிரோமணிகள் பலர் பற்பல சமயங்களில் பாடிய மிகு மாதுர்யமான திவ்யப் பிரபந்தங்களனைத்தையும் ஒன்று சேர்த்து சுமார் 1500-பக்கங் கொண்ட மதுரைப் பிரபந்தமென வெளியாகி யிருக்கிறது.

இவர் தனது மகோன்னத நிலைமையையும், கௌரவத்தையும் காப்பாற்றி தினே தினே விர்த்தி செய்துகொண்டு பற்பலவழிகளிலும் நமது தேசத்தார்க்கு உபகாரம் புரிந்துவரும் இயல்புடையவரா யிருந்தமையால், அரசினரிடத்தும் நன்கு மதிக்கப் பெற்று சுமார் 37-வருஷமாக முனிசிபல் கமிஷனராகவும், 30-வருஷம் ஆனரரிமாஜிஸ்திரேட்டாகவும் உத்தியோகம் நடத்தி வந்ததுடன் உத்தம செங்கோலோச்சும் உன்னத ஆங்கிலேய அரசரால் "இராய்பஹதூர்" என்னுங் கண்ணிய கௌரவப்பட்டப் பெயர் சூட்டப்பெற்று சகல சுகானுபோக முடையவராய் விளங்கி இலங்கி 1913-ம் வருஷம் ஜூன் மீ 17-ந் தேதி மறுபதவி யடைந்தார்.

உதார செம்பிர புண்ணிய கண்ணியம் நிறைந்து தமிழ் வளர்க்குந் தாதாவெனக் காரணப் பெயர்பூண்ட இவரைப்பற்றி வித்வசிரோண்மணிக ளியற்றிய சில பாக்களை இங்கு கூறுவோம்.

## பொன்.

### அகவற்பா.

தரைமிசைக் கனியிதழ் குருமணி நிகர்க்கும்
பூவைய ரொருத்தி புனைபெயர் நின்பெயர்
கம்மிய னுலைவாய்க் கனலுருவாகிக்
கம்பித்திடவே காய்ச்சுவன் மீள
அடிமேலடிக்க வடிதாளாமற்
பிடிநடை துடியிடைப் பெண்களைத் தேடி
நாடி யொளிக்கையி னுனிலமயங்க
வஞ்சனைசெய்வோர் வழங்குமாப்போல்
விஞ்சிடு நாமம் விளம்பினை பேதாய்
மதுரையைக் காரளி வந்தடுப்பதுபோன்
மதுரையைத் தேங்கவி வல்லோ ரடுக்கத்
தன்பெயர் மாறாத் தகைமை
மன்னிடப் புரிந்தனன் மாண்புறமாதோ.

இவ்வையகத்திற் கோவைப் பழம்போன்ற இதழ்களையுடையவளாய், பெண்ணரசிற் சிரோரத்நமாய் விளங்கும் பூம்பாவையாகிய திருமகட்குப் பொன்னென்னு நாமதேயம் வந்திருப்பதாலப்பெயர்கொண்ட சொர்ணமே! கல்வி கேள்வியுடையவர்கள் மாட்சியுற்றோரைப் பொன்போன்றவரென வர்ணித்தலைக் கண்டு நீ செருக்கடையேல். என்னையெனின் நீ கம்மியன் கரத்திலகப்பட்ட மாத்திரத்தில் நின்னைப் பணையிற் கிடத்தி யடிமேலடி

யடித்து மூசைக்குள்ளிட்டு உலைவாயில் வைத்து வன்னி நிறமாக்கிக் கம்பி யுருவாய்த் திரட்டிக்கொண்டு உலையில் வைப்பதும், எடுப்பதும், அடிப்பது மாக இம்சிப்பதாலவற்றைச் சகிக்க வலிமையின்மையால் அவன் கரத்தினின்று தப்பிப் பெண்யானையின் நடையையும், துடிபோன்ற சிற்றிடையையும் உடைய பெண்கள்பாற் சென்று சரண்புகுந்து, மாதர்காள்! நீவீர் அடைக்கல ஸ்தானர் தந்ததுபோற் காப்பாற்ற வேண்டுமென்பதாய் நிற்கையில் அம்மாதர் நீ யாரென, நீ நின்பெயராகிய பொன், சொர்ணம், கனக முதலிய நாமத்தைக் குறிக்காமல் ஒருத்தியிடம் காப்பென்றும், ஒருத்தியிடம் கொப்பென்றும், ஒருத்தியிடம் வடமென்றும், ஒருத்தியிடஞ் சங்கிலியென்றும், ஒருத்தியிடம் சரப்பளி யென்றும் இன்னன விதமாய்ப் பலபல பூஷணங்கள் பெயர்சொல்லி, உலகை வஞ்சிக்கக் கடன்படுவோர் பிரயோகிக்கும் பித்தலாட்ட வாக்கைப்போல மாறிமாறிப் பெயர் கூறுகின்றனை. தீர கெம்பீர வீரமற்ற பேதாய்! கானகமுள்ள கரியவண்டுகள் பூக்களைத் தேடி வந்து மதுரையாகிய மதுவை யுண்பதுபோல, மதுரகவி பாடி வாழுங் கவிஞர்கள் தியாகம்பெற அடுக்குங்கால் நின்னைப்போல ஓடி ஒளியாது முன்னுக்கு வந்து சொர்ணமாரி பொழியுஞ் சஜனரஞ்சித மதுரைப் பெருமானை யெவ்வாறு நினக் கொப்பிடுவோம். எம்பிரபு நிலைபெற்ற கீர்த்தியாள ரென்பதற் கையமில்லை. ஆதலாலிவரே நிலைபெறுந் தங்கம் என்பது பொருள்.

## தாலம்.

### அகவற்பா.

இருநிலத்தவர்க்குப் பெருநயம் பயக்குந்
தருவெனி நின்னை விரிவினிற் சொல்வர்
தாலமே யுன்றன் பாற்பெறு நிழலிலை
பாலினை யடியிற் பருகினுங் கள்ளை
யருந்தின ரென்ப ரஃதொரு நிந்தை
தருங்குணத்தியல்பிற் பெறு மிதமில்லை
வடம்புனை வீரன் படையுட னூர்ந்து
சிகையினைப் பிடித்துத் திகிலுற வடித்துக்
கருக்குலை யழித்துக் கலையினை யுரித்துக்
கொடுத்திடுகோரவுகிர் கடுத்திடவறுத்தும்
இடுக்கண் செய்தபி னீவதாலுன்னை
யாரணி மன்னர்க் காரணியானேன்
றஞ்சமென்றோதி யஞ்சலி செய்வோர்க்
கெஞ்சா திடுநற் றஞ்சைமா மன்னர்
இஞ்சுக மென்றே கொஞ்சிடு விஞ்சையன்
சிங்கை வனத்துச் சிங்காதனத்தோர்
தங்கை யளிக்கு மங்கள குணாகரன்
கந்தடை வாரண மூர்ந்தூர்ந்திந்த
இந்தியையாள வந்தெழு டப்ரின்
தேசமாள் பதியை நேசமோ டழைத்து
வாசமார் வளவில் வீசொளி செய்தோன்
பெருநிதி படைத்த பருமியர் சினர்
திருநிதி படைத்த செல்வருந் தம்பொருட்
டவைகளிற் பேச ஆமோ இத்த
சபையலங்காரச் சற்குணப்பெருமான்

முதலுள பண்டங் கொண்டுவாணிபஞ்செய்
தியொரங்கொள் ளதிபருட் டலைவன்
வரையா தளிக்குமெம் மதுரை
துரைக்கிணையென்று சொற்றல் வழூஉவே.

ஓ பனையே! "உத்தமர்தா மீயுமிடத் தோங்குபனை போல்வர்" எனப் பெரியோர் நின்னால் விளையும் பலாபலன்களைக் கண்டு வியந்து, கொடுப்பதில் நின்னை விசேடித்துத் தயாளுக்களுக் கொப்பிட்டுக் கூறி யிருப்பதிலெமக்குத் திருப்திகரமின்று; அஃதேனெனில், விருட்சமாகிய நின்னிடம் ஒருவர் தங்கற்கேனும் போதுமான நிழலில்லை. நின்னிழலடியிற் குந்தி பாலை யருந்தினபோதிலும், அடா நிந்தையாய்க் கட்குடித்தா னெனும் அபாண்ட மேற்கொள்ளும், இதன்றி நின்னீகையின் றிறமோ கொடிது! கொடிது!! அஃதெங்ஙனமெனிற் கொடையாளர் வலியச்சென்று தம்மாலியலுதவி தாம் புரிதலே மரபு. அவர்கள் வயின் கண்ணீர்மை மாறாக் கருணையைக் காண்பாம். நின்பாலோ அஃதின்று. சரணங் கொடுப்பார்க் கீயாமல் இரணங் கொடுப்பார்க் கீயும் உலோபியின் றன்மைப் பூண்டனை. நின்பலன்களை யடையுமாறு யுத்தவீரன்போல் ஆயுதபாணியான கள்வினைஞன் வேண்டுமான கருவிகளுடன் நின்னையுதைத்து மிதிப்பதுபோல் நின்மீதேறி, நின் னுச்சியைத் தாவிப்பிடித்து, நீ குலை நடுக்கமுற அடிமேலடி யடித்து, நின் லோபத்துவ இனம் பலுகாவண்ணம் நின் கருக்குலையை யழித்து, நின் படாடோபத்தை யழிக்க நின்னுடையாகிய பன்னுடைகளைக் களைந்து, உலோபி யெடுத்துக் கொடானேல் அவன் கைவிரல் நகங்களைக் கள்வர் அறுத்து வருந்துதற்போல் நின் கரம்போன்ற பாளையைத் தினந் தினஞ் சீவி யிம்சித்து, மதுவைக் கிருகித்து வருதலானும் நின்னை யாமெங்ஙனம் எமது பிரபுக் கிணையென்போம். பிரபு ஆரணி ஜாகீர் ராஜ யோகருக்கோர் சிரோமணி போன்றவராயும், தஞ்சமெனறடுத்தவரை யஞ்சலின் அஞ்சலின் என அபயாஸ்தந் தருந் தஞ்சை சமஸ்தான மகாராஜ ராஜ கெம்பீர சரபோஜி ராஜா சாயிபு அவர்கள் மனதுவந்து வார்த்தையாடுங் கிளிமொழியோனெனப் பாவித்தே அன்பு பாராட்டும் வித்தியாடம்பராயும், சிங்கை வனத்தார் எம்பிரபுவைக் கண்டளவிற் சிம்மாசனத்தினின்றெழுந்து எதிர்கொண்டுவந்து மெய்யன்போடு கரமளித்துச் சோடசஉபசாரத்துடன் வரப்பெறுந்தகமை வாய்ந்தவராயும், இந்திய தேசாதிபதியாக விளங்கும் லாரட் டப்ரின் பிரபு அவர்கள் தம் இரதகஜ துரகபதாதிகளோடும், யூகியரோடும் இரங்கோன் பதிக்கு விஜயஞ் செய்த காலத்தில் அப்பிரபுவ்வ வெகு மரியாதையுடன் வரப்பெற்று அவர்கள் கண்டிலாக் காட்சியைத் தீபஜோதியாலங்காரத்துடன் காண்புவித்துப் பூப்பந்தரிடை நிறுத்தி யவர்களுக்கு மங்களோபசாரப் பத்திரங்கள் வாசித்தவரும், அத்தகையோரைப் போன்ற மகா கெம்பீர ஆர்க்காட்டரச புத்திர சிரோன்மணிகளால் மெதாயிற பதக்கம் பூஷணம் பெற்றவராயும், இரங்கோன் பதியில உண்டாகும் மனோகரச் சபைகளின் கண்ணும் முனிசிபல் சபையின் கண்ணும் சுதேசிகள்பாற் பரிந்து பேசும் உரிமையுடையோர் இவரேயென்று அப்பதியில் தனகனவான்களாய் விளங்குபவர்கள் ஆமோதிக்க அச்சபைகளில் நாயகமாய், அம்சமாய் ஜொலிப்பவராயும், பெருமுதற் கொண்டு வியாபாரங்களை நடத்துந் திறத்தின் முதன்மையானவராயும், ஓராநின்ற மதுரைப்பிள்ளை மகிபதி முதலேழுவள்ளல்களின் றன்மையுடைய சற்குணலயராய் விளங்குகையில் நின்னை யவருக் கொப்பிடற் பெருந்தோஷமெனவே ஒப்பிடாது விடுத்தனம். ஆதலாலிவரே வேண்டு

# சாது சுந்தர்சிங்.

உன்னத தேவ ஊழியத்திற்குத் தம்மைப் பூரண தத்தம் செய்து உலகப்பற்றனைத்தையும் துறந்த உத்தம தாசனான சாது சுந்தர்சிங் சீக்கியர் என்னும் வடநாட்டு போர்வீரர் மரபில் பிறந்தவர். இவர் பிறந்தது ஐந்துநதிகள் பாயும் பஞ்சாப் தேசத்தில் பட்டியாலா ராஜ்யத்திலுள்ள ராம்பூர் என்னும் பட்டணம். 1889-ம் வருஷம் செப்டம்பர்மீ 3-ந் தேதி சுந்தர் தோன்றினர். அவர் தந்தை ஓர் தனவந்தர். அவர் சகோதரரில் ஒருவர் சீக்கிய ராஜ்யங்களொன்றின் தளகர்த்தராயிருக்கிறார். மற்றவர்கள் இதனிலும் உயர்ந்த உத்தியோகங்கள் வகித்து வருகின்றனர். இவர் கடைசிப் பிள்ளையாயிருந்ததினால் தன் தாயைவிட்டுப் பிரிவதில்லை. வேனிற் காலத்தில இமயமலைச் சாரலிலுள்ள சிம்லா முதலிய குளிர்ந்த பிரதேசங்களுக்குத் தமது பெற்றோருடன் போவது வழக்கம். இவர் தாயார் நல்லொழுக்கமும், சாமர்த்தியமும், தெய்வபக்தியும், தெளிந்த மதியுமுள்ள ஓர் மாது. அமெரிக்க பெண் மிஷனெரிமார் இவர்கள் வீட்டிற்குத் தாராளமாய் வந்து சிநேகம் பாராட்டி வந்தனர். இந்த அம்மாளிடம் பக்தி யென்பது பரிமளித்து வந்ததினால் தாம் பரிவோடு காப்பாற்றி வந்த கடைசிப் பிள்ளையாகிய சுந்தருக்கு அடிக்கடி போதித்து "நீ உன் அண்ணன்மாரைப்போல் உலக சிந்தையில் உன் மனதைச் செலுத்தாமல் உன் ஆத்மாவுக்குச் சமாதானத்தைத் தரத்தக்க நன்மார்க்கத்தை அனுசரித்து சாதுவாகிச் சிற்றின்பம் யாவையும் சீயென்று தள்ளி பஞ்சேந்திரியங்களை யடக்கி உள்ளத்தை ஒருவழி நிறுத்தி ஞானமார்க்கத்தில் நன்றாய்ப் படிந்தால் நாதனடி கிட்டும்." என்பது போன்ற பல போதனைகளைச் சொல்லி வந்தாள். சுந்தர் ஏழு வயதாயிருக்கையிலே சமஸ்கிருதத்தில் பகவத்கீதை முழுவதையும் பாராயணம் பண்ணியிருந்தார். கண்ணுமருக்குமாயத் தன் சரீரத்தைப் பேணினதோடு கூட தனக்கு ஞானப்பாலூட்டி ஆத்ம போதனாசிரியராகவுமிருந்த தன் மாதாவை சுந்தர் பதினாலு வயதில் இழந்து நொந்தார்.

சுந்தர் தன் தாயோடு கோவில்களுக்குப்போனார். தெய்வ பக்தர்களைக் கண்ட மாத்திரத்தில் அவர்கள் கற்று வந்தன வழிபாடுகள் செய்து நல்வழி காட்டுக என்று தன் தாய் நமஸ்கரித்துப் போற்றி நிற்பதைப் பார்த்த சுந்தர் மனதில் சாதுவாய் ஜீவிப்பதே உசிதமென்று தோன்றியது. உலகத் திரவியங்களுக்கெல்லாம் மேலான திரவியம் மனச் சமாதானமென்றும் அதைத் தரத்தக்கது தெய்வம் ஒருவர் மாத்திரமே என்றும் உணர்ந்தார். சீக்கியருடைய க்ரந்

தையும், ஹிந்துமத ஸ்மிருதி சுருதிகளையும், மகம்மதியருடைய கொரானையும் சுந்தர் ஓய்வின்றிப் படித்து வந்தார். அநேக வாக்கியங்களையும் மனனம் பண்ணியும் வந்தார். இவற்றைப் படிக்கப் படிக்க இவருக்கு மனக்கலக்கம் மேலிட்டதேயொழிய தான் நாடிய சமாதானம் கிட்டுவதாயில்லை. கோயில் பூசாரிகளும், சாதுக்களும், தன் தாயும் பாராட்டிய பக்தியால் இவர் உள்ளத்தில் பிறந்த தெய்வநாட்டம் மனக்குழப்பத்தை யுண்டுபண்ணிக் கொண்டிருக்கையில் தன் கிராமத்திலுள்ள கிறிஸ்தவ பாடசாலையில் கல்வி பயின்று வந்தார். அங்கே கற்பிக்கப்பட்ட வேதபாடங்களை ஏற்றுக் கொள்ள மனமற்று அவற்றைச் சுந்தர் சினத்துடன் வெகுண்டு தள்ளினார். மார்க்க வைராக்கியம் பொங்கி இரத்தம் கொதித்து தான் கருத்தோடனுசரித்து வந்த மதத்தைத் தகர்க்கும் சம்மட்டி போல் தோன்றின கிறிஸ்துமதத்தை முழுப்பகையாய்ப் பகைத்தார். தமது உடன் மாணவரையும் பகைக்கத் தூண்டிவிட்டார். இவர்கள் கண்முன் புதிய ஏற்பாட்டைக் கிழித்து நெருப்பிற்கிரையாக்கினார். இதைக் கேள்விப்பட்ட அவர் தந்தை தன் மகனைப் பார்த்து நீ செய்வது சரியன்று. அப்புஸ்தகத்தை நாசம் பண்ணாமல் மிஷனரியிடம் திருப்பிக் கொடுத்திருக்கலாமே யென்று புத்தி புகட்டினார். கிறிஸ்துவையும் கிறிஸ்து மார்க்கத்தையும் வேதபுஸ்தகத்தையும் முன்னிலும் அதிகமாய் வெறுத்துப் பகைத்த இவரின் உள்ளம் "சாந்தி, சாந்தி" என்று கதறிக்கொண்டிருந்தது. சாந்தி என்ற ஹிந்திய பதம் "சமாதானம், பூரண ஆத்மதிருப்தி" என்று பொருள்படும். இவர் எவ்வளவுக்கு அதிக ஊக்கமாய்த் தேடினாரோ அவ்வளவுக்கு அவரது ஆத்ம பசி அதிகரித்ததே யொழியத் தீரவில்லை. அவர் வாஞ்சித்த சாந்தியைப் பெறாமல் ஏமாந்துபோனபோதிலும் அவருடைய இருதயம் சலித்துப்போகவில்லை. தான் இதுவரைப் பழித்தும் அழித்தும் வந்த புதிய ஏற்பாட்டை வாசிக்க ஆரம்பித்தார்.

"என்னிடத்தில் வா. நான் உனக்கு இளைப்பாறுதல் தருவேன்" என்ற இனிய சப்தமொன்று அவர் காதில்பட அன்று முதல் கிறிஸ்துமதத்தைப் பழிப்பதை விட்டுவிட்டார். கிறிஸ்தவ உபாத்தியாயரோடு கருத்தாய்ச் சம்பாஷித்துக் கொண்டிருப்பார். 'தேவன் தம்முடைய ஒரேபேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்திய ஜீவனையடையும்படிக்கு அவரைத் தந்தருளி இவ்வளவாய் உலகத்தில் அன்புகூர்ந்தார்" என்ற மெய்வாக்கு புண்ணாயிருந்த சுந்தரின் மனதுக்கு ஆரோக்கியந் தரும் தைலம் போலிருந்தது. ஆனால் பயமொரு பக்கம், சந்தேகமொரு பக்கம் அவர் மனதைப் புண்ணு

க்க காலை 5-மணிக்குத் தன் வீட்டோரம் போகும் புகைவண்டியி னடியில் வீழ்ந்து தன் உயிரை மாய்த்துக்கொள்ள நிர்ணயம் பண் ணிக் கொண்டார்.

இதற்காக ஸ்நாநம் செய்துகொண்டு இரவை வேதபாராய ணத்திலும தியானத்திலும் ஜெபத்திலும் கழித்தார். கண்ணீர் ஆறாய்ப் பெருகிற்று. அன்பு பெருகிற்று. உள்ளமுருகிற்று. சண்டமாருத வேகத்துடன் ஜெபதியானம் வெள்ளமாய்ப் பெரு கிறது. "ஹே; ஜெகதீசனே! ஹே! ஆபத்பாந்தவா! ஹே! அனாதாரக்ஷகா! பக்தர்கள் மனதில் சிக்கிக்கொள்ளும் நீ எப்படித் தப்பியோடி என்னை ஏமாற்றக்கூடும்? அன்பர்கள் மனதில் இன் புற்றவனே! ஆராக் காதலுக்கு நோயுருகுவானே! கருணை நிறை ந்த கற்பகத்தருவே! அருளை பழுத்த அற்புதாநந்தா! இங்கே தோன்றி இங்கே வந்து என்னைக் காக்க உன்னருள் தருவாய். எங்கும் பரந்து எங்கும் கரந்து, எள்ளுக்குள் எண்ணெய்போல் இயங்கி நிற்கும் நீ எங்கிருந்தாலும் இச்சணம் வந்து என்னைக் காப்பது உனதுடைய கடனே. இந்தச்சணமே வந்து என்னைக் காத்தல்வேண்டும். இல்லையேல் என்னுயிரை இருப்புப்பாதையில் மாய்த்து இப்புன் புலால் யாக்கையைத் துறந்து ஆவியாய்ப் பிரி ந்து உன்னை ஆலிங்கனம் செய்வேன். அஞ்ஞானக் கண்ணால் அந்தகாரத்தையே பார்த்து ஒன்றுந் தோன்றாது விழிக்கின்றேன் ஏதுந் தோன்றாத எழை." என்று பரிதபித்து நிற்குஞ் சமயத்தில் ஓர் அற்புதக் காட்சி கிடைத்தது. அவரைச் சுற்றிலும் மேகம் நிறைந்திருக்க அதன்மத்தியில் கிறிஸ்துவின் ஜொலிக்கின்ற அங்க மும் குளிர்ந்த முகமும இவர் கண்ணுக்குத் தென்பட்டது.

அந்நிமிஷமே சுந்தர் இத்தனை வருஷங்களாகத் தேடிக்கொண் டிருந்த சாந்தி அவர் உள்ளத்தில் ஒலித்தது. கண்ட காட்சியை கைபெடுத்துக் கும்பிட்டு இரட்சண்யா மூர்த்தியை நாவாரத் துதித்தனர். முள்முடி சூடின இயேசு பகவான் தம அடிச்சுவடு களைப் பின்பற்ற சுந்தரை யழைத்த அந்த நிமிஷத்திலேயே அவர் உள்ளத்தைப் பூரிக்கச் செய்தது. அது முதல் அவர் உள்ளத் தில் தங்கி யிருக்கும மனச்சமாதானம், பிரகாசம பொருந்திய அவரது திவ்ய முகத்தைத் தரிசித்தவருக்கன்றே விளங்கும்.

### சாது சுந்தர்சிங் கும்மி.

ஆகமங்கள் சொன்ன யோகாப் பியாசங்கள்
அனைத்தும் நிஷ்டை முதலியவும்
தேகம் நலியவே செய்துந்தன ஞத்தமா
ஏக நிலையேனு யில்லையெனறான்.

எந்த விதத்திலும் ஆத்ம சாதனம்
இல்லையென மனச் சஞ்சலத்தால்
சிந்தைநொந்து கொடு வேதனையால் உளம்
வெந்துபோய் வீரங் குலைந்தவனாய்.

இம்மையிற் கைக்கெட்டா இன்பமது நான்
இறந்தாற் கிட்டுவதா யிருக்கும்,
நம்முயிர் மாய்ப்பதே நியாயமென வெண்ணி
நாளுங் குறித்துமுன் வைத்துக்கொண்டான்.

முன்குறித்த நாளில் மூன்றுமணி காலை
முழுகி நீரில் எழுந்துபின்னர்
தென்புறஞ் செல்லும் புகைவண்டிப் பாதையில்
சென்றுயிர் நீக்கவே சித்தங்கொண்டான்.

ஐந்து மணிக்குப் புகைரதம் முன்னதாய்
ஐயன் பதத்தைத் தொழுதுகொள்வோம்
இந்தச் சடலம் மடியுமுன்ன மாலை
இரட்சித் தருளுவார் ஓர்மையலே.

என்று மனதிலே யெண்ணிக்கொண்டு சுந்தர்
ஈசன் திருவடி தானேபோற்றி
எங்கு மயமாய் இலங்கும் பரம்பொருள்
ஏக தத்துவனே யுனை நான்.

"எந்த விதத்திலுங் கண்டு களித்தி—
லெண்ணித் துயர்தீர மார்க்கமின்றி
நொந்து மடியத் துணிவுகொண்டேன எனை
நோக்கி நின்னருள் காட்டுமையா."

"அண்ட சராசரம் யாவும் படைத்தவோர
ஆண்டவர் உண்டென்ப துண்மையானால்
மண்டல நாதனே, காட்சிதந்தால் உனைத்
தொண்டு செய்வேனுயிர் உள்ளளவும்."

காட்சி தந்தாரீசன் மாட்சிதந்தார் சுந்தர்
கண்கள் மயங்கிடும் வேளையிலே
ஆச்சரிய மாகத் தானிருக்கும் அறை
அந்தகாரம் புகை சூழக்கண்டார்.

ஆன புகையின் நடுவில வெளிச்சமும்
ஆனுரு வொன்றும் புலப்படவே
"ஈனன்செய் வேண்டுத லுக்கிரங்கி வந்த
மோனமே யார்நீர்?" எனக்கேட்டான்.

காட்சிகொடுத்த மகான் கைகள் கால்விலா
காயங்கள் ஐந்தையுங் காட்டி "யுனை
ஆட்சி செய்யக்குருசிலமரித்த யேசு
அன்பன் நான்" என்று சொல்லிமறைந்தார்.

"ஏசுக் கிறிஸ்துவே மெய்த் தெய்வமினி
ஏசுக் கிறிஸ்துவே யென்னெஜமான்
ஏசுக் கிறிஸ்துவுக் காய்வாழ்வே னுயிர்
ஏசுக் கிறிஸ்துவின்மேல துறப்பேன."

என்று சுதனைப் பணிந்துபோற்றி சுந்தர்
என்றுமறியா வானந்தத் துடன்
சென்றுதன் தந்தை யடிவணங்கி யிந்த
சேதிகள் சொல்லி மனமகிழ்ந்தார்.

"பாரஞ் சுமந்திடும் பாவிகளே வாரும்
பாரந் தீர்த்தாறுதல் தந்திடுவேன்
கூறும் வேதாகம வாக்கியத்தைக் கண்டு
குதித்து நாதரைப் போற்றி செய்தார்.

பாவிகளை மீட்கத் தந்தைபரன் மைந்தன்
ஆவி கொடுத்தார் மரக்குருசில்
தாவிவரும் பல பாவிகளைச் சேர்க்கத்
தாதா உண்டென் றகமகிழ்ந்தார்,

தோழருடன் சேர்ந்து ஏசுவின் நாமத்தை
ஏளனம் செய்து திரிந்தசுந்தர்
தோழர் ஏதேனுங் கிறிஸ்துவைத் தூஷித்தால்
துணிந்தவர் செய்கை கண்டித்தனர்.

இதுமுதல் இவரது பந்துக்களும், சகோதரர்களும், இனத்தாரும் சத்துருக்களாகி இராஜாளி புறாவை வெருட்டுவதுபோல் இவரை விரட்டினார்கள். அவர் படித்த பள்ளிக்கூடமும் அடைபட்டுப் போனது. அங்குள்ள கிறிஸ்தவர்களையும் ஊரைவிட்டுத் துரத்தினார்கள். சுந்தரும் பரதேசியாய் தன்னந்தனியே உபத்திரவங்களைச் சகிக்க நேர்ந்தது. இவருக்கு நேர்ந்த துன்பம் ஒவ்வொன்றும் அன்பு, அமரிக்கை முதலிய நற்குணங்களை ஆழமாய் இவரில் பதிப்பித்தது. அக்கினியினால் புடமிடப்பட்ட தங்கம் பிரகாசிப்பதுபோல் சுந்தரவதனம் பிரகாசித்தது. தம்மை இரட்சித்த அடிமைகொண்ட கிறிஸ்துவின் அன்பின் மகிமையை மற

வர்களுக்கும் எடுத்துக் காட்ட வேண்டுமென்ற அபேக்ஷை அதிகரித்ததினால் 1905-ம் வருஷம் அக்டோபர்மாதம் 6-ந் தேதி ஞானஸ்நாநம் பெற்று 33-ம் நாள் சன்னியாசியாய்த் திரிந்து சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும் பிரதிக்கினை பண்ணிக்கொண்டதின் அடையாளமாகக் காவியுடை பூண்டார். ஏகாந்தனாய்ப் பனிப் போர்வையால் மூடப்பட்ட காடுகளுக்குள்ளும், சண்டமாருத மடித்துக் கொண்டிருக்கும் திபெத்தென்னும் பீடபூமியிலும் பசியாலும் குளிராலும் நலிந்து உள்ளமுழக்ககனன்று தாத்திய சுபவர்கள் மத்தியிலும் இயேசு சுவிசேஷத்தைப் பிரசங்கித்தார். இவருக்கு அநேக தெய்வ தரிசனங்களும் கிடைத்தன. இவர் ஓர் சாதுரியப் பிரசங்கி. தமது மனதிலுள்ளதை நேராயும் தெளிவாயும் சுருக்கச் சொல்லி விளங்க வைக்கக்கூடிய ஆற்றலுடையவர். பசுப்போல் குளிர்ந்த முகத்தையுடைய சுந்தர் பிரசங்கம் செய்யும்போது வைராக்கியங் கொண்டு சிங்கம்போல் கெம்பீர தோற்றத்தையும் மனோதிடனையும் வைராக்கியத்தையும் காட்டுவார்.

இவர் வாயிலிருந்து வரும் ஒவ்வொரு வார்த்தையும் மணிபோல் பொருள் நிறைந்து விளங்குவதால் இவரைக் கேட்போரின் சிந்தனை சிதறுவதற்கு இடமிராது. சமர்த்தனமாகிய இவர் உபமானங்களினாலும் சொந்த அனுபவத்தில் கண்ட சத்தியங்களாலும் தம் கருத்தை திருஷ்டாந்தப்படுத்தும் வல்லமையுடையவர். சமயாசாரத்தின் உண்மையைத் தர்க்கத்தால் அனுமானித்துக் கொள்ள முயல்வது தவறென்று சாதிப்பார். பாலைக் கண்டிராத பிறவிக் குருடனுக்கு வாக்கின் உண்மையைக் கொண்டு பாலின் நிறத்தைக் காட்ட முயல்வது மதியீனமல்லவோ? அவ்வாறே ஆன்ம வாழ்விற்குதவும் உண்மைப் பொருள்களைப் பரிசிக்கச் சாதியற்றவனுக்கு நியாயதோரணைகள் பயன்படா. சமயாசாரத்தின் மேன்மையை எடுத்துக் காட்டக்கூடியது அனுபவ சாட்சியொன்றே என்று சுந்தர் உபமறக் காட்டுவர். தமது உபதேசத்தின் வல்லமையாலும், தமது சிறந்த தபோமகிமையினாலும் சுந்தர் கிறிஸ்தவர்களைக் கிறிஸ்துவின் உத்தம தொண்டராக்குகின்றார். தத்துவ ஞானத்தாலுமல்ல, நியாயதோரணையினாலுமல்ல, அனுபவ சாட்சியாய் இவர் சொல்லும் உறுதிமொழிகளால் மாத்திரம் யேசுவென்ற புருஷோத்தமனில் குரு அவதாரம் செய்த தெய்வம் பாவப்பாசங்களை யறுத்து நமக்கு விமோசன மளிக்க திருவுளச் சித்தங் கொண்டிருக்கிறதென சுந்தர் அறிவிக்கிறார். கிறிஸ்துவின் பாதாரவிந்தத்துக்கு இதர மதஸ்தரை சுந்தர் அழைக்கும் முறை இதுவே.

அன்பே ஈஸ்வர சொரூபமென்ற சம்பிரதாயமும், இயேசு தமது ஜீவியத்தாலும் மரணத்தாலும் உயிர்த்தெழுதலினாலும்

அதை நிலைநாட்டியதும், தெய்வ அன்பில் அடைக்கலம் புகுந்தவரை அவ்வன்பே தவறாது புரப்பதும், இச்சத்தியத்தைப் பரிஷ்காரப்படுத்த வந்த கிறிஸ்துவையும் அவர் மரணமும் உயிர்த்தெழுதலுமாகிய கிறிஸ்துமத மூலாதாரக் கொள்கைகளை மாத்திரந்தான் சுந்தர் உபதேசிக்கிறார். 'இவரைப் பதினாறும் வயதில் தம் தெரிசனந் தந்து தொண்டனாக்கிக் கொண்ட இச்சிகாமணியின் பிரசன்ன மகத்துவத்தை இவர் நாள்தோறும் காண்கிறாராம். இப்புனித சுந்தரன் இவருடைய இணைபிரியாத உத்தம நண்பனும்; இவருடைய சிநேகத்தைப் பெற்றனுபவிப்பதற்காக சுந்தர் உலகப்பற்றனைத்தையும் துறந்தாராம். இதுதான் சுந்தர் பகரும் அனுபவ சாட்சி. இதைக் கேட்பவர் எவரும், சுந்தர் கிறிஸ்துவைப் பற்றிப் பேசும் ஓர் சாதாரியப் பிரசங்கம் மட்டுமல்ல, கிறிஸ்துவோடு ஒன்றித்து வாழும் சாயுச்சிய நிலையையடைந்த ததாகதர் என்றும் உணருகிறார்கள்.

சுந்தருடைய வாக்கு வல்லபம், அவருடைய பிரசங்கப் பொருளாலுண்டான தென்பது போதாது; அவருடைய முகக் களையும் இவர் சொற்களுக்கு சுவையைக் கொடுக்கின்றது.

'சாந்தகுணமுடையவனாக விரும்புமொருவன் எடுக்கவேண்டிய முதல் அடி யாதெனில், அக்குணம் சிறந்து விளங்கும் ஒரு குருவைச் சேருவதுதான். தன சற்குருவைக் கண்டு, அவர் சொற்கேட்டு, அவரோ டிணங்கி யிருப்பதால், இவனும் அவருடைய சற்குண சம்பன்னத்தில் பங்கடைந்து தேறுவான்.

சுந்தர் தமது பதினாறு வயதில் ஏசுபகவானின் திருமுகத் தரிசனங் கண்ட நாள் முதல், அவரைச் சதா தமது உள்ளத்தில் நிறுத்தி ஸ்மரணை செய்துவருவதாலும் அடிக்கடி தரிசனங் காண்பதாலும் சுந்தர் முகத்தில் இயேசுபகவானின் திருமுகப் பிரகாசம் பிரதிபிம்பித்து ஜொலிக்கிறதைக்காணலாம். இது நமது அனுபவ சாட்சி.

இவர் 1918-ம் வருஷம் இலங்கை, திருநெல்வேலி, திருவாங்கூர் முதலிய இடங்களில் திரள் திரளாகவந்த கூட்டங்களுக்குபதேசித்தார்.

இந்தியத் திருச்சபையை ஓர் மனிதனுக்கு ஒப்பிட்டு, வட இந்தியா சிரமென்றும், தென்னிந்தியா கால்களென்றும் உருவகப்படுத்தினர். கிறிஸ்தவக்கழகம் இந்தியாவில் முன்னேறிச் செல்ல வேண்டுமானால் கால்களாகவிருக்கும் தென்சபையின் துணை யவ

சியம். ஆனால் இந்தக் கால்கள் யானைக்கால் வாதத்தால் வீங்கிப் போயிருப்பதுபற்றி சபை முன்னேறிச் செல்லக்கூடாமலிருக்கிறது. இந்தப் பீடை யாதெனில், தென்னிந்திய கிறிஸ்தவர்களுக்குள் காணப்படும் ஜாதிப்பிரிவினை யென்று சுந்தர் கூறினார்.

தென்னிந்தியக் கிறிஸ்தவர்களுக்குள் காணப்படும் இந்தப் பெரிய மூடத்தனத்தைக் கண்டனம் பண்ணக்கூடிய சுதந்தரம் சுந்தருக்கிருக்கிறது. ஏனெனில், சீக்கியரில் பிறந்த சீக்கியனென்று கருவம் கொள்ளக்கூடிய இவர் ஜாதிப் பெருமையைக் கட்டோடே யொழித்துவிட்டார். 'நானோ நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் சிலுவையைக் குறித்தே யல்லாமல் வேறொன்றையுங் குறித்து மேன்மை பாராட்டாதிருப்பேனாக; அவரால் உலகம் எனக்குச் சிலுவையில் அறையுண்டிருக்கிறது, நானும் உலகத்திற்குச் சிலுவையிலறையுண்டிருக்கிறேன்' என பரிசுத்த பவுல் சொன்னதுபோல் இவரும் சொல்லக்கூடியவரா யிருக்கிறார்.

இலங்கையிலும் தென்னிந்தியாவிலுமுள்ள கிறிஸ்தவர்கள் தம் மதக்கோட்பாடுகளுக்கு முற்றும் விரோதமான ஜாதிபெருமையை ஒழித்துவிட வேண்டுமென்று கண்டிப்பாய்ச் சுந்தர் சொன்னார். இவ்விஷயத்தில் யாவரும் சுந்தருடைய சிறந்த முன்மாதிரியைப் பின்பற்ற வேண்டியவர்களா யிருக்கிறார்கள். யுகாயுகங்களாக நமது தேசத்தாரின் கால் கரங்களைக் கட்டிப்போட்டிருக்கும் இருப்புச் சங்கிலியாகிய ஜாதிபேதத்தைத் தகர்த்து, சுந்தர் பெற்றனுபவிப்பதும், சகல கிறிஸ்தவத் தொண்டர்களுக்கு உரியதுமான சகோதர ஐக்கிய சுயாதீனத்தைக் கிறிஸ்தவசபை எப்பொழுது அடையுமோ? இந்த பந்தத்தைக் களைந்தபிறகு தான் நாம இத்தேசத்தில் இயேசுவின் திருநாமத்திற்குப் புகழ் படைக்கத் திறமைகொள்வோம்.

சுந்தர் தென்னிந்தியாவின் வெயிலைத் தாங்கக்கூடாமல் வேர்த்து அலுத்துப்போவார். 'நான் இங்கே உப்பைப்போல் கரைந்து போகிறேன்; தென்தேசம் நான் கரைந்துபோவதால் உப்பின் சுவையைப் பெற்றுக்கொள்ளுமானால், கஷ்டத்தின் பலனைக்கண்டு கொண்டேனெனக் களிப்பேன்' என்று சுந்தர் தம் சிநேகிதருக்கு எழுதினார். இந்தியாவின் பக்திமலர்க்கொத்தை கிறிஸ்துவின் இணையடிகளில் படைத்து, அவரை யேற்றித் துதிப்பது இந்தியாவாசிகளுக் கழகன்றோ என்ற எண்ணம் சுந்தரின் ஜீவியத்தைப் பார்ப்பவர் மனதில் பிறக்கிறது.

சாது சுந்தர்சிங் ஜீவிய விருத்தாந்தத்தை அறிய விரும்புவோர் *The Christian Literature Society, Madras* என்ற விலாசத்திற்கு எழுதி இங்கிலீஷ் அல்லது தமிழில் பெற்றுக்கொள்ளலாம்.

**சாது சுந்தர்சிங் தம்பி by Mr. G. Joseph, M.A.** அணா 2.
எஸ். சாமிவேல் அண்ட் சன்ஸ், தேங்காஞ்சி, இரங்கோன்,
என்ற விலாசத்திற் கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

# கால்ட்வெல் அத்தியக்ஷர்.

## The Right Revd. Bishop CALDWELL, M.A., D.D., L.L D.

பிரதாப மிகுந்த பெரியவரென்றும், பக்தியும், சக்தியும், சாமர்த்தியமும் பொருந்தியவரென்றும் பிரபல்யம் வாய்ந்த கால்ட்வெல் அத்தியக்ஷர் 1814-ம் வருஷம் மேய் மாதம் அயர்லாந்தில் பிறந்தார். அவர் பெற்றோர் ஸ்கோத்துலாந்துகாரரா யிருந்தபடியால் அவர் கிளாஸ்கோ சர்வகலாசாலையில் கல்வி பயின்று தெய்வ ஊழியத்திற்கு தம்மை ஒப்புக்கொடுத்து, லண்டன் மிஷன் சம்பந்தமாய் வேலையமர்ந்து 1838-ம் வருஷம் ஜனுவரிமாதம் சென்னையில் வந்து சேர்ந்தார். லண்டன் மிஷன் சம்பந்தமாய் மூன்றுவருஷம் பணிவிடை செய்தபின், இங்கிலாந்து திருச்சபையைச் சேர்ந்து திருநெல்வேலி அவிசேஷகராய் வந்தார். இடையன்குடி வாசகமான அவர் ஊழியத்தின் உறுதி ஸ்தலமாய் நேர்ந்தது. என்றுஞ் சலிக்காது எப்போது மிளைக்காது நன்றான தொழிலை நலமாய்ச் செய்தார். கிறிஸ்து மார்க்கத்தைத் திடமாய் ஊன்றினார். சிறத்தை என்னும் பூவில் பக்தி என்னும் மணம்பூட்டி, வெறுப்புஞ் சலிப்புமில்லாது வெகு ஆத்திரத்துடனும் வைராக்கியத்துடனும் கிறிஸ்துவைப் பற்றிய அறிவைப் புகட்டினர். அவரது வண்ணத் திருமேனியும், பாவம் போக்கும் நல்லழகும், கோபம் போக்கும் குளிர்ந்த பார்வையும் பார்ப்போர் மனதைப் பரவசமாக்கின. பக்தியொளியைப் பௌர்ணமிபோல் பிரகாசிக்கச் செய்தனர். அறிவுக் கடலில் ஆனந்த அமிர்தமுண்டாக்கிய ஐயர் தயவை அனைவரும் தேடினர்.

ஆடு மேய்க்கும் இடையன்குடியெனக் காடாய்க் கிடந்த அந்த இடம் ஜடப்பிரகாரமும் ஆத்மப் பிரகாரமும் செந்தாமரை போல சிறந்து விளங்கினது. படிப்பிலே பாண்டித்தியமும், பக்தியிலே பலமுமுள்ள இந்த மேய்ப்பனை அவர் மந்தையின் மத்தியிலே கண்டவர்கள் அவருண்டாக்கிய அற்புத செயல்களைக்கண்டு ஆனந்தசரகோஷ்டம் செய்வார். அவர் திவ்விய பணிவிடை இயற்றி வரும் காலத்தில் கிறிஸ்தவ சமுதாயம் நாளொருவண்ணமும் பொழுதொருமேனியுமாய்ப் புரோகதி யடைந்துவந்தது. அகன்ற அறிவும், அரிய ஆராய்ச்சியுமுள்ள கிரந்தகர்த்தாவாகவும் அவர் செய்திருக்கும் பணிவிடை மிகவும் சிரேஷ்டமானது.

தமிழ்ப்பாஷையில் சாதுரியமான பிரசங்கியா யிருந்த அவர் தென்னிந்தியாவின் சீர்திருத்தத்திற்கென்றே தமது சர்வ சாமர்த்தியங்களையும் வியஞ் செய்தார்.



கால்ட்வெல் அத்தியக்ஷர்.

இந்த மகான் 1877-ம் வருஷம் அத்தியக்ஷர் அபிஷேகம் பெற்றார். இதற்கு முன்னதாக 40 வருஷமாய் தாம் கிறிஸ்துவின் தாசனாய் எவ்விதம் உழைத்து வந்தாரோ அவ்விதமாகவே கண்காணியரான பின்னும் ஊக்கமாய் உழைத்து உண்மையான பக்தரைச் சேர்த்து உயர்ந்த பதவிக்குக் கொண்டு வந்தார். இவ்விதமாய் நம் தேசத்தின் ஆத்ம வாழ்வுக்காக 54 வருஷமாக தமது ஜீவியத்தைத் தத்தம் செய்து 1892-ம் வருஷம் பழனிமலையில் பரலோக ப்ராப்தியானார். அவரது விருத்தாப்பிய திசையில் தமது சொந்த தேசம் நாடிச் செல்லும்படி அவரது நண்பரான பல டாக்டர்கள் வெகு பரிவுடன் வேண்டிக்கொண்டனர். அவரோ "என் தேசம் இந்துதேசம், என் ஜனங்கள் இடையன் குடியிலிருக்கின்றனர். அங்கு என் ஜனங்களின் மத்தியில் நான் கட்டிய தேவாலயத்தில் நான் சமாதியாக வேண்டும் என்பது ஒன்றே எனது விருப்பம்" என்று பலதடவைகளில் சொல்லி வந்த பிரகாரம் பழனியி லிருந்து அவர் பிரேதத்தை இடையன்குடிக்குக் கொண்டு போய் அங்குள்ள தேவாலயத்தில் வெகுவிமரிசையுடன் அடக்கஞ் செய்தனர்.

அநேக போதகன்மார் அவர்காலத்தில் பிறந்து வளர்ந்து பட்டம் பெற்று அவரைத் தங்கள் ஆலோசனைக்காரராகவும் அன்பான பிதாவாகவும் மதித்து வந்தார்கள். இந்துதேசத்தோடும் இந்து தேச ஜனங்களோடும் அவர் உள்ளம் பலமான பாசத்தில் கட்டுண்டிருந்தபடியால், அவர் இந்தியாவை அந்நிய தேசமென்றும், இந்துக்களை அந்நிய தேசத்தாரென்றும் கனவிலும் நினைக்கவில்லை. அறிவும் அறமும், விசுவாசமும் விற்பன்னமும், ஊக்கமும், உபகாரமுமுள்ள இப்பேர்ப்பட்ட அநேக போதகன்மாரைத் தேவன் ஐரோப்பியருக்குள்ளும் சுதேசிகளுக்குள்ளும் எழுப்பி யருளுவாராக.

தெய்வநீதிக்கும் தீயபாவிக்கும் ஒப்புரவுண்டாக்கும்படி தேவ மனிதனாக இயேசுகிறிஸ்து உலகில் அவதாரமெடுத்தார். இவர் தெய்வமாயிருந்தும் தமது தேவமகிமையைக் களைந்து வைத்து விட்டு ஏழை மனிதனாகி நாம் படவேண்டிய கஸ்திக வினைத்தையும் உத்தரித்து சாதாரண மனுஷனைப்போல் சிலுவையில் மரிக்கத் தம்மை ஒப்புக்கொடுத்து அனுதாபங் காட்டிய அன்பின் ஆழத்தை இந்த மகாத்மா ஆராய்ந்தறிந்தார்.

அன்பே சிவம், தேவன் அன்பின் மயமாகவே யிருக்கிறார் என்பது அறிவாளர் துணிந்த முடிவு.- அன்பிற்கு அடையாளம் கோரதேத்தல்.

தேவன் தம்முடைய ஒரே பேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்திய ஜீவனை யடையும்படிக்கு அவரைத் தந்தருளி இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்ந்தார்.

தேவன் ஏழைப் பாவிகளாகிய நம்மில் அன்பு கூர்ந்ததால் நமது பாவத்தின் பலனைச் சுமந்து தீர்க்க தம்மையே பலியாக ஒப்புக் கொடுத்தார் என்ற தெய்வ அன்பின் ஆந்தரீகத்தை அறிந்த இவர் (Love alone can repay Love) 'அன்பிற்கு ஈடு அன்பே' என்றுணர்ந்து தமது ரக்ஷணியா மூர்த்தியின் அன்பைப் பிரசித்தமாக்குவதற்காக தமது வாலிபப் பிராயத்திலேயே தமது உடல் பொருள் ஆவி மூன்றையும் தேவஊழியத்திற்கென்று அர்ப்பணஞ் செய்தார்.

இவரைப்போல் தென்னிந்தியாவின் ஈடேற்றத்திற்காக உழைத்து உலகபாசத்தைத் துறந்து உழைத்த உத்தம புருஷர் பலருளர். Revd T. Adamson ஆடம்சன் ஐயர், Revd. Kernis கேனிஸ் ஐயர், Dr. Bower டாக்டர் பவர், Revd. Thomas தோமஸ் ஐயர், Revd. Walker உவாக்கர் ஐயர், Revd. Margoschios மர்காஸ் ஐயர், Bishop Stracheon ஸ்டிரகன் அத்தியக்ஷர், Dr. Pope போப் ஐயர், Revd. Father Beschey வீரமாமுனிவரென்ற பெஸ்கீசுவாமியார் முதலிய அனந்தம் ஐரோப்பியர்கள் தற்காலத்திலே ஆந்திருஸ் பாதிரியார் (Revd. Andrews) இந்தியர்களுக்கு சுயராஜியங் கிடைப்பதற்காகவும் இந்தியாவில் ஜாதிவித்தியாசம் ஒழிந்து சகோதர பாந்தமும் சமாசமும் ஏற்படுவதற்காகவும் மஹாத்மா காந்தியுடன் சேர்ந்து உழைத்து வருகிறார். தாங்களடைந்த அனுகூலத்தைப் பிரஸ்தாபித்து ஆத்மாக்களை ஈடேற்ற விரதம் பூண்டு சுயதேசத்தையும், இனஜனத்தையும், அந்தஸ்தையும் வெறுத்து சகிக்கக்கூடாத வெயிலுள்ள மணற் பூமியாகிய திருநெல்வேலி நாட்டில் தன்னய மறுப்பின் மேன்மையையும் தெய்வ ஊழியத்திற்காகத் தனனைக் கையளித்து உடல், உயிர்; பொருள் யாவையும் தத்தஞ் செய்வதின் லாபத்தையும் திருஷ்டாந்தப்படுத்தி யிருக்கின்றனர்.

தேவநாமசங்கீர்த்தனம்,

இயேசு மஹாதேவா.



நம் நாட்டினர்களுக்கு
நலம் பல விளைவிப்பதென்னும் நாட்டங்கொண்டு
உடல், பொருள், ஆவி மூன்றையும் ஜன ஆதிக்கத்திற்கென
பாரதமாதாவின் திருவோலக்கத்தில் அர்ப்பணஞ்செய்து
துறவியா யிருக்கும் பாரதபூஷணம்

**டாக்டர், ஸர். எஸ். சுப்பிரமணிய ஐயர்.**



இந்தியாவின் கவிச் சக்ரவர்த்தியும்
பாரதமாதாவின் அபிமான விருத்த புத்திரருமாகிய

**ஸர் ரபேந்திரநாத் டகோர்.**

## டாக்டர் ஸர் சுப்பிரமணிய ஐயர்.

அறமும் மறமும் மிக்க வள்ளலார் பலரும் வசித்துவந்ததும் ஈழுமெடுப்பு மில்லாததுமான மதுரைமா நகரின்கண் கி. பி 1842-ம் வருஷம் நீதிமணி ஐயர் ஜனனமானார். சுப்பிரமணிய ஐயர் இரண்டு வயதாயிருக்கையில் அவர் தகப்பனார் சூராவளி சுப்பய்யர் உயிர் துறந்தார். சிறு பிராயத்திலேயே படிப்பில் முதன்மையுள்ளவராயிருந்ததால் பல பரிசுகளும் மாதம் ரூபாய் 5. உபகாரச் சம்பளமும் கவர்ன்மெண்டாரிடம் பெற்று, படித்து பிரவேச பரீக்ஷையில் கீர்த்தியுடன் தேறினார். 17 வயதில் கலெக்டர் ஆபீசில் 0 ரூ. சம்பளத்தில் உத்தியோகம் புரிந்துகொண்டே சட்டப்பரீக்ஷைக்குப் படித்து முதல்வகுப்பில் தேறினார் தமது 22-ம் வயதில் எவ். ஏ. பரீட்சையும், 24-ம் வயதில் பீ. ஏ. பரீட்சையும தேறி சென்னைக்கேகி அங்கே சிலகாலும், பின்பு மதுரையிலும் வக்கீல் வேலை பார்த்து விவேகத்தையும், நியாயவாதங்களையும், சூட்சம அறிவையும் விளக்கிக் காட்டினார். பின்பு 10-வருட காலம் முனிசிபல் கமிஷனராகவும், ஜில்லா போர்ட் மெம்பராகவுமிருந்து வந்தார். இவர் மதுரை நகருக்கு சேர்மனாக வேலைபார்க்கையில் பொன்னின் குடத்திற்குப் பொட்டிட்டதுபோல் மதுரை நகர் நடுவில் சிங்காரத் தோட்டமொன்று ஏற்படுத்தினார். தர்ம இரக்ஷண்ய சபை ஒன்று ஸ்தாபித்தார். மேலும் வைகைநதி பாலங் கட்டவும் ஏற்பாடுசெய்தார் 1884-ம் வருஷத்தில் சென்னையில் சட்டசபை மெம்பராக நியமித்தார்கள். அதே வருடத்தில் தமது வாழ்க்கைத் துணை நலமாயிருந்த அவரது மனைவியார் மணிஐயரைத் தன்னந் தனியே விட்டு உயிர் துறந்தார். இக்காலத்தில் இவர் சதா தத்துவ நூல்களையும், வேதாந்த நூல்களையுமே ஆராய்ச்சி செய்து வந்தார். பிரஹ்மஞான சங்கத்தில் சர்வ மத சமரச கொள்கை யிருப்பதைக் கண்டு அதில் சேர்ந்தார்.

1888-ம் வருடத்தில் சென்னை உயர்தர நியாயஸ்தலத்தில் சர்க்கார் வக்கீலாக நியமனம் பெற்றார்.

1885-ம் வருடத்தில் காங்கிரஸ் மகாசபையை ஸ்தாபித்தவர்களில் சுப்பிரமணிய அய்யரும் ஒருவர். அன்றுமுதல் இன்றுவரை தன் மனதிலிருக்கும் எண்ணத்தைத் தாராளமாய் எவர்க்கும் பயப்படாமல் உள்ளபடி உரைத்து வருவதுடன், அதிகார வர்க்கத்தார்கள் நியாயவரம்பு கடந்து செய்யும் காரியங்களையும் தவறுதல்களையும் வெகு கண்டிப்பாய் எடுத்துக் கூறுகிறார். வித்யா விற்பன்னரும் கல்வியி னபிவிர்த்திக்குப் பாடுபடுபவருமாகிய சுப்பிரமணிய ஐயர் 1885 ம் வருட முதல் 22 வருடகாலம் சென்னை சர்வகலா சங்கத்தின் அங்கத்தினரு ளொருவராய் உழைத்து வந்தார் இளம்பிராயமுள்ள மாணவர்களுக்கு அதிகக் கடினமும் அளவுக்கு மேற்பட்டதுமான பாடங்களைப் படிக்கச் செய்வதால் சுகவீனமும், புத்தி தடுமாற்றமும் உண்டாகுமாதலால், படிப்பின் திட்டங்களைக் குறைக்க வேண்டுமென்று அடிக்கடி எச்சரித்திருக்கிறார். உழைப்பும் சாமர்த்தியமுமுடையவரானதால் சர்வகலா சங்க உதவி அத்தியக்ஷராக (Vice-Chancellor) நியமனம்பெற்ற முதல் இந்தியர் இவரே.

2908-ம் வருடத்தில் சட்டநிபுணர் பட்டம் (Doctor of Laws) அவருக்குத் தரிக்கப்பட்டது. 1896-ம் வருடத்தில் நடந்த வித்யா சங்கத்தி

ற்கு நாயகராக அவர் பேசியபொழுது "கற்றவர்கள் கைத்தொழில்கள், சமஸ்கிருதபாஷை, சுயபாஷை முதலியவற்றை விர்த்திசெய்து வருவது கடமை என்றும், விர்த்தியார்த்திகள் அடிக்கடி தேசாந்தரம் போவதனால் பலநாட்டின் நிலைமைகளை யறிந்து தமக்குண்டாயிருக்கும் குற்றம் குறைவுகளையும் நிவர்த்திக்கப் போதுமான முகாந்தரம் ஏற்படுமென்று போதித்தார்.

நீண்ட அனுபோகமும், திரண்ட ஞாபகசக்தியும், அகண்ட காருண்யமும் பொருந்திய சுப்பிரமணிய ஐயர் 1895-ம் வருடம் சென்னை உயர்தர நியாயஸ்தலத்திற்கு நியாயாதிபதியாக நியமனம் பெற்றார்.

அக்காலத்தில் 'சமன்செய்து சீர்தூக்கும் கோல்போலமைந்து ஒருபாற் கோடாமை சான்றோர்க்கணி." என்னும் பெரியோரின் வாக்கியப்படி வாதி பிரதிவாதிகளால் அறிவிக்கப்பட்டவற்றை முறையாலுள்ளபடி யறிந்து மனச்சாட்சிக்கு விரோதமின்றி தைரியத்துடனும் நிதானத்துடனும் நியாய தீர்ப்புச் செய்தார். இவருடைய நன்முயற்சியையும் ஊக்கத்தையும் கண்ட கவர்ன்மெண்டார் இவருக்குத் திவான்பஹதூர் பட்டமொன்றும், இந்திய இராஜ்யாதிபத்தியத்தின் கௌரவ தளகர்த்தர் என்று புலப்படும் (K. C. I. E.) பட்டமொன்றும் கொடுத்தார்கள்.

இவர் பிரதம ஜட்ஜியாய் நியமிக்கப்பட்ட 1900-வருடப்பிறப்பு தினத்தன்று "நைட்ஹுட்" என்கிற பிரபு பட்டமும் பெற்றார். 1907-ம் வருடம் ஹைக்கோர்ட் ஸ்தானத்திலிருந்து வேலையைவிட்டு பென்ஷன் பெற்றார். மாதம் ஒன்றுக்கு ரூ. 1100 பென்ஷன் பெற்று வருகிறார்.

கீழ்நாட்டுப் படிப்பும் மேல்நாட்டுப் படிப்பும் ஒன்றையொன்று தழுவ வேண்டும். சாத்தியமான புராதன கருமங்களை விலக்கி காலத்தையொட்டிய ஆசார அனுஷ்டானங்களைக் கைக்கொண்டு நவீன கருமங்களை நன்கு அனுஷ்டித்தல் நன்று என்பதே இவர் துணிவு. இந்தியாவை யொத்த அனேக நாடுகள் கல்வியிலும் ஐசுவரியத்திலும் தினேதினே விர்த்தியாகிக் கொண்டு வருகையில் நாம் மட்டும் சமுத்திரம் தாண்டக்கூடாது. பால்ய விதவா விவாகம் செய்யக்கூடாது. பிரௌடா விவாகஞ் செய்யக்கூடாது. சமபந்தி போஜனம் கூடாது. என்று சாதித்துச் சண்டை சச்சரவு செய்தல் சரியன்று. எடுத்ததற்கெல்லாம் சாஸ்திரமென்றும் கொடுத்ததற்கெல்லாம் ஸ்மிருதிவாக்கியமென்றும் கூறி பழைய சாஸ்திரங்களையே அனுசரிப்பது மின்சார வண்டிகள், ஆகாயவிமானங்கள், முதலிய துரிதவாகனங்கள் ஏற்பட்டிருக்கும் இக்காலத்தில், இரட்டைக்காளை கட்டிய ஓலைக்குச்சு வண்டிகளில் ஏறிச் செல்ல சம்மதிப்பதற் கொப்பாகும். காலசக்கரம் எப்பொழுதும் மாறிக்கொண்டே வருகிறது. நேற்றைய ஆசாரம் இன்றைக்கில்லை. நேற்றுக் குடிசையா யிருந்த வீடு இன்று உப்பரிகை ஆகின்றது. நாயும், நரியும் ஓடி ஊளையிட்டிருந்த ஊர் இன்று யானையும், பரியும் அம்பாரியிட்டுப் பவனிவரும் நிலைமையிலிருக்கின்றது. முப்பது வருடங்களுக்குமுன் காதிலுங் கேட்டிராத ஜப்பான் இன்றைக்குச் சகல ஐசுவரியத்துடனும், வீரத்துடனும், கீர்த்தியுடனும் விளங்குகின்றது. கல்வி

கேள்விகளற்றுக் கானகத்தே திரிந்து ஓடின பிலிப்பைனர், நீக்ரோவியர் காபிரிகள்முதலிய நாகரீகமற்றஜாதியார்கள் இந்தியர்களின் நிலைமையைக் கண்டு ஏளனஞ் செய்கின்றார்கள். பிரபஞ்சமனைத்தும் இங்ஙனமிருக்க, இந்தியா மட்டும் பழைய கதையைக் கொண்டிருத்தல் அழகல்ல வென்பதைக் கண்ட சுப்பிரமணிஐயர் நாட்டை அபிவிர்த்தி செய்வதற்கு வைதிகர்கள் அவசியமென்பதைக் கொண்டுதான், இவர்களைக் காஞ்சிபுரத்தில் 1912-ம் வருடத்தில் வரவழைத்துப் பெரிய பரிஷத் ஒன்று கூட்டினார். இதல்லாமல் தர்மரக்ஷண சபையொன்றும் இவர் ஸ்தாபித்தார். யோகாப்பியாசத்தில் இவருக்கு வெகு பிரீதி. இவர் அடிக்கடி கதவைப் பூட்டிக்கொண்டு ஒருவருடனும் வாய் பேசாமல் நாள் முழுவதும் இருப்பது வழக்கம். தான் உண்டு, தன் அறைஉண்டு, தன்னுடைய தியானமுண்டு என்றிருப்பார் இவர். சரியான வேளையில் போஜனஞ் செய்யாமலும், நித்திரைகொள்ளாமலும் சதா யோக நிஷ்டையிலே யிருப்பது வழக்கம், ஆரம்பத்தில் இவர் காங்கிரஸ் மூலமாகவே ராஜ்ய விஷயங்களிலும் போராடி வந்தபோதிலும், மத்தியில் வெளிப்படையாக ராஜ்ஜிய விஷயங்களில் ஊடாடாதவரா யிருக்கவேண்டியது நேர்ந்தது; என்றாலும் கொழுந்துவிட்டெரியும் அக்கினியின்மேல் சாம்பலை எவ்வளவு கனமாகப் போட்டு மூடியிருப்பினும் காற்று வரும் தறுவாயில், அக்கினி குபீரென்று கிழம்பித் தன் சுவாலை வீசுவதுபோல் ராஜ்ஜிய புரட்சி வந்தவுடன் இவர் வெளிக்கிளம்பினார். இந்த ராஜாங்கமானது எவ்வளவு தூரம் குடிகளது சுதந்தரத்தில் மதிப்பு வைக்கிறதோ அவ்வளவு தூரந்தான் அந்த ராஜ சட்டங்களிலும் நமக்கு மதிப்பிருக்கும். நமக்கே உரியதான பயிற்சி, நாகரீகம், மனோராச்சியம் ஆகிய இவ்வுணவுகளைக் கொண்டு பிரபஞ்ச ஜீவாத்மாக்களுக்கு உரிய உரிமைகளை நன்றாய் அடையவேண்டும் என்கிற ஆவலும் ஜனங்களுக்கு உண்டாய்விட்டது. சுயஆட்சிச் சங்கம் நாளுக்கு நாள் வளர்மதியம்போல் பிரகாசிக்கத் தொடங்கிற்று. காட்டுத்தீபம்போல் நாடெங்கும் பரவிற்று. குடிகளுக்குச் சில சுதந்தரங்க ளிருக்கின்றன. அவை இராஜாங்கத்தாரால் உண்டாக்கப்பட்டதல்ல. இராஜாங்கம் நிலைத்திருப்பதற்கு அவை காரணமாய் நிற்கும். அந்தச் சுதந்தரங்கள் யாராலும் சிருஷ்டிக்கப்பட்டதல்ல. அவை சுயமாகவே உண்டானவை. அவை ஜகத்காரணரான பகவானால் கொடுக்கப்பட்டன. நமக்குக் கைகால் முதலிய அவயவங்களையும் புத்திக் கூர்மையையும் கொடுத்திருப்பதுபோல உலக வாழ்க்கையில் நமக்கென்றே சி[illegible]ங்களும் கொடுத்தனுப்பி யிருக்கிறார். அந்தச் சுதந்தரங்களின் [illegible]ங்கள் பொன்முடி தரித்த பூபாலரிடத்திலிருந்து வந்ததல்ல. அரசர்க்கரசராய் ஜகத்காரணராய் விளங்கும் பகவானிடத்தினின்றே வந்தவை. ஆகவே நமது குழப்பம் நியாயத்திற்கு அடங்கியதாகவே யிருக்கும்.

நமது மனமானது கவர்ன்மெண்டினின்றும், இங்கிலாந்திலுள்ள பார்லிமெண்டிலிருந்தும், டில்லியிலும், ஸிம்லாவிலும் அமைந்துள்ள ராஜாங்கத்திலிருந்தும் திரும்பிவிட்டது. நமது மனமானது பசியினாலும், வியாதியினாலும் வருத்தமடைந்து வயிற்றிற்குக் கஞ்சியும் கட்டக் கந்தையுமின்றிப் பலகாலமாய் வருந்தும் 31½ கோடி யடங்கிய நமது இந்திய நண்பர்களிடம் திரும்பிவிட்டது. நமது மனமானது அப்படித் திரும்பி அடையப்போகும் பலனை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் காண்கிறோம். அதை இது

வரையி வில்லாமல் நமக்குண்டாயிருக்கிற தேசாபிமானமும் சகோதராவாஞ் சையுமே நன்றாய் எடுத்துக்காட்டுகிறது. ஜனசங்கையில் அதிகரித்திருப்பி னும், கஷ்டத்திலாழ்ந்தியும் சோறு கூறைக்குக் கதியின்றி வருந்தும் நமது சகோதர கோடிகளில் இதுவரையில் கண்டிராத ஒருவிதமான நம்பிக்கை யையும், பலத்தையும் காண்கிறோம். இப்பொழுது கிளம்பியிருக்கும் புதிய கிளர்ச்சிக்குக் காரணம் அந்த நம்பிக்கையே. இந்தப் புதிய கிளர்ச் சிக்கு ஆதாரமாய் நிற்பது அந்த நம்பிக்கையேதான். இந்த நம்பிக்கை யை நனகறிந்தும் சுப்பிரமணிய ஐயர் இதர விஷயங்களில் சிரத்தை கொண்டு ஜன அபிவிருத்தியை நாட விரதம் பூண்டனர்.


சாமிவேலின் சிங்கமார்க்கு



## சிந்தாமணி பரிமள கூந்தல் தைலம்.





இந்த மகா அருமையான தைலம் கூந்தலை வளரச் செய்வதில் மிக ஆச்சரியமான குணமுடையது. இதைக் காலை மாலை இருவேளை களிலும் தடவி வர மயிர்க்கால் களுக்குக் குளிர்ச்சியையும் போஷிப்பையும் தந்து, கூந்தலை அதிவிரை வில் கருமையாயும், செழிப்பாயும் அடர்த்தியாயும் வளரச் செய்து, கண், மூளை, இவைகளுக்குக் குளி ர்ச்சியையும் தந்து, பித்த மயக்கம் கண்ணில் நீர்வடிதல், சிரோக காந் தல் முதலிய ரோகங்களையும் நிவர் த்தி செய்யும். சுகந்த வாசனையு ள்ள இந்தத் தைலத்தை உபயோ கித்துவரின் பருவம் வருமுன் பித் தத்தால் நரைத்த மயிர்களும் நா ளடைவில் கறுக்கும்.

விலை அணா 12.

சாமிவேல் வைத்தியசாலை,

தென்காஞ்சி, இரங்கோன்.

# மஹாத்மா காந்தி.

மனுஷர் உங்களுக்கு எவைகளைச்செய்ய விரும்புகிறீர்களோ, அவைகளையே நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள். —கிறிஸ்து. மத்தேயு. 7: 12.

"எல்லாரும் இவ்வுலகில் இன்புற்றிருப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே."

தாயுமானவர்.

மோகனதாஸ் கரீம் சந்திரகாந்தி ஓர் மஹாத்மா. சன்னியாசித்துவமாகிய அஹிம்ஸா தர்மத்தை ராஜ்ஜிய காரியங்களில் உபயோகப்படுத்தி ஜெயம் பெற்று வரும் தற்காலத்திய தீர்க்கதரிசி. பரிசுத்த குணமும் கருணையின் பிரகாசமும் நிறைந்து தன்னல மறுப்பைப் பூர்த்தியாக அடைந்து தெய்வீகக் குணங்களோடு பிரகாசித்து விளங்கிய இயேசு கிறிஸ்துவைப்பற்றி—"அவருடைய எதிரிகளும் அவர்மேல் குற்றஞ் சாட்டத் துணியவில்லை" என்று சொல்லியிருப்பதுபோல் எதிரிகளும் புகழும் மனஉறுதியடைந்த மஹான். மத்-27. மார்க் 15. லூக் 23. யோவான் 18: 38.

இவர் பிறந்தது கி. பி. 1869-ம் வருஷம் அக்டோபர் மாதம். இவர் பாட்டனாரும் தகப்பனாரும் கத்தியவார் மாகாணத்தைச்சேர்ந்த போர்பந்தர் என்ற சுதேச ராஜாங்கத்தில் மந்திரிவேலை பார்த்தவர்கள். அவ்விருவரும் மகா சத்தியவந்தர்கள், மிகுதியான மனோபலங் கொண்டவர்கள்.

மோகனதாசருடைய தாயார் புத்திக்கூர்மையும் தர்மசிந்தையுமுடைய ஒரு ஸ்திரீ ரத்னம். அந்த அம்மையின் வாழ்க்கையே சிறந்த வாழ்க்கை. அவர் வசிக்கும் கிரஹத்தில் அஷ்டலட்சுமிகளும் குடிபுகுந்து ஆநந்தத்தால் யாவரையும் பூரிக்கச் செய்வார்கள். இந்தத் தாயாருடைய அன்பே மோகனதாசரைத் தீயவழிகளில் செல்லவொட்டாமல் தடைசெய்யப் பெருந்தூண்டுகோலாக இருந்ததென்பது பின்னால் தெரியவரும்.

காந்திக்கு 12 வயதிலேயே கலியாணமாகிவிட்டது. பாலியத்திலேயே விவாகம் நடத்தும் வழக்கத்தினாலேதான் இந்திய ஜனசமூகம் இவ்வளவு தாழ்ந்த ஸ்திதிக்கு வந்ததென்பது காந்தியின் அபிப்பிராயம். இவருடைய மனைவியார் புருஷபக்தி மிகுந்தவள். தேசாபிமானத்தை முன்னிட்டுத் தன்புருஷன் அநுபவித்துவரும் கஷ்டங்களையெல்லாம் தானும் அநுபவிக்கத் தயாராகவே யிருக்கிறாள். காந்தியின் ஜெயில்வாசங்களில் தானும் பங்கெடு-

கொள்ள முடியவில்லையே யென்பது மாத்திரமே இந்தப்பதிவிரதா சிரோன்மணியின் ஒரே குறை. தன் மூத்தகுமாரனாகிய அரிலால் என்பவரை ஜெயிலுக்கு அனுப்பியதில் அவள் காட்டிய தைரியத்தின் மூலமாய் அவளின் தேசபக்தி விளங்கும்.

நமது காந்தி 17 வயதில் மெற்றிக்குலேஷன் என்ற பிரவேச பரீட்சையில் தேறி லண்டன் நகரத்தில் பாரிஸ்டர் பரீட்சைக்குப் படிக்கப்போக எண்ணங்கொண்டார் தாயாருக்கு அனுப்பச் சம்மதமில்லை. தாயார் உத்தரவு கொடாவிட்டால் நம்முடைய மேலான லாபங்களெல்லாம் வீண்போவதா யிருக்கிறதே என்று பிள்ளையும், உத்தரவு கொடுத்தால் சீமையில் பிள்ளை கெடாமலிருக்க என்ன செய்யலாமென்று தாயும் ஆலோசிக்கலானார்கள். சில நாட்கள் இவ்விதம் கழிந்தபிறகு கடைசியில் ஒரு முடிவு ஏற்பட்டது. தெய்வத்தின் முன்பாக ஒருவிதமாகச் சத்தியஞ் செய்யச் சொல்லிவிட்டு இங்கிலாந்திற்குப் போக உத்தரவு கொடுப்பதென்று தாயார் தீர்மானித்தாள். லண்டன் நகரத்தில்இருக்கும் வரையிலும் மாமிசபோஜனம், சுராபானம், அன்மார்க்க ஸ்திரீயின் சகவாசம்; இம்மூன்றையும் தியாகம் செய்வேனென்று காந்தியைச் சத்தியஞ் செய்து கொடுக்கச் செய்தாள். அவ்விதமே காந்தியும் செய்தார். இயற்கையிலேயே சத்தியந் தவறுதவராகிய மோகனதாஸ் காந்தி தெய்வத்தின்முன் சத்தியஞ் செய்து கொடுத்தால் கேட்கவும் வேண்டுமா? அதிலும் தாயார் விருப்பத்திற்காக இவ்விதம் செய்திருக்கிறார். பெற்றோர்களிடம் நமது காந்திக்கு இருக்கும் அன்பிற்கு அளவில்லை. தாயாரிடத்தில் ஆதியில் செய்து கொடுத்த சத்தியமே லண்டன் பட்டணத்திலுள்ள தீமைகளுக்கு அவரை விலக்கிக் காத்தது. அங்குள்ள டாம்பீகமான வழக்கங்களை சிறிதுகாலம் அனுபவித்துப் பார்த்து அவைகளில் வெறுப்படைந்தார். மனிதன் தன் சௌகரியங்களை எவ்வளவு குறைத்துக்கொள்ள முடியுமோ அவ்வளவையும் குறைத்தே உயிர் வாழவேண்டு மென்பது அவருடைய கொள்கை யாயிற்று. தன் போஜன பதார்த்தங்களைத் தன் கைகளாலேயே ஒரு சிறிய எண்ணெய் அடுப்பில் தயார் செய்துகொள்வார். அநேக சமயங்களில் ஒருவேளை போஜனம் மாத்திரமே கிளப்பில் சாப்பிடுவார். மாதச் செலவுகளை நான்கு பவுனில் அடக்கஞ் செய்துகொண்டார். மத வுண்மைகளைத் தெளிவாய்த் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற அவாவும அதிகரித்தது. உண்மையை அறிய அதிக ஆவலுண்டாயிற்று. அனந்தம் கிறிஸ்தவப் பாதிரிமார்களிடம் பழகிவந்தார். கிறிஸ்தவ யோகீஸ்பரராகத் தமது காலத்தைச் செலவிட்ட ருஷியா தேசத்துப்பிரபுவாகிய டால்ஸ்டாய் தற்காலத்தியநாகரீகத்தை

கண்டித்துப் பேசி மெய்யான கிறிஸ்தவ பக்தனிடங் காணவேண்டிய மனத்தாழ்மை, சகோதரவாஞ்சை, ஜீவகாருண்ணியம், சுயநலவெறுப்பு, பொதுநலவிருப்பு, நித்திய ஜீவகிரீடத்தைப்பெறும்படி பால்மஹாமுனிவர் போன்ற தபோநிதிகள் தமது சரீரத்தை அடக்கியாண்டது முதலிய பல விஷயங்களை கதையுருபமாக எழுதி வெளியாக்கியிருப்பதைப் பாராயணஞ் செய்துகொண்டு வருவது வழக்கம். பகவதகீதையையும் இக்காலத்தில்தான் படித்து அதின் சூட்சும அர்த்தங்களையும் தெரிந்துகொண்டார். இவ்விதமாக லண்டன் நகரில் மூன்று வருஷகாலமிருந்து பாரிஸ்டர் வேலைக்காக வேண்டிய பயிற்சியையும் ஆத்மபோதனைகளையும் அடைந்து கடைசியில் இந்தியாவிற்குத் திரும்பி வந்து வகீல் தொழிலிலேயே அமர்ந்து பதினெட்டுமாதகாலம் இந்தியாவிலிருந்தார்.

தென்ஆப்பிரிக்காவில் ஒரு வருஷக்காலமிருந்து அங்குள்ள ஒரு இந்திய வியாபாரக் கம்பெனியின் வியாஜ்ஜியத்தை நடத்துவதாக ஒப்புக்கொண்டு அங்கு சென்றார். துறைமுகத்திலிறங்கியவுடன் எல்லாம் பார்ப்பதற்கு ரமணீயமாகவே தெரிந்ததாம். ஆனால் அங்குள்ள வெள்ளைக்காரர்கள் இந்தியர்களை நாகரீகமற்ற தாழ்ந்த வகுப்பினரெனக் கருதி சட்டத்தின் மூலமாகவே அடிமைகளைப்போல் நடத்துவதைக் கண்ணுற்றார். ரயில்வே, வாடகை வண்டி முதலியவைகளில் பிரயாணம் பண்ணுவது கஷ்டமாகிவிட்டது. எல்லாவற்றையும் சகித்தார். இதற்குமுன் இவருக்கிருந்த சொற்ப அச்சத்தையும் நீக்கிற்று. மனோபலம், பொறுமை, அடக்கம் முதலியவற்றைக் கையாடி ஆத்மசக்தியை அதிகரிக்கச் செய்தார். நடுத்தெருவில் போகும்போது ஒரு காவலாளன் இவரைக் காலாலுதைத்தான். பொறுமையுடன் சகித்துக்கொண்டு போனார். துன்பங்களைத் தாங்குவதற்குப் போதுமான சக்தியை உண்டாக்கிக்கொள்ள வேண்டும் என்பதே இவருடையகொள்கை.

இந்தக் காலத்தில்தான் இவர் கிறிஸ்தவ மதத்தின் பெருமைகளையும், மேனாட்டுத் தத்துவங்களையும் நன்றாய்ப் படித்துத் தெரிந்துகொண்டது. ஐரோப்பாக் கண்டத்திற்கே உண்மையான மகரிஷியென்று பெயர்பெற்றுக் காலஞ்சென்ற கௌண்ட் லியோ டால்ஸ்ராய் என்பவரின் தத்துவங்கள் உயர்ந்தவைகளென்பது இவருடைய அபிப்பிராயம். இன்னும் அநேகருடைய கல்வித்திறமையைப் பற்றியும் சிலாகித்திருக்கிறார். இவருடைய சத்தியநிலைமையும் உண்மையை அறிய இவர் கொண்டிருக்கும் ஆவலுமே அந்தத் தென்ஆப்பிரிக்காவில்கூட இவருக்கு அநேக ஐரோப்பிய கனவான்களுடைய சிநேகத்தை உண்டுபண்ணின.

தென்ஆப்பிரிக்கா கவர்ன்மெண்டார் இந்தியர்களுக்குண்டாயிருந்த சுதந்தரங்களையும், சுகங்களையும் பல சட்டங்களின் மூலமாக குறைத்துக்கொண்டே வரப் பிரயத்தனஞ் செய்தார்கள். இந்தத் தென்ஆப்பிரிக்கா வெள்ளையர்களுடைய எண்ணங்களையெல்லாம் யோசனைதான் அங்குள்ள இந்தியர்களுக்கு எடுத்துக் காட்டினார். அதற்குமுன் அஞ்ஞானக் கடலில் ஆழ்ந்திருந்த கண்கள் திறக்கப்பட்டன, தைரியமும் அவர்களிடம் விர்த்தியாக ஆரம்பித்துவிட்டது. காந்தியின் முயற்சியாலேயே நெற்றால் இந்தியர்களின் காங்கிரஸும், கல்வி அபிவிர்த்திச் சங்கமும் ஏற்பட்டன. ஒற்றுமையின் பலத்தைப்பற்றி இந்தியர்களுக்கு எடுத்துச் சொல்லுவதும், அவர்களுக்காகவே பல சங்கங்கள் ஏற்படுத்தி பல காரியங்களைச் செய்வதும், இதற்கிடையில் தம்முடைய வக்கீல் தொழிலைப் பார்த்துக்கொள்வதும் இப்படியே தன் காலமுழுமையும் செலவு செய்து மனப்பூர்வமாகப் பாடுபட்டு வந்தார். தென்ஆப்பிரிக்காவில் இந்தியர்களை வெள்ளையர்கள் கேள்விமுறையின்றி கொள்ளையடித்து ஏமாற்றி வருவதாக காந்தி இந்தியர்களுக்குச் சொன்னார் என்று ராய்ட்டர் ஏஜண்டுகள் தந்திமூலமாய உலகம் முழுவதும் தெரியப்படுத்தினார்கள்.

நெற்றால் முழுமையும் காந்திக்கு விரோதமாகக் கிளம்பிவிட்டது. மேலும் இந்தியர்களைப் பற்றி அவதூறான வதந்திகளும் பரவ ஆரம்பித்தன. பல உபத்திரவங்களும், சட்டங்களும் ஏற்பட்டன.

அதிகாரிகளுக்கு காந்தியைப்பற்றி வெறுப்பும் பயமுமுண்டாயிற்று. வியாபாரிகளான வெள்ளையர்களுக்கு இந்தியர்கள் தமது சம்பாதனையைக் கெடுத்து வருகிறார்களே என்ற அருவருப்பும் போட்டியும் உண்டாயிற்று. இந்தியர்களுக்கு அதிகாரிகளைப் பற்றிய அவநம்பிக்கை நாளுக்குநாள் அதிகரித்துக்கொண்டு வந்தது. இந்தியர்களிடம் காந்தியின் செல்வாக்கு செல்லக்கூடாதென்று தம்மால் ஆனமட்டும் பிரயத்தனஞ்செய்து பார்த்தார்கள். பலிக்கவில்லை. இவரால் தாம் அடைந்த லாபங்களும் யோக்கியதைகளும் இந்தியர்களுக்கு நன்றாய்த் தெரியும். இவரைவிட்டால் மோசம் வருமென்று நினைத்தார்கள். அதிகாரிகள் விரோதித்தாலும் காந்தியின் புத்திமதியையே கேட்டு நடப்பது உசிதமென்று தீர்மானித்தார்கள். இந்தியர்களுக்குள் எல்லோரும் சேர்ந்து தகுந்த மார்க்கங்களில் ஏகோபித்து நடந்தாலொழிய வேறுகதியில்லையென்று விளங்கியது. அதற்காக 1903-ம் வருஷம் இந்தியர்களின் அபிப்பிராயம் என்று பேர்கொண்ட ஒரு பத்திரிகையை ஆரம்பித்தார். பத்திரிகை ஏற்பட்ட முதல் வருஷத்தில் காந்திக்கு மூப்ப

தாயிரம் ரூபாய் நஷ்டம் வந்தது. இங்கிலீஷ், தமிழ், குஜராத்தி, இந்தி என்ற நான்கு பாஷைகளிலும் பத்திரிகை நடத்தப்பட்டது. திரவிய நஷ்டமானாலும் மனம் தளராமல் தைரியத்தோடு இந்தியர்களுள் எல்லோருக்கும் ஒற்றுமை உணர்ச்சியைப் புகட்டிவந்தார். இந்தப் பத்திரிகை இல்லாவிட்டால் பொறுமை எதிர்ப்பு அல்லது ஆத்மசக்தி என்பது இவ்வளவு இலகுவாக நடைபெற்றிராது. சீக்கிரத்திலேயே காந்தியுடன் ஒற்றுமைப்பதற்கு அநேகர் சேர்ந்துகொண்டனர். உடல், பொருள், ஆவி முதலிய யாவற்றையும் தேசத்திற்காகத் தத்தஞ் செய்யத் தயாராக இருந்தனர். நாளடைவில் இந்தியர்களின் பலம் அதிகரித்துக்கொண்டு வந்தது. விடாப்பிடியாய் வேலை செய்து கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ள மனோதிடமடைந்தார்கள். போர்வீரனுடைய தீரத்தைக் காட்டிலும் இவர்கள் காட்டிய தீரம் எவ்வளவோ பங்கு உயர்ந்தது.

போர்வீரனுடைய பெருமையெல்லாம் கொடிய யுத்தத்தில் அநேகரைக் கொன்ற தைரியத்தால் உண்டாகிறது. மேலும் யுத்தகாலங்களில் வெற்றிகொண்டு தைரியமடைவது சாமான்னியருக்கும் இலகுவான காரியமாகும். ஆனால் பிறர் நமக்குத் தீங்குசெய்யும்போது மனதில் கோபங்கொள்ளாமலும், சரீரபலத்தால் எதிர்க்காமலும், தைரியமாகவும் கம்பீரமாகவும் முகங்களை வைத்துக்கொண்டு சகல துக்கங்களையும் சகித்தல் என்பது அனுபவித்தவர்களுக்கே தெரியும். இதுவே எப்போதும் உண்மையான பெருமையைத் தரும். இப்படிப்பட்ட குணத்தையுடையவன் துக்கங்களுக்காளாகி யிருக்கும்போதும் கிறிஸ்துவைப்போல் ஆநந்தரூபியாகவே யிருப்பான். சகல துக்கங்களும் அவனை விட்டு நீங்கிவிடுகின்றன. கிறிஸ்துவானவர் சிலுவையில் உயிர்விடுந்தறுவாயில் "பிதாவே இவர்களுக்கு மன்னியும் தாங்கள் செய்கிறது இன்னதென்று அறியாதிருக்கிறார்களே" என்று தமது சத்துருக்களுக்காக ஜெபம் பண்ணினதுபோன்ற உன்னத நிலைக்கு பாரதமாதாவின் புத்திரர் அனைவரும் வரவேண்டுமென்பது காந்தி மஹாத்மாவின் நோக்கம். அதற்காகவே அவர் தென்ஆப்பிரிக்காவை விட்டு இந்தியாவிற்கு வர நேர்ந்ததுபோலும். 1906-வது வருஷ முதல் 1914-வது வருஷம் வரையில் ஆத்மசக்திப் பிரயோகஞ் செய்து தென்ஆப்பிரிக்காவில் வெற்றி அடைந்திருக்கிறார். இந்தியாவில் இந்தியர்களின் கௌரவத்தையும், பிரிட்டிஷாரின் யோக்கியதையையும் காப்பாற்றுவதற்காக பாடுபட்டு வருகிற இந்த உத்தம புருஷரின் குணநிசயங்களை எடுத்துரைக்க எவரால் முடியும்.

## ஆத்ம சக்தி.

"உங்கள் சத்துருக்களைச் சிநேகியுங்கள், உங்களைச் சபிக்கிறவர்களை ஆசிர்வதியுங்கள், உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள், உங்களை நிந்திக்கிறவர்களுக்காகவும், உங்களைத் துன்பப்படுத்துகிறவர்களுக்காகவும் ஜெபம் பண்ணுங்கள். மத். 5-44.

"நீ தீமையினாலே வெல்லப்படாமல் தீமையை நன்மையினாலே வெல்லு" (ரோம. 12) என்று போதித்த இயேசுக்கிறிஸ்துவின் உத்தமதாசனான டால்ஸ்ருய் (Tolstoy) என்ற ருஷிய தேசத்து பிரபு கடவுளிடத்தில் நமக்கிருக்கும் விசுவாசத்தை ஆதாரமாகக் கொண்டு மாத்திரமே உலகத்திலுள்ள உழைப்பாளிகளின் பழுவை இலேசாக்கலாம். மனுஷனாய்ப் பிறந்த ஒவ்வொருவனும் சகித்தனுபவிக்க வேண்டிய சுகானுபவங்களைப் பெறலாம்; இஜ்ஜீவியத்திலுண்டாகக்கூடிய உபத்திரவங்களையும் மரணத்தின் கசப்பையும் மாற்றலாம் என்று போதித்தார்.

இந்த டால்ஸ்ருய் (Tolstoy) என்ற பிரபு உலகத்திலுள்ள சர்வாத்மாக்களும் இன்பத்தை அடையும் மார்க்கங்களை ஒட்டிய உபாயங்களை உலகத்தில் பரவச்செய்யும்படி நீதிக்கதைகளும், உபமானங்களும், உபாயங்களும் அடங்கிய பல கிரந்தங்களை எழுதி வைத்திருக்கிறார். அவற்றின் மூலமாக ஒருவன் செய்யவேண்டிய சரியான காரியம் எது? அதை எந்த சமயத்தில் எவ்விதமாக ஆரம்பிக்கிறது? அதைச் செய்யும்படி போதிக்கத் தகுந்த சரியான மனுஷன் யார்? என்ற விவரங்களைத் தெளிவாய்க் காண்பித்திருக்கிறார். இவர் எழுதிய கிரந்தங்களை அடிக்கடி வாசித்து வருவது மோகனதாஸருக்கு வழக்கம். ஆகவே மஹாத்மா காந்தியை டால்ஸ்ருய் (Tolstoy) என்ற கிறிஸ்தவ சன்னியாசியின் சிஷன் என்று சொல்லலாம். இவர் ஆத்மசக்தியைப் பெற்றுக்கொள்ளும் விதத்தையும், அதை உபயோகிப்பதனால் அடையக்கூடிய பாத்திய சிலாக்கியங்களையும்; போதனையின் மூலமாகவும், சாதனையின் மூலமாகவும் பிரபல்யப்படுத்துகின்றார். இவர் சொல்லுவதாவது:- எதிரிகளிடம் விரோதமான எண்ணங்கூட நமக்குத் தோன்றக் கூடாது. சர்வ ஜீவராசிகளிடத்தும் அன்புபாராட்ட வேண்டியதொன்றே நமது கடமை. தீமைசெய்வதும மற்றவர்களை அடிமைகளாகப் பாவித்து நடத்துவதும் ஆத்ம சக்தி அமைந்த தெய்வதாசருக் குகந்த குணங்களன்று. சாத்தானின் குணங்களாகும்.

ஒருவர் நமக்கு இடும் கட்டளை அக்கிரமமென்று தோன்றினால் அத்தகைய கட்டளைக்குக் கீழ்ப்படியாமலே இருந்துவிட்டு



பாரதமாதாவின் புத்திரரில் பழுத்த தேசாபிமானியும் உயர்நிலைக்கான
ஒப்பற்ற தேசத்தொண்டு புரிந்து வருபவரும்,
அபார சக்தியின் அற்புத வெற்றியால்
இந்தியாவை உன்னத நிலைக்குக் கொண்டுவர உழைத்து வருபவருமாகிய

**மஹாத்மா காந்தி.**

அதனால் நேரும் துன்பங்களைப் பொறுமையுடன் சகிப்பதே ஆத்ம சக்தி அல்லது பொறுமை எதிர்ப்பு (Passive resistance.) புண்ணிய கருமங்களையே சாந்தத்துடன் அனுசரித்து பிறர் செய்யும் தீமையை சகித்துக்கொள்ள பழகிவிட்டால் நம்மிடம் ஆத்மசக்தி அதிகரிக்கும். ஆத்மசக்திக்கு ஈடாக வேறெந்த சக்தியும் எதிர் நிற்க முடியாது என்பது நிச்சயம். இந்த ஆத்மசக்தி மார்க்கத்தை அனுசரிப்பவன் ஒருபோதும் பிறருக்கு தீமை செய்வதேயில்லை. அப்படித் தீமை செய்தால் அது அவனையும் அவன் கோரிக்கையையும் கெடுத்துவிடும். ஆதலால் ஆத்மசக்தி ஓர் புண்ணிய கருமாவுக்கு சமமாகும். அதை உபயோகிப்பவர்களும் அவர் விரோதிகளும் நன்மையையே அடைவார்கள். இவ்வழி யனுசரிப்பவர்களுக்கு அபஜெயமென்பதே கிடையாது. "தீமையோடு எதிர்த்து நிற்க வேண்டாம்" மத் 5: 39. என்று கிறிஸ்து சொல்லியிருப்பதுபோல் பலவந்த சக்தியை நம்மிடம் ஒருவன் பிரயோகம் செய்தால் அதற்குப் பதில் நாமும் பலவந்த சக்தியை உபயோகித்து எதிர்த்து நிற்கக்கூடாது. ஆத்மசக்தியே அதற்குச் சரியான மார்க்கம். இந்த மார்க்கத்திற்கு, சாத்விக பரிகாரம் சாத்விக எதிர்ப்பு என்று சொல்லப்படும். சாத்விக எதிர்ப்பை கையாடுபவன் தனக்குத் தானே எதிரிடையான முயற்சி செய்வானே யல்லாது பிறருக்கு எதிரிடையான முயற்சியைசெய்வதில்லை. இந்த மார்க்கத்தில் நாம் நடந்து வரும்போது நமக்கு சரீர அசௌகரியங்கள் அதிகம் என்பது வாஸ்தவம். ஆனால் உலக வாழ்க்கையில் இந்த உபத்திரவங்களும் கஷ்டங்களும் குறைவல்லவே. உலகமே உபத்திரவம் நிறைந்ததுதானே. இதை மெய்யாய் உணர்ந்து பகிரங்கமாக இந்தக் கஷ்டங்களைத் தாங்கக்கூடிய சக்தியை வரவழைத்துக் கொள்வதே ஆத்மசக்தியாம். இதுவே கிறிஸ்துவின் மார்க்கம். மகாத்மா காந்தி அனுபவத்தில் கொண்டுவந்து ஜெயமடைவது.

இந்த மார்க்கமே மேலானதென்று நமக்குத் தெரிந்தபிறகு கஷ்டங்களை சகிக்கவும், சரீர சுகங்களை தியாகம் செய்யவும் தக்க சக்தியைப் பெற்று அனுபவத்தில காண்பிக்க முயற்சிப்போம். "பந்தயத்திற்குப் போராடுகிற யாவரும் எல்லாவற்றிலேயும் இச்சையடக்கமா யிருப்பார்கள். அவர்கள் அழிவுள்ள கிரீடத்தைப் பெறும்படிக்கு அப்படிச் செய்கிறார்கள். நாமோ அழிவில்லாத கிரீடத்தைப் பெறும்படிக்கு அப்படிச் செய்கிறோம். ஆதலால் நான் நிச்சயமில்லாதவனாக ஓடேன். ஆகாயத்தை அடிக்கிறவனாக சிலம்பம் பண்ணேன். மற்றவர்களுக்குப பிரசங்கம்பண்ணுகிற நான்தானே ஆகாதவனாய் போகாதபடிககு என் சரீரத்தை ஒடுக்கி கீழ்ப்படுத்துகிறேன்," என்று பால்மகாமுனிவர் கொரிந்தியருக்கு

எழுதின முதலாம் நிருபம், 9-ம் அத்தியாயத்தில் சொல்லியிருப்பதுபோல் இயேசுகிறிஸ்து நாதரின் உபதேசங்களி லடங்கிய ஆந்திரீகக் கருத்தை மகாத்மா காந்தி தமது சாதனையாலும் போதனையாலும் உலகத்தினர்க்குத் தற்காலத்தில் பகிரங்கப்படுத்தி வருகிறார்.

சரீர சுகங்களை வெறுத்து பஞ்சேந்திரியங்களை யடக்கி ஒடுக்கி கஷ்டங்களையே பொறுமையுடன் நயந்து கதியாக் அங்கீகாரம் செய்வதே ஆத்ம சக்தியின் உன்னத நிலையைக் குறிக்கும். பலவந்த சக்தி (Physical force) யை உபயோகிப்பதற்கு வேண்டியதைப் பார்க்கிலும் அதிக தைரியம் ஆத்மசக்திக்கு வேண்டும். ஆதலால் ஆத்மசக்தியை உபயோகிப்பவர்கள் பலவந்த சக்தியை உபயோகிக்க கனவிலும் எண்ணார்கள். இந்த ஆயுதத்தை எக்காலத்திலும் எந்த விஷயத்திற்கும் உபயோகிக்கலாம். இந்த ஆயுதம் துருப்பிடிப்பதில்லை. எவராலும் திருடவும் முடியாது. இதை உபயோகம் செய்வதனால் உபயோகிக்கிறவனும் அவனுடைய எதிரியும் லாபமடைகிறார்கள். பலவந்த சக்திக்குச் சோர்வும் குறைவும் உண்டு. ஆத்மசக்திக்கோ குறைவே கிடையாது. போட்டியினால் ஆத்மபலம் அதிகரிக்கும். ஒருவர் நமக்கு இடும் கட்டளை அக்ரமமென்று தோன்றினால் அத்தகைய கட்டளைக்குக் கீழ்ப்படியாமலே யிருந்துவிட்டு அதனால் நேரும் துன்பங்களைப் பொறுமையுடன் சகிப்பதே ஆத்மசக்தி (Soul Force.) அச்சக்தி குடிகொண்டிருப்பவன் கையாடும் முறையே **பொறுமை எதிர்ப்பு** (Passive Resistance) எனப்படும்.

சுதேச க்ஷேமத்தை முன்னிட்டு எதிரிகளிடம் போராடுவதில் பொறுமை, என்ற சாத்வீக பரிகார மார்க்கத்தைக் கையாடுபவர்களிடம் அவசியம் இருக்கவேண்டிய நான்கு குணங்களாவன:—சத்தியநெறி, அஞ்சாமை; ஏழ்மை, பிரம்மசரிய விரதம்.

ஒவ்வொருவரும் தமது கடமையைச் செய்து முடிப்பதிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்து தமது முழு கவனத்தையும் செலுத்தவேண்டும். எவ்வளவு கஷ்டங்கள் வந்தாலும் கடமையைக் கைவிடக்கூடாது என்று மகாத்மா காந்தி சொல்லுகிறார்.

1. சத்தியவந்தராக இருந்து முழுநியாயமும் நம்மிடம் இருக்கிறதாவெனப் பார்க்கவேண்டும். பின்பு சத்தியத்திற்காக சாத்வீக பரிகாரத்தைத் தேடவேண்டும். அக்கிரம வழிகள் அதில் கலந்திருக்கக்கூடாது.

2. சுயநலப்பிரியனும் ஐசுவரியம், கௌரவப்பட்டம் முதலியவற்றில் தன் மனத்தைச் செலுத்துபவனும் தேசாபிமானியாக முடியாது. பாரதமாதாவுக்குச் சேவைசெய் துழைக்க விரும்புபவன் தனத்திற்கும் கனத்திற்கும் ஆசைப்படலாகாது. தன்னுடையது என்று நினைக்கப்படும் உடல், பொருள், ஆவி மூன்றையும் பாரதமாதாவின் சேவைக்காக தியாகம் செய்யச் சக்தியுள்ளவனே தேசகாரியத்தில் பிரவேசிக்க வேண்டும். நமது முற்பிதாக்கள் கையாடிவந்த சாமான்ய வாழ்க்கையில் திருப்தியுள்ளவனே தேசபக்தனுவான், சரீரத்தை வீணே கொழுக்க வைக்கின்ற அன்னபானுதிகளில் தன் மனதைச் செலுத்துவதைப்போன்ற பலஹீனம் வேறில்லை. ஊனும் உதிரமும் கலந்த புன்புலால் யாக்கையாகிய சரீரத்தைத் திருப்தி செய்பவனுக்கு ஆத்மசக்தியாகிய புருஷத்தன்மை நீங்கிவிடும். இவ்விஷயத்தில் இந்தியாவைப் போன்ற உஷ்ண தேசங்களில்வசிப்பவர்கள் அதிக ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். சரீரத்தைப் போஷிப்பதில் கவலையைச் செலுத்தப்படாது. ஐரோப்பியரின் டாயபோகங்களுக்கு ஆசைப்பட்டால் இந்தியா தேசம் சீர்குலைந்துவிடும்.

3. ஆத்மபலம் அதிகரிப்பதற்கு தைரியம் அவசியம். சத்தியத்திற்காகப் பாடுபட்டு உழைப்பதில் எவ்வளவு கஷ்டங்கள் நேர்ந்தாலும் "இனி நமக்குள தென நினைக்கும் கதி இழக்கினும கட்டுறை இழக்கிலேம்" என்று சாதித்த சத்தியவாக்கு அரிச்சந்திரனைப்போல் தைரியத்தைக் கைவிடப்படாது, நிர்ப்பயமாக வந்தது வரட்டும் என்று எதற்கும் அஞ்சாமல் தன்மார்க்கத்திலேயே உறுதியாக நிற்கவேண்டும்.

ஜெயில்வாசம் கிடைத்தாலும் சரியே; ஜெயிலுக்குள் அநேக கொடுமைகள் நேர்ந்தாலும் சரியே, தன் வழியினின்றும் பிறழக்கூடாது.

இந்த மூன்று குணங்களும் மனிதர்களுக்கு வேண்டியவைகளே; சத்தியம், ஏழ்மை, தைரியம், இவையில்லாமல் பொறுமை எதிர்ப்பு மார்க்கம் கைகூடாது. இவ்வளவோடுகூட காமத்தையடக்கும் சக்தியும வேண்டுமென்பது காந்தியின் கருத்து. பெண்ணாசையை அடக்கக்கூடியவனெவனே அவனே சகல ஆசைகளையும அடக்கும் சக்தி பொருந்தியவனென்று சொல்வதுண்டாம். பிரம்மசரிய விரதமே எல்லா விரதத்திலும் உயர்ந்தது; உண்மையான பிரம்மசாரியினிடம மேலே சொல்லிய மூன்று குணங்களும் அதிகமாக இருக்கும். இவர்களே பொறுமை எதிர்ப்பு மார்க்கத்திற்கு வேண்டியவர்கள்.

பொறுமை எதிர்ப்பு என்னும் மார்க்கத்தை மகாத்மா காந்தி ஆரம்பித்ததைப் பற்றி சொல்லி யிருப்பதாவது:—"சில வருஷங்களுக்குமுன் நெட்டாலில் நான் பொதுஜன காரியமாக பாடுபடுவதற்கு ஆரம்பித்தபோது இந்த மார்க்கமே உயர்ந்ததென எனக்குத் தோன்றிற்று. அப்போது இந்தியர்கள் ஒத்துவந்து வேலை செய்யத் தெரியாதவர்களாக விருந்தபடியால் நான் வெளிப்படுத்தவில்லை. ஜோகான்ஸ்பர்க்கில் ரிஜிஸ்டிரேஷன் சட்டம் உண்டான போது காலம் பக்குவமாயிருந்தது. இந்தியர்கள் ஒன்றுசேர்ந்து எதையும் செய்யத் தயாராக இருந்தார்கள். அவர்களுக்குள் மனவருத்தமும் அதிகரித்திருந்தது. குடியேற்றநாட்டுக்கும் நன்மையைக் கொடுத்து மற்றக் கெடுதல்களும் எங்கும் உண்டாகாமலிருப்பதற்கு கலகம் முதலிய சம்பவங்கள் கூடாதெனவேதோன்றிற்று. ஆதலால் பொறுமை எதிர்ப்பு உயர்ந்த மார்க்கமெனத் தோன்றி வெளிப்படுத்தினேன். 1906-ம் வருஷம் செப்டம்பர் மாதம் ஜோகானஸ்பர்கில் கூடிய கூட்டத்தில் பலமான தர்க்கத்தின் பிறகு இந்தமார்க்கம் அங்கீகரிக்கப்பட்டது. எல்லோரும் உறுதியாகவே பின்பற்றுகிறார்கள்."

1909-ம் வருஷத்தில் லாகூரில் கூடிய இந்தியன் நாஷனல் காங்கிரஸுக்கு காந்தி அனுப்பிய கடிதத்தில் பின்வரும் கருத்துக்கள் கவனிக்கத்தக்கவை:—"........தென் ஆப்பிரிக்கா இந்தியர்கள் மிருகத்தன்மையான பலவந்த சக்தியை ஆத்மசக்தியால் எதிர்க்கிறார்கள். கவர்ன்மெண்ட் முதலிய ஸ்தாபனங்களைக் காட்டிலும் கடவுளும் அவரால் வெளிப்படுத்தப்பட்ட விதிகளும் உயர்ந்தவைகளென்பதும், அதனால் கடவுளால் ஏற்பட்ட கடமைகளுக்குக் கீழ்படிவதே முதல் கடமை என்பதும் அவர்களுடைய கொள்கை. ஆனால் கடவுளால் ஏற்பட்ட விதிகளை நன்மனச் சாட்சியின் மூலமாக அறியவேண்டியிருக்கிறது. அதில் நாம் பிசகியிருக்கலாமென்கிறார்கள். ஆதலால் கடவுளின் விதிக்கு மாறுபட்டிருப்பதாக நினைத்து மனிதர்களின் சட்டத்தை அட்சேபிக்கையில் சட்டத்தின் தண்டனைகளைப் பொறுமையுடன் சகித்துவிடுவது நல்லது என்று அபிப்பிராயப்பட்டு நடக்கிறார்கள். இப்படி நடக்கும்போது தாம்போகும் வழி தப்பிதமாக இருந்தால் கஷ்டங்கள் நம்மோடு இருந்துவிடட்டும்; பிறருக்குப் போகக்கூடாது; என்பது அவர்களது கருத்து.

இவ்வித எண்ணத்தோடு நடந்து வந்தால் உண்மையான மார்க்கமே முடிவில் நிலைபெற்று நிற்கும் என்பது அவர்களுடைய நம்பிக்கை.

ஆத்மசக்திப் பிரயோகத்தினல் உண்டாகும் பலன்களைப்பற்றி மகாத்மா காந்தி சொல்லுவதாவது:—"இந்தப் போராட்டத்தினல் இந்தியர்களுக்கு தன்மதிப்பு அதிகரித்திருக்கிறது. தன்னிடம் தனக்கு கௌரவ புத்தி உயர்ந்தது. சுயமதிப்புள்ளவன் தனக்கு இகழ்ச்சியை உண்டாக்கத்தக்க விஷயத்தில் பிரவேசிக்கமாட்டான். பெருமைகளும் பணமும் கிடைப்பதைப் பார்க்கிலும் இக்குணமே உயர்ந்தது.

பொறுமை எதிர்ப்பைக் கையாடியதினல் அநேகருக்குச் சொத்து முழுமையும் போனது வாஸ்தவமேயானலும் அவர்களடைந்த மனேபலமும் சுயமதிப்பும் சுயநலவெறுப்பும் மற்றும் சிறந்த குணங்களும் அவர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறது.

"மன்பெரும் புவியினில் வாழு மாந்தரிற்
றன்புறுதவ ரிலைத் துன்பைத் துன்புறு
தின்பமே கொள்பவ ரிலக்கு பொற்பதிக்
கன்பரா யிருப்பரென் றறிவு சொற்றதே."—சீறாப்புராணம்.

உலகமெங்குமே இந்தக் கட்சியாரின் கொள்கை நியாயமென்பது தெரிந்து எல்லோரும் அனுதாபம் காட்ட ஆரம்பித்துவிட்டார்கள்.

இந்தியா கவர்ன்மெண்டார் ஒப்பந்தக்கூலிகள் வெளியேறுவதைத் தடுத்திருப்பது இந்தப் பிரயத்தனத்தின்மூலமாக வந்தபலன் தான். ரிஜிஸ்டிரேஷன் சட்டத்தை இவ்விதம் டிரான்ஸ்வால் இந்தியர்கள் எதிர்க்காவிட்டால் தென்ஆப்பிரிக்காவிலுள்ள இதரதேசங்களும் இந்த மார்க்கத்தைப் பின்பற்றியிருக்கும். அதனல் எல்லா இந்தியர்களையும் சனி பிடித்திருக்கும். இதற்குமுன் தென் ஆப்பிரிக்காவில் இருந்த இந்தியர்கள் பயந்தவர்களாயிருந்தார்கள். இந்தப் போராட்டம் அவர்களுக்கு தைரியத்தையும் பலத்தையும் கொடுத்திருக்கிறது. இதற்குமுன் தங்களுடைய அபிப்பிராயத்தை இரகசியமாகப் பேசக்கூடப்பயந்தவர்கள் இப்போது தைரியமாகவே வெளிப்படுத்துகிருர்கள்." இந்தியர்களென்ருல மதிப்பு உண்டாக ஆரம்பித்துவிட்டது. இந்தியர்களைக் கண்டு வெறுப்படையும் குணமுள்ள ஐரோப்பியர்கள் இப்போது இவர்களிடம் மரியாதை செலுத்துகிருர்கள். அநேக ஐரோப்பியர்கள் இவர்களுடைய கட்சியைத் தாங்கிப்பேசவும் ஆரம்பித்துவிட்டார்கள்."

ஐரோப்பாவின் போகீஸ்பரான டால்ஸ்டாய் போதித்தது போலவே காந்தியும் பிரமசாரிய விரதத்தை அனுஷ்டிக்க நம்மவர்களுக்குப் போதிக்கும்போது "விவாக நிலைமைக்குட்பட்டவாகளுங்கூட சம்போக கேளிக்கைகள் புரியாதிருப்பதே நன்று. ஏனெனில் அன்னியநாட்டவர்க்கு அடிமைகளாகும பிள்ளைகளைப் பிறப்பிப்பதைவிட பிள்ளையில்லாதிருப்பதே நலம்" என்கிருர்.

பொறுமை எதிர்ப்பைப் பற்றிய போதனைகளுங்கூட டால்ஸ்டாயின் உபதேசமாகவே தெரிகிறது. அவர் எழுதிய வியாசங்கள் அனைத்தையும் திரட்டிய 23-வது பிரபந்தம் 182-வது பக்கத்தில் கண்ட (Biryukov's edition of Tolstoy's Collected Works, Vol XXIII, page 182f.) ஓர் இந்துவுக்கு எழுதிய கடிதம் என்ற தலைப்பின் கீழ் 1908-ம் வருஷம் டிசம்பர்மாதம் 17-ம் தேதியில் டால்ஸ்டாய் எழுதி யிருப்பதாவது:—

“இந்தியாவில் பிரிட்டிஷ் அரசாட்சி அநேக தீமைகளைக் கொண்டு வந்திருக்கிறது. அந்தக் கெடுதியை விலக்குவதற்கான உபாயமாவது:—

தீமைக்கு எதிர்த்து நிற்கப்படாது. ஆனால் அதற்குப் பதிலாக அதற்கு இணங்காமலிருப்பதே நன்று. அரசாட்சி வகையிலும், நியாயஸ்தலங்களிலும், வரி தண்டுவதிலும், சேனையிலும், அதிகார வர்க்கத்தினரோடு ஒத்துழைக்க மாட்டோமென்று எதிர்த்து நின்றால் உலகத்தில் ஒருவரும் உங்களை ஜெயிக்கமுடியாது. எவ்வளவோ நூற்றாண்டுகளாக புத்தகங்களில் பொதிந்துள்ள சன்மார்க்க போதனைகள் உட்பட தெய்வீக நீதி பொக்கிஷங்களடங்கிய நாகரீகத்தையுடைய இந்தியாவை தற்காலத்திய ஐரோப்பிய நாகரீகத்தினாலும், தற்காலத்திய பலவந்த சக்திகளினாலும் அடக்கி ஆள முயற்சிப்பது எக்கால சரித்திரத்திலும் இல்லாத மகா கொடிய மதியீனம்” என்று டால்ஸ்டாய் எழுதி யிருக்கிறார்.

மஹாத்மா காந்தி ராஜாங்க சம்பந்தமாகவும் மற்றும் சமூக வாழ்க்கையின் அபிவிர்த்தி சம்பந்தமாகவும் கொண்டிருக்கும் அபிப்பிராயங்கள் யாதெனில்:—

(1) கீழ்நாட்டாருக்கும் மேல்நாட்டாருக்கும் நடுவில் நீக்க முடியாத தடைகள் யாதொன்றுமில்லை. ஐரோப்பியர்கள் நாகரீகமென்றாவது மேல்நாட்டாரின் நாகரீகமென்றாவது தனியே யாதொன்றுங் கிடையாது. ஆனால் தற்கால நாகரீகமென்று ஒன்று உள்ளது. அது ஜடதத்துவ சம்பந்தமானது. இந்தத் தற்கால நாகரீகம் ஐரோப்பியர்களைத் தாக்குவதற்குமுன் மேல்நாட்டவர்களும், கீழ்நாட்டவர்களும் அநேக சமயங்களில் பொதுவான குணங்களுடையவர்களா யிருந்தார்கள். இப்போது தற்கால நாகரீகத்தில் சம்பந்தப்படாத ஐரோப்பியர்களும் இந்தியர்களும் யாதொரு கஷ்டமின்றித் தாராளமாய்க் கலந்துகொள்கிறார்கள்.

(2) இந்தியாவை ஆளுவது பிரிட்டிஷ் ஜனமல்ல. ஆனால் தற்காலத்திய ஜடதத்துவ சம்பந்தமான நாகரீகமே தற்காலத்திய

நவீன சாஸ்திர ஆராய்ச்சியின் பலன்களாகிய ரெயில்வே, தந்தி முதலியவற்றைக் கொண்டு ஆளுகின்றது.

(3) தற்கால நாகரீகம் முற்றிலும் நீங்கும்வரையில் சுயராஜ்ஜியத்தினால் நமது தேசத்திற்கு நன்மையுண்டாகாது. நமது நாட்டுப் பணமெல்லாம் வெளிதேசங்களுக்குப் போகாமல் இங்கேயே தங்கிவிட்டாலும் அதனால் ஐரோப்பிய தேசங்களைப்போலாவது அமெரிக்காவைப்போலாவது ஆகலாம். அவ்வளவுதான். அந்த நிலைமையில் யாதொரு பயனுமில்லை.

(4) கீழ்நாட்டவர்களும், மேல்நாட்டவர்களும் உண்மையில் சிநேகத்தோடு நெருங்கவேண்டுமானால் மேல்நாட்டவர்களிடம் இப்போது இருக்கும் தற்கால நாகரீகம் நீங்கவேண்டும். அப்படியில்லாமல் தற்கால நாகரீகத்தைக் காப்பாற்றிக்கொண்டு சிநேகபான்மை பாராட்டுவதென்றால் இங்கிலாந்தும் ஜெர்மனியும் போலாகிவிடும். அவ்விரண்டு தேசங்களும் ஒன்றை மற்றொன்று அழிக்காமல் இருப்பதற்காக (யுத்தத்திற்கு வேண்டிய சாமான்களும் சைனியங்களும் தயார் செய்வதிலேயே ஏராளமான தனத்தைச் செலவழித்து) தங்களைத் தாங்களே மாய்த்துக்கொள்கிறார்கள். [இதன் உண்மை இக்காலம் நன்கு விளங்குகிறதல்லவா?]

(5) இந்தியர்களாகிய நாம் சென்ற 50 வருஷங்களாக கற்றுக்கொண்டவைகளை மறந்துவிட்டபிறகே இந்தியாவிற்கு நற்கதியுண்டு. ரெயில்வேக்கள், தந்திகள், ஆஸ்பத்திரிகள், வக்கீல்கள், டாக்டர்கள் முதலியவர்களைப்போன்ற நூதனசாதனங்களெல்லாம் போய்விடவேண்டும். உயர்குடிப் பிறந்தோர்கள் என்று சொல்லிக்கொள்பவர்கள் எல்லோரும் சன்மார்க்க வழிகளில் மனதைச் செலுத்தி மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல் நடந்துகொள்ளவேண்டும். டாம்பீகமற்ற சாமான்யமான வாழ்க்கையே உண்மையில் சுகத்தையும் திடத்தையும் கொடுக்கக்கூடியது என்பதைத் தெரிந்துகொள்ளவேண்டும்.

(6) சுகஜீவியத்திற்கு வேண்டிய சாமான்களை மாத்திரம் வைத்துக்கொண்டு அனுபவிக்கும்படி பூர்வகாலத்து மகரிஷிகள் ஜனசமூகத்தை ஒழுங்குபடுத்தியிருந்தது எவ்வளவோ உயர்வாகத் தோன்றுகிறது. அப்படிச் செய்ததில் மேலான ஞானம் வெளிப்படுகிறது. டாம்பீகமில்லாத சாமான்னிய வாழ்க்கையே உயர்ந்தது. மேல்நாட்டவர்கள் தற்கால சுதந்தர வாழ்க்கையில் அனுபவிக்கிற சுகங்களைப் பார்க்கிலும் அதிகமாக மேலே சொல்லிய சாமான்னிய வாழ்க்கையில் கிடைக்கும். அவ்வித நிலைமையில் ஜனங்கள் சாந்தமாக நீண்டகாலம் சுகமாய் வசிக்கிறார்கள்.

(7) உண்மையான நாகரீகத்தின் அபிப்பிராயமே தற்காலம் கெட்டுவிட்டது. எந்த பிரயத்தனத்தாலாவது பெரிய பங்களாக்களில் குடியிருந்து, டாம்பீக உடைதரித்து, உயர்ந்த சாப்பாட்டையே அபேட்சித்து, உயர்தர சாராயங்களைச் சாப்பிட்டுக்கொண்டு தன் வாழ்நாள் முழுவதிலும் இவ்விதம்மே குறைவடையாமல் நிற்பதற்கு முயற்சிப்ப[illegible] எவனோ அவனே மேலானவனுகக் கருதப்படுகிறான். எட[illegible]யாவது தங்களுடைய டாம்பீகங்களைக் குறைக்காமலிருந்தா[illegible]ாதும். தற்கால நாகரீகத்தால் ஐரோப்பிய தேசங்களும் அமெரிக்காவும் தத்தளித்துக் கொண்டிருக்கின்றன. ஜனங்களிடம் குடிகொண்டிருக்கும் துக்கம் தாங்க முடியவில்லை. முதலாளிகளும் கூலிக்காரர்களும் என இருபிரிவாக ஜனங்கள் பிரிக்கப்பட்டு அதனுல் உண்டாகும் அனர்த்தங்களுக்கு அளவில்லை நூதன யந்திரங்களெல்லாம் கூலிகளைக் குறைப்பதற்கு உதவி செய்கிறது. அதனுல் அநேக கூலிக்காரர்கள் வேலையில்லாமல் பஞ்சத்திற்கு ஆட்களாகிறார்கள். முதலாளிகளோ ஏராளமான சொத்துக்களையுடையவர்களாயிருக்கிறார்கள்.

(8) ரெயில்வேக்கள், தந்திகள் முதலியவைகளும் புகைக்கப்பல்களும் எவ்வளவு கெடுதலகளைச் செய்திருக்கின்றனவென்று சொல்லமுடியாது. தூரதேசப் பிரயாணங்கள் இலகுவில் கைகூடுவதாக யிருப்பதால் ஒரே குடும்பமாயிருக்கும் தன்மை, சகோதர வாஞ்சை, பந்துக்களிடம் அன்பு முதலிய அபூர்வ குணங்களெல்லாம் நமது தேசத்தைவிட்டுப் போய்க்கொண்டிருக்கின்றன வென்கிறார். தேசாபிமானங்கூட குறைவதற்கு இது உதவி செய்கிறது. இவைகளுக்குப் பதிலாக தன்னயம்மே முழுமையும் குடிகொள்கிறது. நாம் சுகமாயிருந்தால் போதும். மற்றவை எப்படியானாலும் சரிதான்.

(9) இவ்வித நிலைமையில் தேசங்களே தத்தளித்துக்கொண்டு வருகின்றன. அந்தக் கதைகளையெல்லாம் இங்கெடுத்தெழுதுவது அனுவசியம். பொதுவாகப் பார்த்தால் தற்கால நாகரீகத்தால தேசத்திற்கு கெடுதியே யொழிய நன்மை எள்ளளவுமில்லை என்பது மோகனதால காந்தியின் கருத்து. இந்தியா தேசம முன்னுக்கு வரவேண்டுமானுல் கல்வி, தொழில் முதலிய சகல காரியத்திலும் சுதேசக் கொள்கைகளே பரவவேண்டும். நமது கருத்துகளும் இந்தியாவின் சொந்தமாக இருக்கவேண்டும். சகலவிதத்திலும் சுதேசியாக இருந்தால் மாத்திரம்மே தேசத்திற்கு க்ஷேமமுண்டு என்பது காந்தியின் அபிப்பிராயம்.

தற்கால நாகரீகத்தில் விழுந்து மயங்கி தலைகால் தெரியாமல் புரண்டு கொண்டிருக்கும் ஜனங்களுக்குள் இவ்வளவு பெரிய சீர்திருத்தங்கள் செய்வதற்கு நான் முந்தவில்லை.

பொறுமை எதிர்ப்புக்கட்சியில் வேலைசெய்யும் எனக்கு அந்த விசாரம் பிரயோஜனப்படாது. ஆனால் ஒருவிஷயம் உண்மை. மேலே என்னால் சொல்லப்பட்டவைகள் அப்படியே உண்மையில் உயர்வென எனக்குத் தோன்றினால் அவைகளின்படி நடந்து கொள்வதில் ச ந்தோஷப்பட வேண்டியவன். ஜனங்களெல்லோரும் பின் தொடர்வதற்காக அதுவரையில் நான் காத்துக் கொண்டிருக்கக்கூடாது. இந்த மார்க்கம் சரியெனத் தோன்றுகிறவர்களெல்லோரும் ஒன்று சேர்ந்து நடந்து வருவோம். அனுஷ்டானத்தால் காட்டுவோம். நாம் போவது உண்மையில் சரியான மார்க்கமானால் மற்றவர்களும் அவசியம் பின் தொடர்வார்கள். கொள்கையைத் தெரிவித்தாய்விட்டது; அந்தக் கொள்கையை நம்மால் முடிந்தவரையில் அனுசரித்து வரவேண்டியது. தற்கால நாகரீகங்கள் தலைக்குமேல் முழுகிக் கிடக்கையில் அவைகளுக்கு மத்தியில் நாம் முழுமையும் நம்வழிகளில் நடக்க முடியாமலிருக்கலாம்.

நம்முடைய மனதில் உயர்ந்தமார்க்கம் இன்னதென்று தெளிவாய் இருக்கவேண்டும். என்வழி சரியென்று உனக்குத் தோன்றினால் கலகஞ் செய்பவர்களிடம் நீ அதைத் தெரிவித்துவிடு. அவர்கள் விரும்புகிற சுதந்தரம் மனிதர்களைக் கொல்வதாலும், கொடுமைகளைச் செய்வதாலும் கிடைக்காது. ஆனால் தாங்கள் சரியான மார்க்கத்தில் நடப்பதாலும் உண்மையான இந்தியராகத் தங்களைச் செய்துகொள்வதாலும் கிடைக்கும். அப்போது பிரிட்டிஷ் அதிகாரிகள் எஜமானர்களாகாமல் வேலைக்காரர்களாகி விடுவார்கள். அவர்களால் கொடுமைகளைச் செய்ய முடியாது; ஆனால் டிரஸ்டிகளுக்குச் சமமாகப் பாதுகாத்து வருவார்கள். இந்திய ஜனங்களோடு அமைதியாகவே வாழ்வார்கள். ஆதலால் நமது பிற்கால ஸ்திதி பிரிட்டிஷ் ஜனங்களின் கைவசமில்லை, நமது சக்தியிலேயே இருக்கிறது. இந்தியர்களிடம் தேவையான தன்மறுப்பும், சன்மார்க்க நடவடிக்கைகளும் உண்டானால் இப்போதே அவர்கள் சுதந்தர புருஷர்கள்தாம். கொஞ்சக்காலத்திற்கு முந்தி வரையில் இந்தியர்களிடம் அடக்கமான வாழ்க்கை என்பது பூராவாகக் குடிகொண்டிருந்தது. இப்போதும் அவ்வித வாழ்க்கை அதிகமாகக் கெடவில்லை. இந்த வாழ்க்கையை மறுபடியும் நாம் பூர்வ ஸ்திதிக்குக் கொண்டுவந்தால் இந்தியநாடெங்கும் இந்தியர்களும், ஐரோப்பியர்களும் வெகு சரசமாக வாழ்வார்கள் என்பதில் தடையில்லை.”

## மஹாத்மாவின் இல்லற ஒழுக்கம்.

அதிகாலையில் எழுந்திருந்து குளிர்காலங்களிலும் தண்ணீரிலேயே ஸ்நானம் செய்கிறார். சுடுதண்ணீரென்பதே கூடாது. படுக்கும்போதுகூட போர்வையைத் தேவையானபடி உபயோகிக்க மாட்டார். எவ்வளவு ஆபத்துகள் வந்தாலும் ஆள் இழுக்கக் கூடிய ரிக்ஷா வண்டியில் ஏறவேமாட்டார். தன் மூட்டையைப் பிறர்தூக்க விடமாட்டார், தனக்கு வேண்டிய எந்தக் காரியத்தையும் பிறர்செய்யும்படி விடமாட்டார். ஜீவப் பிராணிகளிடம் மிகுந்த இரக்கத்தையே காண்பிப்பார். இந்தியர்களுக்கு விரோதப் பான்மை கொண்டாடிய சில ஐரோப்பியர்களிடமும் மிகுந்த அபிமானமே செலுத்துகிறவர். தான் வசித்த காலனியின் க்ஷேமத்திலேயே கருத்துடையவரா யிருந்தார். இது வீண் பெருமைக்காக அல்ல. இந்தியர்களிடம் எவ்வளவுதான் வெள்ளையர்கள் விரோதப்பான்மை கொண்டபோதிலும் அதற்காக நாமும் விரோத குணத்தையே காட்டுவது அறிவீனமென்பதே இவருடைய கொள்கை. பகல் முழுமையும் ஏதேனும் வேலைசெய்துகொண்டேதானிருப்பார். இவர் செய்துவரும் காரியங்கள் அபாரமானவை. சத்தியாகிரக சின்னமாகிய காந்தி தம்மைப் பின்பற்றுவோர்க்கு அடிக்கடி இடித்துக் காட்டுவதாவது,—என்ன நேர்ந்தபோதிலும் சத்தியத்தையே கடைப்பிடிக்கவேண்டும். எதிரிகளிடத்தில் எப்பொழுதும் அன்பு பாராட்ட இடைவிடாமல் பிரயத்தனஞ் செய்ய வேண்டும். நம்மை எதிர்க்கும் எதிரிகளிடம் அன்பைச் செலுத்தியபடி நீதியைக் கைப்பற்றவேண்டும். அன்பைத் தவிர வேறு விதமாக கிடைக்கக்கூடிய நீதிமுறைகள் நமக்கு வேண்டாம் என்பதேயாகும். இந்தக் கொள்கையின் அவதாரமாகவே காந்தி யிருக்கிறார். மேலும் ஒவ்வொருவரும் சகலவித துக்கத்தையும் சகிக்க தயாராக இருக்கவேண்டும் என்பதே இவருடைய கொள்கை.

"மகாத்மாவுக்குப் பட்டினி கிடப்பதில் பிரியமதிகம். அவர் ஒல்லியாயும் பலவீனராயும் குள்ளமாயும் காணப்படுகிறார். எவனும் குழந்தையைப்போல் அவரைத் தூக்கிக்கொண்டு போய்விடலாம். மகாத்மா களங்கமற்ற தூய்மையான நெஞ்சமுடையவர். இத்தகைய நற்குணங்கள் பல அவரிடமுள்ளமையால் இந்தியாவிலுள்ள ஜனங்கள் அவரைப்பின்பற்றுகிறார்கள். மகாத்மாவை இயேசுகிறிஸ்துநாதருக்கு ஒப்பிடுவதை எவரும் மறுக்கமாட்டார்," என்று கர்னல் வெட்ஜ்வுட் எழுதுகிறார்.

இயேசுக்கிறிஸ்துவின் பொறுமையை அப்படியே அனுஷ்டிப்பவர். பிரஹ்லாதனைப்போல் நாம் நினைவு உறுதியைக் கடைப்பிடிக்கவேண்டும் என்ற ஒரே பிடிவாதம். பேனும் ஏழைகளுக்கும் எளியவர்களுக்கும் உதவிசெய்ய சந்தர்ப்பம் நேர்ந்தால் விடமாட்டார்.

"இயேசுகிறிஸ்துவின் பேரைச் சொல்லிக்கொண்டு காந்தியை ஜெயிலில் அடைத்து விடுகின்ற (தென்ஆப்பிரிக்கா) மனிதரைக் காட்டிலும், தர்மத்திற்காகவும் அன்பைக் காக்கவும் பொறுமையுடன் துக்கங்களைச் சகித்துவரும் காந்தியே சிலுவையில் அறையப்பட்ட கர்த்தாவின் உத்தமமான பிரதிநிதி என்று நான் சொல்லுவேன்" என்று சென்னை அத்தியட்சர் காந்தியைப் புகழ்ந்து நற்சாட்சி பகர்ந்திருக்கின்றனர்.

பிரிட்டிஷ் நீதிக்கு விரோதமான காரியங்களுக்கு பிரிட்டிஷ் ராஜ்யத்திலேயே நாம் இடங் கொடுக்கக்கூடாது. பொறுமை எதிர்ப்பினால் பிரிட்டிஷ் ராஜ்யத்திற்குள் நடந்துவரும் அநீதிகளை நம்மால் கூடிய அளவு தொலைத்துவிட முயற்சிக்கவேண்டியது. அப்போது மாத்திரமே நாம் பிரிட்டிஷ் ராஜ்யத்தின் உண்மையான பிரஜைகளாவோம்.

## சுயராஜ்யம்.

"தேவனுடைய ராஜ்யம் உங்களுக்குள் இருக்கிறது" கிறிஸ்து.
"The Kingdom of God is within you" *Christ.*
"அப்பொழுது ஓனாய் ஆட்டுக்குட்டியோடே தங்கும்." எசாயா 11: 6.

ஆலகால விஷத்தின் வாடைபட்ட மாத்திரத்தில் ஜீவராசிகள் மடிந்து போவதுபோல் அச்சுச்சட்டம், தேசப்பிரஷ்ட சட்டம், ரௌலற்சட்டம் முதலிய அடக்குமுறை சட்டங்கள் இந்தியரின் சுதந்தரங்களைப் பட்டுப்போகச் செய்துவிட்டன. இந்தியரின் புருஷத்தன்மையை அச்சுச்சட்டங்கள் உறிஞ்சிவிட்டன. தங்களது அபிப்பிராயங்களை மனதில் உள்ளபடி வெளிச்சொல்ல முடியாமலும் எழுதமுடியாமலும், சுயாதீனம் பெறுவதற்கான யோசனைகளைக் கூடிச் செய்ய முடியாமலும் இந்தியர்கள் தவித்துக்கொண்டிருக்கிறார்கள்; இந்தச் சட்டங்களின் பலனாக ஜனங்கள் குன்றிப்போய்விட்டார்கள்.

இந்தியா சுயாதீனமடைந்து சுகம் பெற்று வாழும் முறைகளையும், தொழிலும், செல்வமும் விர்த்தியாகும் விதங்களையும், தரத்தக்க சுயராஜ்ய நிலையின் மேன்மையையும், இன்பத்தையும் வெகு

காலமாக அடக்கி ஆளப்பட்டுவரும் பிரஜைகள் அறிவதும் உணர்வதும் அதைப் பெறுவதற்கான முறைகளைக் கையாடுவதும் எளிதல்ல. "அன்னி அரிவாளோ காமசுகத்தை." ஆதலால் சுயராஜ்ய அறிவை ஜனங்களுக்கு ஊட்டுவது தேசபக்தர்களின் கடமையாகும். சுயராஜ்யமென்றால் பணம் வசூலிப்பதும், செலவிடுவதும் நம் அதிகாரத்துக்குட்பட்டிருக்கும் அரசியலாகும். பணத்தைப் பற்றிய அதிகாரம் ஜனங்களிடமிருந்தால் எவ்வளவோ நன்மை யுண்டாகும். உள்நாட்டுத் தொழில்களுக்குப் பணஉதவி செய்து அவைகளை வலுப்படுத்தி விருத்தி செய்யலாம். அந்நிய சாமான்களுக்கு அதிக வரிப்போட்டுத் தடுக்கலாம். விவசாயத்தையும் நிபுணர்களைக் கொண்டு அபிவிருத்தி செய்யலாம். அதனல் தொழிலாளர்களைப்போல் விவசாயிகளும் சுகம்பெற்று வாழுவர். ஐஸ்வரியம் விருத்தியாகும். பொன்சுரங்கங்களையும் நிலக்கரி சுரங்கங்களையும் தோண்டியெடுத்து லாபம் பெறும் சுதந்தரம் இந்தியர்க்குக் கிடைக்கும். நம் தேசபாதுகாப்புக்குப் போதுமான சைனியமாத்திரம் தயார்செய்து வைத்துக்கொள்வோம். சைனிய விஷயத்தில் தற்காலத்தில் செலவாகும் பணமெல்லாம் மீதியாகும். சுயபாதுகாப்புக்கும் பொருள் பந்தோபஸ்துக்கும் அவசியமான ஆயுதந்தரிக்கும் உரிமை எல்லோருக்குமுண்டாகும். அனாவசியமான அந்நிய பாஷைகளைக் கற்பிப்பதனால் நம் பிள்ளைகளின் பார்வையையும் பலத்தையும் ஆயுளையும் குறைப்பதற்குப் பதிலாக பிரயோஜனமான நல்ல வித்தைகளை மட்டும் கற்றுக் கொடுக்கலாம். நாம் நமது அபிப்பிராயங்களை பயமின்றி பேசவும் எழுதவும் சர்வசுதந்தரமுண்டாகும். அன்னிய நாடுகளில் நம் இந்தியர் படும் துயரம் நீங்கும். குடியேற்ற நாடுகளுக்கு நமக்கிடமுமுண்டாகும். ஏனென்றால் சுயராஜ்யம் நடத்தும் நாம் அவர்களைப் பழிக்குப் பழி வாங்கலாம் என்னும் அச்சம் அவர்களுக்கு உண்டாகும். எங்கும் சம அந்தஸ்து உண்டாகும்.

கல்விச்சாலைகளிலும், நியாயஸ்தலங்களிலும், ஜெயில்களிலும் காட்டப்படும் பாரபக்ஷம் நீங்கும். நாம் உலகத்தவர் முன்னே பெருமையுடன் நிற்கலாம். சம அந்தஸ்து உண்டாகும். இத்தகைய உயர்ந்த பதவியைத்தரும் சுயராஜ்யத்தைப்பெறும் பொருட்டு தகுந்த முயற்சி எடுக்கப் பிரியமில்லாத இந்தியருமுளரோ? ஆனால் அது எளிதில் கிடைப்பதன்று. ஒவ்வொருவரும் செய்ய வேண்டிய தியாகங்கள் பல உண்டு. அதற்காக, உடல், பொருள், ஆவி மூன்றையும் தத்தஞ் செய்ய நேர்ந்தாலும் வீரஞ் செறிந்த பாரதமாதாவின் புத்திரர் பின் வாங்குவரோ?

ஆனால், சுயராஜ்யத்தை நமக்கு நல்க வந்த பரம கீர்த்தியான மஹாத்மா காந்தி இத்தகைய பெரும் வைபவத்தை நாம் அடைய மிகவும் சுலபமான வழிகளைக் காட்டுகின்றார். ஒத்துழையாமை பரம சாந்தமான வழி; இதை அனுஷ்டிக்கச் சொல்லுகிறார். இத்தகைய சுலபவழி காட்டுகின்ற குருநாதர் வேறு எங்கே கிடைப்பார்? ஆதலின் மஹாத்மாவின் ஒத்துழையாமை வழிநின்று சுயராஜ்யத்திற்குப் பாடுபடுவோமாக! என்று ஓர் நிருபர் சுதேசமித்திரனில் எழுதுகிறார்.

சுயராஜ்யத்தை யடையும் சுலபமான வழிகளாக மஹாத்மா சொல்லும் மார்க்கங்களாவன:—கடந்த 150 வருஷங்களாக அன்னியர் இந்தியாவின் பணத்தை அபகரித்துக்கொண்டு போவதற்கு இடங்கொடுத்ததுபோல் நாம் அவர்களை ஆதரிப்போமாயின் சுயராஜ்யம் ஒருபோதும் கிட்டாது. அன்னியதேசத்துப் பொருள்களைப் பஹிஷ்காரஞ் செய்வதென்றால் அன்னிய தேசத்திலிருந்து வரும் துணிகளைப் பஹிஷ்காரஞ் செய்வதே.

உண்பதற்கு உணவும் உடுத்துவதற்கு உடையும் உட்காரக் கூரையுமே, மனுஷ ஜீவியத்திற்கு அத்தியாவசியமானவைகள். இவைகளெல்லாம் இந்தியாவில் ஏராளமாய் இருக்கின்றன.

தற்கால நாகரீகத்தின் தப்புரட்டுத்தனத்தினாலேயே நமது திரவியங்களையெல்லாம் அன்னியதேசங்களுக்கு வாரியிறைத்து அங்குள்ள ஆபாச பண்டங்களை வாங்கி அனுபவித்து அக்கிரம மிகுந்த அன்னியருக்கு அடிமைகளாகிவிட்டோம். இனிமேல் இந்த அடிமைத்தனத்தினின்றும் நீங்கி சுயாதீனம் பெறும்பொருட்டு நமது அக்கிரமங்களுக்காக மனஸ்தாபப்பட்டு அவைகளை நீக்கவேண்டும்.

அன்னிய வஸ்துக்களை அனுபவித்து ஆதரித்து ஆடம்பரம் பண்ணலை அவற்றை அடியோடு அகற்றவேண்டும். சாமான்ய வாழ்க்கையே சௌக்கியத்தையும் தைரியத்தையும் திடத்தையும் தரத்தக்கதென்பதைத் திட்டமாயறியவேண்டும்.

நாம் மனதார அன்னிய தேசத்து வஸ்துக்களில் ஆசை யுறுவது துணிக்காகத்தான். வருஷந்தோறும் 64 கோடி ரூபாய் இந்தியாவிலிருந்து துணிக்காக அந்நிய தேசங்களுக்குப் போகிறது. இது ஒன்றை மாத்திரம் நிறுத்திவிட்டால் இந்தியாவிற்கு சுயராஜ்யம் உடனே கிடைக்கும். வெள்ளைக்காரர் இந்தியாவிற்கு வருவதற்கு முன் நமக்குவேண்டிய துணிகளையெல்லாம் நாமே நெய்து

கொண்டோம். இப்பொழுதோ நமது வஸ்திரங்களெல்லாம் அன்னியதேசப் பொருள்கள். அதை நிறுத்தும்பொருட்டு முதலாவதாக நமது வியாபாரிகள் அந்நியதேசத்துத் துணிகளை வரவழைக்கக்கூடாது. தங்களிடம் இருப்பனவற்றை அந்நிய தேசத்தவர்களுக்கு சொற்ப விலைக்காவது கொடுத்துவிடவேண்டும். பருத்தியை மற்ற தேசங்களுக்கு அனுப்பவுங் கூடாது. மற்ற தேசங்களிலிருந்து வாங்கவுங் கூடாது. ஒவ்வொருவரும் சுதேசித்துணியையே உடுத்த வேண்டும். நாம் இப்பொழுது கையாடும் யுத்தம் ஆவிக்குரியது. மகா மாறுதல்களை யுண்டாக்கும் இக்காலத்தில் சாதாரண சஞ்சீவியம் உதவாது. ஒரே வருஷத்தில் சுயராஜ்யங் கிடைக்கவேண்டுமானால் நமது நோக்கத்திலேயே கண்ணுங் கருத்துமாயிருந்து மற்றவைகளெவையுங் கவனிக்கக்கூடாது. பள்ளிக்கூடத்திலுள்ள மாணவர்களெல்லாம் ஒரு வருஷத்திற்கு படிப்பை நிறுத்திவிட்டு நெசவு செய்யப் பழகவேண்டும். கடந்த ஐரோப்பிய யுத்தத்தில் யந்திரசாலைகளெல்லாம் ஈயக்குண்டுசெய்து எதிரிகளை எதிர்க்க உபயோகித்தார்களல்லவா? அதே பிரகாரம் பாடசாலைகளும் வித்தியாசாலைகளும் இந்தியர்களுக்குத் துணி சவதரிப்பதற்கான நெசவுசாலைகளாக மாறவேண்டும். இதனால் மாணவர்கள் இழந்துவிடுவது ஒன்றுமில்லை. ஆனால் அவர்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் ராஜரீகம் கிடைக்கும். இந்தியாவில் துணிப்பஞ்சம் அதிகரித்துவிட்டது. ஆகலால் நெசவுத் தொழிலைக் கற்றுக்கொள்வதே புண்ணியமாகும். பூர்வீகத்தில் ஒவ்வொரு வீட்டிலுமுள்ள ஸ்திரீகள் நூல் நூற்பது வழக்கம். இதுவே அவர்கள் கற்பைக் காத்துவந்தது. இதுவே பஞ்சநிவிர்த்திக்குக் காரணமாயிருந்தது. இதுவே விலைகளைச் சரசமாக்குவது. இதுவே சுயராஜ்யம் அடையும் சுலபமான வழி. சாத்தானின் தந்திரமாகிய அந்நியதேசத்துத் தொழிலாளிகளின் வலையில் சிக்கிக்கொண்ட நம்து முற்பிதாக்கள் செய்தபாவத்திற்கு நாம் உத்தரித்துத் தீரவேண்டிய தண்டனை கை நெசவைச் சீர்ப்படுத்துவதே. வித்யாசாலைக்குச் செல்லும் மாணவர்களே கை நெசவை முன்னுக்குக் கொண்டு வரக்கூடியவர்கள். அவர்கள் நெய்த துணியைப் பெற்றோர் உபயோகிக்க விரும்புவார்களல்லவா? கை நெசவை உடனே கற்பிக்கவேண்டும் என்று நான்சொல்வது ஜீவனார்த்தத்தைத்தேடி வைக்கும்பொருட்டல்ல. உடனே சுயராஜ்யத்தைப் பெற்றுக் கொள்ளும் ஏதுவான கடமையாக இதை ஒவ்வொருவரும் கைபாடிவர சுயராஜ்யம் உடனே கிட்டும். இது உண்மை என்கிறார்.

இந்தியா முழுவதிற்கும் பொதுவான ஒரே சுதேசிய பாஷை அவசியம். இந்தி பாஷையை திராவிட நாடு தவிர மற்ற நாட்டி

லுள்ளவர்களெல்லாம் உபயோகித்து வருவதால் சுயாதீனத்தின் பொருட்டு பாடசாலையை விட்டிருக்கு மாணவர் அனைவரும் இந்தி பாஷையையும் தறி நெய்தலையும் கற்றுக்கொள்வதில் சுயராஜ்ய தபசு காலமாகிய இந்த வருஷத்தைச் செலவிடவேண்டும். கைத்தொழில், சாஸ்திர ஆராய்ச்சி, இதர நாட்டவர்களின் அபிவிர்த்தி முதலியவற்றைக் கற்று அவர்களைவிட மேலான பதவிக்கு வருதல் முதலியவற்றைப் பற்றி நமக்கு சுயராஜ்யம் கிடைத்தபின் பார்த்துக்கொள்ளலாம். இந்த இரக்ஷண்ய வருஷத்தில் இந்தியர் அனைவரும் ஜாதி மதபேதங்களைத் தவிர்த்து ஏகமனதாய் ஒன்றோடு உழைத்தால் சுயராஜ்யம் எளிதில கிட்டும் என்கிறார் மகாத்மா.

## தீண்டாத்தோஷம்.

## The Sín of untouchability )

"மனுஷர் உங்களுக்கு எதைச் செய்ய விரும்புகிறீர்களோ, அதையே நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள்." —கிறிஸ்து.

மஹாத்மா காந்தி சொல்வதாவது:—

சுயராஜ்யம் அடையும் பொருட்டு இந்து மார்க்கத்திலுள்ள குறையாகிய ஜாதி வித்தியாசத்தை உடனே நீக்கவேண்டுமென்ற இந்த வருஷத்திய (Nationıl Congerss) நாஷனல் காங்கிரஸின் தீர்மானம் கவனிக்கத்தக்கது. தனதோழரின் ஒத்தாசையைக் கொண்டே சாத்தான் ஜெயமடைகிறான். நமது பலவீனங்கள் எவ்வளவோ அவற்றின் மூலமாகவே அவன் நமக்கு எஜமானாகப் பார்க்கின்றான். அதுபோலவே, அதிகார வர்க்கத்தினரும் நமது பலவீனங்கள் பாதகச் செயல்கள் மூலமாகவே நம்மை ஆளுகின்றனர். நாம் அவர்கள் கண்ணிக்குத் தப்பவேண்டுமானால் நமது பலவீனங்களை நீக்கவேண்டும். இதற்காகவே ஒத்துழையாமையை சுத்திகரிப்பு மார்க்கம் என்கிறேன். நமது பலவீனங்களை அறவே நீக்கி நாம் சுத்தவான்கள் ஆனவுடன், இந்த ராஜாங்கம் நிற்பதற்கு ஆதாரமில்லாமல் தவிடுபொடியாகிவிடும். அது எதுபோலெனில், நாற்றமுள்ள குளங்களில் கொசுக்கள் விர்த்தியாகின்றன. குளத்தைத் தூர்த்து காயவைத்துவிடின் கொசுக்கள் நிறபதற்கு ஆதாரமில்லாதபடியால் மறைந்துவிடுமல்லவா? தீண்டாத்தோஷத்தைக் கையாடினதின் பயனுக் தகுந்த தண்டனையை அனுபவிக்கிறோமன்றோ? நாம் விதைத்ததைத்தானே அறுக்கிறோம்? டையர், ஓடியர் என்ற இரு துஷ்டரும் கையாடின அன்மார்க்கத்தையே நாம் நமதுசொந்த ஜனங்களுக்கு விரோதமாகக் கையாடுவது தகுமோ? பறையனைத் தள்ளி நிற்கச் செய்கிறோம். அதுபோலவே, பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளிலும் நம்மைத் தள்ளி நிற்கச் சொல்லுகிறார்கள்.

பொதுக்கிணற்றில் பறையர் தண்ணீர் மொள்ளக்கூடாது என்கிறோம். நமது எச்சிலை அவன்மேல் எறிகிறோம். அவன் நிழலே நம்மைத் தீட்டுப்படுத்துகிறது. நாம் வெள்ளைக்காரர்மேல் என்னென்ன குற்றங்களைச் சாட்டுகிறோமோ அந்தக் குற்றங்களையெல்லாம் பறையன் நம்மேல் சாட்டுவதற்கு இடமில்லையோ?

இந்து மார்க்கத்திலுள்ள இந்தக் குறையை நீக்குவதெப்படி? "மற்றவர்கள் உங்களுக்கு எதைச் செய்ய விரும்புகிறீர்களோ அதையே நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள்." நாம் ஆங்கிலேய உத்தியோகஸ்தரைப் பார்த்து நீங்கள் இந்தியாவின் தோழரும், ஊழியருமாயிருந்தால் உங்களது உயர்ந்த ஆசனங்களினின்றும் கீழே இறங்க வேண்டும், கௌரவத்தைத் தணிக்க வேண்டும், இதர ஆங்கிலேயர்களை எவ்விதம் சமமாகப் பாவித்து உபசரிக்கின்றீர்களோ அதேப்பிரகாரம் இந்தியர்களையும் சமமாகப் பாவித்து அன்பின் கிரியைகளினால் நட்பு பாராட்ட வேண்டும் என்கிறோம். பஞ்சாப் குழப்பத்திற்கும், கிலாபத்து விஷயத்திற்கும் பிறகு நாம் வெள்ளைக்காரனை நோக்கி, உங்கள் இருதயங்களை மாற்றி மனந்திரும்புங்கள் என்று சொன்னதுபோல, அதேபிரகாரம் இந்துக்களாகிய நாமும் செய்த தப்பிதங்களுக்காக மனஸ்தாபப்பட்டு பசாசின் தந்திரங்களுக்கு ஆளாகி தாழ்ச்சியடைந்த ஜாதியாரிடத்தில் நடந்துகொள்ளும் முறையை மாற்ற வேண்டும். அவர்கள் முன் மேன்மை பாராட்டி அவர்களைத் தாழ்மையாக நடத்துவது தகுதியன்று. அவர்கள் நமது சொந்த இரத்தத்தையொட்டிய சகோதரர் என்று நினைக்க வேண்டும். நாம் அவர்களிடமிருந்து திருடிக்கொண்ட அவர்கள் சுதந்தரத்தை திரும்பக் கொடுத்துவிட வேண்டும், ஆங்கிலேய பாஷையைத் தெரிந்த சில சீர்திருத்தக்காரர்கள் மட்டும் அப்படிச் செய்தால் போதாது. பொதுஜனங்கள் அனைவரும் தங்கள் முழு மனதோடும் செய்ய வேண்டிய கிரியை இதுவாகும். எவ்வளவோ காலத்திற்கு முன் நடந்திருக்க வேண்டிய இந்த சீர்திருத்தத்திற்காக நாம் காத்திருக்க வேண்டியதில்லை. கிருபையின் காலமும், ஆயத்தத்தின் நாளும், உபசுகாலமுமாகிய இந்த வருஷத்திலேயே இது நடந்தேற வேண்டும். சுயராஜ்யம் அடைந்த பிறகல்ல. அதற்கு முன்னதாகவே இந்த சீர்திருத்தம் நடந்தேற வேண்டும்.

தீண்டாத் தோஷமானது மார்க்கங்களினால் ஏற்படுத்தப்பட்டதல்ல. சாத்தான் நாட்டி வைத்த கண்ணி. ("சாத்தானின் நோட்டம் அதிகம்.") பரிசுத்த வேதாகமங்களிலிருந்துங்கூட தனக்கு வேண்டிய வேதவாக்கியங்களைப் பொறுக்கி எடுத்துக் காட்டும் சக்தியையுடையவன் அவன். ஆனால், வேதாகமங்கள் பகுத்தறி

ஷவுகத் அலி, முகமத் அலி ஆகியவர்கள் எப்படி அனுஷ்டிக்கிறார்களென்பதையும், தங்களுக்கு எடுத்துச் சொல்லவேண்டும். நான் சம்பந்தப்பட்டவரையில, தங்களுடைய விஜயத்தை பஹிஷ்காரம் செய்யும் விஷயத்தில் தீவிரமாய் சம்பந்தப்படுவது எனக்குண்மையில் சந்தோஷத்தை யுண்டுபண்ணவில்லை. கவர்ன்மெண்டாருடன் ஒற்றுழைப்பதனால் எனது நாட்டாருக்கு சுயேச்சை கிடைக்குமென்ற பூரா நம்பிக்கையுடனே 30 வருஷகாலம் நான் பரம ராஜவிசுவாசத்துடன் இந்த கவர்ன்மெண்டுக்கு எவ்வளவோ உதவி புரிந்து வந்திருக்கிறேன். ஆகையால் தங்கள் வரவை பஹிஷ்காரம் செய்யும்படி எனது தேசத்தாருக்கு இப்போது யோசனை சொல்லத் துணிந்தது கேவலம் விளையாட்டுக்கு அல்ல; அற்பமான காரணங்களை யுத்தேசித்துமல்ல. ஓர் ஆங்கிலப் பிரபு என்ற முறையில் தங்களிடம எங்களுக்கு விரோதம் கிடையாது. நெருங்கிய நண்பர்களை நாங்கள் எப்படி பாவிப்போமோ, அது போல தங்களுடைய சன்னிதானத்தையும் நாங்கள் கட்டாயம பாவிக்கிறோம். தங்கள் உயிருக்கு ஆபத்து வந்தால்கூட எங்களுயிருக்கு ஆபத்து வந்ததாகவே நாங்கள் மதிப்போம். தனிப்பட்ட ஆங்கிலேயர்களோடு எங்களுக்குச் சண்டையே கிடையாது. ஆங்கிலேயரின் உயிரை நாங்கள் அழிக்க விரும்பவில்லை.

எனது தேசத்தாரின் உடல், மனம், ஆவி ஆகிய மூன்றையும் ஆண்மையற்றதாய்ச் செய்துவிட்ட அந்த ஆட்சி முறையை நாசமாக்குவதே எங்களின் உத்தேசம்.

பஞ்சாப்பில் ஒரு டயரும், ஓட்வியரும் அட்டூழியம் செய்யும்படி விட்டதும், 7 கோடி முஸ்லீம்களால் அனுஷ்டிக்கப்படுகிற இஸ்லாத்தை வேண்டுமென்று அவமானப்படுத்தியதுமான அந்தக் கெட்ட ஆங்கில குணத்தை ஒழித்துப்போடவே நாம் செம்மையாய்ச் சண்டைபோடத் தீர்மானித்திருக்கிறோம். முதல் மந்திரியின் உறுதி மொழிப்படி ஒன்றுமே நடக்கவில்லை. பிரஜைகளான 30-கோடி இந்தியரின் உணர்ச்சியையும் ஒரு மகா முக்கியமான விஷயத்தில புறக்கணித்து அவமதிக்கும்படி செய்த அந்த ஜாதிய பெருமையையும், நாமே பெரியவர்களென்ற இறுமாப் புணர்ச்சியையும்; இனி நாங்கள் சகித்திருக்க முடியாது. சகித்தால் எங்கள்மதிப்பையும் மானத்தையும் கெடுத்துக் கொண்டவர்களாவோம்

கேவலம் ஒரு லட்சம் ஆங்கிலேயரிடத்தில் சதாகாலமும் நடுங்கிக்கொண்டு, அவர்களுத்தரவுக்குப பணிந்து, 30 கோடி இந்தியர்கள் வாழ்ந்து வரவேண்டி யிருக்கிறதென்றால், தங்களுக்

கதை பெருமையாகாது. தாங்கள் இங்கு வந்திருக்கும் உத்தேசம் அத்தகைய ஆட்சி முறையை ஒழிப்பதற்காக அல்ல. அதை இன்னும் கொஞ்சதூரம் தூக்கிவிட்டுப் போவதற்கேயாகும். லார்டு விலிங்டனை தாங்கள் முதல் முதலாய்ச் சிலாகித்தீர்கள். அவர் கண்ணியமான குணமுடையவர்தான். எனக்கும் அவரைத்தெரியும். ஒரு ஈயினிடத்தில்கூட அவருக்கு ஜீவகாருண்யமுண்டு. ஆனால் ஒழுங்காய் ஆட்சி செலுத்த அவரால் முடியவில்லை. அவர் சில சுயநலக்காரர்களின் வலையிலகப்பட்டு, சுயமாய் எதுவும் செய்யாமலிருந்துவிட்டார்.

திராவிட மாகாணத்தின் உண்மையான உணர்ச்சியை அவர் அறிந்திருக்கிறாரில்லை. நிற்க, வங்காளத்துக்கு வந்தபின்பும், தாங்கள் கவர்னருக்கு யோக்கியதா பத்திரம் அளித்திருக்கிறீர்கள். வங்காளத்தாரின் உணர்ச்சியை அவரும் அறியமாட்டார். கல்கத்தாவைப் பார்த்துவிட்டு, தாங்கள் வங்காளத்தைப் பார்த்ததாக நினைத்துவிடக்கூடாது. போர்ட் வில்லியம் கோட்டையும் மாடமாளிகைகளும் இத்தேசத்தின் ஊமைக்கோடிகளான ஏழை விவசாயிகளின் சிரமத்தினால் கட்டப்பட்டனவாகும்.

இவ்வழகிய மாகாணத்தின் பொருளாதார மூலங்களுக்கே கேவலமாய்த் தோண்டியெடுத்த பணத்தைக் கொண்டுதான் மேற்படி அரண்மனைகள் அமைக்கப்பட்டிருந்தன. இந்தியரின் தரித்திரத்தையும் அவமானத்தையும் போக்கடிக்க முடியாத இந்த அரசியல் திருத்தத்தின் உண்மையான யோக்கியதையை ஒற்றுழையாமைக்காரர்கள் நன்கு அறிவார்கள். ஆனால் அதற்காக ஆத்திரப்பட்டு நாங்கள் பலாத்காரத்தில் இறங்கமாட்டோம். நாங்கள் இதுவரை ஒற்றுழைத்து வந்ததன காரணமாகவே இவ்வளவு தூரம் கஷ்டத்துக்காளாகிவிட்டோம். பிரிட்டிஷ் பிரஜைகள் மட்டும் அதற்கு ஜவாப்தாரியல்ல. தங்களுடைய விஜயத்தை பகிஷ்காரம் செய்வதனால், தாங்கள் மேன்மைப்படுத்த வந்திருக்கும் ஆட்சி முறையை இந்தியர் விரும்பவில்லையென்ற உணர்ச்சியைத் தெரிவிக்க வேண்டியேயன்றித் தங்களை அவமானப்படுத்துவதற்காக அல்ல. தனிப்பட்ட சில ஆங்கிலேயர் இஷ்டப்பட்டால்கூட ஆங்கில ஜாதியின் குணத்தைத் திடீரென்று திருத்திவிட முடியாது. ஆங்கிலேயருக்குச் சமமாய் நாங்கள் இருக்கவேண்டுமானால் சுயநம்பிக்கையைத்தான் நாங்கள் உண்டுபண்ணிக்கொள்ள வேண்டும். இந்தக் கவர்ன்மெண்டின் ஆதீனத்திலுள்ள கல்விச்சாலைகளையும் நியாய ஸ்தலங்களையும் நாங்கள் நம்பியிருக்கக்கூடாது. இந்த ஆட்சி முறையைத் திருத்த முடியாதென்றால், அதை ஒழித்துவிடுவதாகவே எங்களுடைய உத்தேசம். ஆகையால்தான்

பலாத்காரமற்ற ஒத்துழையாமையை நாங்கள் ஆரம்பித்திருக்கிறோம். பலாத்காரமற்ற உணர்ச்சி பூராவாக எல்லோருக்கும் இன்னும் ஏற்பட்டு விடவில்லையென்பது எனக்கு நன்றாகத் தெரியும். ஆயினும், இதுவரை அனுபவத்தில் கிடைத்திருக்கிற வெற்றி ஆச்சரியமாகவேயிருக்கிறது. பலாத்காரமற்ற இந்த இயக்கத்தின் மேன்மையை ஜனங்கள் வாஸ்தவத்தில் உணர ஆரம்பித்துவிட்டார்கள்.

இந்த இயக்கம் மதசம்பந்தமானது; எங்களையே பரிசுத்தப் படுத்திக் கொள்வதற்காகவே இவ்வியக்கம் ஏற்பட்டது. குடியை நாங்கள் விட்டுவருகிறோம். தீண்டா ஜாதி வித்யாசம் தேசத்தில் இல்லாதபடி நாங்கள் ஏற்பாடு செய்து வருகிறோம். அன்னியநாட்டு சாமான்களை நாங்கள் உதறித் தள்ளி வருகிறோம். கைராட்டினங்களால் நெசவும் செய்து வருகிறோம். செட்டாயும் அழகாயும் வாழும்பொருட்டு எங்கள் மூதாதைபர்களைப் பின்பற்றப் பார்க்கிறோம்.

ஓர் ஆங்கிலேயர் என்ற முறையில் தாங்கள் இந்த இயக்கத்தின் மர்மத்தைப் படித்தறிந்து, அதன் மூலமாய் இந்த உலகத்துக்கும் பிரிட்டிஷ் ஸாம்ராஜ்யத்துக்கும் ஏற்படக்கூடிய நன்மையை உணர்ந்துகொள்ளும்படி நான் தங்களைக் கேட்டுக்கொள்கிறேன். உலகத்தில் நல்லதே இருக்கக்கூடாதென்பது எங்கள் நோக்கமல்ல. மனித வர்க்கத்தையே நாங்கள் மேன்மைப்படுத்த விரும்புகிறோம். யாருக்கும் உபத்திரவம் விளைவிக்கமாட்டோம்.

ஆங்கிலேயர்களோடு நேசபாவமாய்ப் பழக எங்களுக்கிஷ்டந்தான். ஆனால் சமமான அந்தஸ்து எங்களுக் கேற்படாத வரையில், ஒத்துழையாமையை நாங்கள் நடத்தித்தான் தீருவோம். அதாவது எங்களையே பரிசுத்தப்படுத்திக்கொள்வோம். ஆகையால் ஒத்துழையாமைக்காரர்களின் இந்த லட்சியத்தைத் தாங்களும் மற்றமுள்ள ஆங்கில கனவான்களும் செம்மையாய் அறிந்து கொள்ள வேண்டுமென்பதே எனது பிரார்த்தனை.

இங்ஙனம்.

தங்கள் உண்மையுள்ள ஊழியன்,

(ஒப்பம்) எம். கே. காந்தி.

(சு. மி. 2-2-21.)

## கல்கத்தாவில் மஹாத்மா காந்தி மாணவருக்குச் சொல்லிய அரிய புத்திமதி.

1921-ம் வருஷம் ஜனுவரி 24-ந் தேதி மாலை கல்கத்தாவில் திரளான மாணவர்களின் முன்பாக மகாத்மா காந்தி ஓர் அரிய உபந்யாசம் செய்தார். மிஸ்டர் ஸி. ஆர். தாஸ் அச்சமயம் அக்கிராசனம் வகித்திருந்தார். மகாத்மா காந்தி பேசியதாவது:—நண்பர்களே! பிரஸவ காலத்தில் ஒரு ஸ்திரீக்கு ஏற்படும் கஷ்டமும் கவலையும் எப்படிப்பட்டனவோ, அது போன்ற கஷ்டத்துக்கும் கவலைக்கும் நாம ஆளாகி வருகிறோம். ஒரு மஹத்தான மாறுதல் தேசத்தில் தோன்றி யிருக்கிறது. தேசத்தின் கட்டளைக் கிணங்க நீங்கள் கல்வியை விட்டுவிட்டீர்கள். அதைக் குறித்து உங்களை நான் மிகுதியும் பாராட்டுகின்றேன். மிஸ்டர் ஸி. ஆர். தாஸ் உங்களுக்கு வழிகாட்ட வேண்டுமென்றே நீங்கள் இத்தனை காலமாய்க் காத்திருந்தீர்களென்பதும் எனக்குத் தெரியும். அவரையும் நான் இச்சந்தர்ப்பத்தில் பாராட்டுகின்றேன். உங்கள் வேலை இப்பொழுதுதான் ஆரம்பித்திருக்கிறது. படிப்பை விடுவதுமட்டும் உங்களுடைய வேலையல்ல. சிறிதுகாலம் நீங்கள் உமேதுவாரிகளா யிருந்து ஆத்மசோதனைக்கும் பிராயச்சித்தத்துக்கும் ஆளாகவேண்டும். இன்ன வேலைதான உங்களுக் கிடப்படுமென்று தெரிந்து கொள்ளும் வரையில், கலாசாலைக்கு யாரும் போய்விடாதீர்கள்.

### நீடித்த வேலைக்கு வழி.

பள்ளிக்கூடத்திலிருந்து நீங்கள் விலகியாய் விட்டது. ஆனால் நீடித்த வேலை இனிச் செய்யவேண்டி யிருக்கிறது. சுயராஜ்யம் பெற உங்களுதவி வேண்டும். ஆசிரியர்களும், கல்விமான்களும், கலாசாலை டிரஸ்டிகளும் உங்களைப் பார்த்தபின்புகூட அசையாமலிருப்பது எனக்கு வருத்தமாயிருக்கிறது. என்னுடைய துக்கத்தை நீங்கள் அளவிட முடியாது. ஆசிரியர்களுக்கு தேசாபிமான மில்லையென்று நான் கண்டிப்பதாக நினைத்துவிடக்கூடாது. தேசத்தின் கட்டளைக்கு நீங்கள் இணங்கும்படியும், மனச்சாட்சியை மதித்து நீங்கள் பதுங்கக்கூடாதென்றும், மிஸ்டர் ஸி. ஆர். தாஸ் சொல்லியது அவர்களுக்குப் பிசகென்று படுகிறது.

கல்விச்சாலை பஹிஷ்காரத்தை நான் ஆதரித்துப் பேசுவதைக் கூட அவர்கள் விரும்பாமலிருக்கலாம். ஏதோ எனது அனுபோகம் சம்பந்தப்பட்ட வரையில், உங்கள் மூத்தோர்களுக்கும் நமது தலைவர்களுக்கும் சில புத்திமதிகள்சொல்ல எனக்கு யோக்கியதை

யுண்டு. நான் சொல்லிய யோசனை சரியானதென்ற ஒரு நிச்சயமான நம்பிக்கை எனக்கில்லாமற் போகவில்லை.

இந்தியாவின் கௌரவத்தைக் காப்பாற்றவும், சுயராஜ்யம் ஏற்படச் செய்யவும், இஸ்லாத்தின் மகிமையைக் காக்கவும், இந்த சர்வமெண்டோடு நாம் ஒத்துழைக்கக்கூடாது. நமது நம்பிக்கையை இழந்துவிட்ட ஒரு கவர்ன்மெண்டோடு உங்களுக்கு என்ன சம்பந்தம்? உண்மைக்கு ஒரு முகந்தான் உண்டு; அத்தனை தடவை வேண்டுமானாலும் உண்மையைச் சொல்ல நான் ஏன் பின்வாங்கவேண்டும்? ஒத்துழையாமையை நாம் அனுஷ்டித்தாலன்றி, இழந்துபோன கௌரவத்தை மீண்டும் பெற முடியாது. (கரகோஷம்) என் பொருட்டு தேசத்தாரனைவரும் ஒத்துழையாமை தர்மத்துக்குச் சம்மதித்து விடவில்லை. அவர்களுடைய உள்ளுணர்விலேயே அத்தர்மம் ஊறிக்கிடக்கின்றது. ஒத்துழையாமை நமது ஹிந்து தர்மம். அது இஸ்லாத்தின் தர்மமுமாகும். தூக்கத்திலிருந்து நம்மை எழுப்பிவிட்டதும் ஒத்துழையாமை தர்மமேயாகும். ஒரு பெரிய தைரியத்தையும் நம்பிக்கையையும் அது நமக்குள் உண்டுபண்ணிவிட்டது. ஒத்துழையாமையில் சேராதவர்களுக்கு மதவுணர்ச்சியில்லையென்றே சொல்லவேண்டும்.

படித்த தலைவர்கள் பலர் நவீன நாகரீகத்தில் முழுகிக் கிடக்கிறார்கள். அந்த மேனாட்டு நாகரீகம் நமக்கு வேண்டாம். மேனாட்டுக் கல்வியும் நாகரீகமும் எனக்கொன்றுமே கற்பிக்கவில்லையென்று நான் சொல்ல வரவில்லை. அக்கல்வியும் நாகரீகமும் கூடவே கூடாதென்று கண்டுபிடித்துச் சொல்லவே அது எனக்குக் கற்றுக் கொடுத்தது. அதிலிருந்து நான் கற்றுக்கொண்டது இதுதான். மேனாட்டு நாகரீகம் சாபம். (கேளுங்கள், கேளுங்கள்) அச்சாபத்தை எதற்காக ஏற்றுக்கொள்ள வேண்டும்? ஒரு மத யுத்தத்தில் வெற்றிபெற அது அனுகூலமாயிராது. நமது இயக்கம் ஒரு மதப் போரென்பதை நீங்கள் மறந்துவிடாதீர்கள். பிரிட்டிஷாரின் தற்போதைய ஆட்சி முறையைக் கண்டு ஜனத்திரள்கள் ஜாடாவும் களைத்துப் போய் விட்டதால், ஒரு வருஷத்தில் சுயராஜ்யம் ஏன் கிடைக்காது? (கரகோஷம்.) ஏற்கனவே 4 மாதங்கள் கழிந்தும்போய்விட்டன. எனது நம்பிக்கை மட்டும் குறையவேயில்லை. உங்களைக் கண்டதும் அதிகமான நம்பிக்கை எனக்கேற்படுகின்றது. தேசீயக் கல்வியோ, நூல் நூற்கும் வேலையோ ஏதாவது ஒன்றில் ஈடுபட்டிருங்கள். அலி சகோதரர்களும் நானும் சேர்ந்து, சுயராஜ்யக் கொடியை இவ்வருஷக் கோடிக்குள் நாட்டிவிடுவது சாத்தியமாகும்படி ஆண்டவன் எங்களுக்குயிர்

கொடுப்பாராக. அந்த 8 மாதத்திற்குள் எனதாவி போய்விட்டாலகூட, வருஷக்கோடிகருள் சுயராஜ்யம் நிச்சயமென்ற உணர்ச்சியோடுதான் இறப்பேன். (கரகோஷம்.)

நண்பர்களே !

இங்கிலாந்தில் மகா யுத்தத்தின்போது மாணவச் சிறுவர்கள் தங்கள் வித்தியாலயங்களை விட்டு தேசசேவையில் கவலை காட்டிய விஷயம் உங்களனைவருக்கும் தெரிந்திருக்கவேண்டும். மாணவர் சிறுமிகள்கூட தேச சேவை செய்யப் புகுந்ததை நான் இங்கு குறிப்பிடாமலிருக்க முடியவில்லை. கெயிரா ஜில்லாவில் நான் யுத்தத்துக்கு ஆள் சேர்த்தபோதும் கவர்ன்மெண்டுக்குச் சந்தோஷமாயிருந்தது. அதெல்லாம் யுத்தகால தர்மம். மாணவச் சிறுவர்களை யுத்தசேவைக்குத் தயார் பண்ணக்கூடாதென்று பெற்றோர்களாவது கவர்ன்மெண்டாராவது அச்சமயம் எனக்கு எச்சரிக்கை செய்ய முன்வரவில்லை.

நமது ஒத்துழையாமை யுத்தம் சாமான்யமானதல்ல. மாணவச் சிறுவர்களை இந்த யுத்தத்துக்கு நான் அழைக்கும்போது மட்டும் சிலர் ஆட்சேபிக்க வருவது முற்றிலும் நியாயமாகப்படவில்லை. ஒவ்வொரு மனிதனும், ஒவ்வொரு ஸ்திரீ குழந்தையும் சொந்தத்தில் நூல் நூற்றுத் துணி நெய்துகொண்டாலொழிய, அன்னிய வஸ்து பகிஷ்காரம் ஒருபோதும் சாத்தியமில்லை. காங்கிரஸின் மேடையில் ஏறி நின்றுகொண்டு நூல நூற்றால் மட்டும் அது போதாது. 35-வருஷமாய் காங்கிரஸ் அவ்வேலையைச் செய்தாகிவிட்டது. உண்மையான நூலை இனியாவது நூற்போம். (கரகோஷம்.)

அந்நியநாட்டுத் துணியை நாம் வாங்காதிருக்கும் பக்ஷத்தில்; பார்லிமெண்டிலுள்ள 55 தொழிலாளர் பிரதிநிதிகளுக்கும் ஜப்பான் தேசவியாபாரிகளுக்கும், இந்தியாவைத் தோண்டியெடுக்கும் மற்றும் முதலாளிகளுக்கும் வேலையில்லாமற் போய்விடும். உடுப்புக்கும் உணவுக்கும் நாம் பிறரை நம்பியிருப்பது மகா மோசமான காரியம். 2000 மைல நீளமும், 1500 மைல் அகலமும் விஸ்தீரணமுள்ள இந்நாடு சோற்றுக்கும் துணிக்கும் அந்நியநாடுகளை நம்பியிருப்பதா ? சிறுவர்களாகிய நீங்கள் எனது புத்திப்படி நடந்தால் ஒரு வருஷத்தில் சுயராஜ்யம் வாங்கித்தருவேன் என்று சொல்லிவிட்டு ஹிந்துஸ்தானி பாஷையை மாணவர் கற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். மௌலானா முகமதலியும் மேற்சொன்ன விஷயங்களையே வற்புறுத்திப் பேசினார்.

# கவுண்ட் லியோ டால்ஸ்டாய்.

ஐரோப்பிய மகரிஷியும் மகாத்மா காந்தியின் குருவும் சமரச ஞான தத்துவத்தை உலகில் பரவச் செய்தவருமான கவுண்ட் லியோ டால்ஸ்டாய் ருஷியா தேசத்தில் உயர்ந்த குடும்பத்தில் பிறந்த ஓர் பிரபு. இவர் பிறந்தது 1828-ல். இறந்தது 1911-ல்.

வித்யாசாலையில் கலைக்கியானங்களைக் கற்றுத்தேர்ந்தபின் காக்கேஷியா மலையிலும் கிரிமியா யுத்தத்திலும் சிலகாலம் போர்வீரனாகச் சேவித்தார். அதன்பின் 1862-ம் வருஷ முதல சாகும்வரை மாஸ்கோ நகரத்தின் பக்கத்திலுள்ள தமது பூமியில வாசஞ்செய்து கிரந்தங்களெழுதுவதிலும் தமது சொத்துக்களை மேற்பார்ப்பதிலும தமது காலத்தைச் செலவிட்டார். இவரெழுதிய நூலகள், கதைகள், உபமானங்கள், கடிதங்கள் முதலியவற்றைச் சேர்த்துத் திரட்டி முப்பது பெரிய புஸ்தகங்களாக ருஷிய பாஷையில் வெளியாக்கியிருக்கிறார்கள். அவற்றைப் பற்பல பாஷைகளிலும் மொழிபெயர்த்தும் பிரசுரித்திருக்கின்றனர். இங்கிலீஷ் மொழிபெயர்ப்பான சில புஸ்தகங்களை நாம் வாசித்துப் பார்த்திருக்கிறோம். சமரச ஞானம் உலகில் பரவும்படி பகவானால் அனுப்பப்பட்ட ஓர் ஞானியாகத் தெரிகிறது. கிறிஸ்து போதித்த ஞானோபதேசங்களிலடங்கிய ஆந்திரீகக் கருத்தை வெளியாக்கி தற்காலத்தில் உலகில் பரவிவரும தற்கால நாகரீகத்தினால் விளையுங் கெடுதிகளை எடுத்துக் காட்டி அதைக் கண்டித்திருக்கிறார். ஐசுவரியத்தைத் திரட்டி சீமான்களாக சகல சம்பிரமத்துடன் வாழ்பவர்கள் மற்றயர்களை அடிமைகளாக நடத்தி ஊதியஞ் சம்பாதிப்பது தகாதெனக் காண்பித்தார். தம்மிடத்தில் ஊழியஞ் செய்து வந்த அடிமைகளுக்கும் சுயாதீனங் கொடுத்தார். அதன்பயனாக ருஷியா தேசத்தில் அதுவரை நடந்துவந்த அடிமை வியாபாரம் நீங்கிற்று.

இந்த மெய்யான கிறிஸ்தவ பக்தசிகாமணி, கிறிஸ்துவானவர் திருவாய் மலர்ந்தருளிய ஒவ்வொரு மொழிகளையும் தம் முன் நிறுத்தி அவற்றில் புதை பொருளாய் அடங்கியுள்ள ஆழ்ந்த கருத்துக்களைப் பற்றி சதா தியானஞ் செய்துகொண்டே யிருப்பார். உடனே ஒவ்வொரு கருத்தையும் உலகத்தவர்க்கு எடுத்துக் காண்பிக்க உதாரணங்கள், உபமானங்கள், கதைகள முதலியவற்றை எழுதுவார். அவற்றில் சிலவற்றை நாம் இப்பொழுது அச்சிட்டு வரும் "டால்ஸ்டாயின் கதைகள்" என்ற புஸ்தகத்தில் காணலாம்.

இவரெழுதிய புஸ்தகங்களை சிறுவயதுமுதல் வாசித்து தியானித்து வந்ததே மஹாத்மா காந்திக்கு சமரச ஞானமும் சயநல

வெறுப்பாகிய சுயசீர்திருத்தமே சுயராஜ்யம் அடையும் வழி என்ற ஞானமும் அமைந்தது போதும்.

"சகல சொத்துக்களும் சகலமனுஷருக்கும் பொதுவாதலால் உயர்ந்தவன் தாழ்ந்தவன், ஐசுவரியவான் ஏழை, அரசன் குடிகள் என்ற வித்தியாசம் இருக்கவேகூடாது." "பரமண்டலங்களிலிருக்கும் எங்கள் பிதாவே......" "Our Father which art in heaven." என்று சதா உச்சாடனஞ் செய்யச் சொல்லி [illegible]னவர் போதித்த மூலமந்திரத்தில் கடவுள் ஒருவரே ச[illegible]பிதா. மனுஷரனைவரும் அவருடைய பிள்ளைகளாகிய சகோதரர். ஆதலால் யாவரும் சகலத்திலும் சம[illegible]ச்சியத்தை யுடையவர்கள் என்ற கொள்கையை உலகிற்கும் [illegible] செய்ததும் பா[illegible] விலுத்தரர் (Bolshevism) உற்பத்தி[illegible] இவ்விரண்டிய [illegible] கின காரணமாயிருக்கலாம். [illegible]க்கை ருஷியாவில் தானே முதலாவதாக ஆரம்பமாகி இப்பொழுது உலகமெங்கும் பரவி வருவதைக் கேள்விப்படுகிறோமே.

ஆனால் இவர்கள் பலாத்காரத்தாலும் யுத்தத்தின் மூலமாயும் இரத்தஞ் சிந்துதலினாலும் தமது "சமரச" கொள்கையை [illegible]பிக்க முயலுகின்றனர், இது சகோதரத்துவமாகுமா? நமது மகா[illegible]மாவோ "ஆத்மசக்தியின் பலத்தால் "சமரச" ஞானத்தை [illegible]பிக்க இந்தியாவில் உதயமாகியிருக்கிறார். இவர் கொள்கையே உலகெங்கும் பரவும். அப்பொழுது ஏசாயா தீர்க்கதரிசி 2-ம் அதிகாரத்திலும், [illegible] தீர்க்கதரிசி 4-ம் அதிகாரத்திலும் உரைத்திருக்கிற "கடைசிநாட்களில்......அவர் ஜாதிகளுக்குள் நியாயந் தீர்த்து, திரளான ஜனங்களைக் கடிந்துகொள்வார். அப்பொழுது அவர்கள் தங்கள் பட்டயங்களை மண்வெட்டிகளாகவும் தங்கள் ஈட்டிகளை அரிவாள்களாகவும் அடிப்பார்கள். ஜாதிக்கு விரோதமாய் ஜாதி பட்டயம் எடுப்பதுமில்லை, இனி அவர்கள் யுத்தத்தைக் கற்பதுமில்லை."

என்ற வசனங்கள் நிறைவேறுங் காலம் கிட்டிவிட்டதுபோலும். தீர்க்கதரிசனங்கள் நாம் எதிர்நோக்கிப் பாராதவண்ணம் நிறைவேறும்போதுதான் அவற்றினர்த்தமும் அருமையும் விளங்குகின்றன. மகாத்மா காந்தியின் தீர்க்கதரிசனமும் அப்படித்தானோ போ? ஆனால் அதன் நிறைவேற்றத்திற்காக மற்றத் தீர்க்கதரிசனங்களைப்போல யுகாயுகங்கள் காத்திருக்க வேண்டியதில்லை. இந்த வருஷக் கடைசிக்குள் நிறைவேறிவிடும் என்கிறார்.

இந்தியர் எல்லோருமே ஏக ஜாதியாகி ஏக பாஷை பேசி [illegible]டை [illegible] எட்டு மாதத்தில் சுவாதீனம் அடைவதும் சாத்தியமாகுமோ? என்றாலும் இதற்காக நாம் காத்திருக்க வேண்டியது எட்டுமாதந்தானே.

நமது காருண்ய கவர்ன்மெண்டார் குருட்டுத்தனமாய் முரட்டுப்பிடி பிடிப்பவர்களல்லவே. ஆதலால் அவர்கள் பிரஜைகளின் விருப்பத்திற் கிணங்கி அடக்குச் சட்டங்களையும் தற்காலத்திய ஆட்சி முறையையும் திருத்தி நமக்கு மனதார தாமாகவே சமபாத்யதையும் சுவாதீனமும் தந்துவிடுவார்களானால் "சாக்கரைப் பந்தலில் தேனமாரி பொழிவதுபோல் தீர்க்கதரிசனங்கள் நிறைவேறுவதற் கிடமாகுமல்லவா"? நமக்கு வேண்டியதெல்லாம சமபாத்யதை யொன்றுதானே,




## பாரதமாதா.

"நீங்கள் எந்த அளவினால் அளக்கிறீர்களோ, அந்த அளவினால் உங்களுக்கும் அளக்கப்படும்."

—கிறிஸ்து.

"மனுஷர் உங்களுக்கு எவைகளைச் செய்ய விரும்புகிறீர்களோ அவைகளையே நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள். இதுவே நியாயப் பிரமாணமும் தீர்க்கத் தரிசனங்களுமாம்."

—கிறிஸ்து



ராவசாகிப் டாக்டர் J. S. ராமேக் L.R.C.P. & S. & c. &c

இவர் "முயற்சி திருவினையாக்கும்" என்பதற்கிணங்க சுயமுயற்சியினாலும் புத்திசாலித்தனத்தினாலும் லண்டன்மா நகருக்கேகி அங்குள்ள பெரிய ஆஸ்பத்திரிகளில் கண், காது, தொண்டை முதலிய அவயவங்களி லுண்டாகக்கூடிய வியாதிகளைப்பற்றி நுட்ப ஆராய்ச்சி செய்து வந்ததுடன் ஆயுர்வேத சாஸ்திரத்தையும் கற்று L.R.C.P. & S; L.M.L.F.P.S. முதலிய கௌரவப் பட்டங்கள் பெற்று இரங்கோன் ஜெனரல் ஆஸ்பத்திரியில் உத்தியோகம் வகித்து வருகின்றார்.

இவர் தம் தொழிலில் தேர்ந்த ஆராய்ச்சி சக்தியுடையவராதலால் 1919ம் வருஷம் இவருக்கு (RAO SAHIB) ராவ்சாகிப் பட்டம் கிடைத்தது.

இந்நூலாசிரியனுக்கு ஔஷதப் பிரயோகங்களின் அருமையைப் பற்றி அடிக்கடி போதித்து வரும் ஆப்த நண்பர்களிலொருவர். இரங்கோனில் இவருக்குக் கியாதி அதிகம்.

## உலோபம்.

உலோபமென்பது மிதமிஞ்சிய பொருளாசை. பிறர் பொருளைக் கவர்கின்றவனும் அதனை அநீதமாய் ஆசிக்கின்றவனு மாத்திரமல்ல, தன் சொந்தப் பொருளைக் காப்பாற்றுவதிலேயே மிதமிஞ்சிய கவலைகொள்பவனும், அங்கத்தைக் கட்டி தங்கத்தைச் சேர்ப்பவனும் உலோபி எனப்படுவர். மகாராஜராக விரும்புகின்றவர்கள் பேயின் தந்திரத்திலுங் கண்ணியிலும் வீழ்வதுமன்றி, மனிதரைக் கேடுந் தின்மையும் நிறைந்த படுகுழியிற் தள்ளிப்புகுத்தும் அநேக வினைகளிலும் வீழ்கின்றார்கள். ஏனெனில் பொருளாசை எல்லாத் தீமைகளுக்கும் வேராயிருக்கின்றது, என்று பரிசுத்த பேதுரு அப்போஸ்தலன் திமோத்தேயுவுக்கு எழுதின நிருபத்தில் இக்குற்றத்தைக் கண்டனம் பண்ணுகின்றார். பொய்பேசுதல், பொய்ப்பத்திரம் பிறப்பித்தல், அநியாயவர்த்தகம், லஞ்சம், வஞ்சகம், களவு, மாய்மாலம், இரண்டகம், புறட்டு, உருட்டு, அநியாய வட்டி வாங்கல் முதலிய பல பாவநெறியால் வந்தபொருள், தான் செய்த புண்ணியத்தையுங் கெடுத்து இம்மையிலே தீராத வசையையும், மறுமையிலே நரகத்தையும் விளைவிக்கும்.

மெய்யான செல்வங்கள் செம்பொன்னிலும், வெண்பொன்னிலும், விலையுயர்ந்த நவரத்னங்களிலும் அடங்கியிராமல் புண்ணியங்களோடுங் கூடிய நல் மனச்சாக்ஷியில் அடங்கும். ஆராய்ந்து பார்க்கில் பொன்னாவது என்ன? வெள்ளியாவது என்ன? லௌகீக நலங்களைத் தேடுவதில் சொருகிச் சொக்கிப்போன இருதயமுடைய மனிதர் மதிமயங்கி, தப்பெண்ணத்தாலும், பைத்தியத்தாலும் விலையேறப்பெற்றதென்றெண்ணும் சிறிது வெண்மண், செம்மண் அல்லது வேறொன்றுமில்லையென்பது தெள்ளென விளங்கும். இப்பொருட்களைத் தேடுவதில் தன் முழு இருதயத்தையும் புகுத்துகின்றவன் வருந்தி உழைத்து இளைப்படைவானேயன்றி திருப்தியடையான். தண்ணீரைக் குடிக்கக் குடிக்க தாகந்தணியா மகோதரனுடைய நீர்வேட்கையைப்போல் அவன் தாகம் ஒருபோதும் தணியாது. பொருளைக் குவிக்கக் குவிக்க இன்னும் அதிகமாய்க் குவித்துச் சேர்க்க விரும்புகிறானேயன்றி, சம்பாதித்த பொருளைப்பற்றிச் சந்தோஷமடையான். தன் கைக்கெட்டாத பொருளின் குறையினால் மனம் வருந்தித் துயருறுகின்றான். மிருகம் தன் இச்சைகளுக்கு எல்லைகண்டறிகின்றது. பசியால் தூண்டப்பட்டால் மாத்திரம் இரையைத்தேடி ஓடுகின்றது. பசிதீர்ந்த மாத்திரத்தில் அமர்ந்திளைப்பாறுகின்றது. மகாராஜருடைய பொருளாசைக்கோவெனில் எல்லையேயில்லை. எவ்வளவு போட்டாலும் விழுங்கி ஒருக்காலும் திருப்தியடையாமல் அலைவர்.

எவ்வளவோ கஷ்டப்பட்டு செல்வத்தைச் சேகரித்து வயிற்றிற்கு வஞ்சகம் செய்து உலகத்திற்கும் உபகாரஞ் செய்யாமல் அறநிலையறியாது மறநிலைபரிக்கும் பொர்க்கிளிகாக்கும் பூதத்தைப் போன்று உலோபியென்றும் பலரால் இகழப்பட்டு தம் காலத்தைச்சழிக்கின்றனர். இதனாலன்றோ?

குசேலோபாக்கியானம்.

"உயிர்க்கொலை புரிதலுண்ணு முணவு மாராட்டஞ் செய்தல்
அயர்ப்பிலா நண்பர்மாட்டு மமைதரக் குய்யஞ் செய்தல்
பயிர்ப்புமிக் குறநல்லோரைப் பழித்தல் பொய்க்கரி யுரைத்தல்
செயிர்ப்பிலா வயத்திடத்துஞ் சென்றுபட்டிமை யியற்றல்."

"இவைமுதற் பலவுமாந்த ரியற்றினான் கழியாநிற்பர்
அவையெலாம் பொருணிமித்த மாகுமப் பொருளைப்பெற்றுக்
குவையுறப் புதைத்துவைத்துக் குதுகுதுப் படைந்துகாத்து
நவையுறு பணப்பேயென்னு நாமமும் பெறுவர்மாதோ."

எனவும்,

[illegible] நற்பழக்கத்தையே [illegible]லைமையை மறந்து [illegible]த்தையாடுகின்றனர். [illegible]

"[illegible]
[illegible]
மருந் துளதோ வெனில் வாகடத்திலை
தரித்திர மென்னுமோர் மருந்திற் றீருமே."

என்றனள். மேலும், பொருளின் மேம்பாட்டையே புகழ்ந்து பேசி, எம்பொருள், எம்பொருளென்று அகங்கரித்து இறுமாப்படைகின்றனர். சகல ஐஸ்வரியத்திற்கும் காரணர் கடவுள் என்பதை மறந்து என் சம்பாத்தியம், என் பாட்டன் வைத்த திரவியம், என் பெற்றோர் சம்பாதித்த பெரும்பாக்கியம் என்று இறுமாப்படைகின்றனர். இதுபற்றியன்றோ,

சீறா புராணம்.

"தாயளித்த செல்வமென்றுந் தந்தைதருஞ் செல்வமென்றும்
துவத்தி னேய்ந்த
சேயளித்த செல்வமென்றும் பிறரளித்த செல்வமென்றும்
திறமை வேந்தர்
ஈயளித்த செல்வமென்றுஞ் சிறியோர்க ளறியாது
குரைப்ப தெல்லாம்
நீயளித்த செல்வமன்றோ பெரியோர்கள்தம்
மனத்து ளியிர்ந்து நின்றோய்."

எனவும்.

நீதிநூல்.

"என்பொருளென்பொருளென்றுசீவன் விடுமனமே
யொன்றியம்பக்கேளா யுன்பொருளாலதண்மே
னுன்னுமம் வரைந் துளதோ வுன்தனொடு
முன்பிறந்து வளர்ந்ததோ வினையுனைவிட் டகலாதோ
முதிர்ந்து நீதான் பின்பிறக்கும் போததுவுங்
கூட விறந்திடும் கொல்லோ பேசுவாயே."

"எத்தனைபேர்கையின் முனமிப்பொருடா னிருந்ததவ ரெல்லாம்
தத்தம் அத்தமென நம்பினரவர்களை விட்டகன்றன்கை
யமர்ந்ததின்னுஞ் சத்தமின்றி யுனைமோசஞ் செய்தனர்ந்தம்
பேரகத்திற் சாறுஞ்சொன்னேன் சித்தமே யதுசெல்லு
முன்னிச்சற் பாத்திரத்திற் செலவிடாயே."

எனவும் கூறினர்.

'துட்டுக்கு எட்டு சட்டி வாங்கி, சட்டி ஒன்று எட்டுத்துட்டாக விற்றாலும் வட்டிக்குமிஞ்சாது வாவில்' என்று சாதித்து அநியாயவட்டி முதலியவற்றால் பொருள சம்பாதித்து பிரபுவான ஒரு உலோபிக்கு ஓர் மகான் எழுதிய கடிதமாவது:—

கனவானே! நீர் அநீதமாய்ச் சம்பாதித்த ஆஸ்திகளை இங்கேயே போட்டுவிட்டு அவற்றை யுமக்குத் தருவித்த பாவப்பொதியை மாத்திரம் சுமந்து உம்முடன் கொண்டுபோவீரென்று நினைத்துக்கொள்ளும். ஆதலால் நன்மையைக் கைநழுவவிட்டுத் தின்மையைப் பத்திரமாய்ச் சேகரித்து வைத்துக்கொள்வதும், அநுபோக சுகத்தை மற்றவர்கட்கு விற்று ஆக்கினைக்கு உம்மை உள்ளாக்குவதும், இச்சிறியத்திலேயே நீர் வேதனைப்பட்டு உத்தரிக்க, உடன்படுவதும் என்ன பெரும் பைத்தியம!

உம்மைப் பார்க்கிலும் உமது ஆஸ்திகளை அதிகமாய்க் கனம் பண்ணுவதும, உமது ஐஸ்வரியத்தில் யாதேனும் நஷ்டம் அநுபவிப்பதைப்பார்க்கிலும், உமது ஆன்மாவில் நஷ்டப்படுவது தாவிளை என்றெண்ணுவதும, உமது போர்வையைக் கிழியாமல் பத்திரப் படுத்தும்பொருட்டு, உமது உடலைக் கூரியவாளின் வெட்டுக்குள்ளாக்குவதும் எவ்வளவு மதியீனம! இப்படிச் செய்வது சிலவெள்ளிக்காசுகளி னிமித்தம் நீதியையும், தேவகிருபையையும், தன்னுத்தமத்தையுமே விற்றவனாகிய யூதாஸ் ஸ்காரியோத்துக்குச் சமானமாவதன்றோ? மேலும், மரணநேரம் வரையில பாவத்தில் நிலைநின்றும், பாவத்தில் விழுந்தும், எழுந்தும், படுத்தும் சம்பாதித்த பொருள்கள் அனைத்தோடும், உச்சித ரக்ஷணிய நலத்தைத் தப்பாமல் இழந்துவிடவும் சித்தமாயிருப்பது எவ்வளவு பெரும்பைத்தியம்" என்பதே. ஏனெனில், இச்செல்வமே மக்களின் மனோமேம்பாட்டினால் தியனப் பயக்கின்றது.

அதனைத் தக்கவாறு பிரயோஜனப்படுத்தாமல் கெடுதி விஷயங்களிற் செலவிட்டாலதைவிடத் தீங்கிழைக்கக்கூடியது வேறொன்றுமின்று. பெரியோர்களைப் பழிப்பதும், தனது கவுரவத்தை யழிப்பதும், வாய்மையைப் போக்கடிப்பதும், மனுஷரின் உயிரை மாய்ப்பதும், காரிகையின் கற்பைக் கெடுப்பதும், சஞ்சலம், பிணி முதலியவற்றை வரவழைப்பதும், இராஜ காவலுக்குள்ளாக்குவதும் இச்செல்வமேயாம். இதனாலன்றோ:—

குசேலோபாக்கியானம்.

“நல்லொழுக்கினரை தீயவொழுக்கரென் றுரைக்கச் செய்யும்
புல்லொழுக்கினரைத் தூயநலத்தரென் றுரைக்கச் செய்யும்
நல்லகற்புடைய மாதர்நலத்தை யஞ்சாமைசெய்யும்
பல்வகைத் துயருஞ்செய்யும் பாழ்ம்பொருள் பற்றலார்க்கே.”

எனவும்,

நீதிநூல்.

“ஒப்பரு நற்குணத்தவர்க்கும் கொலைகாமம் கட்களவை
யுபதேசிக்கும் அப்பனைப் பேயர்க்குட் பகைவிளைக்குஞ்
சத்துருவா யகிலத்துற்ற செப்பரிய துயர்க்கெல்லா
மாதாவாய் தீவினைக்கோர் செவிலியாய
இப்பொருளை நற்பொருளென் றெப்படிநீ யொப்புகின்றா
யேழை நெஞ்சே.”

எனவும் பாடியிருக்கின்றனர். அன்றி,

இராமசந்திர கவிராயர்.

“புல்லுக்கட்டும் விறகுஞ் சுமந்தபேர் பூர்வகாலத்துப்
புண்ணிய வசத்தினால்
நெல்லுக்கட்டும் பணக்கட்டுங் கண்டபின் நீலக்கல்லிற்
கடுக்கனும் போடுவார்
சொல்லுக்கட்டும் புலவரைக் கண்டக்காற் றாதிப்பாய்ந்து
கதவை யடைத்தெதிர்
மல்லுக்கட்டும் மடையரைப் பாடவோ மலயச்சாரலில்
வாழ்பெரி யம்மையே.”

“கள்ளிக்கேன் முள்வேலி, கழுதைக்கேன் கடிவாளங்
கறுப்பில்லாத
உள்ளிக்கேன் பரிமளங்க ளுவர்நிலத்துக் கேன்விதைக
ளொடித்துப்போடும்
சுள்ளிக்கேன் கோடாலி துடைப்பத்திற் கேன்கவசஞ்
சும்மாவோட்டித்
தள்ளிக்கே னதிவீர மழவாங்க பூபனெனும்
பட்டந்தானே.”

கடவுளுடைய சிருஷ்டியில் மக்கள், விலங்கினங்கள், அஃறிணைப் பொருள்களாகியவற்றுள் எவ்விதத்திலும் பிரயோஜனமற்றதும் யாவற்றினும் தாழ்ந்ததுமான சிருஷ்டி மக்களுடம்பெடுத்து உலோபிகளாகவிருப்போரேயாமென்று துணிந்து கூறலாம். எப்படியென்றால்,

' கல்லாலயமாந் தேவருமாங், கழுதைகசடர் பொதிசுமக்கும்,
கடாவோ வுழுதுபயிரிடற்காங், கட்டம் பன்றிக்கிரையாகும்
புல்லேறீசர் வாகனமாம் பொதியுஞ்சுமக்கும், பிணமெனிலோ
பூசிமுடித்து மறையோர்க்குப் பொருளையீந்து புகழெய்தும்,
மல்லார்குட்டிச் சுவரெனிலோ மாடுமுலைஞ்சு மறைவாகும்
மதியாத்துடைப்பந் தானெனிலோ மாடகூடந்தனை விளக்கும்
அல்லாது லுத்தன்றனக்கிணையா யாரையுரைப்பேன் புவிமீதில்
அவனைக்குறித்துக் கூறுமிடத் தவனுக்கவனே சரிதானே."

கல்லானது கோயில் விக்கிரகம் முதலியன நிர்மாணிப்பதற்கு உபயோகப்படுகிறது. கழுதை வண்ணானுடைய பொதியைச் சுமக்கிறது. எருமைமாடோ உழுது பயிர்செய்ய உதவுகிறது. மலம் பன்றிக்கு இரையாகிறது. அற்பமான எருது ஈஸ்வரனுடைய வாகனமாக விருப்பதோடு மற்றவர்க்குப் பொதுசுமந்து உதவிசெய்கிறது. செத்த பிணமோ சந்தன முதலியவற்றைப் பூசி மலர்முதலியவற்றை அணிந்து வேதியருக்குப் பணம் கிடைக்கும்படி செய்து கீர்த்தியடைகிறது. வளமான குட்டிச்சுவரோவென்றால் மாடுகள் உலைஞ்சுதற்கு உதவுகிறது, மறைவாகவும் ஆகிறது. ஒருவராலும் மதிக்கப்பெறாத விளக்குமாறு மாடகூடமாளிகைகளைத் துலக்கும் கருவியாக உபயோகப்படுகிறது. உலோபிக்குச் சமமாக உலகத்தில் யாரைச் சொல்லுவதென்றால் (அவனைப்போல பிரயோசனமற்ற எந்த வஸ்துவும் இல்லையாகையால்) அவனுக்கு அவனே தான் சமம்.

அட்டாவதானம் சரவணப் பெருமாள் கவிராயர்.

1. ஏதுபுல வீர்விளைவு தழைவிலாக் காலத்தில்
எமதும்ப ரூர்விசாரித்
- இவ்வளவு தொலைவந்த தொல்லையென வப்பொழுது
இரண்டுபதி னறுபல்லில்
எவ்வளவு மறையாமலவ்வளவு மேதெரிய
விருகாமு மேந்திவாய்விட்
டின்புறப் புன்சிரிப் புற்றுமது சற்கீர்த்தி
யெல்லாந் தெரிந்துளத்திற
கர்தல்வைத் துத்தமிழ்ப் பாடிவந் தோமெனக்
கழறினுஞ் செம்பிருதுலாங்

காய்ச்சியே காதிலிட் டதுபோலு மிம்மொழி
கலக்கமாய்க் கேட்டுமையா
கவிராஜ ரேவிட்டி டொருமாத மாகநோய்
கண்டுபெண் பிணிபிழைத்தல்
கடினம்வெகு கடினமத னாலவரும் விருந்துகள்
கணக்கில்லை யிவ்வூரிலோர்
பாதக வயித்தியன் கைத்தாது பற்றுமுன்
பைத்தாது பற்றியின்னம்
பற்றாது பற்றுதெனச் சொலியெ னடிவயிறு
பற்றநா னூறுங்கொத்துப்
பனையே டெலாம்வாரி வாரிமுன் வாகடப்
பாவிலுள வவிழ்தமெலலாம்
பாவிமக னெழுதியொரு காசும்வை யாமற்
பருங்காடி யீசலவனையின்
மோதியே வாயவைத் தறிஞ்சியது போற்றடைய
முழுவது முறிஞ்சிவிட்டான்
மூத்தகுடி யாணமகமேற்றகுடி யலவென்று
முறைமுறை யெடுத்துரைக்கும்
முழுமூட ராங்கொடிய மிலாபியர்கண் மேற்றமிழ்
மொழிந்தவ ரிடஞ்செலாமல்
முப்பொழுது போற்றுமெமற் கருள்புரிவை யெங்குநிறை
முதலான பரமசிவமே.

2. வெண்பாச்சொல் கவிஞரே வந்ததே தும்மீது
மெய்த்தமிழ் பாடி வந்தோம்
வெகுநேர்த்தி முன்னம்ம நானூறு கோவையொரு
வித்துவான் பாடிவந்தான்
நண்பாக மனம்வைத்து மூன்றுபடி பெருவரகு
நான்கொடுத் தேனதறகிந்
நாடெலாந் தெரியுமென் மனையாட்டி மூன்றுதர
நான்றுகொண் டுயிர்பிழைத்தல்
புண்பா டெலாமறிந் தின்னநீர் கவிசொலும்
புலவரென் றிங்குவந்தீர்
போம்போ மெனச்சொலி புலையாடு புலையரோடு
போராட வோபடைத்தாய்
தெண்பா வெனும்பொருட் பாமாலை பூண்டுபத
சேவைதந் தருள்புரிகுவாய்
தேசிகம் பூதலமை நேசம்பொன் னம்பலவ
தேசிக சிரோரத்னமே,

3. வந்தவரி யாவர்காண் கவிராஜ ரெந்தவூர்
வடகாசி யென்குவந்தீர்
மகாராஜ னென்றுனது கீர்த்தியைக் கேட்டுன்மேன்
மதுரகவி பாடிவந்தோரு
சந்ததமும் வித்துவா னல்லனீ யென்னுடைய
தாதைதமூ தாதைவழியில்
தமிழ்கேட்ட தியாவர்காண் டலைமுறையி லில்லாத
தாழ்விதைச் செய்துவந்தீர்
இந்தமொழி மற்றுமொரு தாரீ யுரைக்கிலோ
விரணைகள மாருமப்பால்
ஏருமென் றோதிடும் புல்லர்கம் பாற்செலா
தெனையாள விதுதருணமே
சிந்திக்கு மன்பருக் கருண்மழை சொரிந்ததிக
செல்வங் கொடுக்குமுதலே
தேசிகம் பூத்தவுமை நேசபொன் னம்பலவ
தேசிக சிரோரத்நமே.

4. ஆரடி வீதியிலொ ரேடுகொண் டோடியே
யவசரம தாய்வருகிறார்
ஐயையோ புலவன்மார் போலேயி ருக்கின்ற
தியாரென்று மெள்ளவெட்டிப்
பாரடி தலைமறைய நின்றுகொண் டவர்கெடும்
பாதைவழி போகிறதுதான்
பரண்மே லெனைத்தூக்கி விட்டுவிடு தாளையடை
பழிகாரி கதவுபோடு
கூர்மைமொழி கேட்டதிக சீக்கிரம் வந்திடுவர்
குதிருக்குள் ளேயொழித்துக்
கொள்ளடி யெனப்புகலும் லோபியர்கண் மேற்றமிழ்
கொண்டுபோ யலையாமலே
சீரடிதா னித்துநற் பாமாலை சாற்றியே
தெரிசிக்க முத்திதருவாய்
தேசிகம் பூத்தவுமை நேசபொன் னம்பலவ
தேசிக சிரோரத்நமே.

5. தலைவாச லின்கதவை யாரடி திறந்தவர்கள்
தமிழ்வாணர் வரில்விடுவரோ
தாரமல நீவரக சாரமோ வட்டமச்
சனியனோ வேறுகுறையோ
அலையா தலைந்துதான் கவிவாணர் தங்களா
லானந்த வருடத்திலே

பான்பட்ட பாட்டையோ யாவரறி வாரந்த
ஆதிபக வானறிகுவார்
மலையாம லுன்மன மிருப்பதேன் புலவன்மார்
வரிற்சமா போவரோதான்
மனம்பதறு தேயெனைப் புகல்பவ ரிடஞ்செலா
மற்காக்க விதுதருணமே
சிலையாரு நுதல்விழிக் கௌரிகௌ மாரிஜக
தீஸ்வரி வராகிநிமிலி
தேசிகம் பூத்தவுமை நேசபொன் னம்பலவ
தேசிக சிரோரத்நமே.

6. உலகி லெதிர்பட்டவா ளொன்றேனு வுங்களுக்
கொருதொழிற் றெனுமிலேயோ
வொட்டாரங் காட்டியே நித்தநித் தம்வந்து
உபாதிக்கி றீர்களேயோ
புலவரென் றொற்றனங் கொட்டி வைத்தீர்களோ
புதையல்யா னெடுத்ததுண்டோ
புளுகக்கற் றதுபோலொர்தொழில்கற்க வொண்ணாதோ
புகழ்வதாற் பயனேதுகாண்
கலைகற்றவர்களென் னினெஞ்சமெரி கின்றதே
கவிராஜரே சொல்லுவீர்
காசென் னிடத்தில்லை சபிக்கிலஞ் சேனெனுங்
கசடர்மேற் றமிழ்ப்பாடியே
செலும்வழி மறித்தென்னை யாளவிது தருணமே
சிற்சபை நடிக்குமுக்கண்
தேசிகம் பூத்தவுமை நேசபொன் னம்பலவ
தேசிக சிரோரத்நமே.

7. வாருநீர் யாரென்ன வித்துவா னென்னவும்
மதிபோசம் வந்ததென்றே
வாய்குளறி மெய்யெலா மிகநடுக் குற்றுநீர்
வந்தகா ரியமேதெனச்
சீருலா வியகாம தேனுவே தாருவே
சிந்தா மணிக்குநிகரே
செப்புவச னத்தரிச் சந்த்ரனே யெனலுஞ்
சினந்திருக லுஞ்சிவந்தே
யாரைநீ யாடுகல் மாமென்று சொன்னது
மலாலரிச் சந்த்ரனென்றே
யடாதசொற் சொன்னையே யார்க்கடிமை யாகினே
னொற்கையிற் பெண்டிவிற்றேன்

திருமோ விந்தவளை யென்றுரைசெய் வெகுகொடிய
 தியரைப் பாடிநொந்தேன்
திருமன்று ளடுகின்று நடமொன்று புரிகின்ற
 தொன்றில்லை நடராஜனே.

8. மரபுதவி ராதவன் சோமசுந் தரகுரு
 மலர்ப்பதம் பரவுதாசன்
வண்டமிழ்ச் சரவணப் பெருமாள் கவிச்சக்ர
 வர்த்திநேர்ந் தெழுதுதிருடம்
வளர்காரை யம்பதியின் மேவுதுரை லட்சுமண
 மந்திரியெதிர் கொடுகொண்கபா
வாணருக் குபகாரி நீயாகை யாலெமது
 வல்லமையு மகிமையுங்கேள்
கருணீகர் நால்வர்க்கு நாற்கவிதை சொல்லவாய்
 கனவேலு மயிலுமென்னக்
காலிலொரு கவிதையுயர் தோளிலொரு கவிதையிரு
 கையிலொரு கவிதையெழுதக்
கணக்கொரு புறஞ்சொல விலகமொரு புறஞ்சொலக்
 காதை திரைமறைவிலே
கனரூது சதுரங்க பொருதுதிரை யடிசொலக்
 கன்னெலு முதுகிலெண்ணப்
பரிவுபெற் றப்பனுச் சேரியிற் சென்றினிய
 பண்பரிற் சிலையவாத்தி
பண்புள குமரபாரா ரதிமதுர கவி வீர
 பத்ரகவி கொண்டாடவே
பாக்கியனு னந்தநா தன்சபையி லுஞ்செய்து
 பல்லக்கு வரிசைபெற்றேன்
பலகாவி யங்களுந் தெரிவே னளப்பரிய
 பஞ்சலட் சணமுமறிவேன்
அரசரி லுயர்ந்ததுரை யாரெனிற் சேதுபதி
 யாகுமவன் பணிவாயிலில்
அகத்திய முனிக்குமதி கங்கற்ற பேர்களா
 யாயிரங் கவிவாணருண்
டவரிலொரு சிறவன்யான் பாடவறிமையனென்
 றகற்றிவிட் டார்களென்னை
யாதலாற் பூமியிற் சஞ்சரித் தேனின்
 னகந்தனின் மகிழ்ந்தருள்வையே.

9. கல்விச் சமுத்திரங் கமலா லயர்தமிழ்க்
கடன்மடை திறந்தவெள்ளங்
கற்பனை பிறப்பிடங் கலைமக ளிருப்பிடங்
கவிமாரி பொழியுமேகம்
சொல் விற் பனபவிசையு மதுரக் களஞ்சியந்
தோன்று கற்பூரதீபஞ்
சகிர்தருணை வவதானி சரவணப் பெருமாள்கை
தொட்டெழுதி விட்டசனது
வில்லுக் கராச்சுனன் சொல்லுக் கரிச்சந்த்ரன்
வெற்றிக்கு விக்ரமார்க்கன்
வித்தைக் ககத்தியன் முத்துக் கருப்பண
[illegible]
மல்வெற்றி யாயென்று தாயென்று நீயென்று
மாலென்று வேலென்று கா
பாவென்று காவென்று நாவொன்று பாவொன்று
வருகின்ற தருள்புரியவே.

10. எவ்வன மனோன்மணி பதப்பணிகொள் சேதுபதி
யிறைவன்மணி வாசன்மணிவா
யிலகுமணி சைவமணி சோமசுந் தரகுருவென்
ஐயன்மகிழ் சிந்தாமணி
செவ்வசன மொழிதமிழ்ச் சரவணப் பெருமாள்
சிரோமணி யனுப்புமோலை
செய்பதிரு மலைராயன் பட்டணத் தவரெலாஞ்
சிரசுமேற் கொண்டுகொண்க
இவ்வூரில் வந்துதிரு மலைராய னைப்போற்றி
யிலகுகவி காளமேக
மெமகண்ட மொருதினுசு பாடினு மும்மிங்
கிரெட்டு வகைபாடுவோம்
ஒவ்வித்தை யறிந்தவன தனவரிசை யுதவினு
லுமதுகுடி வாழிவாழி
யுதவா திருப்பிரெனி லுமதுபட் டணமின்னு
மொருமிக்க மண்மாரியே.

11. அவ்வொன்று மவதானி தமிழொன்று வெகுமானி
யறிவொன்று சேதுபதிபால்
அணியொன்று வெகுமானி சோமசுந் தரகுருவி
னருளொன்று மடிமைவெள்ளைக்

கவ்வொன்று மலைநாவ னதியொன்று கோத்திரன்
கணியொன்று குவளைமார்பன்
கதியொன்று சரவணப் பெருமாட் கவிச்சுரன்
கையொன்று மெழுதுமோலை
தெவ்வொன்று சமர்வென்று திகழ்மகம் மதுதம்பி
தீரனெதிர கொண்டகொணக
செழுஞ்சென்ன பட்டண மதிற்கேகு வோம்வழிச்
செலவுக்கு வேண்டுமதனால்
உவ்வொன்று யவ்வொன்று லவ்வொன்று டவ்வொன்று
சவ்வொன்று மவ்வொன்றுவவ்
வொன்றுரவ் வொன்றரவ் வொன்றுகவ் வொன்றுணவ்
வொன்றுவர விடல்வேண்டுமே.

செல்வத்தைப் பற்றி வெகுசாதுரியமாய் சொல்நயம், பொருள் நயத்துடனும், ஆழ்ந்த அறிவுடனும இகழும் ஞானிகளும், அதைப் புகழும் கவிஞர்களும் ஒருவேளை சந்தர்ப்பம் பலித்து தாங்கள் திரவியமடைய வழிகண்டால் இவ்வாசைவலைகளுள் பெரும்பாலும் சிக்கிவிழுகின்றனர். செலவம் பெறச் சக்தியைப் படைத்த எம்மனுஷனும அதை வேண்டாமென மறுத்ததாகக் காண்பதருமை. மன அமைதியையும் சாவகாசத்தையும தரும் தரித்திரத்தை இச்சித்துத் தனதிரவியத்தைச் சூறையிட்டவர்களை யுங் காணோம். ஆனால சிலர் கௌரவமும் செலவமும் சம்பாதிப் பதற் கனுகூலமான சந்தர்ப்பங்களை நழுவவிட்டு, அதிர்ஷ்டம் அன்புடன் அளிக்கும் ஐசுவரிதத்தை அசட்டைசெய்து அகற்றியிருக்கின்றனா என்பது உணமையே. இவாகள் செல்வம சேர்ப்பதற்கு அவசியமான உழைப்பையும் கவலையையும் அனுசரிக்க அஞ்சினவர்களேயன்றி செல்வம என்னும் மலையின் சிகரத்தை யடைய இச்சையில்லாதவர்க ளென்பதற்கிடமில்லை. சரீர உழைப் பாலன்றி அடையக்கூடாததை வேறுவிதமாய்ப் பெற்றுக்கொண்டால் அதை அனுபவித்தல் அவர்களுக்குச் சம்மதமே.

ஆதலால், செல்வத்தின்மேல் சிந்தனை செலுத்தலாகாது என்னும் சித்தாந்தத்தின் கருத்து யாதெனில், செலவம் நம்மைவிட்டுச் செல்லும்பொழுதே அது பயனபடுவதேயன்றித் திரவியம் நம்மிடமிருக்கும்போது பயனற்றது. அதனால வாங்கப்படும் பொருள் தான் நமக்கு உபயோகப்படுவன. செல்வம் சரீரசுகத்திற் கெவ்வளவு அனுகூலம் அளிக்கினும நோயையும வலியையும் தீர்க்கச் சக்தியற்றது. அதிக சுகஜீவனம்செய்வதால் தனவான்கள் சரீரம் பலவீனமாயும் நோய்க்கிடமாயும ஆக்கிவிடுகிறது. செல்வம் மனதை விசாலப்படுத்தி, உணரும் வல்லமையை அதிகரித்து, மனோ

பாவஞ் சக்தியை மேல்படுத்தியதாக நாம் எப்பொழுதும் கேட்டதில்லை, அவ்வாறின்றி, தனவான்கள் முகஸ்துதி செய்வோரால் சூழப்பட்டும், உழைக்க அவசியமில்லாதவராயு மிருத்தலால், தம் பொய் எண்ணங்களை உண்மையென்று நம்பியும் தம் மடமையை திடம் செய்தும் வருவதற்கு செல்வம் சகாயமாயிருக்கிறது. ஆதலால், பணத்தாசை மனதைப்பற்றுங்தோறும் நாம் நிதானித்து யோசித்து நடக்கவேண்டும்.

---

## தரித்திரம்.

உழைக்கும் வழியுணராது பிழைக்க வழிதேடும் தப்பிலிகளாக உடம்பெடுத்தவர்களெல்லாம் ஓடெடுத்துத் திரிந்து, உழுகிற காலத்தில் ஊர்வழிபோனால் அறுக்கிறகாலம் அழுதாலும் வாராது, என்று சொல்லியிருப்பதுபோல், குண்டாக்கரணம் போட்டாலும் பிண்டாச் சோற்றுக்கு வழியில்லாமல், எட்டாத பழத்தைப் பார்த்துக் கொட்டாவி கொள்வதுபோல பெருஞ்செலவ முடையவர்களைப் பார்த்துப் பெருமூச்செரிந்து, குழிப்பிள்ளையை நரிசுற்றுவதுபோல அவர்களை விடாதடுத்திருந்தும்,

"அன்னமுணற் கரிதாம்ஆறு மூன்றும் மரிதாம்
பன்னமரிதாம் பகலின்கண்—துன்னிசியில்
நேய மரிதாகு நித்திரைக்குப் பாயரிதாம்
காயக் கரிதாங் கலை."

பகற்காலத்தில் உண்ணுதற்கு அன்னமும், அறுசுவைக் கறிகளும், நெய், தயிர், பால் ஆகிய இம்மூன்றும், வெற்றிலையும் அரிதாகும். இருளடர்ந்த இராக்காலத்தில் மனைவி யருமையாகும். நித்திரைக்குப் பாயும், உடம்பு மூடுதற்கு ஆடையுமரிதாகும் என்று தம் வறுமையைப் பற்றி முறையிடுவர்.

"கவி கற்றவர்க்குங் கணிகற்றவர்க்குங் கம்மாளருக்கும்
ஓவிகற்றவர்க்கு முபாத்திகளுக்கு முயர்ந்த மட்டும்
சுவிவைக்கு மொட்டர்க்குங் கூத்தாடிகட்குங் குருக்களுக்கும்
இவரெட்டுப் பேர்கட்கு நீங்காத்தரித்திர மென்றைக்குமே."

கவிசொல்லக் கற்றவர்களுக்கும், சோதிடம் கற்றவர்களுக்கும், கம்மாளருக்கும், சித்திர மெழுதுவோர்க்கும், உபாத்தியாயர்களுக்கும், உயர்ந்த அளவு சுவர்வைக்கும் ஒட்டருக்கும், கூத்தாடிகளுக்கும், குருக்களுக்கும் இவரெட்டுப் பேர்களுக்கும் தரித்திரம் நீங்காமல் குடிகொண்டிருக்கும்.

செல்வமில்லாதவர் உலகத்திலே நடைப்பிணமாவர். எல்லா நன்மையுமுடையவராயினும் பொருளில்லாதவரை அவருடைய தாய், தந்தை, மனைவி, மைந்தர் முதலானோரும் அவமதிப்பர்.

"நிலைதளர்ந் திட்டபோது நீணிலத் துறவுமில்லை
சலமிருந் தகன்றபோது தாமரைக்கருக்கன் கூற்றம்
பலவனமெரியும்போது பற்றுதீக் குறவாங்காற்று
மெலிவது விளக்கேயாகின் மீண்டமக் காற்றேகூற்றம்."

"தரித்திர மிக்கவனைப்பினை யொடுக்கிச் சரீரத்தை யுலர்த்தவாட்டும்
தரித்திரமளவாச்சோம்பலையெழுப்புஞ் சாற்றருமுலோபத்தை மிருக்கும்
தரித்திரந்தலைவன் றலைவியர்க்கிடையே தடுப்பருங்கலாம் பல விளைக்கும்
தரித்திரமவமானம் பொய்பேராசை தருமிதிற்கொடியதொன் றிலையே."

"ஆவின மழைபொழிய வில்லம்வீழ
அகமுடையாள் மெய்நோவ வடிமைசாவ
மாவீரம் போகுதென்று விதைகொண்டோட
வழியிலே கடன்காரர் மறித்துக்கொள்ளச்
சாவோலை கொண்டொருவ னெதிரேசெல்லத்
தள்ளவொண்ணா விருந்துவரச் சர்ப்பந்தீண்டக்
கோவேந்த ருழுதுண்ட கடமைகேட்கக்
குருக்களோ தட்சணைகள் கொடுவென்றாரே."

"கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான்
குடிக்கத்தான் கற்பித்தானா
இல்லைத்தான் பொன்னைத்தா னெனக்குத்தான்
கொடுத்துத்தா னிரட்சித்தானா
அல்லைத்தான் சொல்லித்தா னழைத்தான்
ேவைத்தானையோவெங்கும்
பல்லைத்தான் றிறக்கத்தான் பதுமத்தான்
புவியிற்றான் பண்ணினானே."

"வஞ்சகர்பா னடந்தலைந்த காலிற்புண்ணும்
வாசற்றா முட்டுண்ட தலையிற்புண்ணும்
செஞ்சொல்லை நினைந்துருகு நெஞ்சிற்புண்ணும்
தீருமென்றே சங்கரனபாற் சேர்ந்தேனப்பா
கொஞ்சமல்ல பிரம்படியின் புண்ணும்வேடன்
கொடுங்காலா லுதைத்தபுண்ணுங் கோபமாகப்
பஞ்சவரி லொருவன்வில்லா லடித்தபுண்ணும்
பாரென்றே காட்டிநின்றான் பரமன்றானே."

என்ற வண்ணமாக உதர நிமித்தத்தினால் எளிய குடி ஜனங்கள் மிகவும் துக்கிக்கின்றனர்.

சத்திமுத்தப்புலவர் வறுமையினால் இருக்கவிடமும், உடுக்க ஆடையும், உண்ணச் சோறுமின்றி அலைந்து திரிந்த காலத்தில் பாடியதாவது:—

"நாராய் நாராய் செங்கா ணாராய்
பழம்படு பனையின் கிழங்குபிளந் தன்ன
பவளக் கூர்வாய்ச் செங்கா ணாராய்
நீயுநின் மனைவியுந் தென்றிசைக் குமரியாடி
வடதிசைக் கேகுவீ ராயின்
எம்மூர் சத்திமுத்த வாவியுட் டங்கி
நனைசுவர்க் கூரை கனைகுரற் பல்லி
பாடுபார்த் திருக்குமெம் மனைவியைக் கண்டே
எங்கோன் மாறன் வழுதி கூடலில்
ஆடை யின்றி வாடையின் மெலிந்து
கையது கொண்டு மெய்யது பொத்திக்
காலது கொண்டு மேலது தழீஇப்
பேழையு ளிருக்கும் பாமபென வுயிர்க்கும்
ஏழை யாளனைக் கண்டன மெனுமே."

"ஆடெரி படர்ந்த கோடிய டுப்பில்
ஆம்பி பூம்பத் தேம்பசி யுழல
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைதொறுஞ் சுவைதரும் பால்காணுமற்
குழவிதாய் முகம்நோக்க மனைவியென் முகம்நோக்க-யானும்
உன்முகம் நோக்கி வந்தனன் குமணா."

என்பதனுள், ஒரு வித்வானானவர் "என் வீட்டில் அடுப்பு மூட்டவில்லை, என் வயிற்றில் பசி அடிக்கிறது, பிரசவித்த என் மனைவிக்குத் தாரகம்பண்ண வழியில்லை, பிறந்த குழந்தைக்குப் பாலுமில்லை" யென்று குமண ராஜனிடத்தில் விசனப்பட்டாரெனத் தெரிகிறது. இன்னும்,

"வணக்கம்வருஞ் சிலநேரங் குமரகண்ட
வலிப்புவருஞ் சிலநேரம் வலிபச்செய்யக்
கணக்குவருஞ் சிலநேரம் வேட்டைநாய்போற்
கடிக்கவருஞ் சிலநேரம் கயவர்க்கெல்லாம்
இணக்கம்வரும் படிதமிழைப் பாடிப்பாடி
யெத்தனைநாட் டிரிந்துதிரிந் திளைப்பேனையா
குணக்கடலே யருட்கடலே யசுரரான
குரைகடலை வென்ற பரங்குன்றுளானே."

என்று செல்வருடைய மனம் சமயத்திற்குத் தக்கதாக மாறும் சுபாவமுடையதாதலால் அவர்கள் மனதை இளக்கும்படி பாடித் திரிந்து பாடுபட்ட ஒருவர் பாடியிருக்கிறார்.

ஒருவன் தன் உத்தியோகமிழந்தபோது, குற்றம் தங்கின உத்தியோகம ஒன்றுமே நீங்கிவிட்ட தல்லாது என்னுடைய அறிவு, ஒழுக்கம், நற்குணங்களோடு வார்த்தை சொல்ல நாவிருந்தேன், எனக்கு நாவுமிருந்தது. பழைய சிநேகிதரும் இருந்தார்கள். அவர்களுக்கு நடந்துவரக் கால்களுமிருந்தன. யாதொரு தடைகளுமின்றி நமக்கிடமாயிருக்கிற வீடும் திறந்திருக்கின்றது. இப்படிக்கெல்லா மிருக்க அந்த நட்பினர் வாராமைக்குக் காரணமென்னோ? என்னும் கருத்தை யடக்கிப் பாடியதாவது:—

"தோமிருந்த தொழிலொன்றே தொலைந்ததன்றி
யறிவொழுக்கஞ் சுகுணமோடு
நாமிருந்தோ முரையாட நாவு மிருந்தது
பழைய நட்பினோரும்
தாமிருந்தாரவர் நடக்கத்தாளு மிருந்தனயேதுந்
தடையொன் றின்றித்
தேமிருந்த நம்மனைதான் றிறந்திருந்த தவர்வாராச்
செய்கை யென்னே."

முற்காலத்தில் தடியாலடித்துத் துரத்தினாலும் போகாமல் நம்மைத் தரிசிக்க வந்தோர்க்கு இப்போது தாம்பூலம் வைத்து விருப்பி அழைத்தாலும் சாக்கும்போக்குஞ் சொல்லி வராதொழிந்தார்கள். உலகத்தின் பொய்ச் செயல்களெல்லாம் கண்டுகொண்டோம். இனி நமது கடவுளினை திருத்தொண்டு பூண்டு கண்டோம். என்று ஒரு சீமான் தமது நிலை மாறி வறுமையான காலத்தில் பாடியதாவது:—

"தண்டுகொண் டோட்டினும் போகாது நம்மைத் தரிசிக்கவே
பண்டுவந் தோர்க்கின்று தாம்பூலம் வைத்துப் பரிந்தழைத்துங்
கிண்டுமிண்டுஞ் சொல்லி வராதொழிந்தனர் செய்கையெல்லாம்
கண்டுகொண் டோமினித் தொண்டுகொண் டோங் கடவுளுக்கே."

## யாசிப்பவர்கள்.

"எண்சாணுடம்பிடியனுக் கிங்கிரத்தலுனி லேழ்நடையாகும்
கண்காணுமுன் னைந்தாகுங் காணில் நான்காங் கையேந்தில்
தண்கார்நிதியே யெனவோதிற் றவர்போன் மூன்று மிரண்டாகும்
நண்பாவீதலிலை யென்றா னமன்பாலாம் பொன்பாலுயிரே."

இவ்வுலகத்தில் தரித்திரனுக்கு எட்டுச்சாண் அளவுகொண்ட உடம்பு யாசித்தலை நினைத்தவளவில ஏழு சாணாகும். யாசிக்கும் பொருட்டு நடக்குங்கால் ஆறு சாணாகும். கொடையாளியைக் கண்ணினால் காண்பதற்கு முன்னே ஐந்து சாணாகும். கண்டால்

நான்கு சாணுகும். கையையேந்தினால் தவசிகள்போல் மூன்று சாணுகும். குளிர்ந்த மேகமே, நவநிதியே, என்று அவனைப்புகழ்ந்து சொல்லுங்கால் இரண்டு சாணுகும். நண்பா, கொடுத்தலில்லையென்று சொல்வானுயின் அந்த யாசகனது பொன்னிடத்துள்ள உயிரானது யமனிடத்திற் சேரும்.

வறுமையானது:—

"தாங்கொணு வறுமைவந்தாற் சபைதனில் செல்லநாணும்
வேங்கைபோல் வீரங்குன்றும் விருந்தினர் காணநாணும்
பூங்கொடி மனையாட்கஞ்சும் புல்லருக் கிணங்கச்செய்யும்
ஓங்கிய வறிவுகுன்றும் உலகெலாம் பழிக்குந்தானே."

அந்தோ இவ்வித வறுமை வந்துவிட்டால்:—

"வனப்பழிக்கும் வாய்மை நலனழிக்கும் மானம்
நினைப்பழிக்கும் நெஞ்சஞ் சிதைக்கும்—வினைம்புகுத்தும்
காதலி காந்தர்க்குள்கலாம் விளைவிக்குங் காசினியில்
வேதனைகள் செய்யு மிடி!

என்ற உண்மை வாக்கினும் கூட "வறியோர்க்கழகு வறுமையிற் செம்மை" என்ற வாக்கை குசேலர் முதலியவர்களின் சரிதங்களால் படித்துணர்ந்துள்ளோம்.

"புல்லரிடத்திற்போய் பொருள் தனக்குக் கையேந்தி
பல்லைமிகக் காட்டிப் பறக்க விழிக்கிறேன் டி!
பல்லைமிகக் காட்டாமல் பறக்க விழிக்காமல்
புல்லரிடம் போகாமல்—என் கண்ணம்மா
பொருளெனக்குத் தாராயோ!"

என்று சித்தர் பாடியிருக்கின்றனர்.

## பஞ்சதந்திரம்.

சுதியிலார் பாட்டுந் தங்கள் சுற்றமில்லாத நாடும்
மதியிலார் கவியு நல்லமனைவி யில்லாத வீடும்
பதியிலா ரழகும் பாழே பார்க்கிலிங் கிவைபோலல்ல
நிதியிலார்க் கெவையும் பாழே நினைக்கின் மூவுலகினுள்ளும்.

கதிரவ னிலையேற் கண்ணிற் காண்பன மறையுமாபோல்
நிதிய மொன்றிலையேல் யார்க்கு நீதிமா ஞானம்போதம்
துதிபெறு கீர்த்தியாண்மை சூழ்ச்சி மந்திர விசாரம்
சதுரபி மானமெல்லாந் தன்னிலே மறைந்து போமால்.

வறுமையாலே யாசிக்க வருமவர் தமக்கு மாவி
இறுமவர் தமக்குஞ்செய்யு மியற்கை யொன்றுமே தென்னில்
உறுதிபோம் கைகால்சோரு முள்ளமுங் கலங்குமெய்யும்
குறுகியே நடுங்கும் வாயுங் குழறுநல் லறிவும்போமே.

பொருளிலார்க் கின்பமில்லை புண்ணியமில்லை யென்றும்
மருவுறு கீர்த்தியில்லை மாந்தருட் பெருமையில்லை
கருதிய கருமமில்லை கதிபெறு வழியுமில்லை
பெருநிலத்திடை நடக்கும் பிணமெனப் படுவரன்றே.

ஆதலாற் றருமவாற்று லரும்பொரு ளீட்டிமேலும்
ஊதியங் கொண்டறஞ்செய் துரியவப்பொருளைக் காத்தல்
நீதியிவ்வாறு செய்யார் நிதியமுந் தேய்ந்துமற்றும்
ஓதுமெந் நலமுமின்றி யுறுதுய ரடைகுவாரே.

ஆதலால், அறிவும், ஆற்றலுமுடைய அறிஞர்கள் தமது சிறு பிராயத்திலேயே விடாமுயற்சியுடன் உழைத்து புண்ணியவசத்தினால் பொருளைச் சம்பாதித்து அதனால் புகழையும் கீர்த்தியையும் அடைந்து வெறுமையைத் தரும் வறுமைக்கு நீங்கி வாழ முயற்சிப்பர். அவ்வித சுயநம்பிக்கையும், சுய மதிப்புமுடைய புத்திசாலிகள் மற்றவர்களிடம்சென்று தமது பல்லைக்காட்டி நிற்க ஏதுவிராது.

"சினக்கதிர்வேல் கண்மடவாய் செல்வர்பாற் சென்று
ஈயெனுக்கென்னு மிம்மாற்றங் கண்டாய்—தனக்குரிய
தானந் தடைத்துத் தருமத்தை வேர்ப்பரித்து
மானந் துடைப்பதோர் வாழ்."

## கடன்.

"வரவுக்கு மேலே செலவு செய்யப் புகுவோர் வட்டிக்குக் கடன்படத் தலைப்பட்டுப் பெருந் துன்பத்தையும் அவமானத்தையும் அடைவார். அவர்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் இன்பமே இல்லை. பெருத்த செல்வரையும் சீக்கிரம் தரித்திரராக்கும் சக்தி அதற்குண்டு. ஏனெனில் "வட்டிக்குத் தூக்கமில்லை" ஆரம்பத்தில் வெகு அற்பமாகத் தோன்றும் வட்டியானது இரவும் பகலும் வளர்ந்துகொண்டேபோய் கடைசியில் பெரியஐசுவரியத்தையும் ஆழ்த்திவிடும்.

பெரும் உத்தியோகம் வகிக்கும் பலகற்றறி மூடருங்கூட வட்டிக் கணக்கை எழுதிக் கணித்துப் பார்க்கச் சோம்பி அற்பமென அலட்சியஞ்செய்து, அகப்பட்டுக்கொண்டு கடன்வாங்கி கடுமெவிழி

விழிக்கிறதைக் கண்டிருக்கிறோம். இவர்களுக்கு ரூபாய் 1-க்கு ஒரு அணா வட்டி, 100-க்கு வட்டி ஆறேகால் என்பதின் ஆந்திரீக அர்த்தம் புலப்படாததால் 1-அணா சாமானுக்கு வெற்றிலைபாக்குச் செலவு, ஆறேகால் ரூபாய் ஒரு [illegible]யச்செலவு. இந்த அற்பத் தொகையைக் கொடுப்பதற்கு பெருந்த வரும்படியுள்ள எனக்குப் பாரமோ? இந்த வட்டியையும் முதலையும் சில மாதங்களுக்குள் கொடுத்து சரிபண்ணிவிடலாமென மேலிகழ்ச்சியுடன் தீர்மானம்பண்ணி வாக்குக் கொடுத்துவிட்டு, கொடுக்குங்காலம் வரும்பொழுது திகைக்கின்றனர்.

"ஆட்டுக்கு எட்டுச்சட்டி வாங்கி, சட்டி ஒன்று எட்டுத்துட்டாக விற்றாலும் வட்டிக்கு மிஞ்சாது வாவில்" அதாவது, எந்தப் பெருத்த வியாபாரத்திலும் வரும் ஊதியத்தைவிட வட்டிவரவே அதிக ஆதாயந்தருமென்பது அனுபோகஸ்தர் அறிந்த விஷயம். அப்படியிருக்க, மேலிகழ்ச்சியினாலும், மௌடீகத்தினாலும், பணத்தைப் பணமென்று மதிக்காமல் அனேகர் மகா படாடோபமுடையவர்களாய் சுபாசுப கருமங்களை பிறர்மதிக்க நடத்தவேண்டுமென்றெண்ணி கடன்பட்டு, சம்பிரம விருந்துகள் கொண்டாடி, வட்டி வளர்ந்தபின் கொண்ட கடனை கொடுக்க முடியாமல் திண்டாடி, கடன்கொடுத்தவன் வாயில் வந்தபடி பேச அவமானமடைந்து தங்கள் தாவர சங்கமப்பொருளை விற்றுக்கொடுத்துவிட்டு அன்னத்திற்கு அலைந்து திரிகின்றனர். வேறுசிலர், பிறர்பார்த்து பிரபல்யமானவர்களெனத் தம்மை மெச்சிப் புகழவேண்டும் எனனும் எண்ணங்கொண்டு விதவிதமான ஆடை, ஆபரணங்களுக்காகவும், வண்டி குதிரைகளுக்காகவும், மாடமாளிகைகளுக்காகவும், தோட்டம், புஞ்சை முதலியவை வாங்குவதற்காகவும் கடன்படுகின்றனர். வட்டி வளர்ந்தபின் கடன்தீர்க்கச் சக்தியற்று வாங்கினபொருளையும் கொள்வாரில்லாமையால் ஒற்றிவைத்தும் போதாமையால் தங்களிடத்தில் முன்னுள்ள தாவர சங்கமப் பொருளையும் விற்றுக்கொடுத்துவிட்டு வறியவர்களாய் வருந்துகின்றனர். பிறர்பார்த்து ஆனந்திக்கவேண்டுமெனக் கருதி செய்யும் மதிகேட்டினால் தாங்கள் துன்பக்கடலில் மூழ்கியும், தங்கள் கடனை நினைந்து நினைந்து நெஞ்சும் திடுக்குத்திடுக்கென்ன பெருமூச்செறிந்து திரியும் பேதைமக்களின் மதியை என்னென்று சொல்லுவோம்!

வேறு சிலர், நிலத்திற்கென்றும், மாட்டிற்கென்றும், கலப்பைக்கென்றும், விதைக்கென்றும், போஜனத்திற்கென்றும் கடன்பட்டுப் பயிர்த்தொழில் செய்கின்றார்கள். அறுப்புக்காலத்தில் கடன்கொடுத்தவர்கள் வந்திருந்துகொண்டு ஒற்றைக்கு இரட்டையாக அளந்துகொண்டுபோக, தாங்கள் போஜனத்திற்கு முட்டுப்

பட்டு வருந்துகின்றனர். வாணிபஞ் செய்யத் தலைப்படும் வேறு சிலர், கடன்சொல்லிச் சரக்குகளை வாங்கி விற்க முயலுகின்றனர். கடன் கொடுத்தவன் வட்டி வாசிகளை அச்சரக்கின் விலையோடு சேர்த்துக் கொடுப்பதால், சரக்கு சரியானபடி விற்பனையாகாமல் நஷ்டமடைகின்றனர்.

வேறு சிலர், தாம் சிறிதும் கடன்படாதவர்களேயாயினும், கடன்படத் தலைப்பட்டு பிறர்பொருளை நம்பித் திரியும் பித்தரோடு சிநேகம் செய்து அவர்களுக்காகப் பிணைநின்று கடைசியில் அந்தக் கடனைத் தாங்களே கொடுக்க வேண்டியவர்களாகி தங்கள் சொத்தெல்லா மிழந்து பெண்டிர் பிள்ளைகளுடன் பசிநோயால் வருந்துகின்றனர். என்ன பரிதாபம்!

கடன்பட்டுத்தன் குடியைக் கெடுத்துத் தருமஞ் செய்கின்ற சிலருமுண்டு. பொருளில்லாதவன் கடன்வாங்கித் தருமம் செய்வது தருமமன்று. அதர்மமே. தனக்குப் போய்த் தானம் என்பதின் கருத்தை இவர்கள் அறியார்போலும்! "Generosity must be mixed with justice." என் செய்வேன், என் செய்வேன், என்று பெருமூச்செறிந்து கவலைக்கடலில் மூழ்கி, தன் மனைவி மக்களோடு கஷ்டப்படும் ஒருவன் கடன்வாங்கித் தருமஞ் செய்வது நியாயமன்று, புண்ணியமுமன்று. ஆனால் தனது பெண்டுபிள்ளைகளுக்கும் தனக்கும் செய்யும் மகாதுரோகம் இதுவாகும்.

வேறு சிலர், பலர் குடியைக் கெடுத்துத் தாமே வாழநினைந்து அவரிடத்தே கடன் வாங்கிக்கொண்டு அவரை வஞ்சிக்கும்பொருட்டு எல்லாப் பொருளையும் தங்கள் மனைவி, பந்துக்களுள் எவரிடத்தும் வைத்துவிட்டு இன்சால்வென்ஸிக் கோர்ட்டுக்குப்போய் அவயங் கொடுத்துக் காப்பாற்றக் கேட்கின்றனர். இது மகா கொடிய பாவமும் நம்பிக்கைத் துரோகமுமாகும். வாங்கின கடனைக் கொடாதவனுடைய புண்ணியமெல்லாம் கடன் கொடுத்தவனைச் சாரும் என்பது தர்மநெறி.

எத்தனையோ உத்தியோகஸ்தர் வரவுக்குமேல் செலவுசெய்து கடன் வாங்குவதினாலும், கூடாத நட்பினரோடு சேர்ந்து அவர்களுக்காகப் பிணைப்ப[illegible] கையெழுத்துக் கொடுப்பதினாலும், கடன் தீர்க்க வழியில்லாமல் உத்தியோகத்தைவிட்டு ஒழித்துக் கொண்டு திரிகின்றனர். வேறு சிலர் உத்தியோகமிழந்து ஊரைவிட்டு ஓடிப்போகின்றனர். என்ன பரிதாபம்! வரவுக்கேற்ப மட்டாக செலவுசெய்து மு[illegible]ன்று வாழுதல் இவர்களுக்கு அவமானமாம். என்ன பைத்தியம்!

இவ்வளவு துன்பங்களையும் விளைவிக்குங் கடனைப் பற்றிக் கவிச்சக்ரவர்த்தியாகிய கம்பரும் தாம் பாடிய இராமாயணத்தில் இராமபாணம் இராவணனை ஊடுருவச் செல்லுகையில் அவன் தூண்டில் முள்ளில் புகட்டியிருந்த விஷத்தையுண்ட மீனைப்போலவும், கொடிய அக்கினியில் பட்ட மெழுகைப்போலவும், படத்தையுடைய சர்ப்பத்தின் வாயிலகப்பட்ட தேரையைப்போலவும், கடன்பட்டவர்கள் மனதைப்போலவும் கலங்கினான் என்னுங் கருத்தை யமைத்து,



"விடங்கொண்ட மீனைப்போலும் வெந்தழல் மெழுகுபோலும்
படங்கொண்ட பாந்தள்வாயிற் பற்றிய தேரைபோலும்
திடங்கொண்ட ராமபாணஞ் செருக்களத் துற்றபோது
கடன்கொண்டார் நெஞ்சம்போலக் கலங்கினா னிலங்கைவேந்தன்."

எனக்கூறினர்.

"ஆனமுதலில் அதிகஞ் செலவானால்
மானமழிந்து மதிகெட்டுப் போனதிசை—எல்லார்க்கும்
தீயனாய் யேழ்பிறப்பும் கள்ளனாய்
நல்லார்க்கும் பொல்லனாய் நாடு."

## கடனுக்குத் தப்பும் வகை.
## (How to Keep out of Debt.)

சம்பாதித்த பொருளில் ஓர் பாகத்தை மிச்சம்பிடித்துச் செலவு செய்வதே கடனுக்குத் தப்பும் வகையாம். அப்படி நடந்துகொள்ளும்படி அநுசரிக்க வேண்டிய விஷயங்களாவன:—

(1) (Budget) வரவையும் செலவையும் திட்டவட்டமாய் மதிப்பிட்டுக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு ராஜ்யத்திலும் (Budget) என்னும் அரசிறைக் கணக்கு அதாவது வருஷவாரி வரவு செலவு கணக்குண்டு. அப்படியே ஒவ்வொரு குடும்பத்திற்கும் வரவு செலவு கணக்கிருக்கவேண்டும். அதில் குறிப்பிடவேண்டிய முக்கியமான விஷயங்கள் யாதெனில், வீட்டுக்குடிகூலி, வீட்டுக்குரிய சாமான்கள், வரிகள், வஸ்திரங்கள், போசன சாமான்கள், படிப்பு, தர்மம், சில்லறைச் செலவுகள், மீதமானது என்பவைகளே. ஒவ்வொரு விஷயத்தையும் சரியானபடி யோசித்து முன்னதாகவே திட்டஞ்செய்துகொள்ளவேண்டும்.

(2) Accounts: ஒவ்வொருவரும் வரவு செலவுக் கணக்கு வைத்துக்கொள்வதினால் தமது காரியம் எப்படியிருக்கிறதென்பது நன்றாய் விளங்கும். கணக்குப் புஸ்தகத்தைத் திறந்து தன் கண்முன் வைத்துக்கொள்ளுவதைவிட வேறொன்றும் மனிதனைச் சரிப்படுத்தாது என்று ஒருவர் சொல்லுகிறார்.

(3) Cash Payment: தான் வாங்கும் பொருட்களுக்கெல்லாம் அவற்றின் விலையை உடனே கொடுப்பவன்தான் வாங்கியவைகள் தனக்கு அவசியமாவென்று கவனிக்கிறான். கையில் பணங்கொண்டு போகிறவன் எங்கே நல்ல சாமானிருக்கிறது. எங்கே நயமாய் விற்கிறது என்று பார்த்துத் தேர்ந்து தெளிந்து வாங்கலாம். கடைக்காரனிடம் பதிவுச்சீட்டு வைத்துக்கொண்டு கடன் வாங்குகிறவன் அவன் சொல்லுகிற விலைக்கு அவன் கொடுக்கிறவைகளை மாத்திரம் வாங்கக்கூடும்.

(4) Avoid unnecessary expenses: ஒரு சாமானை வாங்கும்போது இதை வாங்கப் பணமிருக்கிறதாவென்று கவனிக்காமல் இந்தச் சாமான் இல்லாமல் காரியம் நடக்காதாவென்று கவனிக்கவேண்டும். அப்படியே கலியாணச் செலவுகளையும் கணக்குப் பார்த்து பிறர் மெச்சுவதற்காகவன்று, காரியம் கைகூடுவதற்கவசியமானவை யின்னவையென்று கணித்துப் பார்த்துச் செலவு செய்வதே புத்தியாகும்.

(5) Savings Bank: அடிக்கடி வரும் வரும்படியில் ஓர் பாகத்தை பிற்கால உபயோகத்தின் பொருட்டும் அவசரத்திற்குதவும் பொருட்டும் மீதி பிடித்து வைத்து சர்க்கார் சேவிங்ஸ் பாங்கியில் போட்டுவைத்தால் எந்தச் சமயத்திலும் உபயோகித்துக்கொள்ளக் கூடியதாயிருப்பதுமன்றி அதிகப் பத்திரமாயுமிருக்கும்.

(6) Calculate before borrowing: அவசர நிமித்தமாக வாவது, வியாபார நிமித்தமாகவாவது கடன்படத் தலைப்படுவோர் முன்னதாகவே இந்தப் பணம் நமக்கு அவசியமா? இந்தக் கடனைத் தீர்ப்பதற்குப் பொருள்வரும் வழியுண்டா? பொருள் விரைவில் வருமா? தாமதத்தில் வருமா? தாமதத்தில் வருமாயின், வட்டி வளர்ந்துவிடுமே, பொருள் வாராவிடில் இக்கடனைத் தீர்க்க வேறு வழிண்டோ? வட்டிக்குக் கடன் வாங்குவதைவிட இருக்கும் தாவர சங்கமப்பொருளை விற்றுச் செலவு செய்தால் வட்டி மிஞ்சுமே, இப்படிச் செய்யாவிடில் வட்டி வளர்ந்துப்பின் நமது சொத்து முழுவதும் போய்விடுமே, அதன்பின்பு ஜீவனத்துக்கு என் செய்யலாம் என்று பல விஷயங்களையும் தீர்க்க ஆலோசித்து அதன்பின்பே கடன்படலாம்.

(7) Learn to say "No". அவசரமில்லாததை வாங்க நேரிடும்பொழுது இல்லையென்று சொல்லு. வீண் வேடிக்கைகளில் பணம் செலவிட ஏவப்படும்பொழுது இல்லையென்றுசொல். துன்மார்க்கக் காரியத்தைச் செய்ய ஆசையுண்டாகும்போது இல்லையென்று சொல். சோம்பலினாலும், சுகபோகத்தினாலும், மூடத்தனத்தினாலும், கெட்ட வழக்கத்தினாலும் பணஞ்செலவிட நேரும்போது உடனே எரிச்சலோடு இல்லையென்று சொல். துவக்கத்தில் சற்று வருத்தமா யிருந்தாலும் வரவரத் தைரியமுண்டாகும். ஆனால் லோபிகளைப்போல் பொருளாசையால் பணத்தைக் குவித்து வைக்காமல் எச்சரிக்கையாய் நடந்து நன்மையான காரியங்களில் செலவுசெய்யப் பிரயாசப்படவேண்டும்.

ஜான் வெஸ்லி என்னும் மகான் பணத்தைப் பற்றிச் சொல்லிய மூன்று விதிகளாவன:—

1. உன்னால் கூடியதை எல்லாம் சம்பாதி.
2. உன்னால் கூடியதை எல்லாம் சேர்த்துவை.
3. உன்னால் கூடியதை எல்லாம் கொடு.

Get all you can; Save all you can; Give all you can.

பஞ்சதந்திரம்.

"கடன்படிற் கொடுத்தசேடங் கனல்படில் விடுத்தசேடம்
விடக்தொடின் மீட்டசேட மேவலர்ச் செற்றசேடம்
படர்த்துபின் கெடுக்குமுன்னே பற்றறக் களைந்துபோட்டால்
இடம்பெறச் செல்வந் துய்த்துச் செருக்கி வாழ்ந்திருக்கலாமே."

## மூடன்.

### குசேலோபாக்கியானம்.

"வளர்நிதி படைத்தோ மென்றும் வடிவநல்
லுடையோ மென்றும்
அளவில் சேயின்றோ மென்றும் அனுபவத்
தமைந்தோ மென்றும்
இளமையிற் சிறந்தோ மென்றும் எழில்நல
முடையோ மென்றும்
உளமகிழ் கூர்வர் சற்றும் உண்மைநூ
லுணர்ச்சி யில்லார்.

### பழமொழி விளக்கம்.

"கானமருங் கவரியொரு மயிர்படினு
மிறக்குமது கழுதைக்குண்டோ
மானமுடன் வாழ்பவனை மாபுருடன்
சுயோதனனை மறந்தாருண்டோ
ஆனகஞ்சே ரொலிமுழங்குந் தண்டலையாரே
சொன்னே னரைக்காசுக்குப்
போனதொரு மானம்பின் னாயிரம்பொன்
கொடுத்தாலும் பொருந்திடாதே."

### அறப்பளீச்சுரசதகம்.

"பெண்புத்தி கேட்கின்ற மூடருந் தந்தைதாய்
பிழைபுறஞ் சொலுமூடரும்
பெரியோர்கள் சபையிலே முகடேறி வந்தது
பிதற்றிடும் பெருமூடரும்
பண்புற்ற சுற்றஞ் சிரிக்கவே யிழிவான
பழிதொழில் செய்திடுமூடரும்
பற்றற்ற பேர்க்கு முன்பிணைநின்று பின்புபோய்ப்
பரதவித்திடு மூடரும்
கண்கெட்ட மாடென்ன வோடி யிரவலர்மீது
காய்ந்து வீழ்ந்திடுமூடரும்
கற்றறிவிலாத முழுமூடருக் கிவரெலாங்
கான்மூட ரரைமூடர்காண்."

"தனக்கு வெகுபுத்தியுண் டாகினும் வேறொருவர்
தன்புத்தி கேட்கவேண்டும்
தானதிக சூரனே யாகினுங் கூடவே
தளசேகரங்கள் வேண்டும்
கணக்கின்ற வித்துவா னாகினுந் தன்னிலுங்
கற்றோரை நத்தவேண்டும்

காமினியை யொருகுடையி லாண்டாலும் வாசலிற்
கருத்துள்ள மந்திரிவேண்டும்
தொனிக்கின்ற சங்கீத சாமர்த்யனாகிலுஞ்
சுதிகூட்ட வொருவன்வேண்டும்
சுடர்விளக் காயினும் நன்றாய் விளங்கிட
தூண்டுகோ லொன்றுவேண்டும்.''

மூடன் தன் மனோரதத்தின் டம்பத்தால் கர்வங்கொள்கிறான்; தன்னைப்பற்றி நாள் முழுவதும் பேசக் கேட்பதும், பேசுவதுமே அவனுக்கு ஆனந்தம். பிறர் சொல்லும் நியாயமொழிகள் அவன் காதில் ஏறமாட்டாதாதலால், தான்பிடித்த பிடியே மெல்லெனச் சாதிப்பான். தான் கொண்ட அபிப்பிராயமே மேலென்னக் கருதி இடருக்குள்ளாகிறான். தன் தலையை அடிக்கடி நிமிர்த்து உல்லாசநடை நடந்து தன்னிலும் தாழ்ந்தவர்களையும் ஏழைகளையும் அவமரியாதையாய் நடத்துகிறான். பெரியோரையும் முதியோரையும் அலட்சியஞ்செய்வதே அவன் வழக்கம். பிறர் தன்னைப் புகழும்போது செவிகொடுத்து நம்புகிறான். முகஸ்துதி செய்பவர்களே அவன் சிநேகிதராவர்.



"கெடுமதி கண்ணுக்குத்தோன்றாது" விளக்கொளி பார்க்க விட்டிற்பூச்சி விரைந்து பறந்து எட்ட நிற்காமல் கிட்டப்போய் தீண்டா விளக்கைத் தீண்டி சுடப்பட்டுச் சிறகெரிந்து விழுவதுபோல் "கண்ணை மயக்கி உயிரை மடிவிக்கும்" மாயத்தோற்றங்களும் இவ்வுலகிலுண்டென்பதை அறியாமல் இதஞ்சொல்லி அதஞ்செய்வாரை நம்பி மோசம்போவான்.

ஒருபயனுமில்லாத விஷயங்களில் மூடன் தனது முழுத்திறமையையும், காலத்தையும், பணத்தையும் விரயம்பண்ணி மகிழ்ச்சியடைகிறான். பின்பு தான் அறியாமையால் செலவிட்ட விஷயங்களுக்காக வெட்கத்துக்குள்ளாவான். ஞானவழிகளில் ஒழுகும்போதுகூட அவன் தற்புகழ்ச்சியை நாடி மூடத்தனமாகவே உழைக்கிறான். முடிவில் அவன் சிரமத்திற்குக் கிடைக்கும் வெகுமதி அவமானமும் காரியபங்கமுமே.

அவசரப்பட்டு ஓடி ஒருவேலியைத் தாண்டினவன் அவ்வேலிக்குப் பின் மறைந்திருந்த குழியில் விழுவதுபோல, மாயத்

த்தை உள்ளதென்றெண்ணி காரியத்தின்முடிவை ஆராயாது அனி காரமாய்ச் செய்யப் புகுந்து தீமையில் விழுந்து கெடுவான்.

கூடாத கூட்டத்திற் கூடாமலும், பாடாய்முடியும் பயங்கரச் செய்கைகளுக்குட்படாமலும் இருப்பவனே புத்திசாலி. அவன் தெய்வம் நமமைக் கண் திறந்து பார்த்துக்கொண்டிருக்கிறதென் பதை எப்பொழுதும மனதில வைத்து, சினந்து கடுஞ்சொல் சொலலவும், பேசாத பேச்சுப் பேசவும் ஏதுவுண்டாகுந் தருணத் தில் அதற்கிடங்கொடாமல் "கூடாது" என்ற மூனறு எழுத்துப் பதத்தைத் தடையின்றி மொழிவான்.

சாலமோன் ஞானராஜா எழுதிய நீதிமொழிகளை வாசித்துத தியானிப்பவாகள மூடனின மதிக்கடினனதெனபதை நன்குயறிந்து அவற்றிற்கு விலகி ஞானமார்க்கத்தில் தம் ஜீவிய ஓட்ட நாட்டத்தைச் செலுத்தப்பழகுவார்கள்.

நீதி 9: 13. மதியற்ற ஸ்திரீ வாயாடியும் ஒன்றுமறியாத மூடமுமாயிருக்கிறுள்.

நீதி 10: 1. ஞானமுள்ள மகன் தகப்பனைச் சந்தோஷப்படுத்துகிறுன். மூடததனமுள்ளவனே தாய்க்குச் சஞ்சலமாயிருக்கிறுன்.

நீதி 11: 29 மூடன ஞானமுள்ளவனுக்கு அடிமையாவான்.

நீதி 11: 22. மதிகேடாய் நடக்கிற அழகுள்ள ஸ்திரீ, பன்றியின் மூக்கிலுள்ள பொன மூக்குத்திக்குச் சமானம்.

நீதி 17: 21. மூடபுத்திரனைப் பெறுகிறவன் தனக்கு சஞ்சலமுண்டாக அவனைப் பெறுகிறுன; மதியீனனுடைய தகப்பனுக்கு மகிழ்ச்சியில்லை.

நீதி 17: 25. மூடபுத்திரன் தன் பிதாவுக்குச் சலிப்பும், தன்னைப் பெற்றவளுக்குக் கசப்புமானவன்.

நீதி 19: 13. மூடனுகிய மகன் தன் தகப்பனுக்கு மிகுந்த துக்கம். மனைவியின சணடைகள் ஓயாத ஒழுக்கு.

"வெய்யோன் கிரணமிகச் சுடுமே வெய்யவனில்
செய்யோன் கிரணமிகத் தீதாமே—வெய்யகதிர்
எல்லோன் கிரணத் தெரியினிலு மெண்ணமிலார்
சொல்லே மிகவுஞ் சுடும்."

சூரியனது கிரணம் மிகவும் சுடும். அதைப் பார்க்கிலும் அங்கா ரகன் கிரணமானது மிகவும் சூடாகும். இவ்விரண்டு கிரணங்களை விட நல்லெண்ணமில்லாத மூடரது சொல்லே மிகுதியாகச் சுடும்.

பஞ்சதந்திரம்.

"மூடருக் குபகாரந்தான் மூந்துறச் செய்து தம்மை
பீடுசெய்தவர்க்குத் தாமும் பெரிது கைம்மாறு செய்யார்
நீடிய வுபகாரங்க ளிகழ்த்தியே தமக்குத் தாமே
கேடுகே டேடிக் கொள்வார் கேண்மையை நினைக்கொணாதே."

"நஞ்சொடு கலந்தசோற்றை நக்குற வசைந்த பல்லே
வஞ்சகர் நட்பைமிஞ்சு மந்திரி தன்னைச் சற்றும்
மிஞ்சிட வைத்திடாமலெடுக்கவே வேண்டும் வைத்தால்
அஞ்சிய துன்பமெல்லா மாக்குமென் றறையலாமே."

நன்னெறி.

"அறிவுடையா ரன்றி யதுபெறார் தம்பாற்
செறிபழியை யஞ்சார் சிறிதும்—பிறைநுதால்
வண்ணஞ்செய் வாள் விழியேயன்றி மறைகுருட்டுக்
கண்ணஞ்சு மோவிருளைக் கண்டு."

அழகுசெய்யும் ஒளியையுடைய கண்களையல்லாமல் ஒளிமறைந்த குருட்டுக் கண்கள் இருட்டைக் கண்டு அஞ்சமாட்டாவாம். அது போல அறிவுடையோர் பழிக்கு அஞ்சுவார்களே யல்லாது, அவ் வறிவைப் பெறாத மூடர் தம்மிடத்தில் நெருங்கிவரும் பழிக்கு சிறிதும் அஞ்சார்.

"வெண்ணெய்க் கட்டியுஞ் சீனியு மூட்டலாம்
விலக்கிக் கொள்வதற் கென்செய்ய லாமொரு
பெண்ணைக் கட்டிக் கொடுத்திட லாம்பிள்ளை
பெறுவ தற்கு முடன்படு வார்களோ
கண்ணைக் கட்டித்தண் ணீர்க்கரை சேர்க்கலாம்
தாகந் தீர்ப்பது தாமன்றி யாவதோ."

குதிரையை எவ்வளவுதான் பலவந்தப்படுத்தி தண்ணீர்க்கரை யில கொண்டுபோய்விட்டாலும் அது தானே தண்ணீர பருகி தாகந் தணித்துக்கொள்ள வேண்டுமேயன்றி மற்றவர்கள் அதன் தாகத் தைத் தணிக்க முடியாது. அதேபிரகாரம் மூடருக்குப் புத்திமதி யிதுவெனக் கூறலாமேயன்றி அதைக் கைக்கொண்டு அதனபயனை அனுபவிக்கும் சக்தி அவர்களிடத்திலேயே அமைந்திருக்கின்றது.

"தெறுகொலைப் பவங்கள்யாவுஞ் சிதைத்து நற்கதியிற் சேர்க்கு
முறுபொரு டந்தைதாய ருயிரொடு மனைவி கேளிர்
பெறுமனைக் குரியமக்கள் பெறுவதற் குரைத்துக் காட்டா
ரிறுதியி லொளியாத்துன்பத் தெரிகர திடையின் வீழ்வார்."

அதாவது, மோட்சத்துக்கு வழியைப் புதல்வ ராதியோர்க்குக் காட்டாத தாய் தந்தையர் நரகில் வீழ்வார்.

"மதிக்கு நல்லற முண்டாதன் மானிடராகிச் செம்பொற்
பதிக்குறுங்கதி பேறெய்தல் பாரினிற் றந்தை என்போன்
விதித்த சொற் கடவாதன்றி வேறு மந்திரமு முண்டோ."

அதாவது, தந்தை சொன்மிக்க மந்திரமில்லை.

---

## துஷ்டன்.

துஷ்டனானவன் தெய்வகோபத்திற்கும் இராஜநீதி ஆக்கினைக்கும் சிறிதும் அஞ்சமாட்டான். பாவமிது, புண்ணியமிது என்று பகுத்தறியும் அறிவு அவனிடம் கிடைக்காது. யாவரிடத்திலும் அகந்தையும், டம்பம், பெருமை, தன்வீரம் முதலியவற்றைக் காட்டித் திரிவான். தன் வல்லமையே பெரிதெனமெளட்டீகம் பாராட்டி அடாத காரியங்களைச்செய்து படாத பாடுபடுவான். கொடிய செய்கைகளைச் செய்வது பாவம். பழி பாவஞ் செய்கிறவன் கெட்டவனெனப் பெயரெடுக்கிறான். உனக்கேன் இந்தத் துஷ்டகிருத்தியமென எவரேனும் மனமிரங்கி நல்வார்த்தை யாடினால் அவர்களுக்கே பெரும்பகை நினைத்துப் பல இடையூறு செய்து தன்னைத்தானே புகழ்ந்திருப்பான். மேலும், உலகவழக்கத்தைப் போல ஒருவிஷயமும் கிரமப்படி அறிந்து செய்ய மனமில்லாதவனாய் பெரியோர் விதித்த சன்மார்க்க விதிகளைவிட்டு அவர் விலக்கிய அநீதிகளைச்செய்ய வல்லவன். மனம், சொல், செய்கை, இம் மூன்றும் அவனிடத்தில் வேறுபட்டிருக்கும். தீக்கமனம், சொல் துடுக்கு, புண்ணியச்செய்கை இன்னதென்றறியாதவனாய் அகங்காரத்தை வளர்த்து அறிவை அழித்துக்கொள்வான். அவனிடத்தில் மனவேதனையே சதா குடிகொண்டிருக்கும். காரணமின்றி யார்க்கும் துன்பஞ்செய்வதே அவனுக்கு இன்பமாகும். அவனைக்காண யாவரும் வெறுப்புற்று அஞ்சுவர்.

சதிகாரன் மனதில் அதிகார இச்சை புதைந்துகிடக்கிறது. கபடம் அவன்முகத்தைத் திரையால் மறைப்பதுபோல் மறைக்கிறது. மித்ரபேதம் மிருதுவான சொற்களை யூட்டுகிறது. ஆனால், மு

வில் ஜனங்களுக்கு உண்மை வெளியாகிவிடும். பனியால் விரைத்துப்போனாலும் பாம்பு தன் விஷத்தை யிழப்பதில்லை. குளிரால் வாய் மூடிப்போனாலும் அதன் விஷப்பல் ஒடிவதில்லை. அதனிடத்து இரக்கங்கொள். அதன் உண்மை ஸ்வபாவத்தைக் காட்டிவிடும் அதற்குச் சூடுகாட்டிப் பால் ஊற்றினாலும் உன்னைக் கொன்றே தீரும்.

காட்டில் திரியும் மிருகங்களுக்குச் சமானமாக ஒப்பிடினும், துஷ்ட மிருகங்களைக் கண்டால் ஒதுங்க எல்லையுண்டு, துஷ்டனுக்குத் தப்புவிக்க வழியில்லை.

"ஈக்கு விடந்தலையி லெய்துமிருந் தேளுக்கு
வாய்த்தவிடங் கொடுக்கில் வாழுமே—நோக்கின்
பைங்கண ரவிற்குப் பல்லளவே துர்ச்சனர்க்கு
அங்க முழுதும் விடமேயாம்."

என்றபடி, ஒவ்வொரு ஜெந்துவுக்கும் விஷம் ஒவ்வோரிடத்தில் ஏற்பட்டிருக்கிறது. துஷ்டனுக்கோ அங்கமுழுவதும் விஷமாயிருக்கிறது ஆதலால், துஷ்டன் பகுத்தறிவில்லாத ஜெந்துக்களைக் காட்டிலும் இழிந்தவனாகிறான்.

"கொம்புளதற் கைந்து குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே—வம்புசெறி
தீங்கினர்தங் கண்ணிற் றெரியாத தூரத்து
நீங்குவதே நல்லோர் நெறி."

கொம்புளதற்கு ஐந்துமுழம், குதிரைக்குப் பத்துமுழம், மதங்கொண்ட யானைக்காயிரம் முழம் எனத் துஷ்டமிருகங்களைக் கண்டால் தூரவிலக ஒரெல்லை காட்டியிருக்கிறது. துர்ச்சனர்க்கோ எல்லையே வகுக்கப்படவில்லை. மேற்கூறிய விலங்குகளை யாம் பரிசிக்காவிட்டாலும் சொல்லிய விதிப்படி சிறிது தூரத்திலாவது அவைகளைக் கண்ணுற் றரிசிக்கலாம். அப்படியின்றி அத்துஷ்ட மிருகங்களைவிட கேடிழைக்கும் வம்பனது வழிக்கே தென்படாமலிருந்து சுகமெய்துவது உத்தமமெனப் பேரறிவுடையோர் பெரிதும் பேசியுள்ளார்.

சங். 1: 1—2 துன்மார்க்கருடைய ஆலோசனையில் நடவாமலும், பாவிகளுடைய வழியில் நில்லாமலும், பரியாசக்காரர் உட்காரும் இடத்தில் உட்காராமலும், கர்த்தருடைய வேதத்தில் பிரியமாயிருந்து இரவும் பகலும் அவருடைய வேதத்தில் தியானமாயிருக்கிற மனுஷன் பாக்கியவான்.

குச்சிதாய்களைப்போல் யாதொரு காரணமுமின்றி சதா குலைத்துக்கொண்டு திரியும் துன்மார்க்கரைக் கண்ட மாத்திரத்தில் கருடனைக் கண்ட சர்ப்பம்போல் அடங்கி ஒடுங்கி மறைந்திருப்பதே உத்தமம். ஏனெனில், அவர்கள் பழக்கத்தால் நமக்குள்ள நற்குணம் முழுவதும் நாசமாகும். "கழுதையோடு சேர்ந்த கன்றும் மலந் தின்னும். தீயருறவினால் தெய்வசிந்தனை முற்றுமே அற்றுப் போகும். ஆசாரம் அடியோடு வேகும். மானம் மடிந்துபோம். பரத்தையர்மேல் பட்சம் ஏற்படும். நற்குணமும் நன்னடக்கையும் நாசமடைய துர்க்குணமும் துர்நடத்தையுமே விர்த்தியாகும். தூஷண வார்த்தையே பூஷணமாகிவிடும். ஆகவே, துன்மார்க்கர் உறவு பெருந் துன்பத்தையும் பல கஷ்டங்களையும் விளைவிக்கும்.

"தீயாரைக் காண்பதுவுந் தீதே திருவற்ற
தீயோர் சொற்கேட்பதுவுந் தீதே—தீயார்
குணங்க ளுரைப்பதுவுந் தீதே யவரோ
டிணங்கி யிருப்பதுவுந் தீது."

என்று ஔவை சொன்ன அமுதவாக்குப் பொய்யன்று.

பஞ்சதந்திரம்,

துச்சன ருடனேகூடிச் சுகமடைந் தாருமில்லை
இச்சையா சகத்தினாலே யிடருறா தவருமில்லை
குச்சிதக் களவினாலே கொழுநிதி படைத்தாரில்லை
அச்சமி லரசராலே யழிபடா வாழ்வுமில்லை.

நல்லறி வமைச்சர்புத்தி நஞ்சுபோ லிருந்து பின்னர்
எல்லையில் செல்வமாவி யின்பமு முதவு நல்லோர்
அல்லவர் புத்திமுன்ன மமுதெனத் தோன்றிப் பின்னர்
ஒல்லையிற் செல்வமின்ப முயிரையு மிழக்கப் பண்ணும்.

நச்சுமா மரத்தைவைத்து நளிகட லமிர்தம் பெய்தும்
பச்சிலை முதலாக் கொல்லும் பாம்புபால் பெய்திட்டாலுங்
குச்சித விடத்தை நல்கும் குவிதசர்க் கரைமேனட்டு
மிச்சமாத் தேன் பெய்தாலும் வேம்புதன் கசப்புமாறு.

இன்னவை போலுந் துஷ்டர்க் கிதம்பல விதஞ்செய்தாலும்
பின்னுமங் கவர்துன் மார்க்கம் பெருகுநற் குணத்த ராகார்
அன்னரை மூலத்தோடே யழிக்கினுஞ் சயமாந் துஷ்டர்
மன்னுயி ரழித்தா லேதுன் மார்க்கமு மழியுந்தானே.

ஆதலால், துஷ்டநிக்ரமும், சிஷ்டபரிபாலனுமே அரசர்க்குத் தகுந்த நீதிநெறியென பஞ்சதந்திரம் ஆசிரியர் கூறுகிறார்.

"நல்லவனுக்கு எல்லோரும் நல்லவர்களே" என்ற பழமொழிப் படி, நம்மிடத்தில் துஷ்ட குணங்களிருக்கின்றனவா வென்று கவனிப்பது மிக்க அவசியம். உள்ளிருக்கும் துஷ்டனை யறியாமல் வெளியிலிருக்குந் துஷ்டனைப்பற்றிப் பேசுவது பெருந் தவறாகும்.

அறிவின் ரூபமாகிய ஆத்துமாவுக்கும் பஞ்சேந்திரியங்களுக்கும் சதா கலகம் நடந்துகொண்டே யிருக்கின்றன. இவற்றில் எது மேற்கொள்ளுமோ அதற்குத் தக்கபடிதான் நாம் நல்லோராவதும் தீயோராவதும். பகைவர் தூ கூறிய அம்பினும் அடங்காப் புலன்களே கொடியனவாம். அவற்றிற்கு ஆட்பட்டு,

தன்னைக்-"குடிகெடுக்கும் நெஞ்சிற்குக் குற்றேவல் செய்யின்
பிடிபடுக் கப்பட்ட களிறு."

ஆதலால் மெய், வாய், கண், மூக்கு, செவியென்னும் பஞ்சேந்திரியங்களின் மூலமாக உண்டாகும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐம்புலாதிகளையும் அடக்கி இந்திரிய நிக்கிரகம் செய்து அதை அறிவோடு இணங்கச் செய்ய வல்லோமாயின், அதைப்போல பேரின்பம் வேறொன்றில்லை.

தன் ஊழியனை செருக்காய் யூட்டி வளர்க்கின்றவன் கொஞ்சத்திற்குள் அவனைத் தன்மேல் எதிர்க்கக் காண்பான் என்பது ஞானராஜன் உரைத்த பழமொழி. குலமக்கள் தங்களை இடைவிடாமல் தின்மையிற் புகுத்தவும நன்மையை விட்டகற்றவும் தேடும் அஞ்சத்தக்க சத்துருவாகிய உடலின்மேல் எப்போதும் கண்ணுங் கருத்துமாயிருந்து அவ்வுடலின் துர்நாட்டங்களையும் இச்சிகளையும் எதிர்த்து மறிப்பதிலும் ஆன்மா புண்ணியமார்க்கமென்றெண்ணும கரியமனைத்திலும் அவ்வுடல் அதன்சித்தத்திற்கு அமைந்து தாழ்மையுடன் பணிவிடை தொண்டுபுரியும்படி அவ்வுடலைக் கண்டிப்பாய் நடத்துவார்கள்.

வென்றடக்கப்படாத துஷ்டமிருகம் நம்மைக்கொன்று விழுங்காதபடி அதனை இருப்புத்தளைகளால் இறுகப் பிணித்துத் தடிகொண்டு அடிக்குமாப்போல் நாம் நமதுடலிச்சையை அடக்கி அடக்கி நடத்தவேண்டும்.

தன் உயிரைச் சிநேகிக்கிறவன் அதனைப் போக்கடிக்கிறான். வெறுக்கின்றவன் நித்தியத்திற்கும் அதனைக் காப்பாற்றுகின்றான், என்று இயேசுவானவர் திருவுளம்பற்றினதின் கருத்தும் இதுவே.

ஜெய விஜய மகிமைப் பிரதாபங்கள் அனைத்தினும் மிக்க அருமையும் மகத்துவமுமான ஜெய விஜயம் நாம் பேயோடும் நம்மோடும் போராடி அடையும் ஜெய விஜயமாதலால் மகா சண்டவேகத்துடன் அவ்வப்பியாசத்தைக் கையாண்டு வருவோமாக.

“தங்கம் காய்க்கின்ற மரமாயினும், தலையில் தட்டினால் அதை வெட்டியெறியத்தக்க நீதிமுறையாகும்.” ஆதலால், துஷ்டரின் உதவியால் எவ்வளவு லாபம் கிடைக்கினும் அதைக் கவனிக்காது அவர்கள் சகவாசத்தைக் கட்டோடு நீக்குவதே நல்லோர்க்குத் தகுந்தது. இதுபற்றியன்றோ!

“நிந்தையிலாத் தூயவரும் நிந்தையரைச் சேரிலவர்
நிந்தையது தம்மிடத்தே நிற்குமே—நிந்தைமிகு
தாலநிழற் கீழிருந்து தண்பா லருந்திடினும்
பாலதெனச் சொல்லுவரோ பார்.”

தூயவரும் நிந்தனையுடையவரைச் சேர்ந்தால் அவர் நிந்தை தம்மிடத்தில் நிற்கும். பனைநிழலின் கீழிருந்து பாலையருந்தினும் அதைப் பாலென்று சொல்லுவார்களோ?

“அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தற் றலை.”

பிறரிழைத்த சிறுபிழைகளை எண்ணாமல் மறப்பதே நன்று. அவற்றை மறப்பதினால் உயர்ந்தோர் ஆவோம்.

“சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம்
பெரியோராயிற் பொறுப்பதுகடனே.”

பிறர் செய்த தீங்கை மறந்துவிடாமல் மனதில் வைத்துப் பதிலுக்குப் பதில் தீங்கிழைப்பது துஷ்டரின் இழிவான சுபாவம். ஒருவரிடமுள்ள துற்குணங்களைக் கவனியாது நற்குணங்களையே கைக்கொள்வது மேன்மக்கள் சுபாவம்.

## பழமொழிவிளக்கம்.

“துன்மார்க்கர்க் காயிரந்தான் சொன்னாலும்
மறந்துவிட்டுத் துடுக்கே செய்வார்
சன்மார்க்கர்க் கொருவார்த்தை சொலுமளவே
மெய்யதனிற் றழும்பாக் கொள்வார்
பன்மார்க்க மறைபுகழுந் தண்டலையாரே
சொன்னேன் பண்பு வாய்ந்த
நன்மாடு தனக்கொரடி நற்பெண்டிர்க்
கொருவார்த்தை நடத்தை யாமே.”

"செங்கமலப் போதலர்ந்த செவ்விபோலும் வதனம்
தங்குமொழி சந்தன சீதம்போலும்—பொங்கிதயம்
கத்திரிகை போலுமாங் காரிகையே வஞ்சமனக்
குத்திரர்பான் மூன்று குணம்."

...ந்த! வஞ்சகமான மனத்தினையுடைய துஷ்டரிடத்தில் மூன்று ...ணங்களுண்டு. அவையாவன:—

அவர்கள் முகம் செந்தாமரை மலர் மலர்ந்தாற்போல அழகா ...ருக்கும். அவர்களுக்குள்ள சொல் சந்தனம்போலக் குளிர்ச் ...யா யிருக்கும். அவர்களுடைய கொதிக்கின்ற இதயம் மயிரை ...ட்டுகிற கத்திரிகைபோலக் கடினமாயிருக்கும்.

"துர்ச்சனரும் பாம்புந்தொழி லொக்கினும் பாம்பு
துர்ச்சனரை யொக்குமோ தோகையே—துர்ச்சனர்தாம்
எந்த விதத்தாலு மிணங்காரே பாம்புமணி
மந்திரத்தா லாமே வசம்."

துர்ச்சனரும் பாம்பும் துஷ்டச் செய்கையில் ஒத்திருந்தாலும், ...ம்பானது மணிமந்திரத்தால் வசமாகும். துஷ்டரோ எந்த ...கைக்கு மிசைந்து வரமாட்டார்கள்.

"துர்ச்சனரும் பொன்னுந் துடியும் துரகதமும்
அச்சமற முன்னிற்கு மாயிழையும்—நச்சரவும்
கண்டித்த வெள்ளுங் கரும்பு மிளநீரும்
தண்டித்தார்க் கன்றோ சயம்."

துஷ்டரும், பொன்னும், உடுக்கையும், குதிரையும், பயமில்லாமல் எதிரே நிற்கிற பெண்ணும், நஞ்சையுடைய பாம்பும், நசுக்கின எள்ளும், கரும்பும், இளநீரும் ஆகிய இவைகளைத் தண்டித்தவர் களுக்கே பயன் கிடைக்கும்.

"தீயவர்பால் கல்வி சிறந்தாலு மற்றவரைத்
தூயவரென் றெண்ணியே துன்னற்க—சேயிழையே
தண்ணொளிய மாணிக்கஞ் சர்ப்பந் தரித்தாலும்
நண்ணுவரோ மற்றதனை நாடு."

...யவரிடத்தில் கல்வி யதிகமாயிருந்தாலும் அவர்களை நல்லோ ...ரன்று நினைத்து அணுகாதிருக்கவேண்டும். பாம்பினிடத்தில் ...ணிக்கமிருந்தாலும் அதை நெருங்குவார்களா?

தன் காரியத்திற்கு துஷ்டன் சகாயம் வேண்டியிருந்தால் அவ ...டன் கொஞ்சமாகவே சிநேகிக்கவேண்டும். அதிகமாய் சிநே

கித்தால் அவன் வருத்தமுண்டாக்குவான்—வெற்றிலைபாக்குடன் சுண்ணாம்பு கொஞ்சமே சேர்க்கவேண்டும். அதிகமே சேர்த்தால் வாயில புண்ணையுண்டாக்கும்.

மேலோர்க்கு உபகாரம செய்தால் அவர் பிரதியுபகாரம செய்வர். கீழோர்க்கு உபகாரம் செய்தால் அவர் அபகாரமே செய்வார்—பசுவுக்கிரைகொடுத்தால் மதுரமான பாலைத்தரும். பாம்புக்கிரைகொடுத்தால் கொடிய விஷத்தையே தரும்.

உத்தமர்க்குச் செய்த வுபகாரம் நன்றாய்ப் பிரயோஜனப்படும். மத்திமர்க்குச் செய்த வுபகாரம பிரகாசிப்பதுபோல தெரியும். அதமர்க்குச் செய்த வுபகாரம அப்பொழுதே மறைந்துபோம். சிப்பியிலே விழுந்த மழைத்துளி முத்தாகும். தாமரையில விழுந்த மழைத்துளி முத்தைப்போல பிரகாசிக்கும். மணலில் விழுந்த மழைத்துளி அப்பொழுதே மறைந்துபோம்.

" கற்பூரம் போலக் கடலுப் பிருந்தாலும்
கற்பூர மாமோ கடலுப்பு—பொற்பூரும்
புண்ணியரைப் போல விருந்தாலும புல்லியர்தாம்
புண்ணிய ராவாரோ புகல்."

" சிற்றுணர்வோ ரென்றுஞ் சிலுசிலுப்ப ரான்றமைந்த
முற்றுணர்வோ ரென்று மொழியாரே வெற்றிபெறும்
வெண்கலத்தி னோசை மிகுமே விரிபசும்பொன்
ஒண்கலத்தி லுண்டோ வுரை.

சீராப்புராணம்.

" பாரிடைப் பெரியவர்களுக் கிடர் படுத்திடவென்
றோரும் வன்மனத்தவர்களுக குறு பொருளலகிற்
சாருமக்களு மனைவியுந் தாமுந் தமபொருளும
வேரொடுங் கெடுமெனபது நிசமென விரித்தார்."

பெரியோருக் கிடர்விளைப்பவர் கெடுவர்.

" ஓங்குமானில மாக்களி லொருவருக் கொருவர்
தீங்கியற்றிட நினைத்திடுங் கொடிய வஞ்சமை
நீங்கிடாதவ ருயிரினைப் பருக நேரலாகை
தாங்கும்வானென வொல்லையி லுறச் சமைந்திடுமே."

அதாவது, ஒருவர்க்குத் தீங்கு நினைத்தால் அததீவகு தம்முயினை யே கொலலும். அலலது வாளாய்ச் சமையும.

"ஈரமற்ற புன்மனச் சிறியவர் திரண்டிகலிக்
கோரமாகிய பழியை யென்றூக்கொடுங் கொலையாய்த்
தேருநல் லறிவாளருக் கிழைத்திடுந் தீங்கு
நீரிடைக் கன நெருப்புகுத்திடவே தொத்திடுமே."

அதாவது, பெரியோர்க்குத் தீங்கிழைத்தல் நீரில் நெருப்பைப் புகுத்த லொக்கும்.

"பகையினை நல்லுடல் வருத்து நோயதனைக்
கொடுநெருப்பைப் பாரின்மீதிற்
றெருகு விடத்தைத் தோற்றரவிற் பரிகரித்த
லியாவர்க்குஞ் சூழ்ச்சித்தாகு
மிகுமெனி லிங்கிவ மாக்கள் மதியாலும்
வலியாலும் வெல்வதாகா
திகராரும் வெஞ்சமர் தொலைத்து நிறங்குருதி
பிறங்கியொளிர் நிணங்கொள்வேலீர்."

பகை, நோய், நெருப்பு, விஷம் முதலியவற்றை தோன்றியவுடனே நீக்கவேண்டும். காலதாமதஞ் செய்தால் அவைகள் பெருகிக் கொல்லும்.

"சீலமறியாத சிறியோர்கள் பிழை செய்யின்
மேலவர்கள் கண்டவை விலக்கல் கடனல்லாற்
கோலிய பெரும்பகை குலத்தினில் விளைத்தன்
மாலுற வளர்த்தன் மடமைத்தகை மையாமால்."

அதாவது, சிறியோர் பிழைசெய்யக் கண்டால் உடனே விலக்க வேண்டியது பெரியோரது கடமை.

"தன்றுணைத் தவத்தினர் தீயர் தன்மையிற்
குன்றிலர் நாடொறுங் குளத்தைப் பல்லுறத்
தின்றிடி னிரதமே சொரிக்கு மியாவரு
மென்றிடி னினியவை வேம்புக் கில்லையால்."

அதாவது, நல்லோரும் தீயோரும் தங்கள் செய்கை மாறமாட்டார்கள்.

"இறையவன் அருட்படிக் கிடரடைந் ததென்னிடத்திற்
குறையிதென்று மாநிலத் தவர்தமைக் குறைப்படுத்தன்
மறையினோரல வெகுளியை மனத்திலடக்கி
நிறையினிற்பது பெரியவர்க்குரிய நன்னிலையே."

நீங்கிழைக்கப்பட்ட பெரியோர் நிற்கவேண்டிய நிலை யின்னதெனக் காண்பித்திருக்கிறது.

" சாலவு நட்பினைத் தனப்பி லாதவர்
மேலவர் நட்பினை வெறுக்கும் வாய்மையர்
சிலமொன் றின்றிய சிறுமை யாரென
நாவினும் வழக்கினும் நவலுகின்றதே."

அதாவது, மேலோர் நட்பினை வெறுப்பவர் இழிஞராவர்.

"ஆலைப் பலா வாக்கலாமோ வருஞ் சுணங்கன்
வாலை நிமிர்க்க வசமாமோ—நீலநிறக்
காக்கைதனைப் பேசவிக்கலாமோ கருணையிலா
மூர்க்கரைச் சீராக்கலாமோ."

" பாவிதனைத் தண்டிப்போர் பாலாரு மல்லதருள்
மேவுசிவ னன்பர்பான் மேவாதே—யோவியமே
நாயின்பா லத்தனையு நாய்தனக்கா மன்றியே
தூயவருக் காகுமோ சொல்."

" நம்ப னடியவர்க்கு நல்காத் திரவியங்கள்
பம்புக்காம் பேய்க்காம் பரத்தையர்க்காம்—வம்புக்காம்
கொள்ளைக்காங் கள்ளுக்காங் கோவுக்காஞ் சாவுக்காங்
கள்ளர்க்காந் தீக்காகுங் காண்."

என்று, ஔவையார் நல்வழியிற் செலவழியாத செல்வம் சீரழியு மெனப் பாடியிருக்கிறாள்.

---

## பேராசை.

மனித வாழ்வைப்போல் நிலையற்றதும், கவலையுடையதும், நம்பிக்கையற்றதும், மயக்கமுடையதும், பலவின முடையதும் வேறெதுவும் இல்லை. வீடுகள், குளங்கள், மரங்கள் முதலிய உலகத்திலுள்ள அசேதன வஸ்துக்களுக்குள்ள நிச்சயங்கூட அவற்றிற்குக் காரணகர்த்தர்களா யிருந்த மனிதருக்கில்லை.

": இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்ப
ரென்றெண்ணவோ விடமில்லையே."

என்றபடி, மிகவும் அநித்தியமான வாழ்க்கை யுடைய மானிடப்பிறவி கள் இவ்வுலகில் அநேக யுகங்கட்கிருந்து ஏராளமான செல்வத் தையும் ஒப்பற்ற கீர்த்தியையும் பெற்று மாடமாளிகை கூடகோபு ரங்களைக் கட்டி, யாதொரு குறையுமின்றி சகல சம்பத்துடன் வாழ்வதாக மனோராஜ்யம் செய்கின்றனர்.

மேலும், அகங்காரமும், கெர்வமும் மேலிட்டு பரோபகாரம், ஜீவதயை, நல்லெண்ணம், நடுநிலைமை, நல்லொழுக்கம் முதலிய உத் தம குணங்களையகற்றி உலோபம், வஞ்சகம், கபடு, மாய்மாலம், இரண்டகம், பொறாமை, நன்றிமறத்தல் முதலிய துர்க்குணங்களை

புடையவர்களாய் தாழ்ந்தோரென்றும், உயர்ந்தோரென்றும், ஏழையென்றும், செல்வர் என்றும், எளியார் என்றும், வலியார் என்றும் பற்பல பேதங்களைக் கற்பித்து பணத்தையே குலதெய்வமாகக் கொண்டு,

" கைத்துடையான் காற்கீழ் ஒதுங்கும் கடல்ஞாலம்
பித்துடைய வல்ல பிற."

என்ற நீதிவாக்கியத்திற் கிணங்க பணமுள்ளவர்களையே மனிதர்களெனக் கருதி, அவர்கள் கால்களின்கீழ் ஒதுங்கி சேர்வைசெய்து அவர்களைப் புகழுவதும், அஃதில்லாரை யிகழுவதும், அசட்டை செய்வதும் அயுள்காலமெல்லாம் பணப்பேய்பிடித் தலைந்து தமது வாணாளை வீணாளாக்கி பெரும் பாவிகளாகின்றனர். ஆராய்ந்து பார்க்கில், "உண்பது நாழி உடுப்பது நான்குமுழம், ஆனல், எண்ணுவதோ இந்த உலகத்தை யெல்லாம் கட்டி யாளவேண்டுமென்று." வச்சிரகாயமும் சிரஞ்சீவியாக முடிவற்ற ஆயுளும் பெற்றாலும் ஆசை யடங்கினபாடில்லை.

தாயுமான சுவாமிகள்.

" ஆசைக்கோ ரளவில்லை யகிலமெல் லாங்கட்டி
யாளினும் கடன்மீ திலே
ஆணைசெல வேநினைவ ரழகேச னிகராக
வம்பொன்மிக வைத்தபேரும்
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்
நெடுநாளிருந்த பேரும்
நிலையாக வேயினும் காயகற் பந்தேடி
நெஞ்சுபுண் ணாவரெல்லாம்
யோசிக்கும் வேளையிற் பசிதீர வுண்பது
முறங்குவது மாகமுடியும்
உள்ளதே போதுநா னெனக் குளறியே
யொன்றைவிட் டொன்றுபற்றிப்
பாசக் கடற்குளே வீழாமன் மனதற்ற
பரிசுத்த நிலையை யருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரணா னந்தமே."

என்றபடி, மேலேற மேலேற ஆசை அதிகரித்துக்கொண்டே போகிறது. போதுமென்ற மனதுடனேகூடிய தெய்வபக்தியே மிகுந்த ஆதாயம்.

யோசிக்கும் வேளையில் "பசிதீர வுண்பதும் உறங்குவதுமாக முடியும்" என்ற பெரியோர் வாக்கு ஒரு நிமிஷமேனும் மனிதரின்

மனதில் தங்கியிருப்பதில்லை இதுபோதாதும். இப்பட்டேயாடு இருப்தியென்று எண்ணுவர் உலகத்திலில்லை. பற்றிலிருந்து நசல் புறப்படுவதுபோல் மனத்திவிடத்தின்று வகையானது வெகுஉற்சாகமாகவும், அதி விரைவாகவும் மழமழவென்று தங்குதடையின்றி வெள்ளம்போல பாண்டெழும்பி மனிதர்களை ஹிம்சிக்கிறது. அந்த ஹிம்சைக்கு அஞ்சி மனிதர் படும்பாடு கொஞ்சமன்று. மனமென்னும் பேய்க்குரங்கு சாமான்யத்தில் வசப்படுவதன்று. பாய்மரத்திலிருந்து கொம மரத்திலும், கொம மரத்திலிருந்து குட்மச்சுவரிலும் ஒரு கணத்தில் தாவுகிற அக்குரங்கு தான் விரும்பும் பொருளைப் பெறுமளவையில் தனது ஏவலாளராகிய ஆசையென்னுங் கலகக்காரர்களை மென்மேலுந் தூண்டி மனிதரை அல்லோலகல்லோலப்படுத்துகிறது. தனது பரிவாரங்களாகிய வஞ்சகன், பொய்யன், உலோபன் முதலிய துஷ்டர்களை ஏமப்பிக்கிறது. இப்படி துஷ்டர்கள் மனிதரை தம் வசப்படுத்தி படாத பாடு படுத்துகின்றனர்.

நாலடியார்.

“உண்ணான் ஒளிநிறான் ஓங்கு புகழ் செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பனேல் அஆ
இழந்தானென் றெண்ணப் படும்”

கணங்கொண்டு சுற்றத்தார் கல்லென் றலறப்
பிணங்கொண்டு காட்டுய்ப் பார்க்கண்டு—மணங்கொண்டீண்
டுண்டுண் டுண்டென்னும் உணர்விறைச் சாற்றுமே
தொண்டொண் டொண்டென்னும் பறை.”

---

தெய்வ சந்நிதானத்திற்கும், இராஜ சமுகத்திற்கும் ஆசிரியர் பாவலர், கர்ப்பஸ்திரீகள், முதலானவர்கள் உள்ள இடத்திற்கும் வெறுங்கையோடு ஏகலாகாது. கையுறை ஏதேனும் கொண்டு போகவேண்டும்.

---

## புண்ணியா புண்ணியம்.

உண்மை, சாந்தம், பொறுமை முதலிய புண்ணியங்களைச் செய்வது மகா பிரயாசமென்று சிலர் நினைப்பார்கள். அப்படி நினைப்பது தப்பு. ஒரு ஜாண் வயிறு வளர்க்க “திரைகடலோடியுந் திரவியந் தேடு” என்று ஔவை சொல்வதுபோல் மனிதர் சமுத்திர யாத்திரை செய்தும், மலைகளேறியும், ஆரண்யங்களைக் கடந்தும், பற்பல தேசங்களெல்லாஞ் சுற்றித் திரிந்தும் பல தொ

ழில்களையுஞ் செய்கிறார்கள். வேறு சிலர் யுத்தக் களத்திலும், சாரங்களிலும், சமுத்திரங்கள் நடுவிலும் தங்கள் உயிர்களை வெறுத்துக் கஷ்டப்பட்டுச் சம்பாதிக்கிறார்கள். ஆனால் புண்ணியஞ் செய்வதற்கு இவ்வளவு கஷ்டம் வேண்டியதில்லை. உள்ளதை உள்ளபடி கூட்டாமல் குறைக்காமல் நடந்ததை நடந்தபடி சொல்லுவது எவ்வளவு எளிதான காரியம்.

ஆனால் நடவாத காரியத்தை நடந்ததுபோலே பொய் சொல்லுகிறதா யிருந்தால், ஒரு பொய்யை ஸ்தாபிக்க அநேகம் பொய்களைச் சொலவியும் பிரயோஜனமில்லாமல "கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளையில் தெரியும்" என்றபடி பொய் எப்படியாவது வெளியாகிவிடும். இம்மாத்திரமாய்க் கொலை, களவு, மோசம், வஞ்சகம், புரட்டு, உருட்டு, பரஸ்திரீ கமனம் முதலிய கொடிய பாபச் செயல்களைச் செய்வது மகா கஷ்டம். ஏனெனில் அவற்றைச் செய்வதற்குத் தகுந்த சமயங்களும், ஆயுதங்களும், சகாயங்களும், சாதகங்களும் அமைந்து வைத்துக்கொண்டு ஜாக்கிரதையுடன் அவற்றைச் செய்தபோதிலும், அவ்வழிகளில் கஷ்டமும், அச்சமும், வருத்தமும், பிராண சங்கடங்களும் நேரிடுகின்றன.

"அவரவர் வினையில் அவரவர் படுவார்
அவரவர் வினை யளவுக்கே."

துஷ்டர்களுக்கு அவர்களுடைய துன்மார்க்கச் செய்கைகளே அவர்களைத் தண்டிக்கிற ஆயுதங்களாகின்றன. நாம் எதை விதைக்கின்றோமோ அதையே அறுப்போம். வேம்பை விதைத்தவனுக்கு வேம்பே யல்லாமல் கரும்பு விளையமாட்டாது. பாம்பை வளர்த்தவனுக்கு விஷமே யல்லாமல் அமிர்தம் கிடைக்கமாட்டாது. பெருண்டி, மோசம்பல், முதலிய துர்வழக்கங்களுக் காளானவர்கள் அஜீரணம், வியாதி, ஆயுள்நஷ்டம் முதலிய பல துன்பங்களை யனுபவிக்கிறார்கள்.

பஞ்சதந்திரம்.

"தருமமே விரும்புவாரைத் தருமமே விரும்பிக் காக்கும்
தருமமே யிகழுவாரைத் தருமமே யிகழ்ந்து நிற்கும்
தருமமே மெய்யாய் நின்று சகலமுஞ் செய்தலாலே
தருமமே சொல்வதல்லாற் சற்றுநாம பொய் சொல்லோமே."

"எண்ணிய விரதமெல்லா மியற்றினு மிவைக்கு மேலாம்
புண்ணிய விரதமென்னும் பொய்சொலா விரத மொன்று
நண்ணிய வுயிரைக் கொல்லா நலந்தரு விரதமொன்று
மண்ணினிலனுஷ்டிப்போம் நாம்வழுக்கிலோரஞ் சொலோமே."

### சீராப்புராணம்.

" பொய்மையோர் நொடிவரைப் பொழுதிற் றீர்ந்திடும்
மெய்மைசூழ் கடலினும் விளங்கித் தோன்றுமால்
கைமத கரியினைக் கருப்பை மாய்த்திடா
துய்மதிப் பெரியவ ருளத்திற் காண்பரால்."

அதாவது, பொய்மை நொடியில் அழியும், மெய்மை என்றும் நிலைக்கும்,

### ஆசாரம்.

" திங்க ளமிர்த கிரணமிகச் சீதளமாம்
திங்களினுஞ் சந்தனமே சீதளமாம்—இங்கிவற்றின்
அன்பறிவு சாந்த மருளுடையார் நல்வசநம்
இன்ப மிகுஞ்சீதள மாமே."

" ஞானம் பெருமை நயங்கருணை யுண்மையபி
மானம் பொறுமை வணக்கமுயர்—தானமுடன்
சற்குண மாசாரந் தகுகல்வி நீதிநெறி
சற்குணருக் குண்டென்றே சாற்று."

### பெரியோர்.

" பெரியோ ருழையும் பிழைசிறி துண்டாயின்
இருநிலத்துள் யாரு மறிதல்—தெரிவிக்கும்
தீக்குங் கடலுலகில் யாவர்க்குந் தெள்ளமுதம்
வாக்கு மதிமேன் மறு."

சந்திரனிடத்துள்ள மறுவானது உலகமெங்கும் பஹிரங்கமாகத் தெரிவதுபோல் பெரியோரிடத்துள்ள சிறிய குற்றங்களும யாவர்க்கும் பஹிரங்கமாகிவிடுமாதலின பெரியோர். மிகு ஜாக்கிரதையா யொழுகவேண்டும்.

Men who have a reputation to lose must be careful about what they say and do.

### ஔவையார்.

" வெட்டெனவை மெத்தனவை வெல்லாவாம் வேழத்தில்
பட்டுருவுங் கோல்பஞ்சிற் பாயாது—நெட்டிருப்புப்
பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும்."

" அரிமந்திரம் புகுந்தால் ஆனை மருப்பும்
பெருகொளி சேர்முத்தும் பெறலாம்—நரிநுழையில்
வாலுஞ்சிறிய மயிரெலும்புங் கத்த பத்தின்
தோலுமல்லால் வேறுமுண்டோ சொல்."

## குடிவெறி.

மதுபானப் பிரியர் பணத்தைக் கொடுத்துப் பைத்தியத்தை விலைக்கு வாங்குகிறார்கள். அவர்கள் அறிவு மயக்கத்தால் ஐம்புல உணர்ச்சிகளின் ஒழி மழுங்கி, கல்வியிருந்தும் மூடராகவும், தன மிருந்தும் தரித்திரராகவுந் தோன்றுவார்களேயொழிய, எக்காலத் திலும் எவ்விஷயத்திலும் முன்னுக்கு வரமாட்டார்கள். இது பற்றியே,

" அறிவை யழிக்குஞ் செயலழிக்கு மழியாமானந்தனை யழிக்குஞ்
செறியு மறிஞர் மதியாத செருக்கை விளைக்கும் ஈன்முரு
முறியும் வெறுப்பு மிகவிளைக்கு முனிவு விளைக்கும் பகையஞ்சாக்
குறிகள் விளைக்கு கைவிளைக்குங் கொள்ளேல் கள்ளுண்டலை மைந்தா."

என முதியோர், குடி வெறியானது அறிவு, முயற்சி, மானம் முத லியவற்றை யழிப்பதுடன் தன்னையீன்ற மாதாவுங்கூட வெறுத்து விடத்தக்க ஸ்திதிக்குக் கொண்டுவந்து குடியே குடியைக் கெடு த்து விடுமென்று எச்சரிக்கை செய்திருக்கின்றனர்.

இவ்விதமாய் மதுபானப் பிரியர் தமது வீட்டைவிற்று, மாட் டை விற்று, ஆடையாபரணங்களை விற்று, மானங் கெட்டு, மரி யாதை கெட்டு, மதிகெட்டு, விதிகெட்டு, பெண்சாதி யொருபக் கம், பிள்ளைக ளொருபக்கம், தாங்க ளொருபக்கமாகத் திரிகிற ப பவத்தை என்னென்று சொல்லலாம்!

" மலந்தனை யமுதெனை மாந்தச் செய்திடும்
மலர்ந்த பூவென வனலள்ளச் செய்யும் வெஞ்
சலந்தரும் பகைவர்கை தனக்குள்ளாக்கு நன்
னலந்தனை யழித்திடு நறவு நெஞ்சமே."

என்றபடி, வெறியர்களின் அறிவு மயங்கிப் போவதால் மலத்தை யமுதாகப் புசிக்கவும், அக்கினியை மலர்ந்த புஷ்பமென்று கையி லெடுக்கவும், கொடுமையை விளைக்கத்தக்க பகைவர் கரங்களில் அகப்பட்டுக் கொள்ளவுஞ் செய்து, சகல நன்மைகளையு மழித் துத் தீங்கையே விளைவிக்கும். அவ்வெறியர்க்குக் கள்ளுக்கடை யே காணியாட்சி, குப்பைமேடே அவர்கள் குடியிருப்பு, புழுதி யே யவர்கள் போர்வை, சாம்பலே யவர்கள் சப்பிரமஞ்சம், சாண மே யவர்கள் சாயும் மெத்தை, கள்ளே யவர்கள் ஸ்நான பானம், மலமே யவர்கள் போஜனம், ஆகாயமே யவர்கள் ஆடை, அம்பல் களே யவர்கள் துணை. மேலும்,

"வறுமையாற் களவு செய்வர் மையலர் காமத்தாழ்வார்
குறுமை சேர் பகையினால் வெங்கொலை செய்வர் வசையி னோடுஞ்
சிறுமை தந்துயி ரிருந்துஞ் செத்தவ ராக்கி யிம்மை
மறுமையை யழிக்குங் கள்ளை மாந்தலெப் பயன் வேட்டம்மா!"

என நீதிநூல் கூறுகின்றது.

## குரங்கு செய்யாத கோரணிகளைக் குடியன் செய்கிறான்.

குடிவெறியானது இவ்வளவு தீங்கினை விளைவிக்கக்கூடிய தென அறிந்தும், மிருகத்தினுங் கேடான ஈன குணமுள்ள மனுஷர் இதனை மேலும் மேலும் விரும்புவதற்குக்காரணம் யாதெனில்,

விரும்பினால் கரும்பு, வெறுத்தால் செருப்பு என்று மனுஷன் ஆரம்பத்தில் சொல்லக்கூடிய எந்த வழக்கமும் சுகத்தின் காரணமாகவோ, சொகுசின் காரணமாகவோ ஆரம்பிக்கப்பட்டு வரவரக் கடினமான பழக்கமாகி மனுஷனை அடிமையாக்கிவிடுகின்றது.

மனுஷ தேகத்துக்கு நேரிடக்கூடிய வயிற்றுப்பிசம், அஜீரணம், அசமந்தம், மனோவியாகூலங்கள், இருதயத்துடிப்பு, அவயவங்களில் நேரிடக்கூடிய பலவித வலிகள், பலவீனம் முதலியவற்றை நீக்கி, சமயசாந்தி யுண்டாக்குந் தன்மை சாராயத்திற்கிருப்பதால் அதைத் திடீரென நிறுத்தினால் டிலீ வியாதிகளின் குறிகள் தோன்றலாம். ஆதலால் ஔஷத முதலியவற்றை யுபயோகித்து நாளடைவில் அதை நிறுத்தப் பழகவேண்டும்.

நமது சிங்கமார்க் குடிவெறி நிவாரணியை உபயோகித்து அநேகர் பலனடைந்திருக்கின்றனர்.

சாராயமானது நரம்புகளுக்கும் அவை சம்பந்தமான மூளைக்கும் கிளர்ச்சியைத் தருவதால் அதனுண்டாகும் ஆனந்தலகிரியானது சரீர மனோ உபத்திரவங்க ளனைத்தையும் நீக்கி உற்சாகந்தரும் சக்தியையுடையது. ஆதலால் அதைத் தடுக்க முயலுவோர் யோகாப்பியாச முதலிய மார்க்க சம்பந்தமான அப்பியாசங்களால் பரமாத்மாவுடன் ஐக்யமாகி ஆனந்த நிஷ்டையிலிருந்தால் மாத்திரமே குடிவெறியை முற்றிலும் நீக்கக்கூடும்.

"மங்காப்பால் குடித்து மலைமே லிருப்போர்க்குத்
தெங்காப்பா லேதுக்கடி—குதம்பாய்
தெங்காப்பா லேதுக்கடி."

என்று குதம்பை சித்தர் பாடியிருக்கின்றனர்.

## காமம்.

" தர்தார மன்றியே பரதார மேனினைவு
தனைவைத்த காமுகர்க்குத்
தலையில்லை நிசமில்லை வெட்கமில்லை சமரினில்
தயிரியஞ் சற்றுமில்லை
அந்தாரமில்லை தொடர் முறைமயில்லை நிலையில்லை
யறிவில்லை மரபுமில்லை
யறமில்லை நிதியில்லை யிரவினிற் றனிவழிக்
கச்சமோ மனதிலில்லை
ஈந்தாத சனமில்லை யினமில்லை யெவருக்கும்
நட்பில்லை கனதையில்லை
நயமில்லை யிளமைதனில் வலிமையிலை முத்திபெறு
ஞானமில்லை யென்பர்கண்டாய்."

நாலடியார்.

" அறம்புகழ் கேண்மை பெருமையிந் நான்கும்
பிறன்றார நச்சுவார்ச் சேரா—பிறன்றாரம்
நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென்
றச்சத்தோ டிந்நாற் பொருள்."

" புக்கவிடத் தச்சம் போதரும் போதச்சந்
துய்க்குமிடத் தச்சந் தோன்றாமற்—காப்பச்ச
மெக்காலு மச்சந் தருமா லெவன்கொலோ
வுட்கான் பிறனில் புகல்."

" காணிற் குடிப்பழியாம், கைஉறிற் கால்குறையும்,
மாணின்மை செய்யுங்கால் அச்சம் ஆம்;—நீணிரயத்
துன்பம் பயக்குமாற் றச்சாரி, நீகண்ட
இன்பம் எனக்கெனைத்தாற் கூறு!"

பிறன்மனையாளை நற்றுபவனை மற்றவர் கண்டால் பழிப்புக்கிடமாகும். அவர்கள் பிடித்தால் காலை வெட்டிவிடுவார்கள். மானங்கெட்ட அத்தொழிலினால் அச்சமுண்டாகும். நரகவேதனையைத் தரும். ஆதலால் துன்மார்க்கனே, உனக்குக் கிடைக்கும் இன்பம் இன்னதெனக்கூறு.

' அம்பும் அழலும் அவிர்கதிர் ஞாயிறும்
வெம்பிச் சுடினும் புறஞ்சுடும்;—வெம்பிக்
கவற்றி மனத்தைச் சுடுதலாற் காமம்
அவற்றினும் அஞ்சப் படும்.'

## நீதி நூல்:

"பண்டோராண் பெண்ணமைத்தல் விருவருக்கும்
மணமியற்றிப் பாணிரக்கங்
கொண்டளித்த முறைகடந்து கள்ளவழிப்
புணர்கின்ற கொடியோர்தம்மை
மண்டலமே வாய்பிளந்து விழுங்காயோ
அவர்தலைமேல் வானுலாவுங்
கொண்டலே பேரிடியை வீழ்த்தாயோ
யிதுசெய்யிற் குற்றமுண்டோ."

"தன்னைப்போற் பிறரையெண்ணத் தகுதியான் தான்மணந்த
மின்னைப்போ லிடையினளை விழியினால் நோக்குவோரைத்
தின்னல்போன் முனிவுகொள்வோ ரயலவன் றேவிதன்னை
அன்னைசோ தரிபோலெண்ணு தணைந்திடல்விரும்பலென்னே."

"சிலங் குலமடியா டண்டிற் கெடுங் கணிகை
ஆலிங்கனந் தனநாச மதாகும்—நூலிழந்த
வல்லிதழுவக் குறையும் வாழ்நாள் பிறர்தாரம்
புல்லினர்க் கெல்லா நலமும்போம்."

"போற்று குருகிளைகள் பொன்னுசை யோர்க்கில்லை
தோற்று பசிக்கில்லை சுவைபாகம்—தேற்றுகவி
நேசத்கிலை சுகமு நித்திரையுங் காமுகர்தம்
ஆசைக்கில்லை பய மானம்."



ககாத சிற்றின்பங்களின் நேசமே மோகமெனப் படும். துர்க்குணங்க ளெல்லாவற்றிலும் அதிகமாய்ப் பரப்பியும், அதிகக் கொடூர ஆட்சிக் கோலோச்சியும், தன் தாக்கடிகளில் மகா உத்தண்ட வலுமை செலுத்தியும் வரும் துர்க்குண மிதுவே. மனிதன் வேறெந்தப் பாவஞ் செய்தாலும் அப்பாவம் சரீரத்திற்குப் புறம்பாயிருக்கிறது. மோகப் பாவமோவெனில்:—அவன் சொந்த உடலை அசசியாக்கிப் பங்கப்படுத்துகின்றது. காமாதுரர் படும் கஷ்டங்களுக்கு அவர்களுடைய தேககங்களே சாட்சியாதலால் வேறு சாக்ஷி அனுவசியம். ஈ, எறும்பு, கிருமி முதலியவற்றிற்கு மகோற்சவப் பிரசாத மளிப்பதுபோல் அவர்கள் சரீரங்களில் இரணங்களுங் கட்டிகளும், வேறு பல வியாதிகளுங் கண்டு அந்தோ! வேப்பிலையுங் கையுமாய்த் திரிகிறார்கள்.

"மேகங்கள் யாவுமுயர் விண்ணீங்கி வேசையர் தந்
தேகங்களில் வாசஞ் செய்கையான்—மாகமிசை
யாசைக்குங் கார்காணு மவ்வேசை யார்கொடுப்பர்
காசைக் கொடுப்பார்க்குக் காண்."



என்றபடி, மேகங்களெல்லாம் ஆகாயத்தைவிட்டுத் தாசிகளுடைய சரீரங்களில் வசிக்கின்றமையால், சில சமயங்களில் ஆகாயத்தில் ஆசைக்குங்கூட மேக சஞ்சாரமில்லாமல் போய்விடுகிறது. ஆனால், வேசிகட்கு யார் காசு கொடுப்பாரோ அவர்கட்கே அந்தத் தாசிகள் அம்மேகங்களைக் கொடுப்பார்களென வித்வசிரோன்மணியாகிய வேதநாயகம்பிள்ளை வேடிக்கையாக பாடியிருக்கிறார்.

ஆகையால் காமுகர்கள் மேற்கூறிய நோய்களுடன் மூலம், பௌத்ரம், அரையாப்பு, நீர்த்தாரையில் குத்தல, எரிச்சல், கடுப்பு, இரணம், வெள்ளை, வெட்டை, மதுமேகம், நீரிழிவு, நீரடைப்பு, குஷ்டம் முதலிய நோய்களைப்பெற்று வாணாளை வீணாக்கி, தங்கள் அந்திய காலம் முழுவதும் தீராத நோயையுடையவராய் இருக்கின்றார்கள். இது பற்றியே,

"நெடுங் காமமுற் பயக்குஞ் சின்னீர வின்பத்தின்-முற்றிழாய்
பிற் பயக்கும் பீழை பெரிது."

எனச் சான்றோர் கூறினர். தொடக்கத்தில் காமத்தைவிட இன்பமும், பிரியமுமானது வேறொன்றுமில்லையெனத் தோன்றும் பிறகோவெனில் அதைப் பார்க்க அருவருப்பக் குரியதும், கைப்புடையதும், வேறொன்றுங் கிடையாதே. இன்பம் பயக்கும் தலைவாசல் உள்ளதாயினும் புகுந்தபின் புறப்படப் போக்குவழி கிடைப்பதரிதாகிய சுழல் சுற்றுடைய மாளிகை காமமே. இதைப் பற்றியன்றோ ஞானிகள் விபசார ஸ்திரீயை "பாதாளப் படுகுழிக்கும் நெருக்கிடையான கிணற்றிற்கும்" ஒப்பிட்டிருக்கின்றனர். மோகமானது முதலில் ஒப்பற்ற விதமாய்ப் பசப்பி மயக்கும் வலையைப் போலிருக்கின்றது. ஆனால், அவற்றில் தன்னைப் பிடிபட்டுவிடுகின்றவனுக்கு ஐயோ கேடு! ஒருதரம் நாணத்தின் போர்வை கிழிபட்டால், ஒருதரம் மோக வலைகளில் சிக்கிக்கொண்டால் ஐயோ அவைகளை அறுத்தெறிந்து தன்னை விடுவித்துக்கொள்வது எவ்வளவோ அருமை!

கந்தபுராணம்.

"கூனொடு வெதிரே பங்கு குருடு பேதைமை யானோர்
ஊனம தடைந்த புன்மை யாக்கையோ டழியுமம்மா
மானம தழிந்து தொல்லை வலியிழந் துலகில் வைகும்
ஏனையர் வசையின் மாற்ற மெழுமையு மகல்வ துண்டோ."

மீன் வேடனாற்றலதே. அதன் வாய் விரிந்த தாயும் புகுதற்கெளிதாயு மிருக்கின்றது. ஆனால் அதில் பிரவேசிக்கும் ஆயிரமாயிரம் சல சாங்களில் அதினின்றுந் தப்பிப் புறப்படும் மீன் ஒன்றேனு முண்டோ? ஆகவே இக்கொடிய துர்க்குண மொன்றினால் விளையும் பாவங்களனைத்தையும், ஆசைகளனைத்தையும், கருமங்களனைத்தையும், யார் எண்ணித் தொகையிட வல்லவர்? விஷந்தோய்ந்த அதன் வாடைபட்ட மாத்திரத்தில் இவ்வுலகச் செல்வங்களில் மிக்க விலைபெறப்பெற்ற மானாபரணத்தை அவனிடத்தினின்று உரிந்துவிடுகின்றது.



கைகேசி தசரதர் மந்தரை

ஸ்ரீராமருக்குப் பட்டாபிஷேகத்திற்கு நியமித்தநாளைக்கு முந்தின இரவு தசரத சக்ரவர்த்தி மனம்பூரித்து ஆனந்த சாகரத்தில் மூழ்கி வரலாமென்றெண்ணிக் கைகேசியி னந்தப்புரத்திற்குச் சென்றார். கைகேசியோ மந்தரை யென்னும் கூனியின் தூண்டுதலால் தன் மகனாகிய பரதனுக்கு மகுடந் தரிக்கவும், இராமரைக் காட்டுக்கு அனுப்பவும் வரந்தரவேண்டுமென் றழுது தன் மயிர்களை விரித்து பூமியில்விழுந்து புரண்டாள். அப்பொழுது தசரதர் துடிதுடித்து,

"தூமகேது புவிக்கென தோன்றிய
வாமமே கலை மங்கையரால் வரும்
காம மில்லை யெனிற் கடுங்கேடெனும்
நாமமில்லை நரகமு மில்லையே."

என்று சொல்லிப் புலம்பினாரென்று கம்ப ராமாயணத்தில் வாசிக்கிறோம்.

கம்பர் புதல்வராகிய அம்பிகாபதி சோழன் மகளைக் காதலிக்க, அஃது அரசனுக்கு எட்ட, அவன் அம்பிகாபதியைக் கழுவேற்ற ஆக்ஞாபிக்க அம்பிகாபதி கழுவிலிருந்து பாடியதாக வழங்கும் செய்யுள்:—

"உருகி யுடல்கருகி யுள்ளீரல் பற்றி
எரிவ தவியாதென் செய்வேன்—வரியரவ
நஞ்சிலே தோய்ந்த நளினவிழிப் பெண்ணணங்கென்
நெஞ்சிலே யிட்ட நெருப்பு."

இத்தீவினையைப்போல் துர்க்கந்தம் நாறுகின்றதும் உலகினர் கண்களுக்கே ஈனப்படுத்துகின்றதுமான துர்க்குணம் கிடையாது. உடல்வலியை மெலிந்து அழகின் தளுக்கை மங்கல் செய்து தேக தாஷ்டிகத்தைக் குலைத்துச் சௌக்கியத்தைக்கெடுத்து மிக வெட்கக் கேடான வியாதிகளை யுண்டாக்கி, வாலப்பருவத்தின் பூமுளையை காலம் வாராமுன் வாட்டி வதங்கடித்து, வயது வாராமுன் பிஞ்சிற் பழுத்தாற்போல் நிந்தைக்குரிய நரை, திரை, மூப்பினை ஓடிவரச் சொல்லிக் கூப்பிடுகின்றது. மேலும் அது மதியின் கூர்மையை மழுக்கி, புத்தியை மந்தப்படுத்தி, மனத்தின்கண் நல்லுணர்ச்சிகளின் ஊற்றை வற்றடித்து, மேன்மை பயக்கும் அப்பியாசங்களின்மேல் அருவருப்பைத் தந்து, மனிதனை முற்றும் சரீரச் சிற்றின்பக் கசுமாலச் சேற்றிற் புலத்தத் தன் அசுசியான வெட்கக் கேடுகளைக் குறித்துச் சிந்திப்பதும், பேசுவதும், பாடுவதும், மகிழ்வதும் தவிர வேறு சுகத்திற் கவனம் சாரணையற்றவனாக்கி மூப்பு, நிந்தை, அவமானம், பிணி, வறுமை, முதலியவற்றால் அழுத்துகின்றது.

மேலும் இந்த நிர்ப்பாக்கியமான விஷயம் மரணத்தறுவாயில் அவன் முன்னுக்குத் தோன்றி, அவன் பாவத்தின் பளுவை மிகுவாய் அதிகப்படுத்துகின்றது. "விறகு தீயை வளர்ப்பதுபோல நினைவுகள் ஆசைகளை வளர்க்கும்" என்றறிந்து, பொல்லாத நினைவுகள் நம் புத்தியில் தோன்றினமாத்திரத்தில் புறக்கணித்துத்தள்ள வேண்டியது. சாலமோன ஞானி சொல்வதாவது:—

"பட்டணத்தின் வீதிகளில் பலபக்கங்களிலும் கண்ணைச் செலுத்தாதே. இடங்கடோறும் உலாவித்திரியாதே. அலங்கார முள்ள ஸ்திரீயை நோக்காமல், உன் கண்களைத் திருப்பிக்கொள்; அன்னிய ஸ்திரீயின் அழகை இச்சையோடு பாராதே." இந்தச் சகிர்த ஆலோசனையின்படி யோபு மகாத்மாவைப்போல் சுறுசுறுப்பாய் நமது காலத்தை வேலைகளில் இடைவிடாமல் செலுத்தி, நமது நேத்திரங்களை யடக்கிக் காப்பதில் வெகு ஜாக்ரதையாயிரா விடில் தாவீதைப்போல் அவமானமாவோம். தேவனிஷ்டப்படிச் சுமுத்திரையாய் நடந்துகொண்ட இப்புனிதவான் சோம்பலுக்கிடங் கொடுத்து ஓர் ஸ்திரீயின்மேல் தன் பார்வையை விழவிட்டதனால் உடனே விரகாக்கினியால் வெந்தெரிந்து, பயங்கரமான பரதாரக் குற்றம், துர்மாதிரிகை, கொலைபாதகங்களாகிய முக்குற்றங்களுக் குள்ளானார்.

"உணங்கி யொருகான் முடமாகி யொருகண்ணின்றிச் செவிபிழந்து
வணங்கு நெடுவா லறுப்புண்டு மன்னுமுதுகில் வயிறொட்டி
அணங்கு நலிய மெலிவெய்தி யகல்வாயோடு கழுத்தேந்திச்
சுணங்கன் முடுவல்பின் சென்றால் யாரைக்காமன் றுயர்செய்யான்."

நாயானது வற்றி, ஒருகால் முடமாகி, ஒரு கண் கெட்டுச் செவியிழந்து, வளைவாகிய நெடுவால அறுப்புண்டு, பொருந்திய முதுகிலே வயிறொட்டி, நோய் வருத்தத் துன்பமடைந்து, பிளந்த வாயுடன் கழுத்து ஏந்தி பெண்ணாயின் பின்னே போனால யாரைத்தான் மன்மதன் துன்பப்படுத்தமாட்டான்?

"கண்டிருந்துங் கேட்டிருந்துங் கற்றிருந்துந் தோடுமலர்
வண்டிருந்த பூங்குழன்மேல் மாலானேம்—பண்டை
வெறியோ விதியோ வெளிமயக் கோவையோ
முறையோ வறியாய மோ."

"காரைப்பழித்த கையான் கருமாணிக்கன் கற்பவெற்பில்
ஆரைச் சுடாதிந்தக் காமச்செந்தீ யிதனாலன்றோ
வாரிக்குண்மாய னொளித்தா னயனு மலர்புகுந்தான்
நீரைச்சுமந்து நின்றான் கொன்றைசூடிய நின்மலனே."

கைம்மாறு கருதாது கொடுப்பதில் மேகத்தைப்பழிக்கும் கையினை யுடைய கருமாணிக்கன் கற்பவெற்பில் காமமாகிய செந்தீயானது யாரைத்தான் சுடாது. இதனாலன்றோ திருமால் கடலில் ஒளித்துக்கொண்டான், பிரமாவும் தாமரைமலரில் புகுந்தான், கொன்றை மலரைத் தரித்த சிவனும் கங்கையைச் சுமந்து நின்றான்.

"ஒருகோட்டுக் கலைமுனியு மொளிதிகழும் புலியாடை யுடுத்தகோவும்
வருமலர்வாழ் திசைமுகனும் வானவர்க்குநாயகனு மகுடன்றானும்
கரியநிறத் திருமாலும் வாலியும் பராசரனுங் காமனம்பால்,
பெருமையிழந்தனரென்றால் சிறுமனிதர்க் கெப்படியோ பேசுங்காலே.',

ஒற்றைக் கொம்பையுடைய கலைக்கோட்டு முனிவரும், ஒளி விளங்குகின்ற புலித்தோலையுடைய சிவபெருமானும், மணம் பொருந்திய தாமரை மலரில் வாழ்கின்ற பிரமனும், தேவராஜனாகிய இந்திரனும், மகிடாசுரனும், கரியநிறத்தையுடைய திருமாலும், வாலியும், பராசரனும், மன்மத பாணத்தால் தமது பெருமையிழந் தார்களானால் அற்ப மனிதருக்கு எப்படி யிருக்குமோ?

தவத்தின் மகிமையால் அரிய வரங்களைப் பெற்றிருந்த விஸ்வா மித்திரர் அகோர தவம் புரிந்து கொண்டிருக்கையில் தபாக்கினி யால் திரிபுவனங்களும் பற்றி யெரிந்தன. தேவர்களெல்லாரும் இந்திரனிடம் தம்மை ரட்சிக்கும்படி முறையிட இந்திரன் ரோசா மலர்களைப்போல் மலர்ந்த முக விலட்சணமுடைய மேனகையை யழைத்து விஸ்வாமித்திரரின் தவத்தைக் குலைத்து உலகங்களை ரட்



சிக்க ஆக்ஞாபித்தார். அவள் தன் அளகபாரத்திலே வண்டுகளமொய்க்கப் பாரிஜாதப் புஷ்பம் முடிந்து, கந்தகதம்ப கஸ்தூரி பரிமளாதி கள் வாசிக்க, ஆடைகுலுங்க, நவ ரத்தின மேகலாபரணங்கள் சோ பிக்க, தண்டை காற்சிலம்புகள் சப் திக்க, அன்னநடை நடந்தும்பாய், மயில்சாயலாய்த் தபோதனாமுன னின்று நாட்டிய வரிசையுடன் ஆடி, மகரவீணை வேணுநாதங்க ளைப் பழிக்கவல்ல குயிற்குரலால் சுதிகானப்பிரமாணத்துடன் அபி நயங்கள் தவறாது மங்களகரமான கீர்த்தனங்கள் பாடி, நயவார்த்தை யாடிக் கண்மயக்கும் பல சமிக்கை களுங்காட்டிக் காமவில்லை நாணே ற்றி எய்து ஆசையை மூட்டினாள். அப்பொழுது "நெருப்பிலும் ஈ மொய்க்குமோ?" வென்று சொல் லத்தக்கதாக அரிய தியான நிஷ்டையிலிருந்த தபோதனர் தமது கண்களைத் திறந்து அவளைப் பார்த்தார். உடனே விரகாக்கினியால வெந்தெரிந்து, அவளைக்கூடித் தாம்கொண்ட விரதத்தை அழித்

தார். "ரிஷிப்பிண்டம் இராத்தங்கா" தாகையால் மேனகை உடனே கர்ப்பந்தரித்துச் சகுந்தலையைப் பெற்று ரிஷீஸ்வரர் கையில் கொடுத்து, விஸ்வாமித்திரரை விட்டகப்பட்டதினாக வாசிக்கின்றோம்.



ஸ்திரீ ஜனங்களுடன் தனித்துச் சம்பாஷிப்பது ஆபத்தை வாவென்று கூவியழைப்பதாகும். அவர்களைப் பார்ப்பது இருதயத்திற்குக் கேடாகும். அவர்கள் மொழிகளைக் கேட்பதும், சிற்றின்ப சரச சல்லாப உல்லாசங்களுக்குத் தமது செவிகளைத் திறந்திருப்பதும் மனதைத் தூண்டியிணைக்கும். அவர்கள் சகவாசம் காமத்தீயை மூட்டும். இவ்விதமாய் அவர்களிடத்திலுள்ள யாவும் அவர்களுடன் உறவு செய்வோரைப் பிடிக்கும் கண்ணிகளாம்.

> "பிறர்மனைக் கேகல்நூற்றம் பெண்களைப் பார்த்தல் குற்றம்
> முறைதப்பி மின்னாளை மோகித்தல் பெரியகுற்றம்—இறைவரில்
> கன்னிமாரை யிச்சித்த லிதன்மேல் குற்றம் நிறையுலகத்தி
> லென்ற நீதி நீ யறிந்திடாயே."

ஏனெனில் உடலில் சுபாவ உஷ்ணங் குடிகொண்டிருக்குமளவும் எவனும் நெஞ்சிடை அக்கினி முற்றும் அவிந்ததென்று எண்ணியிருக்கத்தகாது அக்கினியின் பக்கம் பஞ்சைக்கொண்டு வந்தால் தப்பாமல் பற்றிக்கொள்ளும்.

ஆதலால் ஸ்திரீகளுடன் எவ்வித தொந்தபந்தத்தையு மகற்றி விடவேண்டும்.

> 'எய்யவந்த காமா வுனக்கிங் கிடமில்லை
> உய்ய வந்தா னென்மேரு முறவானுன்
> தேனைவிடு பூவைமுடி தின்றுவிடு கைக்கரும்பை
> மீனையொரு காசாக வில்,'

என்னை ஈடேற்ற வந்த ஈசனுடன் நான் ஐக்கியமாகிவிட்டமையால், இதுவரை என்னை வருத்திக்கொண்டிருந்த மன்மதனே! இனி உன் ஆற்றல் செல்லாது. ஆதலால், உன் வில்லுக்கு நாணாயிருந்த செவ்விய மலர்களில் வாழ்கின்ற வண்டுகளை விட்டுவிடு. உனக்குக் கணைகளாயிருந்த மலர்களை முடித்துக்கொள். உனக்கு வில்லமபாயிருந்த கரும்பைத் தின்றுவிடு, உனக்குக் கொடியாயிருந்த மீனை ஒரு காசுக்கு விற்பாயாக.

---

## மாதர் கண்கள்.

"அன்று கண்டோநஞ் சமுதத்தை யாழியி லம்பயன்மால்
சென்று கண்டேத்துந் தென்னாரூர்த் தியாகர் திருமிடத்தில்
ஒன்று கண்டோமற் றங்கொன்று விண்ணுட ருலகிற் கண்டோம்
இன்று கண்டோ மிரண்டும் இவள் பார்வை யிரண்டினுமே."

நஞ்சையும் அமிர்தத்தையும் அன்னாளில் திருப்பாற்கடலில் ஒருங்கே கண்டோம். அதன்பிறகு பிரமனும் திருமாலும் போய்த்தரிசித்துத் துதிக்கின்ற தென்னாரூர் தியாகரது திருக்கழுத்தில் நஞ்சைத் தனியே கண்டோம். மற்றொன்றாகிய அமிர்தத்தைத் தெய்வலோகத்தில் கண்டோம். இந்நாளில் நஞ்சு, அமிர்தம் என்னும் இரண்டினையும் இவளுடைய பொதுநோக்கு, சிறப்புநோக்கு என்னும் இருபார்வையினிடத்தும் ஒருங்கே கண்டோம்.

"நானஞ் செறியுயர் காளத்தி நாதர்நன் னாட்டினிலே
கானஞ் செறிகுழற் காரிகையா ரிரு கண்களுக்கு
மானஞ்சும், அம்பஞ்சும் மாவஞ்சும், வண்டஞ்சும், வாரியஞ்சும்,
மீனஞ்சும், நஞ்சஞ்சும், வேளஞ்சும், வாளஞ்சும், வேலஞ்சுமே."

கஸ்தூரி பூசப்பட்ட புயங்களையுடைய காளத்திநாதர் மலையில் வாழ்கின்ற பெண்களின் கண்ணழகைப் பார்த்து மானஞ்சும், அம்பு அஞ்சும், மாவடு அஞ்சும், வண்டு அஞ்சும், கடல் அஞ்சும், மீன் அஞ்சும், நஞ்சு அஞ்சும், மன்மதன் அஞ்சுவான், வாளஞ்சும், வேலஞ்சும்.

"சேலுங் கலையுஞ் சிலையம்பும் வண்டுஞ் செழித்தவொரு
வேலும் பழித்தவிம் மெல்லிய லெய்தவிழி யம்பினால்
மாலுள தாகி மயங்கித் தியங்கி மதிதின மென்
பாலுள வேலைவிட் டெய்த்தேன் மருந்தென்ன பைங்கிளியே."

சேல்மீனையும், மானையும் வில்லிற் கோத்த அம்பையும், வண்டையும், வேலாயுதத்தையும் பழித்து இந்த மெல்லியலாள் எய்த விழியம்பினால் காம மயக்கமுண்டாகி மதிமயங்கித் திகைத்து நாள்தோறும் செய்யும் வேலையைவிட்டு இளைத்தேன். நீ தந்த இந்த நோய்க்கு நீயே மருந்து சொல்லவேண்டும் பைங்கிளியே!

"வேலோ கடலோ விடமோ கருவண்டோ
சேலோ கணையோ சிறுவாளோ—கோலமுடன்
தண்டங்கித் துண்டுருளத் தத்திவிழக் குத்துமுகிழ்க்
கண்டங்கிக் காரிகடைக் கண்."

"நீலமோ வேலோ செங்கயலோ வாரிதிசேர்
ஆலமோ வம்புயமோ வைங்கணேயோ—நீலநிற
வாவிச் சேலைக்கருகில் வந்துபுன லாடுகின்ற
காவிச் சேலைக்காரிக் கண்."

"சேலோ கணையோ பிணையோநற் றென்னவன்கை
வேலோ நமனே மிளிர்வண்டோ—சாலப்
பளபளென்ற வொளிமிகுந்து பவளமிஞ்சு நகைபுனைந்த
களபகும்ப முகிழ்மடந்தை கண்."

"அம்பள வெவ்வள வவ்வளவேவிழி யார்ந்த கொவ்வைச்
செம்பழ மெவ்வள வவ்வளவேயிதழ் சீர்கொள் வஞ்சிக்
கொம்பள வெவ்வள வவ்வளவேயிடை கூறலுமிச்
சம்பழ மெவ்வள வவ்வளவே தனந் தையலுக்கே."

"செங்கயலோ நீலவண்டோ சித்தசன்கை நீலவண்டோ
பங்கயமோ மால்வளரும் பாற்கடலோ—தங்கமலி
வச்சிர நகைச்சிகன வச்சிரவின் மெச்சுபுரு
வச்சின விடைச்சிவிழி பார்."

பொன்னிறம் மிகுந்த வயிரமணி போன்ற பற்களையுடையவளும், மேகத்திலுள்ள உறுதியாகிய இந்திரவில்லும், மெச்சும்படியான புருவத்தையும், சிறிய இடையையும் உடையவளுமாகிய இந்தப் பெண்ணின் கண்ணானது சிவந்த கெண்டைமீனே, நீலநிறமுள்ள வண்டுதானே, மன்மதன் கையிலுள்ள கருங்குவளை மலர்க்கணையோ, தாமரை மலரோ, திருமால் கண் வளராநின்ற திருப்பாற் கடலோ?

"ஆலமோ வேலோ வலைகடலோ வம்புயமோ
நீலமோ மார னெடுங்கணையோ—சாலச்
சிறுத்தவிடை பருத்தமுகிழ் சிவத்தவிதழ் வெளுத்தநகை
கறுத்த குழலொருத்தி கடைக்கண்."

மாதர்மேல் மையல்கொண்டு மயக்கமுற்ற
மானிடரின் பாடல்கள்.

"சீரான வேதபுரி நாதர் கோயிற் றிருக்குளத்தில்
நீராடிப் போகின்ற நேரிழையே யென்ற னெஞ்சுவிடாய்
தீராம லாம்பற்செவ் வாய்திறவாமற் றிரும்பி முகம்
பாராமற் போவதனா லேகிடைக்கும் பழி யுனக்கே."

"கூரிட்ட வேல்விழி மாதரசே யுன்றன் கோலமெல்லாம்
ஆரிட்ட வஞ்சனையோ வறியே னடியா யிழையே
ஏரிட்டிங் கென்முகம் பாராம லீயுமிருப் பதனால்
கோரிட்டு ஞாயத்தைச் சொல்லுவன் பாரடி கோமளமே."

"மறக்கப் பதிதில்லை கச்சியில்வா ழிளவஞ்சியை விட்
டுறக்கம் வருதில்லை யூணில்லை யாணர்த்தலூர் குறித்துப்
பறக்க வென்றாலுஞ் சிறகில்லையே பஞ்சபாணன் றன்பம்
பொறுக்கப்படவில்லை யென்ற வண்டே சொலப் புக்கினிக்கே."

"நெஞ்சோரும் வற்றி யஙவாய் வரண்டு நினைவு தப்பி
எஞ்சினும் விட்டுப் போகுதையோ விள மாமயிலே
வஞ்சிக் கொடியிடைப் பெண்ணுன் குமுதகல் வாயமுத
சஞ்சீவி கொண்டு வந்தாற் பிழைப்பேனினிச் சாவில்லையே."

"மாலே நிகர்க்குநற் சந்திர வாணன் வரையிடத்தே
பாலேறிப் பாய்ந்திடத் தேன்மாரி பெய்யநற் பாகுகற்கண்
டாலே யெருவிட முப்பழச் சாற்றி னமுதவயல்
மேலே முளைத்த கரும்போவிம் மங்கைக்கு மெய்யெங்குமே."

திருமாலையே நிகர்க்கின்ற சந்திரவாணனது மலையினிடத்தே பால் மிஞ்சிப் பாய, தேன்மாரி பொழிய, நல்ல பாகு கற்கண்டு என்பவற்றுலே யெருவிட, வாழை, மா, பலா முதலான முப்பழச் சாறுகிய அமுதம் நீர்ப்பாய்ச்சலையுடைய வயலில் முளைத்த கரும்போ இம்மாதின் சரீரம் முழுதும்.

"என்று திரும்பி வருவீரெனத் துயிலேக் கிளைழயாள்
நின்று குழலொரு கையாலொதுக்கிக் கண்ணீர் ததும்பி
குன்று நிகர் கொங்கை மீதேயணைத்துக் கொடுத்தவிடை
ஒன்று நினைத்தல்ல வோவின்றெ னெஞ்ச முருகுவதே."

"அற்புத மானநம் மம்பலவாண ரணிவரை மேல்
பொற்கொடி யுன்னைவிட் டெப்படிப் போவது போகவென்று
நெற்கிடை தூரமொரு காலைத்தூக்கி நிலத்தில் வைத்தால்
விற்கிடை தூர மிழுக்குதென் னுளை விதிவசமே."

"கனம் பிரிந்தாலுமின் வான்பிரிந்தாலுங் கதிர்புனல்விட்
டனம் பிரிந்தாலும் புயல்போலு மேனியரம் புயமின்
தனம் பிரிந்தாலுந் தென்னூரூர்த் தியாகர் தமதடியார்
மனம் பிரிந்தாலு முனைப்பிரியே னடி மாதங்கமே."

மின்னல் மேகத்தைவிட் டகன்றாலும், சூரிய சந்திரர் ஆகாயத்தை விட்டுப் பிரிந்தாலும், அன்னப்பறவை நீரைவிட்டுப் பிரிந்தாலும், நீலமேகம்போலும் மேனியையுடைய திருமால் திருமகளை விட்டுப் பிரிந்தாலும், தென்னூர் தியாகர் தமதடியார் மனத்தை விட்டுப் பிரிந்தாலும் உன்னைப் பிரியேன.

"கட்பூக்குழல் மாவடுவெண்டாங் கழைவிற் புதல்கூ ரசினாட்டம்
எட்பூத் துண்டமுருக் கோட்டமிலகு விதுவான நம்பாணி
தடபூச்சுவர்க்கஞ் சிலம்பிடைதூ ளிதம்பமகிப்பைபவ ராற்றுள்சொல்
வெட்பால் குரல்கோகில மன்னநடையும் வடமீன் கர்பனை [illegible]

தேனுள்ள பூங்குழல் அழகுள்ள வண்டை நிகர்க்கும், புருவம் மன்மதனது கரும்புவில்லை நிகர்க்கும். கண் கூர்மையாகிய வாளை நிகர்க்கும், நாசி எள்ளின் பூப்போலும், அதரம் முருக்கம் பூப்போலும், முகம் இலங்குகின்ற பூரணசந்திரன்போலும், கை தாமரைப் பூவைப்போலும், தனம் மலையைப்போலும், இடையானது நூலிழைபோலும், நிதம்பம் பாம்பின் படம்போலும், கணைக்கால் விரால் மீனைப்போலும், சொல் வெண்மையாகிய பாலின் சுவைபோலும், குரல் குயிலை நிகர்க்கும், நடை அன்னம்போலும் உடைய இவள் கற்பு அருந்ததியை நிகர்க்கும்.

"வண்டோ விழி நுதல் வான்பிறையோ வல்குல் மான்குளம்போ
செண்டோ முலைத்திலமோ நகையிசை சேர் துடியோ
கண்டோ மொழிகுழல் காரோமுகங் கமலம் பவளத்
துண்டோவிதழ்கன்னித்தண்டோ தொடையிந்தத்தோகையர்க்கே.

"பங்கயக்கண் வேலவனே பைந்தொடியாள் தேடிநிதம்
மங்கி மிகவுந் தளர்ந்துவாடுகிறாள்—செங்கைமலர்
அன்னநடை மின்னலொலி சின்னவிடை வன்னமுலை
கன்னன்மொழி மன்னுமிவள் காண்."

'அத்தி மலரு மருங்காக்கை வெண்ணிறமும்
கத்துபுனன் மீன்பதமுங் கண்டாலும்—பித்தரே
கானார் தெரியற் கடவுளருங் காண்பரோ
மானார் விழியார் மனம்.'

---

## கோபம்.

கோபம், பகை, குரோதம், முதலிய துர்க்குணங்களையுடையவர்கள் பாம்புகளையுந் தேள்களையும் பிடித்துத் தங்கள்மேல் விட்டுக் கொண்டால் எவ்வளவு உபத்திரவம் அடைவார்களோ அவ்வளவு உபத்திரவத்திற் காளாகிறார்கள். மனிதனிடத்திலுள்ள ஒவ்வொரு துர்க்குணமும் பிறர்க்குத் தீமையை விளைவிப்பதோடு தனக்கும் ஹானியைத் தரத்தக்கது. ஆகையால்தான்,

"தன்னைத் தான்காக்கில் சினங்காக்க—காவாக்கால்
தன்னையே கொல்லுஞ் சினம்."

என்றும், "கோபமே பாவங்கட்கெல்லாம் தாய்தந்தை, கோபமே குடிகெடுக்கும், கோபமே யொன்றையும் கூடிவரவொட்டாது, கோபமே பொல்லாது, கோபமே சீர்கேடு, கோபமே யுறவறுக்கும், கோபமே பழிசெய்யும், கோபமே பகையாளி, கோபமே கருணை [illegible] மாம். கோபமே யெவரையும் கூடாம

லொருவனுக்கும், கோபமே மறுமையின் கொண்டுபோய்த் தீய நரகக் குழியினிற் றள்ளுநாமம்" என்றும் ஆன்றோர் அறைந்திருக்கின்றனர். மேலும்,

"கோபமே பிறவியைக் கொடுக்குங் கொள்கையாம்
கோபமே யறிவினைக் குறைக்குங் குட்டநோய்
கோபமே தாயையுங் கொல்லுந் திண்படை
கோபமே தவத்தினைக் குலைக்கும் பேயரோ."

"கோபத்தாற் கௌசிகன் றவத்தைக் கொட்டினான்
கோபத்தா னகுடனுங் கோல மாறினான்
கோபத்தா லிந்திரன் குலிசம் போக்கினான்
கோபத்தா லிறந்தவர் கோடி கோடியே."

என்று கோபத்தால் விளையும் பெருங்கேட்டைக் குறித்துப் பலவாறாகப் பெரியோர் கூறியிருக்கின்றனர்.

இராமாயணம்.

"மூங்கிலிற் பிறந்த முழங்குதீ மூங்கின்
முதலற முடிக்கு மாபோல்
தாங்கருஞ் சினத்தீ தன்னுளே பிறந்து
தன்னுறு கிளையெலாந் தவிர்க்கும்
ஆங்கதன் வெம்மை யறிந்தவர் கமையால்
அதனையுள் ளடக்கவு மடங்காது
ஓங்கிய கோபத் தீயினை யொக்கும்
உட்பகை யுலகில் வேறுண்டோ."

ஸ்ரீராமர் தம்மைக் காட்டுக்குப் போக ஏவிய கைகேயியிடத்தும், அதற்குக் காரணமாயிருந்த கூனியிடத்தும் கோபங்கொண்டாரல்லர். கிட்கிந்தையிலே சுக்ரீவன் முதலிய குரங்குச் சேனைகள் குறித்த காலத்துக்குள் வராத தவறினபோதிலும் கோபத்தைக் காண்பிக்காமல் சாந்தமாகவே வார்த்தை யாடினதாக வாசிக்கிறோம். ஏனெனில் மூங்கிலிற் பிறக்கின்ற நெருப்பானது அம்மூங்கிலையும் அதனைச் சார்ந்தவைகளையும் சுட்டு நாசமாக்குகின்றது. அதுபோல, கோபமும் எவனிடத்துக் காணப்படுகின்றதோ அவனையே நாசஞ்செய்துவிடும்.

மூதுரை.

"கற்பிளவோ டொப்பர் கயவர் கடுஞ்சினத்துப்
பொற்பிளவோ டொப்பாரும் போல்வாரே—விற்பிடித்து
நீர்க்கிழிய வெய்த வம்புபோல் மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம்."

## காய்மகாரம்.

பிறர் வாழ்க்கையும், சம்பத்துகளையும் கண்டு, மனம் பதை பதைத்து, சஞ்சலப்படுவதே காய்மகாரம், பொறாமை அல்லது அழுக்காறு எனப்படும். அழுக்காறு என்றால் அழுக்கின் வழி அல்லது அழுக்குள்ள வழி என்று பொருட்படும். அயல் வீட்டார் வாழ்ந்தால் அதைக்கண்டு கொள்ளும் வெறுப்பு, பொறாமையின் முதல சுபாவம். அவ்வாழ்வைக் கெடுக்க முயல்வது இதன் செயற்கையாகும். பொறாமையுள்ளவன் தனக்கு உயர்ந்தவர்களை நிகர்க்கக்கூடாமையால் அவர்களுக்கும், தனக்குத் தாழ்ந்தவர்கள் தன்னைப்போல் உயர விரும்புகின்றமையால் அவர்களுக்கும், தனக்குச் சரியொத்தவர்கள் தன்னோடு சமனாய் நடக்க எண்ணுகின்றமையால் அவர்களுக்கும் விரோதியாய் இருக்கின்றனன்.

நெருப்பிற்கு "சேர்ந்தாரைக் கொல்லி" என்று பெயருண்டு, தன்னையுடையாரைக் கொல்லுங் கருவியாகிய பொறாமைக்கும் அது பொருந்துமென்னலாம். பிறர்பால் காய்மகாரங் கொள்வதினால் கோபத்திற் கிடமாகும். கோபம் உண்டானவுடன் மதி மயங்கும், மதிமயங்கித் தனக்குந் தெரியாது பெருங் குற்றம் செய்ய நேரும். அக்குற்றங்களைப் பற்றிப் பின் ஏன் செய்தோமென்று மனக்கவலையுறத் தன்னெஞ்சே தன்னைக்கடிம். பின் பித்துப் பிடித்தாற்போல் மயங்கி, அப்பித்தால் மனவெறியுண்டாகி, மதி மயங்கித் தனக்குந் தெரியாது செய்யும் தொழில்கள் அவனை அழிவைத் தேடிவிடும். இவ்விதமாய் ஒருவனுடைய நெஞ்சை எரித்து உடலைவாட்டி, சிந்தையை வருத்தி, மனச்சமாதான அமரிக்கையைக் கலங்கடித்து அவன் உயிரோடிருக்கும் நாளெல்லாம் அவனைச் சஞ்சலத் துயரத்தி லமிழ்த்தி, அவனது ஆத்தும சமாதானம், சந்தோஷம் அனைத்தையும் பறக்கடித்துத் துரத்துகின்றது இந்த நீசத் தூர்க்குணமே. தான் உதித்துப் பிறந்த விருக்ஷத்தைக்குடைந்து அரிக்கின்ற கிருமியைப்போல காய்மகாரமும தன்னைப் பிறப்பித்த நெஞ்சினை முதலாவதாகக் குடைந்து வாதிக்கின்றது. பிறகு புறத்திலும் சென்று சேத[illegible]துகின்றது. காய்மகாரியின் முகத்தின் தேஜஸ மாறியிரு[illegible] அவன் உள்ளத்தில் பட்டிருக்கும் கனத்த காயங்களைச் [illegible]பிறைற் காட்டுகின்றது.

உலகெங்கும் பரம்பி மிகுந்த கே[illegible] விளைத்து கொடுங் கோல் ஆண்மை செலுத்தும் துர்க்கு[illegible]ல் காய்மகாரத்தையும் ஒன்றெனலாம். மன்னர் பிரபு[illegible] ஆண்மக்களிலும், வலியோர், பெரியோர் வாசல்தலங்களி[illegible] குடிகொண்டிருப்பதே

அதற்கு இன்பமாயினும், எங்கும் சென்று பரந்து சந்நியாசி மடங்களையும், தபோதனர் ஆசிரமங்களையும் முதலாய் அது சாடாமல் விடுகிறதில்லை. நமது ஆதித்தாய் தந்தையரின் முதல் இருபுத்திரர்களுக்குள்ளும் பொறாமைப்பட்டு ஒருவன்மேலொருவன் கையெடுத் தடித்துக் கொல்லச்செய்தது காய்மகாரமே. யோசேப்பின் அண்ணன்மார் அவனை ஓர் அடிமையைப்போல் விற்பதற்கு அவர்களைத் தூண்டினதும், ஆண்டவர்க்குருவாக ஆரோனையும், மீரியாமையும் அவர்கள் சகோதரனாகிய மோசேயின்மேல் அவதூறு சொல்லும்படி ஏவினதும், காய்மகாரமே. இன்னும் காய்மகாரமே சவுலரசனைத் தாவீதின்மேல் ஏவிவிட்டது. காய்மகாரமே உலகரக்ஷகர்மேல் பரிசேயரை மூட்டி எழுப்பி அவரைக் கொலைக்கும் கையளிக்க உடன்படுத்திற்று. காய்மகாரமே நமது ரக்ஷகரின் சீஷருக்குள் மூடத்தனமான போட்டியைக் கிளப்பிவிட்டது. இன்னும் இந்துக்கள் புராணங்களைப் பார்த்தால் துரியோதனன், பீமன் வலிமைப் பொறாது பலதீங்கடைந்து,

"ஆற்றி னீர்வினை யாடிய நாண்முதற்
காற்றின் மைந்தனோ டெத்தனை கன்றினேன்
சாற்றி னென்வினை தானென்னை யேசுடக்
கூற்றின் வாய்ப்புகுந் தேற்கென்ன கூற்றையா."

என்று கூறி உயிர்விட நேர்ந்தது. "அயல்வீடு வாழ்ந்தால் ஐந்து நாள் பட்டினி" என்றாற்போல, வசிட்டனிட்ட உணவால் அவன்மேல் பொறாமைகொண்டு காமதேனுவைக் கவர முயன்ற கௌசிகன் கதையையும் எல்லாரும் அறிவர். காமவியற்கையால் பொறாமைப்பட்ட ஸுந்தோபஸுந்தர் வரலாறும் தெரிந்ததே! கற்பிற் சிறந்த அருந்ததிப்பால் பொறாமைகொண்ட லக்ஷ்மி, ஸரஸ்வதி, பார்வதி இவர்கள் மாங்கல்யப் பிக்ஷை கேட்க நேரிட்ட கதையையும் நாம் படித்திருக்கிறோம். * குந்தி மகப்பேறு அடைந்தாள் என்று கேட்ட காந்தாரித் தன் கருவைத் தாக்கிப் பெற்ற மைந்தரைக் கடையில் துறக்கவேண்டி முடிந்ததை எவரும் அறிவர். கல்விச் செருக்காற் கொண்ட பொறாமையால் புகழேந்தியைச் சிறையில் வைத்து ஒட்டக்கூத்தர் பட்ட பாடும் நாமறியோமா?

இதனாலன்றோ, திருவள்ளுவநாயனாரும்,

"அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்."

என்றார். அதாவது, அழுக்காறென்று சொல்லப்பட்ட ஒப்பில்லாத பாவி தன்னையுடையானை இம்மையில் செல்வத்தைக் கெடுத்து, மறுமையிலும் நரகத்திற் செலுத்திவிடும்.

* மானிட மர்ம சாஸ்திரம், 2-வது புஸ்தகம், 74-வது பக்கத்தில் மாங்கல்யப் பிக்ஷையினுடைய சரித்திரம் பார்க்கலாம்.

"அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்."

திருப்பாற்கடல் கடைந்தபோது அதினின்று மூதேவி முன்னும் இலக்குமி பின்னும் பிறந்ததினாலே மூதேவிக்கு மூத்தவள் என்னும் பெயருண்டாயிற்று. (பிறர் செல்வங் கண்ட விடத்தே) பொறாமையுடையவனை செய்யவளாகிய திருவானவள் (அவ்வித்து) தானும் பொறாமைப்பட்டுத் தனது தமைக்கைக்குக் காண்பித்து விட்டு நீங்குவாள்.

அதாவது பொறாமையுடையவனிடத்து லக்ஷ்மி கடாக்ஷம் தங்குவதரிது.

தான் சேர்த்த பொருளைச் சுட்டு நாசமாக்குகிற நெருப்பைப் போல் பொறாமை, பகை, மூதலியதூர்க்குணங்கள் யாரிடங்காணப் படுகின்றனவோ அவர்கள் மனதில் எப்பொழுதும் துக்கமும், சஞ்சலமும், துன்பமும் குடிகொண்டிருப்பதால் அவர்களுக்கு வேறு தண்டனை வேண்டுவதில்லை. அந்நியர்களுக்குண்டாகிற பாக்கியம், இன்பம் சுகமெல்லாம் பொறாமையுள்ளவனுக்கு மனவருத்தத்தை கொடுப்பதால், நெருப்புப்பற்றி யெரிகிறவீட்டில் குடியிருப்பவன் போல் தானே பல துன்பங்களை யநுபவிக்கிறான். இத்தன்மையாக மனிதருக்குள் குடியிருக்கும் தூர்க்குணமே அவர்களுக்குத் தண்டனை யாயிருக்கும்படி கடவுள் விதித்திருக்கும் வேடிக்கை ஆச்சரியமன்றோ?

தீயாருக்கு அவர்கள் தீமையே தண்டனையா யிருப்பதுபோல் புண்ணியவான்களுக்கு அவர்கள் புண்ணியமே சன்மானமா யிருக்கின்றது. அவர்கள் ஒருவரையும் விரோதியாத சர்வஜன மித்திரர்களாகையால் சர்வலோக சமாதானமும், மனோபாக்யமும் நிர்மலமான ஆத்மாநந்தமுமடைந்து வாழ்கிறார்கள்.

---

## துன்பம்.

சீராப்புராணம்.

"மன்பெரும் புவியினில் வாழு மாந்தரிற்
றுன்புறுதவ ரிலைத் துன்பைத் துன்புறு
தின்பமே கொள்பவ ரிலங்கு பொற்பதிக்
கன்பரா யிருப்பரென் றறிவு சொற்றதே."

அதாவது, உலகில் துன்பப்படாதவர்கள் இல்லை. இவ்வுலகில் அனுபவிக்கும் துன்பத்தை இன்பத்தின் ஏணியாகப் பாவித்து நடப்பவர்கள் பரலோக பாக்கியத்திற்கு பாத்தியஸ்தராவர்.

"தன்மமே பொருளெனத் தகைத்தின் மேற்செலு
நன்மனத் தவர்க்கொரு நாளுந் தீங்கெனும்
புன்மைவந் தடைந்திடா தென்னப்பூவினின்
முன்மறை யாய்ந்தவர் மொழிந்த வாய்மையே."

தர்மமே கதியென்றிருப்போர்க்கு தீங்கு அடையாது.

"இகத்தினி லெவர்க்கு முடித்திட வரிதென்றிருக்கு
மோர்வல் வினையெனினு
மகத்தினி லொருமித் தொருதுணிவா யதெப்பதோர்
முயற்சி யுண்டாயின்
ஜெகத்தினில் விளக்கும் புகழொடு முடியும்."

சலியாத முயற்சியிருந்தால் எதையும் முடிக்கலாம்.

## தெய்வச்செயல்.

"நினைத்த வதுவொழிந்து நேரிடும் வேறொன்று
மனித்த கருமங்கள் வாயா—கனத்த
அயனமர ராலு மரியாலுந் தெய்வச்
செயலினைக் காணப் படாதே."

## துன்பம்.

"கலங்காத வீரியராலும் போகின்ற காலம் வந்தால்
நலங்காமலே வெல்ல மாட்டுவரோ விந்த நானிலத்தில்
சலங்காணுங் கோட்டை மதிலேழ் தலைபத்துத் தானிருந்தும்
இலங்காபுரி நின்றதோ வெள்ளை நாவி விருப்பவனே."

## குசேலோபாக்கியானம்.

"கல்லினுட் சிறுதேரைக்கும் கருப்பை யண்டத் துயிர்க்கும
புல்லுண வளித்துக் காக்கும் புனத்துழாய்க் கண்ணி யண்ணல்
ஒல்லுமின் மைந்தர்க் காவா தொழிவனோ வொழியா னுண்மை
மெல்லியால் கொண்ட துன்பம் விடுவிடு மறந்து மெண்ணல்."

"பிரம்பைக் கையாடதவன் தன் மகனைப் பகைக்கிறான்." என்று ஞானி சொல்வதுபோல் புண்ணியவான்களை ஞானத்தில் அதிகரிக்கச் செய்யக் கடவுள் சிலசமயம் அவர்களுக்குத் துன்பத்தைக் கொடுப்பதுமுண்டு. அதற்காகச் சாதுக்கள் பின்வாங்கார். துன்பமே ஞானத்தின் வித்யாசாலை, துன்பங்கலவாத இன்பம் உலகத்திலில்லை. மருந்து கசப்பென்று உண்ணப் பயந்தால் சரீரசுகம்

கிடைக்குமோ? குளிருக்குப் பயந்தால் குளித்துச் சுகம்பெறுவ தெப்படி? பிரசவ வேதனைக்குப் பயந்தால் புத்ரபாக்யம் கிடைப்ப தெப்படி? பாடில்லாமற் பலனுண்டோ? புடமிடப் புடமிடப் பிரகாசிக்கும் பொன்னைப் போலவும், சாணையில் தேய்க்கத் தேய்க்க ஒளிமிகும் இரத்னங்கள் போலவும் என்ன துன்பம் வந்தாலும் பின்னிடாமல் புண்ணியத்தில் நிலைத்திருப்பவர்களே உத்தமர். ஏனெனில்,

தனிப்பாடல்.

"பாலுக்குச் சர்க்கரை யில்லையென்பார்க்கும்-பருக்கையற்ற
கூழுக்குப்போட உப்பில்லை யென்பார்க்கும்-குத்தித்தைத்த
காலுக்குத்தோற் செருப்பில்லை யென்பார்க்குங் கனகதண்டி
மேலுக்குப் பஞ்சணை யில்லையென்பார்க்கும் விசனமொன்றே."

---

## இன்றைக்கே. (To-day)

"காரணந் தப்பினால் மரணம், கருணந் தப்பினால் மரணம்" என்பது தமிழ் பழமொழிகளா. "அணைகடந்த வெள்ளம் அழுதாலும் வாராது." எந்தெந்தக் காலத்தில் எந்தெந்தக் காரியங்கள் செய்யப்பட வேண்டுமோ, அவற்றை அப்போதைக்கப்போதே செய்து முடிப்பதே உசிதம்.

சூரியன் உதித்து உச்சிமத்தியமாகி அஸ்தமிக்க நாள் முடிவது போல அனுக்கிரக காலமும் சீக்கிரமாய் முடிவுபெறும். கடந்த காலம் திரும்பவாராது. ஆகையால், Take time by the forelock, நமக்கெதிரில் ஓடிவரும் குதிரையின் முன்முடியைப் பிடித்து நிறுத்தினால் மட்டுமே அதை நிறுத்தமுடியும். தவறவிட்டால் ஓடிப் போய்விடும். காலத்தின் கோலாகலமும் அப்படியே. இதை நிரூபிக்குங் கதையொன்றுண்டு.

ஓர் ராஜ புத்திரியை ஓர் தேவதூதன் மகா அழகாய் விளைந்து கிடக்கிற ஓர் வயலுக்குக் கூட்டிச் சென்றனன். அங்கே அதன் ஓரத்தில் அவளை நிறுத்திக்கொண்டு, அவளைப்பார்த்து நீ இவ்வயலின் ஒரு பக்கத்திலிருந்து மறுபக்கம் மட்டும் நடந்துபோகையில், முதிர்ந்த மணிகளுள்ள ஓர் கதிரைப் பிடுங்கிக்கொள்வாயானால் அதன் தானியங்களை முத்துக்களாக மாற்றித் தருவேன். ஆனால் இந்தப் பக்கத்திலிருந்து அந்தப் பக்கத்திற்கு ஒரே தடவை மட்டும் நீ போகலாம் என்று சொன்னான். அப்பெண் வயலுக்குள் இறங்கினாள், அவளைச் சுற்றிலும் தங்கநிறமுள்ள கதிர்கள் திரட்சியாய் நின்றன. அவற்றைப் பறிக்க அவளுக்கு மனமில்லை. சற்றுத் தூரத்திலுள்ளவை அவற்றைவிடப் பெரிதும் அலங்காரமுமாய்த் தோன்றின. அவற்றைப் பறிக்கப் போகையில் அவற்றிற்

கப்பாலுள்ள கதிர்கள் அவற்றைவிடப் பகட்டாகத் தோன்றின. இவ்விதமாய் ஏமாந்து அவள் வெகுதூரம் கடந்துபோய் அங்கே கதிர்கள் சிறுத்திருப்பதைக்கண்டு ஒருவேளை அக்கரையில் பெரிய கதிர்கள் கிடைக்குமென்றெண்ணி அங்கே செல்ல, கதிர்களெல்லாம் தீய்ந்துபோய் நின்றதைக் கண்டு திகைத்தாள். ஒரு கதிரும் பிடுங்கவில்லையே திரும்பிப் போயாவது பார்க்கலாமென்றெண்ணித் திரும்புகையில் தேவதூதன் தடுத்தான். நற்காலம் வரட்டுமென்று காலங்கடத்தி தற்காலத்தைப் பிரயோஜனப்படுத்தாத கசடர் எக்காலத்தையும் வீணாய்க் கழித்து வெட்கத்திற்காளாவர் என்பது திண்ணம்.

## இளமை நிலையாமை.

"பனிபடுசோலைப் பயன்மரமெல்லாம்
கனியுதிர்ந்து வீழ்ந்தற்று இளமை—நனிபெரிது
வேற்கண்ண ளென்றிவளை வெஃகன்மின் மற்றிவளும்
கோற்கண்ண ளாகும் குனிந்து."

என்னும் பாவில் சொல்லியிருப்பதுபோல் இரத்னாபரணாதி முதலிய நவமணியணி அணிந்து, நல்வாணப் பட்டுடுத்தி, நாணத்தோடு களபம் பூசி, மந்தாரப் பூமாலை சூடி, இந்திரநீல பருவதத்தில நிலவுபட்டதென்ன முறுவலித்து மங்கையர்கள் எவ்வளவாய் மதியையொத்திலங்கினும், வயது செல்லச்செல்ல பூவானது பிஞ்சியாகிக் காயாகிக் கனியானவுடன் உதிர்ந்து போவதுபோல், தாழ்ந்து தளர்ந்து தண்டூன்றி வீழ்ந்து கூனிக் குனிந்து கோலூன்றித் தளர்நடைப் பருவத்தை யடைவாராதலின், இம்மனுஷீகத்தினழகை யொருபொருளெனக் கருதுவது முற்றும் மதிமயக்கமேயன்றி வேறல்ல.



இவ்விதமாய் வெள்ளிக்கயிறு கட்டுவிட்டுப் பொற்கிண்ணி நசுங்கி

வயற்றினருகே சால் உடைந்து, திறவண்டையில் உருளை தொங்கி, திரை தேகத்தைக் கவர்ந்து, உரோமம் கயல்முட்போன்று, நரைமுதிர்ந்து, கணபூக்துச் சொற்றளர்ந்து, கோலூன்றிச் சோர்ந்த நடையினராய்ப், பற்கழன்று, பாண்டம் பழிக்கப்படுங்காலமும் வரும்.

## மனித ஆயுளின் அளவு.

மனிதனுடைய ஆயுளாகச் சாதாரணமாய்க் கணிக்கப்படுவது நூறுவருஷகாலம். ஒருவன அவ்வாறு நூறுவருஷம் ஜீவித்திருந்தாலும் அவன் ஆயுள் காலத்தில் பாதி, அதாவது ஐம்பது வருஷங்கள் இரவாய் ஒழிந்துவிடுகின்றன. மிகுதியான ஐம்பது வருஷங்களில் அநேக வருஷங்கள் சிசுப்பருவம், பாலப்பருவம் முதலியவைகளிலும், மற்று மநேக வருஷங்கள் நோய் முதலிய துன்பத்திலும், பலவித தொந்தரவுகளிலும், விருத்தாப்பியப் பருவத்திலும் ஒழிந்து விடுகின்றன. ஆதலால் நமதென்னப் படும சுகமாய் வாழக்கூடிய சொற்பக்காலத்தை வீண்விளையாட்டுகளிலும், சோம்பலிலும் செலவழித்து விடாமல் நன்மையான விஷயங்களில் செலவிட்டுக் காலத்தை ஆதாயப்படுத்திக்கொள்ள வேண்டியது அத்யாவசியம.

"வேதனூற் பிராயம் நூறு, மனிதர்தாம் புகுவரேனும்
பாதியும் உறங்கிப்போகும், நின்றதில் பதினையாண்டு,
பேதை, பாலகனுந் தன்மை, பிணி, பசி, மூப்புத்துன்பம்
ஆதலால் பிறவி வேண்டேன் அரங்கமா நகருளானே."

என்று ஆள்வாரும்,

மனிதர்க்கு வயது நூறல்லதில்லை
ஐம்பது இரவில் அகலும் துயிலினால்
ஒட்டிய இளமையில் ஓரைந்து நீங்கும்
யாக்கை யிளமையில் ஐம்மூன்று நீங்கும்
எழுபதுபோக நீக்கு இருப்பது முப்பதே,

அவற்றுள்,

இன்புறு நாளும் சிலவே அதா அன்று
துன்புறு நாளும் சிலவே, ஆதலால்
பெருக்காறு ஒத்தது செல்வம், பெருக்காற்று
இடிகரை ஒத்தது இளமை, இடிகரை
வாழ்மரம் ஒத்தது வாழ்நாள், ஆதலால்
ஒன்றே செய்யவும் வேண்டும், ஒன்றும்
இன்றே செய்யவும் வேண்டும், இன்றும்
இன்னே செய்யவும் வேண்டும், இன்னும்
நாளை நாளை என்பீராகில்

நமனுடை முறைநாள் ஆவதும் அறியீர்,
நம்முடை முறைநாள் ஆவதும் அறியீர்,
எப்போதாயினும் கூற்றுவன் வருவான்
அப்போது அந்தக் கூற்றுவன் தன்னைச்
சாற்றினும் போகான் தமரொடும் போகான்
போற்றினும் போகான் பொருளொடும் போகான்
நல்லார் என்னான், நல்குரவு அறியான்
தீயார் என்னான், செல்வர் என்று உன்னான்
தரியான் ஒருகணம் தறுகண்ணாளன்
உயிர்கொடு போவான் உடல்கொடு போகான்.

என்று கபிலரும், நமது ஆயுள் நாட்களின் பல பருவங்களையும், அவற்றுள் நாம் ஆதாயப்படுத்தவேண்டிய காலங்களையும் தெளிவாய் விளக்கியிருக்கும் பிரகாரம் உணர்ந்து நன்னெறியைக்கடைப் பிடித்து ஒழுகக் கடவோம். ஏனெனில், புத்திமான் பலவானுவான், பலமுளான் புத்தியற்றால், எல்லாப்படியாலும் இடருற்று ஏங்கி நிற்பான்.

"மண்ணாடு மன்னவரு மவர் தனமும் மாண்டன துண்மணலை யொக்கும்
விண்ணாடுமிந்திரரு மவர் வாழ்வும் போயினவிண் மீனையொக்கும்
எண்ணரும் பிரமரு மண்டலமும் பூதங்களு மிறந்தன வெல்லையில்லை
கண்ணாரு மீங்கே நின்வாழ்க்கை நிஜமென்றே கவரும் நெஞ்சே."

"முற்றியபின் கனியுதிரும் பழுப்புற்ற விலையுதிரு முழுதுமேநெய்
வற்றியபின் விளக்கவியு மென்னவுமோர் திடமுண்டு மக்கள்காயம்
பற்றியகற் கருப்பத்தோ மூப்புற்றோ விழுவதென்ன நிலையிலையால்
மற்றிதனை நிஜமென்றே நினைப்பதெங்கே மடமைநெஞ்சே."

"நெல்லறுக்க வோர்கால மலர்கொய்ய வோர்காலம் நெடியபாராங்
கல்லறுக்க வோர்கால மரமறுக்க வோர்காலங் கணிதமுண்டு
வல்லரக்க னனைய நமனினைத்த பொழுதெலா நம்மவாழ் நாளென்னும்
புல்லறுக்க வருதனெனின் மற்றினி யிதன்பெருமை புகல்வதென்னை."

உண்ணும்போதோ, உறங்கும்போதோ, உலாவும்போதோ, திரியும்போதோ, இச்சமயமென்றில்லாது நிமைப்பொழுதில் பிராணன் நீங்கிவிடுவது ஆச்சரியமல்லவா? என்றைக் கிருந்தாலும் மண்ணிற் கிரையாவது நிச்சயமென்று அறிந்திருந்தும் ஒருவரையொருவர் மோசஞ்செய்வதும், பொய் புரட்டு பொல்லாங்கு சொல்வதும், பிறர்பொருளை ஆசிப்பதும், எவரையும் மதியாது மனந்திமிர்கொட்டு நோகப் பேசுவதும் ஆச்சரியத்திலும் ஆச்சரியமன்றோ?

ஆதலால் நம்முடைய வாலிபப்பிராயத்தில் நம்மை இதுவரை மர்க்கடகத்தையடக்கி யாளுமாப்போல் தடுத்தாட்கொண்ட ஜெகதீசனைத் துதிப்பது அவசியம்.

## "மாயா மாயாத் தம்பனம்."



ஆ! சகலமும் மாயையே, கல்வி மாயையே. செல்வம் மாயையே, ரதகஜதுரகபதாதிச் சேனைகளெல்லாம் மாயையே. "மாதா பிதாமற்றும் செல்வமிருந்தாலும், மரணம் வந்து உன்றன் வாழ்வைக் குலைக்கும் உலகம் உன் சொந்தமல்ல." யமதூதன் நினையாத காலத்தில் வந்து பூ உதிர, பிஞ்சு உதிர, காயுதிர, கனியுதிர, கால தண்டத்தா லடிப்பான்.

"தந்தைதாய் தமர்தார மகவென்னு மிவையெலாஞ்
சந்தையிற் கூட்டமிதிலோ
சந்தேகமில்லை மணிமாட மாளிகை மேடை
சதுரங்க சேனையுடனே
வந்ததோர் வாழ்வுமோ ரிந்திரசாலக் கோலம்
வஞ்சனை பொறாமை லோபம்
வைத்த மனமாங்கிருமி சேர்ந்த மலபாண்டமே
வாஞ்சனையிலாத கனவே."

"சந்தைக்கூட்டம், பொம்மலாட்டு, மாதர்சந்தடி செய்யும் சீராட்டு, விந்தையான விளையாட்டு, மந்தை வேடிக்கையென்று விட்டோட்டு."

"அழுதாற் பயனென்ன நொந்தாற் பயனென்ன வாவதில்லை
தொழுதாற் பயனென்ன தொட்டினை யொருவர் சுடவுரைத்த
பழுதாற் பயனென்ன நன்மையுந் தீமையும் பங்கயத்தோன்
எழுதாப்படிக்கு வருமோ சலியாதிரு யேழைநெஞ்சே."

"பணந்தேடி யாரிருந்தார் பாழ் லோகத்திற்
பாவி திரியோதிரனும் பாட்டனும்
குணநிறைந்த மகுடமன்னர் கருணன் பூரி
சூரியதோர் தேத்தரசன் சகுனி சல்லி

பிணமானு ரர்ச்சுனன் கை யம்பினாலே
பிலமான வவர்களையுந் துணையும்போச்சா
மணமான மக்கள் பெண்டீர் சுற்றமெல்லாம்
மாய்கையடா சற்றுநீ மதித்துப்பாரே."

இறப்பதும் பிறப்பதும் நம்மாலியன்ற காரியமேயல்ல. "பேரினைமை, இன்பம், பிணி, மூப்பு, சாக்காடு ஆறும் கருவிலமைந்தபடி." என்னும் ஆன்றோர் வாக்கின்படி ஆராய்ந்து பார்க்கில், பிறப்பென்பதற்குச் சந்தோஷமும், இறப்பென்பதற்கு விசனமும் நேரிடவேதற் கவசியமில்லை. நமது தாயின் கர்ப்பத்தில் உற்பவித்த நாளிலேயே இன்ப துன்ப முதலிய சகல சுகதுக்கங்களும் அமைதலே யன்றி, கருக்குழியை நீற்றபின்னர் நம்மாலாவ தொன்றுமில்லை. ஒருவன் சம்பாதிப்பதும், தரித்திரனாவதும், யோகியாய், ஞானியாய் சாந்தகுண மடைவதும், மூர்க்கவெறியினால், பிறரைக் கெடுக்க முயலுவதும் ஆகிய பலபேதா பேதங்கள் கருவிலேயே அமைந்துவிடுவதால் நம்மால் யாதொரு காரியமும் முடியாது.

" ஆவாரை யாரே யாழிப்பா ரதுவன்றிச்
சாவாரை யாரே தவிர்ப்பார்—எவாம
லையம் புகுவாரெ யாரே விலக்குவார்
மெய்யம் புவியதன் மேல்."

" இருப்பது பொய்! போவது மெய்!
யாதிருந்து மென்னும்?
எவரிருந்து மென் செய்வார்?
எமன்வருங் காற்றேடும்
பொருள் கொடுத்துப் பிழைப்பாயோ?
தமரை யனுப்புவையோ?
பொய்யுரைத்தாற் சென்றிடுமோ;
பிற்கணத்தே வருவேன்.
உருக்கம் வையுமையா வென்
றழுதும் விடுவானோ?
ஊட்டி வளர்த்திடு முடம்பி
னொடுகொடு போகானோ?
செருக் கெதுவோ நிலையில்லாப்
பொருட் கழுவாய் மனமே
ச்சீ நீ யறிந்து கெட்டாற்
செப்புவர் யாருனக்கே."

இந்த உலகத்தில் நாம் சொற்பக் காலமாக அனுபவிக்கும் சுகதுக்கங்கள் யாவும் சந்தைக் கூட்டமானது காலையில்கூடி மாலையில் குலைந்து போவதுபோலும், சிறு பிள்ளைகள் சிறு வீடுகட்டி, பெண்மாப்பிள்ளை யென்று வைத்து, உங்களையா ஆனை அம்மான்

ஆணை, நீ என் வீட்டுக்கு வராதே. நான் உன் வீட்டுக்கு வரமாட்டேன் என்று சொல்லி விளையாடி விட்டுக் கடைசியாக, தூ, ஆணையழித்தேன், ஆணையழித்தேன் முக்காலும் மூன்றுதரம் ஆணையழித்தேன் என்று சொல்லிக் கையாலும் காலாலுந் தங்களரண்மனைகளை யழித்துவிட்டுக் கைகளையத் தட்டிக்கொண்டு அவரவர் தம்தம் வீடுகளுக்குச் செல்லுதல்போலல்லவோ நம் வாழ்க்கை இருக்கிறது? ஆகையால்தான் இவ்வுலகத்தின் காரியாதிகள் யாவையுமாராய்ந்தறிந்துணர்ந்த ஞானிகள் இவ்வுலகமொரு சதமல்லவென்று நினைத்து "சம்சார சாகரோ துக்கம் அனந்தக் கிலேசோ பாஜனம்" என்பதன் கருத்தை யுணர்ந்து இல்லறத்தைத் துறந்து, துறவறவாசிகளாகின்றனர். இவ்விதம் உணர்ந்து தம் ராஜ்யத்தையும் மனைவியையும் துறந்து தவம்புரியும் பொருட்டு ஆரண்ணியஞ் சென்ற ஓர் மகாராஜாவினிடத்தில் அவனுடைய மந்திரி இல்லறமே பெரிதென்று பல நீதிவாக்கியங்களாலும் போதிக்க அரசன் விடுத்த விடை யாதெனில்:—

## மகாராஜா துறவு.

பாலனென பருவம்போம் பண்ணுகுமாரப் பருவம்போம்
கோலமான தருணம்போங் கோலையூன்றிக் குனிந்தெழுந்து
காலன்மாய்க்க வினைவர்களுங் கல்லென்றழுது பேர்மாற்றி
வலப்பிணமென்றொரு பெயரிட்டிடுக் காட்டிடுத லொருதலையே.

கருவிலின்று மழிந்துபோங் கண்டகுழந்தையினுங் குமரப்
பருவந்தனிலும் போந்தருணப் பருவந்தனிலு மழிந்துபோம்
உருவநரைத்தே யப்பதிலு மொடுங்கு மந்தக்காலையினும்
வருவியழி தலியல்பாகு மூலகத்துடலின் வாழ்க்கையுமே.

இந்த விழிவையுடைய விந்தமாயை யகத்தே
அந்த வுயர்வையுடைய வந்தப் பிரமஞ்சத்தே
அந்தமனத்திற் றேர்ந்தோர் தள்ளி யெஃதைதிற்பர்
எந்தன் மனத்தினைக்கூ யூகித்தமைச்ச பாராய்.

பொய்யென் றிதனையறிந்தோர் பொருந்தி நிற்பதனதோ
மெய்யென் றதனை யறிந்தோர் மேவா திருப்பதனதோ
ஐயமுளதோ விதனி லமைச்சபாராய் நன்றாய்
உய்ய வறிவிலாதோ ருழல்வர் நீங்கமாட்டார்.

பொய்யை மெய்யென்றறிந்து போதமின்மையாலே
மெய்யைப் பொய்யென்றெண்ணி மெலிந்தே யுழல்வருலகர்
பொய்யைப் பொய்யென்றறிந்து போதகுருவினருளின்
மெய்யை மெய்யென்றறிந்தே மெலிவுதீர்வருயர்ந்தோர்.

துன்பந் தோன்றி லெவரும் தூரத்தேகராய்த் தனித்தே
இன்பந் தேடலியற்கை யின்பமென்றே தோன்றில்
அன்பதாக நீங்கா ரவர்கட்கெங்கள் கூடும்
நன்பரம ஞானநாட்ட மமைச்ச சொல்லாய்.

இழிவை யுணர்ந்தா லுயர்வை யெவருந்தேடிநோக்கும்
இழிவை யுணராருயர்வை யெய்தநோக்கா ரென்றும்
இழிவையிழி வென்றுணர வெந்தக்காலம் வாய்க்கும்
இழிவையுடையோர்க் கமைச்ச விதிதனை யுகித்துணராய்.

இல்லறமதனி லுறைந்தளோரிடத்தி லிருப்பினும் ஞானங்கீழிரும்பித்
புல்லியமாரத்தினமெனவிளங்கும் போக்கியில் வினைத்துறவென்னும்
நல்லறமடைந்தோ ரிடத்துறை ஞான நற்றங்கதிசை யிரத்தினம்போல்
எல்லையிலொளியாய் விளங்கிமெய்யி னில்சிறப்பன்று ஞானிகட்கே.

ஆ! எமதிஷ்டர்களே! நாம் இப்பால்ய திசையிலேயே இவ்வுலகத்தின் வாழ்வு அநித்தியமெனக் கருதி,

உன்னதத்தை நோக்கி யொருபொருளைச் சிந்தனைசெய்
பொன்னுலகைப் போக்கடித்துப் போடாதே—மின்னலொத்த
தாழ்வுதங்கும் பாழுலகச் சண்டாள மாமாய
வாழ்வை நம்பாதே மனமே

நான்னூர் பாட்டை மனதில் தியானித்து பக்திநெறி முத்திநெறியின் பக்குவ நிலைமைக்குட்பட்டு நடக்கத் தொடங்குவோமாயின் என்ன பாக்கியம்! எவருக்குண்டிந்த விலாக்கியம்!

இங்ஙனம் தயாதாக்ஷிண்ணிய தைரிய சௌரியாதி சகல கல்யாணகுண பூரணரும், அமிர்தசக்திபரரும், நிஜஸ்வரூபரும், மங்களமான கீர்த்தி சம்பன்னருமான சச்சிதானந்த மூர்த்தியாகிய சாக்ஷாத் ஜெகதீசருடைய பாதாரவிந்தங்களை அஞ்சலி செய்து என்னுடைய உபந்யாசத்தை முடிக்கிறேன்.

அனைத்துயிர் ஒன்றென்றெண்ணி அரும்பசி யெவர்க்குமாற்றி
மனத்திலே பேதாபேதம் வஞ்சனை களவும் பொய்யும்
சினத்தையுந் தவிர்ப்பாயாகில் செய்தவம் பின் வேறுண்டோ
உனக்கிது உறுதியான உபதேசம் சொன்னேன் கண்டாய்.

ஒன்றென்றிரு தெய்வ முண்டென் றிருவுயர் செல்வமெல்லாம்
அன்றென் றிரு பசித்தோர் முகம்பார் நல்லறமு நட்பு
நன்றென் றிரு நடு நீங்காமலே நமக்கிட்டபடி
யென்றென் றிரு மனமே யுனக்கே யுபதேசமிதே.




சாமிவேல் வைத்யசாலையில் மருந்து ஆர்டர் செய்பவர்களுக்கு வருடந்தோறும் கியாலண்டர் மற்றும் வெகுமதிகளுங் கிடைக்கும்.

சாமிவேல் வைத்யசாலை,

தென்காஞ்சி, இரங்கோன்.

கடவுள் துணை.

# மானிட மர்மசாஸ்திரம்.

## இரண்டாம் புஸ்தகம்.

## இல்லற இன்ப ரகசியம்.

அறனெனப்பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன் பழிப்ப தில்லா யினன்று.—குறள்.

இஃது

யாவர்க்கும்
சுகசெல்வ நன்மைகளையும் சுகிர்த பாக்கிய
மோக்ஷத்தையும் நீடூழி பெருகுவிக்க
விரும்பிய

கல்கத்தா சர்வகலா சங்கத்தின் தமிழ்ப் பரீக்ஷகரும்,
ரங்கூன் செண் ஜான்ஸ் கல்லூரிப் பிரதானபோதகாசிரியராயிருந்தவரும்,
கணிதசாஸ்திரம், புவிசாஸ்திரங்களின் இரசந கர்த்தாவும்,
மானிட மர்ம சாஸ்திரப் பண்டிதரும்,
சாமிவேல் வைத்தியசாலைத் தலைவருமாகிய

எஸ். சாமிவேல், பி. ஏ. அவர்கள்
இயற்றியது.

புதிய பதிப்பு.

சாமிவேல் பிரஸ்,
தென்காஞ்சி, இரங்கூன்.
1918.

All Rights Reserved.



ராஜயோகத்திலமர்ந்த தபோதனரிருவர்.




இல்லற இன்ப இரகசியம்.

## துறவறம்.



அன்றுமலர்ந்து அன்றே வாடும் புட்பத்துக்குச் சமானமான அநித்திய உலகச்செல்வத்தையும், அழிவுள்ள பிரக்கியாதியையும் அற்பமெனத் தள்ளி, அட்சய வீட்டகம் நிச்சயமாய்ச் செல்லும் வழியாகிய அருந்தவ முனிவர்கள் அடைந்த சந்நியாசமே துறவறமாகும்.

துறவறத்தையே சிலாக்கியமாய்ப் பேசுகிறவர்கள் உலகவாழ்வுகளினின்பம் நிலையற்றதென்றும், கடவுளிடத்து அன்பு செலுத்தி அவருடைய அருளைப் பெறுவதே ஆனந்த பாக்கியமென்றுங் கொள்வர்.

### தணிகைப்புராணம்.

மனைக்குரிமனையாடன்னைவாய்த்தநன்மைந்தர்தம்மைக்
கனைத்தலைசுருட்டும்வேலைக்கடனிகர்செல்வந்தன்னை
யெனைத்தையுமிலம்பாடென்றேயிம்மெனத்துறந்துபெம்மான்
றனைச்சரணடைந்துளாரேதனைநிகரில்லாச்செல்வர்.

சிற்றிலிழைத்தாரோர்பாற்செறிந்தாடும்விளையாட்டுப்
பொற்றமனையறம்புரிகாற்புகுதசெயினகைதரல்போ
லற்றமிலாவில்லறமென்றாதரிக்கப்படுவதருட்
பற்றுமிகும்போதுன்னிற்பழுதெனத்தோற்றுவதன்றே.

### சிவ-மெய்ஞ்ஞானவிளக்கம்.

சிறப்புறுநோயாற்றுன்பஞ்செடிகொண்மூப்பதனாற்றுன்ப
மறப்புறத்தியக்கஞ்செய்யுமரணவேதனையாற்றுன்பம்
பிறப்பவரெக்காலத்துமபெறுவதுதுன்பமானாற்
றுறப்பதேகருமந்துன்பப்பிறவியாந்துயரந்தீர.

எவ்விடத்திலுமெக்காலுமியாவையுந்துன்பமானாற்
பொய்வகைப்பிறவிநீங்கப்போகுமாறதனைநாடி
யைவகைத்துவந்துவங்கண்மயக்கினையறத்துறந்தே
யுய்வகைத்திறத்தையோர்வாரொருப்படலடுப்பதையா.

### தாயுமானவர்பாடல்.

அந்தக்கரணமடங்கத்துறப்பதே
யெந்தத்துறவினுநன்றெந்தாய்பராபரமே

சித்திரையிற்செத்தபிணநேருமுடற்கிச்சைவையாச்
சுத்தர்களேநல்லதுறவோர்பராபரமே.

### திருக்குறள்.

யானெனதென்னுஞ்செருக்கறுப்பான்வானோர்க்
குயர்ந்தவுலகம்புகும்.

தலைப்பட்டார்தீரத்துறந்தார்மயங்கி
வலைப்பட்டார்மற்றையவர்.

## காஞ்சிப்புராணம்.

துறவேயறங்களெவற்றினுக்கும்பெரிதாம்விடையூர்தோன்றலுங்
துறவேயுவகைவரச்செய்யுந்துறவேயயன்மாலுலகளிக்குந்
துறவேயீசனிடத்திருத்துமெவருமேலாச்சொல்லுவதுந்
துறவேயாமென்றெழுந்தின்றுசொற்ருன்சைவத்துருவாசன்.

## சிவ-குறுந்திரட்டு.

கருப்பமென்னுமக்காரிருட்சிறையினிற்கதுவு
நெருப்பில்வெந்துளைந்துகெடத்தலைதகர்ந்திடவே
பொருப்பினின்றுவீழ்பவனெனப்போந்தமைநினையா
விருப்புநெஞ்சினர்க்கென்னையாமினியியம்புவதே.

குழவியிலறியாத்துன்பங்குமரர்க்குமாரந்துன்பங்
கழிதருகாமநோயாற்காளையாம்பருவத்துன்பம்
விழைவுறுபோகஞ்சுட்டிவெறுக்கையைவிரும்பிமேவுந்
தொழிலுறுற்றுன்பமந்தத்தொழிலிடையூராற்றுன்பம்.

அல்லலாற்செல்வத்துன்பமதினுநல்குரவுத்துன்பங்
கல்வியாங்காரத்துன்பங்கற்றிலனாயிற்றுன்ப
மல்லன்மாஞாலந்தன்னில்வலிமிகுமத்தாற்றுன்ப
மில்லையேலவ்வலியோர்தம்மாலிடழிவுறலாற்றுன்பம்.

சிறப்புறுநோயாற்றுன்பஞ்செடிகொண்மூப்பதனாற்றுன்ப
மறப்புறத்துயக்கஞ்செய்யுமாரணவேதனையாற்றுன்பம்
பிறப்பவரெக்காலத்தும்பெறுவதுதுன்பமானாற்
றுறப்பதேகருமந்துன்பப்பிறவியாந்துயர்நீங்க.

## ஞானவாசிட்டம்.

வருத்தமற்றச்சஞ்சோகமதமின்றிநன்னூற்பின்போ
யொருத்தனாலலவலன்றியுலவுகாசிக்கவேண்டா
வருத்தங்களநாதயாகுமவிப்பாகங்கண்ணுறுயாம்
பெருந்தவாயத்தாருஞ்செல்வம்பரின்பகிராசைதானே.

இடும்பைகூர்சங்கமின்றியற்கையாசாரமெய்திக்
குடும்பமாந்துயர்சிற்றின்பங்குறித்திடாப்பெருமையோர்க்கு
நெடும்புகழ்வாழ்வுஞ்செல்வச்சிறைகுணமனைத்துமுண்டாய்ப்
படும்பலன்வசந்தகாலக்காடிகள்போற்பலிக்குமன்றே.

## இராமாயணம்.

மக்களைக்குருக்கடம்மைமாதரைமற்றுமுள்ளாரை
யொக்குமின்னுயிரன்றாயுதவிசெய்தாரோடொன்றத்
துக்கமுந்தொடர்ச்சியென்றுதுறப்பாராற்றுணிவுபூண்டோர்
மிக்கதுநலனையாவீடுபேறளிக்குமன்றே.

## சிவ-விஞவிளக்கம்.

உடலினைப்பேணல்விட்டாரொன்றியசெல்வம்விட்டார்
விடலருஞ்சுற்றம்விட்டார்வேட்கைவேரோடும்விட்டா
ரிடனுடைக்குலமும்விட்டார்யானெனதறவேவிட்டார்
கடனுடைக்கல்விவிட்டார்கற்பனைமுழுதும்விட்டார்.

ஊரெனும்பேரும்விட்டாருலகியன்முழுதும்விட்டா
ராரெனுமோர்வம்விட்டாரகனிலுஞ்செற்றம்விட்டார்
பாரெனும்விண்ணுந்துன்பமெனப்பழுதறவேவிட்டார்
தேரியவெவையும்பொய்யென்றேனைகைசெய்துவிட்டார்.

## அறநெறிச்சாரம்.

நீக்கருநோய்மூப்புத்தலைபிரிவுநல்குரவு
சாக்காடென்றைந்துகளிறுழக்கப்—போக்கரிய
துன்பந்தட்டுன்பமுழப்பார்துறக்கெய்து
மின்பத்தியல்பறியாதார்

## திருக்கூவப்புராணம்.

உறவுதந்தைதாயொண்டொடிமாதரார்
சிறுவர்வண்புவிசெல்வம்பெரும்புகழ்
பிறவினும்பமோசைபிரிந்துமெய்த்
துறவினல்லதுதுன்பமகலுமோ.

## கந்தபுராணம்.

செம்மையாகியசிந்தையர்சீரியோர்
வெம்மையென்பதைவிட்டிவிளங்கினோர்
தம்மையுந்துறந்த்தலைநின்றவ
ரிம்மைதன்னினுமின்பத்தைமேவுவார்.

இம்மையாவதியாண்டுமில்லாதவர்
நன்மையென்பதியல்பெனநண்ணினோர்
புன்மையானபொருள்விரும்பாரவர்
தன்மையாவரேசாற்றவல்லார்களே.

## சிவதருமோத்தரம்.

மண்ணினுந்தனத்தினுமனைக்குவாய்த்தநற்
பெண்ணினுமகவினும்பெரியபேரினும்
துண்ணெனவிழைவினைத்துறந்ததூயரே
விண்ணினுமின்புடன்விளங்குமேவுவார்

## நீதிநெறிவிளக்கம்.

பெண்மைவியவார்பெயருமெழுத்தோதார்
கண்ணொடுநெஞ்சுறைப்பநோக்குறார்—பண்ணொடு
பாடல்செவிமடார்பண்பல்லபாராட்டார்
வீடில்புலப்பகையினார்.

## ஒழிவிலொடுக்கம்.

நித்திரைசெய்வீட்டினெருப்புப்பெரும்படையு
முட்டிப்புறப்பட்டாமுற்றத்தே—பித்தரைப்போ
னில்லெனறுசொன்னாலுநிற்பரோவப்படிக்கா
ணில்லறத்தைத்தீர்த்தாரியல்பு.

### மகாராஜாதுறவு.

இல்லறமதனி லுறைந்துளோரிடத்திலிருப்பினும் ஞானமீழிரும்பிற்
புல்லியமாரத்தினமென விளங்கும்போக்கிலில்லினைத்துறந்தவன்னும்
நல்லறமடைந்தோரிடத்துறைஞானநற்றங்கமிசையிரத்தினம்போல்
எல்லையிலொளிபாய்விளங்கிநமாயினில்சிறப்பன்று ஞானிகட்கே.

இல்லறத்தை அநுசரிப்பவரிடத்துண்டாகும் ஞான அறிவானது மிகவும் தாழ்வான இரும்பின்கண்ணே பதிப்பிக்கப்பட்ட இரத்தினத்தைப்போல் துலங்கும். இல்வாழ்க்கையைத் துறந்து துறவறவாசிகளானவர்களிடத்துத் தோன்றும் ஞானவொளியானது சுத்தத் தங்கத்துக்கட்டின்மேல் பதித்த இரத்தினம்போல் எங்கும் பிரகாசமாய் ஜொலிக்கும். ஆகலால் ஞானிகள் இல்லறத்தைவிடத் துறவறமே மேலானது என்று சொல்லி உலக ஆசாபாசங்களைத் துறந்து துறவறவாசிகளாகின்றனர்.

### தாயுமானவர்.

பொன்னை மாதரைப் பூமியை நாடிடேன்
என்னை நாடிய என்னுயிர் நாதனே
உன்னை நாடுவன் உன்னருள் வெளி
தன்னை நாடுவன் தன்னந் தனியனே.

தன்னை வென்றுலவாச் சாற்றுவன எல்லாம்
பின்னை வென்றனை பின்னிடத் தந்தேன்
இன்னம் என்னை இடர் உறக் கூட்டினாற்
பின்னை உய்கிலன் பேதையன் ஆவியே.

செய்யுஞ் செய்கையுஞ் சிந்திக்குஞ் சிந்தையும்
ஐய நின்னதென் றெண்ணவும் அறிவின்றி
வெய்ய காம வெகுளி மயக்கம் ஆம்
பொய்யிலே சுழன்றேன் என்ன புன்மையே.

இல்லை உண்டென் றிவர் பக்கம் ஆயினும்
சொல்லவோ அறியாத தொழும்பன் யான்
செல்ல வேறொரு திக்கறியேன் எலாம்
வல்ல நீ எனை வாழ்விக்க வேண்டுமே.

கண்ட கண்ணுக்குக் காட்டுங் கதிர் எனப்
பண்டும் இன்றும் என்பா லின்றுணர்த்திடும்
அண்டனே உனக்கோர் பதிலுயிர்
தொண்டன் என் பொய்ம்மை தீர்த்திடல் வேண்டுமே.

உண்டவர்க்கன்றி உட்பசி ஓயுமோ
கண்டவர்க்கன்றி காதல் அடங்குமோ
தொண்டருக்கெளியன் என்று தோன்றுவான்
வண்டமிழ்க் கிசை வாக மதிக்கவே.

விரக்தராயிருக்கும் அந்த விசேஷ வரப்பிரசாதம் யாவருக்கு முரியதன்று. கடவுளால் துறவறத்திற்கென்று நியமிக்கப் பட்டவர்களுக்குக் கடவுளைப்பற்றிய வாஞ்சையும் விசேஷ பக்தி

பொழுக்கத்தாற்பரியமும், ஜெபதபஆசையும், உலக சுகசந்தோஷ வாழ்வுகளெல்லாம் புகைபோற் கலைந்து கனாப்போற் மாறியொழிந்து விடுகின்றனவென்ற எண்ணமும், கல்யாணத்தின்மேல் வெறுப்பும், மாறுதகற்பு அனுசரித்துப் பரலோக நன்மைப் பாக்கியத்தின் மேல் அவாவும் நெடுநாட்களாக விருக்கும். இவ்வித சுவிசர குணம் வாய்க்கப்பெற்றவர்கள் உலகத்தையும் உலக சம்பந்தங்களையும் பற்றறத் துறந்தவர்களாய், வீண் வார்த்தை யாடாதவர்களாய், தமது சரீர இஷ்டசன நிலைமையை யறிந்து பாபபதவிக்கேற்ற வழிகளை அநுஷ்டிப்பவர்களாய் லௌகிகமும் வெறுத்துப் பாராதவர்களாய் அல்லும் பகலும் ஜெபத்தியான நிஷ்டையராய்த் தேகமெலிந்தும் முக களைகுன்றாதவராய்ப் பிரகாசித்து நிற்பார்களாயின் அவர்களே துறவறவாசிகளாவர்.

## * ராஜயோகம்.

யோகிகள் கடவுளைக் கண்டு களித்து அவரோடு ஒன்றாகும்படி எளிதில் செய்யும் ராஜபாதையாகிய யோகாப்பியாசம் யாதெனில், இவர்கள் முதலாவது பல இடங்களுக்கும் ஓடிக்கொண்டேயிருக்கு மனதைச் சிதறவிடாமல் தம் வசப்படுத்தும்படி அநேக லக்ஷம் உரு ஜெபிப்பதாலல்லது ஒருவஸ்துவையே நோக்கிப்பார்த்துக்கொண்டேயிருப்பதால் தம் சித்தத்தை ஒரே நிலையில் நிறுத்தி, அடக்கியாண்டு, அதைத்தமக் கிஷ்டமானபடி எந்த இடத்தில் எவ்வளவு நேரம் நிறுத்தி வைக்க வேண்டுமோ அவ்வளவு காலம் நிறுத்தி வைக்குஞ் சக்தியை யடைகிறார்கள். அதன்பின்பு பிரதிதினமும் சந்தடி யில்லாத இடங்களுக்குப் போய் அங்கே சில நேரம் ஏகாந்தமாயிருந்து மனதை ஒருவழிப்படுத்தி, யாதேனுமோர் படத்தை அல்லது ஓர் அரிய பெரிய விஷயத்தைத் தம் முன் நிறுத்தி அதையே தியானிக்கப் பழகுகிறார்கள். இவ்வாறு சிலகாலம் அப்பியாசம் செய்து மனதைத் தம் வசப்படுத்துந் தன்மை யடைந்தபின் பரமநிஷ்டை செய்யப் பழகுகிறார்கள். அதாவது தங்களுக்கெந்தக் கடவுள் மூர்த்தத்தில் மதிப்பும் பக்தியு மிருக்குமோ அந்தக் கடவுளின் பிம்பத்தையாவது, மனப்படத்தையாவது தம்முன் நிறுத்தி அதனிடத்திலேயே தம் மனதைச் செலுத்தித் தியானம் செய்துவரின் அக்காலத்தில் நிஷ்டை செய்பவர்களும் அவர்களுடைய தியேயப் பொருள்களாகிய தெய்வமூர்த்தங்களும் ஒன்றாகி அத்வைதமாவார்கள். அப்பொழுது அவர்களுக்குப் புதுவாழ்வு உண்டாகி, நினைத்த தெல்லாங் கைகூடி ஆனந்தக்கடலில் மூழ்குவார்கள். இது இல்லறவாசிகளான யாவரும் துறவறவாசிகளும் எளிதில் செய்யக்கூடிய ராஜயோகமெனப்படும். இவ்வித அப்பியாசங்களால் யாவரும் நன்மை யடைவார்களே யன்றித் தீமை யொன்றும் நேரிடாது.

* இதன் விரிவை யவைசிய சாஸ்திரத்தில் ------

## * தேவாரம்.

கற்பகத் தருவேஞானக் கடன்மடைத் திறப்பேயெட்டா
அற்புத வெற்பேயாரும் அளவிடற் கரியமுத்தே
சிற்பர வருவே நெஞ்சந் திருத்திடுங் குருவேயெந்தாய்
தற்பரா யேசுநாதா தண்ணடி போற்றி போற்றி.

என்னையோர் பொருளாயேற்று எனதுபுன் உடலைப் போர்த்து
மன்னிய புவியுட் வாழும் மகிழ்ந்தது சுயிக்குமாறே
நின்னையே தந்தாய் அந்தோ நினைக்கையில் இனிக்குதுள்ளம்
பொன்னையா யேசுநாதா பொன்னடி போற்றி போற்றி.

---

பொன்னார் மேனியனே புவிவானைப் படைத்தவனே
மின்னார் செங்கரத்தில் மிளிர் ஆணி அணிந்தவனே
மன்னே மாமணியே மகிழ்மாமறை மாணிக்கமே
அன்னே நின்னையல்லா லினியாரை நினைக்கேனே.

பண்டே நின்னடியா ரடியாரடி யார்கட்கெல்லாம்
தொண்டே பூண்டணிந்தேன் நின்றாளடி சரணமென்றே
வண்டார் பூம்பொழில்சூழ் பெத்தலேகமின் மாணிக்கமே
யண்டா நின்னையல்லா லினியாரைப் பணிந்திடுவேன்.

நெறியே நின்மலனே நெடு பாவலர் போற்றிசெய்யும்
குறியே நீர்மையனே கொடியேனைமீட்டாள் தலைவா
திரியேகராய்த் தோன்றி எமைத்தடுத்தாட் கொள்பவனே
அறிவே நின்னையல்லா லினியாரைப் பணிந்திடுவேன்.

ஐங்கா யத்தினடைக் கலமளிக்கு மற்புதனே
மெய்யா யுன்னடிமை சாமி யேழுலாம் வந்துசேராய்
பொய்யா துன்னருளைப் பொழிந்தாட்கொள்வா யீஸ்வரனே
ஐயா வென்னமுதே எனக்கார்துணை நீயலதே.

---

## தியானமாலை.

கன்னிமரியீன்ற யெங்கள்கோவே அன்புக்
கரும்பேயென் கண்ணே மெய்க்கருணைவாழ்வே
புண்ணிய நன்னிலை யுடையோருளத்தில் வாய்க்கும்
புத்தமுதே யானந்த போகமேசீர்.
எண்ணிய மெய்த்தவர்க்கெல்லா மெளிதிலீந்த
வென்னரசே ஐங்கா யத்திறையாம் வித்தே,
திண்ணியவென் மனமுருக்கிக் குருவாயென்னைச்
சிறுகாலை யாட்கொண்ட தேவ தேவே.

நின்னிருதாட்டுணை பிடித்தே வாழ்கின்றேனுன்
றன்னையலாற் பின்னையொரு நேயங்காணே.
னென்னையினித் திருவுளத்தி னினைதியோநா
னேழையினு மேழைகண்டா யெந்தா யெந்தாய்.

---

* இந்துக்களுக்குள் தேவார முதலியன அனந்தம் உண்டு. கிறிஸ்துமார்க்கம் மேற்கட்டு மூலமாய் இந்தியாவுக்கு வந்தமையால் கிறிஸ்தவர்களி லனேகருக்குத் தேவாரத்தி னருமை தெரியாது. வேதநாயக சாஸ்திரியார் இவ்விஷயத்தில் செய்திருப்பது வியப்பக்குரியதே. திருவருட்பா முதலியவற்றிலுள்ள சிலபாடல்களை கிறிஸ்தவர்களினுபயோகத்திற்காக வேண்டியவண்ணம் அமைத்திருக்கி

பொன்னையன்றி விரும்பாத புல்லர்தம்பாற்
போகவொழிந் தன்பதமே போற்றும் வண்ணஞ்
சின்னமளித் தருட்குருவா யென்னை முன்னே
சிறுகாலை யாட்கொண்ட தேவ தேவே.

எந்தை பிரானென்னிறைவ னிருக்கவிங்கே
யென்னகுறை நமக்கென்றே யிறுமாப்புற்றேன்,
மந்தவுலகினிற் பிறரையொரு காசுக்கு
மதியாமல் நின்னடியே மதிக்கின்றேனையா,
னிந்தவடி யேனிடத்துன் றிருவுளந்தா
னெவ்வாறோ வறிகிலேனே ழையேனுற்,
சிந்தைமகிழ்ந் தருட் குருவா யென்னை முன்னே
சிறுகாலை யாட்கொண்ட தேவ தேவே.

பன்னீர்க்கண் மலர்மலர்ந்த கடலே ஞானப்
பரஞ்சுடரே பாவிகளைக் காக்கும் கோவே,
யென்னிரு கண்மணியே யெந்தாயே யென்னை,
யீன்றானே யென்னரசே யென்றன் வாழ்வே,
பன்னிருவர் புடைவிளங்கப் பக்தராக
விருப்பு மடியார்காண மேவுந் தேவே.
சென்னியினின் னடிமலர் வைத்தென்னை முன்னே
சிறுகாலை யாட்கொண்ட தேவ தேவே.

அருணிறைந்த பெருந்தகையே யாநந்தவமுதே
அன்பருளக் கோயிலிலே யமர்ந்தருளும் பதியே,
தெருணிறைந்த சிந்தையிலே தித்திக்குந் தேனே
செங்கனியே யென்னிருகண் ணயங்குமொளி மணியே.
மருணிறைந்த மனக்கொடியேன் வஞ்சமெலாங் கண்டு
மகிழ்ந்தினிய வாழ்வளித்த மாகருணைக் கடலே,
யிருணிறைந்த மயக்கமின்னுந் தீர்த்தருளல் வேண்டு
மென்னுடைய நாயகனே யிதுதருணங் காணே.

---

பார்த்தாலும் நினைத்தாலும் படித்தாலும் படிக்கப்
பக்கநின்று கேட்டாலும் பரிந்துணர்ந்தாலும்,
ஈர்த்தாலும் பிடித்தாலும் கட்டியணைத்தாலு
மித்தனைக்குந் தித்திக்கு மினித்தசுவைக் கரும்பே,
வேர்த்தாவி மயங்காது கனிந்த நறுங்கனியே
மெய்ம்மை யறிவானந்தம் விளக்கு மருளமுதே,
தீர்த்தாவென் றன்பரெலாந் தொழுது தொழுதேற்றும்
தெய்வசிகா மணியேயென் சிறுமொழி யேற்றருளே.

கல்லார்க்குங் கற்றவர்க்குங் களிப்பருளுங் களிப்பே
காணார்க்குங் கண்டவர்க்குங் கண்ணளிக்குங் கண்ணே,
வல்லார்க்கு மாட்டார்க்கும் வரமளிக்கும் வரமே
மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கு மதியே,
நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே
நரர்களுக்குஞ் சுரர்களுக்கும் நலங்கொடுக்கும் நலமே,
யெல்லார்க்கும் பலவிதமா யீவருளும் பரமே
யென்னரசே யான்புகலு மிசையுமணிந் தருளே.

## ஹத யோகம்.



இந்த தபோநிதிகளின் கொள்கை யாதெனில், துறவறமானது—அறம், பொருள், இன்பங்களை அநித்தியமென்று துறந்துவிட்டு நித்தியமாகிய வீட்டையடையும் பொருட்டு யோகநிலையிலிருந்து யோக முயற்சி செய்தலாம். ஐம்பொறி யடக்கி, மூலவாயுவை யெழுப்பி, இடை பிங்கலை வழியை இறுகவடைத்துச் சுழுமுனை வழியைத் திறந்து, பிரணவ நாதத்தோடு போய் ஐக்கியமுறுத்தும் பிரணவ சொரூபமாகுந் தன்மைகண்டு, சிதாகாசத்திற் கலந்திருக்கை யோகநிலையென்பார்கள். யோக முயற்சியாவது—இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தியானம், தாரணை, சமாதி முதலியவற்றை யநுசரித்து, ஜலத்திலும், அக்கினியிலும், பனியிலும், மழையிலும், வெயிலிலும் வருந்திக் கந்தமூல பலாதிகளைப் புசித்துத் தேகத்தை மெலிவித்துப், பிராணவாயுவை வருத்திக், கண்டம், இருதயம், நெற்றி, கபாலம், நாபி இவைகளிலொன்றிற் சந்ததஞ் சிந்தைவைத்து ஐம்புலனடக்கித் துன்பப்படுவதாம்.

இது ஹத யோகமென்னப்படும். இந்த வழியில் ஒருவன் தக்க ஆசான் உதவியின்றி நடக்கமுடியாது. இவ்வித பிராணாயாமம் சிலருக்குச் சாதகமாகமுடிந்தாலும் பலருக்குப் பாதகமாக முடியும். ஏனெனில், இவ்வரிய அநுஷ்டானத்தில் யாதொரு காரணத்தால் எவ்வளவேனும் மனம் சஞ்சலம் உண்டாயின், அதனாலடைவோமென்று நம்பியிருந்த மோக்ஷத்தை யிழப்பதுமன்றி, பந்திக்கப்பட்ட பிராணவாயு நெறிநீங்கி வெளிப்படுகையில் சரீரத்தை ஊர்த்துவ முகத்தி லெழுப்பித் தரையில் மோதுவதும், கண்கள் பிதுங்குவதும், கபாலம் வெடிப்பதும், வயிறு கிழிவதும், நாவின் வலிமை குறைந்து குதலைச் சொல்லாவதும், சுவாசக்கருவி சம்பந்தமான அநேகவித வியாதிகட்கும் பைத்தியத்திற்கும் உட்படுவதுமாகிய இழிவுகளையு மடைவார்கள். இவ்வாறு வருத்தமுறுந் துறவறத்தைப் பார்க்கிலும் இல்லறத்தால் இகத்திலும் லோகாந்தரத்திலும் அறம்பொருளின்பங்களா லுண்டாகும் ஆனந்தத்தை யநுபவிப்பதுமன்றி சர்வாநர்த்த நிவிர்த்தியும் பரமானந்தப் பிராப்தியுமாகிய நித்தியானந்த மோக்ஷத்தையும் எளிதில் அடையலாமென்பது பற்றியே இல்லறம் மற்றவைகளிற் சிறந்ததெனப் பெரியோருரைத்த பிரமாணங்கள் பற்பல உள.

மேலும், கடவுள் நம்மைச் சிருஷ்டித்து இவ்வுலகத்திற் கனுப்பியது துறவறத்தால் நாம் சம்பாதிக்கக்கூடிய நமது சொந்த ஆத்ம

ரட்சிப்புக்காக மாத்திரமேயன்று, நாம் பலுகிப் பெருகிப் பூமியை நிரப்பவும், நமது உற்றார், பெற்றார், உறவின் முறையார், மனைவி, மக்கள் முதலியவர்கட்குச் செய்யவேண்டிய கடமைகளைச் செய்து அவர்களைச் சந்தோஷிப்பிக்கவும், இன்னும் இதர ஜனங்களுக்கும் உயிர்ப்பிராணிகட்குஞ் செய்யக்கூடிய நன்மைகளை யெல்லாம் செய்து இகபர வின்பங்களை விளைவிக்குமே யாதலின், "இல்லற மல்லது நல்லற மன்று." என்றும் இல்லறமே மேன்மையானதென்றும், ஆனால் தாமரை யிலையில் நீரைப்போலும், புளியம் பழமும் ஓடும் போலும், இல்வாழ்க்கையில் ஒட்டியும் ஒட்டாமலுமிருந்து, இவ்வுலக வைபவங்களை அநுபவிக்க வேண்டுமென்றும், போதித்ததுடன் தாமேயவ்வித இல்லறவாசியாக விருந்து வாழ்ந்து இல்வாழ்க்கையின் மேன்மையை எடுத்துக்காட்டினார் தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனார்.




## சிதம்பர மும்மணிக்கோவை.

நல்லறநூல்களிற்சொல்லறம்பலசில
வில்லறந்துறவறமெனச்சிறந்தனவே
யக்கிளையிரண்டினுண்முன்னதுகிளப்பிற்
கற்றநூற்றுறைபோய்க்கடிமனைக்கிழவ
னற்குணநிறைந்தகற்புடைமனைவியோ
டன்புமருளுந்தாங்கியின்சொலின்
விருந்துபுறந்தருத்தவர்ப்பேணி
யைவகைவேள்வியுமாற்றியிவ்வகை
நல்லறநிரப்பிப்பல்புகழ்நிறீஇப்
பிறன்மனைநயவான்றன்மனைவாழ்க்கைக்கு
வரையாதாளின்மகப்பேறுறுதித்துப்
பெருநலந்துய்க்கும்பெற்றித்தன்றே.

## சிவ-பரமார்த்ததரிசனம்.

துறந்தவர்மூவர்தேவர்துளக்கமில்பிதிரர்நோய
ரறந்திகழ்விருத்தர்பாலரந்தணர்நல்விருந்தர்
சிறந்ததாய்தந்தைசுற்றந்திருந்தமுற்றதற்பின்மிக்க
வறந்தருமில்லாளோடுமருந்தலில்லறமதன்றே.

கொலையொடுகளவுகட்காமங்கோபமென்
புலைகடிந்தைவகைப்புலனுமோம்பின
னிலையினிலனுவதுவழுவினில்லற
மலைவுறுநரகிடையடைக்குமல்லவோ.

## திருக்குற்றலப்புராணம்.

இத்தகையநால்வர்களின் மூவருக்குமிறந்தார்க்கு
மத்துமுதலற்றோர்க்குமாதாரமாதலினு
லுத்தமமாமில்லறமேயவாழ்வினுக்குமுயர்கதிக்கும்
வித்துமாந்துறவறத்தின்வேருமாமெனும்வேதம்;

தருமமெனும்பண்டமிடுஞ்சகடமாமனைவாழ்க்கை
கருமநுகம்பிணித்துமனைக்காதலியுந்தானுமெனு
மிருவராய்முறைசெலுத்தினைத்துனைத்தூரமுஞ்செல்லு
மொருவராய்ப்பூண்டிழுப்பினோரிறையுஞ்செல்லாதால்.

## நன்னெறி.

காதன்மனையாளுங்காதலனுமாறின்றித்
தீதிலொருகருமஞ்செய்பவே—ஓதுகலை
யெண்ணிரண்டுமொன்றுமதியென்முகத்தாய்நோக்கலுங்
கண்ணிரண்டுமொன்றையேகாண்.

## நான்மணிக்கடிகை.

கல்லாதொருவர்க்குத்தம்வாயிற்சொற்கூற்ற
மெல்லிலைவாழைக்குத்தானின்றகாய்கூற்ற
மல்லவைசெய்வார்க்கறங்கூற்றங்கூற்றமே
யில்லத்துத்தீங்கொழுகுவாள்.

மழையின்றிமாநிலத்தார்க்கில்லைமழையுந்
தவமிலாரில்வழியில்லைதவமு
மரசியலில்வழியில்லையரசனு
மில்வாழ்வானில்வழியில்.

கண்ணொக்குஞ்சான்றோர்மரீஇயாறிற்றாமை
புண்ணொக்கும்போற்றருடனுறைவு—பண்ணிய
யாழொக்குநட்டார்கழறுஞ்சொல்பாழொக்கும்
பண்புடையாளில்லாமனை.

## மனுநீதிகாதல்.

யெல்லறங்கள் செய்துகன வேள்வி முடித்தாலும்
இல்லறத்தின் வாழ்வுக்கிணையாவ தொன்றுமில்லை,
மட்டில்லா வாழ்விருந்தென் மனைதனக்கு முக்கியமாம்
இட்டமுறு பெண்சாதி யெனும்பவளே முக்கியமாம்,
சற்குணமும் தெய்வபக்தி தர்மசிந்தை கற்புடைமை
இக்குணங்களுள்ளா ளிருக்குமந்த வீட்டினிலே,
வற்றாது செல்வமவள் வாயால் மாரிபெய்யென்று
உத்தரஞ்சொன்னா லுலகெலா மாரிபெய்யும்,
தானுமனையாளுமொரு தர்மமது செய்யநன்று
தானவர்கள் வேறுபட்ட தர்மமது தர்மமல்ல.

இல்லறமானது மெய்யிலாக மென்னும் நித்யதிரவிய அநுமானத் தினால் பரிசுத்தமாக்கப்பட்டிருப்பதனாலும், கடவுளால் நியமிக் கப்பட்ட அந்தஸ்தாயிருப்பதனாலும், அதைக் குறைவறத்திற்குத் தாழ்வென்று சொல்ல முடியாது. ஆனால் அதிலுட்பட விரும்பு கிறவர்கள் வயது தமக்கேற்றவளவு நடக்கையாயிராமல் தக்க காலத் திலே தகுந்த ஆயத்தத்தோடு அதில் பிரவேசிக்கால்மட்டுமே அவர் களுக்கு ஆசீர்வாதமுண்டாகும். ஆகையால் பாக்கியங்களை யடைவ தற்காகப் பத்தாவும் பத்தினியும் குடும்ப விவகாரங்களை நடத்து வதில் சுகிர்த வொழுக்கம் தவறாமல் அனுசரிக்க வேண்டிய கடமை கள் அனந்தமுண்டு. ஆகலால் இல்லறத்துக் குள்ளாகத்தக்க சுகிர்த முறைமையையும், இல்லற அந்தஸ்தில அனுசரிக்க வேண்டிய புண்ணிய ஒழுக்கங்களையும் கூடியமட்டும் விவரமாய்க் கூறுவோம்.

---

## இன்ப இரகசியம்.



இப்பிரபஞ்சத்தின்கண்ணே யுதித்த சகல பிராணி களும் இன்பத்தை நாடுவதும், துன்பத்தை வெறுப்பதும் இயற்கை. ஆனால் பரிபூரண இன்ப மெய்தற்குக்குறி யென்பது யாவருமறிந்த விஷய மல்ல. அதுபற்றியே சிறிய பூச்சிகள் விளக்கின்னொளியா லிழுக்கப் பட்டு, இந்தப்பிரகாசக்காந்தி பொருந்தி கண்களுக் கானந்தத்தை யுண்டுபண்ணுமிடத்திலேயே சகல இன்பமும் பொருந்தி யிருக்கு மென்றெண்ணி, அதனுள்ள போயதை ருசித்துப் பார்க்க ஆவல் கொண்டு, சமீபமென்று நெருப்பினுட் பாய்ந்து எரிந்து சாம்பலாய் நிர்மூலமாகின்றன. அப்படியே பட்சிகளும் மீன்களும் தங்களைப் பிடிக்கும்படி விட்டிருக்கிற இரையின்மேல் ஆசைப்பட்டு, அதை யுட்கொள்ளுகிறதனால் வலையிலகப்பட்டு மடிகின்றன.

### 1. சிற்றின்பம்.

சிலர் முகருமப்படியே கண்களைப் பசப்பி யிழுக்குங் கணிகை யாதரிடத்திலேயே, இன்பங் குடிகொண்டிருக்கிற தென்றெண்ணி மயங்கிச் சிற்றின்ப வலையிலகப்பட்டு அமிழ்ந்து ஆழ்ந்து தமது ஆத்ம சரீரங்களைக் கெடுத்து வீணாய் மடிகிறார்கள்.

சிற்றின்பப் பாடல்கள், கதைகள், வீண்விளையாட்டு, ஆடல் பாடல், கூத்துவிளையாட்டு முதலியவற்றினால் ஆசாபாசத்தைக் கிளப்பி, அநேகரைக்கெடுத்து வாதிக்கிற தொற்றுவியாதியாகிய சிற்றின்பத்தினா லுண்டாகுமின்பம்—நச்சுக்கட்டியை நல்ல அமிர் தத்தில கலந்து உட்கொள்ளுவதனா லுண்டாகுஞ் சுகத்தைக் கொப் பாகுமென்றோ ரிதைக் கருதியன்றோ முன்னொருவர்:—

"நச்சுக்கட்டியு நல்லமு தாமிக
வச்சுக்கட்டிய மாமுலை யாலவ
கச்சுக்கெட்டழியு மழியுமென
கச்சுக்கட்டி மறைத்தனர் கண்களே."

என நைடதத்தில் மோகப்பார்வையா லுலக முழுவதுமே அழிவதற் கிடமாகுமென்றனர்.

## 2. ஐசுவரியத்தாலுண்டாகு மின்பம். *

வேறு சிலர் ஆஸ்திகளைத் தேடிச் சேர்ப்பது மாத்திரமே இன்பப் பாக்கியம் பெற்றுச் சொகுசாய் வாழுவதாமென் றெண்ணித் தங்கள் வாணாளை யெல்லாம் வீணாகச் செலவழிக்கிறார்கள். புண்ணிய வசமாயப் பொருளைச் சம்பாதித்து, அதைச் சற்பாத்திரத்தில் செலவிட்டுப் புண்ணியந் தேடிக்கொள்வதே நன்றேயாயினும், அதிலேயே காலத்தை யெல்லாஞ் செலவிடுவதுடன், சூது, வாது, தந்திரங்களை உபயோகித்துப் பொருள் தேடப் பிரயாசப்படுகிறார்கள். ஆனாலப்படிப்பட்டவர்களிலே சிலர், "காவேரியாறு கஞ்சியாய்ப் பெருகினாலும் நாய் நக்கித்தானே குடிக்கவேண்டும்." என்பதுபோலும், "குதித்துக் குதித்து மாவிடித்தாலும் குட்டைச்சிக்கு மூன்று கொழுக்கட்டைதான் கிடைக்கும்." என்பதுபோலும், "உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாக மாட்டாது." என்பதுபோலும் தாம் எம்மாத்திரத்தில் உழைத்தாலுந் தம் பிரயாசமெல்லாம் வீணாகி, எப்பொழுதும் வறுமையிலேயே யிருக்கிறார்கள்.

"ஆழியெல்லாம் வயலாகி யவனியெல்லா மன்னவய மானாலென்ன
சூழவந்தே யிரப்பவர்க்குப் பசிதீரவுண் டிருக்குஞ் சுகந்தானுண்டோ
எழுலகும்பணியவரும் தண்டலையார் [illegible] நாளும்
நாழிநெல்லுக் கொருபுடவை விற்றாலுந் திருவானை நாய்க்குத்தானே."

சிலர் ஐஸ்வரியவான்களான போதிலும்

"பொருள்தேடல் துக்கமதைப் போற்றிவைக்கத் துக்கமதாம்
பொருளைச் செலவழிக்கப் போம்போதுந் துக்கமதாம்."

* President Roosevelt Condemns the millionaire as the least enviable of citizens, as a man whose face has grown hard and body soft, whose son is a fool, and whose daughter is a foreign princess, whose nominal pleasures are tasteless and extravagant luxury, and whose real delight is the accumulation and use of power in its most sordid form.

என்பதுபோல், அவர்களதனால் சுகமடையாமல் நிர்ப்பாக்கியரா கின்றனர். ஏனெனில் தாகமுள்ளவன் சமுத்திர ஜலத்தை யருந்துவதால் அவன் தாகம் நிவிர்த்தியாகாமல் அதிகரித்துக்கொண்டே வருவதுபோல், பொன்னாசை யுடையவர்களுக்குப் போசனத்திலிச்சையில்லை, அன்றி மற்றத் தருமமானதிலுமிச்சையில்லை. ஆனால் தமக்கிருக்கும் பொருள் போதுமென் றெண்ணாமல் அதிகமதிகமாய்ச் சம்பாதிக்க விரும்பிப் பிரயாசப்படுகிறார்கள். அதனாலவர்களடையுங் கவலை கஷ்டங்கள், விசாரம், வருத்தம் முதலியவற்றிற் களவுண்டோ? அளவுக்கு மிஞ்சிப் புசித்தால் அமிர்தமும் நஞ்சாகிவிடும். அதிகமாயுண்டிக்கிறதும் பணமும் புழுக்கமுமாகும். சம்பிரமமாய்ப் புசிப்பதால் எல்லா அங்கங்களும் போஷித்துச் சரீரங் கொழுத்துச் சிற்றின்ப இச்சைகளுக்கு இடங்கொடுக்குமல்லவோ?

"போதத்தனங்கல்வி போந்தவருங் காலமதில்
மாதர்மேல் வைக்குமனம்."

உலகரட்சகர் ஓர்காலத்தில் "ஐஸ்வரியவான்கள் பரலோக ராஜ்யத்தில் பிரவேசிப்பதைவிட ஒட்டகமானது ஊசியின் காதிலே நுழைவது எளிதாயிருக்கும்" என்று சொல்லியிருக்கிறார். நாம் சம்பாதிக்கும் பொருள்களால் இகபர பாக்கியங்களைப் பெற்றுக் கொள்ளும்படி நாம் செய்யவேண்டிய கடமைகளைப்பற்றி வேத வாக்கியங்களிற் சொல்லியிருப்பது யாதெனில்:—

மனுஷர் உங்கள் நற்கிரியைகளைக் கண்டு, பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதாவை மகிமைப்படுத்தும்படி, உங்கள் வெளிச்சம் அவர்கள் முன்பாகப் பிரகாசிக்கக்கடவது.

மனுஷர் உங்களுக்கு எவைகளைச் செய்ய விரும்புகிறீர்களோ, அவைகளை நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள், இதுவே நியாயப் பிரமாணமும் தீர்க்கதரிசனங்களுமாம்.

போதுமென்ற மனதுடனே கூடிய தேவபக்தியே மிகுந்த ஆதாயம். உலகத்திலே நாம் ஒன்றுங் கொண்டுவந்ததுமில்லை, இதிலிருந்து நாம் ஒன்றுங் கொண்டுபோவதில்லையென்பது நிச்சயம்.

இவ்வுலகத்திலே ஐஸ்வரியமுள்ளவர்கள் தாராளமாய்க் கொடுக்கிறவர்களும் உதாரகுணமுள்ளவர்களுமாயிருக்கவும், நித்திய ஜீவனைப்பற்றிக் கொள்ளும்படி வருங்காலத்திற்காகத் தங்களுக்கு நல்ல ஆதாரத்தைப்பொக்கிஷமாக வைக்கவும் அவர்களுக்குக் கட்டளையிடு.

உங்கள்கிரியையையும் நீங்கள் பரிசுத்தவான்களுக்கு ஊழியஞ்செய்ததனாலும் செய்து வருகிறதனாலும் தமது நாமத்திற்காகக் காண்பித்த அன்புள்ள பிரயாசத்தையும் மறந்துவிடுகிறதற்குத் தேவன் அநீதியுள்ளவர் அல்லவே.

நன்மை செய்யவும் தானதர்மம் பண்ணவும் மறவாதிருங்கள். இப்படிப்பட்ட பலிகளின்மேல் தேவன் பிரியமாயிருக்கிறார்.

சிறுக விதைக்கிறவன் சிறுக அறுப்பான். பெருக விதைக்கிறவன் பெருக அறுப்பான். அவனவன் விசனமாயுமல்ல, கட்டாயமாயுமல்ல, தன்மனதில் நியமித்தபடியே கொடுக்கக்கடவன். உற்சாகமாய்க் கொடுக்கிறவனிடத்தில் தேவன் பிரியமாயிருக்கிறார்.

உன் ஆஸ்திகளில் தர்மஞ்செய்; எந்த ஏழைக்கும் உன் முகத்தை மறையாதே; அப்பொழுது கர்த்தர் உனக்குத் தமது முகத்தை மறைக்கமாட்டார்.

உன் திராணிக்குத் தக்கதாய்த் தர்மசிந்தையுள்ளவனாயிரு; உனக்கு மிகுதியாயிருந்தால் மிகுதியாய்க் கொடு. உனக்குக் கொஞ்சமாயிருந்தால் அந்தக் கொஞ்சத்தில் சந்தோஷமாய்க் கொடுக்க ஜாக்கிரதையாயிரு. இப்படிச் செய்வதினாலே அவசரம் வருங் காலத்திற்கு நற்பலனைக் கூட்டிச் சேர்க்கிறாய்.

ஏழைக்கு இரங்குகிறவன் கர்த்தருக்குக் கடன் கொடுக்கிறான். அவன் கொடுத்ததை அவர் திரும்பக் கொடுப்பார்.

சிறுமைப்பட்டவன்மேல் சிந்தையுள்ளவன் பாக்கியவான்; தீங்கு நாளில் கர்த்தர் அவனை விடுவிப்பார்.

என் ஆலயத்தில் ஆகாரமுண்டாயிருக்கும்படித் தசமபாகங்களையெல்லாம் பண்டசாலையிலே கொண்டு வாருங்கள். அப்பொழுது நான் வானத்தின் பலகணிகளைத் திறந்து இடங்கொள்ளாமற் போகுமட்டும் உங்கள்மேல் ஆசீர்வாதத்தை வருஷிக்கமாட்டேனோ என்று அதினால் என்னைச் சோதித்துப் பாருங்கள் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.

உன் ஆகாரத்தைத் தண்ணீர்மேல் போடு; அநேக நாட்களுக்குப் பின் அதன் பலனைக் காண்பாய்.

## 3. கீர்த்தியா லுண்டாகுமின்பம். *

அநேகர் மேன்மை, பெருமை, கீர்த்தி, உத்தியோகங்களினால் பாக்கியம் வருமென்று நினைப்பதுண்டு. ஆராய்ந்து பார்க்கின் பெரிய அதிகார உத்தியோகங்களில் எவ்வளவோ தொந்தரவு, அலுவல், கவலை, விசாரங்களுண்டு. அநேகர் அகங்காரத்தினாலும், விரோதத்தினாலும் உத்தியோகஸ்தரைப் பகைத்து, நிந்தித்து, அவர்கள்மேல் கோள் குண்டுணி சொல்லி, அவர்களைத் தாழ்மைப்படுத்த முயற்சித்து யிருக்க இடைஞ்சலுண்டு பண்ணுவதனால் அவர்களுக்குத் துன்பமும் கலக்கமும் உண்டாகி அவர்கள் மகிமை பெருமையெல்லாம் சூரியன் முன் பனிபோல் மறைந்துவிடுகின்றன. அதிகக் கீர்த்தியில் அதிகத் துன்பமுண்டு. பெருங்காற்று பெரிய மரங்களைச் சாய்த்துக் கீழே தள்ளிவிடும். அற்பச் செடிகளோ வெளில் வளைந்து மறுபடி நிமிரும்.

* "FAME is that fickle, fleeting, shadowy wreath, that crown made of rainbow, that vainest of all earthly pleasures, but which yet is a pleasure" MITFORD. Fame is the spur which the clear spirit doth raise, that last infirmity of the noble mind, to shun delight & live laborious days."

இப்பிரபஞ்சத்தின் கண்ணுள்ள சகல ஜீவராசிகளும் பல்கிப் பெருகிப் பூமியை நிரப்பும்படி அற்புதநாதன் செய்திருக்கும் ஆச்சரியமான சூழ்ச்சியை விளக்கிக்காட்டும் பொருட்டு, ஒவ்வொரு வஸ்துவும் எப்படித் தத்தம் இனத்தைப் பிறப்பிக்கிற தென்பதைச் சுருக்கிச் சொன்னோம். இப்பிரமாணம் ஆதியிலேயே ஏற்படுத்தப்பட்டது. இதுவே எக்காலத்திலும் எல்லா ஜீவராசிகளுக்குள்ளும் உறுதியாய் நிலைக்கும் நித்தியப் பிரமாணமாகும். அற்பப்புல் முதல் சிருஷ்டி கர்த்தாவின் சாயலின்படி உண்டாக்கப்பட்ட மனுஷன் வரையிலே சகலமும் இப்பிரமாணிக்கத்தின்படியே உலகத்தில் தோன்றுகின்றன. நம்மில் ஒவ்வொருவரும் அப்படிப் பிறந்தவர்களேயாம். அவ்விதமாகத் தாயின் வயிற்றில் உற்பவித்து அங்கேயே நாற்பது வாரம் தலைகீழும் மேலுமாய்த் தொங்கி, தாய் வயிற்றினுட்செல்லும் அன்னபானாதிகளின் சத்தின் மூலமாய்ப் போஷிக்கப்பட்டு, தன்னுடைய குணங்களையும் புத்திதீக்ஷணியத்தையும், அழகு சௌந்தரியத்தையும், ஒழுக்க பழக்கங்களையும் அவளிடமிருந்தே பெற்று பக்குவமடைந்து அதற்குப் பின் இவ்வுலகத்தில் தோன்றினவர்களேயாம். நாம் பிறந்த இடம், நாம் வளர்ந்த இடம், அசங்கியமான தென்றும் அருவருப்பான தென்றுஞ் சொல்லி அசட்டை பண்ணுவதற்கென்ன நியாயமுண்டு?

அண்டபகிரண்ட புவனங்களைச் சிருஷ்டித்து, ஊர்வன, பறப்பன, நடப்பனமுதலிய ஜீவகோடிகளிலும், தநுகரண புவனபோகங்களிலும் பிரகாசித்து, பூதபௌதீக சராசரங்களிலும் நிறைந்து, மனிதன் புத்தியால் அளக்கவுந் தொடுக்கவும் வரம்புகட்டவும் முடியாத சகலபரிபூரண நன்மைச் சம்பன்னர் செய்துவைத்த ஏற்பாட்டில் எதுவும் அசங்கியமுளதோ? அவருடைய ஏற்பாடின்னவென்றாராய்ச்சி செய்து அறிந்துகொள்ளுமறிவே ஞானமாகும்.



## குறிப்பு.

இதுவரை நாம் கவனித்ததியா தெனில்:—

1. ஜீவஜெந்துக்களனேகவற்றில் ஆணும் பெண்ணுஞ் சேர்வது தத்தம் இனத்தைப் பிறப்பிக்கும் பொருட்டேயன்றி வேறெந்தக் காரணத்தினுமல்ல.

2 மிருகங்கள், பக்ஷிகள், ஊர்வன முதலியவை பல்கிப்பெருகும் பொருட்டு ஆணும் பெண்ணுஞ் சேருவதேயன்றி, வேறெவ்விதத் துர்க்கிர்த்தியங்களாலும் தமக்குக் கடவுளால் கொடுக்கப்பட்டிருக்கும் ஜனனேந்திரியங்களை அலங்கோலப் படுத்துகிறதில்லை.

3. சர்வவல்ல சாக்ஷாத் ஜெகதீசருடைய ஆக்ஞைப்படிக்கு தத்தம் இனத்தை ஜெனிப்பித்தவுடன், அநேகஞ் செடிகளும் ஜீவஜெந்துக்களும் கடவுள் தம்மை யிவ்வுலகத்திலுண்டாக்கிய நோக்கத்தை நிறைவேற்றி விட்டனபோல் மாண்டு மறைந்து விடுகின்றன. இவ்விதமாய்த் தத்தம் இனத்தைப் பிறப்பிப்பதால் மிருகங்களும் மானிடரும் மரணமடையாதிருந்தாலும் ஜெனிப்பிக்குந் தொழிலில் சக்தியும் வலுவுங் குறைந்து விடுகின்றன வென்பது திண்ணம்.

4. தத்தம் இனத்தை விரைவிலே ஜெனிப்பிக்க ஆரம்பிக்கும் வஸ்துக்களும் ஜெந்துக்களும் விரைவில் மாண்டுபோகின்றன. அதிகக்காலஞ் சென்று ஜனனக்கிரியையை நடப்பிக்கும் வஸ்துக்களெல்லாம் அநேக வருஷங்களுக்கு உயிரோடிருக்கின்றன. பிறந்த இரண்டு மாதத்தில் குட்டிபோட ஆரம்பிக்கும் சீமைப் பெருச்சாளி ஒருவருஷத்துக்குமேல் உயிரோடிராது. நாலுவயதில் குட்டிபோடுங் குதிரை முப்பது வயதில் கிழமாகிறது. எண்பது முதல் நூறுவயது வரை உயிரோடிருக்கும் மனுஷன் இருபது அல்லது இருபத்தைந்து வயதில் தன்னினத்தைப் பிறப்பிக்கிறான். சீக்கிரம் தங்கள் ஜனனேந்திரியங்களை உபயோகிக்க ஆரம்பிக்கிறவர்கள் சீக்கிரம் மாண்டுபோவார்கள். சிருஷ்டிப்பொருட்களில் தாழ்வான தாவர சங்கங்களும் ஊரும் பிராணிகளும் பக்ஷங்களும் தத்தம் இனங்களைக் கோடிக்கணக்காய்ப் பிறப்பிக்கின்றன. கோழிகள் தினம் ஒரு முட்டையாக அநேக மாதங்களுக்கு முட்டையிடும்.









முசல், பூனை, நாய் முதலிய மிருகங்கள் அடிக்கடி அநேகம் குட்டிகளைப் போடுகின்றன. அவற்றிலும் மேலானவைகள் வருஷத்துக்கொரு தடவை ஒன்று அல்லது இரண்டு குட்டிகள் போடும்.



உதாரணமாக:— புறாவினங்கள் ஜோடிஜோடியாய்த் தமது பேடைகளுடன் வெகு சரசசல்லாபமாய்த் திரிந்து இடும் இருமுட்டைகளினின்றும் ஆணொன்று பெண்ணொன்றுமாய்க் குஞ்சுகள் உற்பத்தியாகின்றன. அதேமாதிரியாய் மிருகேந்திரன் என்னப்படும் சிங்கமானது தன் ஆயுள்காலத்தில் ஒரே ஒருதடவைமட்டும் குட்டிகளை ஈன்று அதன்பின் கெர்ப்பமுண்டாகாமல் இருப்பதால் நெடுநாள் ஜீவிக்கிறது.



மனுஷ ஜன்மமப்படியே சிசுவைக் கர்ப்பத்தில் நாற்பது வாரம் வளர்த்து, பிறந்தபின்பு ஒருவருஷம் பால்கொடுத்து வளர்த்து அதற்குப்பின் கருத்தரித்துப் பிள்ளைபெறுவதால் இரண்டு அல்லது மூன்று வருஷத்துக்கொருதடவை குழந்தைபிறக்கிறது. அடிக்கடி குழந்தை பிறப்பதால் தாய்க்குப் பலவீனம் மேலிடுகிறதுமல்லாமல், தம் பிள்ளைக்கும் பலம், சக்தி, உயிர் முதலியவை கொடுக்கத்தக்க பால் தருவதற்கு ஏலாமற்போவதுடன், தாயையன்றி வேறொருவராலும் கொடுக்கக் கூடாததும், பணத்தினால் வாங்கக் கூடாததுமான ஆத்ம, சன்மார்க்க உணர்வுகளையும் ஊட்ட முடியாது.

## ஆணின் ஜனனேந்திரியங்கள்.

ஆணின் ஜனனேந்திரியங்கள் ஆண்குறி, பீஜம், சுக்கிலாசயம் (Seminal Vesicles), சுக்கிலக்குமிழ் (The Prostate Gland), சுக்கிலக் கோளங்கள் (Cowper's glands), ஸ்கலிதக்குழல் எனப் பலபாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன.




1. குண்டிக்காய் 2. ஜலாசயம்
3. மலக்குடல் 4. சுக்கிலாசயம்
5. சுக்கிலக்குமிழ் (Prostate gland)
6. சுக்கிலக் கோளங்கள்
7. இரத்த நாளங்கள்
8. இரத்த நாளங்களிலிருந்து இந்திரிய நாண்பிரிந்து சுக்கிலாசயத்திற்குச் செல்வது.

இந்தப்படத்தில் ஆணின் ஜனனேந்திரியங்களின் நிலையைத் தெளிவாய்க் காண்பிக்கும் பொருட்டு ஆசனவாய் தவிர மற்றக்குடல் பாகங்களைக் காண்பிக்கவில்லை.

1. வயிற்றினுள் அதிக உயரத்தில் முதுகு பக்கமாய் வலது குண்டிக்காய் (Kidney) இருக்கிறதைக் காணலாம். அதில் வந்து சேரும் இரத்தக் கழிவுகளிலிருந்து மூத்திரம் சுவர்ந்து நீர்க்குழாயின் (Ureter) வழியாய் மூத்திரப்பையாகிய 2) ஜலாசயத்தில் கூடி நின்று, நீர்விடும்வேண்டிய சமயத்தில் மூத்திரக்குழாய் வழியாய் ஆண் குறியினூடசென்று வெளியாகிறது. ஜலாசயத்தில் மூத்திரம் நிறைந்தவுடன் அது ரப்பர் மாதிரி விரிந்து கொடுக்கும். இவ்விதமாய்க் குண்டிக்காய், நீர்க்குழாய், ஜலாசயம், நீர்த்தாரை முதலியவை நீர்விடுங் கருவிகளாகின்றன.

இனிமேல் சுக்கிலம் வெளியாகும் வகையைக் கவனிப்போம். சுக்கிலமானது பீஜங்களிலிருந்து இந்திரிய நாண்வழியாய் ஜலாசயத்தைச் சுற்றிப்போய், (4) சுக்கிலாசயத்தில் சேருகிறது. இந்திரியநாணுடன் பீஜப்பைகளிலிருந்து வெளிவரும் ரத்தநாளங்களும் நாடிகளும் 8-வது இடத்தில் பிரிந்து, (7) என்ற வழியாய் ரத்தாசயத்திற்குச் செல்லுகின்றன. ஜலாசயத்திலிருந்து நீர்த்தாரை பிரிகிற இடத்திலுள்ள சிறு புள்ளியாகிய (5) சுக்கிலக்கு

யிழ் நீர்த்தாரையைச் சுற்றியிருப்பதைக் காண்பிக்கிறது. (6) சுக்கிலக்கோளங்கள் நீர்த்தாரைக்குக் கீழ் இருக்கும் நிலை,

அதிகாலையில் படுக்கையைவிட் டெழுந்திருக்குமுன் (2) ஜலாசயமும் (3) மலக்குடலும் நிறைந்திருக்கும பொழுது அவற்றின் பின்னுள்ள (4) சுக்கிலாசயத்தை நெருக்குவதால் அதன்மெல்லிய நரம்புகளுக்குக் கிளர்ச்சி யுண்டாகி ஆண்குறி நேராய்நிற்கும் தன்மையடைகிறது.

மல்லாந்து படுத்திருக்கும் பொழுது ஜலாசயம் சுக்கிலாசயத்தை அழுத்துவதால் அவ்விதக் கிளர்ச்சியுண்டாகும். ஆகலால் மலஜலம அடக்காதிருப்பதனாலும், ஒருபக்கமாய்ச் சாய்ந்து சரிந்து படுத்திருப்பதனாலும் அனாவசியமான கிளர்ச்சிக் கிடங்கொடாமல் சுகமாயிருக்கலாம்.

## ஆண்குறி.

ஆண்குறியில் நேராய் நிற்கும் சக்தியையுடைய மாம்சாம்சங்களையும் (Erectile Tissues) அவற்றை வடுருவச்செல்லும் மெல்லிய இரத்தக் குழாய்களையும் மிக உறுதியான நார்போன்ற மூன்று குழாய்கள் (Cylindrical Fibrous Compartments) சுற்றிக் கொண்டிருக்கின்றன. இதில் நரம்புகள் ஏராளமாகவும் மாம்சம் குறைவாகவுமிருக்கின்றன. காமத்தாலுண்டாகும் உத்தீபனத்தால் ஏராளமான இரத்தம் திடீரென்று இரத்ததாரைகளின் வழியாய்ச் செல்லவே ஆண்குறி நேராய் நிற்கின்றது. துஷ்டசகவாசத்தால் சிறுபிராயத்தில் செய்யும் ஹஸ்தப்பிரயோக முதலிய புத்தியீனமான கிருத்தியங்களால் மேற்படி மாம்சாம்சங்களின் வலிமைகுன்றி, நரம்புகள் தளர்ச்சியடைவதால அநேக வாலிபர் தமது ஆண்தன்மையின் சக்தியைக் காண்பிக்க ஏலாதவர்களாய் வேடகத்திற் காளாகின்றனர். சிறுவர்களுக்கு இது எச்சரிக்கையாகும்.

## பீஜம்.

ஆண்குறிக்குக் கீழ் பீஜப்பையினுள் விதை என்று சொல்லப்படும் இரண்டு பீஜங்கள் பீஜக்கொடியினாலும் இந்திரிய நாளமென்னப்படும் (Spermatic Cord) ஓர்வித்தத்தசை நரம்பினாலும் தொங்குகின்றன. பீஜத்தைச் சோதித்துப்பார்த்தால் அவைகள் முன்னூறு கெஜத்துக்குமேல்;நீளக்கூடிய சிறு மெல்லிய குழாய்களால் உண்டாக்கப்பட்டனவாகத் தோன்றும். இவை இந்திரிய

தாரை என்னப்படும். இந்திரிய தாரையானது பீஜக்கொடியோடு சேர்ந்து மேலேயேறி, மூத்திரப்பையின் பக்கத்திலிருக்கும் சுக்கிலாசயத்துட் சென்று ஒரே குழலாகி, ஸ்கலிதக் குழலோடு சேர்ந்து நீர்த்தாரையில் முடிந்துவிடும். இக்குழாய்களில்தான் சுக்கிலம் உற்பத்தியாகிப் பக்குவமடைந்து, மூத்திரப்பைக்கு அடியிலிருக்கும் சுக்கிலாசயத்துட் சென்று அங்கேயே தங்கியிருக்கும்.

## நீர்த்தாரை. (Urethra).

ஆண்குறியை ஊடுருவச் சென்று மூத்திரப் பையிலிருந்து மூத்திரத்தை வெளியாக்கும் மூத்திரக் குழாய்க்கு நீர்த்தாரை யென்று பெயர். அது மூத்திரப் பையோடு சேருகிற இடத்தில் ஸ்கலிதக் குழல்களும் முடிகின்றன.

## சுக்கிலாசயம், (Seminal Vesicles).

ஒவ்வொருவர்க்கும் உரத்த ஜவ்வினாலுண்டாக்கப்பட்ட இரண்டு சுக்கிலாசயங்கள் உண்டு. அவை மூத்திரப்பைக்கு அடியில் மலக்குடலோடு சேர்ந்திருக்கின்றன. பீஜங்களிலிருந்து இந்திரியத்தைச் சுக்கிலா சயங்களுக்குக் கொண்டுபோகும் குழலுக்கு இந்திரிய நாளமென்று (spermatic cord.) பெயர். சுக்கிலாசயங்களிலிருந்து இந்திரியத்தை நீர்த்தாரைக்குக் கொண்டுபோகுங் குழலுக்கு ஸ்கலிதக் குழலென்று பெயர்.

## சுக்கிலக் குமிழ் (The Prostate Gland).

சுக்கிலக் குமிழ் உரத்த ஜவ்வுகளினாலுண்டாக்கப்பட்டு ஜலாசயத்தின் வாயைச் சுற்றிச் சேர்ந்திருக்கிறது. அடிக்கடி சம்போகஞ் செய்வதனாலும், சுக்கிலத்தை வீணில் செலவழிப்பதனாலும் இக்குமிழ் வீங்கி நீர்த்தாரையை நெருக்குவதால் நீர்சுருக்கு, நீர்க்கடுப்பு முதலிய பலவித வியாதிகள் உண்டாகும். இவைகளிலிருந்து வடியும் வெள்ளை நிறமான சீழைத்தான் பலவிதமான மேகரோகங்களென்று சொல்வார்கள். இதுவும் பலர்க்கு எச்சரிக்கையே.

## சுக்கிலக் கோளங்கள். (The Cowper's Glands).

நீர்த்தாரைக்குக் கீழ்ப்பாகத்தில் இரண்டு சிறு கோளங்களிருக்கின்றன. காம உத்தீபனமுண்டாகும் பொழுது இவைகளிலிருந்தும் சுக்கிலக்குமிழிலிருந்தும் பிசின்போன்ற ஓர்வித நீர்சாரது வெளிப்படும்.

## சுக்கிலம்.



மனுஷ சுக்கிலம்

சுக்கிலத்தைப் பூதகிருஷ்டிக்கண்ணாடியால் சோதித்துப் பார்த்தால்முட்டை வடிவமான பருத்த தலையும் நீண்ட வால்களுமுள்ள நூற்றுக்கணக்கான கிருமிகள் ஓர்வித ஜலத்தில் தங்கள் வால்களை யாட்டிக்கொண்டு எப்போதும் முன்னோக்கியே நீந்துவதாகத்தோன்றும். இக்கிருமிகள் சிசுவுற்பத்திக்கு முதற்காரணமாகும். இவைகள் ஸ்திரீயின் சுரோணிதத்திலுள்ள முட்டைகளில் சேர்வதனால் தான் அம்முட்டைகளுக் குயிருண்டாகிக்கருத்தரிக்கும்.



பாம்பின் சுக்கிலம்

க்குள்ளதும், சத்துப்பொருந்தியதும், ஜீவசிலையுமாயிருக்கிறது. இந்திரியத்தை வெளியே விடுவதால் சரீரமுழுவதிலுமுள்ள நரம்புகளின் சத்துக்குறைந்து பஸியின் வலுவுங் குன்றிப்போகும். ஆதலால் வாலிபத்தில பத்தியீனத்தாலும், துஷ்ட சகவாசத்தினலும், காமவிகாரத்திலமிழ்ந்து, இந்திரியத்தை வீணில் சேதப்படுத்துபவர்கள் நீரிழிவு, க்ஷயரோகம், காமாலை முதலிய நோய்களுக்காளாகி, பெலன் குன்றி, புத்தி மழுங்கி, ஞாபகச் சக்தியற்றுச் சித்தமுங் கெட்டு, பைத்தியக்காரரைப்போல் திரிவார்கள். பைத்தியக்காரராவதுமுண்டு. "விந்து விட்டாயா நொந்து கெட்டாயா." என்னும் பழமொழி பொய்யன்று உண்மையே.

## ஸ்திரீயின் ஜனனேந்திரியங்கள்.

ஸ்திரீயின் ஜனனேந்திரியங்கள்:—கடி தடம் (Monsveneris), நிதம்பம் அல்லது உதடு (labia Majora and Minora), பூநரம்பு (Clitoris), யோனித்துவாரம் (Orifice of the Vagina), கருப்பை (Uterus), சினைப்பை (Ovaries), சினைப்பாதை (Fallopian tubes) என பல பிரிவுகளையுடையன.




1. மலக்குடல். 2. கருப்பை, 3. மூத்திரப்பை. 4. பூநரம்பு. 5. யோனித்துவாரம். 4-க்கும் 5-க்கும் நடுவிலிருப்பது நீர்த்தாரை.

## கடிதடம். (Mons veneris).

ஸ்திரீயின் அடிவயிற்றின் கீழ் மிருதுவாய் உரோமங்களுடனிருக்கும் மேடான பாகத்திற்குக் கடிதடமென்று பெயர். அதன் தோலுக்குக் கீழ் கொழுப்படர்ந்திருக்கும். நோயாளிகளுக்கும் விருத்தாப்பியருக்கும் அந்தக் கொழுப்பு கரைந்து விடுவதால் எலும்பின்மேல் தோல் ஒட்டியிருப்பதாகத் தோன்றும்.

## நிதம்பம் அல்லது உதடு. (Labia Majora and Minora)

கடிதடத்திற்குக் கீழ் சேவற் சூட்டுப்போன்ற இரு உதடுகள் மேலெழும்பி, மடிந்து, நீண்டு, பக்கத்திற்கொன்றாக யிருக்கும். அவற்றிற்கு நிதம்பம் அல்லது உதடு என்று பெயர். இவைகளிலிருந்து ஓர்வித நீர் சுரப்பதுண்டு, சம்போக சமயத்தில் இவற்றின் நடுவிலுள்ள பூ நரம்பை இது வளைத்து ஆண்குறியோடு பொருந்தச் செய்வதால் ஸ்திரீக்கு இன்பமுண்டாகும். இதன் தசை நரம்புகள் தளர்ச்சியடையுமாயின் ஸ்திரீயின் இன்பம் குறைவுபடுமென டாக்டர் றிரால் (Dr. Trall), என்பவர் சொல்லுகிறார்.

## பூ நரம்பு. (Clitoris).

மேற்கூறிய இரு உதடுகளின் நடுவில் ஆண்குறிபோல் கூர்மையாய் மறைந்திருக்கும் ஓர் சிறிய உறுப்பிற்கு பூ நரம்பு என்று பெயர். அதை யோனிலிங்கம், மன்மத பீடம், காமத்வஜம், மன்மதன் வெற்றிக்கொடை. மொக்குள், கிளி மூக்கு, மணி மூக்கு, சுனி முனை, மன்மதன மண்டபம் எனப்பலரும் பலவிதமாய்ச்சொல்வார்கள். ஆண்குறியைப்போலவே இதிலும் நரம்புக் கூட்டங்கள் திரளாய்வந்து சேர்ந்திருப்பதால், ஸ்திரீக்கு மகா கூச்சத்தை யுண்டாக்கி இன்பங் கொடுக்கக்கூடிய உறுப்புகளில் விசேஷித்தது இதுவே. இதன் நுனிப்பாகம் தினையரிசிப் பிரமாணம் உருணடையாயிருக்கும். அதுவே ஸ்திரீயின் இன்பநிலை.

## மூத்திரத்தாரை (Urethra).

பூ நரம்பிற்குக் கீழும் யோனி வாசலுக்கு மேலுமாக விருக்கிற பள்ளத்தில் மூத்திரத்தாரை வந்து முடிகின்றது. இதன்வழியாகவே மூத்திரம் வெளியாகும்.

## யோனித்துவாரம் (Orifice of the Vagina).

மேற்கூறிய மூத்திரத் துவாரத்திற்குக் கீழ் அல்குல் துவாரமுண்டு. அது ஏறக்குறைய நாலங்குல நீளமுள்ளதாய கருப்பையின் வாயளவு சென்று எட்டுகிறது.

இவ்வுறுப்பு முழுவதும் ரப்பர் மாதிரி நீண்டு சுருங்கத்தக்கதான நரம்புகளால் சுற்றப்பட்டிருப்பதால், பேறுகாலத்தில் சிசுவானது அதன் வழியாய்ச் செலலத்தக்கதாய் விரிந்து கொடுக்கும். மற்றக் காலங்களில் அவ்வுறுப்பு எப்பொழுதும் சுருங்கியிருக்கும். சாதாரணமாய் கன்னிப்ஸ்திரீகளில மேற்சொன்ன உறுப்புக்கும் கருப்பைக்கும் நடுவில் வெங்காயத்தோல் போன்ற ஓர் மெல்லிய ஜவ்வு (Hymen) இருக்கிறது அதில துவாரமுமுண்டு. அந்தத் துவாரத்தின் மூலமாய் சூதகம் வெளிப்படும். அது சிலருக்கு உறுதியாயும், சிலருக்கு மெல்லிதாயும் சிலருக்கு இல்லாமலுமிருக்கும் அதில் துவாரமில்லாமல் கடினமாயிருக்கின், சூதகம் அடைபட்டு மெத்த உபத்திரவம் உண்டாவதுடன், சமபோகத்திற்கும், சிசுவுற்பத்திக்கும இடையூறாகவுமிருக்கும். அந்த ஜவ்வு இருப்பதனால் ஓர் ஸ்திரீ கன்னிபழியாதவளென்றும், அது இல்லாமற்போவதால் அவள் கன்னியழிந்தவளென்றும சிலா சொல்லுவார்கள். அது தப்பிதம். ஏனெனில், சிலருக்கு அது இருக்கவேமாட்டாது சிலருக்கு இருந்தாலும் வியாதியினால் அழிந்துபோவதுமுண்டு. என்றாலும் அநேகருக்கு முதல முதலாகச் சேரும்போது இந்த ஜவ்வு கிழிந்து போவதால கொஞ்சம் நோவு உண்டாகும்.

## கருப்பை. (Uterus).



கருப்பை.

கருப்பையானது, பெண்கள் கர்ப்பமில்லாத காலத்தில் மேற்பாகம் மூன்றங்குல நீளமும் இரண்டங்குல அகலமு முள்ளது. ஆனால் அதன கீழ்ப்பாகமாகிய கருப்பையின கழுத்து அரையங்குலந்தானிருக்கும். மேற்பாகத்திற்கும் கீழ்ப்பாகத்திற்கும் நடுவில் உள்ள பாகத்திற்குத்தான் கருபபையென்று பெயர். அது சுமார் ஒரு அங்குலந்திண்மையுள்ளது. கருப்பையின கீழ்ப்பாகமாகிய கழுத்து அல்குலின் உட்பாகத்தோடு ஒட்டிக் கொண்டிருக்கிறது. விரிவுள்ள மேற்பாகமோ அடிவயிற்றுக்குள்

ள் நீர்ப்பைக்கும் மலக்குடலுக்கும் மத்தியில் இருக்கிறது. இக்கருப்பையில் இரண்டு அறைகளுண்டு. அவ்விரண்டறைகளும் ஓர் நுண்ணிய துவாரத்தால் இணைக்கப்பட்டிருக்கின்றன. அவ்வறைகள் சுமார் பத்துத்துளி ஜலத்திற்கு அதிகம் தங்கக்கூடாத சிறியவைகள். விந்துவைக் கிரகித்து, கருவையுண்டாக்கிப் பருவப்படுத்தித் தக்ககாலத்தில் வெளிப்படுத்துவதே கருப்பையின் பிரயோசனமாகும்.



கருப்பையும் சினைப்பையும்.



சினைப்பையிலிருந்து நாதக்கருவாகிய முட்டை குஞ்சமுனை வழியாய்ச் சினைப்பாதைக்குட்சென்று அங்கிருந்து கருப்பைக்குட் சேரும் வகை.

## சினைப்பைகள். (Ovaries).

ஆண்பிள்ளைகளுக்குச் சுக்கிலம் உற்பத்தியாகும் ஸ்தானமாகிய பீஜம் இருக்குமாப்போல், ஸ்திரீகளுக்கும் சுரோணிதம் உற்பத்தியாகும் இரண்டு சினைப்பைகள் கருப்பையின் இருபக்கங்களிலும் தசைகளினால் இணைக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் சுமார் ஒன்றரை அங்குல நீளமும், முக்கால் அங்குல அகலமும்,

அரை அங்குலத் தடிப்புமுள்ள மிகவுஞ் சுருங்கிய பைகள். கருப்பையிலிருந்து சினைப்பாதைகள் (Fallopian Tubes) என்னும் இரண்டு குழாய்கள் சினைப்பைகளுக்குச் சமீபத்தில் குஞ்சம்போல் விரிந்து அந்தமாய்ச் சினைப்பைகளோடு ஓர் நாம்பினால் சேர்க்கப் பட்டிருக்கின்றன. சினைப்பைகளிலிருந்து ஓர் சினை முற்றி வெளிப் புறப்படுஞ் சமயத்தில் இக்குழாய்கள் உடனே அதைப் பிடித்துக் கருப்பையில் கொண்டுபோய்ச் சேர்க்கின்றன. கருப்பையில் மனுஷனுடைய இந்திரியமாகிய சுக்கிலமும், ஸ்திரீயின் இந்திரியமாகிய சுரோணிதமும் ஒன்று சேர்ந்து கருத்தரிக்கிறது. சினைப்பையிலிருந்து சுரோணிதம் உற்பத்தியாகிச் சினைப்பாதையின் மூலமாய்க் கருப்பைக்குட் செல்லுகின்றது.

## சுரோணிதம்.



Graafian follicles.

சுரோணிதக் குமிழ்முதிர்ந்து வெடித்துச்சுரோணிதத்தையும் முட்டையையும் வெளியாக்குவது.

சென்னல் பின்னலான ஜவ்வாலிணைக்கப்பட்ட ஒவ்வொரு சினைப்பையிலும் அணுக்கள் போன்ற 50,000 சினை அம்சங்கள் காணப்படும். அவைகளுக்குச் சுரோணிதக் குமிழ்கள் (Ovisacs, or Graafian Vesicles) என்று பெயர். அவற்றில் சுமார் பதினாறுமுதல் முப்பதுவரை நன்றாய் முதிர்ந்து பக்குவமாகி ஜலப்பை போல காணப்படும். ஸ்திரீகளுக்கு இருபத்தெட்டு நாளுக்கொருதடவை சுரோணிதக் குமிழ் பெருத்து முற்றி வெடிப்பதனால் அதனுள்ளிருக்கும் கருவும் சுரோணித நீரும் சினைப்பாதையில் குஞ்ச முனையின் வழியாய் இறங்கிக் கருக்குழியில் விழுந்து அங்குள்ள மாதாந்தர ருதுவோடுகலந்து அல்குல் வழியாய் வெளியாகிவிடும். சினைப்பாதையின் துவாரங்கள் மகச்சன்னமாயிருப்பதால் ஸ்திரீகளுக்கு ஒரேதடவையில் புருஷருக்கு விந்து ஸ்கலிதமாவதுபோல் ஏராளமாய் ஸ்கலிதமாகாமல் கொஞ்சங் கொஞ்சமாய் இறங்கும். இக்காரணத்தினால்தான் ஒரேசமயத்தில் அநேகந்தடவை சம்போகஞ் செய்தபோதிலும் புருஷரைப்போல் ஸ்திரீகள் சோர்வடைகிறதில்லை. மாதாந்தர ருதுகாலங்களில் தான் ஸ்திரீகளுக்கதிகமாய்ச் சம்போகத்தில் பிரீதியுண்டு. இக்காலங்களில்தான் அவர்கள் கருத்தரிக்குஞ் சமயம். ஸ்திரீயினுடைய சுகத்திற்கும் அவள் சாப்பிடும் ஆகாரத்திற்கும் ஏற்றபடி முட்டை நல்ல சக்தியும் சரியான பக்குவமுமுள்ளதாகும்.

## மாதவிடாய்.

ஸ்திரீகளுடைய தேகசௌக்கியத்தைத் தெரிவிக்கும் முக்கிய அடையாளம் அவர்களின் மாதாந்தரருதுதான். மாதவிடாய் ரோஜா புஷ்பம் போன்ற நிறமுடையதாயும், மாதமொருதடவை கிரமந்தவறாமலும் வந்தால் ஸ்திரீகளின் சரீர ஆரோக்கியத்தையும் அவர்களின் ஜனனேந்திரிய உறுப்புகளின் சௌக்கிய ஸ்திதியையுங் காண்பிக்கும். உதிரம் மஞ்சள் நிறமாய் அல்லது கறுப்பாய் அல்லது உறைந்திருந்தால் அல்லது கிரமந்தப்பிவந்தால், அந்த ஸ்திரீயின் ஜனனேந்திரிய உறுப்புகள் நோய்கொண்டிருக்கின்றனவென்றும் சரீரசௌக்கியமில்லையென்றுந் தெரிந்துகொள்ளலாம். மாதவிடாய் தோன்றுவதற்கு முன்னும், அது சுத்தமாயும் நின்றுவிட்டபின்னும் புத்திரோற்பத்தியாகாது.

பூர்வீக யூதர்களும் இந்துக்களும் மாதவிடாயானது சரீரத்திலுள்ள சகலவிதமான அசுசியையும் தீட்டையும் வெளியாக்கிச் சுத்தப்படுத்துகிறதென்று மாதவிடாயைப்பற்றி விபரீத எண்ணங்கொண்டிருந்த படியினால் ஸ்திரீயைத் தீட்டானவளென்று வீட்டுக்கு விலக்கமாக்கி வைப்பது வழக்கம். ஆனால் தற்கால ஆயுள்வேத பாஸ்கர பண்டிதர்கள் சொல்வதிபாதெனில்:—ருதக உதிரம் கருப்பையிலிருந்து வருகிறது. மாசத்துக்கொருமுறை கருப்பையானது தானாகவே தடிதது் சிசு உற்பத்தித் தொழிலுக்குத்தன்னை ஆயத்தமாக்கிக் கொள்ளுகிறது. அச்சமயத்தில் முதிர்ந்த சினைகளில் ஒன்று, சுக்கிலக்கிருமி உட்செல்லுவதால் கருவாகி அங்ஙனம் வரப்பெறின அதைக் கருப்பையானது உடனே பிடித்து வளரச்செய்கிறது. அவ்விதம் கருவானசினை வரத்தவறினால் கருப்பையின் தடிப்புக்கரைந்து இரத்தத்தோடு கலந்து வெளியாகி விடுவதால் சிசுவின் வீடு மாசந்தோறும் புதுப்பிக்கபபடுகிறது.

மாதாந்தரருது வெளியானவுடன கருப்பை திரும்பவும் ஆயத்தமாகி தன்னுடைய விருந்தாளிக்காகக காத்திருக்கிறது. இவ்விதமாய்க் காலம் வருமட்டும் அநேக வருஷங்களாய்க் காத்திருந்து கருப்பையானது சிசு உற்பத்திக்காகத் தன்னை மாதந்தோறும் சுத்திசெய்து கொளவதே மாதவிடாயெனறும் சொல்லப்படுகிறது. அது கிரமமாய் இருபத்தெட்டு நாளுக்கொருமுறை காணப்படும். ஆனால் சிலருக்கு அதற்கு முன்னதாகவும், வேறுசிலருககு அதற்குப் பின்னதாகவும் அவரவாகள் தேக ஸ்திதிக்குத்தககபடி தோன்றும். சிலருக்கு மூன்று நாள் மட்டும், வேறு சிலருக்கு ஐந்து, ஆறு அல்லது ஏழுதினங்கள் வரையுமிருக்கும். சாதாரணமாய சுமார் மாகாணிபபடி வெளிப்படுவது கிரமம். சிலருக்கு அதிகமாகவும், வேறு சிலருக்குக் கொஞ்சமாகவுங் காணும்.

ஸ்திரீகளுக்குண்டாகும் நோய்களில் பெரும்பான்மை ருதுகபந்தத்தை ஒட்டினதாகவேயிருக்கும். ருது ஸ்ராவமாக வெளிப்படுவதால் ஸ்திரீயின் தேகத்திலுள்ள சீதோஷ்ணம் சமமடைந்து அவளுடைய காமமும் மட்டுப்படும்.

ருதுகமானது சரீரத்திலுள்ள அசுத்த நீர் முதலியனவற்றையும், சரீரக்கழிவாகிய அசுத்த இரத்தத்தையும் மாதந்தோறும் ஒழுங்காய் வெளிப்படுத்துகிறது என்பது இந்துக்களின் கொள்கை. அது சரியாயிருக்குமாயின், ஸ்திரீயானவள் கர்ப்பவதியாயிருக்கும்பொழுதும், பிள்ளைக்குப் பால் கொடுக்கும் பொழுதும் அவ்வித அசுத்தங்களெல்லாம் எவ்விதமாய் வெளியாகின்றன?
கருப்பையை மாதந்தோறும் சுத்தஞ்செய்து சிசுவுற்பத்திக்கு ஆயத்தம் பண்ணுவதும், கருதரித்தவுடன் அதை வளர்ப்பதும், பிரசவித்தவுடன் பாலாகமாறிச் சிசுவைக் காப்பாற்றுவதுமே ருதுகத்தின் தொழில் என அற்புதானந்த மூர்த்தியால் அமைக்கப்பட்டிருக்கிறதென்பது ஆங்கிலேய டாக்டர்களின் அபிப்பிராயம். மாதாந்தர ருது வெளியாகுங்காலத்தில் சினைப்பைகளிரண்டும் சிசு உற்பத்திக்காகத் தாம்செய்ய வேண்டிய கடமைகளைச் செய்ய ஆரம்பித்துக் கிரமந்தவறாமல் மாசத்துக் கொருமுறை ஒவ்வொரு முட்டையைப் பக்குவப்படுத்தி வெளியாக்குகின்றன.

ஏறக்குறைய அறுபது வருஷங்களுக்குமுன், மாதவிடாய்காலத்திலேயே அண்டமும் பக்குவமாகி வெளியாகிறதென்று எண்ணப்பட்டது. ஆனால் முட்டை வெளியாவதற்கும் மாதவிடாய்க்கும் யாதொரு சம்பந்தமுமில்லையென்றும் அநேக சமயங்களில் அவைகள் ஏககாலத்தில் உண்டாகலாமென்றும் இப்பொழுது கண்டுபிடிக்கப் பட்டிருக்கிறது. வருஷத்தில் சிலகாலங்களிலே மட்டும் துணைசேர்க்கும் மான், யாடு, முதலிய பிராணிகளுக்கு அடிக்கடி கருப்பையைப் புதுப்பிக்க அவசியமில்லா திருப்பதால் அவைகளுக்கு மாதருது தோன்றுகிறதில்லை. ஆனால் பெண் ஜெந்துவிற்கு வருஷத்துக்கு ஒருமுறைமட்டும் சினையானது முதிர்ந்து மதம்பொழியும் அக்காலத்தில மாத்திரம் ஆண்மிருகத்தைத் தன்னோடு சேரவிடும்.

## ருதுகாலம்.

குழந்தையானது பிறக்கும்பொழுதே அதை ஆணோ பெண்ணோவென்று குறிப்பிடுவதும், சிருஷ்டித் தொழிலுக் காதாரமான ஜனனேந்திரியங்களினுடன் பிறக்கிறது. ஆனால் பன்னிரண்டு வயதாகுமட்டும் அவைகள் தமதொழிலை நிறைவேற்றத்தக்க பூரணஸ்திதிக்கு வருகிறதில்லை. இத்தாமதத்திற்குக் காரணங்கள்

அனந்தம் உள. முதலாவது, ஜனனேந்திரியங்களை உற்பத்தியாக்க ஏராளமான சக்தி தேவேண்டும். அந்தச் சத்து சேருவதற்கு ஏராளமான பஷ்டியான ஆகாரம் உட்கொண்டு அது ஜீரணிக்க வேண்டும். அதனால் ஜீரணக்கருவிகள் பலமடைந்து ஜீரண சக்தி விர்த்தியாகும் வரையில் ஜனனேந்திரியங்கள் விர்த்தியடைகிறதில்லை.

இன்னுமொரு காரணம் யாதெனில்:— ஜனனேந்திரியங்கள் பக்குவமானவுடன் அசதியாயிருக்காமல் தம்தொழிலை ஆரம்பிக்க ஆசையுண்டாகி அதற்குரிய சமயத்திற்காக ஆவலுடன் காத்திருக்கின்றன. இக்காலத்தில் வாலிபர் அடங்காக் குதிரைகள் போல் தாம் செய்வது இன்னதென்றும், அதனாலுண்டாகும் பயனின்னதென்றும் அறியாமல் பட்டிமாடுபோல் கெட்டலைவதற்கு இடமுண்டு. ஏனெனில் தன்னைத்தானடக்கித் தன் சரீரத்தைக் கட்டியாள்வதற்குப் போதுமான பகுத்தறிவும், புத்தியும், ஞானமும், அனுபோகமும், மனச்சாக்ஷியின் வலிமையும் அவசியம் தேவை. இத்தன்மைகள் பன்னிரண்டு வயதுக்குமேல்தான் சிறிது சிறிதாக விர்த்தியாகும்.

மூன்றாவது காரணம் யாதெனில்:- இஜ்ஜீவிய போராட்டத்தில் ஒருவன் ஜெயங்கொண்டு வீரனாய் வெளியேற வேண்டுமெனில் குறைந்தது இருபத்தைந்து வருஷமாவது கல்வி கேள்விகளின் விர்த்தியும் பயிற்சியும் அவசியம். அதற்கு முன்னதாக சிறுபிராயத்திலேயே ஜனனேந்திரியங்களின் விர்த்தியால் குழந்தைகளைப் பெற்றுக் குடும்பப் பாரத்தைத் தலைமேலேற்றிக் கொள்வார்களாயின், அக்குடும்பத்தைத் தாங்கவும், அதற்காக உழைக்கவும், போதுமான சக்தியில்லாமல் சீக்கிரம் மடிந்துபோவார்கள். மேலும், பலவீனத்திற் பிறந்த பலவீனரான எலிக்குஞ்சுகள் போன்ற ஏராளமான சிசுக்கள் உலகத்தை நிரப்பிப் பூலோகமே விர்த்தியடையாது கெட்டுப் போவதற்கிடமாகும்.

ஆகலால் அண்ட கோடிகளை சாட்டையில்லாப் பம்பரம்போலாட்டுகின்றவரும், ஈரேழு புவனபோகங்களிலும் பிரகாசித்து பூதபௌதிக சராசரங்களில் எள்ளுக்குள் எண்ணெயைப்போல எங்கும் நிறைந்து நிற்கும் சர்வவியாபக லக்ஷணங் கொண்டவருமான இறைவரது ஏற்பாட்டினால் இளம்பிராயத்தில் மனுஷருடைய சகல உறுப்புகளும் நாளுக்கு நாள் பலமும் உறுதியுமடைந்து விர்த்தியாகி வருகின்றன. அவற்றோடு ஜனனேந்திரியங்களும் விர்த்தியாகிக் கொண்டுவந்து பன்னிரண்டு வயதுக்குமேல்

தம் தொழிலைச் செய்யும் பக்குவ நிலைமைக்கு வந்தவுடன், சரீர முழுவதிலும் ஓர்வித மாறுதல் உண்டாகிறது. பெண்களிடத்தில் அம்மாறுதல் அதிகப் பிரசித்தமாய்த் தோன்றுவதால், பெண் ருதுவாகி விட்டாள் அல்லது புஷ்பவதியாகி விட்டாளென்று சொல்வார்கள். ருதுகாலம் சீதள தேசங்களில் அதிக வயதிலும், உஷ்ண தேசங்களில் குறைந்த வயதிலும் சம்பவிப்பதால் உஷ்ண தேசத்திலுள்ளவர்களைவிடச் சீதள தேசத்திலுள்ளவர்கள் ஆயுள் விர்த்தியுடையவர்களாய் இருக்கிறார்கள். சாப்பாட்டிற்கும், சொகுசுக்கும், அந்தஸ்துக்கும், வேலைக்கும், தேசத்தின் உஷ்ணத்திற்கும் தக்கதாக நமது நாட்டுப் பெண்கள் பத்து வயது முதல் பதினைந்து வயது வரை ருதுவாகிறார்கள். ஏழைகளும், கஷ்டவேலை செய்பவர்களும், சரீரதிடமுள்ளவர்களும் அதிக நாட்சென்று ருதுவாகிறார்கள். நாடகம், கூத்து, நகரவாசம் முதலிய கிளர்ச்சியைக் கொடுக்கக்கூடிய விஷயங்களால் சீக்கிரம் ருதுவாவார்கள். எவ்வளவு சீக்கிரம் ருதுவாகிறார்களோ அவ்வளவுக்குக் கெடுதியேயன்றி நன்மையல்ல. ஆதலால் சிறுவர்களைக் கூத்து, நாடகசாலை, பயாஸ்கோப் முதலிய இடங்களுக்குப் போகவிடாமல் தடுப்பதுடன், சரீரத்தைச் சீக்கிரம் புஷ்டியாக்கும் இறைச்சி, முட்டை முதலிய தாதுபுஷ்டியை உண்டாக்கக்கூடிய வஸ்துக்களையும் உஷ்ணமான ஆகாரங்களையும் கட்டுப்படுத்திச், சரீரத்துக்கும் மனதுக்குப் போதுமான உழைப்பைக் கொடுக்கக்கூடிய வாசிப்பு முதலிய வேலையிலும் விளையாட்டிலும் அப்பியாசிக்க வேண்டும்.

---



## ஆணின் ருதுகாலம்.

பிராயமாகுமட்டும் ஆண் பெண்களின் நடவடிக்கைகளில் யாதொரு வித்தியாசமுந் தெரியாது. ஆனால் வயதானவுடன் ஆண்கள் சௌரிய தைரியவீரிய சம்பன்னராவதுடன், சரீர தாஷ்டிகமடைந்து, மார்பகன்று, புயபலமுடையவர்களாகிறார்கள். தலைமயிர் தடித்துச் சரீரமெல்லாங் கறுப்பு ரோமந் தோன்றும். முகத்தில் மீசையரும்பும் இரகஸ்ய ஸ்தானத்திலும் அக்குளிலும் ரோமமுந்தோன்றும். தொண்டைவிரிந்து முடிச்சு (Adam's Apple) தோன்றி இச்

சுக்ரால் மாறிப் புருஷசத்த முண்டாகும். இவ்வித மாறுதல்களுக்குக் காரணம் யாதெனில்:- புருஷத்தன்மையை விளக்குவதும், சிருஷ்டித்தொழிலுக் காதாரமானதும், ஜீவசத்தினமுமான சுக்கிலம் பீஜப்பைகளில் சுரப்பதேயாம். இப்பருவந்தான் அவர்களுக்குச் சோதனைப் பருவமாகும்.

இக்காலத்தில் பலமும், தேஜசும், ஊக்கமும் அதிகரிப்பதால், ஆண்களுக்கு மற்றவர் செய்யும் அநியாயம், தப்பிதம், குரூரச் செயல் முதலியவற்றைக் காணும்போது மகா உக்கிர கோபமுண்டாவதுடன், ஏழைகளையும், பலவீனரையும், நோயாளிகளையுங் காப்பாற்றி அவர்களுக்குதவி செய்ய ஆவலுமுண்டாகும். இப்பருவத்தைப்பற்றி முதற் புஸ்தகத்தில் கியாக்கியாப் பருவத்தின் கீழ் சவிஸ்தாரமாய்ச் சொல்லியிருக்கிறோம்.

இக்காலத்தில் தன் சரீரத்தின் ஆசாபாசங்களை யடக்கியாளக்கூடியவன் மட்டுமே கல்வியிலும் பலத்திலும் விர்த்தியடைந்து பிற்காலத்தில் கீர்த்திமானாவான். தன் சரீரத்தை யடக்கக்கூடிய பலமில்லாதவனோ என்ன செய்வதென்றறியாமல் பித்துப் பிடித்தவன்போல் திரிவான். புதிய ஆசையும் புதிய எண்ணங்களும் புதிய விருப்பங்களு முண்டாகித் தன்னை யடக்க முடியாமலும், பெற்றோரின் கட்டுப்பாட்டுக்கடங்கி நடக்க மனமில்லாமலும் அந்த அற்பகாரணத்தை முன்னிட்டும் பள்ளிக்கூடத்தை விட்டேனும் வீட்டை விட்டேனும் ஓடிப்போய் விடுவான். இச்சமயம் பெற்றோர் வெகு ஜாக்கிரதையுடன் அதிகம் கோபிக்காமலும் அதிக இளக்காரங் கொடுக்காமலும் அன்பான வார்த்தைகளால் அப்பருவப்பட்டவனை வசப்படுத்தித் தங்கள் குடும்பங்களில் அல்லது இதரர்களில் அவ்விதமாகக் கெட்டுப்போனவர்களின் நடக்கையையும் உதாரணமாக எடுத்துக்காட்டி, முன்னேறவேண்டுமென்னும் ஆவலை அவன் மனதில் உண்டாக்கவேண்டும். அப்படிச் செய்து வசப்படுத்தாவிடில் பட்டிமாடுபோல் கெட்டலைந்து போவான். ஏனெனில், இப்பிராயத்தில் சுயாதீனத்தின்மேல் அதிகப்பிரீதியும், தானாகவே அநேக காரியங்களைச் செய்யவேண்டுமென்கிற அவாவும், மற்றவர்களால் செய்ய முடியாத அரியபெரியகாரியங்களைச் செய்து கீர்த்திமானாக வேண்டுமென்கிற விருப்பமும், தன் இனத்தாரில் எவருக்குங் கிடைத்திராத ரூபலாவண்யம் பொருந்திய ஓர் சுந்தரமாதைத் தனக்குப் பாரியாகப் பெற்றுக் கொள்ளும் பொருட்டுச் செய்யவேண்டிய பகீரதப் பிரயத்தனங்களையெல்லாம் தன் உயிரை வெறுத்துத் தனக்குண்டாகும் கஷ்டநஷ்டங்களையெல்லாங் கவனியாமல் செய்யவேண்டுமென்கிற எண்ணமும் உதிக்கும். இக்காலத்தில் பெற்றோருங் குருமாரும் நல்வசனிப்பினும் [illegible] நடத்தைகளினாலும் அவனைக் கைவசப்படுத்திச் சீரான வழிகளில் நடத்தத் தவறினால் ஒருவர் கட்டுக்

துள்ளு மடங்காமல் வீட்டை விட்டு வெளியில் ஓடிக்கெட்டுப் போவாளென்பது நிச்சயம். இதமாய் நடந்தவர்களுடைய, பெரியோர்களானவர்களின் நடவடிக்கைகளை அடிக்கடி எடுத்துப் பேசுவதனாலும், பராக்கிரமசாலிகளின் நற்குணங்களைக் கட்டிக் காட்டுவதனாலும் அவன் சீர்திருந்தித் தன்னுடைய சுகத்தையும் பலத்தையுங் கவனிப்பது மல்லாமல் உன்னத உயர்ப்பதவியிருல் ஏறுவதற்கு வந்து விர்த்தியாவானென்பது நிச்சயம். இக்காலத்தில் பிரதிதினமுங் காலை மாலை குளிறக்க பட்சம் அனேகமனியர்களும் குளிர்ந்த ஜலத்தில் ஆசன ஸ்நானஞ் செய்துவரவேண்டும். மேலும் புகையிலை, சிகரட், காப்பி, தேயிலை, லாகிரிகள், மிட்டாய், மாமிசம் முதலியவற்றை உபயோகியாமலிருப்பது மகா உத்தமம். அடிக்கடி வெளியில் சஞ்சரித்துத் தேகாப்பியாசஞ்செய்து வருவதால் தனது சரீரத்தை அடக்கியாளுஞ் சக்தியுள்ளவனுவான். "மனுஷன் எதை விதைக்கிருனே அதையே அறுப்பான்." தீய வழியில் நடந்தால் தீமையும், நல்ல வழியில் நடந்தால் நன்மையுமுண்டாகும்.

---

## பெண்ணின் ருதுகாலம்.



ஸ்திரீகள் புஷ்பவதிகளாகும் முன்னும், நாற்பது நாற்பத்தைந்து வயதில் மாதாந்தர ருது நின்றபின்னும் கருத்தரிக்க மாட்டார்கள். புஷ்பவதியாகிற தென்றால் கருப்பையிலிருந்து சிவந்த உதிரம்போன்ற ஓர் திரவம் வெளிப்படுவதுதான். இந்தச் சூதக நீர் உதிரத்தைப்போல உறைந்து கட்டியாகிறதில்லை. இந்த மாதாந்தர ருது இருபத்தெட்டு நாளுக் கொருமுறை வெளிப்படும். ஸ்திரீ புஷ்பவதியாகுஞ் சமயத்தில் அவள் சரீர முழுவதும் ஓர்வித மாறுதல் தோன்றும். அச்சமயம் ஏராளமான உதிரமும் நரம்புச் சக்தியும், ஜனனேந்திரியங்களுக்கு செல்வதால் அவை விர்த்தியாவதுடன் கை கால்கள் பருத்து உருண்டை வடிவமாகின்றன. முகத்தில் மலர்ந்த ரோஜா புஷ்பத்தைப் போன்ற தேஜஸ் உண்டாகிறது. ஸ்தனங்களிரண்டும் விம்மிப் பருக்கின்றன. இவ்வித மாறுதல்கள் சரீரத்தில் உண்டாகும்பொழுது மனதிலும் ஓர்வித மாறுதல் உண்டாக, சிறுமியின்

ளைத் தன்மையை விட்டு, நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் ஸ்திரீகளுக்குரிய லக்ஷணங்கள் தோன்றுகின்றன. தனக்குண்டாயிருக்கும் மாறுதல்களைப் பற்றி நன்றாய்த் தெரிந்திருப்பதால் ஆண்களைக் கண்டவுடன் ஓர்வித வெட்கத்தால் தலை கவிழ்ந்து நடப்பாள். மாதாந்தர ருது அவரவர் சரீர கூறுகளுக்குத் தக்கபடி அதிகமாகவாவது குறைவாகவாவது இருக்கும். சிலருக்கு இரண்டு அல்லது மூன்று தினங்கள் வரையும், வேறு சிலருக்கு ஐந்து அல்லது ஆறு தினங்கள் வரையும் இருக்கும். மாதாந்தர ருது வெளிப்படுவதற்கு முன் சில பெண்களுக்கு அஜீர்ண பலவீனமுண்டாகி மார்பில் சுருக்குச் சுருக்கென்று நோவுண்டாகும். பசியிராது. மற்றவர்களோடு பழகவாவது தக்க கிரமமான வேலையைச் செய்யவாவது மனமிராது. தலைநோவும், இடுப்பு, தொடை முதலியவற்றில் ஓர்வித உளைச்சலு முண்டாகும். அஜீரணமும் உண்டாகலாம். இக்காலத்தில் லேசாய் ஜீரணிக்கத்தக்க சுத்த ஆகாரங் கொடுப்பதுடன், படிப்பு, சரீர உழைப்பு முதலியவைகளைக் கட்டாயம் நிறுத்தவேண்டும். புஷ்பவதியாகும் முதல் ருதுவில் பெண் படுத்திருக்கவேண்டும். பிற்காலங்களிலுங்கூட வலியிருக்குமாயின் படுத்திருப்பதே நலம். அஜாக்ரதையாயிருந்தால் அவள் ஜீவியகாலம் முழுதும் நோயாளியாகவே யிருப்பாள்.

எச்சரிப்பு:—மாதாந்தர ருதுகாலத்தில் எந்தமுகாந்தரத்தை முன்னிட்டேனும், எவ்வளவு பலசாலியாயும் சுசக்தியாயுமிருந்தபோதிலும, ஸ்திரீ குளிர்ந்த ஜல ஸ்நானம் செய்யவேகூடாது. மேலும் சாப்பிட்டு இரண்டரைமணி நேரமாகு மட்டும் ஸ்நானஞ் செய்யக்கூடாது.

---

## சூதகக்கட்டுண்டாவதற்குக் காரணங்கள்.

குளிர்ந்த ஜலத்தில் நடத்தல், உட்கார்ந்திருத்தல், ஸ்நானம் செய்தல், ஜலதோஷம் பிடித்தல், மழையில் நனைதல் முதலியவற்றி லுண்டாகுஞ் சீதளத்தினால் மாதாந்தர ருது முற்றிலும் அல்லது சிலபாகம் மறிபட்டு வெளிப்படாமல் நின்றுபோம். அடிக்கடி கர்ப்பம் கலைந்து போவதனாலும், வெள்ளை எனப்பட்ட வியாதியினாலும், மிதமிஞ்சிய சம்போகத்தினாலும், கெட்ட ஆகாயத்தைச் சுவாசிப்பதனாலும், மிகுந்த விசனத்தினாலும், திடீரென்று பயப்படுகிறதினாலும், சரியான சாப்பாடில்லாததினாலும், மிகுதியான மனஉழைப்பினாலும், மாதாந்தர ருது சிலர்க்கு நின்றுபோவதுண்டு. அப்படி நின்றுபோவது வியாதியென்றெண்ணாமல் சந்தோஷமாய்த் திரிவதுண்டு. அது தப்பிதம். குற்றங்களை முதி

லிய இடங்களில் வசிக்கும் சில பெண்கள் அறியாமையினால் மாதாந்தர ருது கண்டவுடனே, அது அசங்கியமென்றெண்ணி ஆற்றுத் தண்ணீரில் போய் உட்காருவதுண்டு. இது மகா தப்பிதம். இதனால் பின்னுக்கு அதிகக் கஷ்டமுண்டாகும். அக்காலத்தில் ஸ்நானங்களை முதலாய்க் குளிர்ந்த ஜலத்தில் செய்யாதிருப்பதே மிக உத்தமம்.

ருதுபந்தத்தினால் சிசுவுற்பத்திக்குத் தடையாயிருப்பதுமன்றி ஸ்திரீகளுக்குரிய ரோகங்களும் உண்டாகக் காரணமாகும். அவை யாவன:—கர்ப்பாசயத்தைச் சார்ந்த வீக்கம், அழற்சி முதலிய பலரோகங்களும், மூளையைச் சார்ந்த ரோகங்களாகிய கிறுகிறுப்பு, மறதி, தலைவலி, ஒற்றைத்தலைவலி, காக்கைவலி, பைத்தியம் முதலியவைகளும், நுரையீரலைச் சார்ந்த க்ஷயம், இருமல், சுவாசகாசம், க்ஷயம் முதலியவைகளும்; இரைப்பை, குடல் முதலியவற்றைச் சார்ந்த நோய்களாகிய அஜீரணம், பசிமந்தம், வாந்தி, குமட்டல், அதிசாரம், குன்மவலி முதலியவைகளும், இவையன்றி ஜன்னி, ஜுரம், கழுத்துவலி, முதுகு முள்ளந்தண்டுவலி, பிடரிவலி முதலிய பலரோகங்களும் நாட்செல்லச் செல்ல ஒவ்வொன்றாய்த் தோன்றி உபத்திரவப்படுத்தும். ஆதலால் ருதுக்கட்டை ஏனோ தானோவென்று அசட்டை செய்யக்கூடாது.

---

## ருதுவாகாத பூப்பிலிகள்.

சில பெண்கள் புஷ்பவதியாகாமலிருப்பதால், அவர்களுக்குப் பூப்பிலிகளென்று பெயர். இதற்குக் காரணம் கருப்பையானது ஏதோ வியாதியினால் வளர்ச்சியாகாமல் சிறுத்திருப்பதே. இப்படிப்பட்ட ஸ்திரீகளுக்குச் சரீரத்தில் மதர்ப்பு இராது. பசியின்மை, ஆயாசம், கைகால் ஜில்லிட்டிருத்தல் முதலிய குணங்களிருக்கும். இவர்களுக்கு இப்படிப் புஷ்பமாகாதிருப்பதுடன், ஆண்தன்மையே மிகுத்திருப்பதால் ஆண்களைக் கண்டால் ஓர் வெறுப்பும் கலியாணத்தின்மேல் நோக்கமுமில்லாமல் போய்விடும். இது வெகுகாலம் நிலைத்திருந்தால் சுகப்படுத்த முடியாது. ஆதலால்கூடிய சீக்கிரம் இவர்களுக்குச் சரீரபுஷ்டியும் இரத்தச் சுரப்புமுண்டாக்கத்தக்க சிங்க வீரிய மாத்திரைகளைக் கொடுத்து வருவதுடன், புஷ்டியைத் தரத்தக்க நெய், பால், தயிர், மாம்சம், மச்சம் முதலிய ஆகாரங்களும் கொடுக்கவேண்டும். பிரதிதினமும் காலை, மாலையில் ஐந்து நிமிஷம் சூடுவைத்த உப்புஜலத்தில் ஆசனஸ்நானஞ் செய்து வருவதுடன் சுத்த ஆகாயத்தையும் சுவாசித்து வரவேண்டும், பிரதிதினமும் ஒரு ஆள் அவர்கள் சரீரமுழுவதையும் அமுக்

கிப் பிடிப்பதுடன், கருப்பையிருக்கும் ஸ்தானத்தையும், மார்பையும், இடுப்பையும், தொடையையும் பிசைந்து விடுவது அவசியம்.

12-ம் புஸ்தகத்தில் சொல்லியிருக்கும் கர்ப்பாசய சஞ்சீவியில் வேளைக்கு ஒரு தேக்கரண்டியளவு காலை மாலை இருவேளையும் சாப்பிட்டு வருவதுடன் சிங்க வீரிய மாத்திரைகளில் இரண்டை மத்தியான போஜனமான காலமணி நேரத்திற்குப் பின் சாப்பிட்டு வர தேகபுஷ்டியும் இரத்தச்சாப்பு முண்டாகி ருது வெளியாகும். ஆனால் இடுப்பிலுள்ள எலும்புகளிலுண்டான பேதங்களினால் ருதுவாகாதிருக்கும் பூப்பில்லாருக்கு எந்தவித சிகிச்சையும் பயன் படாது.

---

## ருதகம் தடைப்படல்.

## (Amenorrhoea or Abcce of Menses.)

மாதாந்தர ருது ஸ்திரீ கர்ப்பமாயிருக்கும்போதும் பிள்ளைக்குப் பால் கொடுக்கும்போதும் நின்றுபோவது இயற்கை. சிலருக்கு இவ்விரு சமயங்களிலுங்கூட ருதகம் வருவதுண்டு. கர்ப்பமாயிருக்கும்போது ருதகம் வந்தால் அது யோனியிலிருந்து மாத்திரமே வரும். ஏனெனில் அக்காலத்தில் கருப்பையின் வாய் அடைபட்டிருக்கும்.

சில ஸ்திரீகளுக்குக் கருப்பையிலுண்டான நோயினாலும், பலமுகாந்தரங்களாலும், ருதகம் வரவேண்டிய காலத்தில் வராமல் ருதகம் வருவதற்குரிய குறிகளாகிய முதுநோவு, தலைவலி, சோம்பல், சோர்பு, பசிமந்தம், இடுப்புநோவு, மூக்கடைப்பு, முதலிய பல குணங்களிருந்தும் ருதகம் வராமல் தடைப்படுவதுண்டு. அவர்கள் படுக்கைக்குப் போகுமுன் வெந்நீரை ஏறக்குறைய 110-டிகிரி வரைச் சூடுவைத்துப் பாதஸ்நானத் தொட்டியில் விட்டு, இரண்டு தேக்கரண்டியளவு கடுகை யரைத்து அத்தண்ணீரில் கலக்கி, அதில் கணுக்கால் மறைபடத்தக்கதாக இரு பாதங்களையும் வைத்துக்கொண்டு அரை மணிநேரம் பாதஸ்நானம் செய்யவேண்டும். வெந்நீர் குளிர்ந்துவிடாதபடிக்கும், குளிர்ந்த காற்றுக் காலில் படாதபடிக்கும் ஸ்திரீயையும், பாதஸ்நானத் தொட்டியையுஞ் சுற்றி ஒரு பெரிய கம்பளியால் மூடவேண்டும்.

1. ஔஷதம் தேவையாயிருந்தால், ஸ்திரீயானவள் முதுகுவலி, தலைப்பெரிச்சல், அசதி, காலில் வியர்வை, ஜனனேந்திரிய

களில் சினைவு அல்லது ரணமுண்டாகுங் குறிகளுள்ளவர்களாயிருந்தால் சில் (Sil.) என்னும் மருந்தில் பன்னிரண்டு மாத்திரை அரைக்கிளாஸ் தண்ணீரில் கலந்து இரவும் பகலும் கொடுத்து வரவேண்டும்.

2. சில ஸ்திரீகள் நடந்ததனால் அல்லது குளிர்பட்டதனால் மாதாந்தர ருது தோன்றாமல், பசியின்மை, குளிர்ச்சி தோன்றல், கொழுப்புப் பதார்த்தங்களின்மேல் வெறுப்பு, பற்பல இடங்களிலும் மாறி மாறி வலித்தல், வெளியிலுள்ள சுத்த ஆகாயம் பட்டவுடன் சுகமாய்த் தோன்றுதல், முதலிய குறிகள் தோன்றினால் இப்படிப்பட்டவர்களுக்கு பல்ஸ் (Puls) என்ற மருந்தில் பன்னிரண்டு மாத்திரை அரைக்கிளாஸ் தண்ணீரில் கலந்து தினம் நான்கு முறை கொடுத்து வரவேண்டும்.

12-ம் புஸ்தகத்தில் சொல்லியிருக்கும் ருதுகபந்த நிவாரணியை (Emmenagogue) மாதாந்தர ருது காணவேண்டியதற்கு மூன்று நாளைக்கு முன்னமே பிரதிதினமும் மூன்றுவேளையும் வெவ்வேறு மாத்திரை சாப்பிடவேண்டியது. ருது கண்ட நாள்முதல் நாலு அல்லது ஐந்து நாளைக்கு வெவ்வேறு நேரத்திற்கு (2 or 3) பில்லைகள் வீதம் மூன்று வேளையும் சாப்பிட்டால் பல காரணங்களினாலும் ருதுகாணாமல் தடைபட்டிருப்பதும், இதனால் ஏற்படுகிறதாகிய பல நோய்கள் நீங்கி, அடிக்கடி உண்டாகும் வயிற்றுவலி, முதுகுவலி, இடுப்புவலி, அசதி, சோம்பல், சோர்வு, கிறுகிறுப்பு, கண்ணெரிவு, தாகம், மயக்கம், கால் வியர்வை, ஜனனேந்திரியங்களில் தினவு, கைகாலெரிவு, துர்ப்பலம், மாரடைப்பு, இசிவு முதலியவற்றைச் சுகமாக்கும்.

குறிப்பு:—இம்மாத்திரைகளைச் சாப்பிடுவதால் மலசுத்தி தாராளமாயுண்டாகும். அதிகப்படின், மருந்தின் அளவைக் குறைத்துச் சாப்பிடவும்.

---

## குத்தோடு கூடிய ருதுகம்.

## (Dysmenorrhoea or Painful Menstruation.)

ஜனனேந்திரியங்களின் அங்கக்குறைவு, ஜனனேந்திரியங்களிலுள்ள வியாதிகள், கருப்பையிடமாறி அல்லது அடைபட்டிருத்தல், குளிர், அக்கிரமக் கிர்த்தியங்கள், பலத்தக்கேடு முதலிய காரணங்களில் ஏதாவதொன்றினால் குத்தோடு கூடிய ருதுகமுண்டாகலாம். அந்தக்குத்து முதுகில் அல்லது தலையில் அல்லது மேலிருந்து கீழாகப் பலவிதமாயுண்டாகலாம். ருதுகத்தோடு ஏதாவது

கட்டி வெளியேறலாம். சூதகம் தடைப்பட்டுக் கொஞ்சமாகவேனும், சில நாட்கள் விட்டு விட்டேனும், சில சமயங் கொஞ்சமாகவும் சிலசமயம் அதிகமாகவும் வந்துகொண்டேயிருந்து தொந்தரவு செய்யலாம்.

## சிகிச்சை:

சூதகம் குத்தோடுகூடி வெளியேறும்பொழுது ஸ்திரீ தனக்கு வசதியான பிரகாரம் நீட்டி நிமிர்ந்து படுத்திருக்கவேண்டும். தலைக்குத் தலையணை வைக்காமல் மற்றப் பாகங்களைவிடத் தாழ்வாக வைத்துப் படுக்கவேண்டும், அதற்குப்பின் வலியிருக்கிற இடத்தில் கம்பளியை நன்றாய்ச் சுடுகிற வெந்நீரில் தோய்த்துப் பிழிந்துவிட்டு ஒற்றடங் கொடுக்கவேண்டும். அப்படிப் பிழிவது கஷ்டமாயிருக்குமாதலால், பிழிகிறவர்கள் குளிர்ந்த ஜலத்தில் கைகளை நனைத்துக்கொண்டு அல்லது ஈரமில்லாத ஒருதுவாலைத் துணியைக் கையில் பிடித்துக்கொண்டு பிழியவேண்டும். நன்றாய்ச் சுடுகிற தேயிலை முதலிய உஷ்ணமான பானங்களைப் பருகுவதனாலும், சுடுகிற வெந்நீரில் ஸ்நானஞ் செய்வதனாலும், கர்ப்பாசயப்பக்கத்தில் வெந்நீர் ஒற்றடங் கொடுப்பதனாலும், வியர்வை விளையச் செய்யவேண்டும். வயிற்றுவலியோடு சேர்ந்த சூதகமிருந்தால் மதர்டிங்க்சர் ஆவ்வைபர்ன் ஓப் (Mother tincture of viburn Op.) என்ற ஔஷதத்தில் பத்துத் துளியை ஒரு மேஜைக்கரண்டியளவு வெந்நீரில் கலந்து வலிநிற்கும் வரை இரண்டுமணி நேரத்துக்கொருதடவை சாப்பிட்டு வரவேண்டும். இதனால் பிரயோஜனந் தோன்றினால், அடுத்த சூதகம் வரும்பரியந்தம் அளவைக் குறைத்துக் காலை மாலை ஐந்து துளி வெந்நீரில் கலந்து சாப்பிட்டு வரலாம்.

தலைவலியும் சோர்வுமுண்டாகிக் கண்ணொளி மழுங்கி, சிறுநீர்பெருத்து, அடிக்கடி வலியுண்டாவதுடன், கருப்பையிலிருந்து உதிரக்கட்டியும்வெளியேறினால், மதர்டிங்க்சர் ஆவ்ஜில்ஸ் (Mother tincture of Gels) என்ற ஔஷதத்தில் 5 துளியை ஒருமேஜைக்கரண்டி வெந்நீரோடு கலந்து இரண்டுமணி நேரத்துக்கொருதடவை சாப்பிட்டு வரவேண்டும். இதனால் சுகமுண்டாயின், அடுத்த சூதகங் காணும்வரையில் அளவைக் குறைத்து, ஒரு மேஜைக்கரண்டி தண்ணீரில் இரண்டு துளி மட்டுங் கலந்து காலை மாலை சாப்பிட்டு வரலாம்.

கையினால் தொட்டால், அல்லது நடந்தால், அல்லது குளிர் பட்டால் வலியுண்டாகிச் சூதகம் விட்டு விட்டு வந்துகொண

டிருந்து. கொக்குய்லஸ் (Cocculus) என்ற ஔஷதத்தில், பன்னிரண்டு மாத்திரை கலந்து இரண்டுமணி நேரத்துக்கொருமுறை ஒரு மேஜைக்கரண்டியளவு கொடுக்கவேண்டும்.

குத்தோடு கூடிய சூதகத்திற்கு டாக்டர் பிளாக் என்பவரின் கைகண்ட ஔஷதம் யாதெனில்:—வாலற்றயில் டிங்க்சர் ஆவ் கொய்யாக்கம் (Volatile tincture of Guaiacum) என்ற ஔஷதத்தில் முப்பது முதல் ஐம்பது துளிவரை சர்க்கரையில் அல்லது பாலுடன் தண்ணீரில் கலந்து பிரதிதினமும் மூன்றுதடவை சாப்பிட்டுவரவேண்டும். ஒருநாள்விட்டொருநாள் இரவில், அதிகமாய்ப் பேதியாகாமல் மலசுத்திசெய்யக்கூடிய ஆகபேதி மாத்திரை சாப்பிட்டுவருவதுடன், வெளியிலுள்ள சுத்த ஆகாயத்தைச் சுவாசித்து உலாவுதல் முதலிய தேகாப்பியாசஞ் செய்துவரவேண்டும். மேலும் லேசாய் ஜீரணமாகத்தக்க வஸ்துக்களைப் புசித்து, ஒருநாள்விட்டொருநாள் காலையில் வெந்நீரில் ஸ்நானஞ் செய்து, சந்தோஷமாய்ப் பேசுகிறவர்களோடு பேசியிருக்க வேண்டும்.

கொழுக்குப் புஷ்டியான தேகமுடைய சிலருக்குச் சிரசுப் பக்கம் அதிகமாய் வியர்வை தோன்றி பாதங்கள் குளிர்ந்து தேகம் வெளிறி, சக்தியற்றிருப்பதால் சூதகந் தோன்றாதிருக்கலாம். இவர்களுக்குக் கால்சியம் கார்போனேட் (Calcium Carbonate) என்ற மருந்தைத் தண்ணீரில் கலந்து ஒரு மேசைக்கரண்டியளவு தினம் ஒன்றுக்கு நாலுதடவை கொடுக்கச் சுகமாகும்.

புஷ்பவதியாகவேண்டிய சமயத்தில் சகலகுறிகளுந் தோன்றின போதிலும் சூதகம் மட்டும் வராமல் தடைப்பட்டு, வயிறுவிம்மித் தெரியுமாயின் உடனே டாக்டருக்குத் தெரிவிக்கவேண்டும். அவர் மாத்திரம் ருதுவை வெளியாக்க வேண்டிய விதஞ் செய்யக்கூடும்.

சில சமயம் மாதாந்தர ருது திடீரென்று நின்றுபோகலாம். அப்பொழுது வெந்நீரில் ஆசனஸ்நானமாவது பாதஸ்நானமாவது செய்வதுடன், தேகத்தை உஷ்ணமான கம்பளியால் சுற்றிக்கொண்டு ஏதாவது சுடுகிற பானத்தைப் பருகுவதால் வியர்வை உண்டாகும்படி செய்யவேண்டும். அடிவயிறு, தொடை, கால், கைகளில் சுடுசெங்கல் அல்லது வெந்நீர்ப்பை முதலியவற்றால் வேது ஒற்றடங் கொடுக்கவேண்டும். இப்படிச் சூதகந் தடைப்படுவது வழக்கமாகிவிடின் அநேக வருத்தங்களுக்கிடமாகுமாதலால், மாதாந்தர ருது வரவேண்டியதற்கு ஒரு வாரத்திற்கு முன்னமே மேற்சொன்னபடி வெந்நீரில் ஆசனஸ்நானஞ் செய்துவருவதுடன்,

பிரதிதினமும் குடலையும் கருப்பையையும் பிசைந்து (massage) விடவேண்டும்.

கோஷ்டம், குங்கிலியம், நிலவேம்பு, பெருங்காயம், காட்டுச் சீரகம், சன்னலவங்கப்பட்டை இவை வகைக்குக் கால்பலம், அரபி பாளம் அரைப்பலம், குங்குமப்பூ முக்கால்பலம், இவைகளை நன்ய் அரைத்துப் பதினெட்டுப் பல நல்லெண்ணெயில் கலக்கிப் த்து நாளைக்கு வெயிலில்கலக்கிக் கலக்கி வைத்துப்பின் அதோடு அரைப்படி சுத்த ஜலம்சேர்த்து நீர்வற்றக் காய்ச்சி வைத்துக்கொண்டு சரீரத்துக்குத் தக்கபடி இரண்டு அல்லது மூன்று தோலா வீதம் பாலில் கலந்து கா"யில் மட்டுஞ் சாப்பிட்டு அதே எண்ணெயை அடிவயிற்றிலும் பூசிவரச் சர்வ சூதகக்கட்டும் விலகும். (யூனானி.)

நமது சூதகபந்த நிவாரணியை மாதாந்தர ருது காணுவதற்கு மூன்றுநாளைக்கு முன்னமே பிரதிதினமும் காலை, மத்தியானம், மாலை ஆகிய மூன்றுவேளையும் ஒவ்வொரு மாத்திரை சாப்பிடவேண்டும். ருது காண்பதற்கு முந்தின நாள் ஒவ்வொருநேரமும் இரண்டு மாத்திரை சாப்பிடவேண்டியது. ருது கண்ட நாள் முதல் நாலு அல்லது ஐந்துநாளைக்கு ஒவ்வொருநேரத்திற்கு மூன்று பில்லைகள் வீதம் மூன்றுவேளையும் சாப்பிடவேண்டியது. இம்மாத்திரைகளால் மலசுத்தி தாராளமாயுண்டாகும். அதிகப்படின் மருந்தின் அளவைக் குறைத்துச் சாப்பிடவும்.

இம்மருந்தினுல் குணங்காணுவிடில் கர்ப்பாசயம் மாறி விழுந்திருக்கும். அல்லது சினைப்பாதை சிறிதாக யிருக்கும். இதை டாக்டர்கள் பரிசை செய்துச் சீர்ப்படுத்தக்கூடும்.

---

## விகாரச் சூதகத் தோற்றம். (Vicarious Menstruation.)

சில ஸ்திரீகளுக்குச் சூதகம் வெளிப்படுவதற்குரிய குறிகளெல்லாந் தோன்றினபோதிலும், சூதகந் தோன்றுகிறதில்லை. தோன்றினும் மிக அற்பமாய் மூக்கிலிருந்தாவது ஆசனத்தின் வழியாயாவது உதிரம் வெளிப்படும். சிலருக்கு எச்சில் உமிழும்போது இரத்தஞ் சேர்ந்து வரலாம். வேறு சிலர் இரத்தமாகவே வாந்தியெடுக்கலாம், மூக்கு, கண், காது, கை, கால், நுரையீரல், வயிறு, மார்பு, தொப்புள் முதலிய இடங்களிலிருந்தேனும், புண், கட்டிகளிலிருந்தேனும் உதிரம் வெளியேறுவதுண்டு.

சிகிச்சை:-இவ்வியாதி எளிதில் சுகமாகக் கூடியதல்ல. அநேக வருஷங்களுக்கு இவ்விதமாயிருந்து மரணத்தை உண்டுபண்ணலாம். இதற்கும் முன்சொன்னபடியே வெந்நீரில் ஆசனஸ்நாநம்

அல்லது பாதஸ்நாநஞ் செய்வதுடன், வேது ஒற்றடமுங்கொடுத்து வியர்வை யுண்டாகும்படி செய்து, புஷ்டியை உண்டாக்கக்கூடிய ஆகாரங்களைக் கொடுத்துவர வேண்டும். உதிரம் வெளியாகும் இடங்களில் சொஸ்தமாக்கக்கூடிய ஒளஷதங்களை உபயோகித்து உதிரத்தை நிறுத்தவேண்டும்.

சூதகங்காணும் காலத்தில் பிரை (Bry) என்னும் ஒளஷதத்தை ஒரு தேக்கரண்டித் தண்ணீரில் கலந்து இரண்டுமணி நேரத்துக் கொருதடவை கொடுத்துவர வேண்டும் சூதகங் காணாத காலத்திலும் மேற்படி ஒளஷதத்தை வேளைக்கு ஒரு மேசைக் கரண்டி யளவு பிரதிதினமும் இருவேளை சாப்பிடவேண்டும்.

## சூதகப் பெரும்பாடு.

### (Menorrhagia or Profuse Flow of Menses.)

ஒரே காலத்தில் ஏராளமாய்ச் சூதகம் வெளிப்படுவதற்கும், ஒரேதரம் வந்த சூதகம் நெடுங்காலம் நீடித்திருப்பதற்கும், வரவேண்டிய காலத்திற்கு முன்னாகவே வருவதற்கும், சூதகப் பெரும்பாடென்று பெயர்.

**காரணம்.** கருப்பையில் விசித்திர தசைகள் வளர்வதனாலும், புத்தியீனமான பலவித அக்கிரமக் கிர்த்தியங்கள் நடப்பிப்பதனால் கருப்பையிலுண்டாகும் வீக்கத்தினாலும், உதிரம் கெட்டுப்போயிருப்பதனாலும், வாதசரீரமுள்ள ஸ்திரீகளுக்கு கருப்பையின் நுனியிலுள்ள இரத்ததாரைகள் பலகுன்றிப் போயிருப்பதால் கருப்பையில இரத்தங் கட்டிப்போவதனாலும், இவ்விதப் பெரும்பாடுண்டாகும். சரீரத்திலுள்ள ஜீவாதாரமாகிய உதிரம் வெளிப்பட்டுவிடுவதால உயிருக்கு ஹானியாகுமாதலால இவ்விதநோயை அசட்டை பண்ணாவ கட்டாயம் நமது சிங்கவீரிய மாத்திரையில் வேளைககு இரண்டு வீதம மூன்றுவேளையும் போஜனத்திற்குமேல சாப்பிட்டு நரம்புகளுக்கு முறுக்கேற்றி சுகத்தைக் காப்பாற்ற வேண்டும்.

**சிகிச்சை:**—நோயாளி எப்பொழுதும் இடுப்பின்கீழ் ஒரு தலையணையை வைத்துத் தலை பள்ளத்திலும் இடுப்பு உயரத்திலும் இருக்கத்தக்கதாக ஆறுதலாய்ப் படுத்திருக்கவேண்டும். நடமாடுதலும், உட்கார்ந்துகொண்டிருத்தலுங் கூடாது. எழுந்தாலும் உட்கார்ந்தாலும் திடீரென்று மூர்ச்சை போய்விடும். உஷ்ணத்தைத் தணிப்பதற்காக வயிற்றின்மேலும், இடுப்பின்மேலும்

பனிக்கட்டி ஒற்றடங் கொடுக்கவேண்டும். பாதங்களை வெந்நீரில் வைக்கவேண்டும். அல்லது காடி (Vinegar) யைத் தண்ணீரில் கலந்து அதில் துணியை நனைத்து அடிவயிற்றில் கட்டவேண்டும்.

முதுகில் வலியிருந்தால் நமது மகா சஞ்சீவித் தைல (Magnetic Balm) த்தைத் தேய்த்து முன்சொன்னபடி வெந்நீரில் நனைத்துப் பிழிந்த கம்பளி ஒற்றடங் கொடுக்கவேண்டும். உதிரப் பெருக்கினால் ஸ்திரீ பெலஹீனமடைந்து முகம் வெளிறி, ஆயாசமடைவாளாயின், சைனு (China) என்கிற மருந்தில் பன்னிரண்டு மாத்திரை அரைக்ளாஸ் சுத்த ஜலத்தில் போட்டு வைத்துக்கொண்டு இரண்டுமணிநேரத்திற் கொருதடவை ஒருமேஜைக்கரண்டியளவு சாப்பிடவேண்டும். வெளியேறின திரவகம் சுத்த சுவப்பு நிறமாயிருந்து ஸ்திரீக்குக் குமட்டலுண்டானால் மேற்சொன்ன மருந்துக்குப் பதிலாக இப்பெககாகியுன்கா (Ipecacuanha) என்ற மருந்தை முன்சொன்ன பிரகாரம் உபயோகிக்கலாம்.

மாதாந்தர ருது ஏராளமாயும் நெடுங்காலத்திற்கும் வந்துகொண்டிருப்பதனால் ஸ்திரீ வெளிறி, பெலஹீனமும் சோம்பலுமடைந்து, சரீரம் விம்மிக் கொழுத்துக் கால்களில் குளிர்ச்சிகாணுமாயின், ருதுகாலங்களுக் கிடையிலுள்ள நாட்களில் கால்க் கார்ப் (Calc Carb.) என்ற ஔஷதத்தில் பன்னிரண்டு மாத்திரை அரை க்ளாஸ் ஜலத்தில் போட்டு, காலை மாலை ஒருமேஜைக் கரண்டியளவு சில மாதங்களாகச் சாப்பிட்டு வரவேண்டும். உஷ்ணமுண்டாக்கும் பதார்த்தங்களைச் சாப்பிடக்கூடாது.

இது அபாயத்தை உண்டுபண்ணக்கூடிய வியாதியாதலால் அநுபோகமுள்ள டாக்டர்களுக்கு உடனே தெரிவித்தால் அவர்கள் காரணத்தை யறிந்து தகுந்த சிகிச்சை செய்வார்கள். மாதாந்தர ருது நின்று மறுபடியும் வருவதற்கிடையில் ஸ்திரீயின் மர்மஸ்தானத்தில் படிக்காரஜலத்தைப் பிச்சாங்குழலால் உபயோகிக்கவேண்டும். வேளா வேளைகளில் சாப்பிட்டு சுத்த ஆகாயத்தைச் சுவாசித்து வரவேண்டும். இச்சாபத்தியத்துடன் சமுத்திரஸ்நானஞ் செய்வது நல்லது. அதிகமாய்த் தண்ணீர் குடிக்கக்கூடாது.

ஏராளமான உதிரப் பெருக்கினால் கை, கால்கள் ஜில்லிட்டுப் போனால் நமது மகா சஞ்சீவித் தைலம், அல்லது கற்பூரத் திராவகம், அல்லது டர்பன்டயின் (Turpentine) முதலியவற்றி லொன்றை உள்ளங்கால், உள்ளங்கைகளில் தேய்த்துச் சூடுண்டாகச் செய்து, பின்பு சாம்பல், உப்பு, தவிடு, அல்லது மணல், முதலியவற்றில் எதையாவது வறுத்து ஒற்றடங் கொடுத்துவிட்டு வைத்தியருக்கு ஆளனுப்பவேண்டும்.

உதிரப்பெருக்கு நிற்கிறவரை வேளைக்கு ஒரு தேயிலைக் கரண்டி வீதம் நமது சிநேகமார்க்கு சூதகப்பெரும்பாட்டு நிவாரணி (Menorol) யை தண்ணீரில் கலந்து மூன்றுமணி நேரத்திற்கொரு தடவை சாப்பிட்டு வரவேண்டும்.

ஜாதிக்காயை வறுத்துத் தூள்செய்து அதில் இரண்டு உளுந்து எடை எடுத்து 10 உளுந்து எடை படிக்காரத்தூளும் வெள்ளைச் சர்க்கரையும் கலந்து ஒரு ஒயின் கிளாஸ் ஜலத்தில் கரைத்து ஒருமணி நேரத்திற் கொருதடவையாகக் கொடுத்து மிக்க பலன் கண்டதாக ஒரு கைதேர்ந்த வைத்தியர் சொல்லுகிறார்.

பருத்தியிலைச் சாற்றில் அரைச் சிரங்கை யளவு எடுத்து அதோடு சரிப்பங்கு நல்லெண்ணெய் கலந்து கொடுக்கலாம்; அல்லது நாவற்பட்டையை எருமைமோர்விட்டு இடித்துப்பிழிந்த சாற்றுடன் ஒரு கொட்டைப்பாக்களவு சந்தனம் போட்டுக் கலக்கி மூன்றுநாள் ஆறுநேரம் கொடுக்கலாம்; அல்லது, பருத்தியிலைச் சாறு, கையாந்தகரைச்சாறு வகைக்கு அரைச் சிரங்கையளவு எடுத்து, ஒரு வெருகடிப் பிரமாணம் வெள்ளைச் சீனியும், அரை அவுன்ஸ நல்லெண்ணெய்யும் சேர்த்துக் கலக்கி ஒருமுறை கொடுக்கலாம். இச்சாபத்தியம், உப்பு, புளி, புகையிலை நீக்கவும்.

---

## சூதக ஜன்னி. (Hysteria.)

சோம்பலான ஜீவியம், உபத்திரவம், துன்பம், சூதகபந்தம், காதற்கைகூடாமை, மிதமிஞ்சிய சந்தோஷம், துக்கம், பயம் முதலியவற்றால் பித்தப் பைத்திய இசிவு முதலியவை உண்டாவதுண்டு. ஸ்திரீகளுக்கு முக்கியமாய்க் காண்கிற இந்த ரோகமானது சூதக ஆரம்பமுதல் அது நிற்கிற காலம்வரை அவர்களை உபத்திரவிக்கும். ஆதலால் இதற்கு சூதக ஜன்னி என்றும் பெயர். இந்த வியாதியை பிசாசு, சூனியம், ஏவல், சேஷ்டை யென்று சொல்லி மந்திர தந்திர பூசை முதலியவைகளைச் செய்து ஸ்திரீகளை உபத்திரப்படுத்துவது நமது நாட்டு வழக்கம். இந்த உபத்திரவங்களால் மனதிற்கு உற்சாகம் பிறந்து வியாதி சுகமாவதுமுண்டு.

இலக்ஷணங்கள்:— இது நரம்பைப் பற்றின வியாதி. விட்டு விட்டு வரும். கைகால்களில் இசிவு, விரல்களை முடக்கிக்கொண்டு மாரிலடித்துக் கொள்ளுதல், மார்பில் உருண்டையாய் மேலுக் கேறி தொண்டையை யடைப்பதுபோல் தோன்றும். இடது பக்கமாய் அடிவயிற்றில் வேதனையும், இரைச்சலும் காணும், ஜன்னி

வரும்போது மூத்திரம் தெளிவாயிருக்கும். வலி தணியும்போது கண்ணீர் வடிதல், அழுதல், அல்லது நகைக்குதல், சிலவேளை விடாத விக்கல் காணுதல், ஒவ்வொரு வேளை பிரக்ஞையற்று மூர்ச்சித்துவிழுதல், கொட்டாவி விடுதல், நெளிப்பு, நெஞ்சுதுடித்தல் முதலியவை காணும்.

சிகிச்சை:—ஜன்னி கண்டிருக்கும்போது வஸ்திராபரணங்களைத் தளர்ச்சிசெய்து காற்றுள்ள இடத்தில் படுக்க வைக்கவேண்டியது. ஆக்கிராண உப்பை அல்லது ஆக்கிராணத்திரிப் புகையை முகரக் கொடுக்க வேண்டியது. குளிர்ந்த ஜலத்தை சிரசிலும், மார்பிலும் ஊற்றவேண்டியது.

நமது சூதக ஜன்னி நிவாரணியில் ஒரு தேயிலைக் கரண்டியளவு பதினைந்து நிமிஷத்திற் கொருதடவை சுகங்காணும்வரை கொடுத்துவரவேண்டும். ஜன்னி நின்ற பிறகு வியாதி மறுபடியும் வாராமல் தடுப்பதற்கு நமது சுகபேதி மாத்திரையைச் சாப்பிட்டு மலச்சிக்கலை நீக்கவேண்டும். நரம்புகளுக்குப் பெலனும், தேக தாருட்டியமும் விர்த்தியாகும்பொருட்டு நமது சிங்கவீரிய மாத்திரையில் மூனறுவேளையும் போஜனத்திற்குமேல் வேளைக்கு ஒரு மாத்திரை விதம் சாப்பிட்டு வரவேண்டும்.

வெந்நீர்ப் புட்டிகளை பக்கங்களுக்கும் கால்களுக்கும் வைக்கலாம்.

ஐந்துபலம் பெருங்காயத்தை ஒருபடித் தண்ணீரில் விட்டு எட்டொன்றாய்க் காய்ச்சி வடித்து நாலுபலம் வெல்லம் சேர்த்து பாகு செய்து அதில் சுக்கு, மிளகு, கடுகு, வெள்ளைப்பூண்டு இவைகளின் பொடி வகை ஒன்றுக்குப் பலம் ஒன்று தூள். 2 பலம் பசுவின் நெய் விட்டுக் கிண்டி மிளகுபதத்தில் இறக்கி வேளை ஒன்றுக்கு ஒரு களஞ்சி விதம் கொள்ள, வாய்வு, வாதரோகங்கள், சூதக ஜன்னி முதலியவைதீரும். லவங்கப்பட்டைக் கஷாயமுங் கொடுக்கலாம். அல்லது நாலு வராகனிடை சாமந்திப்பூவை காலபடி வெந்நீரிலிட்டு மூடி பதினைந்து நிமிஷம் வரையில் ஊறவைத்து வேளைக்கு 2 மேசைக்கரண்டி யளவு மூன்று வேளையும் கொடுக்கலாம்.

சூதகம் கிரமமில்லாவிட்டால் நமது சூதகபந்த நிவாரணியைக் கொடுக்க வேண்டியது. பொதுவாக மலச்சிக்கலை நீக்கித் தேக தாருட்டியத்தை உண்டாக்கக்கூடிய ஔஷதங்களைக் கொடுத்து எப்போதும் மனதை சந்தோஷமாகவும், குதூகலமாகவும் வைத்திருந்து நல்ல காற்றுள்ள இடத்தில் வாசம் பண்ணச் செய்வது

தருந்த முறையாகும். பெண்கள் ருதுவாகும் காலத்தில் அதிக மாய் கல்வி கற்பதும், கடுந்தொழில் செய்வதும், சூதக ஜன்னி யைப் பிறப்பிக்கும். வெளிப்பிராந்தியங்களில் சூரிய வெளிச்சத் தில் ஓடி, ஆடி திரிவதும், சுகமான நித்திரை, இளைப்பாறுதல், திருப்திகரமான போஜனம், முதலியவை சுகஜீவியத்தை உண் டாக்கும்.

---

## சூதக சூலை.

இதுவே சூசிகாசூலை. தூரச்சூலை, சூசிகவாய்வு, இரத்தவாத பித்தகுன்மம், முட்டுநட்டு என்று சொல்லப்படும். இதில் குத் தல், குடைச்சல், வேதனை, நோவு, வலி, சூலைக்கட்டு, வாதநோய் முதலியவை உண்டாகும்.

சூதக சூலையால் கஷ்டப்படுகிறவர்களின் தொகை அனந்தம். சிலருக்கு ருதுகாலமுதல் மாதவிடாய் முற்றிலும் நின்றுபோகிற காலம் வரையில் இந்த வருத்தம் நீங்குவதில்லை. விவாகத்தினால் சிலருக்கு சௌக்கியமுண்டாகும். வேறு சிலருக்கோ அதிக வேதனை யுண்டாகும். இந்த வேதனை எவ்விடத்திலிருந் துண்டா கிறதோ அதையறிந்து சொல்வது கஷ்டம். அவ்வித ஸ்திரீயைப் புருஷனிடத்திலிருந்து வேறுபடுத்தி வைப்பதில் நன்மையுண் டாகும்.

சூதகச் சூலையில் மூன்று பிரிவுகள் உண்டு. முதலாவது நரம் புகளைப் பற்றிய சூலை. இரண்டாவது கர்ப்பாசயத்தில் இரத்தம் அதிகமாகிப் பிறக்கிற சூலை. மூன்றாவது சூதகம் வருகிற வழி மூடிக்கொண்டு காண்கிற சூலை.

சிகிச்சை:—1. இதை சொஸ்தமாக்குவது கஷ்டம். என்றாலும் வெந்நீரில் உட்கார வைப்பதினாலும், கஞ்சாவை அல்லது கர்ப் பூரத்தை உள்ளுக்குக் கொடுப்பதினாலும் வேதனை நிற்கும்.

கஞ்சா சுத்தி:—சடைக்கஞ்சாவை விரை நரம்பு நீக்கி நீரி விட்டு கொஞ்சநேரம் ஊறவைத்துப்பிசைந்து, நீரை வடித்துவிட்டு உலர்த்திக்கொண்டு, தூள்செய்து, அதில் ஒன்று அல்லது இரண்டு உளுந்து எடை கொடுக்க வேதனை தணியும். நித்திரையுண்டா கும்.

2. கர்ப்பூரத் தூளில் ஒன்றுமுதல் நாலு உளுந்து நிறை குளிகை செய்து கொடுக்கலாம். இது அதிகப்படின் விஷமிக்கும்.

3. பின்வரும் கர்ப்பூரச் சூரணமும் செய்துகொடுக்கலாம்.

செய்முறை:—கர்ப்பூரம் ஒருபங்கு, ஜாதிக்காய், ஏலம், லவங்கம், மல்லி, சந்தனம், சோம்பு, மிளகு இவைகளின் தூள் வகை ஒன்றுக்கு அரைப்பங்கு, சர்க்கரை மூன்றுபங்கு, இவைகளைச் சேர்த்து கலந்துகொண்டு பத்துமுதல் இருபது உளுந்து எடை தேனிலாவது நெய்யிலாவது கொடுக்க குதகச்சூலை, நீர்க்கடுப்பு, எரிவு, நீரிழிவு, மேககாங்கை, நீரடைப்பு, பாண்டு, காமாலை, கண்காலெரிவு, சுரம், தாகம் முதலியவை தீரும்.

4. மீனெண்ணெய், அல்லது வேப்பம்பட்டைக் கஷாயம் கொடுத்து உடம்பைத் தேற்றவேண்டியது.

வேப்பம்பட்டைக் கஷாயம் செய்முறை :—வேப்பம்பட்டை உள்ளார் பலம் ஒன்று, ஏலப்பொடி, கொத்தமல்லித்தூள், சோம்புத்தூள், சந்தனக்கட்டைத்தூள் வகைக்கு மாகாணிப் பலம் எடுத்து அரைப்படி தண்ணீரில் போட்டுக் காய்ச்சி ஒரு கொதிவந்தவுடன் இறக்கிச் சூடாயிருக்கும்போதே வடிகட்டிக்கொண்டு கால் அல்லது அரை ஆழாக்கு வீதம் காலையிலும் மாலையிலும் கொடுக்கலாம்.

கை, கால் பிடிப்பு வேதனைகளுக்கு வென்னீர் ஒற்றடமிடலாம்.

நமது மகா சஞ்சீவித் தைலம் அல்லது ராயல்பாம் தடவலாம்.

கஞ்சா இலையை வதக்கி ஒற்றடமிலாம்.

ஊமத்தம் இலையை வதக்கிக் கட்டலாம்.

கடுகை முருங்கைவேர் ரசம்விட்டரைத்துப் பற்றுப்போடலாம்.

தும்பையிலை ரசம் பூசலாம்.

உத்தாமணி ரசம் பூசலாம்.

கர்ப்பூரத் தயிலம் தடவலாம்.

துத்தியிலையை வதக்கி ஒற்றடமிடலாம்.

மாசிப்பத்திரி யிலையை வதக்கி ஒற்றடமிடலாம்.

சுக்கையும் பெருங்காயத்தையும் உரைத்துப் பற்றுப்போடலாம்.

அபின் உரைத்துப் பற்றுப் போடலாம்.

மான்கொம்பு உரைத்துப் பற்றுப் போடலாம்.

எட்டிக்கொட்டைத் தைலம், எருக்கந் தைலம், போஸ்தக்காய் கஷாயம், ஊமத்தந் தைலம் தடவலாம்.

ஒரு மெல்லிய துணியில் எலுமிச்சம்பழத்தை முடிந்து எண்ணெய் தடவி அனலில் காட்டி ஒற்றடமிடலாம்.

மருக்கொழுந்தை வதக்கி ஒற்றடமிடலாம்.

சாமந்திப்பூவை வதக்கி ஒற்றடமிடலாம்.

கரியபோளம், காசுக்கட்டி, அபின், சுக்கு, அரிசி இவைகளைச் சேர்த்து எலுமிச்சம்பழ ரசமிட்டு அரைத்துப் பற்றுப்போடலாம்.

---

## வெண்துவாலை. (Leucorrhoea, or the Whites.)

இது ஸ்திரீகளுக்கு எந்த வயதிலும் சாதாரணமாய் உண்டாகக் கூடிய நோய். ஸ்திரீயின் மர்மஸ்தானத்திலிருந்து ஏராளமான திரவம் நீர்போலாவது, வெள்ளைபாயாவது, மஞ்சளாயாவது பச்சையாயாவது வெளியேறுவதுண்டு.

**காரணம்:**—வேலைக்கஷ்டம், போஜனக்குறைவு, கவலை, துக்கம், ஏக்கம், கழிச்சல், பெரும்பாடு, இட்டடங்கள், கருவழிவு, மிதமிஞ்சிய சம்போகம், வெள்ளை, வெட்டையுள்ள புருஷரோடு சம்போகஞ்செய்தல், அக்கிரமக் கிர்த்தியங்கள், அடிக்கடி பிள்ளை பெறுதல், நெடுங்காலம் பால்கொடுத்தல், குளிர்ச்சி முதலிய காரணங்களால பலவீனம் மேலிட்டு, நரம்புத் தளர்ச்சியுண்டாகி, உதிரத்தில் சத்துக் குறைவதே இதற்குக் காரணம். சிறு குழந்தைகள் முதலாயக் குளிர்ந்த ஜலத்தில் காலை நனைப்பதனாலும், ஜலதோஷத்தை யுண்டாக்கக்கூடிய காரணங்களினாலும், குளிர்ந்த கல் முதலிய ஸ்தானங்களில் உட்காருவதனாலும், சரியான தேகாப்பியாசம், சுத்த ஆகாயத்தைச் சுவாசித்தல், இளைப்பாறுதல் முதலியவற்றை யொழித்து, நெடுநேரம் உட்கார்ந்து வாசித்துக் கொண்டிருப்பதனாலும் இவ்வித நோய்க்கு ஆளாவதுண்டு.

**சிகிச்சை:**—பிச்சாங்குழலால் மர்மஸ்தானத்தில் உப்புக் கலந்த வெந்நீர் அடித்துச் சுத்தம் செய்யவேண்டும். அப்படிச் சுத்தஞ் செய்தவுடன் ஸ்திரீ ஒருமணிநேரம் தூங்கவேண்டும். தூங்க முடியாவிட்டால் வெந்நீர் அடிக்கக்கூடாது. குளிர்ந்த ஜலம் ஒருபோதும் உபயோகிக்கவே கூடாது.

ஸ்திரீ வெளிறிப் பருத்துக் கொழுத்துச் சோம்பலாயிருப்பதுடன், கால்கள் குளிர்ந்து, தலையைச் சுற்றிலும், கழுத்திலும் வியர்வையுங் கண்டால் கால் கார்ப் (Calc. Carb.) என்னும் ஔஷதத்திலும், ஸ்திரீக்கு வயிற்றில் குழப்பமும் ஓர்வித வலியுமிருப்

பதுடன், திடீரென்று கோபிக்கிறதனால் குளிர்ச்சியுண்டாகிறதாயிருந்தால் பல்ஸ் (Puls) என்னும் ஔஷததத்திலும் பன்னிரண்டு மாத்திரை எடுத்து அரைக்ளாஸ் தண்ணீரில் கலந்து பிரதிதினமும் நோத்துக்கு ஒரு மேஜைக்கரண்டியளவு நாலைந்து தடவை சாப்பிடவேண்டும்.

கோழிமுட்டைத் தோட்டைச் சுட்டுத் தூளாக்கி, அதில் பத்து குன்றுமணிநிறை எடுத்துப் பாலில் கலந்து, சீனிபோட்டு, காலையிலும், மாலையிலும் சாப்பிட்டுவர வெண்துவாலை வியாதி சுகமாகலாம். இரண்டு விராகனிடைப் படிக்காரத்தை ஒருபிடி கருவேலம் பட்டைக் கஷாயம் அல்லது மாதளம்பழத்தோல் கஷாயத்தில் கரைத்துக்கொண்டு தினம் இரண்டொருதடவை யோனிக்குள் பீச்சிக்கொண்டு வந்தால் ரோகம் நீங்கும்.

பத்து குன்றுமணி நிறை வாலேந்தரபோளம் கொடுத்துக்கொண்டு வரலாம். ஒரு பணவிடை அப்பிரக செந்தூரம் கொடுக்கலாம். அன்னபேதியில் ஒரு குன்றுமணிநிறை எடுத்து மாத்திரைசெய்து தினம் இரண்டு அல்லது மூன்றுதடவை கொடுத்து வந்தால் இரத்தவிர்த்தி யுண்டாகி வியாதியும் சுகமாகும். அயச் செந்தூரத்தில் 5 குன்றுமணி நிறை தேனில் கலந்து தினம் இரண்டுவேளை கொடுத்துக்கொண்டு வந்தால் இரத்தம் சுரந்து வியாதி நீங்கும். பல நண்பரின் வேண்டுகோளுக்கிணங்கி இங்கு எம்மால் தயார் செய்து வைத்திருக்கும் வெண்துவாலை நிவாரணி (Leucorrhoea Mixture) யைக் காலையிலும் மாலையிலும் சாப்பிட்டுவர சுகமுண்டாகும். அத்துடன் பிரமேக பிஸ்காரி பில்லைகளி லொன்றை ஆழாக்கு வெந்நீரில் கரைத்து, பிஸ்காரி குழாயால் அதை மர்மஸ்தானத்தினுள் செலுத்த, வெண்துவாலை முற்றிலும் நீங்கி சுகந்தரும்.

கடவுள் துணை

# மானிட மர்ம சாஸ்திரம்.

## நான்காம் புஸ்தகம்.

### மாதாவின் மாக்ஷிமை.

"முந்தித்தவங்கிடந்து முந்நூறு நாளளவும்
அந்திபகலாய்ச்சிவனை யாதரித்துத்—தொந்தி
சரியச்சுமந்து பெற்ற தாயார்."—பட்டணத்தார்.

இஃது

யாவர்க்கும்

சுகசெல்வ நன்மைகளையும் சுகிர்த பாக்கிய
பொக்கிஷத்தையும் நீடூழி பெருதவிக்க
விரும்பிய

கல்கத்தா சர்வகலா சங்கத்தின் தமிழ்ப் பரீக்ஷகரும்,
ரங்கூன் செண் ஜான்ஸ் கல்லூரிப் பிரதமாசிரியருமாயிருந்தவரும்,
கணிதசாஸ்திரம், பூமிசாஸ்திரங்களின் கிரந்த கர்த்தாவும்,
மானஸ மர்ம சாஸ்திரப் பண்டிதரும்,
சாமிவேல் வைத்தியசாலைத் தலைவருமாகிய

எஸ். சாமிவேல். பி. ஏ. அவர்கள்

இயற்றியது

சாமிவேல் பிரஸ்,
தென்காஞ்சி, இரங்கூன்.
1919.

All Rights Reserved.



## மாதாவின் மாக்ஷிமை (The Dignity of Motherhood.)

இப்புஸ்தகத்தில் புத்திக்கூர்மையும் சௌந்தரியமுமுள்ள குழந்தைகளைப் பெறும்படித் தாய் தகப்பன்மார் அநுசரிக்க வேண்டிய சில விதிகளையும் அவற்றோடு பொருந்திய சில விஷயங்களையும் எடுத்துக் கூறுவோம். ஆனால் சிலர் சௌந்தரியமும் புத்திக்கூர்மையுமுள்ள பிள்ளைகளைப் பெறுதற்கும் ஒரு விதியுண்டோ? சகலமும் தெய்வச்சித்தத்தாலல்லவோ ஆகிறது? மனுஷரால் என்ன ஆகக்கூடும்? என்பார்கள். வாஸ்தவந்தான். சகலமும் தெய்வச் சித்தத்தாலானபோதிலும், தெய்வம் நமக்குச் சுய புத்தியையும் அறிவையும் கொடுத்திருக்கிறாரே. அப்படியிருக்க, நம்முடைய அக்கிரமமான நடக்கையாலும் அறியாமையாலும் அங்கவீனமான பிள்ளைகளைப் பெற்றுவிட்டுத் தெய்வத்தின் மேல் பழிசுமத்துவது நமது மூடத்தன்மையன்றோ! வேறு சிலர் எல்லாம் விதியின் பயனே. விதியின்படியல்லவோ நமக்குப்பிள்ளைகள் பிறக்கவேண்டும். விதியொன்றிருக்க நமது மதியால் ஒன்றை செய்யக்கூடுமோ! என்பார்கள். எல்லாம் விதியிருந்தால் வந்து சேருமென்று இரவும்பகலும் பஞ்சணை மெத்தையில் படுத்துத் தூங்கினால் காரியம் கைகூடுவதெப்படி?

திருவள்ளுவ நாயனார் கூறியபடி "தெய்வத்தாலாகா தெனினும் முயற்சி தன் மெய்வருந்தக் கூலி தரும்." நம்மாலானமட்டும் கூடிய முயற்சி செய்வோமாயின் தெய்வமும் கூடி நின்று உதவி புரியும்.

சத்திய வேதாகமத்தில் யாக்கோபென்பவன் தன் மாமனாகிய லாபானின் ஆடுகளை மேய்த்துக்கொண்டிருக்கும்போது, அதற்குக் கூலியாகப் புள்ளியும் வரியுமுள்ள ஆடுகளை மட்டும் யாக்கோப் எடுத்துக்கொள்ளலாமென்று லாபான் வாக்குக் கொடுத்திருந்தான. 'யாக்கோப் பச்சையாயிருக்கிற புன்னை, வாதுமை, அர்மோன் என்னும் மரங்களின் கொப்புகளைவெட்டி இடையிடை



யே வெண்மை தோன்றும்படி பட்டையை உரித்துத் தான் உரித்த கொப்புகளை ஆடுகள் தண்ணீர் குடிக்க வரும் கால்வாய்களிலும் தொட்டிகளிலும் ஆடுகளுக்கு எதிராகப் போட்டுவைப்பான். ஆடுகள் தண்ணீர் குடிக்க வரும்போது பொலிவதுண்டு. ஆடுகள் அந்தக் கொப்புகளுக்கு முன்பாகப் பொலிந்தபடியால், அவைகள் கலப்பு நிறமுள்ளதும் புள்ளியுள்ளதும் வரியுள்ளதுமான குட்டிகளைப் போட்டன. பலத்த ஆடுகள் பொலியும்போது அந்தக் கொப்புகளுக்கு எதிரே பொலியும்படி யாக்கோப் அவைகளை அந்த ஆடுகள் கண்களுக்கு முன்பாகக் கால்வாய்களிலே போட்டுவைப்பான். பலஹீனமான ஆடுகள் பொலியும்போது அவைகளைப் போடாதிருப்பான்; இதனால் பலஹீனமுள்ளவைகள் லாபானையும், பலமுள்ளவைகள் யாக்கோபையும் சேர்ந்தன." இவ்விதமாய்த் தெய்வம் "நீ படுத்திருக்கிற பூமியை உனக்கும் உன் சந்ததிக்கும் தருவேன். உன் சந்ததி பூமியின் தூளைப்போலிருக்கும். நீ மேற்கேயும் கிழக்கேயும் வடக்கேயும் தெற்கேயும் பரம்புவாய். உனக்குள்ளும் உன் சந்ததிக்குள்ளும் பூமியின் வம்சங்களெல்லாம் ஆசீர்வதிக்கப்படும்." என்று தாமாசீர்வதித்த யாக்கோபுக்கு ஐஸ்வரியம் விர்த்தியடைவதற்காகக் காட்டிக்கொடுத்த வழியன்றோ இது? இவ்விதமான கிரியைகள் செய்தால் இவ்விதமான குழந்தைகள் பிறக்கும் என்று தெய்வந் தானே அறிகுறியினால் காட்டியிருக்க அவருடைய ஞானத்தையறிந்து நடந்து ஆசீர்வதிக்கப்பட்ட குழந்தைகளைப் பெற்று வாழ்வதற்குப் பதிலாகக் கண்ணை மூடிக்கொண்டு கபோதிபோல் வழிதப்பித் திரிந்து தெய்வத்தின்மேல் போக்குச் சொல்லலாமா? ஆதலால் எமது சிற்றறிவுக்கெட்டியபடி பெற்றோர்க்கும் பிள்ளைகளுக்கு மிருக்கும் சம்பந்தத்தையும், ஆசீர்வாதமான சந்தான உற்பத்திக்குரிய சில விதிகளையும் பிதாக்களும் மாதாக்களுமாயிருப்பவர்களுக்கும், பெற்றோராக விரும்புவோர்க்கும் எடுத்துக் காட்டினால் அவர்கள் அவ்விதிகளைக் கைக்கொண்டு சௌந்தரியமும் புத்திக் கூர்மையும், பராக்கிரமும் பொருந்திய பாலர்களைப்பெற்று வாழ்வார்களென்று நம்புகிறோம்.

---




## தாயும் பிள்ளையும்.



சிசுவினது அவயவங்கள் யாவும் தாயினது அவயவங்களுக்குள்ளேயே ஆரம்பமாகி முற்றுப் பெறுகின்றன. கருத்தரிக்குங் காலமுதல் சர்வ ஞானமும் பொருந்திய கடவுளுடையசித்தத்தால் சிசுவினது அவயவங்களுக்குவேண்டிய உபகரணங்கள் யாவும் அக்கருவைச் சுற்றிச் சேர்க்கப்பட்டு, அக்கருவினோடு ஒன்று சேர்வதனால் எலும்பு, தசை, மூளை, நரம்பு, ரத்தாசயம், நுரையீரல், வயிறு, ஈரல், கண், காது முதலிய ஒரு மனுஷ சரீரத்திற்கு வேண்டிய சகல உறுப்புகளும் உற்பத்தியாகின்றன. அதோடு புத்தி, சித்தம், அன்பு, உணர்ச்சி முதலியவைகளைப்புகட்டி அவ்வுறுப்புகளுக்கு உயிரைக் கொடுக்கும் ஆத்துமாவும் வந்து சேருகின்றது இவ்விதமாய் மனுஷ உறுப்புகளுக்கு வேண்டிய உபகரணங்களையெல்லாம் தெரிந்தெடுத்து எந்தெந்த அவயவத்திற்கு எந்தெந்த வஸ்துக்கள் தேவையாயிருக்கின்றனவோ அந்த வஸ்துக்களை ஒன்றுசேர்ப்பதனாலும், வேண்டாத வஸ்துக்களைத தள்ளிப் போடுவதனாலும் அப்படித தெரிந்தெடுக்கப்பட்ட வஸ்துக்களைக் கருவினது ஒவ்வொரு உறுப்போடும் சேர்ப்பதனாலும் சிசுவானது நாளுக்கு நாள் பெரிதாகி ஒன்பதாம் மாதத்தில் மனுஷீகத்துக்கு வேண்டிய சகல உறுப்புகளோடும் குணங்களோடும் வெளியேறுகின்றது. ஒரு சிறு முட்டையிலிருந்து ஒன்பது மாதத்துக்குள், இரண்டு காலை நிறுத்தி மேலே தூண்டு கையைப்பூட்டி, முதுகெலும்பாலிணைத்து, முகட்டின் மேலே பழுக்கழிகளையிட்டு நரம்புகளாற் கட்டி, மயிர்த்தோலால் வேய்ந்து, புலாற் சுவரெடுத்து போக்குவரவுக்கு இருவாசலும் ஏழு சாளரங்களும், சாக்கிரம் முதலிய நான்குதள அடுக்கும் அவற்றின் மேலே சிகரமும் கூந்தலாகிய நீண்ட கொடியும் அமை

ந்த சித்திர மாடமாளிகையாகிய மனுஷனுக்கும் ஆச்சரியப்படத்தக்க அற்புதக்கிரியைத் தெய்வம் தாயினுடைய வயிற்றிற்குள்ளேயே நடப்பிக்கிறார். அவருக்கே சகல கனமும் மகிமையும் சதா காலங்களிலும் உண்டாவதாக. மனுஷனுடைய புத்திக்கெட்டாத விதமாய் சகல காரியங்களையும் நடத்துகின்ற சர்வ வல்லவரின் ஞானத்தை அளவிடக்கூடியவருமுளரோ? ஸ்திரீயினிடத்திற் பிறந்த ஒவ்வொரு மனுஷனும் இப்போது இருக்கும் சகல மனுஷரும் இனிமேல் பிறக்கப்போகும் சகல ஆன்மாக்களும் ஸ்திரீயின் அவயவத்திற்குள்ளிருந்து அந்த அற்புதமானவிதமாய் உதிக்கவேண்டுமென்பது ஈசன் ஏற்படுத்திய பிரமாணம். மனுஷஜாதியின் சகல நடவடிக்கைகளையும் விதியையும் நியமிக்கும் மனுஷருடன் பிறக்கும் ஒவ்வொரு சுவாபமும் ஸ்திரீயின் அவயவத்திற்குள்ளேயே உற்பத்தியாகிறது. ஒவ்வொரு குடும்பங்களும் ராஜ்யங்களும் ஜாதிகளும் இவ்வுலகத்தில் ஆண்டு அனுபவிக்கும் சகல கைங்கிரியங்களும் அந்த அவயவத்திலிருந்து உற்பத்தியாகும்படி தெய்வம் விதித்திருக்கிறார். அண்டசராசரங்களையும் படைத்துக்காத்து ஆண்டருளும் அற்புதநாதன் தமது நியாயப் பிரமாணப் புஸ்தகத்தை அங்கேயே வைத்திருக்கிறார்.

"அன்னையர்களையு மருஞ்சகிகளையு மடுத்தவென் னுறவினர்களையும்
அன்னமோடருந்து மறுசுவைகளையு மாடுநீர் பூசுநீர்களையும்
வன்னமாந்துயிலும் வாசபூந்தவிசும் வருத்திடுமுறக்கமும் விடுத்தே
கன்னியானுவிகலங்கினேன் மன்னுகரங்கொடுத்தணைப்பரின்கடனே."

என்று கதறும் காதலியின் அவயவத்தைப் பங்கப்படுத்துவது பர்த்தாவுக்கு ஏற்குமோ? உன்னுடைய முழு இருதயத்தோடும் அன்போடும் ஆண் சேர்ந்தணைத்து ஆலிங்கனஞ் செய்யும் சரீரத்திற்குள்ளிருந்து உன்னிருதயத்திற்குச் சந்தோஷத்தையும் இன்பத்தையுங் கொடுத்து உன் வீட்டையே உனக்கு மோக்ஷமாகச் செய்யும் உன் இனிய புத்திரரின் சுகமும், மகிமையும், கனமும் உதயமாக வேண்டுமென்பது தெய்வத் திருச் சித்தம். மனுஷன் உறுதியோடும், உருக்கத்தோடும், உண்மையோடும் தனது தாயினிடத்தில் அன்பு கூர்வது ஆச்சரியமோ? தன் முழு சரீரத்தையும், புத்தியையும், யோசனையையும், அன்பையும் உற்பத்தி செய்த தனது அருமை மாதாவை ஆசையுடன் ஆசரிப்பது அரிய காரியமோ? மனுஷன் தெய்வக் கட்டளைகளையும் ராஜகட்டளைகளையும் மீறி நடக்கலாம். ஆனால் தாயின் மேல் தனக்கிருக்கும் பாசத்தை முற்றிலும் நீக்குவது மிகவும் அரிது.

ஸ்திரீயினவயவமாகிய உலகத்தில் சகல குணங்களும் தன்மைகளும் பொருந்திய ஓர் உயிருள்ள மனுஷனை உண்டாக்கக்

கூடிய சகல உபகரணங்களும் இருக்கின்றன. அவ்வுபகரணங்களை ஒன்றாகச் சேர்த்துப் பக்குவப்படுத்தி ஒவ்வொரு அவயவத்திற்கும் வேண்டிய வஸ்துக்களைச் சேர்த்து, நீக்க வேண்டியவைகளை நீக்கி உறுப்புகளாக்கி அவற்றிற்கு உயிர் கொடுப்பதனால் மனுஷரும் ஸ்திரீகளும் உண்டாகின்றனர். மிகவும் கஷ்டமும், அருமையும், மனுஷனுடைய புத்திக் கெட்டாததும், மாட்சிமை தங்கியதும் சகலஜாதியார் ராஜ்ஜியங்களினது அதிர்ஷ்டத்தையும் நியமிப்பதுமான இந்த அரிய தொழில் தாயினுடைய அவயவத்திற்குள்ளேயே ஆரம்பமாகி முடிவதுமல்லாமல் உருவமாக்கத்தக்கதும் உயிர்கொடுக்கத்தக்கதுமான தாயின் அவயவத்திலிருக்கும் ஓர்வித சத்துவின் வல்லமையால சகலதொழில்களும் நடத்தப்படுகின்றன. ஒவ்வொரு உறுப்புக்கும் வேண்டிய உபகரணங்களைச் சேர்த்து வேண்டாதவைகளை நீக்கி ஒன்றை வேறொன்றாக மாற்றிப் பக்குவப்படுத்தி மனுஷரூபத்தைத உண்டுபண்ணும் இந்த சத்துவினது தன்மை இன்னது என்று அறிவது மனுஷ ஞானத்துக்கு எட்டியதல்ல. மனுஷர் இப்பூமியின் பல இடங்களிலும் கண்டுபிடிக்கக்கூடிய வஸ்துக்களைச் சேகரித்து அரண்மனைகள், மாளிகைகள், கப்பல்கள், பட்டணங்கள், யந்திரங்கள், ரஸ்தாக்கள், பாலங்கள் முதலியவைகளை உண்டுபண்ணக்கூடும். ஆனால் இவ்வுலகத்தின் பொருட்களைச் சேர்த்து ஸ்திரீ புருஷர் உருவஞ்செய்து அவற்றிற்கு ஆவியைக் கொடுப்பது மனுஷனது வல்லமைக்கு எட்டியதல்ல. இவ்வரிய தொழிலை நடப்பிப்பதற்கு ஸ்திரீயின அவயவமே தகுந்த ஸ்தானம் என்று தெய்வம் அதைத் தெரிந்தெடுத்திருக்கிறார். ஆதலால் மனுஷர் அதை அலக்ஷியம் பண்ணாமல் பேணிக் காப்பது மிக அவசியம். "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்." இதில் இவ்வுலகத்தில் நமது கண்ணுக் கெட்டிய தெய்வங்களில் அன்னையே விசேஷித்த தெய்வம் என்றும் அதற்குப் பின்புதான் பிதாவை வணங்க வேண்டியதென்றும் ஔவை சுட்டிக்காட்டியிருக்கிறாள்.



விக்டோரியா மஹாராணிக்கிருந்த சக்ரவர்த்தினிப் பட்டத்தைவிடத் தாய்ப்பட்டமே விசேஷித்தது. ஏனெனில் அந்த அம்மாள் சக்ரவர்த்தினியாகச் செய்த தொழில்கள் மிகவும சொற்ப காலத்திற்கு நிலைக்கக்கூடியவைகளும் மற்ற ராஜாக்களுங்கூடச் செய்யக்கூடியவைகளுமன்றோ? ஆனால் தாயாராக அந்த அம்மாள் செய்திருக்கும் கிரியைகளோ மிகவும் அரியவைகள். இவ்வுலகத்திலுள்ள வஸ்துக்களைச் சேர்த்து அவற்றைத் தேவனாதரிலும் சற்றுத் தாழ்ந்த உயிர்ப்பிராணிகளாய்ச் சிருஷ்

டித்து மகிமையினாலும், கனத்தினாலும் அவைகளுக்கு முடிசூட்டித் தெய்வத்தின் சாயலை அவற்றின்மேல அழுத்தி இவ்விதமாய்த் தமது புத்திரனைப் பெற்றிருக்கிறார்கள். கருத்தரித்தபின் தகப்பனுக்கும் சிசுவுக்கும் நேரான சம்பந்தம் ஒன்றுமில்லை. வித்தானது தாயினிடம் சென்று அவயவ உற்பத்திக்கு அவசியமாகிய உபகரணங்கள் சேருமிடத்தில் தங்குமட்டும் சிசு உற்பத்தியாகாது. ஒவ்வொரு உறுப்புக்குமுரிய விசேஷித்த தன்மைகளும் மனச்சாய்வுகளும் தாயைப்போலவே இருக்க வேண்டுமென்பது இதனால் தெளிவாய் விளங்கும்.

## சிசுவின் அம்சங்கள்

• சிசுவினது அவயவத்திற்கு வேண்டிய சகல வஸ்துக்களும் தாயினிடத்திலேயே இருக்கின்றன வென்றும் அவ்வஸ்துக்களைச் சிசுவின் உறுப்புகளோடு சேர்த்து அவற்றை வளரச் செய்யும் சத்தும் தாயினிடத்திலேயே யிருக்கிறதென்றும் நிரூபிப்பதற்காக சிசுவினது அம்சங்களெல்லாம் தாயின் அவயவத்திலுள் ஆரம்பமாகி அங்கேயே முற்றுப்பெறுகிறதென்று எடுத்துக் கூறினோம். முற்கூறிய சங்கதிகளை நிரூபிப்பதற்காக வேறொரு விஷயமும் எடுத்துக் காண்பிப்போம். அதாவது (சிசுவினது உறுப்புகளுக்கெலலாம் வேண்டிய உபகரணங்கள் தாயினுடைய உதிரத்தின மூலமாகவே வருகின்றன.)

குழந்தை பிறக்குமுன் அதன் அவயவத்திற்கு வேண்டிய உபகரணங்கள் எங்கிருந்து வந்தன? பிண்டம் நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டு வருவதற்குக் காரணமென்ன? எனனும கேள்களுக்கு ஒரே விடைமட்டும் கொடுக்கக்கூடும். அதாவது சிசுவுககு வேண்டிய உபகரணங்களைச் கொண்டு வருவதும் பிண்டம் பெரிதாவதற்குக் காரணமும் தாயின் உதிரமே. தாயின் உதிரத்தில் எநதெந்த வஸ்துககளெல்லாம் சேர்ந்திருக்கின்றன என்னும கேள்விக்கு விடை கொடுப்பது இங்கு அவசியமில்லை. சிசுவினது உற்பத்திக காலமுதல் அதன் உறுப்புக்களெல்லாம் உண்டாகித் தாயைவிட்டு நீங்கியிருக்கும் காலம் வருமவரையில் அச்சிசுவுக்கு வேண்டிய சகலவஸ்துககளையும் கொண்டுவந்து சேர்ப்பது தாயின் உதிரமே யன்றி வேறொன்றுமல்ல என்னும் விஷயமே நாம முக்கியமாய்க் கவனிக்கவேண்டியது. வைத்திய சாஸ்திரிகள் ஸ்திரீயின் உதிரத்தைப் பரீக்ஷித்துப் பார்த்து அதில் மனுஷ அவயவத்திற்கு வேண்டிய ஒவ்வொரு வஸ்துவுமிருப்பதாகக் கண்டு பிடித்திருக்கிறார்கள். ஓர் மனுஷ அவயவத்திற்கு வேண்டிய எலும்புகள், மூளை, இருதயம், நுரையீரல், கண், காது, தசைகள் முத

லிய சகல உறுப்புகளும் தோற்றத்திலும், வடிவத்திலும், உபயோகத்திலும் ஒன்றுக்கொன்று எவ்வளவு வித்தியாசமுள்ளவைகளாயிருந்தும் அவைகளுக்கு வேண்டிய சகல உபகரணங்களும் ஸ்திரீயின் இரத்தத்திலேயே இருக்கின்றன. ஆனால் அந்த சிசுவுக்கு யோசனை, புத்தி, சித்தம் முதலிய அறிவுகளையும், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் முதலிய ஐம்பொறி உணர்ச்சிகளையும் உண்டாக்கிச் சரீரத்தின் ஒவ்வொரு அவயவத்திற்கும் உயிரைக்கொடுத்து அங்குமிங்கும் அசையும்படிச் செய்யும் ஆத்மா எங்கிருந்து வருகிறது என்னும் கேள்விக்கு விடை கிடைப்பது மிகவும் அரிதேனும் அது ஏதாவது ஓர் ஸ்தானத்திலிருந்து வந்திருக்கவேண்டுமென்பது மிகவும் நிச்சயம். ஏனெனில் வித்தில்லாத சம்பிரதாயம் மேலுமில்லை, கீழுமில்லை. ஆதலால் ஆத்துமாவுக்கு உற்பத்தி ஸ்தானம் எது?

கருத்தரிக்கும் விதத்தைப்பற்றி நாம் சொன்னபொழுது புருஷனது சுக்கிலத்தில் கிருமிகள்போன்ற சிறு ஜெந்துக்கள் இருக்கின்றனவென்றும், அவைகள் தாயின் சுரோணிதத்திலுள்ள முட்டையினுடன் சேர்வதால் அம்முட்டைக்கு உயிர் உண்டாகிக் கருத்தரித்து நாளுக்கு நாள் விர்த்தியடைகிறதென்றும் கூறினோம். இம்முட்டையினது உயிரே ஆத்துமாவாய் விர்த்தியாகிறதாக நாம் நினைக்க இடமுண்டு. ஏனெனில் சிசுவினது சரீரம் வளர வளர அதன் புத்தியும் பலன்களும் தெளிவாகிக்கொண்டே வருகின்றன. ஸ்திரீயின் உதிரத்தின் மூலமாய்க் கருவினிடம் வந்துசேரும் ஒவ்வொரு உபகரணமும் சரீரத்தை எப்படி வளரச் செய்கிறதோ, அதேவிதமாய் ஆத்துமாவையும் நாளுக்கு நாள் வளரச்செய்யும். ஆத்துமாவுக்குரிய உபகரணங்களும் தாயின் இரத்தத்தின் மூலமாகவே வந்து சேருகின்றனவென்று நினைப்பதற்கு இடமுண்டு. எப்படியிருந்தாலும் கருத்தரித்த காலம் முதல் குழந்தை பிறக்கும் வரையில் தாயின் உதிரத்தின் மூலமாய் வரும் உபகரணங்களால் சிசுவினது சரீரமும் ஆத்துமாவும் போஷிக்கப்பட்டு நாளுக்கு நாள் விர்த்தியடைகின்றனவென்பது வாஸ்தவம். ஆத்துமாவில்லாத சரீரம் கல் அல்லது மரக்கட்டைபோல எப்படி விர்த்தியடையாதிருக்கின்றதோ அதேவிதமாய்ச் சரீரமில்லாத ஆத்துமாவும் விர்த்தியடையமாட்டாது. உயிர் கொடுக்கப்பட்ட ஓர் நுண்ணிய முட்டைமட்டும் தாயின் கர்ப்பத்தில் முதல் முதல் வந்து சேருகின்றது. அதற்கு அவயவங்கள் ஒன்றும் அமைக்கப்பட்டிராது. ஆனால் அதனிடத்தும் தாயினிடத்துமிருக்கும் சத்துவின் கிரியையால் ஒரு முழு மனுஷனாகக் கூடிய வல்லமை மட்டும் அதற்கு இருக்கிறது. ஒன்பது மாதத்திற்குள் அவ்வித்தானது சரீரமும் ஆத்துமாவும் பொருந்திய ஓர்

குழந்தையாகிறது. கண்ணும் காதும் சரியானபடி அமைந்தவுடன் ஆத்துமாவின் உணர்ச்சியும் விர்த்தியாகிப் பார்க்கவும் கேட்கவும் தொடங்குகிறது.

அப்படியே மூளையும் நரம்பும் உண்டானவுடன் ஆத்துமா யோசிக்கவும் நினைக்கவும் தொடங்குகிறது. இவ்விதமாய்ச் சரீரத்துடன் ஆத்மா வளர்வதுமல்லாமல் சரீரம் எந்த ஸ்திதியிலிருக்கிறதோ அதற்குத் தக்கதாகவே ஆத்துமாவின் கிரியைகளுமிருக்கும். சரீரத்தைப் போலவே ஆத்துமாவின் ஒவ்வொருபாகமும் தாயின் உதரத்தை விட்டு வெளியேறுமுன் முற்றுப்பெற வேண்டும். ஓர் குழந்தை கண், காது, கை, கால், நா முதலிய உறுப்புக்களில்லாமல் பிறந்தால் அது உலகத்திலிருக்குமளவும் அவ்வுறுப்புக்களை உண்டாக்குவதரிது. பிறவிக்குருடனுக்குப் பார்வை யளிப்பது அற்புதமாகும். அவ்விதமாகவே ஆத்துமாவினது எந்த உறுப்பாவது சத்து அல்லது வல்லமை குன்றியதாய்ப் பிறக்குமாயின், அது உலகத்தை விட்டுப் பிரியுமளவும் அக்குறைவை நிவிர்த்தி செய்வதரிது. எத்தனையோ குழந்தைகள் பிறக்கும்போதே அங்கஹீனமும் அவலக்ஷணமும், நோயுள்ளவைகளுமாய்ப் பிறக்கின்றன. அவற்றின் குறைகளை நீக்க யாரால் கூடும்? இப்பழியை யார்மேல் சுமத்தலாம்? இதற்குக் காரணம் யார்? பெற்றோரே-விசேஷமாய்த் தாயே அதற்குக் காரணம். தகப்பனும் தாய்க்கு ஒத்தாசையாயிருந்து அவள் மூலமாய்த் தன் குழந்தைக்கு இக்குறைவுகளை உண்டுபண்ணுகிறான். தாயும் தகப்பனுமாய் இருக்க விரும்புவோரே! அறிந்தும் அறியாமலும் நீங்கள் செய்யும் அக்கிரமத்துக்கும் அடங்காத உங்கள் காமவிகாரத்துக்கும் சாக்ஷியாக நோயினாலும் அவயவக் குறைவினாலும் அவஸ்தைப்படும் உங்கள் பிள்ளைகள் நாள்தோறும் உங்கள் முன் நிற்கவேண்டுமோ? "பெற்றோரின் பாவத்தைப் பிள்ளைகளிடத்தில் தெய்வம் மூன்றும் நான்காம் தலைமுறைமட்டும் விசாரிப்பார்." என்னும் சத்திய கட்டளை பொய்யாகுமோ? ஊற்றுக்கண் சுத்தமா யிருந்தாலல்லவோ அதிலிருந்து சுரந்து பாயும் நீர்த்தாரையும் சுத்தமா யிருக்கும். மனுஷரின் உற்பத்திக்குக் காரணஸ்தானமாகிய ஸ்திரீயினது அவயவம் சுத்தமும் சுகமுள்ளதுமா யிருந்தாலல்லவோ அதிலிருந்துண்டாகும் குழந்தைகளும் சௌக்கியத்தையும் சந்தோஷத்தையும் அடைவார்கள்.

கடைசியாக நாமறியவேண்டிய தென்னவெனில்:—மனுஷரின் ஆத்துமாவும் சரீரமும் விர்த்தியடைவதற்கு வேண்டிய உபகரணங்கள் தாயின் அவயவத்திலேயே இருக்கவேண்டுமென்பதும் அவ்வுபகரணங்களை ஒன்றாகச் சேர்த்துச் சகல உறுப்புக்களுமுள்ள

ஆத்துமாவும் சரீரமும் பொருந்திய ஒரு மனுஷனுக்குக்கூடிய சத்து கருவுக்கு உண்டு என்பதுமே. இவ்விதமாய் நமக்கு இருக்கும் விருப்பங்களும் எண்ணங்களும் கிரியைகளும் நமது தாயின் அவயவத்தின் மூலமாய் நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. தாயினது அவயவம் எந்த ஸ்திதியிலிருக்கின்றதோ அந்த நிலைமையுள்ளவர்களாகவே நாமும் சிருஷ்டிக்கப்படுகிறோம். ஆதலால் நாம் இவ்வுலகத்தில் இருக்கும்பொழுது அனுபவிக்க வேண்டிய விதிப்பயனைப் பிரமாவுக்குப் பதிலாகத் தாயே நமது தலைஓட்டில் எழுதியிருக்கின்றாள் என்று சொல்லலாம்.

ஸ்திரீயின் உதிரத்தில் என்ன வஸ்துக்களெல்லாமிருக்கின்றன? எந்த வஸ்துக்களைச் சாப்பிடுவதனால் அவளுடைய ரத்தம் சுத்தமுள்ளதாகும்?

நமது சரீரத்துக்கு என்னென்ன வஸ்துக்கள் தேவையாயிருக்கின்றனவோ அவற்றை நாம் அறியும்படி தெய்வம் நமக்குப் பசி, தாகம், விருப்பம் முதலிய உணர்ச்சிகளைக் கொடுத்திருக்கிறார். நமக்குத் தாகமெடுத்தால் நமது சரீரத்திற்கு ஜலம் தேவையாயிருக்கிறதென்றறிந்து நீரைப் பானஞ்செய்வதனால் தாகம் நின்றுவிடுகிறது. அப்படியே பசி எடுக்கும்பொழுது ஆகாரத்தை உட்கொண்டு சரீரத்திற்குத் திருப்தியை உண்டு பண்ணுகிறோம். குழந்தைகள் சர்க்கரையை அதிக அவாவுடன் சாப்பிடுகின்றன. ஏனெனில் அவற்றின் சரீரத்திற்குச் சர்க்கரை அதிகமாய்த் தேவையாயிருப்பதனாலேயே. கசப்புள்ள மருந்துகளைச் சாப்பிட்டு வியாதிகள் சொஸ்தமாகின்றதற்குக் காரணம் சரீரத்தில் சர்க்கரை முதலிய கசப்புக்கு நேர்விரோதமான வஸ்துக்களிருப்பதால் உண்டான வியாதிகளை நீக்கும்படி கசப்பை உண்டு சரீரத்தில் மிகமிஞ்சியிருக்கும் சர்க்கரையின் தன்மையைக் குறைப்பதேயாம். அவ்விதமாகவே ஸ்திரீக்கு என்னென்ன வஸ்துக்களில் விருப்பமும் தாகமும் உண்டாகிறதோ அந்த வஸ்துக்கள் அதிகமாய் அவள் சரீரத்திற்கு வேண்டியவைகளாயிருக்கும். ஆனாலும் ஒரு வஸ்துவின்மேல் அதிகப் பிரீதியாயிருக்கிறதென்று மிதமிஞ்சிப் புசிப்பானாயின் அது அஜீரணத்தை உண்டுபண்ணிச் சரீரத்திற்கு உபயோகப்படமாட்டாது. மேலும் அடுப்புக்கரி, சாம்பல் முதலிய வஸ்துக்களைக் கர்ப்பிணிகள் சாப்பிடுவது வழக்கமென்று சில ஸ்திரீகள் யோசிப்பதனால் அவற்றின்மேல் அந்த ஸ்திரீகட்குக் கள்ளத்தீனம் உண்டாகி அவற்றைச் சாப்பிடுவது வழக்கம். சில ஸ்திரீகள் அடுப்புக்கரியை மிதமாய்ச் சாப்பிடுவதனால் ஓர் விதமாய்த் தங்கள் சரீரத்திற்கு வேண்டிய வஸ்துவை எடுத்துக்கொண்ட

போதிலும், அவ்வித இழிவான வஸ்துக்களினாலும், மிதமிஞ்சிச் சாப்பிடுவதனா லுண்டாகும் அஜீரணத்தினாலும் கெடுக்கப்பட்ட ரக்தமானது சிசுவிடம் செல்லுவதனால்தான் அச்சிசுவுக்கு அங்கஹீனமும் நோய்களு முண்டாகின்றன. அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சாகும். உயர்தர வஸ்துக்களை மிதமாய்ப் புசிப்பதனால் அவை ஜீரணமாகி சரீரத்தோடு சேர்ந்து புஷ்டியைக் கொடுப்பது மல்லாமல் உதிரத்தையும் சுத்தப்படுத்திச் சிறந்த குணமுள்ளதாக்கும். அற்ப கவனயீனத்தினால் சிசுக்களுக்குண்டாகும் நோய்களைப் பிறந்தபின் நீக்குவது மிகக் கஷ்டம். ஆதலால் தன் அந்தஸ்திற்கும் ஸ்திதிக்குந் தக்கதாகச் சரீர சௌக்கியத்தையும் ரத்த சுத்தியையும் உண்டுபண்ணத்தக்க வஸ்துக்களை மிதமாய்ப் புசிக்கவேண்டும். நீர்த்தாரைகள் சுத்தமாயிருக்கவேண்டுமானால் அவற்றிற்கு ஆதாரமாகிய ஊற்றுக்கண்ணிலிருக்கும் துர்க்கந்தத்தை உண்டுபண்ணும் அசுத்த வஸ்துக்களையும் அழுக்குகளையும் நீக்கி அதை எப்பொழுதும் சுத்தமாய் வைத்திருக்கவேண்டும். மனுஷனது உயிருக்கும் நடத்தைக்கும் அவனுயிருள்ள காலமெல்லாம் அனுபவிக்கும் இன்பதுன்பங்களுக்கும் ஆதாரமாகிய உதிரம் சுரக்கும் ஊற்றுக்கண் என்னப்படும் எத்தனையோ ஸ்திரீகளின் அவயவம் அசுத்தமும் துர்க்கந்தத்திற்கு வாஸஸ்தானமுமா யிருக்கின்றன. பல நோய்களுக்கும் உபத்திரவங்களுக்கும் உற்பத்தி ஸ்தானங்களாகும் அநேக ஸ்திரீகளின் அவயவங்களையும் அவைகளி லுற்பத்தியாகிப் பிறக்கும் குழந்தைகள் அனுபவிக்க வேண்டிய துன்பங்களையும் நாம் நினைக்கும்போது நம்முடைய இருதயம் திகில் பிடிக்கவில்லையோ? ஸ்திரீகளே! உங்கள் சரீர சௌக்கியத்திற்கு வேண்டிய வழிகளைக் கண்டுபிடித்து அவற்றின்படி செய்யுங்கள். அப்பொழுது உங்கள் சரீரமும் ரத்தமும் சுத்தமாகும். உங்களுக்குப் பிறக்கும் சந்தானமும் ஆசீர்வாதமுள்ளதா யிருக்கும். "நீங்கள் ஏன் உலகத்தின் சாபமாயிருக்கவேண்டும்" உங்கள் சந்ததி ஏன் நோய்களால் அழுந்தவேண்டும்? ஸ்திரீயே! நீ நோயாளியா யிருந்தால் பிள்ளைபெற விரும்பாதே. ஏனெனில் அவ்விதப் பிள்ளையால் உனக்கு உண்டாகும் உபத்திரவம் உன் நோயின் உபத்திரவத்தைவிட எண்மடங்கு அதிகமாகும். அதோடுமட்டுமா? அப்பிள்ளைக்குப் பிறக்கும் பிள்ளைகளும் அவ்வித நோய்களால் அழுந்தவேண்டுமே. நீ பலவீனமாயிருந்தால் பிள்ளைப்பேற்றை விரும்பாமல் தேக அப்பியாசங்களினாலும், சுத்த உணவுகளினாலும் உனக்குப் பலமுண்டாக்கப் பார். ஏனெனில் உன் பலவீனத்தில் பிறக்கும் பிள்ளைகள் பலவீனர்களா யிருப்பதுவுமன்றி உன் சரீரத்திற்கும் அதிகச் சோர்வை உண்டு பண்ணுவார்கள், அதற்குக் காரணம் யார்? நீயோ உன் பிள்ளையோ? உன் பிள்ளையல்ல, நீயே அதற்கு உத்

தராவாதம். தெய்வம் உனக்குச் சுயபுத்தியையும் சித்தத்தையுங் கொடுத்திருக்கிறார். ஆதலால் உன்னிடத்திலேயே கணக்குக் கேட்பார். சுகமுள்ள பிள்ளை பெறுவதற்கு உனக்குச் சரியான காலம் எது என்று கண்டுபிடிப்பது உன் கடமையே. கானல்ல என்புருஷனே அதற்குக் காரணம். என் புருஷன் சித்தத்திற்கு இணங்குவது என் கடமையன்றோ? என்பாயோ? உன் புருஷனுக்குக் கீழ்ப்படிவது உன் கடமையென்று எண்ணி அவன் உன்னைக் கிணற்றில் விழு என்று சொன்னால் அதற்குள் பாய்ந்துவிடுவாயோ? இருவர்க்கும் சுகத்தையும் சௌக்கியத்தையும் உண்டுபண்ணுகிற விஷயங்களில் அவன் சொற்படி கேட்டு நடப்பது உன் கடமை. ஆனால் உனக்கும் உனக்குப் பின்வரும் சந்ததிக்கும் ஓயாத உபத்திரவத்தைக் கொடுக்கும் காரியங்களை அவன் செய்யச் சொன்னால் அவைகளுக்கு இணங்குவது உன் கடமையன்று. "அடாது செய்வார் படாது படுவாரே."

> "தேகத்தயங்கி விழிசொருகிச் சிந்தைகலங்கிச் சுக்கவொண்ணுச்
> சோகந்தொடங்கி மிகபதைபைந் தொடியாமென்னைத் தழுவுருத்தி
> மோகந்தீர்த்துத் துயர்தீர்த்து முனியாதின்ப நுகர்ச்சியெனுந்
> தாகந்தீர்த்து தவிக்கவிடல் தகுமோஉமக்கு கோமானே."[18]

என்றுசொல்-நீ பிள்ளைபெறச் சக்தியற்றவளாயிருக்கும்போது மிருகத்தைப்போல மாம்ச இச்சைகளை நிறைவேற்ற இடங்கொடுப்பது நீசத்வமாகுமே. புத்தியற்ற அநேக மிருகங்கள் முதலாய கருத்தரிக்குங் காலம் வருமளவும் மாம்ச இச்சைகளை மட்டும் நிறைவேற்ற விருப்பங்கொள்ளுகிறதில்லையே. ஆனலல, பெண் மிருகமே அவ்வித இச்சைக்கு இடங் கொடுக்கிறதில்லை. புத்தியற்ற மிருகத்திலும் நீ தாழ்வோ? ஐயோ நீ மனுஷியாய்ப் பிறந்து உலகத்திற்குச் சாபத்தை உண்டுபண்ணுவதைவிட மிருகமாயப் பிறந்திருந்தால் அல்லது பிறவாதிருந்தால் உனக்கு நலமாயிருக்கும். "கர்த்தருக்குப் பயப்படுதல் ஜீவ ஊற்று. அதனால் மரணக் கண்ணிகளுக்குத் தப்பலாம்." நீதி: 14: 27.

---

## தாயின் தன்மைகள் பிண்டத்திற் கூறுவுதல்.

தனது உதரத்தில உற்பத்தியாகும சிசுவின்மேல் தாய்க்கிருக்கும வல்லமையைக் காட்டும்பொருட்டு முந்தின அதிகாரங்களில் சிசுவினது அம்சங்களெல்லாம் தாயின் அவயவத்திலேயே ஆரம்பித்துப் பூரணமாகின்றனவென்றும், அச்சிசுவினது அம்சங்களுக்கு வேண்டிய உபகாரணங்கள் தாயின் உதிரத்திலிருந்தே வரவேண்டுமென்றும் காண்பித்தோம். இவ்விடத்தில் தாயினது உதிரத்தின் மூலமாய்ச் சிசுவிடம் வந்துசேரும உபகாரணங்களில் அத்தாயினது தன்மை பதிந்திருக்க வேண்டுமென்பதை நிரூபிப்போம்.

தாயின் தன்மைகள் சரீரத்தினது தன்மை, ஆத்துமாவினது தன்மை என இருவகைப்படும். சரீரத்தின் தன்மை தாய்க்கிருக்கும் பலம், சௌக்கியம், சவுந்தரியம் முதலியவைகளால் தோன்றும். ஆவியின் தன்மையோ அவளுக்கிருக்கும் நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு முதலிய அவளுடைய குணம், நடத்தை, விருப்பம், பாசம், அன்பு என்பவைகளால் தெரியவரும்.

தாயினது உதிரம் இருக்கும் ஸ்திதிக்குத் தக்கதாக அவளது சரீரத்தின் தன்மையும் இருக்கவேண்டும் என்பது யாவர்க்கும் தெற்றென விளங்கும். ஏனெனில் தாய் சாப்பிடும் அன்னமானது ரசமும் சக்கையுமாகப் பிரிந்து சக்கை, மலம், மூத்திரம், வியர்வையாக வெளியே வந்துவிடுகின்றது. ரசமோ உதிரமாக மாறி ரத்தக்குழாய்களின் மூலமாய் ஒவ்வொரு உறுப்புகளுக்கும் சென்று அவற்றிற்கு வேண்டிய வஸ்துக்களைச் சவதரிக்கின்றது. ஆதலால் ரத்தமானது எந்த ஸ்திதியிலிருக்கிறதோ அதற்குத் தக்கதாக தாயினது மூளை, இருதயம், நுரையீரல், வயிறு, ஈரல், கண், காது, தோல், நரம்புகள் முதலியவற்றின் தன்மைகளுமிருக்கும். தாயினது அவயவத்திற்கு வேண்டிய வஸ்துக்களைச் சவதரிக்கும் தாயின் ரத்தமே சிசுவினது அவயவத்தையும் போஷிக்கின்றது. ஆதலால் தாயினது உதிரத்தில் பதுங்கியிருக்கும் அசுத்தமும் வியாதிகளும் தாயினது அம்சங்களுக்கு மட்டுமல்ல, சிசுவினது அம்சங்களுக்கும் செல்லுகின்றன. ஆகவே சிசுவினது அம்சங்களுக்குச் செல்லும் உபகரணங்கள் குறைவுள்ளவைகளாயும் நோய்பட்டவைகளாயு மிருக்கின் அச்சிசுவின அம்சங்களுக்குள் சென்ற பின்பும் குறைவுள்ளவைகளா யிருந்து அதற்கு நோயையும் உபத்திரவத்தையும் உண்டுபண்ணும்.

தாயினது உதிரமிருக்கும் ஸ்திதிக்குத் தக்கதாக அவளுக்குப் பிறக்கும் குழந்தைகளின சரீரத்தினது ஸ்திதியும் இருக்கும் என்பதற்கு நாம் அநேக அத்தாட்சிகளை கண்டிருக்கின்றோம். எப்படியெனில்:—அதிகமாய் மாமிசத்தைத் தின்று தங்கள் சரீரங்களை வளர்க்கும் சில ஜாதி ஸ்திரீகளுக்குக் குழந்தைகள் பிறந்த பின் பாலில்லாமற் போனால் புற்பூண்டுகளைப் புசிக்கும் பசு, ஆடு முதலியவற்றின் பாலை எவ்வளவு பக்குவப்படுத்திக் கொடுத்தாலும், அவைகள் சரியானபடி ஜீரணித்துக் குழந்தைகளின் சரீரத்தில் சேராததால் அக்குழந்தைகள் நாளுக்குநாள் மெலிந்துபோவதை நாம் பார்க்கிறோம். அப்படியே கந்தமூல வஸ்துக்களைப் புசிக்கும் பிராமண ஸ்திரீகளின் குழந்தைகளுக்கு மாமிசம் புசிப்பவரின பாலினால் அதிக பிரயோஜனம் உண்டாகிறதில்லை. அக்குழந்தைகளுக்குப் பசுவின் பாலைப் பக்குவப்படுத்திக் கொடுப்பது அநேக விஷயங்களில் சிறந்ததாகும்.

குழந்தை பிறந்த பன்னிரண்டு முதல் பதினெட்டு மணிக்குள் தன் தாயின் பாலையே சாப்பிடவேண்டுமென்னும் ஏற்பாடு மிகச் சிறந்ததும் சாஸ்திர விதிகளுக்கு ஒத்ததுமாயிருக்கிறது. ஏனெனில்—தன் உதரத்திலிருந்து சிசுவை வளர்த்த தாயின் உதிரமே அது பிறந்தவுடன் பாலாக மாறி அக்குழந்தையை வளர்க்கும் சக்தியுள்ளதாயிருக்கின்றது. மேலும் கந்தமூல வஸ்துக்களைப் புசிப்பவர்களின் குழந்தைகட்கு மாமிசத்தை வாயில் வைத்தவுடன் அருவருப்புத் தோன்றி வாந்தி பண்ணுவதை நாம் பலதடவைகளில் காண்கிறோம். தாயினுடைய ரத்தத்தில் என்னென்ன வஸ்துக்கள் சேர்ந்திருக்கின்றன என்பதை அறிந்துகொண்டால், அத்தாயினது உதரத்திலிருந்து பிறந்த குழந்தையை வளர்க்கும் வஸ்துக்களை எளிதில் கண்டுகொள்ளலாம்.

தலைவலி, வயிற்றுநோய், கண்டமாலை, பிளவை, குஷ்டரோகம் முதலிய வியாதிகள் உண்டாவதற்குக் காரணம் இன்னதென்று திட்டமாய்ச் சொல்லக்கூடாதாயினும் அவைகள் உண்டாகும் சரீரத்தில் ஏதோ ஒரு குறைவிருக்கவேண்டுமென்பது உண்மை. சற்றே வலி தோன்றினால் சரீரத்தில் ஒருபாகத்தில் ஏதாவது குறைவு உண்டாயிருக்கவேண்டும். மற்ற சாதாரண வியாதிகளும் மரணமும் சரீரத்தின் குறைவினால் மட்டும் உண்டாகாமல் மற்றும் புறக்காரணங்களாலும் உண்டாகலாம். ஆனால் மேற்குறித்த வியாதிகளும் அவற்றாலுண்டாகும் உபத்திரவமும் மரணமும் அநேகமாய்ச் சரீரத்தின் குறைவினாலேயே உண்டாகின்றன. இவ்வியாதிகள் பாலரையும் குழந்தைகளையும் பற்றிப் பிடிக்கின் அவர்கள் தங்களாயுள் பரியந்தம் அவற்றின் உபத்திரவத்தை அனுபவித்தே தீரவேண்டும். அக்குழந்தைகள் பிறந்தபின் தாயானவள் எவ்வளவாய்க் கவலையெடுத்துப் பராமரித்தபோதிலும் அவ்வியாதிகள் ஒருதரம் தோன்றியபின் அவைகளை முற்றிலும் நீக்குவதரிது. ஆனால் கர்ப்பிணியானவள் சரியானபடி கவலையெடுத்துத் தன் சுகத்தைப் பேணுவதனால் பின்பு அவ்வியாதிகளால் உண்டாகும் உபத்திரவங்களுக்குச் சற்று நீங்கியிருக்கலாம்.

இரண்டு குழந்தைகள் ஏககாலத்தில் ஒரே இடத்தில் பிறக்கின்றன. ஒன்று சந்தோஷமும் சௌக்கியமுமாய்த் துள்ளிக் குதித்து விளையாடுகின்றது. மற்றொன்று எழுந்திருக்கவும் சக்தியற்று நோயால் வருந்துகின்றது. இதற்குக் காரணமென்ன? ஒரு குழந்தை தன் தாயினிடத்திலிருந்து நோய்க்கு எதிர்த்து நிற்கத்தக்க சுகத்தைப் பெற்றிருக்கின்றது. மற்றொன்றுக்கோ அதன் தாய் எளிதில் நோயால் வருந்தத்தக்க பலவீன சரீரத்தைக் கொடுத்திருக்கிறாள். இப்படி அக்குழந்தைகள் படும் உபத்

திரவத்திற்கும் சாவுக்கும் காரணம் யார்? எல்லாம் தெய்வச்செயலால் நடக்கிறது என்று சொல்வது போக்கேயாம். அது ஒருவன் மற்றொருவனைக் கத்தியினால் குத்திப்போட்டு உன்னைக் குத்தினது நானல்ல தெய்வமே என்று சொல்வதற்கு ஒப்பாகும். ஓர் ஸ்திரீக்கு இரண்டு குழந்தைகள் இருந்தன. அவளுடைய சரீரமோ அதிகச் சுகமும் சுறுசுறுப்பும் பலமுமுள்ளதா யிருந்தது. அவள் அறுபது வருஷம் உயிரோடிருந்து நோய்களால் அதிக வருத்தப்படாமல் மரித்தாள். அவளுடைய பிள்ளைகளோ விவாகஞ்செய்து இரண்டு வருஷத்திற்குள் ஒருவனும் விவாகஞ் செய்வதற்கு முன்னமே ஸ்திரீலோலனாய்த் திரிந்து மற்றவனும் க்ஷயரோகத்தினால் மரித்தார்கள். இதன் காரணமென்ன? தாய் சௌக்கியமுள்ளவளா யிருக்க அவள் பிள்ளைகளுக்கு க்ஷயரோகம் எப்படி வந்தது? என்று கேட்டால், தாய் சௌக்கியமுள்ளவளாய் இருந்தபோதிலும் க்ஷயரோகத்திற்குரிய அறிகுறிகள் அவளுடைய ரத்தத்தில் தோன்றிப் பதுங்கி வெளியே தோன்றாமலிருக்கலாம். அதன் காரணத்தை விசாரிக்கும்போது தாயின் வயிற்றில் அக்குழந்தைகளிருக்கும்போது அவள் மிதமிஞ்சி வேலை செய்ததாகவும், அச்சிசுக்களின் வளர்த்திக்கு வேண்டிய சத்துக்களையும் பலத்தையும் மற்ற விஷயங்களில் செலவழித்து விட்டதாகவும் தெரிய வந்தது. ஆதலால் அவளுடைய உதிரமானது சத்துக் குறைந்ததாக விருந்து அச்சிசுக்களுக்குள் சென்று அவற்றிற்குப் பலவீனத்தையும் வியாதியையும் பிறப்பித்திருக்கிறது. ஓயாத வேலையினாலும் ஒழியாத முயற்சியினாலும் தாயினது சத்துக்குறைந்து தளர்ச்சியடைகின்றது. அவ்விதமாகவே அக்குழந்தைகட்கும் சத்துவங்குன்றி நோயுண்டாகின்றது. தாயானவள் தான் கர்ப்பிணியா யிருக்கும்போது நல்ல காற்றைச் சுவாசித்து நற்பானங்களைப் பருகி, சுத்த உணவைப்புசித்து, அதிகக் கஷ்டமற்ற வேலைகளைச் செய்வதனால் தன் குழந்தைகளின் அவயவத்திற்கு வல்லமையையும் சுறுசுறுப்பையும் வனமையையும் உண்டுபண்ணுவாள். ஒவ்வொரு ஸ்திரீ புருஷரின் சரீரத்தின் நிலைமையைச் சற்று கவனிப்பார்களாகில் அவர்கள் பிறக்குமுன் தங்கள் தாயின் வயிற்றில் சிசுக்களா யிருக்கும்போது அவர்கள் சரீர வளர்ச்சிக்கு வேண்டிய உபகரணங்களில் தாயின் உதிரத்தினது ஸ்திதியும் பதிந்திருக்க வேண்டுமென்பது தெளிவாய் விளங்கும். ஸ்திரீயே! நீ அசுத்த ஆகாயத்தைச் சுவாசித்து, நோயுண்டாகும் உணவைப் புசித்து, உனக்குக் களையை உண்டாக்கும் வேலைகளைச் செய்து, மிதமிஞ்சிப் போகஞ் செய்வதனால் உன் உதிரத்தைக் கறைப்படுத்தி பலவீனமாக்கும்பொழுது இவ்விஷயத்தைப் பற்றிச் சற்று யோசித்துப்பார். இதோ! உன்னைச் சுற்றிலும் அநேகமான வியாதிகளால் அவஸ்தைப்பட்டுச் சிறுபிராயத்திலேயே மடியும்

ஆயிரக் கணக்கான குழந்தைகளின் கூக்குரலையும் புலம்பலையும் சற்று கவனித்துக் கேள். அன்னையென் றழைக்கப்பட அவலுடன் காத்திருக்கும் அருமை நாயகியே! இதோ உன்னை மாதாவென்று மகிழ்ச்சியுட னழைக்கும் மதலை உன் உதரத்திலிருந்து மன்றாடிக் கேட்டுக்கொண்ட விண்ணப்பத்தை உன் மனதினால் கவனித்து உன் குழந்தைக்காக உன்னிடத்திலிருக்கும் ஜீவ ஊற்றைச் சுத்தமும் சௌக்கியமுமுள்ளதாய் வைக்கப்பார். இயற்கை அமைப்புக்கு விரோதமான காரியங்களைப் பக்தியீனமாய்ச்செய்து உன் உதிரத்தைக் கறைப்படுத்தி உன் குழந்தையின் சௌந்தரியத்தை வீணாய்க் கெடுத்துவிடாதே.

இதுவரையில் தாய் சாப்பிடும் வஸ்துக்களுக்குத் தக்கதாக அவளுடைய உதிரம் மாறி, அவ்வுதிரத்தினது சக்திக்குத் தக்கதாக அதனால் போஷிக்கப்படும் சிசுவின் சரீரத்தினது தன்மையும் மாறும் என்பதைக் கவனித்தோம். இனிமேல் தாயினது ஆத்துமாவின் தன்மைக்குத் தக்கதாக அவளுக்குப் பிறக்கும் குழந்தைகளின் சுபாவமும் இருக்கும் என்பதை நிரூபிப்போம்.

குழந்தைகள் தாயின் சரீரத்தினது தன்மையைப் பெற்றுக் கொள்வது போலவே ஆத்துமாவின் தன்மையையும் சுதந்தரித்துக்கொள்ளுகின்றனவோ என்னும் கேள்விக்கு நேரான விடை கொடுப்பது சற்று வருத்தமாயிருந்தபோதிலும், சிசு உற்பத்தியாயிருக்கும்பொழுது தாயினது ஆத்துமாவின் தன்மை எப்படியிருக்கின்றதோ அப்படியே அவளுக்குப் பிறக்கும் குழந்தைகளின் சுபாவமும் இருக்கும் என்பதைக்காட்டும் அநேக அத்தாட்சிகள் நம்முடைய அநுபவத்தினால் அறியலாம். உதாரணமாக:— பலசரக்குக்கடை வைத்திருந்த ஓர் வாலிபன் ஒரு பெண்ணை விவாகஞ் செய்தான். விவாகம் செய்தபின் சிறிது காலமாய் இருவரும் மிகச் சந்தோஷத்துடன் சுகித்திருந்தார்கள். ஆனால் தனக்கும் தன் குடும்பத்துக்கும் போதுமான திரவியம் சம்பாதிக்க வேண்டுமென்னும் ஆசை மேலிடவே, சாதாரணமாய்த் தான் விற்கக்கூடியதைவிட அதிகமான சரக்குகளை வாங்கிக் கட்டி வைத்தான். அக்காலத்தில் அவன் மனைவிக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அதற்குப் பின் ஏறக்குறைய ஒரு வருஷகாலமாய்த் தான் வாங்கிய வஸ்துக்களைச் சீக்கிரம் விற்றுத் திரவியம் சம்பாதிக்கும்படி இரவும் பகலும் விடாமுயற்சியாயிருந்தான். அவன் மனைவியோ மிகவும் பொறுமையும் அன்புமுள்ளவளாயிருந்து தன் புருஷனுக்கு வேண்டிய சகல உதவிகளையும் செய்துகொண்டிருந்தாள். ஆனால் அகவிலை மலிந்தபடியால் தங்களுக்கு நஷ்டம் நேரிடுமென்பதை அவர்களறிந்து இரவும் பகலுங் கவலைப்

பட்டு வாங்கிய சரக்குகளை எவ்விதமாய் விற்கலாம் என்று மி வருத்தமடைந்தார்கள். அப்படியே அவனுக்குப் பெருநஷ்டம் கண்டது. அக்காலத்தில் அவர்களுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. இருகுழந்தைகளும் சௌந்தரியமும், சுகமும், பலமுமுள்ளவைகளாய் வளர்ந்தன. ஆனால் அவர்களுடைய குணங்களிலோ அதிக வித்தியாசம் தோன்றிற்று. தாயும் தகப்பனும் சிறிது காலம் கஷ்டப்பட்டு இரண்டு மூன்று வருஷத்திற்குள் விடாமுயற்சியினாலும் யூகத்தினாலும் திரவியம் சம்பாதித்து முன்போலவே சந்தோஷமாய்க் காலங்கழித்து வந்தார்கள். அப்போது ஒரு ஆண்குழந்தை பிறந்தது. அதற்குப் பிற்பாடு நாட்செல்லச் செல்ல மற்றக் குழந்தைகளும் பிறந்தன. ஆனால் மூத்தபையனே வெகு வெடுவெடுப்பும் துடுக்குமுள்ளவனா யிருந்து தன் திராணிக்கெட்டாத காரியங்களின்மேல் ஆவாவுள்ளவனா யிருந்தான். அவன் ஒருக்காலும் வேலையின்றி ஒழிந்திருக்கமாட்டான். எப்பொழுதும் சுறுசுறுப்புள்ளவனா யிருந்து ஏதாவது ஒரு வேலையைச் செய்துகொண்டே யிருப்பான். பதின்மூன்று வயதில் தன்னோடு வாசித்த பையன்களெல்லாரையும்விட அதிகப் புத்திக் கூர்மையுள்ளவனா யிருந்து உபாத்தியாயர் சொல்வதை உடனே கிரகித்துக்கொள்ளும் சக்தியுடையவனா யிருந்தான். பதினைந்து வயதில் இவனுக்கு க்ஷயரோகத்திற்குரிய குறிகள் தோன்றின. வரவர அவன் சரீரம் மெலிவடைந்து, விருத்தாப்பியனைப்போல் தளர்ச்சியடைந்து பதினெட்டு வயதில் மரணமடைந்தான். இரண்டாவது பிறந்த பெண்ணோ மிகவும் அமரிக்கையும் ஆரம்பமுதல் நம்பிக்கையற்றவளுமா யிருந்தாள். அவளுடைய கண்கள் குழிவிழுந்து அவளுடைய முகத்தில் சந்தோஷமே தோன்றினதில்லை. அவள் மிகச் சோம்பலும் எளிதில் அதைரியப்படக் கூடியவளுமா யிருந்தாள். அவளை எந்த வேலைக்கேவினாலும் எனக்கு வெட்கமா யிருக்கிறதம்மா, என்னால் அந்த வேலை செய்யமுடியாது. நான் ஏன்தான் இந்த உலகத்தில் பிறந்தேனோ வென்று உலகத்தின் மேல் வெறுப்பும், வேலையில் பிரீதியற்றவளுமா யிருப்பாள். பதினைந்து வயதில் அவளுக்கு விவாகமாயிற்று. அவளிடத்தில் அன்பும் சுறுசுறுப்புமில்லாததை அவள் புருஷன் கண்டு அவளைத் தனியே விட்டுத் தூரதேசம் போய்விட்டான். சாதாரணமாய் அவளுக்கிருக்கும் துர்க்குணம் மிகவும் அதிகரித்து ஓயாத துயரத்திலமிழ்ந்து பைத்தியம் பிடித்தவள்போல் புலம்பிக்கொண்டிருப்பாள்.

"இப்பிறவி தனிற்பிரியா திருந்து சுகங்கொள்வது போலினியெக்காலு
மெப்பிறவியெடுக்கினுநா னுனைப்பிரியா திருப்பதுமெய்யென் றீரிப்போ
தப்பிதமாயடியன் றனியிருந்தேங்கி யுடல்விடுக்குந் தன்மைகாண
வொப்பினதோவுமதுமனதொருமையிதோ வுவமையிலா துயர்கோமானே."

" அஞ்சலென் றனைப்புறந்த வன்னை சொன்மறுக்கவுங்
கொஞ்சு பைங்கிளிக்குறை கொடாதுளம் வெறுக்கவும்
பஞ்சணைப் புறத்தெனவி யும்பசை பதைக்கவும்
வஞ்சியே யெனுயகன்செல் மாயமென்ன மாயமோ."

அவளுடைய தகப்பன் வீட்டில் சாப்பாட்டுக்குக் குறைவில்லாம லிருந்தபோதிலும் அவளைக்கண்டு பேசினல், ஐயோ கஷ்டமாயிருக் கிறதே, நான் செத்தாலும் நன்றே என்று புலம்பிக்கொண்டே யிருப்பாள். அவளுக்கு ஒரு குழந்தை இருந்தது. அக்குழந் தையை எள்ளளவும் பாதுகாக்கவில்லை. அதற்கு அன்னம் ஊட்ட வேண்டுமே, துணி உடுத்த வேண்டுமே என்னும் கவலை அவளுக் குச் சிறிதேனுங் கிடையாது. வீட்டிற்கு வந்த மனுஷரிடத்தில் அன்பாய்ப் பேசி மரியாதை செய்கிறதுமில்லை. இவ்விஷயத்தைப் பற்றி அவள் பெற்றோரிடத்தில் இதன் காரணமென்ன, இவள் சிசுவா யிருக்கும்பொழுது உங்களுடைய தொழிலென்ன என்று விசாரித்தபொழுது அவர்களுடைய பூர்வோத்தரமும் சரித்திரமும் அறியலானேம். இவ்விதமாய் ஒரே தாய்க்குப் பிறக்கும் இரண்டு குழந்தைகளின் சுபாவம் ஒன்றுக்கொன்று விரோதமா யிருப்ப தற்கு, ஒவ்வொருகுழந்தையும் தாயின் கர்ப்பத்திலிருக்கும்போது அத்தாயினது ஆத்மா இருந்த ஸ்திதியே காரணம் என்பதை நிரூ பிக்க ஒவ்வொரு மனுஷருடைய குணமும் சுபாவமும் அத்தாட்சி யாகும்.

மனுஷரை ரக்ஷிக்கவும் அழிக்கவும் அரசாளவும் அவர்களு க்கு வேண்டிய அன்னவஸ்திரங்கள் வீடு முதலியவைகளை உண்டு பண்ணுவதற்குமுரிய வழிகளைக் கண்டுபிடிக்க மனுஷரது யோச னையும், புத்தியும் எவ்வளவு தூரமோ சென்று இருக்கின்றன. ஒரு வன் வானசாஸ்திரத்தில் நிபுணனகிறன். வேறொருவன் பூமிசாஸ் திரத்திலும், மற்றொருவன் தத்துவம், வேதாந்தத்திலும், இன்னும் சிலர் அங்ககணிதம், பீஜகணிதம் முதலிய பல சாஸ்திரங்களிலும் நிபுணராகின்றனர். இவ்விதமாய் மனுஷருடைய புத்தியும் ஆலோ சனையும் வெவ்வேறு வழிகளை நோக்குவதற்குக் காரணமென்ன? சிலர் பூர்வ ஜன்மத்தில் ஒவ்வொருவரும் செய்த கருமத்துக்குத் தக்கதாய் பிரம்மா ஒவ்வொரு மனுஷனுடைய தலையிலும் எழுதி வைத்த விதி என்னப்படும் ஊழ்வினையே என்பார்கள். தாயான வள் தனது உதரத்தில் சிசுவானது உற்பத்தியா யிருக்கும்பொ ழுது தனது ஆத்துமாவின் ஸ்திதியை அக்குழந்தைக்குட் புகட்டு வதே இதன் காரணம். பத்துவயதுள்ள ருக்மணி என்னும் ஒரு பெண் தன் வீட்டில் சற்று நேரமாவது தரிக்கிறதில்லை. ஒரு காட் டுக் குருவியைப் பிடித்துக் கூண்டில் வைத்தால், அது எப்படி குதித்துக் கொண்டு வெளியேறப் பார்க்குமோ அப்படிப்போல்

அங்குமிங்கும் ஓடிக்கொண்டு திரிவாள். வீட்டிற்கு வீடுபோய்த் தன் சிநேகிதிகளைக் கூட்டிக்கொண்டு அங்குமிங்கும் திரிவதையல்லாமல் வேறொன்றிலும் அவளுக்குப் பிரியமில்லை. சற்றுநேரம் வீட்டிலிருக்கும்படி செய்தால் பிடித்து அடைத்துப் போட்டதுபோலிருக்கிறதே என்று துடிப்பாள். அவள் தாயினிடத்தில் இந்தக் குழந்தை வயிற்றிலிருக்கும்போது நீ என்ன தொழில் செய்து வந்தாய், உன் புருஷனுடைய நடவடிக்கை என்ன என்று கேட்டதற்கு தன் புருஷன் மிக்க குரூரமுள்ள குடிகாரனா யிருந்தபடியால் அவனுடைய அடிக்குத் தப்பும்படி குழந்தை யுண்டாயிருக்கும்பொழுது வீட்டுக்கு வீடுபோய்த் தன் வருத்தங்களைச்சொல்லி ஆறுதலடைந்ததாகவும் இவ்விதமாய்த் தன்னுடைய காலத்தை அயலார் வீடுகளிலேயே செலவழித்ததாகவுஞ் சொன்னாள். இவ்விதமாய் அயலார் வீடுகளுக்குப் போகும்படி தனக்கிருந்த ஆசையைத் தன்னுடைய குழந்தையின் மனதில் பதித்தனள். இப்படிப்பட்ட உதாரணங்கள் இன்னும் அநேகமுண்டு. அவற்றை இங்கு எடுத்துக் காட்டுவது அவசியமில்லை. அவற்றை ஒவ்வொருவரும் தாமே பார்த்து அறிந்துகொள்ளலாம்.

நன்மை, தீமை, கற்பு, உபவாசத்தினாலும் ஜெபத்தினாலுமுண்டாகும் நன்மை, இரையளிப்பதனாலும் தண்டனையினாலுமுண்டாகும் பிரயோஜனம், மோக்ஷம், நரகத்தைப் பற்றிய அபிப்பிராயங்கள் முதலான பொதுவிஷயங்களைப் பற்றி, உலக முழுவதிலும் பரவியிருக்கும் நானாஜாதி பாஷைக்காரரும், பலதேசங்களிலுள்ள பல மதஸ்தர்களும் ஒரே பொதுவான எண்ணங்கொண்டிருக்கிறார்கள். இவ்வித அபிப்பிராயங்கள் ஆதிகாலந்தொடங்கிப் பலதேசங்களிலும் ஒரே மாதிரியா யிருப்பதால் நம்முடைய தலைமூளையில் பதிந்திருக்கும் முத்திரையே அதற்குக் காரணம் என்னலாம். இது சரி அல்லது தப்பிதம் இது நீதி அல்லது அநீதி என்று கண்டுகொள்ளுந் தன்மை சகல மனுஷருக்கும் ஒரே மாதிரியா யிருப்பதால் அவைகள் யாதொரு காரணமுமின்றித் தற்செயலாய் உண்டாயினவென்று சொல்லவுங்கூடாது. ஒவ்வொரு மனுஷனுடைய நடை உடைபாவனைகளில் விகற்பமிருந்தபோதிலும் கண், கால், கைகள் முதலிய அவயவங்களை உடைத்தாயிருப்பதில் சகல மனுஷருக்கும் ஒற்றுமை யிருப்பதுபோல், நன்மை தீமை, நீதி அநீதி, சரி தப்பிதம் முதலியவற்றை யுணரும் சுபாவத்திலும் சகல மனுஷரும் ஒத்திருக்கிறார்கள். ஆத்துமாவின் கிரியைக்குத் தக்கதாக உதிரத்தினது ஸ்திதியும் மாறுகின்றது. இரத்த ஓட்டமும் உஷ்ணமும் ஆத்துமாவினது எண்ணத்திற்கும் உணர்ச்சிக்குந் தக்கதாக அதிகரிக்கும். சரீரமானது ஆத்துமாவுக்காக இருக்கிறதேயன்றி ஆத்துமா சரீரத்துக்காகவல்ல, ஆத்துமாவே சதாகாலமும் அழி

வற்று எப்பொழுதும் வளர்ந்துகொண்டிருக்கிற ஓர் வஸ்து. நாம் சரீரத்தில் வஸ்திரந் தரித்துக்கொண்டிருப்பதுபோல் ஆத்துமா சிறிது காலத்திற்குச் சரீரத்தைப் போர்த்துக்கொண்டிருக்கிறது. ஆதலால் சரீரத்தினது அற்ப சுகத்துக்காக அழியாத ஆத்துமாவை வெட்கப்படுத்தி இழப்பது நல்லதல்ல. சரீரத்துக்கு என்ன நேரிட்டபோதிலும் அழியாத நித்ய வஸ்துவாகிய ஆத்துமாவைப் பரிசுத்தமாய் வைத்துக்கொள்வது நமது கடமை. ஆவியும் சரீரமும் ஒன்றாயிருக்கும் மனுஷனில் மாம்சத்திற்கும் ஆத்துமாவிற்கும் போராட்டமுண்டாகாது. ஆத்துமாவும் சரீரமும் ஒன்றுக்கொன்று உதவிசெய்கின்றன. சரீரத்தினது ஒவ்வொரு கிரியைக்கும் மூளை, இருதயம், வயிறு முதலியவற்றி லுண்டாகும் மாறுதலுக்குந் தக்கதாக ஆத்துமாவினது தன்மையும் மாறும். தலைவலி, பல்வலி, வயிற்றுநோய் முதலியவற்றால் சரீரம் வருந்தும்பொழுது ஆத்துமாவை அமைதியும் சந்தோஷமுமுள்ளதாய் வைத்துக்கொள்ள முடியாது. அவ்விதமாகவே ஆத்மாவினது தன்மைக்குத் தக்கதாகச் சரீரத்தினது தன்மையும் மாறும். ஆத்மாவில் விசனம், துக்கம், கோபம், புத்திகலங்குதல், மனச்சோர்வு முதலியவை உண்டாயிருக்கும்போது சரீரத்தையும் அவைகள் தாக்குகின்றன. சரீரத்தினது சுகமும் ஜீவனும் மனுஷன் பிறக்குமுன் அவனுடைய அவயவத்தில் என்னென்ன உபகரணங்கள் சேர்ந்தனவோ, அதற்குத் தக்கதாயிருக்கும். அவ்விதமாகவே ஆத்துமாவின் சுகமும் வலிமையும் தாயின அவயவத்திலிருந்து பெற்றுக்கொண்ட சுபாவங்களுக்குத் தக்கதாக மாறும். இவ்விதமாக மனுஷனுடைய ஆத்துமாவும் சரீரமும் ஒன்றுக்கொன்று உதவிசெய்து ஒன்றின் ஸ்திதிக்குத் தக்கதாக மற்றதின் நிலைமையும் மாறும்.

---

## சிசுவின்மேல் தாய்க்கிருக்கும் வல்லமை.

இவ்வுலகத்தில் ஒவ்வொரு மனுஷனும் அனுபவிக்கும் சுகதுக்கங்கள் அவன் சரீரத்தினது அமைப்புகளுக்குத் தக்கதாகவிருக்குமென்றும், ஒவ்வொரு மனுஷனும் தாயின் கர்ப்பத்திலிருக்கும்போது தாய் எந்த ஸ்திதியிலிருக்கிறாளோ அதற்குத் தக்கதாக அவனுடைய சரீரமும் ஆத்துமாவும் அமைக்கப்படுமென்றும் கவனித்தோம். தாயினது இராஜ்ஜியமும் வல்லமையும் எவ்வளவு தூரம் வியாபித்திருக்கிறதென்றும், எவ்வளவு காலம் நிலைக்கத் தக்கதென்றும் யாரால் சொல்லமுடியும்? தாயே நாம் முன்னுக்கு வரும் வழிகளைக் காட்டிக்கொடுக்கும் உபாத்தியும், நீதி நியாயங்களை அறிவித்து உணர்த்தும் நியாய சாஸ்திரியும், நமக்கு இவ்வுலகத்தில் நடக்கும் சங்கதிகளை முன்னறிவிக்கும் தீர்க்கதரிசியும்,

தெய்வம் நம்மை வைக்கச் சித்தமாயிருக்கும் ஸ்திதியை எடுத்துக் காட்டி நித்தியானந்த வெளி ஒளியைத் தரிசிக்கும் மெய்ஞ்ஞான வழியைப் போதிக்கும் உபதேசியும், நமக்குச் சுகமாகிய மோக்ஷ வழியைக் காட்டி நம்மை இரக்ஷிக்கும் இரக்ஷகருமா யிருக்கிறாள்.

சர்வசமயசமரசக்கீர்த்தனை.

## தாய் தந்தையரை நமஸ்கரித்தல்.

இராகம்-பியாகு-ஆதிதாளம்.

கண்ணிகள்.

1. உற்றவரே எனைப் பெற்றவரே தினம்
உமக்கே நமஸ்காரம்
முற்றுமே நீர்செய்த உதவிக்கு நான் என்ன
மொழிவேன் உபசாரம்

2. பத்துமாதம் என்னை வயிற்றிலே சுமந்து
பலதுயர் சகித்தீரே
எத்தனைபிராண சங்கடமுடனே எனை
ஈன்றுநீர் வகித்தீரே

3. பெற்றீர்வளர்த்தீர் பெயரும்இட்டீர்ஜீவப்
பிரதிஷ்டை செய்வித்தீரே
உற்றஉம்உதிரத்தை முலைப்பாலாகவே
ஊட்டியே உய்வித்தீரே

4. தேனினும் அமிர்தினும் இனிதெனக்குநீர்
செப்பிய தாலாட்டு
வானினும் அமரர்க்கு வருமோ இதுபோல்
மங்களத் திருப்பாட்டு

5. மாந்தவியாதிகள் எனைஅணுகாமலே
மருந்துகள் கொடுத்தீரே
வாந்தியும்மலஜல அசுத்தமும்சகித்தெனை
மார்புற எடுத்தீரே.

6. உடல்உயிர்சகலமும் நீர்தந்ததேயன்றி
உண்டோ இனிவேறு
அடரும்உலகெலாம் உமக்களித்தாலுமே
ஆமோ கைம்மாறு

7. சிவன்போல்நீர்என்னை வளர்த்திட்ட அருமையைச்
செப்பஎன்னால் ஆமோ
நாவேஆயிரம் இருக்கினும்நீர்செய்த
நன்மையைச் சொல்லப்போமோ

8. கவலையெல்லாம்என் கவலையல்லால்வேறு
கவலையொன்றறியீரே
புவியிலேஎன்சுகம் அல்லதுவேறொரு
பொருளைக் குறியீரே

9. பாலவியாதிகள் எனையணுகாமலே
பத்தியம் பிடித்தீரே
காலமெல்லாம்பல விரதங்கள் அநுஷ்டித்துக்
கருமங்கள் முடித்தீரே

10. இரவுமுழுதுமே தூங்காதிருந்துநீர்
எந்தனைக் காத்தீரே
அரவுமுதற்பல ஜெந்துக்களால்வரும்
ஆபதனைத் தீர்த்தீரே

11. தாரணியில்என்சுகம் வேண்டியேநீர்பல
தருமங்கள் செய்தீரே
கருணைசெய்யும்படி கடவுளைத்துதித்துநற்
காணிக்கை செய்தீரே

12. சற்றுநீர்என்னைமுன் மறந்திருந்தால்நான்
சடலம் பெருப்பேனோ
உற்றஉலகிலே இந்நாள்மட்டும்நான்
உயிர்வாழ்ந்திருப்பேனோ

13. காணாதெய்வத்தின் அருளாலேவந்த
கண்கண்ட தெய்வம்நீரே
ஆணாப்பெண்ணாயிரா அந்தத்தேவையும்
அன்னைதந்தை என்பாரே

14. எனக்கொருசுகமவரில் உமக்குவந்ததுபோல்
எக்களிப் படைந்தீரே
எனக்கொருதுயரவரில் உமக்குவந்ததுபோல்
ஏங்கிஉள் ளுடைந்தீரே

15. பாலும்சோறும் பக்ஷணங்களும்எனக்கிட்டுப்
பழஞ்சோறுண்டீரே
காலமெல்லாம்நல்ல சோமனுன்உடுக்கநீர்
கந்தையைக் கொண்டீரே

16. சப்பிரமஞ்சத்தில் நான்படுத்துறங்கநீர்
தரையிலே படுத்தீரே
கைப்பொருளெல்லாம் என்னிமித்தம்பரி
காரிக்குக் கொடுப்பீரே

17. வாக்கால்உளரும்என் மழலைச்சொற்கேட்டுநீர்
மகிழ்ந்தே துதித்தீரே
காக்கைக்கும்தன்குஞ்சு பொன்குஞ்சென்பதுபோல்
கரிசனம் பதித்தீரே

18. குற்றம்எத்தனையோ செய்தேன்அவற்றைக்
குணமாய்க் கொண்டீரே
சற்றுநான்நோய்களில் அன்னம்நித்திரையின்றித்
தளர்ந்துமெய் துவண்டீரே

19. தோளினும் மார்பினும் இடையினுமேயெனைத்
தூக்கிக்கொண் டலைந்தீரே
நீள்பஞ்சகாலத்தில் உள்ளேசோறெனக்கிட்டு
நீர்பசித துலைந்தீரே.

20. சுயநலம்வேண்டி இங் கொருவருக்கொருவர்
துணைசெய்வர் மெய்தானே
பயனொன்றும்வேண்டா தெனைநீர்வளர்த்திட்ட
பக்ஷம்என் சொல்வேனே

21. உறவினரெல்லாம் உம்மாலேவந்த
உறவினர் தாமலவோ
அறநெறிகாட்டும் குருவுமேநீரெனில்
அயலினி எவசொல்வோம்

22. பலபொருள்எனக்குச் சம்பாதித்துவைக்கவே
பலவிதம் உழைத்தீரே
நிலமிசைஉம்முயிர்க் குயிர்நானேஎன்று
நினைத்துநீர் பிழைத்தீரே

23. தாரம்போனால்மறு தாரம்வருவர்பெற்ற
தாயரும் அப்படியே
நீர்போனால்வேறு தாய்தந்தையர் வந்து
நேருவ தெப்படியோ

24. தக்கபருவத்தில் எனை அடக்கிப்பாட
சாலையில் விட்டீரே
பக்கமெல்லாந் திரிந் தென்னாலேபல
பாடுகள் பட்டீரே

25. இளந்தைப்பருவத்தில் என்னால்வருந்துன்பம்
எல்லாம் பொறுத்தீரே
தளர்ந்த பருவத்தில் உம்மால்வருந்துன்பம்
சகிப்பது பெருஞ்சீரே

26. துக்கங்களெல்லாம் நீர்வகித்துக்கொண்டு
சுகம்எனக் களித்தீரே
மக்களேசகல பாக்கியமென் றெண்ணி
மனம்மிகக் களித்தீரே

27. மண்பிள்ளை ஆயினும் தன்பிள்ளையென் றெனை
மகிழ்ந்தாதரித்தீரே
பண்புடன் என்பொருட் டாகநீர்பலரையும்
பணிந்துபசரித்தீரே

28. தெரியாமல்நான்செய்த பிழைபொறுத்தென்னிடம்
திருவருள் பதிப்பீரே
அருமலைநாயகன் அருள்செய்யும்படி என்னை
ஆசீர்வதிப்பீரே

1. இவ்வுலகத்திலுள்ள சகல ஜீவஜெந்துக்களும் தாவரவஸ்துக்களும் உண்டாகி வளர்வதற்குரிய சில இயற்கைப் பிரமாணங்கள் உண்டு. மனுஷரும் இவ்வுலகத்திலிருக்குமளவும் அப்பிரமாணங்களுக்கு அடங்கி நடக்கவேண்டும். ஒவ்வொரு குழந்தையும் பிறக்குமுன் அதன் சரீரத்திலும் ஆத்மாவிலும் தன் சுகத்தையும் ஜீவனையும் காப்பாற்றும் வழிகளாக அப்பிரமாணங்கள் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றன. ஒருவன அப்பிரமாணங்களைக் கைக்கொண்டு நடந்தால் அவன் சகல சம்பூர்ணமுடையவனாய் நோய் நொம்பலமின்றி இவ்வுலகத்தில் வாழ்வான். ஆனால் அப்பிரமாணங்களை மீறி நடப்பானாயின் அவன் அப்படி நடக்குங்காலமெல்லாம் அவனுக்குச் சந்தோஷத்தையும் சௌக்கியத்தையும்

கொடுக்க இவ்வுலகத்தில் ஒருவராலும் முடியாது. அவற்றிற்குக் கீழ்ப்படிவதனால் பேரின்பமும் மோக்ஷானந்தமுமுண்டு. கீழ்ப்படியாவிட்டாலோ துன்பமும் துக்கமுந்தான் கிடைக்கும். அவ்வியற்கைப் பிரமாணம் எவ்வளவு நிலையுள்ளதும் மாறாததுமாயிருக்கிறதோ அவ்வளவிற்கு அதனாலுண்டாகும் தண்டனையும் மாற்றப்படக்கூடியதன்று. ஒவ்வொரு அவயவத்தின் கிரியையும் அதனுள் இருக்கும் தூண்டலினையால் நடத்தப்படவேண்டும். ஒரு மனுஷனுடைய கண், காது, ஈரல், மூளை முதலியவற்றை வேறொருவனுடைய சித்தம் அல்லது எல்லையினால் நடத்தமுடியாது. ஒருவன் புசித்துக் குடித்தால் வேறொருவனுடைய பசியும் தாகமும் அடங்காது. அதலால் சுக ஜீவியத்தை விரும்பும் ஒவ்வொரு மனுஷனும் அவ்வியற்கைப் பிரமாணங்களைத் தானாகவே கைக்கொண்டு நடக்க வேண்டும்.

நீதியையும் நியாயத்தையும் உணர்த்தும் அந்தப்பிரமாணங்களை நம்முடைய சரீரத்தில் புகட்டியது யார்? நாம் கர்ப்பத்திலிருக்கும்போது உருக்கமான அன்பினாலும் ஓயாத சிந்தையினாலும் நமது சௌக்கியத்தையும் வாழ்வையும் தன்மனதிலே தியானித்துக்கொண்டிருந்தவளாகிய நமது தாயே. நமது உயிருக்கும் இரக்ஷிப்புக்கும் அவசியமாகிய இக்கட்டளைகளை அவள் நமது ஆத்மாவிலும், ஆத்மாவினது கிரியைகளை வெளிப்படுத்தும் சரீரத்திலும் பதித்திருக்கின்றாள். இப்பிரமாணங்கள் நமது இருதயத்திலும், ஈரல்களிலும், மூளை நரம்புகளிலும் சரீரத்தினது ஒவ்வொரு அவயவத்திலும் வரையப்பட்டிருக்கின்றன. நம்முடைய சரீரமும் ஆத்மாவும் முற்றிலும் அழிந்துபோகுமளவும் அந்தப் பிரமாணங்களை மாற்ற அல்லது நீக்க நம்மால் முடியாது. அப்பிரமாணங்கள் ஐஸ்வரியவானுக்கும் ஏழைக்கும், படித்தவனுக்கும் மூடனுக்கும், உயர்ந்தவனுக்கும் தாழ்ந்தவனுக்கும், யாதொரு வித்தியாசமுங் காட்டாமல் எக்காலமும் நிலைத்திருக்கும் நித்திய கட்டளைகளாயிருக்கின்றன.

போதகராலும், இராஜாங்கத்தாராலும், நியாய சாஸ்திரிகளாலும் உண்டாக்கப்படும் சகல கட்டளைகளையுங்விடத் தாயின் மூலமாய்த் தெய்வம் நமக்களிக்கும் இயற்கைப் பிரமாணத்தைக் கைக்கொள்வதனால் நமக்கு மகிமையும் கனமும் உண்டாகும். இவ்விதமாய்த் தாயானவள் தனது குழந்தையின் ஆத்மாவிலும் சரீரத்திலும் அதனுடைய சுகத்திற்கும் உயிரைக் காப்பாற்றுவதற்கும் வேண்டிய இயற்கைப் பிரமாணங்களைப் பதிப்பிக்கிறாள். ஆனால் தனது அறியாமையினாலும். தனது சரீரத்திலுள்ள நோய்களினாலும் தனது குழந்தைக்கு வியாதியையும் மரணத்தையும் உண்டு

பண்ணும் இயற்கைப் பிரமாணத்திற்கு நேர்விரோதமான சில விதிகளையும் வரைகின்றாள். அவற்றினால் சுகத்தையும் ஜீவனையும் கொடுக்கத்தக்க இயற்கைப் பிரமாணங்களை மீறி நடந்து வியாதிகளை வருவித்துக்கொள்ளும் சுபாவத்தையும் அபேக்ஷையையும் தன் குழந்தைகளுக்குக் கொடுக்கிறாள். நம் ஒவ்வொருவருக்கும் அன்பு, நீதி, உண்மை, சாந்தம், பொறுமை, தாழ்மை இவற்றினால் உண்டாகும் சுகமும் சந்தோஷமும் இன்னது என்று தெரியும். ஆனால் நமது சுகத்தையும் சந்தோஷத்தையும் கெடுக்கின்ற கோபம், வன்மம், மோசகம், புரட்டு, உருட்டு, பொறாமை, பகை, அநியாயம், பொய், குரூரம் முதலிய துர்ச்சுபாவங்களும் நம்மிடத்திலிருக்கிறதைக் காண்கிறோம். நமக்கு நன்மை செய்வதால் நமது ஆத்மாவுக்குத் திருப்தியும் சந்தோஷமும் உண்டாகுமென்று அறிவோம். ஆனால் பதிலுக்குப் பதிலும் தீமைக்குத் தீமையுஞ் செய்வதே நமது சுபாவம். ஏனெனில் "நான் துர்க்குணத்தில் உருவானேன், என் தாய் என்னைப் பாவத்தில் கர்ப்பந் தரித்தாள்." என்று நாம் சொல்லவேண்டியதாயிருக்கிறது. ஆம்! நற்குணத்தில் உருவாகி நமது தாய் நம்மைப் புண்ணியத்தில் கர்ப்பந் தரித்தால் நமக்குத் துர்ச்சுபாவம் எங்கிருந்து வரும்?

2. நாம் சுகத்தையும் சந்தோஷத்தையு மடையும்படி கைக்கொள்ளவேண்டிய பிரமாணங்களை நாம் பிறக்கு முன்னும் பிறந்த பின்னும் நமது தாயே நமக்குக் கற்றுக் கொடுக்கிறாள். ஒவ்வொரு மனுஷனும் இவ்வுலகத்தி லனுபவிக்கும் சுக துக்கங்களுக்குக் காரணமாகிய விதிகளை உண்டுபண்ணுவதும் தாயே. தனக்கிருக்கும் அறிவினாலும் நற்குணங்களினாலும் தன் குழந்தைக்குச் சுகத்தைக் கொடுக்கும் வழிகளைப் போதிப்பதுடன் தன்னுடைய சுகவீனத்தினாலும், துர்க்குணங்களினாலும், கெட்ட சரீரத்தினாலும், தன் குழந்தைக்குப் பல வியாதிகளையும், உபத்திரவங்களையும் வருவித்துக்கொள்ளக்கூடிய வழிகளையுங் காட்டிக் கொடுக்கிறாள். இவ்விதமாய்த் தனது குழந்தைக்கு நன்மை செய்யக் கற்றுக் கொடுப்பதோடு, தனது மூடத்தனத்தால் தீமை செய்யும் வழிகளையும் காட்டிக்கொடுக்கிறாள்.

3. இவ்வுலகத்தில் பிறக்கும் மனுப்புத்திரருக்கு இனி நேரிடப்போகும் சங்கதிகளைத் தாயே அன்றி வேறு யார் அறிவிக்கக்கூடும். அவளுக்கு அவ்வறிவு எங்கிருந்து வந்தது? நட்சத்திரங்களின் நிலைமையைக் கணித்துப் பார்த்ததனாலா, அநுமார் உச்சாடனம் செய்ததனாலோ, பக்ஷி சகுனம், பல்லி சகுனம் பார்த்ததனாலோ, அல்லது கௌசியர், அகஸ்தியர், நந்தீஸ்பார் முதலியவர்

களின் ஜோசியங்களை ஆராய்ச்சி செய்ததனாலோ? அல்ல, அல்ல, சுய மன உச்சாடனஞ் செய்து தனது குழந்தை உற்பத்தியான நாள் முதல் பிறந்தநாள் வரைக்கும் தனது சரீரமும் ஆத்மாவும் இருந்த நிலைமையையும் செய்த கிரியைகளையும் உற்றுப் பார்ப்பதனாலேயேயாம். ஒரு காரணமிருந்தால் அதன் பலனாகிய காரியமும் வந்து சேரவேண்டும். தாயினுடைய நிலைமைக்குத் தக்கதாகப் பிள்ளையினுடைய ஸ்திதியுமிருக்கும். "தாயைப் போல் பிள்ளை நூலைப்போல் சேலை." சுகத்திலிருந்து சுகமும், பிணியிலிருந்து பிணியும், அன்பிலிருந்து அன்பும் பகையிலிருந்து பகையும் உண்டாகவேண்டும். காரணமெப்படியோ காரியமப்படியே. தாய்க்கிருக்கும் எண்ணமும் சிந்தனையும் யோசனையும் எப்படியிருக்கின்றனவோ அப்படியே தனக்குப் பிறக்கும் குழந்தையினுடைய எண்ணமும், யோசனையும், சிந்தனையும் ஆகும். "விளையும் பயிர் முளையிலே தெரியும்." முளையின் தன்மையை நிலத்திலும் விதையிலும் அறியலாம். "பண்ணிய பயிரில் புண்ணியந் தெரியும்." குழந்தை தன் உதரத்திலிருக்கும்போது தனக்கிருந்த பெருமை, ஆசை, தன்னயம், கோபம், புத்தி, சற்குணம், ஆசாபாசம் முதலியவற்றிற்குத் தக்கதாகவும், தனது சரீரத்தினது கிரியைக்கும் நிலைமைக்குந் தக்கதாகவும் தன் குழந்தையினது புத்தி சித்தமும் சரீரத்தின் நிலைமையும் இருக்குமென்று தெரியலாம். கர்ப்பஸ்திரீ பொறுமை முதலிய துர்க்குணங்களை நீக்கித் தெய்வபக்தி முதலிய மேலான குணத்தையுடையவளாயிருக்கவேண்டும்.



* உலகரட்சகர் தமது மாதாவின் வயிற்றிலிருக்கும்போது அவருடைய தாயார் தனக்குப் பிறக்கப்போகும் பிள்ளையினது அற்புதக் கிரியைகளையும் அதனால் தனக்குண்டாகும் மகிமையையும் முன்னாக அறிந்ததல்லவோ "என் ஆத்துமா கர்த்தரை மகிமைப்படுத்துகிறது. என் ஆவி என் இரட்சகராகிய தேவனில் களிகூருகிறது.

அவர் தம்முடைய அடிமையின் தாழ்மையைநோக்கிப்பார்த்தார். இதோ! இதுமுதல் எல்லாச் சந்ததிகளும் என்னைப் பாக்கியவதி என்பார்கள். வல்லமையுடையவா மகிமையானவைகளை எனக்குச் செய்தார். அவருடைய நாமம் பரிசுத்தமுள்ளது. அவருடைய இரக்கம் அவருக்குப் பயந்திருக்கிறவர்களுக்குத் தலைமுறை தலைமுறைக்குமுள்ளது, தம்முடைய புயத்திலே பராக்கிரமஞ் செய்தார். இருதய சிந்தையிலே அகந்தையுள்ளவர்களைச் சிதறடித்தார். பலவான்களை ஆசனங்களிலிருந்து தள்ளித் தாழ்மையான



வர்களை உயர்த்தினர். பசியுள்ளவர்களை நன்மைகளினால் நிரப்பி ஐசுவரியமுள்ளவர்களை வெறுமையாய் அனுப்பிவிட்டார். நம்முடைய பிதாக்களுக்கு அவர் சொன்னபடியே ஆபிரகாமுக்கும் அவன் சந்ததிக்கும் என்றென்றைக்கும் இரக்கஞ் செய்ய நினைத்துத் தம்முடைய தாசனுகிய இஸ்ரவேலை ஆதரித்தார்." என்ருள். இவ்வசனங்களை நன்ருய்க் கவனித்து வாசித்துப் பார்க்கின் அவற்றைச் சொன்ன அந்த பரிசுத்த மாதாவின் வயிற்றில் இயேசு என்னுஞ் சிசு பள்ளிகொண்டிருக்கையில் அந்த அம்மாளுக்கு இருந்த தெய்வ பக்தியும், தாழ்மையும், மனமகிழ்ச்சியும் இவ்வளவென்று அறிந்துகொள்வதோடு, தனக்குப் பிறக்கப்போகும் பரிசுத்த பாலகன, "தன்னை மயிர் கத்தரிக்கிறவனுக்கு முன்பாகச் சத்தமிடாதிருக்கிற ஆட்டுக்குட்டி"யைப் போன்ற சாந்தமும், "உன்னை ஒரு கன்னத்தில் அடிக்கிறவனுக்கு மறு கன்னத்தையும் திருப்பிக் கொடு." என்று சொல்லும் பொறுமையும், "ஆவியில் எளிமையுள்ளவர்கள் பாக்கியவான்கள்; பரலோக ராஜ்யம் அவர்களுடையது." என்று சொல்லும் தாழ்மையுமுடையவராயிருந்து, இப்பூமியின் குடிகளை இரக்ஷித்துக் காக்குந் திவ்ய பாலகன் பிறக்

கப் போகிறதென்றும் முன்னமே யறிந்திருந்தாள் என்று விளங்குகின்றதல்லவா? ஆம்! ஒவ்வொரு தாயும் தனக்குப் பிறக்கப் போகும் குழந்தை தனது கர்ப்பத்திலிருக்கும் ஒன்பது மாதங்களில் ஒவ்வொரு நாளும் தான் செய்த கிரியைகளையும், தன் வீட்டில் நடந்த சங்கதிகளையும், தன் மனதிலுண்டான எண்ணங்களையும், தன சரீரத்தினது ஸ்திதியையும் எழுதிவைத்துத் தன் பிள்ளை பிறந்து வளர்ந்தபின் அவனுக்குக் கொடுப்பாளாயின் அதுவே அவனுடைய பிற்கால நிலைமையை யுணர்த்தும் ஜாதகமாகும். வேறெந்த ஜாதகம் பலிக்காமற்போனாலும் இந்தஜாதகம் தவறாது. இது சத்தியம். இது உண்மை. பரீக்ஷித்துப் பார்க்கவும்.

ஒவ்வொரு மனுஷனும் இவ்வுலகத்தி லிருக்கும்போது மோக்ஷத்தையும் நரகத்தையுந் தானே சமைத்து அவற்றின் இன்பதுன்பங்களை அனுபவிக்கிறான். நரகம் நம்மிடத்திலிருக்குமாயின் நாம் எங்கே போனாலும் நமக்கு உபத்திரவமும் துன்பமும் கவலைகளும் உண்டாகும். மோக்ஷம் இருந்தாலோ எப்பொழுதும் ஆனந்த பாக்கியமும் பேரின்பசுகமும் உண்டாகும். வியாதியே நரகம், சுகமே மோக்ஷம். ஒருவனுடைய சரீரத்திலும் ஆத்மாவிலுமிருக்கின்ற துர்க்குணங்களையும் நோய்களையும் நீக்கிவிட்டால் அவனிடத்திலிருக்கும் நரகத்தின் நிலைமையை மாற்றி அவனுக்கு மோக்ஷானந்தத்தை யளிப்பதாகும். நம்மிடம் பிளவை, க்ஷயம் முதலிய ரோகங்களிருப்பின் நாம் எங்கே போனாலும் நோயாகிய நரகத்திலாழ்ந்து போவோம். அப்படியே நம்மிடத்தில் கோபம், மூர்க்கம், பொறாமை, சமுசயம், காமவிகாரம், பேராசைபோன்ற துர்க்குணங்களிருப்பின் நமது மனமே நரகமாகி நம்மை வதைக்கும். மனுஷரை நரகத்திலிருந்து மீட்டு அவர்களுக்கு மோக்ஷத்தை யருளும் ரக்ஷகர் யார்? வியாதியிலும் உபத்திரவத்திலும் நின்று மீட்டு நமக்குச் சுகத்தையும் பேரின்பத்தையும் அளிக்கும் வல்லமை யாருக்கிருக்கிறது? மானிட தேகத்தை நோயினின்றுக் காக்கும் ரக்ஷிப்பின் கிரியையை நிறைவேற்றத் தெய்வம் யாரை நியமித்திருக்கிறார்? பெற்றோரே-விசேஷமாய்த் தாயையே. ஒவ்வொரு மனுஷனது அவயவமும் தன்னுடைய தாயினது சரீரத்தின் ஆரம்பித்து முடிவாகிறது. ஒவ்வொரு மனுஷ தேகத்துக்கும் வேண்டிய உபகரணங்கள் தாயின் ரத்தத்தின் மூலமாகவே வந்து சேர்கின்றன. தாயின் ரத்தத்தில் என்னென்ன வியாதிகள் பதிந்திருக்கின்றனவோ, அவை குழந்தையின் சரீரத்திலுந் தாவும், என்னும் விஷயங்களை நாம் முன்னமே கவனித்திருக்கிறோம். நாம் உற்பவித்த நாள் முதல் பிறக்குங் காலம்வரையில் நம்முடைய தாயின்புத்தியும், இருதயமும், அன்பும், பாசமும், விருப்பவெறுப்

புகளும் எவ்விதமா யிருக்கின்றனவோ அதற்குத் தக்கதாகவே நாம் பிறந்த பின்னும் நம்முடைய எண்ணங்களும், கிரியைகளும், நினைவுகளுமிருக்கும். அப்படியானால் நமது தாயைவிட நம்மை மோக்ஷத்திற்கும் நரகத்திற்கும் ஆளாக்கக்கூடிய சக்தி வேறு யாருக்கிறது? இவ்வுலகத்திற் பிறந்தும் உபாத்திமார், குருக்கள், இரக்ஷகர் மனுஷரை உண்மை, சந்தோஷம், அன்பு, பொறுமை, சாந்தம் முதலிய தன்மையுடையவர்களாக்க முயற்சிக்கிறார்கள். ஆனால் அவர்களெல்லாருமெடுக்கும் பிரயாசத்தைவிட நமது தாயானவள் தனக்குப் பிறக்கப்போகும் குழந்தையின் சௌக்கியத்தை தன் மனதில் எண்ணி ஒன்பது மாதக காலமும் சற்று கவனித்து நடப்பாளாயின அதனாலுண்டாகும் பலனே மிகச் சிறந்ததாகும். உலகத்தில் சமாதானமும் மனுஷர்மேலே பிரியமும உண்டாக்கத்தக்க வல்லமை தாயையன்றி வேறொருவர்க்குமில்லை. அவளே நமக்கு வழியும் சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறாள். தாயினுடைய தன்மையையே சிசு சுதந்தரித்துக்கொள்ளுகிறது. ஒவ்வொரு மனுஷனும் தனது தாயின தன்மையையும் சுத்தத்தையும் தனக்கு ஆடை ஆபரணமாகத் தரித்துக்கொள்ளுகிறான். சுகத்தையும் ஜீவனையும் கொடுக்கத்தக்க இயற்கைப் பிரமாணங்களை யறிந்து அவற்றைக் கைக்கொண்டு நடப்பதால் நமக்குச் சுகமும் ரக்ஷிப்பும், மோக்ஷமும் கிடைக்குமென்றறிவோம். அவ்வியற்கைப பிரமாணங்களை நம்முடைய இருதயத்தில பதித்து மரணத்துக்குத் தப்பும்வழிகளை நமக்குக் காட்டிக்கொடுக்கும்படி தெய்வம் யாரை நியமித்திருக்கிறார்? மனுஷனையல்ல ஸ்திரீயையே, தகப்பனையல்ல தாயையே. தாயின்மேல் இவ்வளவு பொறுப்பான பாரத்தைத் தெய்வம் சுமத்தியிருக்க அதை யறியாமல எத்தனைபேர் மூடத்தனத்தால் மோசம் போகிறார்கள். ஸ்திரீயே! உன் பிள்ளைகளை மரணத்தின் வாயினின்றும் மீட்டு ரக்ஷிக்கும் திறமையைக் கடவுள் உனக்கு அளித்திருக்கிறார். அதை யறிந்து நட, அறியாமல் மோசம் போகாதே. உன் குழந்தையை ரக்ஷிக்கும் வழிகளை யறிந்து உன் சுகத்தையும் பலத்தையும் பேணிக்கொள். அப்பொழுது உன்வீட்டில் ஆசீர்வாதம் தங்கும், உன் குழந்தைகள் நீர்க்கால்களின் ஓரமாய் நடப்பட்ட ஒலிவ மரக்கன்றுகள்போல் ஓங்கி வளருவார்கள். உன் வீட்டிற்குச் சமாதானமும், உன் மனதிற்கு மகிழ்ச்சியும் உண்டாகும். நீ பாக்கியமுள்ள புத்திரரைப் பெற்று உலகத்தாருக்குச் சந்தோஷத்தை யுண்டுபண்ணும நற்செய்தியை யாவர்க்கும் அறிவிப்பாய். "நான் நற்குணத்தி லுருவாகி என் தாய் என்னைப் புண்ணியத்தில் கர்ப்பந் தரித்தால் என்னைப் பரலோகத்திற்குச் சுதந்தரவாளியாக்கத் தக்க வேறொரு ரக்ஷகரும் எனக்கு வேண்டுமோ? ஐயோ! நான் துர்க்குணத்திலுருவாகி என் தாய்

என்னைப் பாவத்தில் கர்ப்பந் தரித்தாள். ஆதலால் நான் நரகத்திற்காளானேன். எங்கே ஓடுவேன்? பாதகன் ஆனேன். தீமை எங்கும் என்னை மூடும். ஆதரிக்க யாரால்கூடும்?” ஸ்திரீயே இதோ உன் குழந்தையின் அங்கலாய்ப்பைப் பார். உன் குழந்தைகளுக்கு மோக்ஷத்தையும் நரகத்தையும் கொடுக்கத் தக்க வல்லமையைத் தெய்வம் உனக்கு அளித்திருக்கிறார், நீ கர்ப்பவதியா யிருக்கும் ஒன்பது மாதமும் பத்திரமாய்ப் பரலோகத்திற்குப் போகும் ஏணியில் ஏறினால் உன் பிள்ளையைப் பரமராஜாவின் சிம்மாசனத்திற்கு ஆளாக்குவாய், தெய்வம் நன்மையினால் உன் வாயைத் திருப்தியாக்கி, கிருபையினாலும் இரக்கங்களினாலும் உன்னை முடிசூட்டுவார், கழுகுக்குச் சமானமாய் உன் வயது திரும்ப வால வயது போலாகும். திரும்பிப் பாராதே, பூலோகமாகிய சோதோமைத் திரும்பிப் பாராதே, திரும்பிப் பார்த்தால் உப்புத் தூணாவாய். பக்தியுடனே பாலனையேந்திப் பரலோக ஏணியில் செல், அப்பொழுது நீ பரமராஜாவைத் தரிசிப்பாய். உன் குழந்தையும் பாக்கியமுள்ளதாகும், அக்கம் பக்கம் உன்மனதைச் செல்லவிட்டு அஜாக்கிரதையாய் உன் காலை நழுவவிடாதே. நழுவினால் நீயும் சாவாய் உன் பிள்ளையும் நரகத்திற்காளாகும். பாவத்தின் சம்பளம் மரணம், பாவியின் முடிவு நரகம். உன் குழந்தைக்கு முதல் ரக்ஷகர் நீயே, ரக்ஷிப்பின் கிரியையை நிறைவேற்ற நீ தவறினால் நரகத்தின் வாயிலிருந்து உன் குழந்தையை மீட்கத் தெய்வந் தாமே ரக்ஷகராக வரவேண்டும். நீ எளிதில் நசுக்கக்கூடிய பிசாசின் சிரத்தை உடைக்க அவர் சிலுவைமரத்தில் தொங்கவேண்டும். “முதற்கோணல் முற்றுங்கோணல்.” ஆரம்பத்தில் எளிதில்முடிக்கக்கூடிய உன் குழந்தையின் சுகத்தையும் நன்மையையுங் கருதாமல் சற்று கவலைத் தாக்ஷியாய் இருந்தால் அவன் பெரியவனான பின்பு அவனுடைய நோய்களைத் தீர்க்க டாக்டர்களும், சன்மார்க்கத்தைப் போதிக்கக் குருவும், நித்திய ஜீவ வழியைப் போதிக்கப் போதகரும், நரகத்திலிருந்து மீட்டு ரக்ஷிக்க ஒரு ரக்ஷகரும் ஏற்பட்ட போதிலும் “ஐயா! நான் நன்மைசெய்ய விரும்புகிறேன், அதில் தீமையுங் கலந்திருக்கின்றதே. என் ஆவி மோக்ஷத்தை நாடுகிறது என் மாமிசமோ உலக இன்பத்தை நாடுகிறதே.” என்று உன் குழந்தையின் உடலுக்கும் மனதுக்கும் ஓயாத போராட்ட முண்டாகிறது. நீ தவளையையும் ஓணானையும் ஒன்றாய்ப் பிணைத்து விடுகிறாய். ஓணான் வேலிக்கிழுக்கிறது. தவளையோ தண்ணீருக்கு இழுக்கிறது. ஆகவே உலக இன்பத்திற்கும் பரலோக இன்பத்திற்கும் பாத்யதை யில்லாதவனாய் இருதோணியில் கால் வைத்தவன்போல் நடுவழியில் நாசமாகிறான். ஸ்திரீயே! இதற்குக் காரணம் யார்? நீயே! உன் பாண்டத்தைச் சுத்தப்படுத்தி உன் வழிக

ளைக் காத்துக்கொள். நீயே உன் பிள்ளையைக் கடவுளொத்தாசையால் சுகத்துடனும் பலத்துடனும் மோக்ஷத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கத் தக்க சுகமான ஜீவவழி.

---

## புருஷன் கடமை.

இவ்வுலகத்தின் கண்ணே உதித்த ஒவ்வொரு மனுஷனும் தான் இவ்வுலகத்தி லிருக்கும்போது பொதுவாக நிறைவேற்ற வேண்டிய சில விஷயங்கள் உண்டு. அவற்றுள் இல்லற வாசியாகி தனது மனதுக்கிசைந்த ஓர் புண்ணியவதியைத் தனது பிராண நாயகியாக ஒப்புக்கொண்டு அவள்மூலமாய் நற்பாலரைப் பெற்று கீர்த்தியுடன் வாழ்வதே விசேஷித்த கருமமாகும்.

மனுஷனைத் தெய்வம் சிருஷ்டித்த நோக்கமும், அவன் இவ்வுலகத்தில் நடத்த வேண்டிய கிருத்தியங்களும் அநேகமிருப்பினும் நாம் இவ்விடத்தில் கவனிக்க வேண்டிய விஷயம்:—இல்லற வாசியாக மனுஷன் நிறைவேற்ற வேண்டிய கிரியைகள் இவையென்றும், அவற்றினுங்கூடத் தனக்குப் புகழ்ச்சியையும் கீர்த்தியையும் நாட்டத்தக்க நற்புதல்வரைப்பெறும் விதமறிந்து அவற்றின்படி நடப்பது அவசியமென்றும் உணர்த்துவதே.

"பொன்னைமறந்தேன் புவிமறந்தேன் புவியினுளவெப் பொருள்கணிச்சை
தன்னைமறந்தேன் தமரோடினைத் தாயைமறந்தேன் தாரமெனு
முன்னைமறந்தே னெனினிலிறந்தே னுண்மைமொழியென் றுறுதிகொண்டு
மென்னைமறவா திருந்திடுவா யின்பக்கடலே யிளவனமே."

என்று ஓர் புருஷன் தன் காதலிக்கு உரைத்த பிரகாரம் இல்வாழ்க்கை யென்னும் இயல்புடைய வான்சகடம் சரியான படி செல்லவேண்டுமெனின் நாயகனும் நாயகியும் ஒருமித்து நடப்பவர்களாயும் ஒருவர்மேலொருவர் அன்பும் பாசமும் மிகுத்தவர்களாயு மிருக்கவேண்டும். ஆதலால் ஒவ்வொரு மனுஷனும், நற்குணம் மிகுத்தவளும், நல்லகுலத்தில் பிறந்தவளும், நோய் நொடியில்லாதவளும், கூடியவரையில் கல்வியிற் றேர்ந்தவளும், தன் மனதுக்கு இசைந்தவளுமான ஸ்திரீயைத் தனக்கு மனையாளாகத் தெரிந்துகொள்வது அவசியம். அதன்பின் தானும் தன் மனையாளுமாய் ஒன்றுசேர்ந்து சகல நற்குணங்களையும் ஆபரணமாகப் பூண்ட ஓர் புதல்வனைப்பெறும் விதத்தை யறிந்து அதன்படி நடந்தால் தெய்வம் அவர்களின் இஷ்டத்தை வாய்க்கச் செய்வார். அவர்களுக்குக் கீர்த்தியும் புகழுமுண்டாகும். ஆதலால் நற்புதல்வரைப் பெற விரும்பும் ஒவ்வொரு மனுஷனும் அதற்குக் காரண




கர்த்தாவாகிய தன் நாயகியைச் சௌக்கியமும் சந்தோஷமு முள்ளவளாக வைப்பதும், தன்பேரி லவளுக்கிருக்கும் அன்பை மென்மேலு மதிகரிக்கச் செய்யும் வழிகளை அறிவதும் மிக அவசியம். ஆதலால் முதலாவது புருஷன் தன் மனைவிக்குச் செய்ய வேண்டிய கடமைகள் இன்னின்ன வென்று எடுத்துக் கூறுமுன், சாதாரணமாய் யாவருக்கும் விளங்கும் இரண்டு விஷயங்களை எடுத்துச் சொல்லுவோம்.

(1) மனுஷர் இவ்வுலகத்தில் உற்பத்தியாவதற்குக் காரணம் பெற்றோரே.

(2) தான் இன்ன இன்ன காலத்தில் இன்ன இன்ன ஸ்திதியிலிருக்கும்போது மட்டுமே கற்பவதியாகி ஒரு பிள்ளையைப் பெறக்கூடும் என்று சொல்லும் உரிமை ஸ்திரீக்கு மட்டுமேயிருக்கிறது.

இவ்விரண்டு விஷயங்களையும் ஸ்தாபிக்கக் கல்வி சாதுர்யம் வேண்டியதில்லை. ஏனெனில்:—அவை ஒவ்வொருவருக்கும் தெளிவாகவும் திட்டமாகவும் தெரியும். ஒரு குழந்தை இவ்வுலகத்தில் பிறப்பதற்குக் காரணம் தெய்வமோ? பெற்றோரோ? தேவன் தான் காரணமென்று சொல்வது ஒருவனை வாளினால் வெட்டிவிட்டு அவனைக் கொன்றது நானல்ல கடவுளே யென்று சொல்வதை யொக்கும். ஒரு ஸ்திரீ இன்ன இன்ன ஸ்திதியிலிருக்கும்பொழுதுதான் அவளுக்குக் குழந்தை பிறக்கவேண்டும், அவளுக்கு இத்தனை குழந்தைகள் தான் பிறக்கவேண்டும் என்றுசொல்லும் பாத்தியதை புருஷனுக்கல்ல, ஸ்திரீக்கே யுண்டு. ஏனெனில், பிரசவவேதனையைத் தன்னால்சகிக்கக்கூடுமோ, பிள்ளைபெறத்தக்க வலிமை தனக்கிருக்கிறதோ, தனது கர்ப்பத்தில் ஓர் சிசு உற்பத்தியாகக்கூடிய விஷயங்களைச் செய்வது சரியோ என்று அறியக்கூடியது புருஷனல்ல ஸ்திரீயே.

"அன்புகொண்டு வந்தனுளி லாவலா யணைந்தநின்
தென்புகொண்ட பேதை கெர்ப்பதியிலவல் வந்தருளள்
முன்புசொன்ன வாசகங்கள் முற்றிலும் மறந்திடின்
துன்புகொண் டிறப்புள்கண்ட பேர்களென்ன சொல்வாரே."

"கொண்டைக்கிசைந்த மலரணிந்து குவளைக்கிசைந்த மையணிந்து
தண்டைக்கிசைந்த நடைநடந்து சருகைபொலிந்த வடமணிந்து
அண்டத்தவர்கள் மயலணிந்து விலைந்து துயரமலைந்தாலு
மண்டைக்கிசையா தெனக்கிசைந்த வன்னைத்தருகி லாகேனே"

ஒருவன் ஓர் ஸ்திரீயை விவாகம் பண்ணினவுடன் அவளை விவாகம் பண்ணியதன் நோக்கம் இன்னதென்று வெளியிடுகிறான். ஸ்திரீயோ தான் தாயாகத்தக்க பருவத்தை யடைந்தபோதிலும் உலகத்தாரெல்லாரும் நீ உன் புருஷனுக்குக் கீழ்ப்படிந்து அவனுக்கு உகந்த மனைவியாக வேண்டுமென்று சொன்னதனாலும், புருஷன் தன்மேல் அன்புகூற வேண்டுமானால் அவனுடைய இச்சைக்கு இணங்கவேண்டும் என்று பலர்கற்பித்ததனாலும் புருஷன் தன் மாமிச இச்சையை நிறைவேற்ற இடங்கொடுக்கிறாள். ஆனால் தான் நினையாத நேரத்தில் அகஸ்மாத்தாய்க் கருக்தரித்து பிரசவ வேதனையாகிய பெரும் உபத்திரவத்தை வருவித்துக் கொள்வது மல்லாமல் தாயென்னும் பெரும் பாரத்தையும் தன் தலைமேற் போட்டுக்கொள்ளுகிறாள்.

"இப்பிறவி தனிற்பிரியா திருந்து சுகங்கொள்வதுபோ லினியெக்காலு
மெப்பிறவியெடுக்கினுநா னுனைக்காத் திருப்பதுமெய்யென் றீரிப்போ
தப்பிதமாயடியன் தனியிருந்தேங்கி யுடல்விடுக்குந் தன்மைகாண
வொப்பினதோவுமதுமன தொருமையிதோ வுவமையிலா துயர்கோமானே.

என்று புலம்புபவளின் ஸ்திதி எப்படி யிருக்கும். உன்னை நேசித்துக் கனப்படுத்தி உன் விருப்பத்தின்படி செய்வே னென்றும், இவ்வுலகத்தில் எனக்கிருக்கும் ஆஸ்தியை யெல்லாம் உனக்கே தத்தம் பண்ணிப் போட்டேனென்றும் வாக்குக் கொடுத்த தனது அருமை நாயகனால் தனக்கு வருத்தமும் துன்பமும் உண்டாகுமென்று கனவிலு மெண்ணி யிருப்பாளோ? இதோ! தாயாக வேண்டுமென்னும் விருப்பமும் அதற்கென்று ஆயத்தமுமில்லாத தன் நேசமனையாளை உபத்திரவத்திற் காளாக்கி விட்டான். தானிருக்கும் ஸ்திதியையும், தான் அனுபவிக்கவேண்டிய கஷ்டத்தையும், மரண இருளின் பள்ளத்தாக்கைத் தாண்டித் தான் கரையேற வேண்டிய திருப்பதையும அவள் நினைக்கும் போது அவள மனம் கொழுந்துவிட்டெரியாதோ? அவள் அங்கமெல்லாம் நடுக்கங் கொள்ளாதோ? தன்னை வருத்தத்துக்காளாக்கின தன் புருஷன்மேல் அன்புமிருக்குமோ? அவளுக்காகக் கவலை

யெடுத்து அவளைக்காப்பாற்றி ஆதரிப்பேன் என்று வாக்குக்கொடுத்த அவன் அவ்வளவு சீக்கிரத்துக் குள்ளாக உபத்திரவத்தை உண்டுபண்ணுவானென்று தன் மனதிலு மெண்ணியிருப்பாளோ?

"துணையென் றிருந்தே னெடுநாளாய்ச் சுகமுமறிந்தேன் றுயர்படுநாள்
பிணையைப்பிரிந்த வன்றிலைநேர் பேதைகலங்கி வாடுவேனோ
இணையில் விஜய னெனச்சிறந்த வின்பக்கடலே யெசமானே
யெனையிக்கால மறந்திருக்கி னூர்வேறென்னை யணைப்பாரே."

"தங்கைநிகர்த்தா ளெவளேனுந் தவத்திலுயர்ந்தா ளெவளேனு
மங்கைரதியா ளவளேனு மனதுவருந்தி மாய்ந்தாலும்
பங்கைப்பெறாத லரிதான பங்கைக்கொடுத்த பரிவோய்நி
னங்கைசுமக்கு மெனக்கொழிந்தா லங்கைக்கடவா ராராமோ."

ஆ! ஆ! புருஷனே! உன் மனைவி உன்னை நேசித்துக் கனப்படுத்த வேண்டுமென்றால் உன் இச்சையை நிறைவேற்றமட்டும் எண்ணாமல் உன் நாயகியின் சித்தத்துக்கு இணங்கி நட. அப்பொழுதுதான் தாயாகக்கூடிய பருவமின்னதென்று அவனைதெரியப்படுத்துவாள். அப்பொழுது பிரசவ வேதனையால் அவளுக்கு உபத்திரவம் உண்டாகாமல் தன் புதல்வனைக் கரங்களிலேந்துங் காலம் எப்போது வருமென்று ஆவலுடன் காத்திருப்பாள். உன்னிடத்திலும் அவளுடைய அன்பு பெருகும். அவளுடைய இருதயம் உன்னைப் போற்றும். ஏனெனில் நீ உன் சுய இச்சையையே பாராமல் அவளுடைய சுகத்தையும் சௌக்கியத்தையுங் கருதி அவள் சித்தத்திற் கிணங்கி நடந்தாய். தன் புருஷனுடைய தூராகிருதமான நடக்கைக்குப் பயப்படுகிற மனதில் அவன்மேல் அன்பும் பாசமும் எப்படி யிருக்கும். தன் மனைவியை உண்மையாய் நேசிக்கும் ஒவ்வொரு புருஷனிடத்திலு மிருக்கும் ஓர் சிறந்த குணம் என்னவெனில்:—தனது ஆண் தன்மையை வெளியாக்கக் கூடிய அவயவங்களில் அவனுக்கிருக்கும் பெருமையே. அவ்வவயங்களின் மூலமாய்த் தனது ஆண் தன்மையைத் தன் நேசமனையாளுக்கு வெளியிடுவான். அவளும் அவனுடைய ஆத்துமாவையும் சரீரத்தையும் தன் முழு இருதயத்தோடும் நேசிப்பாள்.

"விண்ணாட் டவர்புகழ் மண்ணாட்டிறைவ விஜயவுனைக்
கண்ணாரக் கண்டவர் பெண்ணாயின் காமன்கணையழுந்தி
யண்ணாரி ரவினுறங்கா ரெனினுருத்தா யிருந்த
வென்னாற் சகிக்கத்தரமோ பிரிந்துங் கிருப்பதற்கே.[4]

"பதிக்குப்பதியும் பருவமும் ரூபமும் பார்த்திடுபேர்
மதிக்குஞ் சிறப்பளித்திட்ட மன்னாவெனை நீமறக்கின்
துதிக்கு மிரக்கம் வையாமதவேள் கைதொடுகணைக்கும்
மதிக்கும் மிருட்கும் மறைவாயொழிய வகையில்லையே.[5]

"உருவோபகலுன் குழலோவிரா வுயர்வான திங்கள்
திருவாள் வதனம் பாவையுநேத்திரம் செய்யதுப்பே
தருவாயமிர்த மொழிமலை மார்மிவை தான்றருவாய்
வருவாயல தழைப்பாய் மறந்தாலுயிர் வைத்திலனே." என்பாள்.

ஆனால் தன் மனைவி ஆயத்தமில்லாமலிருக்கும்போதும், அவ்விதக் கிரியைகளால் உண்டாகும் முடிவைப்பற்றி அவளுக்குத்திகிலும் நடுக்கமும் பிடித்திருக்கும்போதும் அவளிடத்தில் தன் ஆண்தன்மையைக் காட்டப் புகுவானாயின், அவளுடைய அன்பைச்சம்பாதிப்பதற்குப் பதிலாய்த் தனக்கு வெட்கத்தையும் அவமரியாதையையும் வருவித்துக் கொள்வான். ஸிநேகிதனே! உன் மனையாள் உன்னை நேசித்துக் கனப்படுத்தி உனக்காகக் கவலையெடுக்க வேண்டுமென விரும்புவாயாயின் நீங்கள் கூடிக் கலந்து இன்பங்கொண்டாடுஞ் சமயத்தில் உனக்குத் தெய்வம் கொடுத்திருக்கிற ஆண்மையையும் சத்துவத்தையும் உன் சுய இச்சையை நிறைவேற்றமட்டும் உபயோகிக்காமல் உன் நாயகிக்குச் சுகத்தையும், சந்தோஷத்தையும், சுத்தத்தையும் உண்டுபண்ணக்கூடிய விஷயங்களில் மட்டும் உபயோகிக்கிறதாக அவள் உணரச்செய்.

"எந்தனுட மனதறிந்த பெண்ணேயுன்ற திருவிழியுந்
திருமுகமு மனதில்நிற்ப
வுந்தனை நான்மறப்பதில்லை யூணுறக்கந் தானுமில்லை
யுனை நினைந்து
சிந்தைதனிற் பறந்துவர வெண்ணமுண்டு சிறகில்லை
யாதலினாற் றினமுன்னைப்போற்
சந்தனத்தாற்பட மெழுதிப்பார்த்துப் பார்த்துத் தாமரையி
னீரதுபோற் றளம்புறேனே."

உன்னுடைய முழு சத்துவமும் பலமும் அவளுடைய வஸ்துவே யென்றும் அவளுக்கு இன்பத்தையும் சுகத்தையுங் கொடுக்க---க்கே அவைகளை உபயோகிப்பதாகவுங் காண்பி. அப்பொழுது உன் வீட்டில் மனமகிழ்ச்சியுண்டாகும். மனுஷன் தன் சரீரத்தைத் தன் மனைவியின் சுகத்தை விரும்பிக் கட்டிக்கொள்ளுகிறானென்று ஸ்திரீ அறிவாளாயின் அவனை மகிமைப்படுத்திக் கனப்படுத்துவாள். ஆதலால் உன் மனைவியின் சரீரத்திலும் மனதிலும் எவ்வளவு பலமும் சத்துவமு மிருக்கிறதென்றும், அவள் சுகத்துடன் இவ்வுலகில் இருக்கவேண்டுமானால் எத்தனை பிள்ளைகளைப்பெற்றால் போதும் என்பதையும் அறிந்து உன் மனைவியின் சித்தத்துக்கு இணங்கி நட.

தன் சித்தத்துக்கு இணங்கித் தான் ஆயத்தமாயிருக்கும்போது தன் புருஷன் நடப்பிக்கும லீலைகளினால் இன்பமடைந்து

அவனிடத்தில் அன்பையும், பாசத்தையும், கனத்தையுங் காட்டுகின்ற நாயகிக்கு, தான் ஆயத்தமில்லாமலிருக்கும் பொழுதும், பலஹீன முதலியவற்றால் குழந்தை பெற விருப்பமற்றிருக்கும் பொழுதும் புருஷன் தன் இச்சையைமட்டும் நிறைவேற்றக்கருதி அதே லீலைகளை நடப்பிப்பதால் அவன்மேல் வெறுப்பும், அருவருப்பு முண்டாகுமென்று கவனித்தோம். இனிமேல் நாயகியின் விருப்பத்திற்கு விரோதமாய்ச் செய்த லீலைகளால் உற்பத்தியான குழந்தையினது தன்மை எப்படியிருக்குமென்று கவனிப்போம்.

சிசுவானது தாய் வயிற்றிலிருக்கும்போது அதனுடைய அவயவத்திற்கு வேண்டிய உபகரணங்கள் தாயின் சரீர முழுவதும் ஊடுருவிச் செல்லும் ரத்தத்தின் மூலமாய் வருகின்றன வென்றும் தாயின் சரீரமும் ஆத்மாவும் எந்தெந்தக் காலத்தில் என்னென்ன ஸ்திதியிலிருக்கின்றனவோ அந்த நிலைமை அக்காலத்தில சரீரத்தை ஊடுருவிச் செல்லும் ரத்தத்தில் பதிகின்றது என்றும் முன்னமே கூறியிருக்கிறோம். சொற்பகாலத்தில் தாய்க்கு நேரிடும் மாறுதல்களால் அவளுக்குப் பிறக்கும் குழந்தைகள் ஆயுள் பரியந்தம் அனுபவிக்கவேண்டிய நடத்தைகளும் தன்மைகளும் உண்டாகின்றன. நாயகனும் நாயகியும் ஒருமித்துக் கலக்கும் பொழுது அவர்களுக்கிருக்கும் சுகவீனத்தையும் பலவீனத்தை அந்த க்ஷணத்தி லுற்பத்தியாகுங் குழந்தைக்குக் கொடுப்பதால் அது உலகத்தில் வாழுங் காலமெல்லாம் நோயினாலும் பலவீனத்தினாலும் உபத்திரவப்படுவதுண்டு. ஸ்திரீ புருஷாள் தாங்களற்பமா யெண்ணி நடப்பிக்குங் கிரிகைகளிலிருந்து எவ்வளவு பிரமாண்டமான விஷயங்கள் வந்து நேரும் என்பதைக் கவனிக்காமல் தாங்களெவ்வித நோயிலமிழ்ந்திருந்தாலும் வேறெந்த ஸ்திதியிலிருந்தாலும் தங்கள் மாமிச இச்சையை நிறைவேற்றுவதே பெரிய காரியமென்றெண்ணி முன்பின் யோசிக்காமல் சற்றுநேரம இன்பத்தை அனுபவிக்கின்றார்கள். சில சமயங்களில் ஸ்திரீயின் விருப்பத்திற்கு நேர்விரோதமாகவே புருஷன் பலவந்தம் பண்ணித் தன் காமவிகாரத்தைத் தீர்க்கிறான். அநேக ஸ்திரீகளுக்குத் தங்கள் பலவீனகாலத்தில் ஒரு சிசு உற்பத்தியாகி அதனால தானும் தன் குழந்தையும் நீடூழி உபத்திரவப்படுவதைவிட அற்ப நிமிஷ இன்பங்களை நீக்க வேண்டுமென்று அதிக விருப்பமிருக்கும். ஆனால் புருஷரோ தாங்கள் செய்யுங் கிரிகைகளிலிருந்து உற்பத்தியாகும் குழந்தைகளின் நன்மையைச் சற்றுங் கவனிக்கிறதில்லை. பிள்ளையென்ன பிள்ளை. "ஜலவாதைக்கொருபிள்ளை, மலவாதைக்கொரு பிள்ளை." அதை யெல்லாம கவனித்துக்கொண்டு நடக்க யாரால் முடியும்? எட்டிச் சுரைக்காய் கறிக்காகுமா? என்று அநேகர் மிக இகழ்ச்சியாய்ப் பேசுவதுண்டு. மேலும் மற்றவர்கள் தங்களுக்கு எவ்வளவாய்ப் புத்தி போதித்தாலும் அவற்றிற்குச் செவி

தொடாமலும், தன் ஆத்மா சரீரத்தினது ஸ்திதியைக் கவனிக்காமலும், தான் பசியாயிருக்கும்பொழுதும், உணவுண்ட வுடனேயும் வேலைசெய்து சரீரம் அலுத்திருக்கும் பொழுதும், அதிக யோசனையினாலும் எண்ணத்தினாலும் மூளையின் சக்தி குறைந்திருக்கும் பொழுதும், தன் மனைவி நோயினாலும் அல்லது மனக்கவலை விசாரத்தினாலும் பலம் குறைந்து சக்தியற்றவளாயிருக்கும்போதும், அவனுக்குக் காமம் மிஞ்சி தனது சரீர இச்சையை மட்டும் நிறைவேற்றுவதே அவன் கருத்தாயிருக்கலாம். ஸ்திரீ தான் சக்தியற்றவளாயிருக்கிறதை யறிந்து பிள்ளைப்பேற்றை விரும்பாவிடினும் தன் கணவனுக்குக் கீழ்ப்படியவேண்டியது தன் கடமை என்றெண்ணுவதனாலும், தான் அவன் சித்தத்துக் கிணங்காவிடில் அவன் சோரம்போய் பரஸ்திரீகளின்மேல் மனம் வைப்பான் என்னும் பயத்தினாலும் அவனுக்கெதிர் பேசாமல் அடிக்கப்படும்படி கொண்டுபோகப்படும் ஆட்டுக்குட்டியைப்போல் தனக்கு நேரிடும் துன்பத்தையும் தன் பிள்ளையின் பின்னிலைமையையும் மறந்து தன் கணவனிச்சைக் கிணங்குகிறாள். அதனால் கருத்தரித்து ஓர் குழந்தை உற்பத்தியாகிறது. அக்குழந்தைக்குப் பலனைக்கொடுக்கத் தக்க சக்தி தாய்க்கில்லை. அப்பலவீனத்தி லுற்பத்தியாகி விசனமும் கவலையுமுள்ள சரீரத்தில் வருகிறது. ஆ! அதின் பிறப்பு எப்படி யிருக்கும்? அதன் முடிவென்ன? ஸ்திரீ புருஷருக்கு வேண்டிய மனோசக்தியும் சுறுசுறுப்புமற்ற ஓர் பேதை மைந்தன அல்லது பைத்தியக்காரன் பிறக்கிறான். இல்லாவிடில் கைகால முடமான சப்பாணிப் பிள்ளைகள் பிறக்கின்றன. ஏனெனில், அக்குழந்தைகளின் அவயவத்திற்கு வேண்டிய உபகரணங்களும், சக்தியும், மனதிலும் சரீரத்திலும் நொந்துபோயிருக்கும் தாயினிடத்திலில்லை. நிலம் கொழுமையா யிருந்தா லல்லவோ அதிலுண்டாகும் விருக்ஷங்கள் செழித்து வளரும். வறண்ட கற்பாறை நிலத்திலுண்டாகும விருக்ஷஙகள் சுருண்டு குறுகித்தான்போகும். தன சரீரத்தைத் தூக்கிக்கொண்டு அங்குமிங்கும் நடந்து தன் வீட்டுவேலையை நன்றாய்ப் பார்க்கத்தக்க சகதியற்றுக் கட்டிலும் படுக்கையுமாய்க் கிடக்கும் எத்தனையோ ஸ்திரீகள் கர்ப்பவதிகளாகிறார்கள். தன வீட்டுவேலை செய்யச் சக்தியற்றவளுக்குப் பலமும் சுகமுமுள்ள பிள்ளையைப்பெறும் சக்தி எங்கிருந்துவரும். ஆதலால ஸ்திரீயானவள் தன்னிடத்திலில்லாத பலத்தை எங்கிருந்து கொண்டு வருவாள்? ஸ்திரீயானவள் தனனிடததிலிருக்கும ஜீவாதாரமாகிய சத்துக்களை யெல்லாம ஒன்று சேர்த்துத் திரட்டி ஓரே யிடத்தில் செலுத்துஞ் சமயம் கருத்தரிக்கும் நிமிஷமே. சக்கில சுரோணிதத்தைத தன் பொறுப்பில் ஏற்றுக்கொண்டு ஓர் புது ஜீவனைச் சிருஷ்டிக்கப் போகும் அந்த நிமிஷத்தில் அவள் முழுபபலமும் அவள் சரீரததின் சத்துக்களும் ஒனறாய்த்திரண்டு ஜீவோற்பத்தியாகிய அருந் தொழிலைச் செய்ய ஆரம்பிக்கின்றன.

அந்நிமிஷத்தில்தான் அவளுடைய சரீரமும் ஆத்மாவும் சந்தோஷமும் பலமும் சௌக்கியமுமுள்ளவைகளாயும், சகல சம்பூரணங்களும் நிறைந்தவைகளாயு மிருக்க வேண்டும். அந்நிமிஷத்தில் அவள் மனதில் என்ன சாயல் பதிகின்றதோ அவ்விதமாகவே அக்குழந்தையின் ரூபமும் அழகும் உண்டாகும். ஸ்திரீயானவள் வேதனையினாலும் மனக்கவலையினாலும் தளர்ச்சியடைந்திருக்கும் பொழுதும், புருஷனுடைய பலமும் ஆவியும் பல காரணங்களால் களைத்திருக்கும்பொழுதும் உற்பத்தியாகும் குழந்தையின் ஸ்திதி எப்படி யிருக்கும்? புருஷன் தன் ஆண்மையையும் பலனையும் தன் பிள்ளைக்குக் கொடுப்பதற்குப் பதிலாய் அச்சிசு உற்பத்தியாகும் காலத்தில் தனக்கிருந்த களைப்பையும் பலவீனத்தையும் அதற்குக் கொடுக்கிறான் அதனால் மந்தம் பிடித்த அல்லது பைத்தியமான பிள்ளை பிறக்கிறது. தன் முழுப்பலத்தையும் மற்றவேலைகளில் செலவழித்துப் போட்டு மிகுதியா யிருக்கும் பலமற்ற ஆவியைத் தன் பிள்ளைக்குக் கொடுக்கிறான். தன் பிள்ளை நன்றாயிருக்க வேண்டுமே, அதற்குப் புத்திக் கூர்மையும் பலமுமுண்டாக வேண்டுமே என்னும் எண்ணம் அவன் மனதில் படுகிறதே யில்லை. அவனுக்கு வேண்டியதெல்லாம் தன்னிச்சை நிறைவேற வேண்டுமென்பதே. ஆதலால் தன் குழந்தையின் நன்மையைக் கருதி, கடினமான வேலையைச் செய்வதாலும், சோர்வை உண்டுபண்ணும் இன்பங்களினாலும், தன் சுகத்தைக் கெடுத்துக் கொள்ளாமல், அவற்றை நீக்குவதற்குப் பதிலாய்த் தனது சிற்றின்பமே பெரிதென்றெண்ணி இராவெல்லாம் தூக்கமற்று நாடகம் பார்ப்பதனாலும், லாகிரி உண்டுபண்ணுந்தகைய வஸ்துக்களைச் சாப்பிடுவதனாலும், ஸ்திரீ லோலனாய்த் திரிவதனாலும் தன் பலத்தைக் கெடுத்துக் கொள்வதுமல்லாமல், தனது ஞாபக சக்தியும் புத்திக்கூர்மையும் மழுங்கிப்போயத் தன் வேலையைத் திறமையோடு நடத்தத் தக்க சக்தியற்றவனாயும் விடுகிறான். இப்படி யிருக்குந் தருவாயில் ஓர் குழந்தை அவனுக்குப் பிறக்கிறது. புருஷனே! அந்தக் குழந்தையின் ஸ்திதி எப்படி யிருக்கும்? சாதாரணமாய்த் தான் எவ்வளவு பலமும் சௌக்கியமுமுள்ளவனா யிருந்தபோதிலும், அக்குழந்தை உற்பத்தியாகுங் காலத்தில் அவனுக்கிருந்த நோயையும் களைப்பையும் பலவீனத்தையும் தன் பிள்ளை உலகத்திலிருக்குங் காலமெல்லாம் அனுபவிக்க வேண்டிய நித்திய சுதந்தரமாகக் கொடுக்கிறான். இதைவிடத் தகப்பன் தன் பிள்ளைக்குச் செய்யக் கூடிய அக்கிரமம் வேறு உண்டோ? இதைவிடப் பெரிய தோஷமும் அவனால் செய்ய முடியுமோ! ஐயோ! அவனுக்குப் பிறந்த குழந்தை உயிரிருந்தும் சக்தியற்ற நடைப்பிணமாகிறதே. அந்தக் குழந்தைக்கு உண்டாயிருக்கும் சரீரம், இவ்வுலகமாகிய சிறைச்சாலையில் அதைக் கட்டிப்போடும் விலங்குக்கொப்பாகுமே. அதற்கு இவ்வுலகத்தில் சந்தோஷமும் மகிழ்ச்சியுமுண்டோ? ஆ!

அப்பிள்ளை பிறப்பதைவிடப் பிறவாதிருந்தால் நலமாகும். ஆதலால் ஒவ்வொரு மனுஷனும் இவ்வுலகத்திலிருக்குங் காலத்தில் தன் முழுப் பலத்தையும் சௌக்கியத்தையும் காட்டத்தக்க சமயம் சிசு உற்பத்தியாகும் அந்த நிமிஷமே என்பதை யோசித்து ஒழுகவேண்டும்.

பந்தய ஓட்டத்திற்கென்று தங்களை ஆயத்தப்படுத்திக்கொள்ளும் மனுஷர் அதற்காகக் குறித்த தினத்திற்கு அதிக காலத்திற்கு முன் நல்ல உணவுகளை உண்டு, நற்பானங்களைப் பருகி, அக்கம் பக்கம் தங்கள் மனதையும் பலத்தையும் செல்லவிடாமல், நாளதோறும் தங்கள் சரீரத்தைக் காப்பாற்றிக், குறித்த நேரத்தில் தங்கள் முழுத்திறமையையுங் காட்டுகிறார்கள். இவைகளெல்லாம் எதன் பொருட்டு? ஒருவேளை சில வெள்ளிக்காசுகள் பரிசு கிடைக்கும் அல்லது ஜனங்களெல்லாரும் இன்ன ஊரில் இன்னான் அதிக பலசாலியென்று மெச்சிப் பேசிக்கொள்வார்கள். இந்த அற்பப் புகழ்ச்சியைச் சம்பாதிக்க ஒரு மனுஷன் அவ்வளவு ஆயத்தம் பண்ணிக்கொள்ளும்போது, சிருஷ்டிகர்த்தா "வெளிச்சமுண்டாகக்கடவது" என்று நினைக்க வெளிச்சமுண்டானதுபோல் ஒரு சிசு உண்டாகக்கடவது என்று நீ நினைக்க அதிலிருந்து ஓர் மனுஷன் உற்பத்தியாகி உனக்குப் புகழ்ச்சியையும் கீர்த்தியையும் உண்டுபண்ண விரும்புவாயாயின் நீ உன்னை எவ்வளவாய்க் கட்டிக் காத்துக்கொள்ள வேண்டும். ஓர் புரியாத ஜீவனை உற்பத்தியாக்குங் காலத்தை முன்னமே குறிப்பிட்டு நாயகனும் நாயகியும் அதற்கென்று தங்கள் முழு ஆத்துமாவையும் சரீரத்தையும் முன்னமே ஆயத்தப்படுத்தி, குறித்தநேரத்தில் தங்கள் முழு ஆசையையும் அன்பையும் பலத்தையும் வெளிப்படுத்திச் செய்யும் சம்போகத்தினால் உண்டாகும் பிள்ளை ஆசீர்வதிக்கப்பட்டதாயும் சகல பாக்கியங்களும் நிறைந்ததாயும் தீர்க்க ஆயுள் உள்ளதாயுமிருக்கும். ஏனெனில் குறிப்பிட்ட காலத்தில் கூடிய ஆயத்தத்துடன் கலப்பதால் தங்கள் குழந்தை இன்னின்ன குணங்களையுள்ளதாயும், சௌக்கியமும், புத்தி கூர்மையுமுள்ளதாயும் இருக்க வேண்டுமென்று முன்னமே தங்கள் மனதிலெண்ணி தெய்வத்தை நோக்கிப் பயபக்தியுடன் பணிந்து தம சித்தத்தின்படி ஒரு குழந்தையைக் கொடுக்கும்படி அவரை நோக்கி வேண்டிக்கொள்ளலாம். அப்பொழுது தெய்வமும் அவர்கள் விருப்பத்தை வாய்க்கச் செய்வார்.

சித்திரம் வரைகிறவன் தான் இன்னின்ன ரூபத்தை வரைய வேண்டுமென்று தன் மனதில் முன்னமே யோசித்து வைத்து அதற்கு வேண்டிய கருவிகளையெல்லாம் ஆயத்தப்படுத்தி, அதன

பின் வரையத் தொடங்குவான். அப்பொழுது அவன் மனதி லிருக்குஞ் சொரூபத்தைத் தன் கையின் மூலமாய்ப் பலகை அல்லது கடுதாசியில் பதிந்து விடுவான். அப்பொழுது உலகத்தார் அவனை மெச்சி அவனைச் சித்திர மெழுதுவதில் பாண்டித்திய முடையவன் எனப் புகழ்வார்கள். அப்படி முன்னமே தன் மனதில் ஓர் சொரூபத்தைக் குறிப்பித்து வைக்காமல், ஏதோதானே வென்று வரையத் தொடங்குகிறவன் கால், கை முதலிய அவயவங்களின் அளவுப் பிரமாணந் தப்பி அவலக்ஷணமான படத்தை எழுதுவான். தப்பித் தவறி அதிகப் பிரயாசத்தால் சற்று நல்ல படத்தை வரைந்தபோதிலும் முன்னமே தன மனதில் குறிப்பிட்ட படத்தை வரைகிறவனுக்கு நிகராகமாட்டான்.

அப்படியே ஓர் வீடு கட்டத் தொடங்குகிறவனும் தான் கட்டப் போகும் வீட்டிற்கு முன்னதாக மாதிரி உருவப்படம் அமைத்து அதன்பிரமாணம், அளவு, சாயை, செல்லுஞ் செலவு இன்னதென்று முன்னமே நிர்மானித்து, அதற்கு வேண்டிய செங்கல், சுண்ணாம்பு, மாதிரிகள், ஓடுகள் முதலியவற்றைமுன்னமே சேகரித்து ஆயத்தப்படுத்திக்கொண்டு வீடு கட்டத் தொடங்குவான். அப்படி முன்னமே ஆயத்தப்படுத்தாமல் செய்பவன் ஒரு சுவரை கட்டுவான். அதன்பின் இதில் வழியிருந்தால் நலமா யிருக்குமென்று கட்டியசுவரை இடிப்பான். பின்னும் சிறிதுநேரத்திற்குப் பின் வழியைவிட ஜன்னலே உத்தமமென்று திரும்பக் கட்டத்தொடங்குவான். இவ்விதமாய் அஸதிபாரம் போடுமுன் சொற்பசிரத்தை எடுத்தால் மிக எளிதில் முடியக்கூடிய அநேக விஷயங்களை முன் யோசிக்காமல் தொடங்குவதனாலே கஷ்டமும் நஷ்டமும் மனக் கவலையுமுண்டாகும். ஆதலால் இவ்வுலகத்தில் மனுஷன் செவ்வையாகவும் பெயர் நிற்கத்தக்கதாகவும் செய்ய விரும்பும் ஒவ்வொரு வேலையும் முன்னமே மனதிற் குறிப்பிடப்பட்டதாயும் ஆயத்தம் பண்ணப்பட்டதாயு மிருக்க வேண்டும். அப்படியிருக்க ஓர் துளி நீரை உலகமெல்லாம் நடுங்கி வணங்கத்தக்க ஓர் மனுஷனைச் சிருஷடிக்குந் தொழில் மிக எளிதோ? ஒரு அற்ப காரியத்தைச் செய்துமுடிக்க முன்னமே இவ்வளவு ஆயத்தப்படவேண்டுமென்றால் உலகத்திலுள்ள சகல தொழில்களிலும் அரியதும் மேன்மையும் மகிமையும் பொருந்தியதுமான ஒரு ஆத்துமாவும் சரீரமுமுள்ள மனுஷனைச் சிருஷ்டிக்குந் தொழிலுக்கு எவ்வளவு ஆயத்தமும் முன் யோசனையும் வேண்டும்.

ஓர் குயவன் கையில் ஓர்பிடிக் களிமண்ணைக் கொடுத்தால அவனதைச் சட்டியாகவேனும், பானையாகவேனும், குடமாகவேனும், அல்லது மனுஷர் வணங்கும் காளியம்மன், பிடாரி, வேறெ வழிபடும் உருவம் முதலிய சொரூபங்களாகவேனும் தன் மனம்

போன போக்கின்படி செய்வான். அதைச் சட்டியாகச் செய்தால் ஏழைகள் அதைத் தாங்கள் சாப்பிடும் பாத்திரமாக்கி எச்சலாக்குவார்கள். பானையாகச் செய்தால் அடுப்பில் வைத்து நெருப்பு மூட்டிச் சோறு சமைக்கும் பாத்திரமாக்குவார்கள். அது கரியடைந்து போகும். குடமாகச் செய்தால் அதை அடுப்பேற்றிக் கரியாக்காமல் சுத்தமான ஸ்தானத்தில் வைத்துப் பெண்கள் தங்கள் தலைகளிலும் இடுப்புகளிலும் எடுத்துக் கொண்டு திரியும் பாத்திரமாகும். ஆனால் காளியம்மன், பிடாரி அல்லது வேறே வழிபடும் உருவம் சிருஷ்டித்தால் ஜனங்கள் அதன் பக்கத்தில் போவதற்கஞ்சி பூமாலை சூட்டி இரவும் பகலுமதற்கு முன் பணிந்து நமஸ்காரஞ் செய்வார்கள்.



காளியம்மன்.

பெற்றோராக விரும்புவோரே! இதோ உங்களிடத்தில் ஒர் தளிரீரைக் கொடுத்து அதை உங்களிஷ்டத்திற்கு ஒப்புவிக்கின்றார். அதை மூடனாகவோ, பைத்தியக்காரனாகவோ, அங்கஹீனமும் அவலட்சணமுமுள்ளவனாகவோ, அல்லது வேறெந்த மனுஷனாகவோ சிருஷ்டிப்பது உங்கள் சித்தம். நாயகனும் நாயகியும் ஒன்றுசேர்ந்து நல்ல காலத்தில் ஆயத்தமுள்ளவர்களாய் இவ்வரிய தொழிலை முடிக்கவேண்டும். தங்களுக்குப் பிறக்குங் குழந்தையை மடையனாய் அல்லது சமுசாரியாய் அல்லது சகல ஞானங்களைக் கற்கும் சாஸ்திரியாய் அல்லது உலகத்தை நடுங்கச் செய்யும் ஓர் வீரனாய் அல்லது ராஜ்ஜியத்தை ஆளும் அரசனாய்ச் சிருஷ்டிக்கும் வல்லமையைத் தெய்வம் உங்களுக்குக் கொடுத்திருக்கிறார். உங்களுக்குக் கொடுக்கப்பட்ட தாலந்தை ஜாக்கிரதையுடன் உபயோகிப்பீர்களாயின் உங்களுக்கு நல் வாழ்வும் நற்கீர்த்தியுமுண்டாகும்.

“நெய்யால் விளக்கெரித்து நீண்ட தவம் புரிந்து பெற்ற பிள்ளை.” என்று உலகத்தார் சாதாரணமாய்ச் சொல்லிக்கொள்வதன் கருத்தென்ன? இன்னின்ன குணாதிசயமுடையதாகவும்

இன்னின்ன ரூபலாவண்ணியம் பொருந்தியதாகவும் தங்களுக்கு ஓர் மைந்தன் பிறக்க வேண்டுமென்று முன்னமே தங்கள் மனதில் தீர்மானித்துத் தெய்வத்தை நோக்கிப் பிரார்த்தித்து உண்டான பிள்ளை என்று அர்த்தம். அவ்விதமாய்த் தவஞ்செய்து கூடிய ஆற்றலுடன் பெறும் பிள்ளைக்கு ஆயுள் குறைவுண்டோ? அழகு குன்றியிருக்குமோ? அங்கத்தில் பழுதுண்டோ? தெய்வ கடாக்ஷமும் கிடைக்காமற் போகுமோ? தமக்கு உதவி செய்வோர்க்குத் தெய்வம் தானும் உதவி செய்யுமே. நாம் படும் பிரயாசத்திற்குத் தக்கதாய்க் கடவுள் பலனளிக்காமல் விடார். என்றும் பதினாறு வயதுள்ள மார்க்கண்டனைப் பெற விரும்புவோர் எவ்வளவு தவம் புரியவேண்டும். பிள்ளை வேண்டுமென்னும் ஆசையால் இரவும் பகலும் சொர்ப்பனத்திலுங்கூட அவர்கள் மனதில் சிசுவின் ரூபம் தோன்றாத நேரமுண்டோ? எவ்வளவு ஆயத்தமும் சுத்தமுமுள்ளோராய் அவனைப்பெற்றோர் தெய்வத்தைப் பிரார்த்தித் திருக்கவேண்டும்! பிள்ளை வேண்டுமென்று தவம் புரிவோர் சௌந்தரியமுள்ள பிள்ளைகளைப் பார்த்தவுடன் இவ்வித ரூபலாவண்ணியம் பொருந்திய குழந்தையைத் தெய்வம் நமக்குக் கொடுக்க மாட்டாராவென்று அடிக்கடி மனதில் எண்ணுமலிருப்பார்களோ? தவம் புரிவோர் தங்கள் மாமிச இச்சையைமட்டும் நிறைவேற்றக் கருதி அடிக்கடி சம்போகமுஞ் செய்வார்களோ? அப்படி மிதமிஞ்சிய சம்போகத்தால் தப்பித் தவறிப் பிறந்த பிள்ளை தீர்க்க ஆயுளும் யௌவனமும் பொருந்தி யிருப்பானோ? எமனை வெல்லத் தக்க புத்திக் கூர்மையும் தெய்வத்தையும் தன் வசப்படுத்தித் தன் இஷ்டத்தை நிறைவேற்றத் தக்க சக்தியுமுடைய புத்திரன் தங்கள் மாமிச இச்சையைமட்டும் நிறைவேற்றக் கருதி ஏனோதானோ வென்று கிரியைகள் செய்யும் பெற்றோர்க்குப் பிறப்பானோ? ஆகா! இந்த ஏனோதானோ செய்கைகளால் பிறக்கும் பிள்ளைகள் "அன்னையும் பிதாவு முன்னறி தெய்வ"மென்று தங்கள் பெற்றோரை வணங்கிக் கனப்படுத்த இடமுமுண்டோ? அவர்கள் இவ்வுலகத்திலிருக்குங் காலமெல்லாம் நோயினாலும் பலவீனத்தினாலும் அழுந்தும்பொழுது தங்களை உபத்திரவத்திற்கு ஆளாக்கின பெற்றோரைச் சபித்துத் தூஷிப்பது நியாயமன்றோ? அவ்விதமாகப் பிறக்கும் பாலகன் வயது வந்து சுயபுத்தியும் பகுத்தறிவுமுள்ளவனானவுடன் தனக்கிருக்குங் குறைவுகளைக் கண்டறிந்து வெட்கத்துடன் தலை கவிழ்ந்து உலகத்தார் முகத்தைப் பார்க்க ஆசையற்றுத் திரிவது சகஜமாகும். ஏனெனில் அவன் சிற்றின்பத்திலும் உபத்திரவத்திலும் உற்பத்தியாகிப் பிறந்தான். தாய் குழந்தை பெற விருப்பமற்றவளாய்த் தன் புருஷனை நோக்கிக் கெஞ்சி மன்றாடித் தன் உபத்திரவத்தை வெளியிட்டிருப்பாள். தகப்பனோ

மிருகம்போல தன் காமமே பெரிதென்றெண்ணிக் கட்டாயப்படுத்தி யிருப்பான். தாயினது வருத்தமும் தகப்பனது சிற்றின்பமும் சேர்ந்து ஒரு குழந்தை யுண்டாயிற்று. ஆதலால் அதற்குச் சிற்றின்பத்தில் மிகப் பிரீதி. ஆனால் தாயின் நோயும் மனோவருத்தமும் சஞ்சலமும் வேறொரு பக்கத்தில் அவனை வதைக்கின்றன. ஆதலால் சிற்றின்பமும் உபத்திரவமும் சேர்ந்து அதிக உபத்திரவமுண்டாக்குகின்றன. அக்குழந்தை உற்பத்தியாகும்பொழுது அதைப் பெற்றோர்க்கு மாம்ச இச்சையே யன்றி வேறிச்சை யிருந்ததில்லை. ஆதலால் அது இருட்டு வீட்டிற்பிறந்த ஒரு குருட்டு எருமையா யிருப்பது சரியே. ஆனால் புருஷனே! உன் ஸ்திரீயின் ஸ்திதியை அறிந்து அவள் பிள்ளையுண்டாக ஆயத்தமாய் விருப்பமுற்றிருக்குங் காலத்தில் இருவரும் ஒருமித்துக் குறித்த நேரத்தில் கூடிச் சுகிப்பீர்களாயின உங்களுக்குப் பரமானந்தமும் பேரின்ப சுகமுமுண்டாகும். "உன் மனைவி உன் வீட்டோரங்களில் கனிதரும் திராட்சக கொடியைப்போலிருப்பாள். உன் பிள்ளைகள் உன்பந்தியைச் சுற்றிலும் ஒலிவமரக்கன்றுகள் போலிருக்கும். உனக்குப் பாக்கியமும் நன்மையுமுண்டா யிருக்கும்."

## காதலன்.

"பழகப்பழகப் பிரியாளைப் பவளஞ்சிறந்த விதழாளைத்
தழுவத்தழுவக் குழையாளைச் சலியாவின்பந் தருவாளை
இளகித்தருமம் புரிவாளை யென்னெஞ்சுள்ளே யுறைவாளைக்
கல்விக்கினிய செந்தேனைக் கண்போல் பாவிப்பேனானே."

## காதலி.

"பாலோதேனோ முப்பழஞ்சேர் பாகோ வாகாமுனதுமொழி
வேலோசேலோ விழிகளுயர் விண்ணின் மதியோ வதனமென
நாலாவகையும் புகன்றுரைக்கு நண்பாணின்பா லெனைத்தந்தேன்
மேலாம்பாக்யந் தந்தென்னை மீட்பதுவு முன்கடனே."

## காதலன்.

"அன்னநடையை யிகழ்நடையா யமிர்தவசன மெனவுடையாய்
மின்னலொளிபோ லிடையுடையாய் விண்ணின்மதிநேர் முகமுடையாய்
தின்னுங்குருவைத் தொழுதேத்தும் தோகாய்மயிலின் வனப்பிருந்த
வுன்னைநினைந்து வுறுகுமெனக் குயுதிரவந் துதியாயோ."

என்று அந்யோன்ய அன்புபாராட்டும் புருஷ பாவையர் இல்லற தருமம் நடத்தத் தகுந்தவராவர்.

குழந்தை பிறந்தபின் அது பள்ளிக்கூடத்திற்குப் போகுமட்டும் தாயின் பராமரிப்பினாலும் நடத்துதலினாலும் அதற்குண்டாகும் நன்மை அனந்தமென்று சொல்லப்படும். அப்படியானால் அதன் அவயவங்களெல்லாம் தன் தாயின் வயிற்றில் உருவாகிக் கொண்டிருக்கும் பொழுது தாயினால் அதற்குண்டாகக் கூடிய நன்மை தீமைகளை இல்லையென்று யாரால் சொல்லக்கூடும்? ஒவ்வொரு மனுஷனது சரீரமும் ஆத்துமாவின் தன்மைகளும் சௌக்கியா சௌக்கியங்களும் நன்மை தீமையும் தன் மாதாவின் வயிற்றில் மதலையாயிருக்கும்போதே நியமிக்கப்படுகின்றன. தாய்க்கு எந்தெந்த விஷயங்கள் சௌக்கியா சௌக்கியத்தையும் இன்ப துன்பத்தையும் உண்டாக்குகின்றனவோ அவையெல்லாம் அத்தாயின் வயிற்றிலுருவாகும் சிசுவின் அவயவங்களிற் பதிந்துவிடுகின்றன. ஆகலால் தாய் சற்றுநேரம் அனுபவிக்கும் இன்ப துன்பங்கள் அவளுக்குப் பிறக்குங் குழந்தை உயிரோடிருக்குங் காலமெல்லாம் அதனிடத்தில் நிலைத்திருக்கும். தாயானவள் பிள்ளை பெற ஆயத்தமும் விருப்பமுமற்றவளாயிருக்கும்பொழுது அவளைக் கர்ப்பவதியாக்குவதால் அவளுக்கிருக்கும் வெறுப்பும் துன்பமும் கொஞ்சமல்ல. ஆனால் அவளுக்குப் பிறக்குங் குழந்தைக்கோ எப்பொழுதும் நீங்காத பெரும உபத்திரவம் உண்டாகின்றன. தான் வெறுப்புற்றிருக்குங் காலையில் கர்ப்பவதியாகிப் பெறும் பிள்ளையின்மேல் தாய்க்கு என்ன பாசமிருக்கும். அது ஜனிக்கும்போது அவளுக்கு வெறுப்புண்டாயிருந்தது. அது தன் வயிற்றிலிருக்கும்போது அவளுக்குப் பயமுந் திகிலுமுண்டாகின்றன. அது உற்பத்தியான நாள்முதல் தாய்க்கு அன்பும் பாசமும் உருக்கமு முண்டாகி அதற்கு உயிர் கொடுத்துக்கொண்டு வருவதற்குப் பதிலாய்த் துக்கத்தினாலும் வருத்தத்தினாலும் அவள் மனமசோர்ந்து உகிரம்கெட்டு சிசுவின் சரீரத்தில் போய்ச்சேருகிறது.

“தாயாகிய பாவிக்கொரு தயவும் வரவில்லையே
வேயாரிசை யுலைவாயிடு மெழுகென்ன வுருக்கும்
போயாரினி யுரைசெய்குவர் பொய்யுலகக் கிடைவைகும்
நீயாகிலு மிறைவற்கு நிகழ்த்தாய் மடவனமே.”

தன பிள்ளைக்குச் சுகமும் சௌக்கியமும் சந்தோஷமு முண்டாக்கும் வழிகளை நாடித் தேடுவதற்குப் பதிலாக அதை எப்படி அழிக்கலாம் எப்படிக் கொல்லலாமென்று யோசித்துக்கொண்டிருக்கிறாள். அதை அவள் ஒருக்காலும் விரும்பினதேயில்லை. ஆனால் கட்டாயத்தினாலும் பலவந்தத்தினாலும் அவள் புருஷனே அப்பாரத்தை அவள்மேல் சுமத்தினான். அப்பாரத்தை

எப்படி நீக்குகிறதென்று இரவும் பகலும் ஓயாது சிந்தையாயிருக்கிறாள். அவளிடத்தில் நீ பெறப்போகும் குழந்தை சுகத்தையடையும்படி நீ சந்தோஷமும் அன்புமுள்ளவளா யிருக்க வேண்டும் என்று சொல்வது அவள் செவியிலும் நுழையாது. அவளுடைய சரீரமும் ஆத்துமாவும் பிள்ளைப்பேற்றின் உபத்திரவத்தையும் கஷ்டத்தையுஞ் சகிக்க ஆயத்தமில்லாம லிருக்கும்பொழுது மற்றவர்கள் போதனையால் அக்குழந்தைமேல் அன்புவைக்கவும், அந்தப் பாரத்தைத் தன்மேல் சுமத்திய கொடுந்தோஷியாகிய அதன் தகப்பனை நேசிக்கவும் அவள் மனதைத் தூண்டமுடியாது. அக்குழந்தை உற்பத்தியாகுமுன் தன் புருஷனுக்கிணங்கச் சரீர இச்சையை நிறைவேற்ற உடங்கொடுத்த விஷயத்தில் அவள் குற்றவாளியானபோதிலும், தனக்கு விருப்பமில்லாத காலத்தில் ஜனித்த குழந்தைமேல் அவளுக்கு வெறுப்புண்டாயின் அக்குற்றம் அவளுடையதன்று. ஏனெனில் இயற்கையாகவே அவள் சரீரம் அதை வெறுக்கிறது. புருஷனே! இவ்விதமாய் உற்பவித்துப் பிறக்கும் குழந்தை எப்படி யிருக்கும்? உன் குழந்தை கீழ்ப்படிதலின்றி உனக்கு எதிர்த்து நிற்கும்பொழுது அதன் துர்ச்சுபாவங்கள் எவ்விதமாய் அதனிடத்தில் வந்தது என்று நீ யோசித்ததுண்டோ? அதற்குக் காரணம் நீயே. உன்னையும் உன் மனைவியையு மல்லாமல் உன் குழந்தையின் சுபாவங்களுக்குக் காரணம் வேறொருவருமில்லை. துர்ச்சன சகவாசத்தால் குழந்தைகள் கெட்டுப் போவதுண்டு என்று சொல்வார்கள். ஆம், துர்க்குணத்தின் வித்து குழந்தையில் மறைந்திருந்தால் அது வளருவதற்கு வேண்டிய துர்ச்சன சகவாசமாகிய மழை பெய்தவுடன் அதன் துர்க்குணங்களாகிய முளைகள் கிளம்பி வெளிப்படும். ஆதலால் உன் குழந்தைக்கு அழகும் சௌக்கியமும் சுறுசுறுப்புமுள்ள சரீரமோ, அல்லது அருவருப்பும் வியாதியும் நிறைந்து கறைப்பட்ட அவலக்ஷணமான சரீரமோ எது கிடைக்கவேண்டும்? உன் குழந்தைக்கு உருக்கமும், உண்மையும், நியாயமும், பச்சாதாபமும், மேன்மையுமுள்ள ஆத்துமாவோ, அல்லது கேவலமும், பொறுமையும், இழிவும், பொய்யும் நிறைந்த ஆத்மாவோ எது உண்டாகவேண்டும்? அது தெய்வசகாயமே யணிந்து ஞானம் பரிசுத்தம் பாக்கியம் உள்ளதாய்ப் பிறக்கவேண்டுமோ, அல்லது திருடன், கொள்ளைக்காரன், கொலைக்காரனாக வேண்டுமோ? புருஷனும் தகப்பனுமாகிய நீயே இவைகளை உன் மனதில் நிதானித்து உனக்கிஷ்டமானதைத் தெரிந்துகொள். அதற்குத்தரவாதி நீயே. உன் மனைவி ஓர் ஜீவனின் வித்தைத் தன்னிடம் ஏற்றுக்கொண்டு அதைச் செம்மையாய் வளர்த்துப் பிறப்பிக்கவும், அதனாலுண்டாகும் உபத்திரவங்களைச் சகிக்கவும் ஆயத்தமுள்ளவளா யிருக்கும்

போதல்லாமல் வேறெந்தக் காலத்திலும் அவளைக் கர்ப்பவதியாக்க முயலாதே. சந்தோஷத்துடன் கர்ப்பவதியாகி, சாந்தமும், அன்புமாய் அதைச் சகிக்கும் தாயினது தன்மை மிகச்சிறந்ததும், மகிமை தங்கியதுமா யிருக்கிறது.

ஸ்திரீ தன் புருஷனிடத்தில் இளைப்பாறுதலையும் பூரண இன்பத்தையும் நாடுகிறாள். அவனை ஆபத்துக் காலத்தில தனக்கு அடைக்கலமாகும் பலமான அரணாகப் பாவித்து, அவனிடத்திலொதுங்கவும், அவனுக் கொதுக்கிடமாகவும், அவனை நேசிக்கவும், அவனால் நேசிக்கப்படவும், அவனிடத்தில் ஓடி அவனைத் தனக்குப் புகலிடமாக ஏற்றுக்கொள்ளுகிறாள். பயமற்ற அன்போடும் மாசற்ற விசுவாசத்தோடும் அவன மார்பில் சாய்ந்து, தன் முழு சரீரத்தையும் ஆத்மாவையும் அவனுக்கே தத்தம் பண்ணி, அவன் ஆளுகைக் குட்படுகிறாள். மாசற்ற அன்பும் அளவற்ற விசுவாசமு முள்ளவளாய்த் தன்னிடத்திற் கோடி வந்து தன்னைப் புகலிடமாகக்



கொள்ளும் ஸ்திரீக்குத் துரோகஞ் செய்து அவளால் சுமக்கக் கூடாத பாரத்தை அவள்மேல் சுமத்துபவனும், பரஸ்திரீகளின் மேல் மனம்வைத்து அவர்களுக் கின்பத்தைக் கொடுத்துத் தான் பெற்றுக்கொள்ளும் நோய்களைத் தன் மனைவிக்குக் கொடுப்பவனும், பிராண நாயகன் என்னும் சிறந்த நாமத்தைத தரிக்கப் பாத்திரராவாரோ? சுய இச்சையை நாடித் திரியும் மிருகத்திற்கு ஒப்பான லோபி மணவாளனுவானோ?

தேவன் ஒவ்வொரு மனுஷனிடத்திலும் அவன் மனைவி பிள்ளைகளின் மூலமாக முகமுகமாய்ப் பேசித் தம்மை அவனுக்குக் காண்பித்து அவன் காதிற் பேசுகிறார். தெய்வத்திற்கும மனுஷனுக்கும நடுவில் இருக்கும் தீர்க்கதரிசிகள் மனைவியும் பிள்ளைகளும். அவர்கள் மூலமாய் அண்டசராசரங்களிலும் பரவியிருக்கும் தேவ ஆவி ஒவ்வொரு மனுஷனிடத்திலுமிறங்கி அவனுககு உயிரையும சுறுசுறுப்பையும் கொடுத்து மனுஷீகத்துககுரிய வல்லமைகளை அவன் உபயோகிக்கும்படித் தூண்டிவிடுகின்றது. பூலோகத்தில் மனுஷர் கண்டுபிடிக்கும் நூதனமான வழிவகைகட்கும் அவாக

ளுடைய ஆசாபாசத்திற்கும் காரணம் மனைவி மக்களே. அவர்களினால் ஒவ்வொரு மனுஷனுக்கும் முன்னுக்கு வரவேண்டும் என்னும் விருப்பமுண்டாகி அதற்குரிய வழிகளும் கண்டு பிடிக்கப் படுகின்றன.

அவன் சுத்தமும் கீர்த்தி பெற்றவனுமாவதற்குக் காரணம் அவன் மனைவி மக்களே. ஒவ்வொரு மனுஷனுடைய நடக்கைகளையும் சுபாவத்தையும் சீர்திருத்தச் செய்யும் தேவ வல்லமை அவர்களிடத்திலேயே மறைந்திருக்கிறது. ஒவ்வொரு மனுஷனும் தானும் தன் குடும்பமும் முன்னுக்குவரும் வழிகளைத்தேடி அவற்றின்படி செய்ய முயற்சிக்கிறான். ஆதலால் ஒவ்வொரு மனுஷனும் இவ்வுலகத்தில் நாகரீகத்தைப் பரவச்செய்து மனுஷ ஜாதிகளை உயர்த்தும்படி போதகன்மாராகவும், நியாய சாஸ்திரிகளாகவும், பிரகஸ்பதிபோன்ற வாய்ச்சாதுரியத்திலும் கல்வித்திறமையிலும் முயற்சிக்கும் சகல காரியங்களைவிட புருஷனாகவும் பிதாவாகவும் இவ்வுலகத்தில் நாகரீகம் பரவும்படி அநேக காரியங்கள் செய்யலாம். இவ்வுலக ராஜாக்களும், சுவிசேஷகர்களும், நியாயப் பிரமாணம், வேதாகமம், சன்மார்க்கப் பிரமாணங்கள் முதலியவற்றைப் பரவச் செய்து உலகத்தைச் சீர்திருத்தப் பார்ப்பது ஓர் மரமானது வளர்ந்தபின் அதன் பக்கத்துக் கிளைகளைக் கொய்து பகீரதப் பிரயத்தனம் செய்து அதை நேராக்குவதற்கு ஒப்பாகும். ஆனால் ஒவ்வொருபிதாவும் மாதாவும் தங்கள் தங்கள் பிள்ளைகளைச் சௌக்கியமும் சந்தோஷமும் நற்குணமுமுள்ளவர்களாகப் பிறப்பிக்க முயல்வதாலுண்டாகும் பலன், பயிரானது முளை கிளம்புமுன்னமே அதைச் செழிப்பாக வளரச்செய்ய எடுத்துக் கொள்ளும் அற்பப் பிரயாசத்தால் உண்டாகும் பெரிய நன்மைக்கு ஒப்பாகும்.

மனுஷனுடைய ஜீவியத்தை மூன்று பிரிவாக வகுக்கலாம்.

1. சிசுவாயிருக்கும் காலம். அதாவது தாயின் கர்ப்பத்தில் சஞ்சரிக்கும் ஒன்பது மாதங்கள்.

2. மனுஷனா யிருக்கும் காலம். அதாவது பிறந்தநாள் முதல் உயிர் துறக்கும் நாள்வரை.

3. ஜீவ ஆவியா யிருக்கும் காலம். அதாவது சரீரத்தை விட்டு ஆவி பிரிந்தபின் அனுபவிக்கும் நித்தியகாலம்.

இவ்வுலகத்திலுள்ள சகல கூட்டத்தாரும், மார்க்கத்தாரும், ராஜாங்கத்தாரும், கல்விச் சங்கங்களும், சாஸ்திரிகளும் மனுஷன் பிறந்தபின் அவனைச் சீர்திருத்தக்கூடிய விஷயங்களைக் கண்டுபிடித்து, இவ்வுலகத்தை விட்டுப் பிரிந்தபின் மனுஷனது ஆத்மா நல்ல நிலைமையில் இருக்கும்படி செய்யப் பலவிதமாய் முயற்சி எடுத்துக்கொள்ளுகிறார்கள். ஆனால், இவ்வுலகத்தில் இன்பத்தை அனுபவித்துப் பரலோக ராஜ்ஜியத்திற்குப் பாத்திரராகும்படி செய்யுந் தன்மைகளை ஒவ்வொரு மனுஷனுக்கும் புகட்டத்தக்க காலம் அவன் தன் தாயின் வயிற்றில் சிசுவாயிருக்கும் ஒன்பது மாதமே என்பதை அவர்கள் கவனித்து அறிந்து, அக்காலத்தில் மனுஷ ஜாதியைச் சீர்திருத்தத்தக்க வழிகளை அவர்கட்கு ஆதிமூலமாகிய பெற்றோர்க்குப் போதிக்கவேண்டும் என்னும் எண்ணம் ஒரு கல்விச் சங்கத்திற்காவது ராஜாங்கத்தாருக்காவது இதுவரையில் உண்டானதேயில்லை. இப்பொழுதுதான் மனுஷஜாதியார் மனுஷரின் தன்மை உற்பத்தியாகும் ஆதிமூலம் பெற்றோராயிருக்கலாம் என்று சற்றே யோசிக்கத் தொடங்குகிறார்கள். இக்கொள்கையை மனுஷர் சரியானபடி கற்றறிவார்களாயின் தற்காலத்திலிருக்கும் நியாயச் சட்டங்களும், ராஜசட்டங்களும் முற்றும் மாறிப்போகும். பெற்றோரைப்போலப் பிள்ளைகளிருந்து அவர்கள் தங்களுக்குள் புகட்டிய தன்மைகளை வெளியிடுவதற்காகத் தண்டனை விதிப்பது அநியாயமாக எண்ணப்படும். ஒவ்வொரு குழந்தையும் உற்பத்தியாகும்போது பொய், பொறாமை, களவு முதலிய பஞ்சமா பாதகங்களுடன் அதை உண்டாக்கி அது பிறந்தபின் பொய், களவு, கொலை முதலியவைகளைச் செய்வதற்காக அதைத் தண்டிப்பது கப்பிதமாகும். இயற்கையாக சுகமும், உண்மையும், அன்பு முதலிய தூயகுணங்களுமுள்ள மேன்மக்களை இயற்கையாகவே பொய், களவு, கொலை முதலிய துர்ச்சுபாவங்களைத் தரித்திருக்கும் துஷ்டர்மேல் நியாயாதிபதிகளாக வைப்பது வீணாகும். ஏனெனில் சாதாரணமாய் நற்சுபாவங்களுடன் பிறப்பவர்களுக்கு துஷ்டர்களுடைய இருதயத்தில் குடி, பொய், மாமிச இச்சை முதலிய துர்ச்சுபாவங்கள், உண்மை, சாந்தம், கற்பு முதலிய நற்சுபாவங்களுடன் எவ்விதமாய்ப் போராடி மேற்கொள்ளுகின்றன வென்பதை அறிந்துணர முடியாது. துஷ்ட நிக்கிரகமும், சிஷ்டபரிபாலனமும் செய்யவேண்டுமென்னும் ராஜநீதி முற்றிலும் மாறி துஷ்டரைச் சிக்ஷிப்பதற்குப் பதிலாகச் சான்றோர் அவர்கள்மேல் பரிதாபமுற்று, "பிதாவே இவர்களை மன்னியும் தாங்கள் செய்கிறதின்னதென்றறியாதிருக்கிறார்களே." என்று தங்கள் முழு இருதயத்தோடும் தெய்வத்தை நோக்கிப் பிரார்த்திப்பார்கள். பெற்றோரே பிள்ளைகளின் சுபா

ங்களுக்குக் காரணர் என்னும் கொள்கையை உலகத்தார் உண்மையென்றறிந்தவுடன் மனுஷ ஜாதியை முன்னுக்குக் கொண்டு வரவேண்டும் என்னும் விருப்பமுடையவர்கள் பெற்றோரின் சுகமே மனுஷ சுபாவத்திற்கு ஆதிமூலமென்றறிந்து அதைப்பேணும் வகைகளைப் போதிப்பார்கள்.

## சுருக்கம்.

இப்புஸ்தகத்தில் நாம் தெளிவாக எடுத்துக்காட்டியிருக்கும் விஷயங்களை இங்கு சுருக்கிச் சொல்வோம் :—

தாயின் கர்ப்பத்தில் உற்பத்தியாகும் ஒவ்வொரு சிசுவினது அம்சங்களும் அத்தாயின் அவயவங்களில் சுரக்கும் சாரத்தினால் உண்டாக்கப்படுகின்றன.

இந்த சாரத்தை நாபிக்கொடியின் மூலமாய்ச் செல்லும் இரத்தமானது சிசுவின் அம்சங்களுக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கிறது.

இந்த வஸ்துவானது தாயினது அவயவங்களின் மூலமாய்ச் செல்லும்பொழுது அத்தாயினது மனதிலும் சரீரத்திலும் உண்டாகும் மாறுதல்களைப் பெற்றுக்கொண்டு செல்லுகின்றது.

மனுஷருக்குண்டாகும் நானாவித குணங்களுக்கும் அஸ்திபாரம் தாயின் கர்ப்பத்தில் சிசுக்களாயிருக்கும்போதே உண்டாய் விடுகின்றன.

கர்ப்பவதியாயிருக்கும் தாய்க்குப் பலசமயத்திலுண்டாகும் ஐம்பொறி உணர்ச்சிக்குத்தக்கவிதமாக ஒரே தாய்க்குப் பிறக்கும் குழந்தைகளின் குணங்கள் வித்தியாசப்படுகின்றன.

உதாரணமாய் :— தாயானவள் எவ்வித சுபாவமுள்ளவளாயிருந்தபோதிலும் கர்ப்பவதியாயிருக்குங்கால் செய்யும் கிரியைக்குத் தக்கதாகச் சிசுவினது சுபாவமுண்டாகிறது.

ஒவ்வொரு மனுஷனுடைய திறமையும் சுபாவமும், அவன் சிசுவாயிருக்கும்போதே நிர்ணயிக்கப்படுகிறது.

சாதாரணமாய்ப் பால்ய புருஷர் மனைவிகளுக்குப் பிறக்கும் பிள்ளைகளைவிட நடுத்தர வயதுள்ளவர்களின் குழந்தைகள் யூகத்திலும், பலத்திலும், சிறப்புற்றனவாயிருக்கும்.

தாயுந் தந்தையும் எவ்வளவு புத்திக்கூர்மையும் திறமையுமுடையவர்களாயிருந்தபோதிலும் இயற்கைப் பிரமாணத்தையும்

சன்மார்க்கப் பிரமாணத்தையும் மீறி நடப்பார்களாயின், அச்சமயத்தில் அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் அவர்களைவிடத் தாழ்ந்த புத்தியும் திறமையுமுடையவர்களா யிருப்பார்கள்.

பெற்றோர்களின குணாதிசயம் எவ்வளவு கேவலமாயிருந்த போதிலும், சர்ச்சனருடைய சகவாசத்தினாலும், நற்போதகங்களுக்குச் செவிகொடுப்பதினாலும், நேர்த்தியான இடங்களில் வசிப்பதினாலும், அவர்களுககுப் பிறக்கும் பிள்ளைகள் அவர்களைவிடச் சிறந்த குணாதிசயமுடையவர்களாவார்கள்.

பெற்றோரிடத்திலிருந்து பிள்ளைகள் சுதந்தரித்துக்கொள்ளும் துர்ச் சுபாவங்களையும் மந்தப்பிரகிருதிகளையும் கல்விப் பயிற்சியினால் முற்றிலும் நீக்குவதரிது. ஆனால் ஒருவிதமாய் சற்றுச் சீர்திருத்திக் கொள்ளலாம்.




மாதாவைப்போல ஊட்டிவளர்த்து மாதரை மாதாக்களாக்கும் மாண்மை தங்கிய மருந்து சிங்கவீரிய மாத்திரையே.

கடவுள் துணை.

# மானிட மர்மசாஸ்திரம்.

## ஐந்தாம் புஸ்தகம்.

### சிசு உற்பத்தி.

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட் பேறல்ல பிற — குறள்.

இஃது

யாவர்க்கும்

சுக செல்வ நன்மைகளையும் சுகிர்த பாக்கிய
போக்கிஷத்தையும் நீடுழி பெருகுவிக்க
விரும்பிய,

கல்கத்தா சர்வகலா சங்கத்தின் தமிழ்ப்பரீக்ஷகரும், ரங்கூன் செயின்
ஜான்ஸ் கல்லூரிப் பிரதமாசிரியரா யிருந்தவரும், கணித சாஸ்திரம், பூமிசாஸ்
திரங்களின் கிரந்தகர்த்தாவும், மானஸ மர்ம சாஸ்திரப் பண்டிதரும்,
சாமிவேல் வைத்தியசாலைத் தலைவருமாகிய

**எஸ். சாமிவேல், பி. ஏ. அவர்கள்**

இயற்றியது.

புதிய பதிப்பு.

சாமிவேல் பிரஸ்,

தென்காஞ்சி, இரங்கோன்.

1920.

All Rights Reserved.

## முட்டையில் கருவளர்ச்சி.



அண்டங்களை ஆட்டிவைக்கும் எல்லாம்வல்ல ஈசன் முட்டைக்குள் ளிருக்கும் குஞ்சுக்கு அமுதளிக்கும் விதத்தைச் சற்று கவனிப்போம்.

வடிவம்:—கோழி முட்டை சாதாரணமாய் அடி பருத்தும் நுனி சிறுத்துமிருக்கும். அதைச் சற்றே சார்வான இடத்தில் வைத்தால் நேரே உருண்டு போகாமல் வட்டஞ் சுற்றி நிற்பதற்குக் காரணமதுவே. மலையினுச்சியில் வசிக்கும் பக்ஷிகளின் முட்டைகள் சாதாரணமாய் இருபக்கங்களிலும் கூர்மையாயிருக்கும். ஆதலால் ஏதாவது காரணத்தால் தம் நிலை தவற நேரிடின் நேராய் உருண்டுவிடாமல் சிறு வட்டஞ்சுற்றிநின்று விடும். ஆனால் உருண்டை வடிவமான கூடுகளில் விடப்படும் முட்டைகளோ ஒன்றோடொன்று நெருங்கித் தாய்வயிற்றிற்குள் அடங்கத்தக்கதாக உருண்டை வடிவமாகவே யிருக்கும்.

ஓர் முட்டையை உடைத்துப் பார்ப்போமாயின், அதனுள் வெள்ளைக்கருவும் மஞ்சள் கருவுமிருக்கும். மஞ்சள் கருவின் நடுவில் ஓர் சிறு புள்ளி தோன்றும். அதுதான் ஜீவாதாரம். முட்டையை எத்தனை தடவை உருட்டிப் பிரட்டினாலும் இந்த ஜீவாதாரக் கரு மேற்பாகத்திலேயே நிற்கத்தக்கதாக சாக்ஷாத் ஜெகதீசன் ஓர் அற்புத ஏற்பாடு செய்திருக்கிறார். இந்த ஏற்பாட்டினால் தாய் வயிற்றிலுள்ள உஷ்ணத்தை முட்டையினுள்ளிருக்கும் ஜீவாதாரக் கருவானது பெற்று நாளுக்குநாள் விர்த்தியாகின்றது. முட்டையின் மற்றப் பாகங்களாகிய மஞ்சட் கருவும் வெள்ளைக் கருவும் இந்த ஜீவாதாரக் கருவின் போஷணைக்காகவே அமைக்கப் பட்டிருக்கின்றன.

கோழி தன் முட்டையை அடிக்கடிப் புரட்டி வைக்கிறதை கவனித்தவர்கள் முட்டையின் எல்லாப் பாகத்திற்கும் சம உஷ்ணந் தாக்கும்படி அது அப்படிச்செய்கிறதென்று சொல்வார்கள். அப்படி சம உஷ்ணம் தாக்கவேண்டிய அவசியமில்லை யாதலால அவர்கள் சொல்வது தப்பிதம். ஆனால் முட்டையினுள்ளிருக்கும் மற்ற வஸ்துக்களால் ஜீவக் கருவின் வளர்ச்சிக்கு யாதொரு தடையும் நேரிடாபடி சற்று இடம்விட்டுப் பெயர்வதவசிய மானதால் அப்படி கோழி தன் முட்டையை அடிக்கடிப் புரட்டுகிறது.


































முட்டையில் கரு வளர்ச்சி

இனிமேல் முட்டையினுள்ளிருக்கும் ஜீவக்கரு விர்த்தியாகும் விதத்தைப் பற்றி சற்று கவனிப்போம். இதற்காகப் பத்து முட்டைகளை ஒரே நாளில் அடைவைக்கவேண்டும். ஒவ்வொருநாளும் கால்படித் தண்ணீரில் ஒரு தேயிலைக் கரண்டி யளவு உப்பைக் கலக்கி இளஞ் சூடானபின் இறக்கி வைத்துக்கொள்ள வேண்டும். இதில் கோழி முட்டையிலுள்ள குஞ்சுகள் சற்றுநேரம் உயிரோடிருக்கும். இந்தத் தண்ணீரில் பத்துநாளும் தினத்துக்கு ஒரு முட்டை வீதம் எடுத்து விரிந்திருக்கும் அடிப்பாகத்தைத் தட்டி உடைத்துத் தோட்டை இரண்டாகப் பிளந்து அதனுள்ளிருக்கும் குஞ்சை எடுத்துவிட்டால் ஒவ்வொருநாளும் அண்டக்கரு விர்த்தியாகும் விதத்தைக் கற்றுக்கொள்ளலாம்.

முதல் நாள்:—ஒருநாள் அடைவைத்த முட்டையின் குறுக்காக ஜீவக்கருவில் ஒரு சிறு புள்ளி தோன்றும்.

இரண்டாம் நாள்:—குஞ்சு ஓர்வித நீரினுள் ஒரு புழுப்போல் தோன்றும் தலை, கண், இருதயம் முதலியவைகளும் தோன்றும். மஞ்சட் கருவிலிருந்து கோழிக்குஞ்சுக்கு ஆகாரங் கொண்டுபோகும் இரத்தத் தாரைகளுந் தெரியும்.

மூன்றாம் நாள்:—வெள்ளைக்கரு சிறுத்திருப்பதும் இரத்தத் தாரைகள் அதிகமாய்ப் பின்னிக்கொண்டிருப்பதும் தெரியும். மஞ்சட் கருவிலிருந்து ஓர் அகன்ற குழாயின் மூலமாய் குஞ்சுக்கு ஆகாரஞ் செல்லும். காது ஓர் சிறு துவாரமாய்த் தோன்றும்.

நாலாம் நாள்:—தலைபருத்து வளைந்து வாலின் பக்கம் மடங்கியிருக்கும். இரு இறகுகளும், கால்களும் சிறு துரும்புபோல் நீண்டிருக்கும்.

ஐந்தாம் நாள்:—தலை பருத்தும், இறகுகளும், கால்களும் பிரிந்தும் தெரியும். முட்டையின் அகன்ற அடிப்பாகத்திலிருக்கும் ஆகாய அறை விரிந்திருக்கும். இந்த அறை வரவர விரிந்து குஞ்சைச் சுற்றிலும் மூடிக்கொள்ளும். இதன் மூலமாகத்தான் குஞ்சுக்கு வேண்டிய காற்று உட்செல்லுகிறது. வெளியிலுள்ள ஆகாயம் முட்டையின் தோட்டிலுள்ள துவாரங்கள் மூலமாய் ஆகாய அறையினுட்சென்று, அங்குள்ள மஞ்சள் கருவை மூடுருவ ஓடும் இரத்தத் தாரைகளுக்குப் பிராணவாயுவைக் கொடுப்பதுடன், அங்குள்ள கரியமில வாயுவை வெளியே கொண்டு வந்துவிடுகிறது. அடை வைக்காத ஒரு முட்டையை அவித்து உடைத்துப் பார்த்தால் அதன் அகன்ற அடிப்பாகத்தில் ஒரு பள்ளம்

தோன்றும். அதுதான் இந்த ஆகாய அறை. அடை வைத்த முட்டைகளில் இந்த அறை நாளுக்குநாள் விரிந்து கடைசியில் கோழிக் குஞ்சைச் சுற்றிலும் பரவி அதற்குச் சுவாசப்பை (Allantois) யாகிறது.

ஒரு முட்டையைச் சுற்றி வார்னிஷ் முதலிய ஏதாவது வஸ்து வைத்தடவி வைத்தால் காற்று உட்செல்லக்கூடாததாலால் குஞ்சு விர்த்தியாகாமல் செத்துப்போகும்.

நாட்செல்லச் செல்ல ஒவ்வொரு அவயவமும் ஸ்திரமாகி ஒன்பதாம் நாளில் வெள்ளைக் கருவே யில்லாமல் போகும். மஞ்சள் கரு இன்னும் பெரிதாக யிருந்து அதிலிருந்து குஞ்சுக்குப் போகும் குழாயின் மூலமாய்க் குஞ்சைப் போஷித்துக்கொண்டு வரும். இதனால் வெள்ளைக் கருவானது மஞ்சள் கருவோடு சேர்ந்து அங்குள்ள இரத்தத் தாரைகள் மூலமாகவே குஞ்சுக்கு இரையாகிறதெனத் தெரிய வருகிறது. இப்பொழுது குஞ்சு ஒரு பக்ஷி போல் தோன்றும். இறகுகள், மூக்கு, விரல்கள் முதலியவை தோன்றும். இதுவரையும் தலை சரீரத்தைவிடப் பெரிதாகவே யிருக்கும்.

பதினெறு நாள்வரை குஞ்சு முட்டையில் குறுக்காய்க் கிடக்கும். பதினெலாவது நாளில் குஞ்சு தன் நிலைபெயர்ந்து முட்டையின் அகன்ற அடிப்பாகத்தில் தன் தலையை வைத்துக்கொண்டு நீட்டிக் கிடக்கும். மஞ்சள் கரு வரவரக் குறைந்து இருபதாம் நாளில் கோழிக்குஞ்சின் சரீரத்தினுட் சென்றுவிடும். அதன்பின்பு ஆகாரமில்லாமையால் முட்டையினுள்ளிருக்கும் குஞ்சு பறபறப்பெடுத்துத் தன் முன்னிருக்கும் ஆகாய அறையின் மெல்லிய ஜவ்வைத் தன் மூக்கினால் கிழித்துவிடும். அந்த அறையிலுள்ள சுத்த ஆகாயத்தை முதல்முதல் சுவாசிக்கவே அதற்கு உயிரும் சக்தியும் அதிகரித்துத் தன் மூக்கின் ஒரு கொத்தினால் முட்டைத் தோட்டை உடைக்கவும் அதனுள்ளிருந்து வெளியே நகர்ந்து வரவும் பலனடைகிறது. வெளியில் வந்து சற்றுநேரம் ஆயாசத்துடன் கிடந்து அதன்பின் எழுந்து ஓடவும் தன் தாய் கொத்திக் கொடுக்கும் இரையைத் தின்னவும் பழகும்.

---

## கருத்தரிக்கும் விதம்.

ஸ்திரீகளுக்கு மாதாந்தர ருது காண்கிற காலத்தில் அல்லது அதற்குச் சில நாளைக்கு முன்னாவது பின்னாவது சினைப்பையிலிருக்கிற சுரோணிதக் குமிழ்களிலொன்று அல்லது இரண்டு சாதாரண

மாய்ப் பெருத்து முற்றி வெடிக்கும். அத்தருணத்தில் சினைப் பாதையின் குஞ்சு முனை (Fimbriated Extremity) யானது சினைப்பையைக் கவ்விக்கொள்ளும். அப்போது வெடித்த சுரோணிதக் குமிழியிலிருந்து வெளிப்படுகிற சுரோணிதமும் நாதக்கருவும் சினைப்பாதையி லிறங்கி அந்த வழியாகச் சென்று கருக்குழியில் விழும்.

கருப்பையிலாவது, முட்டைப் பையிலிருந்து சுரோணிதத்தைக் கருப்பையில் சேர்க்கும் சினைப்பாதையிலாவது சாதாரணமாய்க் கருத்தரிப்பதுண்டு. ஆதலால் சுக்கிலத்திலுள்ள கிருமிகள் சுரோணிதத்திலுள்ள முட்டையை கருப்பையிலாவது சினைப்பாதையிலாவது சந்திக்கவேண்டும். கருப்பையினது வாயானது சத்தம் முதலாய் உள்ளே செல்லாதபடி மிசவும் ஒடுக்கமாயிருப்பதால் சுக்கிலம் எப்பொழுதும் கருப்பைக்குள் செல்ல முடியாது. அப்படிச் சென்று சுரோணிதத்தோடு சேர்ந்தால்தான் கருத்தரிக்கும். அதுவுமல்லாமல் சுக்கிலத்திலுள்ள கிருமி சுரோணிதத்திலுள்ள முட்டையோடு உயிருடன் போய்ச் சேர்ந்தால்தான் முட்டைக்கு உயிர் உண்டாகிச் சிசுவாகும். சுக்கிலத்திலுள்ள கிருமிகள் உயிரோடு போய் முட்டையில் சேரும்படி இந்திரியம் வெளியாகுங் காலத்தில் புருஷன் அசையாமல் அமைதலாய்ப் படுக்கவேண்டும். ஸ்திரீயும் சௌக்கியமாய்ப் படுத்துக்கொண்டு அதிகமாய் மூச்சை வெளியே விடாமல் புருஷன் பிரிந்தபின் குறைந்த பக்ஷம் பத்து நிமிஷமாவது அசையாமல் படுத்திருக்கவேண்டும். இப்படிப் பல தடவைகளில் செய்தால் சுக்கிலம் எப்பொழுது கருப்பைக்குள் இறங்குகிறதோ அப்போது கருத்தரிக்கும். மேலும் கருத்தரித்தபின் குறைந்தது ஒருமாதமாவது ஸ்திரீ அச்சம் பக்கம் அலைந்து கடினமான வேலைகளைச் செய்யாமல் ஆறுதலும் அமைதலுமாய் இருக்கவேண்டும். அப்படியில்லாமல் அங்குமிங்கும் ஓடி த்திரிவதனாலும் வண்டிகளில் அதிகத் தூரம் பிரயாணம் பண்ணுவதனாலும் தரித்த கரு அழிந்துபோகும்.

சுக்கிலத்திலுள்ள கிருமிகளில் ஏராளமானவை சுரோணித முட்டையினுள் பிரவேசித்ததால் பிறக்கும் குழந்தைகள் தகப்பனைப் போலிருக்கும். சொற்பக் கிருமிகள் மட்டும் பிரவேசித்தால் குழந்தை தாயைப்போலிருக்குமென்று தற்கால சாஸ்திரிகள் கண்டு பிடித்திருக்கின்றனர்.

## சிசு வுற்பத்திகாலம்.

குழந்தைகள் பெறவேண்டுமென்னும் விருப்பமுள்ளவர்கள் ஸ்திரீகளுக்குச் சரியானபடி கருத்தரிக்கும் காலம் எதுவென்று அறிய விரும்புவார்கள். ஆனால் இதைப் பற்றிப் பற்பல தேசங்களிலுமுள்ளவர்கள் தனித்தனியே வித்தியாசமான அபிப்பிராயம் சொல்லுகிறார்கள். பூர்வகாலத்திலிருந்த இந்துக்கள் மாதவிடாய் நின்றபின் பத்துநாள் வரைக்கும் கருத்தரிக்கும் என்று எண்ணங் கொண்டிருந்தார்கள். யூதருக்குள் மாதவிடாய் காணுவதற்குச் சில நாட்களுக்கு முன் முட்டைகள் வெளியாகின்றனவென்றும், ஆதலால் அக்காலத்திலேயே கருத்தரிக்க வேண்டுமென்றும் உத்தேசித்து வந்தார்கள். ஆனால் தற்காலத்தில் ஐரோப்பிய டாக்டர்கள் மாதவிடாயாகிற இரத்தத்தைச் சோதித்துப்பார்த்து அவைகளில் சாதாரணமாய் முட்டைகள் இருக்கின்றனவென்று கண்டுபிடித்திருக்கிறார்கள். ஆதலால் மாதவிடாயாவதற்குச் சில நாட்களுக்கு முன்தான் கருத்தரிக்கும் காலமாயிருக்கவேண்டுமென்று உத்தேசிப்பதற்கு இடமாகின்றது. என்றாலும் மாதவிடாய் ஆவதற்கு நாலுநாளைக்கு முன்னும், மாதவிடாய் நின்ற ஆறுநாட்களுக்குப் பின்னும் ஸ்திரீ புருஷர் சேர்வதனால் கரு எவ்விதமும் தரிக்குமென்று உத்தேசிக்கலாம். அமாவாசியை பவுர்ணமி இத்தினங்களில் உற்பத்தியாகும் குழந்தைகள் பலக்குறைவும் அங்கவீனமும் அவலக்ஷணமுமாய்ப் பிறந்து அதிக சீக்கிரத்தில் அகால மரணத்தை யடையும். ஆதலால் இக்காலங்களில் சம்போகங்கூடாது.

---

## கர்ப்பக்குறி.

ஸ்திரீயானவள் கர்ப்பவதியா யிருக்கிறாளென்பதற்கு அடையாளமாக அவளுக்கு மாதந்தோறும் வெளியாகும் மாதவிடாய் நின்றுவிடும். அதிகாலையில் வாயில் நீர் சுரந்து வாந்திமயக்கமுண்டாகும். கண்விழி சோர்ந்து மஞ்சள் அல்லது ஊதாவர்ணம் கண்களில் தோன்றும். நாட் செல்லச் செல்லச் சிறுநீர் நிறமாறி, ஸ்தனங்களிலும் பால் சுரக்கும். சரீரம் புஷ்டியும் மினுமினுப்புங் கொடுத்து முகத்தில் ஒருவித வசீகரந் தோன்றும். அநேகருக்கு முதல் மூன்று மாதங்களிலும் சிலருக்கு அதற்குப் பிற்பாடும் வாந்தி உண்டாகும். மாதவிடாய்க் காலங்களில் அதிக உபத்திரவப் படுபவர்களுக்கு அதிகமாய் வாந்தி காணும். சிலருக்கு வாந்தி காணவேமாட்டாது. பெரும்பாலும் பிள்ளை பெற்றவர்களுக்கு அதிக வாந்தி எடுக்காது. இரண்டாவது மாதத்தில் ஸ்தனங்கள் பருத்து நுனி கறுத்து வலியுங் கொடுக்கலாம்.

## கர்ப்பாசயத்தில் சிசு நிற்கும் நிலை.




முதல் மூன்றுமாதங்களிலும் சிசுவானது தாயின் புட்டி எலும்புப் பக்கத்தில் தங்கியிருந்து நாலாவது மாதந்தான் தாயின் வயிற்றில் தெரியும். ஆறுமாதத்தில் தொப்புள் பக்கம் வந்து சேரும். ஏழாவது எட்டாவது மாதங்களில் அதற்குமேல் எழும்பித் தாயின் ஈரல் குலையிருக்கிற கடைவயிற்றெலும்பு மட்டும் வருவதாக அவளுக்கு மூச்சு முட்டும். குழந்தை பிறப்பதற்கு இரண்டுவாரத்திற்குமுன் சிசு கீழ் நோக்குவதால் தாய்க்கு மூச்சு முட்டாது. நாலவது ஐந்தாவது மாதத்தில் சிசுவானது தாயின் அடிவயிற்றில் அசைவது தோன்றும். அக்காலத்தில் தாய்க்கு ஒருவித்தமான உணர்ச்சியும் அடிக்கடி மயக்கமும் காணும். கருப்பையானது அடிக்கடி விரிந்து சுருங்குவதால் அடிவயிற்றில் ஓர்வித லேசான வலியுந் தோன்றும்.

## கருவுற்ற ஸ்திரீயின் நிலைமை.

ஸ்திரீக்குக் கருத்தரித்த துவக்கத்தில் தன் இனத்தார்பேரிலும் இஷ்டர்மேலு மிருக்கும் பாசமிகுந்து அவர்களைப் போய்ப் பார்க்க வேண்டுமெனகிற அவாவும், பிரயாணம் பண்ணுவதில் விருப்பமும், சரீரத்திற்கும் ஆவிக்கும் உற்சாகத்தைக் கொடுக்கும் அப்பியாசங்களைச் செய்ய அவாவும் உண்டாகும். நாட் செல்லச் செல்ல அதிக புத்தி தீக்ஷணியமும் பெறப்போகும் குழந்தைக்கு வேண்டிய உடுப்பு முதலியவைகளைச் சேவதரித்து வைக்கப் பிரியமுமுண்டாகும். அதன்பின்பு பேறுகாலத்தின் கஷ்டத்தைச் சகித்து ஓர் சற்புத்திரனைக் கண்டு களிகூறச் செய்யும்படி கடவுளை நோக்கி அடிக்கடி தியானித்துக் கொண்டிருப்பதையுங் காணலாம்.

## 2, 3, 4, 5, பிள்ளைகள் ஜனிக்கும்விதம்.



சில சமயத்தில் ஏககாலத்தில் இரண்டு அல்லது மூன்று சுரோணிதக்குமிழ்கள் பக்குவமாகி வெளிப்படுவதுண்டு. இது சம்போக காலத்தில் ஸ்திரீயின் சுக்கிலக் கிருமிகள் அவைகளினுட் செல்லுவதால் இரண்டு அல்லது மூன்று சில சமயங்களில் நான்கு ஐந்து பிள்ளைகளும் பிறக்கின்றன. வேல்ஸ் தேசத்தில் ஒரு ஸ்திரீக்கு ஏககாலத்தில் 5 குழந்தைகள் பிறந்தனவாம். விக்டோரியா சக்ரவர்த்தினி அதைக் கேள்விப்பட்டு அவளுக்கு ஏழு பவுன் வெகுமதி அனுப்பினார்கள். அதற்கு முன் இருமுறை அவளுக்கு ஒரே சூலில் 3 குழந்தைகள் பிறந்து உயிரோடிருந்தனவாம். அவளுக்குப் பிறந்த குழந்தைகள் மொத்தம் 22.

---

## விநோதப் பிறவிகள்.

இங்கிலாந்திலுள்ள பிரைற்றன் நகரத்தில் ஒரே சூலில் பிறந்த இரட்டைப் பிள்ளைகள், பிறந்து பதின்மூன்று வருடமாகியும் இன்னம் உயிரோடிருக்கின்றன. இந்த இருபிள்ளைகளும் முதுகுப் பக்கம் நீண்ட தசைப்பிடிப்பால் ஒன்றுக்கொன்று பொருத்தப்பட்டு சிரசு, கரம், கால், வயிறு முதலிய அங்கங்கள் வெவ்வேறாயிருக்கின்றன. ஆனால் அவைகளுக்கு அசுக்களும் வெவ்வேறான குணங்களை யுடையதாயிருக்கின்றதைப் பற்றி டாக்டர்மாரும் ஆச்சரியப்படுகின்றார்கள். சாதாரணமாய இரட்டைப் பிள்ளை ஒட்டிப் பிறப்பதருமை. அப்படிப் பிறக்க நேர்ந்தாலும் இரண்டு சிரசுகளின் தோற்றமும் குணமும் செய்கையும் ஒன்று போலவே யிருக்கும் இவ்வகை இரட்டைச் சிசு நெடுநாள் உயிருடனிருப்பது அரிதினுமரிது.

இந்த இலட்சணங்களுக்கு மாறாய் நாம் மேற்கூறிய குழந்தைகளில் ஒன்று அழும்போது ஒன்று சிரிக்கின்றது. ஒன்று

விழித்து விளையாடிக்கொண்டிருக்கும்போது ஒன்று அயர்ந்து நித்திரை செய்கின்றது. நோய்களும் ஒன்றுக்கொன்று விகற்பப்பட்டிருக்கின்றன. ஒன்று எழுந்து தலைநிமிர்ந்து நிற்கும்போது மற்றது எழுந்தாலும் தலைகுனிந்து கொள்ளுகின்றதாம். இவைகளின் பேதத்தைக் கண்ட வைத்தியர் இவ்விரு குழவிகளுக்குமிடையேயுள்ள தசையை வெட்டி குழந்தைகளை வேறுபடுத்தலாமென்றாலும் அவைகளிலொன்று இறந்துவிடுமென்பதாக அபிப்பிராயப்படுகிறதனால் பெற்றோர் சம்மதிக்கிறார்களில்லையாம்.

## விநோத சம்பவங்கள்.

1901-ம் ஞு ஏப்பிரல்மீ 22-ம் தேதி வெளியான டெய்லி மெயில் (Daily Mail) பத்திரிகை சொல்வதாவது:—

இத்தாலியா தேசத்தில் குடிமதிப்பு (Census) எடுத்த சமயம் சில விநோத சம்பவங்கள் வெளியாகி யிருக்கின்றன. டியூரின் பட்டணத்திலுள்ள ஓர் குடியானவனின் பெண்சாதி மேரிடன்ஞு என்பவள் தனது 19-ம் வயதில் விவாகமாகி இப்பொழுது 59 வயதாகி யிருக்கிறாள். அவளுக்கு 34 புத்திரர் பிறந்தார்கள். அவர்களில் 31 பேர் உயிருடன் தம் பெற்றோருடன் ஏக குடும்பஸ்தராய் வாழ்கின்றார்கள்.

1897-ம் ஞு மார்ச்சுமீ 5-ம் தேதி வெளியான டெய்லி மெயில் பத்திரிகை சொல்வதாவது:—

ஹாலந்திலுள்ள ஆர்ன்ஸ்கர்க் என்ற பட்டணத்தில் வசிக்கும் ஒருவன் தனக்கு 21-வது புத்திரன் பிறந்திருக்கிறான் என்றும், தன் புத்திரர் யாவரும் உயிரோடிருக்கிறார்களென்றும் குடிமதிப்பு எழுதுபவர்க்குத் தெரிவித்திருக்கிறான்.

1904-ம் வருஷத்தில் ஜூலை மாதத்தில் பிரசுரமான (Journ-Obstet) என்ற பத்திரிகையில் ஓர் ஸ்திரீ தனது முதல் புருஷனிடமிருக்குங் காலத்தில் முதல் தடவை இரட்டைப்பிள்ளை, பிற்பாடு நாலு பிள்ளைகள், பிற்பாடு மூன்று பிள்ளைகளாக மூன்று சூலில் 9 பிள்ளைகளைப் பெற்றாள். அதன்பின்பு வேறொரு புருஷனை விவாகஞ் செய்து ஒரே சூலில் 5 ஆணும் 1 பெண்ணுமாக ஆறு குழந்தைகளைப் பெற்றாள். ஆகவே நாலு சூலில் 15 பிள்ளைகள் பிறந்தனவாம். ஆதலால் ஒரே சூலில் பல குழந்தைகள் பிறப்பதற்குக் காரணம் தாய்தானென்று வற்புறுத்தப்படுகிறது.

டாக்டர் லாய்டு ராபர்ட்ஸ் (Loyd Roberts) என்பவர் ஒரு ஸ்திரீக்கு 15 தடவை இரட்டைப்பிள்ளைகள் பிறந்தது என்கிறார்.

டாக்டர் டாஸன் (Dawson) என்பவர் 1909-ம் வருஷத்தில் எழுதிய புஸ்தகத்தில் சொல்லி யிருப்பதாவது:—ஒரு ஸ்திரீக்கு ஆறு தடவை பெண் குழந்தைகள் பிறந்தன அதன்பின்பு இரட்டைப் பிள்ளைகளாய் ஏழுதடவை ஆண் குழந்தைகள் பிறந்தன. அதன்பின்பு நாலுதடவை ஆண் குழந்தைகளே பிறந்தன. ஆக மொத்தம் 24 குழந்தைகள்.

1902-ம் ௵ அக்டோர்பர்மீ 26-ம் தேதி வெளியான (Lloyd's Weekly News) என்ற பத்திரிகையில் நேப்ள்ஸ் நகரத்திற்குச் சமீபத்தில் வசித்த ஓர் இத்தாலிய ஸ்திரீக்கு 59 ஆணும் 3 பெண்ணும் பிறந்தன. அதில் மூன்று மூன்று குழந்தைகளாக 11 சூலிலும், நான்கு குழந்தைகளாக 3 சூலிலும், ஒரே சூலில் 6 குழந்தையும், ஒற்றைக் குழந்தையாக 11 சூலிலும் பிறந்தனவாம்.

வேறொருத்தி ஏழுதடவை இரட்டைப் பிள்ளைகள் பெற்று அதன்பின் இரண்டுதடவை ஒற்றைப் பிள்ளைகளைப் பெற்றுளாம். இன்னொருத்திக்கு 4 தடவை இரட்டைப் பிள்ளைகள் பெற்ற பின்பு ஐந்தாவது சூலில் மூன்று குழந்தைகள் பிறந்தனவாம்.

பெல்கிரேட் நகரத்தில் ஒரு ஸ்திரீக்கு ஒரு சூலில் 3 குழந்தைகளும், அடுத்த சூலில் 6 குழந்தைகளும் பிறந்தனவாம்.

மாட்ரிட் நகரத்தில் ஒரு ஸ்திரீக்கு ஒரு சூலில் 3 குழந்தைகளும் அடுத்த சூலில் 5 குழந்தைகளும் பிறந்தனவாம்.

1905-ம் ௵ ஜனுவரிமீ 28-ம் தேதி வெளியான (Lancet) ன்ற பத்திரிகையில் சொல்லி யிருப்பதாவது:—

கின்லோ என்ற ஓர் சமுசாரி இரண்டு தடவை விவாகஞ்செய்தான். அவனுக்கு 72 குழந்தைகள் பிறந்தன. அவைகளில் முதல் பெண்சாதிக்குப் பிறந்தது 57. அதில் நாலுதடவை ஒவ்வொரு சூலிலும் 4 குழந்தைகள் வீதமும், 7 தடவை 3 குழந்தைகள் வீதமும், 10 தடவை இரட்டைப் பிள்ளைகளாகவும் பிறந்தன. இரண்டாவது பெண்சாதிக்கு ஒரு சூலில் 3 குழந்தைகளும், 6 சூலில் இரட்டைக் குழந்தைகளும் பிறந்தன என்று எழுதியிருப்பதால் ஒரே சூலில் பல குழந்தைகள் பிறப்பதற்கு ஆணும் காரணமாக யிருக்கலாம் என்று தெரிய வருகிறது. ஆனால் இவ்விதம் நேரிடுவது அபூர்வம்.

## சினைப்பைகள் மாறிமாறி வேலை செய்தல்.

### (The Alternate Action of the Ovaries.)

மாதாந்தர ருது காணும் காலத்தில் ஒருமாதம் வலதுசினைப்பையும், மறுமாதம் இடது சினைப்பையும் தன்னிடத்திலுள்ள முட்டையை வெளியாக்குகின்றது. இதற்குத்தாட்சி:—(1) மாதாந்தர ருது காலத்தில் இயற்கையில் ஸ்திரீகளுக்கு நோவில்லாதிருப்பினும்சிலருக்கு நோவணுகுவதுண்டு. அவர்களைவிசாரித்தால் ஒருமாதம் ஒரு பக்கத்தில் நோவிருக்கும், மறுமாதம் அடுத்த பக்கத்தில் நோவிருக்குமென்று சொல்வார்கள். சிலருக்கு ஒரு பக்கத்தில் மட்டும் ஒருமாதம் விட்டு மறுமாதம் நோவுண்டாவதுண்டு. ஏனெனில் மாதாந்தர ருதுவானது சினைப்பையிலுள்ள முட்டை முதிர்ந்து வெளியாவதற்குக் குறி. அக்காலத்தில் எந்த சினைப்பையில் நோயுண்டோ அதில் நோவுகாணும். சிலருக்கு வலியேயிராது. அது சுக சரீரம். சிலருக்கு ஒரு பக்கத்தில மாத்திரம் இரண்டு மாதத்திற் கொருதடவை வலியுண்டாகும். எந்தப் பக்கத்தில் நோவிருக்கிறதோ, அந்தப் பக்கததிலுள்ள சினைப்பையில் குரோதம் ஏற்பட்டிருப்பதைக் குறிக்கும். அந்த வலியானது வலது அல்லது இடது முதுகெலும்பையொட்டி புட்டம் வரைக்குமிருக்கும். மாதந்தோறும் வலியுள்ளவர்களுக்கு இரண்டு சினைப்பைகளிலும் குரோதம் உண்டென்பதை யறியவும்.

(2) எந்தப் பக்கத்து சினைப்பையில் வலியிருக்கிறதோ அந்தப் பக்கத்திலுள்ள ஸதன்யத்திலும் நோவுண்டாகும். ஏனெனில், சிசுவுற்பத்திக்கு மூலாதாரமான சினைப்பைகளுக்கும் ஸ்தன்யங்களுக்கும் இயற்கையிலேயே தொந்தம் ஏற்படுத்தி யிருக்கின்றார் ஈசன். ஆகையால் சூதக காலததில் எந்தப் பக்கத்தில் வலி காணுகிறதோ அந்தப்பக்கத்திலுள்ள ஸதன்னியத்திலும் அகோர வேதனை யுண்டாவதால், ஸ்திரீ அந்தப் பக்கம் சாய்ந்துபடுக்கச் சக்தியற்றவளாகிறாள். வலது பக்கத்து ஸ்தன்னியத்தில வலியுண்டாகிற காலத்தில் அந்தப் பக்கத்திலுள்ள சினைப்பையானது தடித்து, முற்றியிருக்கும் சினையை வெளியாக்கும். ஆதலால் அவ்வித சூதகம் வெளிப்படுவதற்கு நாலைந்து தினங்களுககு முன்னதாகவே சம்போகம் செய்து ஸ்திரீயும் வலது பக்கமாகவே சாய்ந்து படுக்கும் வழக்கத்தை அனுசரிப்பாளாயின், அக்காலத்தில் ஜனிக்கும் குழந்தை ஆணாகவே யிருக்குமென்று திட்டமாய்ச் சொல்லலாம்.

பசு கன்று யீன்ற மாதத்தில் உஷ்ணமீறி கதறும்பொழுது உடனே காளையோடு சேர்த்து வந்தால் காளையும் கிடாரியும்

மாறி மாறிப் பிறக்கும். இந்த இரகசியத்தை யறிந்தவர்கள் கன்று யீன்ற முதல் மாதம் காளைகள் பக்கத்தில் சேரவிடாமல் தடுத்து இரண்டாவது மாதத்தில் அதற்கு உஷ்ணம் அதிகரித்து கதறும் பொழுது பொலிச்சலுக் கிடங்கொடுத்தால் முந்தின தடவை ஈன்ற கன்றின் வகையையே பிறப்பிக்கும். அதாவது காளையானால் காளையும் கிடாரியானால் கிடாரியும் பிறக்கும்.

## பிறக்கப் போகும் குழந்தை ஆணோ பெண்ணோ வென்று குறி சொல்லுதல்.

## (The Fore-casting or Prediction of the Sex of the Coming Child, and the production of Sex at Will.)

பிறக்கப்போகும் குழந்தை ஆணோ பெண்ணோ வென்று கணித்துச் சொல்வது மிக்க எளிதேயாயினும், சிற்சில காரணங்களால் தவறிவிடுவதுமுண்டு. ஏனெனில் சாதாரணமாய் 28 நாளைக் கொருதடவை மாதாந்தர ருது காணுவது கிரமமா யிருக்கச் சிலருக்கு 21 நாளிலும், சிலருக்கு 30 நாளிலும், இன்னுஞ் சிலருக்கு மாதமிரு முறையுமாக கிரமந்தப்பி வெளியாகிறதால் கணிதம பிசகாகிவிடலாம். மேலும், மாதமொன்றுக்கு 28 நாளாக 10 மீ அல்லது 7 நாள் கொண்ட 40 வாரங்களாகிய 280 நாட்களே பூரண கர்ப்பத்திற்குரிய நாட்கள். இதுவே சரியான கணிதத்திற் குரித்தானவை. அகாலப் பிரசவங்களும், பிண்ட சேதங்களும் நேர்ந்தவர்களுக்கு பின் பிறக்கப் போகும் குழந்தை இன்னதென்று கணித்துச் சொல்வது கஷ்டமான காரியம்.

பிறக்கப் போகும் குழந்தை ஆணோ பெண்ணோவென்று கணித்துச் சொல்வதற்கும், தங்களிஷ்டம்போல் ஆண் அல்லது பெண் சிசுவைப்பெற விரும்புகிறவர்களுக்கு நடந்துகொள்ள வேண்டிய விதத்தைத் தெரிவிப்பதற்கும் முன அவர்களிடமிருந்து அறிந்துகொள்ள வேண்டிய விஷயங்கள் சில உண்டு. அதற்காகக் கேட்கவேண்டிய

கேள்விகளாவன:—

(1) எத்தனை நாளைக்கொருடவை உனக்கு மாதாந்தர ருது காண்பதுண்டு?

(2) அவைகளெத்தனை நாள்வரை யிருக்கும்?

(3) மாதந்தோறும் சூதகம் கிரமமாய் வருகிறதுண்டா?

(4) சூதகம் வருகிற காலத்தில் எந்தப் பக்கத்திலாவது நோவுண்டா?

(5) உனக்கு அப்பொழுது எந்தப் பக்கத்தில் நோவிருந்தது? அந்தக் காலத்தில் எந்த ஸ்தனத்தில் வலியிருந்தது?

(6) கடைசியாக, உனக்குச் சூதகம் வந்த வருஷம், மாசம், தேதியென்ன?

(7) கடைசியாக, உனக்குக் குழந்தை பிறந்த ௵, ௴, தேதியென்ன?

(8) கடைசியில் பிறந்த குழந்தை ஆணா பெண்ணா? அதற்கு எத்தனை மாதம் பால் கொடுத்தாய்? குழந்தை பிறந்தபின் உனக்கு சூதகம் வந்த மாசம் தேதியென்ன?

(9) அந்தக் குழந்தை பிறந்தபின் ஏதாவது பிண்டச்சேதம் அல்லது அகாலப் பிரசவம் நேர்ந்ததுண்டா? எப்பொழுது?

(10) கடைசியாகக் குழந்தை பிறந்த தேதி தெரிந்தால் அதிலிருந்து நாற்பது வாரங்களைப் பின்னாகக் கணிக்க அக்குழந்தை ஜெனித்த அண்டக்கரு உற்பத்தியான சூதக மாதம் தெரியும். அந்தக் குழந்தை ஆணா அல்லது பெண்ணா என்று தெரிந்திருப்பதால் அந்த சூதக மாதத்திலிருந்து முறையே ஒன்றுவிட்டொன்றாய் தள்ளிக் கணக்குப் பார்க்க பிறக்கப் போகும் குழந்தை ஜனித்த சூதகமாதம் தெரியும்.

## சூதக கணித வாய்ப்பாடு.

7 நாள் கொண்டது 1 வாரம்.

4 வாரம் அல்லது 28 நாள்—1 சூதக மாதம்.

10 சூதக மாதம் அல்லது 280 நாள்—குழந்தை பிறக்கும் காலம். ஆகவே ஒரு வருஷத்திற்கு 13 சூதக மாதங்களுண்டு. இக்கணிதத்தைத் தவறாமல் கணிதமாய்ப் பார்த்தால் பிறக்கப் போகும் குழந்தை ஜனித்த அண்டக்கரு உற்பத்தியான தேதியில் ஆண் கருவோ, பெண் கருவோ, வெளியாகி யிருக்க வேண்டுமென்பதைத் திட்டமாய்க் கணித்துச் சொல்லலாம். சில உதாரணங்கள் கூறுவோம்:—

கடைசியாகப் பிறந்த குழந்தை தை மாசத்தில் ஆணாக ஜனித்திருந்தால் அடுத்த தை மாசத்தில் ஜனிக்கும் குழந்தை 14-வது சூதக மாசத்தில அதாவது இரட்டை மாசத்தில ஜனிப்பதால் பெண்ணாக யிருக்கும். விக்டோரியா மகாராணிக்கு 1840-ம் வரு

ஷம் நவம்பர்மீ 21-ம் தேதி ஓர் பெண்குழந்தை தலைப்பிள்ளையா கப் பிறந்தது. இரண்டாவது குழந்தை எட்வர்ட் ராஜா 1841-ம் வருஷம் நவம்பர்மீ 9-ம் தேதி பிறந்தார்.

ஒரு ஸ்திரீக்கு 1901-ம் வருஷம் ஜுன்மீ 15-ம் தேதி ஒரு பையன் பிறந்தான். 1903-ம் வருஷம் ஜுன்மீ 12-ம் தேதியிலும் அதே விதமாக ஒரு பையன் பிறந்தான். இதிலிருந்து நாம் தெரிந்துகொள்வதியாதெனில் 1901-ம் வருஷம் ஜுன்மாசத்தில் ஒருத்திக்கு ஆண் பிறந்தால் அவளுக்கு அடுத்த வருஷம் ஜுன்மாதத்தில் குழந்தை பிறந்தால் பெண்ணாகவிருக்கும். அது நீங்கி 1903-ம் வருஷம் ஜுன்மாசத்தில் பிறந்தால் அது ஆணாகவே யிருக்கும். அதற்குப் பதிலாய் மே மாசத்தில அல்லது ஜுலைமாசத்தில் அந்தக் குழந்தை பிறந்தால் அது பெண்ணாகவே யிருக்கும்.

தற்காலத்தில் ஆகாயவிமானந் தோன்றி யாவரையும் பிரமிக்கச் செய்வதுபோலும், (X Ray) எக்ஸ் ரே வெளிச்சத்தின் உதவியால் மனுஷ சரீரத்திலுள் பதிந்திருக்கும் குண்டுகளின் துணிக்கைகள், விழுங்கப்பட்ட ஊசி முதலியவை தங்கியிருக்கும் இடத்தைக் கண்டுபிடித்து சத்திர சிகிச்சை செய்வதுபோலும், ஸ்திரீயின் வலது அல்லது இடப்பக்கங்களிலுள்ள சினைப்பைகள் மாறி மாறி ஒன்றுவிட்டொன்று மாதங்களில தம்மிலுள்ள அண்டக் கருவைப் பக்குவப்படுத்தி வெளியாக்குங் காலத்தை (Rentgen Ray) ராண்டஜன் ரே முதலிய வெளிச்சக் கருவிகளின் உதவியால் கண்டுபிடிக்கும் காலம் சீக்கிரம் வெளிவரும். அப்பொழுது மகவாசையால் மனமேங்கித் திரியும் மன்னரும் மற்றவர்களும் தத்தமக்குத் தேவையான புத்திரரை தமதிஷ்டம்போல பெற்று சுகிக்கும் சிலாக்கியத்தை யடைவர். அதுவரையில் நாம் இப்பொழுது குறித்துக் காண்பித்திருக்கும் கணிதத்தின் உதவியால் ஆண் பெண் பிறக்குங் காலத்தைக் கணித்து அதற்குவேண்டிய பிரயத்தனங்கள் செய்து தமதிஷ்டம்போல் புத்திரரைப் பெற்று சுகித்து வாழ்வார்களாகவும்.

ஓம்! சுபம்!! சுபம்!!!

---

## பொய்க் கர்ப்பம்.

ஸ்திரீகளுக்கு வாயுவானது அதிகரித்து சூதகத்தில் ஒருதுளியேனும் வெளிவரவொட்டாமல் உள்ளேயே தடுத்து வயிற்றைப் பருக்கச்செய்து கெர்ப்பஸ்திரீகளுக்கு உள்ள குறிகளை உண்டாக்கும். இதை குன்மக்கட்டி, சோணிதக்கட்டி, இரத்த குன்ம

ரோகம், இரத்த வாத குன்மரோகம் என்பர். கெர்ப்பஸ்திரீகளுக் கிருப்பதுபோலவே சூதகந் தடைப்படல், பசிமந்தம், ஸ்தனம் வயிறு முதலியன பெருத்தல், தேகம் நிறம் மாறுதல். கலவியில் வெறுப்பு, வாந்தி, அரோசிகம், ஆயாசம், ஸ்தனங்களில் பால் சுரக்குதல், மார்பு துடித்தல். உதிரக்கட்டியானது கர்ப்பத்தைப் போலவே கைக்குத் தென்படுதல், சிலசமயங்களில் சிசுவைப்போலவே அசைந்துகொண்டிருக்குதல் முதலிய பல குறிகள் காணப்படும். மறிபட்ட இரத்தமானது கெட்டியாகத் திரண்டு கட்டின கெட்ட ரத்தக் கட்டியாகையால் சிசுவைப்போலவே வயிற்றில் சூலை முதலிய உபத்திரவங்களை யுண்டாக்கி விலாப்பக்கங்களில் பாய்வதும் அசைவதும் சிற்சிலவேளை கொஞ்சமாய் அசையுங் குறியுந் தோன்றும். ஆனால் சிசுவைப்போல் விர்த்தியடையாது. சிலருக்கு பிரசவ வேதனைபோல் இடுப்புவலி கண்டு இரத்தக்கட்டி வெளிப்படுவதுமுண்டு. சிலருக்கு இதனாலேயே மரணம் சம்பவிக்கலாம். சிலருக்கு இக்கட்டியானது மருந்தினால் வெளிப்படும்.

மெய்க்கர்ப்பத்திற்கும் பொய்க்கர்ப்பத்திற்கும் உள்ள வித்தியாசங்களாவன:—

(1) கர்ப்பவதியின் அடிவயிறு ஆரம்பத்தில் கருக்குழியைச் சார்ந்து ஒட்டி உள்ளடங்கி பின்னர் கரு வளர வளர சிறுகச் சிறுகப் பருத்துக்கொண்டே வரும். கட்டியினால் தோன்றிய பொய்க்கர்ப்பமோ முதலிலேயே வயிற்றைப் பருக்கச் செய்யும்.

(2) கர்ப்பமானது மூன்றுமாதங்களுக்கு முன் அசையாது. பொய்க்கர்ப்பமோ அதற்கு முன்னதாகவே மெதுவாய் அசையும்.

(3) கர்ப்பத்தை விரல்களினால் அழுத்திப் பார்த்தால் சீக்கிரம் அழுந்தாது, அழுந்தினபோதிலும் படிப்படியாகப் பழைய ஸ்திதிக்கே வரும். பொய்க்கர்ப்பமானால் உடனே உள்ளழுந்திவிடும். கையை எடுத்தவுடனே பழையபடி வந்துவிடும்.

(4) மெய்யான கர்ப்பமானால் பத்துமாதங்களுக் கதிகம் கர்ப்பத்திலிராது. சூதகக்கட்டியானால் நான்கு அல்லது ஐந்துவருஷம் மட்டும் வயிற்றில் தங்கியிருக்கும்.

(5) கர்ப்பஸ்திரீயின் சிறுநீரை ஒரு பாத்திரத்தில் பிடித்து நான்குநாள் வைத்திருந்து அதன்பின் அதனை வடிகட்டிப் பார்க்க, அதில் சிறுகிருமிகள் தோன்றினால் கர்ப்பமென்றும் இல்லையானால் கர்ப்பமில்லையென்றும் அறிந்துகொள்ளலாம்.

(6) ஸ்திரீயின் சிறுநீரையெடுத்து அதில் பூனைக்காஞ்சூரி இலையைப் போட்டு ஓரிரவு முழுதும் வைத்திருந்து காலையில் எடுத்துப் பார்த்தால் அந்த இலையில் செம்புள்ளி தோன்றின் கருப்பமென்றும், கரும்புள்ளிதோன்றின் கருப்பமில்லையென்றும் அறிந்துகொள்ளலாம்.

(7) ஸ்திரீ இரவில் நித்திரைக்குப் போகுமுன் ஒரு தேயிலைக் கரண்டி சுத்தமான தேனில் ஒரு தேயிலைக்கரண்டி சுத்த ஜலங் கலந்து குடித்துவிட்டு தூங்கினால் மறுநாட் காலையில் வயிற்றில் வலியிருந்தால் கர்ப்பமென்றும் வலியில்லாவிட்டால் கர்ப்பமில்லையென்றும் தெரிந்துகொள்ளலாம்.

(8) ஸ்திரீ நித்திரைக்குப் போகும்போது வெள்ளைப் பூண்டின் மேல்தோலையுரித்துவிட்டு அதனை மர்மஸ்தானத்திலுள்வைத்துக்கொண்டுறங்கி அதிகாலையில் எடுத்துப் பார்க்க வெள்ளைப் பூண்டின் வாசனை யில்லையாயின் கர்ப்பமென்றும், வாசனையிருக்கின் கர்ப்பமில்லையென்றும் அறிந்துகொள்ளலாம்.

---

## கர்ப்பத்தில் சிசுவளருதல்.

1. முதல் 5, வரையுள்ள படங்களில் முட்டையானது சினைப் பாதை வழியாக கருப்பையினுள் வந்து சேர்ந்த நாள் முதல் அதைச்சுற்றி மாயைபடர ஆரம்பித்து கருவை முற்றிலுஞ்சுற்றிப் படரும் நாள்வரை யுண்டாகும் மாறுதல்களைக் காட்டியிருக்கிறது.

சுக்கிலக் கிருமிகள் சுரோணித முட்டையில் சென்று கருவுயிர்த்த முதல் நாளில் சிசுவானது கண்ணுக்குத் தோன்றாத அணுவத்தனையாயிருந்தபோதிலும் விரைவில் வளரத்தொடங்கி பத்து நாளில் கடுகத்தனைப் பருமனும் பிசின் தன்மையுள்ளதுமாய்ப் பனிங்குபோல் தோன்றும். பன்னிரண்டாம் நாளில் மிளகளவு பெரிதாகி அதனுள்ளிருக்கும் நீரில் ஓர் வெள்ளைப்புள்ளி சற்று நீளமுள்ளதாய்க் கண்ணுக்குத் தோன்றும்.

இருபத்தோராம் நாளில் இலந்தைப் பழப்பருமனாய் உருண்டை வடிவானதுமாறிப் புழுவைப்போல் நாலு குன்றுமணி நிறையுள்ளதாய்த் தோன்றும்.













3 வது வாரம்.



30-ம் நாள் தோற்றம் இதில் [illegible]ாடி வழியாய்ச் சிசுவின் [illegible]புக்குரிய சாரம் செல் [illegible]ண்பித்திருக்கிறது.

முப்பதாம் நாளில் பிண்டமானது சுண்டைக்காய்ப் பிரமாணமான புழுவாய் அரை அங்குல நீளமுள்ளதாய்த் தோற்றும். அன்றியும் இரத்த சரங்களாலாகிய அழகான சொறசொறப்புள்ள போர்வை போன்ற புறக்கவசத்தால் மூடப்பட்டிருப்பதுடன், உட்கவசமும் பனிநீரும் இதற்குள் உண்டு. சரீரத்தைவிடத் தலை பெரிதாயிருக்கும்.

[illegible]ந்து வாரத்தில் சரீரத்தைவிடச் சிரசு பெரிதாகவும் நேத்[illegible]ானத்தில் இரண்டு புள்ளிகளுள்ளதாகவுந் தோற்றும் [illegible]து வாரத்தில் நேத்திரங்களும் செவிகளுமுண்டாகி, அஸ்[illegible]மூளை, ஈரல் முதலியவைகளின் குறிதோன்றிப் பிண்டம் [illegible] அங்குல நீளமாகும்.



2-ம் மாதம்.

இரண்டாவது மாதத்தில் கண், காது, மூக்கு, வாய், நெற்றி, இருதயம், மூளை, ஈரல், கழுத்து முதலியவற்றின் குறி தோன்றிச் சரீரத்தில் மூன்றிலொருபாகம் சிரசாயிருக்கும். பிண்டம் எலிக்குஞ்சுபோல் ஒன்றரை அங்குல நீளமுள்ளதா யிருக்கும்.



3-ம் மாதம்.

மூன்றாவது மாதத்தில் கண்ணிமையானது கண்ணை மூடியிருப்பது தெரியும். உதடுகள் ஒன்றோடொன்று பொருந்தி யிருக்கும். பிண்டமானது ஆண் பெண் என்று தெளிவாய்த் தெரியத்தக்கதாக ஆண் பெண் உறுப்புகள் தோன்றும். கைகால் விரல்கள் நன்றாய்த் தெரியும். சரீரத்தில் இரத்த வோட்டமுண்டாகி இருதயம் பலக்க அடிக்கிறது கேட்கும். பிண்டத்தின் நீளம் நாலு அல்லது ஐந்து அங்குலம். நிறை இரண்டுமுதல் நாலு அவுன்ஸ் வரை இருக்கும்.



4-வது மாதம்.

நாலாவது மாதத்தில் பிண்டத்திற்குச் சிசுவென்று பெயராகும். நீளம் ஆறு முதல் எட்டு அங்குலம். நிறை ஏழுமுதல் எட்டு அவுன்ஸ். தோல் ரோஜா புஷ்பம்போல சிவந்து தசை வளர்ந்திருக்கும். கண், வாய், மூக்கு, முகம் இவைகள் இருக்கும். இம்மாதத்தில் சிசுவானது தாயின் கர்ப்பத்தில சுழன்றுகொண்டு வருவது தோன்றும். இக்காலத்தில் வெளியாகும் சிசு சில நேரங்கள் உயிரோடிருக்கும்.



5-வது மாதம்.

ஐந்தாவது மாதத்தில் சிசுவின் நீளம் எட்டு முதல் பத்து அங்குலம். நிறை எட்டு முதல் பதினொரு அவுன்ஸ்.



6 வது மாதம்.

ஆறாவது மாதத்தில் பன்னிரண்டரை அங்குல நீளமும் ஒரு பவுண் நிறையுமாயிருக்கும். சிரசு, கண் பட்டைகளில் உரோமம் தோன்றும்.



7-வது மாதம்.

ஏழாவது மாதத்தில் ஒவ்வொரு அவயவமும் பூர்த்தியாக வளர்ந்து முகத்திலுள்ள ஒவ்வொரு உறுப்புகளும் முழுப்பாகமாய்த் துலங்குவதோடு எலும்புகளெல்லாம உறுதியாகிச் சிசு பூரணப்படும். நீளம் பன்னிரண்டு முதல் பதினைந்து அங்குலம். நிறை ஏறக்குறைய மூன்று பவுண். இக்காலத்தில் சிசு பிறந்து அதிக பத்திரமாய்ப் பாதுகாக்கப்பட்டால் பிழைத்துக்கொள்ளும். ஆனால் அதிக பலஹீனமாயிருப்பதால் அதை ஜலம்விட்டு ஸ்நானம் செய்விக்கமுடியாது. ஆதலால் கடற்காளானை (Sponge)த் தண்ணீரில் தோய்த்து மெதுவாய்த் தேகத்தைச் சுத்தப்படுத்த வேண்டும். பால் குடிக்கிற நேரந் தவிர மற்ற நேரங்களிலெல்லாம் அமைதியாய்த் தூங்க இடங் கொடுக்கவேண்டும். மேலும் அவ்விதக் குழந்தைக்குப் போதுமான அனல் உண்டாக்கக் கூடிய சக்தி இல்லாதிருப்பதால கோழியானது தன் குஞ்சுகளைத் தன் செட்டைக்குள் வைத்து அனலுண்டாக்குமாப்போல குழந்தையைக் கம்பளித் துணிகளில சுற்றித் தாயின்முன் இடுக்க வேண்டும. அல்லது வேறொருவர் மடியில் வைத்து அனலுண்டாக்க வேண்டும்.



எட்டாவது மாதத்தில் சிசுவின் நீளம் பதினாறு முதல் பதினெட்டு அங்குலம். நிறை நாலு முதல் ஐந்து பவுன். சரீரமெல்லாஞ் சிவந்து ரோமத்துவாரங்கள் மிக நுட்பமாக ஏற்பட்டு ரோமங்களும் சிறிய குருத்துகளாகத் தோன்றும்.

ஒன்பதாவது மாதத்தில் சிசுவின் நீளம் பத்தொன்பது முதல் இருபத்தொரு அங்குலம். நிறை நாலு முதல் ஐந்து பவுன். சர்வாங்கங்களும் வளர்ந்து பருத்து வலுவேறி ரோமங்களெல்லாம் நன்றாய் வளர்ந்திருக்கும். சிசுவானது தன் இரு கரங்களையும் முன்னாலே குவித்து, தலையையும் கால்களையும் மடக்கி அண்ட வடிவமாக வளைந்துகொண்டு தலை கீழாய்ச் சராயு என்னப்பட்ட பையிலே அசைவாடிக் கொண்டும் அடிக்கடி புரண்டும் நீண்டும் நிமிர்ந்தும் துடித்துக் கொண்டிருக்கும்.

---

ஒன்பது மாதச் சிசுவின் தோற்றத்தைக் குறிப்பிடும் படத்தை 23-ம் பக்கத்தில் பார்க்கலாம்.

## கருத்தரித்தபின் கருப்பையின் மாறுதல்.

சினைப்பையிலிருந்து முட்டைக்கருவானது கருக்குழியில் வந்து சேரும்போது கோழிமுட்டைக்குள் கருவிருப்பதுபோல் இரண்டு சவ்வுகளாலேற்பட்ட ஓர் பைக்குள்ளிருக்கும். அந்த இரண்டு சவ்வுகளும் உட்கவசம், புறக்கவசம் என்று சொல்லப் படும். கருத்தரித்தவுடன் கருப்பாசயம் மாறுதலடைகிறது. அதிலுள்ள இரத்தசரங்கள் அதிவேகத்துடன் ஓர்வித நீரைக் கக்குகின்றன. அந்த நீரிலிருந்து ஒரு ஜவ்வு உண்டாகிறது. அந்த ஜவ்வை இரண்டு புரைகளாகப் பிரிக்கலாம். மேற்புரை ஜவ்வு கர்ப்பாசயத்தோடும் கீழ்ப்புரைச் சவ்வு முன் சொல்லிய புறக்கவசத்தோடும் ஒட்டிக்கொள்ளுகின்றன. மேற்புரை ஜவ்வானது பிரசவமாகிறபரியந்தம் கர்ப்பாசயத்தின் ஜவ்வாகவே யிருந்து பிரசவமானபின் புறக்கவசத்தோடு ஒருபாகமும மற்றது அழுக்கோடும் வருகின்றது. கீழ்ப்புரை ஜவ்வானது அதிக மெல்லியதாயினும், கரு வளர வளரப் பின்னும் மெல்லியதாகிறது. கருத்தரித்த நான்குமாதம்வரை இதுவும கருவும் ஒன்றுபட்டிருந்தாலும இவ்விரண்டையும் தனித்தனி பிரிக்கலாம். ஐந்துமாதத்திற்குப் பிறகு கரு முதிர்ந்துவிடுவதால இந்த ஜவ்வின அடையாளந் தெரியாது.

மேற்புரை ஜவ்வு கருப்பையோடு அணைந்திருக்கிற ஸ்தானத்தில் அதி தீவிரமாய் வளர்வதால் அதிலிருந்தே நஞ்சு அல்லது மாயை உண்டாகின்றது.

---

### மாயை.

இந்த மாயை பஞ்சுபோல் மிருதுவாய் இரத்த சரங்களால் ஏற்பட்டுக் கர்ப்பாசயத்திற்கு உட்புறத்தில் கனத்து வட்டமாய் ஒட்டிக்கொண்டிருக்கும். மாயையிலிருக்கிற இரத்த சரங்களின் குஞ்சம் கருப்பையின இரத்த சரங்களுக்கு மத்தியில் சென்று இரத்தத்தைக் கிரகிக்கின்றது. மாயை ஒட்டிக்கொண்டிருக்கிற ஸ்தானம் ஒவ்வொருவருக்கும் வித்தியாசமாக விருக்கும். சாதாரணமாய் இடது பக்கம் ஒட்டிக்கொண்டிருப்பது வழக்கம். சிசுவின நாபிக்கொடியோடு இது பொருந்தியிருப்பதால, தாய்க்கும் சிசுவுக்கும் சம்பந்தத்தை உண்டுபண்ணுவது இந்த மாயையே. கருத்தரித்த பூரணமாதம் வரை இம்மாயையானது கருவின் உபாங்கம்போல் காணப்படாது. சிசு கருப்பையில் இருக்கும் காலத்தில் சுவாசிப்பதற்கும, தாய் சாப்பிடும அன்னபானாதிகளின் சாரம் சிசுவினிடம் சென்று அதைப் போஷிப்பதற்கும இந்த மாயையே மூலாதாரம். இதிலுள்ள இரத்தசரங்கள் தாயின் அன்னசாரத்தை நாபிக்கொடி மூலமாய்ச் சிசுவினிடம் சேர்க்கின்றன. தாயின் கர்ப்பாசயத்திலிருக்கும் ஒவ்வொரு பிண்டத்திற்கும் தனித்தனியே ஒவ்வொரு மாயை உண்டு. அதற்குள் அநேக

இரத்தக் குழாய்கள் பின்னிக்கொண்டிருப்பதால் ஓர் இரத்த வரி போல் தோன்றும். இதன் மூலமாகவே சிசு வளர்வதற்கு வேண்டிய ஆகாரமும் ஆகாயமும் உட்செல்லும். சிசு வளர வளர நஞ்சை அதைவிட்டுப் பிரிந்தபோதிலும் அதிலிருந்து சிசுவின் நாபிக்குச் செல்லும் இரத்தக் குழாய்களின் மூலமாக உணவும் ஆகாயமும் சென்றுகொண்டிருக்கும். இதனடியில் சிசுவைச் சுற்றி ஒன்றுமொரு ஜவ்வு மூடிக்கொண்டிருக்கும். அந்தப் பைக்குளிருக்கும் நீரில் சிசு மிதந்துகொண்டிருக்கும். சிசுவின் மெல்லிய சரீரத்தில் எந்தவித அடியும் அழுத்தலும் தாக்காதபடி அதைப்பாதுகாத்துக்கொள்வது அந்தநீரும், தாயின் அடிவயிற்றிலுள்ள உறுதியான மாம்சதசையுமே.

## நாபிக்கொடி.

நாபிக்கொடி அல்லது தொப்புள் கொடியானது சிசுவின் நாபியோடும் மாயையின் மத்தியிலும் ஒட்டிக்கொண்டிருக்கும். சில சமயம் மாயையின் ஓரத்திலும் ஒட்டிக்கொண்டிருப்பதுண்டு. இது 12 அங்குலம் முதல் 50 அங்குலம் வரை நீளமுள்ளதாயச் சில சமயம் சிசுவின் கழுத்தைச் சுற்றிக்கொண்டிருக்கும். இந்தத் தொப்புள்கொடி சிசுவின் சதை வலுப்பின் உட்புறத்திலிருந்துவரும் இரண்டு நாடிகளாலும் மாயையினின்று இரத்தத்தைச் சிசுவிற்குத் திருப்பிக்கொண்டு வருகிற ஒரு நாளத்தினாலும் உண்டானது. இந்த இரத்த சரங்களெல்லாம் பிசின் தன்மையுள்ள ஓர் வஸ்துவினால் ஒட்டப்பட்டு முறுக்குற்று நெளிந்திருக்கின்றன. சிசு ஜனித்தது சுமார் 20 நிமிஷம் சென்றபிறகு அதிலிருக்கிற நாடி ஓட்டம் நின்றுவிடும். நாபிகொடியைத் துண்டித்த பிறகு அது 5, அல்லது 6-ம் நாளில் உலர்ந்து விழுந்துவிடும்.

## பனி நீர்.

கருவானது கருக்குழியில் வரும்போது உட்கவசம் புறக்கவசம் ஆகிய இரண்டு ஜவ்வுகளால் உண்டான ஒரு பைக்குள் இருக்கும் என்று கவனித்தோம். அந்தப்பையில் ஓர்வித நீருண்டு. அதற்கு கெர்பஜலம் அல்லது பனிநீர் என்று பெயர். அந்தநீரில் சிசு மிதந்துகொண்டிருக்கும். அதில ஜலமும் உப்புகளும் உண்டு. சிலருக்கு அது குறைவாகவும் மற்றவர்களுக்கு அதிகமாகவுமிருக்கும். (1) ஆரம்பத்தில் சிசுவைப் போஷிப்பதற்கும், (2) உஷ்ணத்தைச் சமாசப்படுத்துவதற்கும், (3) கவசங்களை யகற்றுவதற்கும், (4) கர்ப்பாசயத்தின் பழுவினாலும், அடி முதலியவற்றினாலும் சிசுவுக்கொரு தீங்கும் நேரிடாதபடிக்கும், (5) பிரசவ காலத்தில் சிசுவரும் வழியான கர்ப்பாசயவாயை விசாலப்படுத்துவதற்காக ஓர் ஆப்பு போலாகும்படிக்கும், அளவற்ற ஞானமுடைய அற்புதக் கடவுள் உதய ஜலத்தை ஏற்படுத்தி யிருக்கிறார்.

கும் இவ்வித ஏற்பாட்டினால் பிரசவம் ஆரம்பிக்கும்பொழுது குழந்தை எளிதில் ஜனிக்கத்தக்க ஸ்திதியிலிருக்கிறது. ஏனெனில் சிசுவின் தலை முன் வெளிவருவதால் தாய்க்கும் பிள்ளைக்கும் நன்மையுண்டு. கருப்பையின் இடம் அதிகச் சிறியதாயிருப்பதால் சிசுவானது கைகால்களை மடக்கிக்கொண்டு சுருண்டு கிடப்பதைப் பார்க்கிறோம். குழந்தை பிறக்கும் சமயத்தில் தாயின் சரீரக்கட்டுகள் தளர்ந்து கருப்பை சுருங்கி நெருக்குவதால் தாய்க்கு வலியுண்டாகும். அது ஆரம்பத்தில் லேசாகவும் அதிக நேரத்துக்குப் பின்னும் வந்துகொண்டிருக்கும். பிற்பாடு நேரஞ் செல்லச் செல்ல கருப்பையானது அதிகமாய் நெருங்கிச் சுருங்குவதாலும், ஸ்திரீயின் அடிவயிற்றின் மாம்சதசை சுருங்கித் தள்ளுவதனாலும், யோனித்துவாரம் விரிந்து கொடுப்பதனாலும் வலி அதிகரித்து அடிக்கடி உண்டாகும். அப்பொழுது பிள்ளையைச் சுற்றியிருக்கும் பை உடைந்து அதனுள்ளிருக்கும் நீர் வெளியாகும். சிறிது நேரத்திற்குள் சிசுவின் தலைதோன்றி குழந்தை பிறக்கும். அப்போது நஞ்சுக்கொடியும் மற்றுமுடைந்த ஜவ்வுகளும் வெளியேறும். அச்சமயத்தில் உடைந்த இரத்தக் குழாய்களிலிருந்து உதிரம் தாராளமாய் வரும். பின்பு அதை நிறுத்தும்படி கருப்பை சுருங்குவதால் அவைகளுஞ் சுருங்கித் தத்தம் ஸ்தானத்திற்கு வரும். குழந்தை பிறப்பதற்கு முன் உண்டாகும் அகோரவலி நீக்கும்பொருட்டுத் தற்காலத்தில் க்ளோரபாரம் என்னும் ஔஷதத்தைக் கொடுப்பது வழக்கம். ஆரம்பத்தில் க்ளோரபாரம் உபயோகிக்கக்கூடாதென்று அநேகர் தடுத்தபோதிலும் ஸ்ரீ நாயகமாகிய விக்டோரியா மகாராணியே இவ் வௌஷதத்துக்கு இடங்கொடுத்துக் குழந்தை பெற்றார்களென்று பிரசித்தியானவுடன் ஆங்கிலேய ஸ்திரீகளெல்லாரும் அப்பிரயோகத்திற்கு இடங்கொடுத்துச் சுகமாய்ப் பிரசவித்து வருகிறார்கள்.

குழந்தை பிறந்தபின் சிலநாட்களாக மீருந்திருக்கும் நஞ்சு பாசிபோல் உதிரத்தோடு சேர்ந்து வெளியேறும். இந்நாட்களில் அனாவசியமாய் உதிரப்பிரவாகம் உண்டாகாதபடிக்குக் கருப்பை சுருங்க வேண்டியது அவசியம். ஆகையால் கருப்பைக்குக் கிளர்ச்சி உண்டாகும்படி குழந்தையைச் சீக்கிரம் பால்குடிக்கச் செய்ய வேண்டும். ஆனால் இரண்டு மூன்று நாள் வரைக்கும் சரியான பால் ஸ்தனங்களிலுண்டாகாதபடியால் குழந்தைக்கு அதனால் பிரயோஜனமிராது. ஆனால் பிறந்து இருபத்துநாலு மணி நேரம் வரைக்கும் குழந்தைக்கு யாதொரு ஆகாரமும் தேவையில்லை. அப்படித் தேவையிருக்குமாயின் தேன்கொடுப்பது வழக்கம். பிர[illegible] அல்லது பதினான்கு நாள் வரைக்கும் ஸ்திரீயானவள் படுக்கையிலிருந்து அந்தந்த அவயவங்

...ன் நத்தம் ஸ்தானங்களில் சேர்வதற்கு இடங்கொடுக்கவேண்டும். ...ற்குள்ளாக உதிரப்பெருக்கும் நின்றுவிடும். அதன்பின்பு ...ந்தது இரண்டு வாரத்திற்குள் ஸ்திரீ கடினமான வேலைகளை ஆரம்பிப்பதனாலும், மெத்தைப்படிகளில் ஏறி இறங்குவதனாலும் ...ப்படி உறுப்புகளில் சில வெளியே வந்துவிடும். பிற்பாடு அவை ...ந் தத்தம் ஸ்தானங்களில் நிறுத்துவது கடினம். ஆகையால் ...காலமான ஸ்திரீ கொஞ்ச நாளைக்கு அதிகமாய் நடமாடா ... ஜாக்கிரதையா யிருக்கவேண்டும்.

## ஆண் பெண் சிசு வுற்பத்தி.

...மதிஷ்டப் பிரகாரம் ஆண் அல்லது பெண் சிசுவைப் பெற்றி ...ம் தந்திரத்தையறிய ஒவ்வொருவருக்கும் ஆவலுண்டு. இதைப் ...ற்றிப் பலகாலங்களிலிருந்தவர்களும் பலவிதமாய்ச் சொல்லி ...க்கிறார்கள். அவைகளில் அநேகம் அநுபோகத்துக் கநுயா ...வைகளாயும் சாஸ்திரவிதிகளுக் கொத்துவாராதவைகளாயு மிருக் ...றன. உதாரணமாக:—

1. பூர்வகாலத்துச் சித்தர்களெழுதிய நூல்களில் புருஷனு ...டைய சுக்கிலம் ஸ்திரீயின் சுரதநீராகிய சுரோணிதத்தைவிட ...திகமாயின் ஆண்சிசு தரிக்குமென்றும்; குறைவாயின் பெண்சிசு தரிக்குமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வபிப்பிராயம்,

ஒருமடமாது மொருவனுமாகி யின்பசுகந்தரு மன்புபொருந்தி
யுணர்வுகலங்கி யொழுகியவிந்து வூறுசுரோணித மீதுகலந்து
பனியிலோர்பாதி சிறுதுளிமாது பண்டியில்வந்து புகுந்துதிரண்டு

...று பட்டணத்தார் கூறியதற்கும்,

அறுகுநுனி பனியனைய சிறியதுளி பெருகியொரு
வாகமாகியோர் பாலரூபமாய்,

...று அருணகிரியார் சொல்வதற்கும் ஒத்துவாராது. மேலும் தற் ...த்துப மேபாபோன டாக்டர்களும் கருப்பையில் பதனு துளி ...மேல் தங்க இடமில்லையென்றும், கருத்தரிப்பதற்குச் சுக்கிலக் ...மிகளும் சுரோணிதத்திலுள்ள சினையும் போதுமானதென்று ...சுக்கில சுரோணிதத்திலுள்ள சுரதநீரானது சுக்கிலக்கிருமிகளை ...சுரோணித முட்டையையும் கருப்பையில் கொண்டு சேர்ப்ப ...தன்றி வேறொன்றிற்கும் உதவாதென்றும் சொல்லுகிறார்கள். ... காரணமே, கருவளர்ச்சிக்குச் சுக்கில சுரோணிதம அவ ...மன்று, அநேகர் அறியாமையால் தப்பெண்ணங்கொண்டு, ...க்கடி | கலந்து கருவைக்கலக்கி விடுவதையும் விளக்கும்.

2. இன்னுஞ் சிலர் மாதர்களுக்கு மாதவிடாய் வந்த காலம் நாள் முதல் பன்னிரண்டு நாளே கருத்தரிக்குங் காலமாகுமென்றும். அந்நாட்களிலே இரட்டித்த நாட்களில் கூடிக் கருத்தரிக்குமாயின் அது ஆணாக வளையுமென்றும், ஒற்றைப்பட்ட தினத்திலே கருத்தரிக்குமாயின் அது பெண்ணாக அமையுமென்றும் சொல்லியிருக்கின்றார்கள். ஆனால் தற்கால சாஸ்திரிகள் மாதவிடாய்த்திரத்தைச் சோதித்துப் பார்த்து அதில் முட்டையிருப்பதைக் கண்டுபிடித்திருப்பதால் தூயமாவதற்குச் சில நாட்களுக்கு முன்னமே கருத்தரிக்க வேண்டுமென்றும் சொல்வதால் முன் கூறப்பட்டது தப்பிதமென விளங்கும்.

3. வேறு சிலர் புருஷபாரியர் கூடி உறவாடி நாதவிந்து கருக்குழியில் உதிக்கும்போது நாயகனுக்குச் சூரியகலை அல்லது பிங்கலையென்கிற வலது நாசித்துவாரத்தில் சுவாசமோடிக்கொண்டிருந்தால் ஆண்சிசுவும், இடகலை அல்லது சந்திரகலையென்கிற இடது நாசித்துவாரத்தில் சுவாசம் சென்றால் பெண்சிசுவும் தரிக்குமென்றும், இருகலையும் சமகுணமாய்ச் சுழிமுனை யோடினால் பெண்ணும் ஆணுமாய் இரட்டைப்பிள்ளை பிறக்குமென்றும் சொல்லுகிறார்கள். இவ்வபிப்பிராயம் சரியாயிருந்தாலும் அநுபவத்திற்கேற்காது. ஏனெனில், தான் நினைத்த பிரகாரம் சுவாசத்தை வலது அல்லது இடது நாசியிலோடச் செய்வது ஒருவேளை யோகாப்பியாசஞ் செய்பவர்களாலாகுமேயன்றி சாதாரணமானவர்கள் அவ்வாறு செய்யமுடியாது.

4. ஜெர்மனி அமெரிக்கா முதலிய தேசங்களிலுள்ள சில தேர்ந்த டாக்டர்கள் (1) புருஷனது வலது பீஜத்திலிருந்து வரும் சுக்கிலக் கிருமிகளிலொன்று ஸ்திரீயின் வலது சினைப்பையிலிருந்துவரும் முட்டையில் சென்றால் ஆண்சிசு தரிக்குமென்றும், (2) புருஷனது இடதுபீஜத்திலிருந்து வரும் சுக்கிலக் கிருமிகளிலொன்று ஸ்திரீயின் இடது சினைப்பையிலிருந்து வரும் முட்டையில் சென்றால் பெண்சிசு உற்பத்தியாகுமென்றும், (3) புருஷனது வலது பீஜ சுக்கிலக்கிருமி ஸ்திரீயின் இடதுசினைப்பை முட்டையில் சென்றால் அல்லது புருஷனது இடதுபீஜ சுக்கிலக்கிருமி ஸ்திரீயின் வலது சினைப்பை முட்டையில் தாக்கினால் கருத்தரிக்கவே மாட்டாதென்றுங் கண்டு பிடித்திருக்கிறார்கள். இதைப் பரீட்சித்துப்பார்க்க டிராஸ் என்னும் ஓர் அமெரிக்க டாக்டர் ஆண் நாயின் வலதுபீஜத்தை எடுத்துவிட்டுப் பெண்ணையோடு சேரவிட்டபொழுது குட்டிகளெல்லாம் பெண்ணாக விருந்தனவென்றும், அப்படியே இடதுபீஜத்தை எடுத்துவிட்டபொழுது ஆண்குட்டிகள் பிறந்தனவென்றுஞ் சொல்லுகிறார். இது உண்

மையா யிருக்கலாம். எளிதில் பரீட்சித்துப் பார்க்கலாம். சாஸ்திரவிதிகளுக்கும் விகற்பமாகத் தோற்றவில்லை. ஆதலால் புருஷன் தனது வலதுபீஜத்தை ஓர் அணியினால் அல்லது நாயகியின் ஓர் விரலினால் தூக்கிக்கட்டிக்கொண்டு சங்கமம் செய்யில் அதில் தரித்துப் பிறப்பது ஆணாகுமென்றும், நாயகன் தனது இடதுபீஜத்தைத் அணியினால் மேல் தூக்கிக் கட்டிக்கொண்டு சேர்வதால் பெண் பிறக்குமென்றும் மேற்படி டாக்டர் டிரால என்பவர் எழுதுகிறார். இவ்வபிப்பிராயம் மேலே மூன்றாவது பாராவில் குறிப்பிட்டிருக்கும் சூரியகலை சந்திரகலை நியாயத்துக்கும் ஒத்ததாகவே யிருக்கிறது.

5. வேறு சிலர் புருடபாரியர் சம்போக சமயத்தில் வலது கன்னத்தில் முத்தமிட ஆண்சிசு தரிக்குமென்றும், இடது கன்னத்தில் முத்தமிடப் பெண்சிசு தரிக்குமென்றுஞ் சொல்லுகின்றனர்.

6. டாக்டர் பாக்மென் என்பவரின் அபிப்பிராயம் யாதெனில்:- தேனீயானது ஆரம்பத்தில் இடும் முட்டைகளிலிருந்து பெண் ஈக்களும், கடைசியில் இடும் முட்டைகளிலிருந்து ஆண் ஈக்களும் வெளியாகின்றன. அதேமாதிரியாய ஸ்திரீகளும் மாதவிடாயான துவக்கத்தில் கருத்தரிப்பது பெண்ணாகவும், மாதவிடாயாவதற்கு முன்னுள்ள சில நாட்களில் கருத்தரிப்பது ஆணாகவும் பிறக்குமென்பதேயாம். இந்த அபிப்பிராயம் நமது அனுபோகத்திற்கு ஒத்ததல்ல. (32-ம் பக்கம் பார்க்கவும்)

7. ஐரோப்பாக் கண்டத்தில் அநேக நூற்றாண்டுகளாகக் கைக்கொண்டு வரும் வழக்கம் ஒன்றுண்டு. அஃதியாதெனில், சம்போகம் முடிந்தவுடன் ஸ்திரீயானவள் வலதுபக்கமாகச் சாய்ந்து படுத்துக் கொண்டால் ஆண் சிசு தரிக்குமென்பதும், இடதுபக்கமாய்ப் படுத்துக்கொண்டால் பெண் சிசு தரிக்குமென்பதுமே. இயற்கையிலேயே வலதுபக்கமாகச் சாய்ந்து படுப்பது ஸ்திரீகளின் வழக்கம். இடதுபக்கமாகச் சாய்ந்து படுத்தால் மேலேயே ஸ்தனங்கள் இருதயத்தில் அழுத்த இருதயம் படபடவென்று அடிப்பதுடன் அந்த சப்தமும் காதில் தொனித்துக்கொண்டிருப்பதால் ஸ்திரீக்கு அயர்ந்த நித்திரைக்குப் பங்கமாகும். ஆகவே, பருத்த ஸ்தனங்களையுடைய ஸ்திரீகள் வலதுபக்கமாகவே படுத்து நித்திரை செய்ய விரும்புவார்கள். இது காரணம் பற்றியே, உலகத்தில் பெண்குழந்தைகளைவிட ஆண் குழந்தைகள் அதிகமாய்ப் பிறக்கின்றன.

கன்று, காலிகள் வைத்து வளர்ப்பவர்கள் செய்துவரும் வழக்கமும் இந்த அபிப்பிராயத்தை அடுத்ததே. உதாரணமாக, ஓர் பசுமாட்டை அல்லது பெண் குதிரையை மலைச்சாரலில் கீழ்நோக்கிப் பார்த்துக்கொண்டு, சரிவில் ஒரு பக்கம் மேட்டிலும் ஒருபக்கம் பள்ளத்திலும் நிற்கத்தக்கதாக நிறுத்துவது வழக்கம். இப்படிச் செய்து பொலிச்சலுக் கிடங்கொடுத்தால் சுக்கிலக்கிருமிகளெல்லாம் பள்ளத்தில் நிறகும் பக்கத்திலுள்ள கருப்பையில் சாடுவதினால் அப்பக்கமே கருத்தரித்து வலதுபக்கமாயிருந்தால் ஆணாகவும், இடதுபக்கமாயிருந்தால் பெண்ணாகவும் பிறக்கும்.

இந்த அபிப்பிராயம் உண்மையானதேயென்று ரூபிக்க டாக்டர் டக்கி (Tuckey) தமது அநுபோகத்தைச் சொல்லுகிறார். அதாவது:—

குழந்தைகள் பிறந்தவுடன் நஞ்சுக்கொடி விழாமலிருக்குஞ் சமயங்களில் அஸ்தப் பிரயோகத்தினால் அவற்றை வெளியாக்குகையில் பிறந்தது பெண்ணாயிருந்தால் தமது கையை நேரே இடது பக்கத்தில் போட்டு கருப்பையின் இடது பாகத்தில் ஒட்டியிருக்கும் கொடியை நீக்கிவிடுவார். அதே பிரகாரம் ஆண்குழந்தை பிறந்திருந்தால் நஞ்சுக்கொடி கருப்பையின் வலது பக்கத்தில் ஒட்டி யிருப்பதைத் தமது கரங்களினால் சோதித்தறிந்ததாகக் கூறுகிறார்.

---

## சிசு ஆணோ பெண்ணோவென் றறியும் வகை.

ஆண் சிசுவுள்ள கர்ப்ப அடையாளம்:—கர்ப்பிணி உட்காரும்போதும் எழுந்திருக்கும்போதும் அதிகமாய் வலதுகையை பூ ஊன்றிக்கொள்ளுதல், வலதுகைப்புறமாய்ச் சாய்ந்து படுத்திருத்தல், வலது ஸ்தனம் பருத்திருத்தல், அந்தஸ்தனத்தில் நிறைந்திருக்கும் பாலானது கலங்கலாகவும், வெண்மையாகவு மிருத்தல்; அந்தப பாலில் ஒரு துளியைத் தண்ணீரில் விடும்போது அது பாலி மிதத்தல், சிசு கர்ப்பத்தின் வலது பககமிருப்பதாகத் தோன்றுதல், கழுத்தடி தேய்தல, முகம் வர்ணமாறி வெளிறித் தோன்றுதல், நெஞ்செரிவு அதிகமாயிருத்தல், வயிறு பருத்துப் பளுவாயிருத்தல், உயர்வாகி வட்டமாயத தோன்றுதல், பிரசவ காலததில் காபிக்கும் அல்குலுக்கு மிடையில நோய ஆரம்பித்துப் பின்பக்கமாய் இடுப்புக்குப் பாவுதல், ஆகிய இவ்வடையாளங்களினால் கர்ப்பத்திலுள்ள சிசு ஆணென்றறிந்துகொள்ளலாம்.

பெண்டை சத்த சிசுவுள்ள கர்ப்ப அடையாளம்:—மேற்சொல்லிய கன் விட்டின் மாறுபட்டுக் கர்ப்பஸ்திரீ உட்காரும்போதும் எழுந்தி ருக்கின் போதும் அதிகமாய் இடதுகையை ஊன்றிக்கொள்ளுதல், இட பக்கப்புறமே சாய்ந்து படுத்திருத்தல், இடதுஸ்தனம பருத் திருத்தல், ஒரு பாத்திரத்தில் கொஞ்சம சுத்த ஜலம் வார்த்துக் கர்ப்பஸ்திரீயின் முலைப்பாலில் ஒரு துளியை அதிலவிட்டால் அது மிதக்காமல் கீழிறங்குதல், சிசு கர்பபத்தின் இடது பக்கமிருபப தாகத் தோன்றுதல், முகவிகாரமும், சரீரம் கொஞ்சம் கறுத்து மிருத்தல், வயிறு மட்டமாகவும், சரிவாகவுமிருத்தல், அதிக சோம்பலுண்டாதல், கேவலமான தின்பண்டங்களில் பிரியப்படு தல், அடிக்கடி பொய்ப்பசி தோன்றுதல், இடதுகண்ணில் பேதந் தோன்றுதல், பிரசவகாலத்தில் நாபிக்கும் அலகுலுக்குமிடையில் நோய் ஆரம்பித்து வயிற்றில் பரவுதல் ஆகிய இவ்வடையாளங் களினால் கர்ப்பத்திலுள்ள சிசு பெண்ணென்று அறிந்துகொள்ள லாம்.

---

## சிசுவின் ரூபபேத விளக்கம்.

ஸ்திரீ கர்ப்பதியான நாட்களின் துவக்கத்தில் அவள் மனதில் பதிந்திருக்கும் ரூபமே சிசுவுக்குந் தாவுமாதலால் ஸ்திரீயானவள் அதிகாலையில் படுக்கையை விட்டெழுந்திருக்கும்போது தன் புரு ஷன் முகத்தையாவது கண்ணாடியில் தன் முகத்தையாவது அவ சியம் பார்க்கவேண்டும். அவ்வாறின்றி இதரமானவர்களின் முகத் தில் விழித்தால் அவர்களைப் போலவே சிசு அவதரிக்குமெனக் கண்டிப்பா யறியவேண்டும். மேலும், அக்காலத்தில் ஸ்திரீ கோபம், பயம், துக்கம், கவலை, விசாரம் இவைகளையுண்டாக்கும் சங்கதிகளை மனதைவிட்டு விரைவிலகற்றி எப்பொழுதும் ஆறுத லாகவும் சந்தோஷமாகவும் சிரித்த முகமும் சிந்தையுமாய் விளங் குவது அவசியம். பாளையங்கோட்டையில் ஓர் துரைசானி தன் வீட்டிற் கட்டியிருந்த கருங்குரங்கை காலைமாலை பார்த்து வந்த தால் அவளுக்குப் பிறந்த குழந்தை கருங்குரங்கைப் போலவே யிருந்தது. தூத்துக்குடியில் ஓர் கம்மாள ஸ்திரீ காலையிலெழுந்து வேறு ஸ்திரீகளுடன் தண்ணீர் மொள்ளப் போகும்பொழுதெல் லாம அக்கிணற்றின் முன்னிருந்த வீட்டிலுள்ள துரையைப் பார் த்து வந்தபடியால் அவளுக்குப் பிறந்த பெண் வெள்ளைக்கார ரூப முடையதாயிருந்தது. யூஸ்டன் என்னும் பட்டணத்தில் ஓர் கெர்ப்ப ஸ்திரீ ஒரு கிளியைக் கண்டு பயந்ததினால் அவள் மன தில் பதிந்துபோனபடியால் அவள் பெற்ற பிள்ளைக்கு மேற்படி கிளியின் பேச்சு நடவடிக்கைகளை இருந்தனவென வாசித்திருக்கி

றோம். மேலும், பாரதத்தில் திருதராஷ்டிரன் தாயானவள் வியாசருடன் போகிக்கும்பொழுது வெட்க மிகுதியால் கண்ணை மூடிக்கொண்டதால் திருதராஷ்டிரன் கபோதியாய்ப் பிறந்தானென்றும், பாண்டுவின் தாயானவள் அச்சத்தால் மனம் வேறுபட்டு உடல் வெளுத்து அலைந்தபோது தன் கணவனைக்கூடியதால் பாண்டுவின் சரீரம் வெண்குஷ்டம் நிறைந்ததுபோலிருந்ததாகவும் வாசிக்கிறோம். ஆதலால் உத்தம புத்திரரைப் பெற விரும்பும் தாய் எப்பொழுதும் தெய்வதாபக்தியும் சந்தோஷமுமுடையவளா யிருக்க வேண்டிய தவசியம்.

நாம் கவ ஓர் விஷயத்தை இங்கு கூறுவோம்.

எலுமிச்சம் பழம்போன்ற நிறமும், பானிலாக் குழவிபோன்ற பாந்த முகமும், சேற்கெண்டை மீனையொத்த நேத்திரங்களும், கருத்தடர்ந்து வளைந்த புருவமும், அகலமான நெற்றியும், நீண்ட நாசியும், சிறுத்த வாயும், கொவ்வைப் பழம்போன்ற உதடும், கிஞ்சித்துக் கதுப்புள்ள கன்னமும், வெண்மையான முத்தை நிகர்த்த பல் வரிசையும், மிகவும் நீண்டிராத தாடையும், சிறுத்த இடையும், காலளவு நீண்ட கூந்தலும், மிகவும் பருத்திராத தேகமும்,



ஆகிய சகல அழகும் பொருந்திய ஓர் சுந்தர மாதைக்கண்டு அவள் பெற்றோரின் அழகெப்படி யிருக்கிறதென்றறிய ஆவல்கொண்டு அவள் வீட்டுக்கேகி அவள் பெற்றோரைப் பார்த்தோம். அவள் தாயோ பனைமரத்தின் பாதிக்குப் பணியுடுத்தினு லெவ்வண்ணந் தோன்றுமோ அவ்வண்ணமாக நீண்ட உருவமும், மெலிந்த சரீரமும், கறுத்த நிறமும் பொருந்தினவளா யிருந்தாள். தகப்பனும் அவ்வளவு அழகு பொருந்தினவரல்ல. என்றாலும், இருவரும்

சண்டை சச்சரவில்லாமல் சமாதானத்துடன் காலங்கழித்துத் தங்கள் வீட்டில் வைத்திருந்த பெண்கள் நாயகமாகிய பரிசுத்த கன்னி மரியம்மாள் தனது கையில் தேவபாலனை ஏந்தியிருக்கும் சுரூபத்தின்முன் இரவும் பகலும் பூசை செய்துகொண்டு வந்தனர். இப்படி யிருக்குங் காலத்தில் அந்த ஸ்திரீ கர்ப்பவதியாகித் தேவமாதாவின் சுரூபமே உருவெடுத்து வந்ததென்ன விளங்கும் ஒரு நன்மகவீன்று களிப்பெனுங் கடலில் குளித்தனள் என்றறிந்தோம்.

இவ்விதமாக அழகுக் கெதிரிடையான ரூபலாவண்யமுடைய பெற்றோர்க்கு அஷ்ட லக்ஷணமும் பொருந்திய ஓர் சுகுண சுந்தர மாது பிறப்பதற்குக் காரணம் யாதெனில், பித்தளை அல்லது செப்புச் சாமான்களுக்குத் தங்கம் அல்லது வெள்ளி முலாம் பூச வேண்டுமெனில்:—மேற்படி தங்கத்தைத் திராவகத்தினால் நீராக்கி மின்சார சக்தியால் எவ்வண்ணம் மேற்படி பித்தளை அல்லது செப்புச்சாமான்மேல் ஊட்டுகிறார்களோ அவ்வண்ணமாகவே ஸ்திரீயின் மனதிலும் பதிந்த ரூபமும் அழகும் அவயவத்திலுள்ள ஓர் சக்தியின் வல்லமையால் தன் கர்ப்பத்தி லசைவாடிக் கொண்டிருக்கும் மகா மெல்லிய சிசுவில் தாக்கி மாறுதலையுண்டாக்குகின்றது. மேற்சொல்லிய முலாமானது எவ்வளவுநேரம் மின்சார சக்தியால் ஊட்டப்படுகிறதோ அவ்வளவு திண்மையுடையதாயிருக்கும். அதேமாதிரியாய்த் தாயின் மனதில் உறுதியாய்ப் பதிந்த வஸ்துக்களும் அவளது ஜீவசக்தியால் சிசுவுக்குத் தாவுகின்றன. இவ்விஷயத்தில் யாம் அறிந்துகொள்ள வேண்டியதேதெனில்:—ஓர் தாயானவள் தன்னிடத்திலில்லாத அழகையும் சற்குணங்களையும் புத்தியையுங்கூடத் தனது மன உற்சாகத்தால் தன் சிசுவிற்குக் கொடுக்குஞ் சக்தியவளிடமுண்டு என்பதே. பிரதிமை, நிர்மாணம், சித்திரம் வரைதல் முதலிய வித்தைகளுக்குப் பேர்போன இத்தாலியா நாட்டில் ஒவ்வொரு கோயிலிலும் வீட்டிலும் கைதேர்ந்த சிற்பிகளால் செய்யப்பட்ட தேவமாதாவின் திருக்கோலத்தை வைத்து வணங்குவார்கள். ஆகலால் அந்நாட்டிலுள்ள பிள்ளைகளெல்லாம் பரிசுத்த தேவமாதாவின் ரூபலாவண்ணியம் பொருந்தி யிருக்கிறார்களென்று போய்ப் பார்த்தவர்கள் சொல்லுகிறார்கள்.

## பிரசவிக்கும் நாளைக் கணித்தல்.

ஸ்திரீயானவள் சாதாரணமாய் நாற்பது வாரமாகிய 280-நாள் கர்ப்பிணியாயிருப்பாள். சிலசமயங்களில் 300நாளாவது

முண்டு. பிரசவிக்கும் நாளை முன்னதாக அறிந்துகொள்ளக் கடைசியாக வீட்டுக்குத் தூரமான நாளோடு 3 மீ முன்னிட்டுக் கணக்குச் செய்து அதோடு 7 நாள் கூட்டிக்கொள்ள ஏற்படுகிற மாதந் தேதியே பின் பிரசவிக்குந் தினமாம். உதாரணமாக ஒர் ஸ்திரீயானவள் ஏப்ரல்மீ 29உ வீட்டுக்குத் தூரமானதாக வைத்துக்கொண்டு 3 மீ முன்னிட்டுக் கணக்கிட ஜனவரிமீ 29உ யாகும். அதோடு 7 நாள் கூட்ட பெப்ரவரிமீ 5உ யாகும். ஒர் சமயம் இரண்டொருதினம் வித்தியாசப்படுவதுமுண்டு. மேற் குறித்த கணிதத்திற்கு முந்திப் பிறப்பது ஆணாகவும், பிந்திப் பிறப்பது பெண்ணாகவு மிருப்பதைக் கவனித்திருக்கிறோம்.

## கர்ப்பக் காலஅளவு.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கடற்பட்சி | 12 | நாட்கள். | பன்றி | 17 | வாரம். |
| கோழி, வாத்து | 21 | ,, | வெள்ளாடு | 22 | ,, |
| கூஸ்வாத்து | 29 | ,, | செம்மறியாடு | 21 | ,, |
| கொக்கு | 42 | ,, | கலைமான் (Roe) | 24 | ,, |
| சுண்டெலி | 24 | ,, | கரடி, குரங்கு | 30 | ,, |
| குழிமுயல், முயல் | 32 | ,, | மான் (Deer) | 36-40 | ,, |
| வீட்டெலி | 5 | வாரம். | மனுஷி | 40 | ,, |
| பூனை | 8 | ,, | மாடு | 40 | ,, |
| நாய், நரி | 9 | ,, | குதிரை, ஒட்டை | 13 | மாதங்கள் |
| ஓநாய் | 10 | ,, | காண்டாமிருகம் | 18 | ,, |
| சிங்கம் | 14 | ,, | யானை | 24 | ,, |

---

## சிசு வுற்பத்தியைப் பற்றி இந்துசாஸ்திரங்களில் கூறியுள்ளது.

1. "என்றென்றெண்ணி யிருக்குமுயி ரிடர்ப்பட்டழியு மெழில்வரைக்கீழ்
ஒன் றமொருவன் றனைப்போலக் கருப்பாசயப் பையுறுத்துதலால்
மன் றவுத்தி மறிந்தாழ்வான் வருத்தமென்ன வருந்தியிடும்
நின்றகருப் பாசயவுதக வெள்ளங்கொள்ள நிறையழிந்தே."

(பூர்வ ஜன்மவுணர்ச்சி காரணமாக, இனியேனும் அனேக நற்கருமங்கள் செய்து கடவுள் திருவடியை யடைவோம! அதனால், பிறப்பு, இறப்புக்களினலாய பெருந் துன்பத்தைப் போகக்கொள்வோம்; என்பது முதலாய பல எண்ணங்கள் கொண்டிருக்கும் உயிரானது:-(மாதாவின் கர்ப்பப் பைக்குள்ளே) கட்டுண்டிருக்கும்போது, அக்கருப்பாசயப்பை தன்னை நாற்புறமும் உறுத்துவ

தனாலே, அழகு பொருந்திய ஒரு மலையின் கீழே தங்கிய ஒருவ அதன் பாரத்தைத் தாங்க முடியாது துன்பப்படுவதுபோலத் துன்பப்படும். அந்தக் கருப்பாசயப் பையில் ஜலம் பூரித்து அந் நீர் வெள்ளத்தில் அமிழ்ந்து கிடக்கும்போது, பெரிய சமுத்திரத் தில் வீழ்ந்து ஆழ்ந்து விடுகிறவன் துன்பப்படுவதுபோலத் துன் பப்படும். அப்போது, தான் நன்மைகள் செய்ய உத்தேசித்திருக் கும் நிறை (உறுதிப்பாடும்) அழியத் தலைப்படுகின்றது.

2. "அங்கியதனிற்றங்கி யிமெயோமயத்த கும்பத்திற்
றங்குமொருவன் றபனம்போற்றபன மெய்துந்தாயுதரத்
தங்கிசுடவே யழலனைய சூசியதனாலாகத்தைப்
பங்கித்திடவே படுமிடரினிருநாற்குணிதம் பட்டழுங்கும்."

அக்கினியின்மேலோர் இருப்புப்பாத்திரத்தை வைத்து அதிலிடப்பட்ட ஒருவன் காய்ச்சப்பட்ட ஊசியினால் குத்தப்படுகையிலே படும் துன்பத்தைவிட எண்மடங்கு அதிகமாகச் சிசுவுக்கு உண்டாவது யாதெனில்:—தாயின் உதிராக்கினி கலந்த கருப்பாயசப்பையை சிசு வை நாற்புறமும் உறுத்துவதனால் அதுபடும் துன்பமேயாம்.

3. "கருப்பாசயமேகட்டமதாமதனிலதிகங்கடுங்காவலும்
முரிக்கமிகவுமோகமுறமுன்னையுணர்வுமற்றிலையே
மரிக்கஆலைக்கரும்பெனவேயோனிவழியின்வலிதொலைய
நெருக்கப்பட்டுநிலமிசையேதோன்றுமியிருனிலையுடனே."

மேலே யாம் கூறிய கருப்பாசயத்துன்பமே கஷ்டமாம். பிரசூத வாயுவினால் மேல் கீழாகச் சிசு நிலைமாறி, அத்தருணத்தே பூர்வ ஜன்ம உணர்ச்சியும்கெட்டு, ஆலைவாய்க் கரும்புபோல் யோனித் துவாரத்தில் நெருக்குண்டு நிலத்தில் வரும் துனபம் பெரிது. இத் தகைய பிறவித் துன்பங்கட்கு மானிடன் முதலில் உட்படுகிறான்.

"சிவதருமோத்திரம்."

சிசு இவ்வாறு உற்பத்தியாகிப் பூரண உறுப்புகளமைந்து வெளியே வருவதற்கு முன்னே ஒவ்வொரு நிலையிலும் அதற்கு ஆபத்து நேரிடக்கூடும். அப்போது அது பின்னப்பட்டுவிடும். ஸ்ரீ மணிவாசகப் பெருமான் என்பவர் அடியில் வருமாறு கூறுகின் றனர்:—

" மானிடப் பிறப்பினுள் மாதாவுதரத்து,
ஈனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்,
இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்,
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்,

ஈரிரு திங்களில் பேரிருள் பிழைத்தும்,
அஞ்சு திங்களில் முஞ்சுதல் பிழைத்தும்,
ஆறு திங்களில் நூறலர் பிழைத்தும்,
ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்,
எட்டுத் திங்களில் கட்டமும் பிழைத்தும்,
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்,
தக்கதசமதி தாயொடு தான்படும்,
துக்கசாகரத் துயரிடைப் பிழைத்தும்."

கருப்பாசயப்பை உறுத்தல், அதில் ஜலம் பூரித்தல், உதராக்கினியால் வேவுதல், பிரசூதவாயுவினால் முரித்துத் தள்ளுண்டல், யோனித் துவாரத்தில் நெருக்குண்டல், என்னும் பஞ்ச அவஸ்தைகளுக்குச் சிசு மாதாவின் கர்ப்பத்திலே உட்பட்டு வருந்துவதாகப் பூர்வீக இந்துக்கள் தம்முடைய சாஸ்திரத்தில் கூறியிருக்கின்றனர். ஆகையால்தான் :—"இன்னுமோர் அன்னைக்கருப்பையிலே வாராமற் கா." என்று பெரியோர் கடவுளை நோக்கி விண்ணப்பஞ்செய்து கொண்டிருக்கிறார்கள்போலும்!

## மிதமிஞ்சிய சம்போகத்தின் கெடுதி.

ஸ்திரீயும் புருஷனும் சுகமா யிருக்குங் காலத்தில் மிதமாய்ச் சம்போகஞ் செய்து வந்தால் கலவியில் இன்பமுண்டாகும். நோயற்ற புஷ்டியான குழந்தை உற்பத்தியாகும். பத்துமாதத்திற்கொருமுறை சேர்ந்தால் ஸ்திரீயும் புருஷனும் நூற்றிருபது வயது வரையில் ஜீவித்திருப்பார்களென்று இந்து வைத்திய சாஸ்திரங்கள் கூறுகின்றன. இது நிற்க "மாதத்திற்கிரண்டுமுறை மாதரைப் புணர்வது" என்றவாறு மாதமிரண்டுமுறை சேர்வதால் சுகக்கேடில்லாமல் வாழலாமென்று சில இல்லற சித்தாந்தங்களும் கூறுகின்றன. இவ்விருமுறை யேற்பாட்டையும் மறந்துவிட்டு "படித்த புஸ்தகம் மடித்தவுடன் பழைய குருடி கதவைத்திறடி." யென்பதுபோல பழையபடியே கடிதடமே மோக்ஷலோகமாகப் பாவித்து வேறு விஷயத்தில் எள்ளளவேனும் மனதைச் செலுத்தாமல் "சுரப்பது உழக்கு இறைப்பது பதக்கு." என்பதுபோல் இரவும் பகலும் அதே வேலையாயிருந்தால் சுக்கில சுரோணிதம் முதிர்ந்து பக்குவமடையாமற் போவதால் வரவர அவர்களுக்கு இந்திரியம் உடைந்து, ஜலமாய் நீத்து, சக்திக் குறைவாகி, தாது நஷ்டமும் பலக்குறைவு முண்டாகி கருத்தரிக்கவே மாட்டாது. இதனுண்மை பொருளுக் காசைப்பட்டுக் கங்குகரையில்லாமல் சம்போகஞ் செய்து வருவதால் சந்ததியற்றிருக்கும் விலைமாதரால் விளங்கும். இதைப்பற்றியே;—

"ஒன்றைவிடோம் இரண்டடக்கோம்." என்றார் தேரையரும்,

ஆதலால் மிக்க அருமையான வஸ்துவாகிய தாதுவை வீணிற் செலவழிக்காமல் சுத்த ஆரத்தமுண்டாவதற்குரிய ஆகாராதிகளைச் சாப்பிட்டு வருவதுடன், எப்பொழுதும் பரிசுத்தமான காற்றைச் சுவாசித்து சம்போக காலந்தவிர மற்றக்காலங்களில் ஸ்திரீயும் புருஷனும் வெவ்வேறு படுக்கைகளில் நித்திரைசெய்து, பிரதி தினமும் காலை மாலை சரீரப் பயிற்சி செய்துவந்து, ஸ்திரீ சம்போகத்தில் மிதமும் கிரமமுமாயிருந்து வந்தால் சரீர ஆரோக்கியமும், தாதுபுஷ்டியும், சௌந்தர்யமும், தேககாந்தியும், பலனும், நற்புத்திர பாக்கியமுமுண்டாகும். அவர்களிடத்தில் ஒட்டின கன்னமும், உட்குழிந்த கண்ணும், எலும்புபோன்ற இளைத்த சரீரமும் தோன்றமாட்டா. முதுமைப் பருவத்திலும் இளமைப் பருவத்திலுள்ள தேகபலனை அடைந்திருக்கலாம்.

"திண்ண மிரண்டுள்ளே சிக்க வடக்காமல்
பெண்ணின்பால் ஒன்றைப் பெருக்காமல் —உண்ணுங்கால்
நீர்சுருக்கி மோர்பெருக்கி நெய்யுருக்கி உண்பவர்தம்
பேருரைக்கிற் போமே பிணி."[8]

"மாதத்திரண்டுவிசை மாதரைப் புல்குவது
மறுவறுவி ரேசனந்தான்
வருஷத்திரண்டு விசை தைலந் தலைக்கிடுதல்
வாரத்திரண்டு விசையாம்
மூதறிவினொடு தனது வயதுக்கிளையவொரு
மொய்குழலுடன் சையோகம்
முற்றுதயிர் காய்ச்சுபா னீர்மோருருக்குநெய்
முதிரா வழுக்கை யிளநீர்
சாதத்து லெவளவானாலும் புசித்தபின்
குகர் தனக்கு வாங்கல்
தலையாக வுண்டபி னுலாவலிவை மேலவர்
சரீர சுகமா மென்பர்காண்."

என்றும் பெரியோரும் நமது சுகத்தைப் பேணும்பொருட்டுச் சரீரத்தைக் கட்டவேண்டுமென்று சுட்டிக்காட்டி யிருக்கின்றனர். ஆனால் சுகாதார நீதிப்படிக்கு ஒருவன் சம்போகஞ் செய்தபிறகு சரீரத்தில் உற்சாகமும் பலமுமிருப்பதாகத் தோன்றினால், அப்போது தேகத்தில் சுத்த வீரிய சக்தி யிருப்பதாய்த் தெரிந்துகொள்ள வேண்டும். சம்போகத்திற்குப் பிறகு ஆயாசம், பலவீனம், தேக அசக்தி, பசிக்குறைவு, தலைநோய், புத்திமந்தம் முதலிய குறிகள் தோன்றினால், தான மிதமிஞ்சிவிட்டதாக அறிந்துகொண்டு போகதாகத்தை அடக்கவேண்டியது. இதைக் கவனித்து நடந்

தால் வேறு சட்டதிட்டம் அவசியமில்லை. சமயத்திற் கேற்றபடி தன் புத்தியைக் கிரமமா யடக்கி ஆள்வதே பிரதானம்.

## சம்போகங் கூடாத சமயங்கள்.

கடும் பசியாயிருக்கும்போதும், கடும்பிரயாணத்துக்குப் பின்னும், கடும்வேலைசெய்து களைப்பாயிருக்கும்போதும், எண்ணெய் ஸ்நானத்தன்றும், க்ஷவரஞ்செய்து கொண்ட தினத்திலும், அமாவாசை பவுர்ணமிகளிலும், உண்ட உணவு ஜீரணமாகு முன்னும், சாராயம், கள், முதலிய லாகிரிப்பானங்களை யருந்தி மதிமயங்கி யிருக்கும்போதும், நித்திரையைக் கெடுத்து அதிகநேரம் விழித்திருந்த பின்பும், மனேவியாகூலமா யிருக்கும்போதும், திகில் அல்லது பயம் மனதில் பதிந்திருக்கும்போதும், நீரிழிவு, காமாலை, குன்மம், தலைநோய், சுரம் முதலிய நோய்களால் பீடிக்கப்படும்போதும் ஸ்திரீ சம்போகஞ் செய்யலாகாது. அப்படிச் செய்வதாலுண்டாகுஞ் சந்தானம் நெடுங்காலம் நிலைத்திருக்கமாட்டாது. கருத்தரித்த பின்பு அடிக்கடி சம்போகஞ் செய்வதால் தரித்தகரு சேதமடைந்து அகாலப்பிரசவத்துக் கிடமாகும். மாடு, நாய் முதலிய பகுத்தறிவில்லா மிருகங்கள் தத்தம இனமானது கர்ப்பந் தரித்த விஷயத்தை மோப்பத்தால் தெரிந்துகொண்டு அதன்பின் ஒருக்காலுஞ் சேர்வதேயில்லை. இம்மிருகங்களைவிட மனிதர் கேவலமா?

ஆகவே தன் மனைவி தனக்கே உரித்தானவளாதால் "என் பானை என்சோறு, எந்தவேளையுஞ் சாப்பிடுவேன்." என்று தன் மனம்போன வண்ணம் சம்போகஞ்செய்து தன் சுக்கிலத்தை நஷ்டப்படுத்துவதுமல்லாமல், தன் மனைவியின் உடம்பிற்கும் ஹானியை உண்டாக்குபவர் மதியீனர். புத்திமான்களோ தங்களிருவரின் சரீர சுகத்தைக் கவனித்துத் தம்மைப்போல் தம் மனைவிமாரையும் பட்சமாய்ப் பரிபாலித்துக் கால நியமப்படி சுகித்து எவ்விஷயத்திலும் எச்சரிக்கையாய் நடந்துகொள்வார்கள். மிருக ஜாதிகளிலுங்கூட சங்கமகாலம் ஏற்பட்டிருக்கின்றது. அவைகளிற் சில வருஷத்திற்கோர்முறையும், வேறு சில ஆறுமாதங்களுக் கோர்முறையும், மற்றுஞ்சில மூன்றுமாதங்களுக்கோர்முறையுஞ் சம்போகஞ் செய்வது வழக்கம். மானிட ஜென்மிகளுக்கு மட்டும் சம்போகஞ் செய்ய வரையறையில்லையோ?

## கருவழித்தல்.

கருவழித்தலானது எக்காலத்திலும் சகல ஜாதியாருக்குள்ளும் இருந்து வந்த மகா கொடிய பாவம். கிரேக்கருக்குள் கீர்த்தி பெற்ற அரிஸ்டாட்டில் என்னும் சாஸ்திரி, பெற்றோர் தாம் வளர்க்குந் திராணிக் கதிகமான பிள்ளைகள் பெறக்கூடாதென்னும் சட்டத்தை இராஜாங்கத்தார் ஏற்படுத்தவேண்டுமென்றும், கருவழித்தல் அவசியமென்றும் போதித்தார். பூர்வீகக் கிரேக்கருக்குள்ளும் ரோமர்க்குள்ளும் இப்பஞ்சமாபாதகஞ் செய்வோருக்கு யாதொரு தண்டனையுங் கிடைக்காது. பூர்வீக ரோமசக்ரவர்த்திகளிலொருவனின் கட்டளைப்படி அவர் சகோதரி மகள் கருவழித்து அதனால் மாண்டாளென்று ரோமச் சரித்திரத்தில் வாசித்திருக்கிறோம். தற்காலத்திலும் கருவழித்தலால் தாய்க்குண்டாகக்கூடிய உயிர்ச்சேதம், சுகவீனம், கொடுமை முதலியவற்றைப்பற்றி ஜனங்களுக்குள் அறிவு பரம்பியிருப்பதால் இக்கொடுந்தொழிலைப்பற்றித் திகிலும் பயமும் யாவரிடத்திலும் உண்டு. இக்கொடுந்தொழிலின் தீமைகளை விவரித்துக் காட்டுவதால், அநேகர் அறியாமையாலடையும் மோசங்களினின்று விலகிக் கொள்வார்களென்னும் நம்பிக்கையால் இவ்விடத்தில் இதைப்பற்றி எழுதி எச்சரிக்கலானோம்.

தற்காலத்திலுங்கூடச் சீர்திருத்தமுள்ள பிராஞ்சு அமெரிக்கா முதலிய தேசங்களிலுள்ளவர்கள் தங்களால் பராமரிக்கக்கூடிய பிள்ளைகளைவிட அதிகம் பெறாதபடி இம்முறையைக் கையாடி வருகிறார்களென்று அநேகம் புஸ்தகங்களில் வாசித்திருக்கிறோம். விவாக நிலைமைக்குட்பட்ட அநேகர் பிள்ளைப்பேற்றின் உபத்திரவத்தைச் சகிக்க முடியாதென்றெண்ணி இப்படி பாதகஞ் செய்ய ஆரம்பிக்கிறார்கள். ஆனால் அவர்கள் சற்றென்கிலும் இதந்தோஷம் மனுஷருக்கும் தெய்வத்திற்கும் ஏற்காத பாவமென்றும், கடைசி நாளில் கடவுள் முன் அதற்காகக் கணக்குக் கொடுக்கவேண்டியிருப்பதோடு இச்சீவியத்திலேயே சந்தானவிர்த்தியின்றிக் கொள்ளிக்குப் பிள்ளையற்றுப் போவார்களென்பதையும், இத்தொழில் புரிவோருடைய ஜீவனுக்கே ஆபத்து விரைவிலுண்டாகுமென்பதையும் அறிந்திருந்தால் இதைச் செய்யத் துணியார்களென்பது திண்ணம்.

இதுமட்டுமோ? மாசற்ற தன் சிசுவைப் பிறக்குமுன்னமே அழிக்கும்படிக்கு எண்ணங்கொண்ட மாதாவின் மனமானது வரவரக் கடினமாகிச் சகலவித துர்க்கிர்த்தியங்களையும் நடத்துவதற்குத் தூண்டிவிடும், பழி, பாவம் என்னுஞ் சிந்தையே மனதில் பதியாது. மனச்சாட்சியானது மழுங்கி, நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு

என்னும் ஸ்திரீகளுக்கிருக்கவேண்டிய சுவீகாரத்தன்மைகள் மாறி எந்த அக்கிரமத்தையும் செய்ய எளிதில் துணிந்துவிடுவார்கள். பிரசவத்தாலுண்டாகும் உயிர்ச்சேதத்தைவிடக் கருவழித்தலால் அநேக தாய்மார் மரித்துப் போகிறார்களென்றும், அப்படியே உயிரோடிருந்தாலும் தம் உயிருள்ள காலமெல்லாம் நோயாளிகளாகவேயிருக்கிறார்களென்றும் அநுபோகத்தில் தேர்ந்த டாக்டர்கள் சொல்லுகிறார்கள். ஏனெனில், சாதாரணப் பிரசவத்திற்குப் பின் கருப்பையும் அதைச் சேர்ந்த அவயவங்களும் தத்தம் ஸ்தானத்திற் சென்று எளிதில் சுருங்கி தமது சுய பருமனையும் சக்தியையும் அடையத் தொடங்குகின்றன. கருவழிந்த பிற்பாடோ கருப்பை சரியான நிலையில் போய் நிற்பது கடினம். மேலும் கருப்பையும் சினைப்பையும் அவற்றைச் சுற்றிலுமிருக்கும் மாமிச தசைகளும் பலவிதமாய் வீக்கங்கொண்டு உடனே மரணத்தை யுண்டுபண்ணுதபோதிலும் சில வருஷங்களுக்குப் பின்பாவது கருப்பையில் கொடியநோய்களையும் இரணங்களையும் உண்டுபண்ணுவது வழக்கம். கருவழித்தலால் அடிக்கடி உண்டாகும் அபாயங்களில் விசேஷித்தது யாதெனில், கருவழிந்தவுடன் நஞ்சிலை முதலிய உறுப்புகளின் சில அம்சங்கள் முற்றிலும் வெளியேறாமல் அலபாகமடும் வெளியேறுவதால் உள்ளே தங்கியிருக்கும் பாகமானது ரத்தத்தில் விஷமுண்டாக்கி மரணத்தை வருவிக்கும். சாதாரணப் பிரசவத்தில் சிசுவைச் சுற்றிக்கொண்டிருக்கும் இப்பைகள் பிரிந்து போய் அதனால் மோசமுண்டாகாதிருப்பது இயற்கைப் பிரமாணமாகும். ஆனால் கருவழிந்தவுடன் இவ்வித இயற்கை அமைப்பின்படி நஞ்சிலை முற்றிலும் வெளியே வாராமல் கருப்பையினொரு பக்கத்தில் சிறிதுபாக மொதுங்கிக் கொஞ்சங் கொஞ்சமாயழுகி மகா விச்சத்தையும் நோய்களையு முண்டாக்கி ஸ்திரீயானவள் மரணத்துக்குத் தப்பினாலும் அவள் சரீரம் கட்டுக்குலைந்து கெட்டுப் போகும்.

துவக்கத்தில் கருவழித்தவர்களுக்குப் பிற்பாடு கருத்தரிப்பதருமை. அப்படியே கருத்தரித்தபோதிலும் பூரணதிசையடைந்து முழுப்பிள்ளையாய்ப் பிறப்பது கஷ்டம். இவ்விதமாயப் பிறந்த பிள்ளைகள் அதிகச் சிறிதாகவும், தம் உயிருள்ள காலமெல்லாம் பலவீனமும், நோய் நொம்பலமும், அங்கவீனமுள்ளவர்களாகவும் இருந்து தம் உயிருள்ள காலமெல்லாம் தம் தாயின் அக்கிரமக் கிரியைகளுக்கு மௌனசாக்ஷிகளா யிருக்கிறார்கள். இவ்விதமாய் அவர்கள் சந்ததி அடியோடற்றுப் போவதுடன் அவர்கள் உயிருக்கும் அபாயமுண்டாகும். இதுமட்டுமோ! கருவழிக்கும்படி உள்ளே சாப்பிடும் மருந்துகளெல்லாம் மகா கொடிய நஞ்சுகளாயிருப்பதால் கருவை அழிக்குமுன் தாயையே அநேகமாயழிக்குஞ் சக்தியும் அவைகளுக்குண்டு.

ஆகையால் இவ்வித அபாயங்களின்றி ஸ்திரீ விலகுவதற்கான வழியும், கருவழிவதால் அவற்றிலுண்டாகுங் கெடுதியையும், அத ஞல் தனக்குண்டாகும் அவஸ்தையையும் மரணத்தையும் பற்றிப் புஸ்தகங்கள் மூலமாயும் டாக்டர்கள் மூலமாயும் கற்றுக்கொள்ளு மறிவே அறிவாகும்.

## கருத் தரிக்காதபடி செய்யும் விதம்.

வறுமை, நோய், சிற்றிடை, மெலிந்த தேகம், பலவீனம், அங்கவீனம் முதலிய காரணங்களால் அநேகர் பிள்ளைப்பேற்றை இச்சியாதிருப்பதுண்டு. இப்படிப்பட்டவர் விவாக நிலைமைக்குட் படாதிருப்பதே உத்தமம். சிற்றின்பப் பிரியரில் அநேகரும் பிள் ளைப்பேற்றை விரும்பாதிருப்பதுண்டு. அநேகமாய்ப் பேறுகாலத் தின் உபத்திரவத்தையும் பிள்ளைப்பேற்றின் கஷ்டத்தையும் எப் படி தாங்கப் போகிறோமென்று மனங்கலங்கு மநேக ஸ்திரீகள் மட்டில்லாக் காமவிகாரத்தில் அமிழ்ந்தியிருக்கும் தங்கள் புருஷ ரின் மாமிச இச்சையை நிறைவேற்றுவதற்கு இடங்கொடுத்தபோ திலும், பிள்ளைப்பேற்றால் தங்களுக்குக் கஷ்டம் உண்டாகுமென்று எண்ணிக் கருத்தரிக்காமலிருக்கும் உபாயங்களைக் கண்டுபிடித்து அவற்றைக் கையாட விரும்புகிறார்கள். இவ்விதமான அநேக தந் திரங்களைப் பிரான்சு, அமெரிக்கா, ஜெர்மனி, இங்கிலாந்து முத லிய தேசங்களிலுள்ளவர்கள் கண்டுபிடித்து வந்தபோதிலும், அவற்றால் சரீரத்திற்கும் ஆத்துமாவிற்கும் நஷ்டமேயன்றி லாப மொன்றுமில்லை யென்றுங் கண்டுபிடித்திருக்கிறார்கள். அவ்வித தந்திரங்களையும் ஆக்ஷேபனைகளையும் இங்கு கூறுவோம்.

அமெரிக்காவில் பூரணஸ்தர் (Perfectionists.) என்று சொல் லப்படும் சிலர், ஸ்திரீ சம்போகஞ் செய்கையில் சித்தத்தைக் கடி னப்படுத்தி இந்திரியத்தை நழுவவிடாமல் அடக்கிக்கொள்வதால் அம்பிற்கிளைந்து இன்பமது நல்கி அதனாலுண்டாகும் கெடுதியி னின்றும் நீங்கிக்கொள்ளலாமென்றும், பூரண சம்போகத்தைவிட இதனால் அதிக இன்பமுஞ் சுகமுமுண்டாகுமென்றுஞ் சொல்லு கிறார்கள். ஆனால், இவ்விதஞ் செய்வதால் இந்திரியம் தன் ஸ்தா னத்தைவிட்டு நழுவி இரவில் தூங்கும்போது கழன்றுவிடுவதுண்டு. மேலும், ஆயிரம்பேரில் ஒருவனுங்கூட இவ்விதமாக இந்திரியத் தை அடக்கிச் சம்போகஞ் செய்யக்கூடிய விதமாய்த் தனது சித் தத்தை ஸ்திரமான நிலைமைக்குக் கொண்டு வரக்கூடியது அசாத் தியம்.

இன்னுமொருவிதம்:—வித்தைத் தரையில் விழவிடுவது. இது பார்வோன் காலத்தில் நடந்துவந்த தூர்வழக்கம். இவ்வழக்கம் இயற்கைக்கு மாறான மிருக சேஷ்டையாயிருப்பதால் மனுஷனின் ஆத்துமாவிற்கும் சரீரத்திற்கும் கஷ்டத்தை யுண்டாக்கக் கூடியதே யன்றி வேறல்ல.

வேறொரு வழக்கம்:—பிராஞ்சு தேசத்தில் மல்தூஸ் என்பவரால் கண்டுபிடிக்கப்பட்ட ரப்பர் குழாய்களை ஆணாவது பெண்ணாவது தரித்துக்கொள்வது. இது கருத்தரித்தலை நிறுத்தக்கூடியதுதான். ஆனால், இது இன்பத்தையாவது சுகத்தையாவது கொடுக்காது. மேலும், அவற்றினால் நிதம்பம், கருப்பையின் வாய் முதலியவைகளில் ரணங்களுண்டாகி ஸ்திரீக்குப் பின் தொந்தரவை உண்டாக்கக்கூடியது. மேலும், இவற்றை ஒருதடவை உபயோகித்தவர் மறுதடவை உபயோகிக்க விரும்பமாட்டார்.

வேறுசிலர் கடற்காளான் அல்லது ரப்பரினால் செய்யப்பட்டு இங்கிலீஷ் வைத்தியர்களால் விறகப்படுகிற சில வஸ்துக்களை, இந்திரியம் உள்ளே செல்லாதபடி கருப்பையின் வாயில் வைத்து அடைப்பதுண்டு. இதுவும் முன் சொல்லப்பட்டதைப்போல் சிற்றின்பப் பிரியருக்கு இன்பத்தைக் கொடுக்கக்கூடியதல்ல. ஏனெனில், மகா உணர்ச்சியும் கூச்சமுமுள்ள கருப்பையின் வாயோடு விங்கக் கலசமானது பொருந்துவதனால் மட்டுமே சம்போக வின்பம் உண்டாகக்கூடியது. ஆகலால், மேற்சொன்ன வஸ்துக்கள் இன்பத்துக் கிடையூறுண்டாக்கும். மேலும், அவ்வஸ்துக்கள் சம்போக சமயத்தில் கருப்பையின் வாயைவிட்டு விலகவுங் கூடியன.

வேறுசிலர் சுக்கிலக்கிருமியைக் கொல்லத்தக்க விதமாய்க் குளிர்ந்த ஜலத்தினால் அல்லது துவர்ப்பு மருந்துகள் கலந்த ஜலத்தினால் சம்போகம் முடிந்தவுடனே உபஸ்தத்தைச் சுத்திசெய்வதுண்டு. இவையெல்லாம் பற்பல தீமைகளைப் பற்பல சமயங்களில் உண்டாக்கக் கூடியதாயிருக்கின்றன. கருப்பையிலுண்டாகும் அநேக அபகார நோய்களுக்குக் காரணம் இவ்வித பிரயோகங்களை நெடுநாள் அநுசரித்து வருவதே.

தற்கால வைத்தியர்களால் அநேகமான அதிக நல்ல முறையாய் ஒப்புக்கொள்ளப்பட்டு வரும் முறை யாதெனில்:—மாதமொருதடவை மாதவிடாய் உண்டாவதுபோல, சினைப்பையிலிருந்து ஒவ்வொரு சினையும் முதிர்ந்து மாதவிடாய்க்கு ஒரு வாரத்துக்கு முன்னிருந்து மாதவிடாய் நின்று பத்துநாள் வரையில்,

ஏதாவதொரு நாளில் வெளியாகிறதென்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால், ருதுநின்ற பத்துநாளைக்குப் பின்பும், அடுத்த ருது வருவதற்கு ஏழுநாளைக்கு முன்பும் இருக்கிற மிகுதியான ஏழுநாளில் மட்டும் சம்போகஞ் செய்து வருவதால், கருத்தரிக்க மாட்டாதென்று அமெரிக்க டாக்டர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள். இவ்விதஞ் செய்துவரு மநேகர் குழந்தையில்லாமலுமிருந்திருக்கிறார்கள். ஆனால், மாதவிடாய் அநேகருக்குக் கிரமந் தப்பி வருவதனாலும், ஒரே நேரத்தில் ஒன்றுக்கு மேலான முட்டைகள் முதிர்ந்திருப்பதால் சம்போகநேரத்திலுண்டாகும் காமக் கிளர்ச்சியால் அது வெளியாவதனாலும் கருத்தரிப்பதுண்டு. ஆகையால், இதையும் அதிக சிரேஷ்டமான தந்திரமாகச் சொல்வதற்கிடமில்லை.

ஸ்திரீ பால் கொடுக்கிற காலத்தில் சம்போகஞ் செய்வதால் கருத்தரிக்கமாட்டாதென்று அநேகர் எண்ணுவதுண்டு. இது சில சமயங்களில் தவறிப்போவதுமுண்டு. பால் கொடுக்கிற காலத்தில் ஸ்திரீயின் ஜனனேந்திரியத்திலுள்ள நரம்புகளின் சந்தானமு ஸ்தனங்களிலுள்ள பால் குப்பிகளின்மேல் உபயோகிக்கப்பட்டு வருவதால் மாதவிடாய் நின்றிருந்தபோதிலும் சம்போக உத்தீபனத்தால் முட்டையானது வெளியாகிக் கருத்தரித்து விடலாம்.

யாவராலும் கையாடப்படக்கூடியதும், நிச்சயமானதும், யாதொரு கெடுதியை உண்டாக்காததும, சுலபமானதுமான ஒரே முறைமட்டும் உண்டு. அது யாதெனில்:—சம்போகமின்றியிருப்பதேயாம். ஸ்திரீ புருஷாள் இதன் நன்மையைக் கற்றறிந்துகொள்வார்களானால் அது கஷ்டமாயுந் தோன்றாது. கற்பு நிலைமையின் இனிமையையும் தன் சரீரத்தைக் கட்டியடக்கி யாள்வதனால் தன் ஆத்மா, சரீரம், மனது முதலியவற்றிற்குண்டாகும் ஆநந்தத்தையும் ஒருவன் அனுபோகத்தினாலாவது ஆராய்ச்சியினாலாவது அறிந்துகொள்வானாயின், தனக்குண்டாகும் சிற்றின்பபோக விருப்பத்தை அடக்கி யாண்டுகொள்ளக் கூடுமென்பதை அநுபோகஸ்தர் அநேகர் அறிந்துகொள்வார்கள்.

## சில கேள்விகளுக்கு விடை.

வினா:—வம்ச பரம்பரையாய் உண்டாகும் கெட்ட நோய்களையும் துஷ்ட குணங்களையும் முற்றிலும் அல்லது எவ்வளவேனும் விலக்க வழியுண்டோ?

விடை:—வம்ச பரம்பரையாய் உண்டாகும் நோய்களையும் குணங்களையும் உடனே நீக்க ஒருவராலும் முடியாததெனினும்,

சுயமுயற்சியினாலும், சற்சன சகவாசத்தினாலும், சற்பழக்கங்களினாலும், தேகாரோக்கியத்திற்குரிய ஆகாராதிகளையுண்டு நல்ல காற்றைச் சுவாசித்து வருவதாலும், எப்பொழுதும் தமது சரீரத்தையும் எண்ணத்தையும் உணர்ச்சியையும் சுத்தமாய் வைத்துக்கொள்வதனாலும், சுத்த ஆகாயத்தில் தேகாப்பியாசம், சுவாசாப்பியாசம் முதலியவை செய்து வருவதனாலும், சுகமாவோம் என்று உறுதியாய் விசுவாசித்துத் தன் முழு இருதயத்தோடும் அதைவிரும்பி அதற்குரிய வழிகளை விடாமுயற்சியோடு தேடிக்கொள்வதனாலும், ஒருவாறு அவைகளை நீக்கலாம். மேலும், அவ்வித்து சிசுவில் தாக்காதபடி முயற்சி யெடுத்துக்கொள்ளலாம்.

வினா:—பக்திமான்களா யிருக்கும் பாதிரிமாரின் பிள்ளைகளிற் சிலர் பிரபல துஷ்டராயிருப்பதன் காரணமென்ன?

விடை:—குருமார் இரவும் பகலும் தேவசந்நிதியில் நின்று பணிவிடை செய்கிறவர்களா யிருக்கிறபடியால் "கோயிற் பூனை தேவர்க் கஞ்சமாட்டாது." என்பதுபோல் சடங்காசார ஒழுக்கங்களை அநுசரிப்பதில் அதிகமாக மனம் செல்லுகிறபடியினாலும், ஜெபத்தை அவசரமாய் முடிக்கவேண்டுமென்று ஆத்திரப்பட்டு வார்த்தைகளின் பொருளைக் கவனிக்காமல் படபடவென்று தங்களால் கூடிய சீக்கிரத்தில் முடிக்கப் பிரயாசப்படுவதனாலும், சேவாவியோகி அந்நியோந்யப்படச் சமயம் வாய்க்காமற் போய்விடுகிறது. சமயா சமயங்களில் தேவசந்நிதியில் பயத்தோடும் நடுக்கத்தோடுஞ் சென்று தேவ இரக்கத்தை உறுதியாய் நம்பித் தாங்கள் செய்த பலவிதமான அக்கிரமங்களையும் அறிக்கையிட்டுப் புலம்பி உத்தம மனஸ்தாபத்தோடும் உண்மையும் உயிருமுள்ள விசுவாசத்தோடும் தேவசமுகத்தைக் கிட்டிச் சேரும் சபையாருக்கு இருக்கிற பக்தியும் விசுவாசமும் எல்லாக் குருமாரிடத்திலும் காண்பதரிது.

கடவுளிடத்தில் நன்மையைப் பெறவேண்டுமென்று பிரார்த்தனைசெய்து பக்தி விநயத்தோடு கொண்டுவந்து சபையார் செலுத்தும் காணிக்கையை முற்றிலும் அல்லது ஒரு பாகத்தை உபயோகிக்கும்படி ஏலியைப்போல அதிகாரம் பெற்றிருக்குஞ் சில குருமாருமுண்டு. அவர்கள் பிள்ளைகள் எப்படி ஏலியின் மக்களைப் போலாகக்கூடுமென்பதை எளிதில் யாவரும் அறிந்துகொள்ளலாம்.

குருமார் சபையாரெல்லாருக்கும் பொதுவாயிருக்கிறபடியால், தம்முடைய சபையைச் சேர்ந்த ஒவ்வொருவருடைய இஷ்டப்ப

டிக்கும் நடந்து அவர்களைத் திருப்திசெய்வது கூடாத காரியமாகும். ஆகவே "ஊரனுக் கொருபக்கமிடி, மத்தளத்துக் கிருபக் கமுமிடி." என்பதுபோல ஊரில் எப்பொழுதும் பலவிதமான சங்கடங்கள் அவர்களுக்கு நேர்ந்துகொண்டே வரும். குருமார் அநேகமாய் வீட்டிலிருக்கச் சமயம் வாய்க்கிறபடியால் அவர்களுக்கு நேரிடும் லாபநஷ்டம் யாவும் அவர்கள் பத்தினிமார்க்குந் தெரிந்தே யிருக்கும். ஆகவே, குருமார்க்கு நேரிடுஞ் சங்கடங்களெல்லாம் அவர்கள் பத்தினிமாரும் அனுபவித்து இரவும் பகலுமதைப் பற்றிச் சிந்தித்துக்கொண்டிருப்பதுடன், துஷ்டத்தனஞ் செய்தவர்களைப் பற்றியே அடிக்கடி நினைத்துக்கொண்டு அவர்களை எவ்விதமாய் ஜெயிக்கலாமென்னும் யோசனை மிகுந்திருப்பதால் அக்காலத்தில் அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளுக்கும் அத்துஷ்டத்தனம் பதிந்துவிடுவது சகஜமே.

சபையாரென்ன சொல்வார்களோ வென்னுமச்சத்தால் கோயிலுக்குக் கிரமமாய்ப் போய்க் கடமைக்காகத் தொழுது வருபவர்களுக்குத் தெய்வபக்தி மிகுதலுக்குப் பதிலாய் கட்டாயத்தினாலுண்டாகும் ஓர்வித அஜாக்கிரதை மேற்படுமாதலால் அவர்கள் பிள்ளைகளுக்கும் அவ்வித சுபாவமுண்டாவது சகஜமே.

வினா:—சிசு உற்பத்தியில் புருஷன் பாகம் அணுவத்தினையே யாயின் அவன் எவ்வித நடக்கையுமுள்ளவனாயிருக்கலாமல்லவா?

விடை:—ஓர் ஆலமரத்தின் வித்தானது அணுவத்தினையே யாயினும் எவ்வளவோ இடத்தை மூடிக்கொள்ளத்தக்க தன்மையுடைய ஓர் பெரிய ஆலமரத்தின் சத்தெல்லாம் அவ்வித்தினுள்ளேயே யடங்கி யிருக்கிறது. அதுபோலவே மனுஷருடைய ஆத்ம சரீரங்களினது தன்மை அவர்கள் சரீரத்தின் ஒவ்வொரு பாகத்தையும் ஊடுருவச்செல்லும் உதிரத்திலும் பதிகின்றதென்று முன்னமே கவனித்தோம். ஆகவே எறக்குறைய எழுபது அல்லது எண்பது துளி உதிரத்திலிருந்தெடுக்கப்பட்ட சாரமாகிய ஓர் துளி இந்திரியத்திலும் அதையுடையவனது தன்மைகளெல்லாம் பதிந்திருக்கவேண்டும். மேலும், தகப்பனானவன் சன்மார்க்கமும் பயபக்தியும் தயாதாக்ஷணியமுமுடையவனாய் முத்தினைக் கருவில் வைத்த செல்வச் செங்கரும்புபோன்ற தன் பத்தினியாளிடத்தில் பாசம் வைத்து அவளை அன்புடனாதரித்து, அவளுக்கு வேண்டிய சகல விஷயங்களையும் சவதரித்து அவளை எப்பொழுதும் சந்தோஷமாய் வைத்திருப்பதால் தனக்குப் பிறக்கப்போகும் புத்திரபாக்கியத்தையும் ஆசீர்வாதமுள்ளதாக்கக்கூடும்.

ஏறக்குறைய இரண்டாயிரம் வருஷங்களுக்குமுன் உலகமுழுவதையும் கட்டி அரசாண்டு வந்த கிரேக் ஜாதியார் கல்வி, பக்தி, சன்மார்க்கம் முதலிய சகல விஷயங்களிலும் புஜபலபராக்கிரமமே மேலானது என்று எண்ணிவந்தார்கள். அவர்களுக்குள் நோய் நொம்பலம் நிறைந்த அல்லது பலவீனமான குழந்தை பிறக்குமானால் அப்பேர்ப்பட்ட பிள்ளைக்குத் தாயாயிருப்பதைவிடப் பிள்ளையில்லாமலிருப்பதே நலமென்று எண்ணித்தாயே பத்துமாதம் சுமந்து பெற்ற தன் கர்ப்பக்கனியை மலையினுச்சிக்குக் கொண்டுபோய் அங்கிருந்து கீழே உருட்டித்தள்ளிக் கொன்றுவிடுவாளாம். ஆனால் அவர்களுக்குள் பலவீனமான குழந்தைகள் பிறப்பதரிது. ஏனெனில், பெண்களாய்ப் பிறந்தவர்கள் சிறுபிராயத்தில் ஜிம்நேசியம் என்னும் தேகப்பயிற்சியிடம் முதலிய ஸ்தானங்களுக்குப் போய் தேகாப்பியாசம் செய்து தங்களுடைய சரீரத்தைப் பலப்படுத்திய பின்புதான் விவாகஞ்செய்ய இணங்குவார்களாம். ஓர் ஸ்திரீ கர்ப்பவதியாயிருக்கிறாள் என்று கண்டவுடன் அவள் புருஷன் அவள் மீது மகா அன்புபாராட்டி அவளுடைய சரீர சௌக்கியத்திற்கனுகூலமான சகல வைபவங்களையும் சவதரித்துக் கொடுப்பதுடன், அவள் மனதில் அழகான ரூபம் பதியத்தக்கதாக அவளிருக்கும் அறை முழுவதையும் அழகாய்ச் சித்திரந் தீர்ந்த படங்களாலும் சிலைகளாலும் சிங்காரித்து வைப்பது வழக்கமாம்.

வினு:—பிள்ளைகளைகள் பெற்றோரின் சுபாவத்திற்கு நேர் விரோதமான தன்மையுடையவர்களாய்க் காணப்படுவதற்குக் காரணமென்ன?

விடை:—இவற்றின் காரணத்தை விளக்கிக் காட்டுவது கஷ்டமல்ல. அவர்களுடைய பெற்றோர் இயற்கைப் பிரமாணத்துக்கு நேர்விரோதமாய் நடந்து தங்கள் நடக்கையைச் சீர்திருத்திக் கொள்ளாமல் மனம்போனபடி நினைத்த வேளைகளில் தங்கள் இச்சையை நிறைவேற்றி யிருப்பார்கள். மற்றெவ்வளவோ சாஸ்திரங்களைக் கற்றிருந்தபோதிலும் ஜீவோற்பத்தி சாஸ்திரத்தை யறிந்து அதன்படி நடக்கவில்லை. தெய்வ சித்தத்தின்படியும் விதியின்படியும் எல்லாம் நடக்குமென்று மனத்திண்ணமுள்ளவர்களாய், சரீரத்துக்கு நோய் அல்லது கஷ்டம் நேரிட்டிருக்கும்பொழுதும், மனதில் சந்தோஷமும் ஆறுதலுமில்லாத பலசமயங்களிலும் சேர்ந்ததனாலே ஜெனித்த பிள்ளைகளானதால் தாங்கள் ஜெனித்த நேரத்தில் பெற்றோர் எந்த ஸ்திதியிலிருந்திருப்பார்களோ அதற்குத் தக்கதாகவும், தாயின் கர்ப்பத்திலிருந்த பத்துமாதங்களில் அவளனுபவித்திருக்கும் சகலவிஷயங்களுக்குந் தக்கதாகவும் அப்பிள்ளைகளின் குணதிசயங்களும் அழகும் பொருந்தியிருக்கலாம்,

கடவுள் துணை.

# மானிட மர்மசாஸ்திரம்.

## ஆறாம் புஸ்தகம்.

கர்ப்பக்கால சுகாதார விளக்கம்.

அற்றா லளவறிந் துண்க—வஃதுடம்பு
பெற்றானெடி துய்க்குமாறு—குறள்.

இஃது

யாவர்க்கும்
சுக செல்வ நன்மைகளையும் சுகிர்த பாக்கிய
போக்கியத்தையும் நீடூழி பெருகுவிக்க
விரும்பிய,

கல்கத்தா சர்வகலா சங்கத்தின் தமிழ்ப்பரீக்ஷகரும், ரங்கூன் சென்
ஜான்ஸ் கல்லூரிப் பிரதமாசிரியரா யிருந்தவரும், கணித சாஸ்திரம், பூமிசாஸ்
திரங்களின் கிரந்தகர்த்தாவும், மானஸ மர்ம சாஸ்திரப் பண்டிதரும்,
சாமிவேல் வைத்தியசாலைத் தலைவருமாகிய

எஸ். சாமிவேல், பி. ஏ. அவர்கள்

இயற்றியது.

புதிய பதிப்பு.

சாமிவேல் பிரஸ்,

தென்காஞ்சி, இரங்கோன்.

1920.

All Rights Reserved.

# மானிட மர்ம சாஸ்திரம்.

## ஆரும் புஸ்தகம்.

### சர்ப்பக்கால சுகாதார விதிகள்.
### (Hygiene in Pregnancy.)

கர்ப்பிணியானவள் தன் சுகத்தைப் பேணிக்கொள்வதற்காதாரமான விதிகளை முன்னமே யறிந்து அவற்றின்படி செய்துவரின் அது "வெள்ளம் வருமுன் அணைபோடுவதற்கு" ஒப்பாகும். ஆனல் நம் தேசத்தவர்களோ சுகாதார விதிகளை யறியாதவர்களாயும் அவற்றின்படி செய்யாதவர்களாயுமிருந்து "வாணியனுக்குக் கொடாதவன் வைத்தியனுக்குக் கொடுப்பான்" என்பதற்கிணங்க வியாதியும் கஷ்டமும் நேரிட்டபின் "வந்தபின் காப்போன்" செய்வதுபோல் வைத்தியனுக்கு எவ்வளவோ பணத்தை விரயஞ்செய்தும் வியாதி தீராமல் கஷ்டப்பட்டு விலை மதிக்கப்படாத தங்கள் பிராணனையும் கூடச் சில சமயங்களில் இழக்கிறார்கள். ஆதலால், கர்ப்பிணியான ஒவ்வொரு ஸ்திரீயும் அறிந்து நடக்கவேண்டிய சில விசேஷித்த சுகாதார விதிகளை இவ்விடத்தில் எடுத்துரைப்போம்.

### சுத்த ஆகாயமும் சூரிய வெளிச்சமும்.



நாம் ஜீவனேடிருப்பதற்கு ஆகாரமும் சுத்த ஜலமும் எவ்வளவு அவசியமோ அவ்வளவு சுத்த ஆகாயமும் சூரியவெளிச்சமும் அவசியமே. கர்ப்பிணியானவள் தானும் தன் பிள்ளையுமாக இருவருக்காகவும் சுவாசிக்கிறாள். சுத்த ஆகாயத்தைச் சுவாசிப்பது ஒவ்வொருவருக்கும் அவசியமென்பது நமக்குத் தெரியும். அப்படியானல் சர்ப்பிணிக்கு அது இருமடங்கு அவசியம். தாயானவள் அசுத்த ஆகாயத்தைச்சுவாசிப்பதனுல் அவளுடைய

உதிரங்கெட்டு அது பிண்டத்திற்றுஞ் சிசுவிற்குப் பலவீனத்தையும் சுகயீனத்தையும் உண்டாக்கும். மேலும், படுக்கையறையை நன்றாயடைத்துக் கொண்டு நித்திரை செய்வதாலும், ஒரே அறையில் அநேகர் படுத்து நித்திரை செய்வதாலும், படுக்கையறையில் மண்ணெண்ணெய் விளக்கெரிப்பதனாலும், அறையிலுள்ள பிராணவாயு நீங்கி கரியமிலவாயு நிறைந்திருப்பதால் கர்ப்பிணிக்கு பலவீனம் நேரிட்டு, தலைவலி மலச்சிக்கல், வாந்தி, மயக்கம் முதலிய நோய்களுங்கூட உண்டாகி வயிற்றிலுள்ள சிசுவிற்கும் அசௌக்கியம் உண்டாகும். ஆதலால் நாம் வசிக்கும் வீடுகளின் நான்குபக்கங்களிலும் ஜன்னல்கள் திறந்திருந்தால் சுத்த ஆகாயம் ஒரு பக்கத் திறப்பின் வழியாய் உள்ளே வந்து, அறையிலுள்ள அசுத்தங்களையெல்லாம் அடித்துக்கொண்டு எதிர்பக்கத்துத் திறப்பின் வழியாய் வெளியே போய்விடும். இவ்விதமாய்க் காற்று உள்ளே வரவும் வெளியே போகவுந் தக்கதாகத் திறப்புகள் (ஜன்னல்கள்) இருக்கவேண்டும். ஆனால் நாம் வசிக்கும் அறை அதிக ஒடுக்கமாயிருக்குமாயின் வெளியிலிருந்து உள்ளே வரும் குளிர்ந்த காற்றினால் ஜலதோஷம், இருமல் முதலிய வியாதிகள் உண்டாகும். ஆதலால் நாம் வசிக்கும் அறை சுத்த ஆகாயம் பரவிச் செல்லத்தக்கதாக விசாலமுடையதாயுமிருக்கவேண்டும். மேலும், நித்திரைசெய்யும் அறையின் ஒரு பக்கத்தில் அடுப்புக்கரியும், சுட்ட சுண்ணாம்புக்கல்லும் குவித்து வைத்திருந்தால் அறையிலுள்ள கரியமிலவாயு முதலிய அநேக அசுத்தங்கள் நீங்கும். கர்ப்பிணி தினந்தோறும் ஊருக்கு வெளியே நடந்துபோய் சுத்த ஆகாயத்தைச் சுவாசித்து வரவேண்டும். கடலருகில் அல்லது ஆற்றங்கரையருகில்போய் உலாவுவது அதிலும் நன்று. அவள் நடக்கும்போது நுரையீரல்கள் நன்றாய் விரிந்து போதுமான காற்றைச் சுவாசிக்கத்தக்கதாய் நெஞ்சு முன்னோக்கி யிருக்கத்தக்கதாக நிமிர்ந்து நடக்கவேண்டும். அப்பொழுது அதிக ஆகாயத்தைச் சுவாசித்துச் சுகமும் பலமும் அதிகப்படும். குனிந்து நடப்பது நன்றன்று. அது க்ஷயரோகங்களுக்குக் காரணமாகும்.

சுத்த ஆகாயத்தைப் போலவே சூரிய வெளிச்சமும் மனுஷருக்கும் மற்ற ஜீவஜெந்துக்களுக்கும் சகல தாவர வஸ்துக்களுக்கும் அத்யந்த அவசியம். சூரிய வெளிச்சமே உயிர் எனலாம். அது இல்லையானால் நாம் பிழைத்திருக்க முடியாது. ஜீவஜெந்துக்களும் மாண்டுபோம். மரஞ்செடிகளும் பட்டுப்போம். இருட்டில் வளருகிற செடிகள் வெளுத்துப் பிரயோசனமற்றுப்போவதை நாம் பார்க்கிறோம். எப்போதும் வீட்டுக்குள்ளேயே இருக்கிறவர்களும் வெளிறிச் சரீர பலம் மனோபலங் குன்றி வியாதிக்

குள்ளாகிறார்கள். வெளிச்சமே நமக்கு உற்சாகத்தையும் சந்தோஷத்தையுங் கொடுத்துச் சுகமுள்ளவர்களாக்கும். தற்காலத்தில் பிளேக் எனப்பட்ட பெருவாரி விஷ வியாதி விஷபேதி முதலியவற்றை யுண்டாக்கும் கிருமிகள் (Bacillus) இருட்டறையில் ஒரு நிமிஷத்திற்கு ஆயிரக்கணக்காய் விருத்தியாகின்றனவென்றும், சூரியக் கிரணங்கள் படும் இடத்தில் அவைகளெல்லாம் மாண்டு போகின்றனவென்றுங் கண்டு பிடித்திருக்கின்றனர். மேலும், அமெரிக்காவில் க்ஷயரோகங்களைச் சூரிய வெளிச்சமும் சுத்த ஆகாயமும் உலாவும் வெளிப்பிரகாரங்களில் வசிக்கச் செய்வதே அவர்களுக்குத் தகுந்த ஔஷதமென்று கண்டுபிடித்து அவ்வித ஏற்பாடு செய்து வருகிறார்கள். வீட்டிற்குள் வெளிச்சத்தை விடாதவர்கள் வைத்தியரை வீட்டிற்குள் விடவேண்டியதிருக்கும். ஆனால், வெளிச்சம் வீட்டிற்குள் செய்யக்கூடியதை வைத்தியர் செய்யமுடியாது. ஆதலால், வெளிச்சமும் காற்றும் வீட்டிற்குள் தாராளமாய்ச் செல்லத்தக்கதாக வீட்டின் கதவுகளையும் ஜன்னல்களையும் திறந்து வைத்திருக்கவேண்டும். மேலும், கர்ப்பிணியானவள் பிரதிதினமும் வெளிச்சத்தில் சற்றுநேரமாவது உலாவி வருவது நன்மை பயக்கும்.

## ஸ்நானம்.

கர்ப்பிணி பிரதிதினமும் ஸ்நானஞ் செய்வது அத்யாவசியம். கர்ப்பகாலத்தில் மத்தியான நேரத்தில் 10-முதல் 12-மணிக்குள்ளாகக் குளிர்ந்த ஜலஸ்நானஞ் செய்து உடனே தர்க்கிஷ் துவாலையால் (Turkish Towel.) ஐந்து நிமிஷம் தேகமுழுவதையும் அழுத்தமாய்த் [illegible] தேய்த்துப் பின்பு ஸ்நானம் ஆக [illegible] தாமதப்பட்டால் அதன் பிரயோஜனத்தில் பாதி கெட்டுப்போகும். குளிர்ந்த ஜலம் தேகத்தில் பட்டவுடன் குளிர்ச்சியால் [illegible] சுருங்கி, உதிரம் உட்பக்கத்தில் பாய்ந்தோடி, [illegible] உதிரம் அதிகரித்தமாய்த் தோலுக்கு ஓடிவரும். ஆனால் குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானஞ் செய்வதால் சரீரத்திற்கு ஆரோக்கியமும் [illegible] பலமும் உண்டாகும். ஆனால், குளிர் தாங்கமுடியாதவர்கள் சற்று வெதுவெதுப்பான வெந்நீரில் ஸ்நானஞ் செய்யவேண்டியது. அதிகஞ் சுடுகிற வெந்நீரில் ஸ்நானஞ் செய்வதால் யாதொரு பிரயோஜனமும் அடையமாட்டார்கள். அதிக நேரம் ஸ்நானஞ் செய்வதாலும் பிரயோஜனமில்லை. ஆதலால் ஒன்று அல்லது இரண்டு நிமிஷத்திற்குள் ஸ்நானஞ் செய்வதே உத்தமம். சாப்பிட்டவுடனேயும் அதிக இளைப்பாயிருக்கும்போதும் ஸ்நானஞ் செய்யக்கூடாது.

## ஆசன ஸ்நானம். (Sitz-Bath.)

கர்ப்பிணிகளுக்கு ஆசன ஸ்நானத்தால் அநேக நன்மைகளுண்டு. இதற்கென்று செய்யப்பட்ட தகரத் தொட்டிகள் அநேகம் ஷாப்புகளில் எளிதில் கிடைக்கும். அவ்வித தகரத் தொட்டியைவிட ஒன்றரை ஜாண் உயரமுள்ள மரத் தொட்டி செய்து தரையிலிருந்து ஒரு பிடி உயரத்தில் வைத்து அதில் முக்கால் பாகம் அதிகக் குளிர்ச்சியில்லாத தண்ணீர் நிரப்பி வைத்துக்கொண்டு கால், பாதம், தொப்புளுக்கு மேலுள்ள பாகம் முதலியவைகளை நனையவிடாதபடிக்கும், இடுப்பும் அடிவயிறும் மட்டும் நனையத்தக்கதாகவும் இருபது நிமிஷத்திற்கு உட்கார்ந்திருக்கவேண்டும். காலில் செருப்பு மாட்டிக்கொண்டு தொட்டிப்பக்கத்தில் போட்டிருக்கும் ஒரு பலகையில் மிதித்துக்கொள்ளவேண்டும். சரீரத்தின் மேல்பாகத்தைக் கம்பளியால் மூடிக்கொண்டு தொட்டிக்குள் உட்கார்ந்து ஜனனேந்திரியங்களின் வெளிப்புறத்தை மட்டும் மெல்லமாய்த் தேய்த்துச் சுத்தஞ்செய்யலாம். அடிவயிற்றைக் கையினால் அல்லது விரல்களினால் தேய்த்து அல்லது



பிசைந்துவிடலாம். பின்பு எழுந்திருந்து ஒரு துவாலையால் ஈரத்தைத் துடைத்துவிட்டு இன்னொரு துவாலையாலும் கையினாலும் தேகத்தை ஐந்து நிமிஷம் வரை நன்றாய்த் தேய்த்து அனல் பிறக்கச் செய்யவேண்டும். பின்பு சாய்ந்துகொண்டு இளைப்பாறவேண்டும். தூக்கம் வந்தால் தூங்குவது நலம். தூங்காவிடில் இந்த ஸ்நானத்தால் பிரயோசனமில்லை. சரீரம் முழுவதிலும் ஜலத்தை ஊற்றி ஸ்நானஞ் செய்வதைவிட ஜனனேந்திரியங்களுக்கு மட்டும் ஸ்நானஞ் செய்விப்பதனால் அதிகப் பிரயோசனமுண்டாகக்கூடுமோ வென்று சிலர் சந்தேகிப்பார்கள்.

சரீரத்தின் வேறெந்தப் பாகத்திலும் இவ்வளவு விசேஷித்த நரம்புக் கூட்டங்கள் முடிகிறதில்லை. சரீர முழுவதும் வியாபித்து மூளையோடு சம்பந்தப்பட்டிருக்கும் சகல நரம்புக் கூட்டங்களும் இவ்விடத்திலேயே முடிகின்றன. ஆகையால் ஜீவ விருக்ஷத்தின் வேரெல்லாம ஜனனேந்திரியங்களிலேயே ஊன்றியிருப்பதாகச் சொல்லலாம். ஆகவே அந்த இடத்தில் மட்டும் குளிர்ந்த ஜல

ஸ்நானஞ் செய்வதால் சரீரத்திலுள்ள மூலாக்கினியின் கொதிப்புகளெல்லாம் நீங்கி, நரம்புகளுக்கு வலிமையுண்டாகிச் சரீரத்தின் ஒவ்வொரு பாகங்களுக்கும் ஆரோக்கியமுமுண்டாகும்.

இது தேகத்திலுள்ள மாசுகளையும் தூர்க்களையும் நீக்கி இரத்தத்தைச் சுத்தப்படுத்தி ஆரோக்கியத்தைக் கொடுக்கும். மேலும், வயிற்றுச் சம்பந்தமான எல்லாவித வியாதிகள், முதுகெலும்பு, மூளை இவற்றின் பலவீனம், நரம்புத் தளர்ச்சி, கால் கை வலி, இடுப்புவலி, பிடர்வலி, ஜனனேந்திரியங்களின் கடுப்பு, புண்ணாகி நோகுதல், மூலம், நீர்க்கடுப்பு, மலச்சிக்கல், அஜீரணம், வயிற்றுப்போக்கு, இன்னும் ஜனனேந்திரியங்களி லுண்டாகக் கூடிய சகலவித ரோகங்கள், தூக்கமின்மை, முகக்குத்து, மயக்கம், தலைவலி முதலிய ஸ்திரீகளுக் குண்டாகக்கூடிய எல்லாவித வியாதிகளையும் சொஸ்தமாக்கிச் சரீர ஆரோக்கியத்தையும், தேகாரோக்கியம், தேகதாருட்டியம், தேஜசு முதலியவைகளையும் உண்டாக்கி, மூளைக்கு வலுவைகொடுத்து, சோர்ந்து தளர்ந்துபோன நரம்புகளுக்கு முறுக்கேற்றிப் பிகுவாக்கி, வீரியத்தைக் கொடுக்குஞ் சஞ்சீவி என்று சொல்லலாம். இதனாலுண்டாகக்கூடிய நன்மைகள் இன்னு மனந்தம் இருக்கின்றன. சுருக்கிச் சொல்லில்:- ஆண்களுங்கூட இவ்வித ஆசன ஸ்நானம் கிரமமாய்ச் செய்துவருவதால், பல காரணங்களால ஆண் தன்மையை யிழந்து புத்திரசந்தானத்திற்கு வகையற்றுத் துக்கக்கடலில் ஆழ்ந்துகிடக்கும் துயரத்தை நீக்கி ஆண்தத்துவமடைந்து ஆனந்தக்கடலில் மூழ்குவார்கள் என்பதற்கு ஆக்ஷேபணையில்லை. ஆனால், ஸ்திரீபோகம் விரும்புகிறவர்கள் சிறிதுநேரம் அதாவது இரண்டு நிமிஷத்திற்கு மேற்படாமல் குளிர்ந்த ஜலத்தில் ஆசனஸ்நானஞ் செய்யவேண்டும். அப்பொழுது நரம்புகளெழுச்சி யுண்டாகி வீரிய விருத்தி தோன்றும். ஸ்திரீபோகத்தை மட்டுப்படுத்தித் தமது காமவிகாரத்தை அடக்க நோக்கமுள்ளவர்கள் முப்பது நிமிஷத்திற்குக் குறையாமல் குளிர்ந்த ஜலத்தில் ஆசனஸ்நானஞ் செய்து வரவேண்டும். உஷ்ணமான ஜலத்தினால் கிளர்ச்சிக்குப் பதிலாகத் தளர்ச்சி உண்டாகும். காப்பி மருந்து ஔஷதங்களைச் சாப்பிட்டபோதிலும் இந்த ஆசனஸ்நானத்தைத் தினந்தோறும் ஒருமுறை அல்லது இரண்டு முறை செய்து இந்த அருமையான அற்புதச் சஞ்சீவியின் பிரயோசனத்தைப் பரீட்சித்துப் பார்க்கவேண்டியது அவசியம். வயிற்றுவலி, ஜனனேந்திரியங்கள் வீங்கியிருத்தல், இவைகளுக்கு நன்றாய்ச் சுடுகிற வெந்நீரில் பத்து அல்லது பதினைந்து நிமிஷத்திற்கு ஆசனஸ்நானம் செய்துவருதல் நல்லது. சுகத்திற்காக ஆசனஸ்நா

நஞ் செய்கிறவர்கள் இரண்டு நிமிஷத்திற்கு மேற்படாமலும் வியாதி நீங்கும்படி ஸ்நானஞ் செய்பவர்கள் ஐந்து நிமிஷத்திற்குக்குறையாமலும் ஆசனஸ்நானஞ் செய்யவேண்டும்.

## கால்ஸ்நாநம். (Leg-Bath.)



கால்ஸ்நானஞ் செய்வதற்குப் படத்தில் காண்பித்திருக்கிற பிரகாரம் முழங்கால்வரை தண்ணீர் கொள்ளத்தக்க தொட்டி செய்யவேண்டும். இதற்கு லேசான சூடுள்ள இளவெந்நீர் போதும். தேகதிடமற்ற பலஹீனர்களுக்குண்டாகும் தூக்கமின்மை, நெஞ்சு அடித்தல், தலைவலி, மூளைக் கொதிப்பு, காக்கைவலி முதலியவற்றிற்கு இது அருமையான பிரயோகமாகும். மேலும் பாதங்களில் நீங்காதிருக்கும் மேகரணங்களுக்கும், முழங்கால் வீக்கம், கணுக்கால் வீக்கம், கீல்வாதம் (Gout) முதலிய ரோகங்களுக்கும் இதனால் நன்மையுண்டு.

## எண்ணெய் ஸ்நாநம்.

திராவிட தேசத்தவர்கள் வாரத்திற்கு மும்முறை, இருமுறை, ஒருமுறையாவது அப்பியங்கன ஸ்நானஞ்செய்வது அவசியமான வழக்கமாயிருப்பினும், மேனாட்டவரின் கல்வியைக் கற்றவருட்பலர் மேனாட்டவர்களுக்கு அவ்வித வழக்கமில்லாதபடியால் நமக்கும் அது அவசியமன்று என்றெண்ணி அந்த உத்தம வழக்கத்தை நிறுத்த முயற்சிக்கிறார்களாதலால் இதைப் பற்றி எழுதுவது அவசியமாகத் தோன்றுகிறது.

எண்ணெய் ஸ்நானமாவது சரீரத்தின்மேல் எண்ணெயைப் பூசுவதன்று. சரீரத்தில் பூசிய எண்ணெய் முழுவதும் ரோமத்துவாரங்களுள் செல்லும்வரை அழுத்தி அமுக்கிச் சதையைப் பிடித்துப் பிசைந்து தேய்க்கவேண்டும். "எண்ணெயானது எலும்புக்குள் ஊடுருவிச் செல்லுமாப்போல" என்று சங்கீதத்தில் சொல்லியிருப்பது உண்மையே. சதையைப் பிடித்துப் பிசைந்து தேய்ப்பதால் தோலுக்கு உறுதியுண்டாகி அது தன் தொழிலைக் கிரமமாய்ச் செய்வதற்கும், குளிர்ந்த காற்று முதலியவை சரீரத்தைத் தாக்காமல் அதைப் பாதுகாப்பதற்கும் சரீரத்திலுள்ள உஷ்ணந்தணிந்து கண்ணுக்குக் குளிர்ச்சியுண்டாகி சிரோபாரம் நீங்கிச் சுகமுண்டா

வதற்கும் இடமுண்டு. நரம்புகளுக்கும் ஆரோக்கியமுண்டாகி, தூக்கமின்மை, நாவறட்சி, தோல்வறட்சி, தாகம், கண் காலெரிவு, சரீரத்திலுள்ள துர்நாற்றம் முதலியவை நீங்கும்.

வைசூரி முதலிய எவ்வித தொற்று வியாதிகளும் பரவிடாமல் தடுப்பதற்கு எண்ணெய் ஸ்நானம் வெகு பிரயோசனமானது.

க்ஷயரோகம், வயிற்றுப்போக்கு, கிரந்தி நோய் முதலியவற்றிற்கும் எண்ணெய் ஸ்நானத்தால் நன்மையுண்டு.

பக்ஷசுர முதலிய உஷ்ணரோகங்களுக்கு ஆரம்பத்திலே எண்ணெய் ஸ்நானஞ் செய்துவிட்டால் அவற்றின் உக்கிரந்தணிந்து சீக்கிரம் சுகமுண்டாகும்.

கணச்சூடு முதலிய ரோகங்களால் மெலிந்துபோகும் குழந்தைகளுக்கு இது தாஷ்டிகத்தை யுண்டாக்கும்.

அமெரிக்கா ஐரோப்பாவிலுள்ளவர்களுங்கூட தற்காலத்தில் இந்துக்களின் ஆசாரங்களி லநேகம் அருமையானவை யெனக் கண்டு பிடித்து, அவற்றை அப்பியாசிக்க முயற்சிக்கின்றனர். அவற்றிலொன்று ஒலிவ் எண்ணெய் தேங்கா யெண்ணெய் முதலியவற்றைச் சரீரத்தில் அழுத்தித் தேய்த்து ஸ்நானஞ் செய்து வருவதேயாம்.

எண்ணெய் ஸ்நானத்தால் அநேகமாய் நன்மையே யல்லாது தீமையில்லை.

## பாதஸ்நானம். (Foot-Bath)



ஒரு சிறு தொட்டியில் இரண்டு விரற்கடைத் தண்ணீர்விட்டு அதில் அரைநிமிஷம் இருபாதங்களையும் வைத்திருந்து உடனே துவாலையினால் துடைத்துவிட்டுக் கைகளினால் பிடிக்க இரத்தமெல்லாம் பாதங்களுக்கு நன்றாய் உஷ்ணமேறி, தூக்கமின்மை, பாதக்குளிர்ச்சி, பாதத்திலெரிவு முதலிய நோய்கள் நீங்கிச் சுகமாகும். வெந்நீரில் பாதஸ்நானஞ் செய்வதால் கால்களிலுண்டாகும் பாதவெரிவு, விரல்களின் நகவிடுக்கிலுண்டாகும் சேற்றுப்புண் முதலியவை நீங்கும். தலைவலிக்கு 15 நிமிஷம் பாதஸ்நானஞ் செய்யச் சுகமாகும்.

## துருக்கி ஸ்நாநம் என்னப்படும் உஷ்ண ஸ்நாநம்
## (The Turkish or Thermal Bath.)

இது சுகதேகிகளும், வியாதியஸ்தரும் உபயோகிக்கக்கூடிய அருமையான ஸ்நாநம். நுரையீரல், குடல், குண்டிக்காய் முதலியவைகளைப்போல் சரீரத்திலுள்ள கழிவு பதார்த்தங்களை வெளியேற்றுங் கருவியாகிய தோலின் துவாரங்கள் மூலமாய்ச் சரீரத்திலுள்ள சில அழுக்குகளை வியர்வையாக வெளிப்படுத்துஞ் சக்தி இதற்குண்டு. மேலும், இந்த ஸ்நாநத்தைப்போல் இரத்தத்திலுள்ள அசுத்தங்களை வெகு எளிதில் சொற்பநேரத்திற்குள் வெளியாக்கி இரத்த ஓட்டத்தைச் சமப்படுத்தக்கூடியது வேறொன்றுமில்லை. வியர்வை மூலமாக இரத்தத்திலுள்ள அசுத்தங்களெல்லாம் வெளியாகிவிடும். மேலும், நரம்புகளுக்கு ஆரோக்கியமுண்டாக்கி மூளையிலுள்ள பளுவை நீக்கித் தெளிந்த புத்தியுமுண்டாக்கும், கெட்ட இரத்தத்தினு லுண்டாகக் கூடிய சகலவிதமான நோய்களும் இதனால் ஆரோக்கியமாகும். மருந்து சாப்பிடுவதனா லுண்டாகிற சகலவித கெடுதிகளுக்கும், சண்டமாலை, குஷ்டரோகம், தோலின்மேலுண்டாகும் சகலவித வியாதிகள், முறைக்காய்ச்சல் முதலிய சகலவித ஜுரங்கள், இருமல், சுவாசகாசம், ஜலதோஷம், வாதம், வயிற்றுப்போக்கு முதலிய இன்னுமநேக நோய்களுக்கும் இது மகா சிறந்த சஞ்சீவி. இதற்கு வேண்டிய கருவிகள்:-(1) பலகைபோட்ட கைநாற்காலி ஒன்று, (2) இரண்டு போர்வை. (3) ஒரு காப்பிக்கோப்பை, (4) ஒரு பாதஸ்நானத் தொட்டி, (5) கொஞ்சம் மதுசாரம், (alcohol.) (6) ஒரு சிறு பழைய கம்பளித்துண்டு முதலியவைகளே.

நாற்காலியின்மேல் சிறு பழைய கம்பளியை முன்னுக்குத் தொங்கும்படியாக விரித்து, காப்பிக் கோப்பையில் மூன்று விரற்கடை யுயரம் மதுசாரத்தை யூற்றி நாற்காலியின்கீழ் வைக்கவேண்டும். நாற்காலியின் முன் பாதஸ்நானத் தொட்டியில் வெந்நீர் விட்டு வைக்கவேண்டும். நோயாளி வஸ்திரங்களை யெடுத்துவிட்டு நாற்காலியில் உட்கார்ந்து பாதஸ்நானத் தொட்டியில் கால்களை வைத்து நாற்காலியைச் சுற்றிக் கம்பளியினால் மூடிக்கொள்ளவேண்டும். இவ்விதம் ஆயத்தமானபின் ஒரு கிரியிலுள்ள நெருப்பைக்கொண்டு மதுசாரத்தில நெருப்பு வைக்கவேண்டும். நெருப்புக்குச்சி உபயோகித்தால் கையில் பற்றிக்கொள்ளுமாதலால் நெருப்புக் குச்சியினால் மதுசாரத்தில நெருப்பு வைக்கக்கூடாது. இவ்விதம் நெருப்புக்கொளுத்தின மூன்று நிமிஷத்திற்குள் வியர்வை வியர்க்கும். இச்சமயத்தில் இரத்தம் தலைக்கு ஏறித் தலை

பளுவாய்த் தோன்றினால் ஒரு துவாலையை இளவெந்நீரில் நனைத்துப் பிழிந்துவிட்டுக் கழுத்தைச் சுற்றிக் கட்டவேண்டும். மயக்கம்போல் தோன்றினால் ஏராளமாய் வெந்நீர் குடிக்கவேண்டும். அல்லது சுக்குக் கஷாயம் சாப்பிடலாம். வியர்வை காணாமலிருந்தால் அல்லது உஷ்ணம் அதிகமாயிருந்தால் குளிர்ந்த ஜலத்தில் ஒரு துணியை நனைத்து மேலே தேய்க்கவேண்டும். இவ்விதமாகப் பதினைந்து நிமிஷமிருந்து வியர்வை தாராளமாய்க் கண்டவுடன் துணியால் துடைத்துவிட்டுப் பின்பு குளிர்ந்தஜலம் அல்லது இளவெந்நீரில் ஸ்நானஞ் செய்யவேண்டும். ஸ்நானஞ் செய்யும்போது ஒரு ஆள் கையினால சரீரத்தின் ஒவ்வொரு பாகத்தையும் நன்றாய் அமுக்கித் தேய்த்துப் பிடிக்கவேண்டும். இது முடிந்தவுடன் ஒரு மணி நேரம் படுத்து நித்திரை செய்து இளைப்பாறவேண்டும். சுகதேகிகள் இதை வாரத்துக்கொரு முறையும் வியாதியஸ்தர் அடிக்கடியும் கையாடி வருவதுடன் மேல் நன்றாய்ப் பிடிக்கவேண்டும். ஆரம்பத்தில் இது அதிக பலவீனமாய்த் தோன்றினாலும் வரவரப் பலத்தையும் ஆரோக்கியத்தையுங் கொடுக்கும்.

நாட்பட்ட வாதரோகத்திற்கு இதற்கு நிகரான ஔஷதமில்லை. பிரதிதினமும் இந்த ஸ்நானஞ் செய்வதால் வேறெந்த மருந்துக்கும் தீராத வாதரோகம், வாயுரோகங்களெல்லாம் இதனால் குணமாகும். சரீரத்திலுண்டாகும் கொப்பளங்களெல்லாம் இதனால் நீங்கிப் பலமும் சுகமுமுண்டாகும். கர்ப்பிணியின் சரீரமெல்லாங் குளிர்ந்து விறைத்துக்கொண்டாலும், தோல் வறட்சியாய்த் தோன்றினாலும், மேற்சொல்லப்பட்ட எந்த வியாதியாவது தோன்றினாலும் யாதொரு பயமுமின்றி இந்த ஸ்நானம் உபயோகிக்கலாம்.

## தேகாப்பியாசம்.



அசையாப் பொருளாகிய ஒரு மரமுங்கூடக் காற்றினால் அசைக்கப்பட்டாலன்றி உறுதியாய் வேரூன்றமாட்டாது. உபயோகிக்கப்படாத வஸ்துக்கள் துருப் பிடித்துக் கெட்டுப் போவதுபோல், நமது சரீரத்தின் ஒவ்வொரு அவயவமும் அசைவாடாதிருக்கின் இறுத்துப் பலவீனமடைந்து உபயோகமற்றதாகிவிடும். தேகாப்பியாசஞ் செய்வதால் நமது சுவாசக் கருவியாகிய நுரையீரல்கள்

நன்றாய் விரிந்து அதிக சுத்த ஆகாயத்தை உட்கொண்டு இரத்தத்திலுள்ள கறைகளை நீக்கிச் சுத்தப்படுத்தலும், அப்படியே இரத்தாசயமும் உறுதியாகி இரத்தம் விரைவாய்ப் பரவிச் சரீரத்தை வளர்க்கும். சர்மத் துவாரங்களின் வழியாய்த் தேகத்துக்குள் ளிருக்கும் அசுத்தங்கள் வியர்வை நீராக வெளிப்பட்டுச் சரீரத்திற்கு ஆரோக்கியமுண்டாக்கும். மேலும், தேகாப்பியாசத்தினால் மனோதத்துவங்கள் பலமடைந்து, பசித்தீபனமதிகரித்து, சாப்பிட்ட போஜனம் ஜீரணமாகி, சரீரத்துக்குப் பலமுண்டாகும். அநேக கர்ப்பிணிகள் வீட்டுவேலை செய்யாமலும் வெளியிலேபோய் உலாவாமலுமிருந்து, எப்பொழுதும் பாயும் படுக்கையுமாயக் கிடந்து, சாப்பாட்டின்மேல் வாஞ்சையற்று ஜீரணக் கருவிகளையுங் கெடுத்துக் கொள்ளுகிறபடியினால் பேறுகாலத்தில் சொல்லமுடியாத உபத்திரவமடைவதுமன்றி, நோயாளிகளாய்ப் படுக்கையில் தங்கள் ஜீவகாலத்தைக் கழிக்கவும் நேரிடுகிறது. ஆகையால், கஷ்டமில்லாப் பேறுகாலத்தை விரும்பும் ஒவ்வொரு ஸ்திரீயும் தேகாப்பியாசத்தை அசட்டை பண்ணலாகாது. பிரதிதினமும் சுத்த ஆகாயமிருக்குமிடத்தில் சரீரத்தின் ஒவ்வொரு அவயவத்திற்கும் பிரயோஜனமான தேகாப்பியாசத்தைக் கிரமமாகச் செய்து வரவேண்டும். ஆனால் மட்டுக்கு மிஞ்சின கடின அப்பியாசஞ் செய்வதனால் [illegible] கக் கெடுதியுண்டாகும். ஒவ்வொருவரும் தத்தம் பலத்திற்கும் சுகத்திற்குந் தக்கதாக மிருதுவான வேலைகளைச் செய்யவேண்டும். ஏனெனில், அதிகக் கஷ்டமான வேலை செய்வதால் ஒருக்கால் அகாலப் பிரசவம் நேரிடினும் நேரிடும். அப்படி ஒருதடவை நேரிடின் பிற்பாடு ஒவ்வொரு முறையும் அந்தவிதமாக அகாலப் பிரசவம் நேரிட இடமுண்டாகுமாதலால், அப்படிப்பட்டவர்கள் மிக ஜாக்கிரதையாயிருந்து அடிக்கடி படுக்கையிலேயே யிருக்கவேண்டியதாகும். மற்றவர்கள் தங்கள் வீட்டுவேலைகளைக் கிரமமாயச் செய்து வருவதால் அடிக்கடி குனியவும், நிமிரவும், நடக்கவும், ஓடவும், சாமான்களை எடுக்கவும் வைக்கவும், மெத்தைப்படிகளில் ஏறவும் இறங்கவும், முதலிய அப்பியாசங்களைச் செய்து கஷ்டமில்லாதபடி பிள்ளை பெறலாம். ஆனால், கர்ப்பிணிகள் கனமான சாமான்களை மேலே தூக்குதலும், சிரமத்துடன் அவைகளைத் தள்ளுதலும் அதிக நேரம் முழங்காலிலாவது மற்றப்படியாவது நின்றுகொண்டிருத்தலும் மிகத் துன்பஞ் செய்யும்.

ஓர் பட்சியானது தான் முட்டையிடுவதற்கு முன் கூண்டு கட்டுவதில் மிக்க சிரத்தையை எடுத்துக் கொள்ளுவதுபோல, ஸ்திரீயும் தன் பேறுகாலத்திற்குமுன் தன் வீட்டுவேலைகளை மிக்க கவனமாய்ப் பார்த்துவர ஆவலுண்டாகும். அவ்வித வேலைகள் செய்வதில் யாதொரு கஷ்டமும் தோன்றாது. பிரதிதினமும் குறைந்த பக்ஷம்

குமணி நேரமாவது சுத்தக் காற்று வீசும் வெளிப்பக்கங்களில் உலாவவேண்டும். விரைவாய் நடத்தல் சரீரத்தின் ஒவ்வொரு அவயவத்திற்கும் உற்சாகத்தைக் கொடுக்கும். கடுமையில் தோட்டத்தில் வேலைசெய்து வந்தால் அஜீரணம், மலபந்தம், கவலை, பலஹீனம் முதலிய யாவும் நீங்கி ஆரோக்கியமும் மனமகிழ்ச்சியுமுண்டாகும்.

## சுவாசாப்பியாசம்.

நடக்கும்பொழுது வாயை மூடிக்கொண்டு நாசியினால் சுவாசத்தைப் பத்தெண்ணுமட்டும் உள்ளேயிழுத்துச் சற்றுநேரம் வைத்திருந்து பின்பு மெதுவாய் நாசியின் மூலமாகவே வெளியே விட்டு இவ்விதமாய் அடிவயிற்றிலிருந்து சுவாசத்தை மேலிழுத்துச் சுவாசிக்கப் பழகவேண்டும்.

## மெத்தைப்படியில் ஏறி இறங்குவது.

இது கர்ப்பிணிக்கு மகா நன்மையைக் கொடுக்கக்கூடிய அப்பியாசம். ஆனால் அவள் ஏறி இறங்கும்போது கவனிக்கவேண்டிய சில குறிப்புகளுண்டு.

1. மெத்தைப்படியில் ஏறத் தொடங்கும்போது வாயை மூடிக்கொள்ளவேண்டும்.

2. மெல்லிய கட்டைவஸ்திரத்தைத் தளர்த்தி உடுத்தியிருக்க வேண்டும்.

3. ஏறத் தொடங்குமுன் சுவாசத்தை உள்ளேயிழுத்துக் கொண்டு மூச்சுவிடாமல் ஏறி மெத்தைப்படியின் உச்சுக்குப் போன பிற்பாடுதான் சன்னஞ்சன்னமாகச் சுவாசத்தை வெளிவிடவேண்டும்.

4. மெத்தைப்படி ஏறும்போது குனியாமல் நேரே நிமிர்ந்து கொண்டு நெஞ்சை முன்னுக்குத் தள்ளி வைத்துக்கொண்டு நடக்கவேண்டும்.

ஐந்து நிமிஷம் மெத்தைப்படியில் ஏறி இறங்குவது அரைமணிநேரம் மற்ற தேகாப்பியாசஞ் செய்வதற்குச் சரியாகும்.

எச்சரிக்கை:—மெத்தைப்படியில் ஏறி இறங்கும்போது கால் தவறுமலும் படிதவறி மிதிக்காமலும் ஜாக்கிரதையா யிருக்கவேண்டும். அகாலப் பிரசவத்துக் கிடமுள்ளவர்கள் இவ்வப்பியாசஞ் செய்யக்கூடாது.

நெடுந்தூரம் ரெயில் வண்டியிலாவது கப்பலிலாவது பிரயாணம் பண்ணுவதும், அங்குமிங்கும் டக்டக்கென்று அசைந்து கொண்டு போகும் கட்டைவண்டிகளில் ஏறிச்செல்வதும் நல்லதல்ல.

## மேல்பிடித்தல். (Massage.)

மேல்பிடித்தல் அதிக நன்மையைக் கொடுக்கும் அப்பியாசமாகும். இது நரம்புகளுக்கு உறுதியை யுண்டாக்கி இரத்தவோட்டத்தை அதிகரிக்கச் செய்து தேகத்தை திடமாக்கக்கூடிய நல்ல அப்பியாசம். மேல்பிடித்தலென்பது ஒரு வேலைக்காரி கர்ப்பிணியின் சரீரத்தின் ஒவ்வொரு பாகத்தையும் தனது கைகளால் பிடித்துப் பிசைந்து செய்வதாகும். இது நோயாளிகளுக்கும் பலவீனர்க்கும் மிக்க நல்லது. கர்ப்பஸ்திரீயின் வயிற்றில் பிள்ளை நிலைமாறுமல் ஜாக்கிரதையுடன் கையால் பிடித்துவருவது மிகுந்த சுகந்தரும்.

## வேது ஒற்றடம் (Hot Fomentation.)

சில நோய்களுக்கு வெந்நீரில் கம்பளித்துணியைப் பிழிந்து ஒற்றடங் கொடுப்பதுண்டு. வேறு சிலவற்றிற்குச் சுடுகளி, அல்லது சோற்றினால் ஒற்றடங் கொடுப்பார்கள். இவைகள் சீக்கிரங் குளிர்ந்து போவதால் பிரயோஜனமற்றுப் போகின்றன. இவைகளெல்லாவற்றையும் விட ஷாப்புகளில் எளிதில் கிடைக்கக்கூடியதாம். ரப்பரால் செய்யப்பட்டதுமான வெந்நீர்ப் போத்தல்கள் மிகப் பிரயோஜனமுள்ளவை. இவற்றில் கொதிக்கிற வெந்நீர் விடலாம். உஷ்ணம் அதிகநேரமிருக்கும். மேலும், அவைகள் மெதுவாய் சரீரத்தின் எந்தப்பாகத்திலும் வைக்கக்கூடியவைகளுமாயிருக்கின்றன. இது ஒவ்வொரு வீட்டிலுமிருக்க வேண்டிய இன்றியமையாத சாமான்களில் ஒன்று. இவ்வித ஒற்றடமானது கைகால் முடக்கு, கணுக்களில் வீக்கம், தேகத்தில் வலி, கடுப்பு, குற்றல், உளைச்சல், தலைநோய், சிரோபாரம், கைகால் குளிர்ச்சி, மயக்கம், மலச்சிக்கல், வாய்வு, மாதவிடாய் நின்றிருத்தல், ருதுகாலவலி முதலிய அநேக வியாதிகளைச் சுகமாக்குஞ் சஞ்சீவியாகும். கட்டிகள், சுவாசகாசம் முதலிய பல ரோகங்களுக்கு ஷாப்புகளில் கிடைக்கும் (Antephlogestin) அன்றிபிலோஜிஸ்றின் என்னும் களிமை வெந்நீரில் சுடவைத்துக் கட்டினால் அது ஏறக்குறைய பன்னிரண்டுமணி நேரங்களுக்குக் குளிர்ச்சியடையாமல் உஷ்ணமாகவே யிருந்து அநேகவிதமான வேதனைகளையும் வியாதிகளையும் நீக்கும்.

எச்சரிப்பு:—வேது ஒற்றடங் கொடுத்த விடத்தில் குளிர்ந்த காற்றுப்படாதபடி கம்பளித் துணியினால் மூடிவைக்கவேண்டும். அல்லது அந்த இடத்தை வெந்நீரால் கழுவி நன்றாய்த் துடைத்து விட்டுப் பழையபடி வஸ்திரம் உடுத்திக்கொள்ளலாம். மேற்படி வியாதிகளைச் சொஸ்தமாக்குவதற்கு மருந்துகள் சாப்பிடுவதனால் அநேக கெடுதிகள் நேரிடலாம். ஆனால் இவ்வொற்றடத்தால் யாதொரு கெடுதியும் நேரிடாது. வியாதியும் உடனே சுகமாகும்.

## வேறு ஒற்றடங்கள்.

மேற்குறித்த ரப்பரால் செய்த வெந்நீர்ப்பை கிடைக்காவிடில் கல் போத்தலில வெந்நீரை அடைத்து அதன்மேல் கம்பளித்துணியைச் சுற்றி வலியுள்ள இடத்தில் வைக்கலாம். செங்கலையும் சுடவைத்து அதேவிதமாய்க் கம்பளித் துணியில் சுற்றி ஒற்றலாம். வறுத்த உப்பு, மண், அல்லது தவிடு, சுண்ணாம்பல, முதலியவற்றாலும் ஒற்றடங்கொடுக்க ஜலதோஷம், ருதுகாலவலி முதலிய மேற்குறித்த வியாதிகளுஞ் சுகமாகும்.

## சுவாசாப்பியாசம் (Breathing Exercise)

சுவாசமே உயிர். ஆதலால் சுவாசித்தல் என்றால் உயிரோடிருத்தல் என்பதாகும். பிறந்த நிமிஷமுதல் நாம் அனைவருக்கும் சுவாசித்தல் வழக்கமாயும் இயற்கையாயும் போய்விட்டபடியால் நாம் அதைப்பற்றி நினைக்கிறதில்லை. ஆனால், சரியானபடி சுவாசிக்கும் விதத்தைக் கற்றறிந்து அதன்படி செய்வதால் அதிக நன்மையுண்டாகும். சுவாசமானது சிறுமூச்சு பெருமூச்சு என இருவகைப்படும். நம ஜீவியத்தில் இயற்கையாக ஒவ்வொரு நொடிப்பொழுதும் விடும் மூச்சே சிறுமூச்சாகும். ஆனால், பெருமூச்சைப் பற்றி நம்மில் அநேகர் கவனிக்கிறதேயில்லை. யோகாப்பியாசஞ் செய்வோர்மட்டும் அதன் தன்மையை அறிந்து சுவாசத்தை பழக்கத்தினமேல் உள்ளேயிழுத்துப் பக்குவமாய்ப் பலவிடங்களிலும் நிறுத்தி மேலெழுப்பி நினைப்பை நிலைக்கச் செய்தலே தவத்திற் கெல்லாம் மேலான தவமென்றும், இதுவே முடிவானதென்றும் கண்டு பிடித்திருக்கின்றனர்.

சுவாசாப்பியாசத்தை ஓர் சஞ்சீவிக்கு ஒப்பிடலாம். ஏனெனில், அதனால் தீர்க்காயுளும், சுகமும், இன்பமும், காந்தக் கவர்ச்சிக்கொப்பான வல்லமையும் (magnetism,) தேகயீரலுக்கு உறுதியும், காயசித்தியும் உண்டாகக்கூடியவைகளாயிருக்கின்றன.

சுவாசப் பழக்கம் கஷ்டமானதல்ல. சிறுமூச்சுவிடுவது எவ்வளவு எளிதோ அவ்வளவு இலேசாகப் பெருமூச்சுவிடவும் பழகிக்கொள்ளலாம். மிகவும் சுத்த ஆகாயமுள்ள மைதானத்தில் நின்று ஒவ்வொரு நாளும் காலையிலும், மாலையிலும் நெடுமூச்சுவிடப் பயில்வது ஒவ்வொருவரும் அநுசரிக்க வேண்டிய முக்கிய கடமை என்றறிக. காற்றில்லாத அறைகளிலும், சுத்த ஆகாயமில்லாத இடங்களிலும் அவ்விதப் பயிற்சி ஆகாது. நெடுமூச்செனப்படுவது யாதெனில், சுவாசப்பையாகிய நுரையீரல் பூர்த்தியாய் நிறையுமட்டும் சுவாசத்தை உள்ளேயிழுத்து, அங்கு அதை நம்மால்கூடிய நேரமட்டும் நிறுத்திப் பின்பு சிறிது சிறிதாய் வெளியே விடுவதாகும். சுவாசாப்பியாசஞ் செய்வோர்க்கு ஆரம்பத்தில் அநேகமாய் ஓர்வித மயக்கமுண்டாகுமாதலால் ஏதாவதொரு வஸ்துவை ஆதாரமாகப் பிடித்துக்கொண்டு அப்பியாசிப்பது நன்று. காலையிலும் மாலையிலும் பத்து நிமிஷத்திற் கதிகம இவ்வப்பியாசஞ் செய்யக்கூடாது.

ஸ்திரீபோகம் விரும்பிய ஆடவன் தன் ஆசையை மனம்போனபோக்கில் போகவிடாமல் நினைப்பை மூச்சோடு பொருத்திக்கொண்டு வேறிடத்தில் நிறுத்தி ஸ்திரீயின்போகம் கழன்றபின்னர் ஆடவன் தன் போகத்தைப் பிற்படுத்துதல் இருவருக்கும் திருப்தியை கொடுக்கும். சுவாசாப்பியாசஞ் செய்[illegible] வருவதால் சிறு குழந்தைகள் முதல் வயோதியாவரை சகலரும அ[illegible]

---

## கருவுற்றிருப்பவர்களின் ஆகாரம்.

### 1. தேஷ்டமாய்ச் சேர்க்கவேண்டியவை.

கோழிக்குஞ்சு, ஆட்டெலும்பு முதலியவற்றின் சூப்பு, முட்டை, பிஸ்கோத், புதியமாமிசம், மச்சம், அல்வா, பழையரொட்டி, பாயாஸம், சவ்வரிசிக்கஞ்சி, பால்சேர்ந்த பலவித கஞ்சிகள், புதிய நெய், கற்கண்டு, தேன், திராக்ஷப்பழம், கிச்சிலிப்பழம், மாதளம்பழம், பேயன்வாழைப்பழம், சீமைஇலந்தைப்பழம், அத்திப்பழம், வாதுமைப்பருப்பு, கொட்டிக்கிழங்கு, அதிமதுரம், கரும்பு, குங்குமப்பூ, ரோஜாப்பூ, பன்னீர், அரைக்கீரை, ஆரைக்கீரை, சிறுகீரை, தூதுளை, வசலை, பொன்னாங்காணி, மணத்தக்காளி துவரை, சிறுபயறு, அத்திப்பிஞ்சு, அவரைப்பிஞ்சு, கத்தரிப்பிஞ்சு, பீர்க்கம்பிஞ்சு, முருங்கைப்பிஞ்சு, மாவடு, கோவைக்காய், வாழைக்கச்சல், வாழைப்பூ, வெண்டைப்பிஞ்சு முதலியவற்றையும், ஊர்க்குருவி, காடை, கௌதாரி, கோழிக்குஞ்சு, புறாக்குஞ்சு,

தாளித்த பதார்த்தங்கள் முதலியவற்றையும், கருவாடு வகையில் காரைப்பொடி, குறவை, கிழங்கான, அறு, திருக்கை, வரால், வள்ளறு, நெத்திலி, கச்சைக் கருவாடு, ஓலவாளைச் சுருகு முதலியவற்றையும், ஊறுகாய் வகையில் இஞ்சி, கடுக்காய், நெல்லிக்காய், மாம்பிஞ்சு, எலுமிச்சம்பழம், கிளாக்காய், கச்சநாரத்தங்காய் முதலியவற்றையும, துவையல் வகையில் பிரண்டை, புளியாரை, புதினா, பச்சைக் கொத்தமல்லி, வேப்பம்பூ, நாய்க்கடுகு, துவரம்பருப்பு, பச்சைப்பருப்பு முதலியவற்றையும, பலகார வகையில் இஞ்சி, காயம், மிளகு சேர்த்துச் செய்த தோசை, இட்டலி, பூரி, போளி, ஆப்பம், உப்பு, முதலியவற்றையும் மிதமாய்ச் சேர்க்க வேண்டும்.

## முற்றும் நீக்கவேண்டியவை.

அதிகப் புளிப்பு, கசப்பு, உவர்ப்பு, கார்ப்பு (உரைப்பு) உள்ள பதார்த்தங்களையும், அதிகச் சூடுள்ள பதார்த்தங்களையும், சூதகவிர்த்தி, மலப்பதி, நீர்ப்பதி, இவைகளை யதிகரிக்கக்கூடிய பதார்த்தங்களையும், மந்த பதார்த்தங்களையும், தாமதித்து ஜீரணமாகும் பதார்த்தங்களையும், ஓயின், பிராந்தி, விஸ்கி, பீர் முதலிய லாகிரி வஸ்துக்களையும், பன்றி, மான், வாத்து, முதலியவற்றின் மாமிசத்தையும், ஈரல், கிழங்கு தினுசுகள், உபபுக்கண்டம், அன்னாசிப் பழம, மாமபழம், பலாபபழம, பப்பாளிப்பழம், பழங்களின்தோல்கள், எட்டு நிமிஷத்திற்கு மேற்பட ஊறிப்போன காப்பி, தேயிலை முதலியவற்றையும் கட்டோடே நீக்கவேண்டும்.

நீறின பஸ்பங்கள், செந்தூரம் முதலிய விஷமுள்ள மருந்துகளை உபயோகிப்பதனால் கர்ப்பம் அழிந்துபோவதுண்டு. ஒருவேளை அழியாமல் குழந்தை பிறந்தாலும அது ஊனம் அல்லது செவிடு முதலிய ரோகமுடையதா யிருக்கும்.

## கர்ப்பிணிகள் அநுசரிக்கவேண்டிய விதிகள்.

1. கர்ப்பிணிகள் அம்மை, சுரம், பிளேக், விஷபேதி முதலிய தொத்து வியாதிகளுள்ள இடங்களுக்குப் போகக்கூடாது. அவ்விடங்களிலிருந்து யாரையுந் தங்கள் வீடுகளுக்கு வர இடங் கொடுக்கவுங் கூடாது. ஏனெனில், இவ்வியாதிகள் எளிதில் கர்ப்பிணிகளுக்குத் தாக்கி அகாலப் பிரசவத்தை உண்டுபண்ணுவதுடன் மரண வேதனைக்கும் ஆளாக்கிவிடும்.

2. பிரதிதினமும் குறைந்த பட்சம் ஒருமணி நேரமாவது சுத்த காற்று வீசும் வெளிப்பக்கங்களில் உலாவிவருவதுடன் சரீ

ரத்திற்கு லேசான அப்பியாசங்களாகும் வீட்டுவேலைகளைச் செய்து வருவதும் சுகமான பேறுகாலத்திற்கு இடமுண்டாக்கும். அதிக உழைப்பான வேலைகள் செய்வதும், எளிதில் ஜீரணிக்கக் கூடாத போஜனம் அருந்துவதும், மிதமிஞ்சிய போகம் அநுபவிப்பதும், இரவில் அதிகநேரம் கண் விழித்திருப்பதும், உஷ்ணத்தை உண்டாக்கும் வஸ்துக்களைப் புசிப்பதும், நெடுநேரம் பசியா யிருப்பதும், அதிக பாரமான மூட்டைகளைச் சுமப்பதும், கனமான சாமான்களை மேலே தூக்குவதும், சிரமத்துடன் அவைகளைத் தள்ளுவதும், மிதமிஞ்சிக் கால்நடையாய் நடப்பதும், வண்டியில் பிரயாணம் செய்வதும், அதிக கோபம், பொறாமை, பகை, துக்கம், கவலை, பயம் முதலியவற்றிற்கு இடங் கொடுப்பதும், அகோரமானதும் பயங்கரமானதுமான காட்சிகளைக் கண்ணால் பார்ப்பதும், துக்க வீடுகளுக்குப் போவதும், ஆகிய இக்காரியங்களை முற்றும் நீக்கவேண்டும்.

3. கண்ணுக் கின்பத்தைக் கொடுக்கும் அழகிய படங்களினாலும், சொரூபங்களினாலும் வீட்டை அலங்கரித்து அவற்றின் அழகு தன் மனதில் பதியத்தக்கதாக அடிக்கடி பார்த்துச் சிந்திக்க வேண்டும்.

4. கர்ப்பிணி மேடு பள்ளமான இடங்களிலும் கரடுமுரடான இடங்களிலும் தாறுமாறாகக் கண்டபடி கண்டவிடத்தில் உட்காரக்கூடாது. சமமான தரையில் காலைநீட்டி உட்காருவது நலம்.

5. கர்ப்பிணி தனிமையான படுக்கையில் குளிர்ச்சியும் நன்றாய் காற்று வரத்தக்கதுமான இடத்தில் நித்திரை செய்தால் நன்மை யடைவாள். ஒவ்வொரு நாளும் மத்தியச் சாப்பாட்டிற்கு முன் சிறிதுநேரம் தூங்கிக்கொள்வது மிக உத்தமம். இரவிலும் எட்டு அல்லது ஒன்பதுமணி நேரம் நன்றாய்த் தூங்கவேண்டும்.

6. உடை, பாவாடையாவது ரவிக்கையாவது இறுக்கிக் கட்டக்கூடாது. அடிவயிற்றிலும் மார்பிலும இறுக்கிக் கட்டினால் மோசமுண்டாகும். ஏனெனில், தாராளமாகச் சுவாசம் விடுவதையும இரதத ஓட்டத்தையும் அவைகள் தடுததுச் சுகவீனமுண்டாக்கும்.

7. ஸ்நாநம். கர்ப்பிணி பிரதிதினமும் மத்தியானத்தில் இளவெந்நீரில் ஸ்நாநஞ் செய்யவேண்டும். அச்சமயத்தில் அவளுடைய முதுகு, தோள், அடிவயிறு, விலாப்பக்கம் முதலியவற்றை வேறொருவர் தேய்ப்பதால் தேகத்திற்கு மிக்க ஆரோக்கியமும் பலமுமுண்டாகும். இரவில் நித்திரைக்குப் போகுமுன் ஓர் மரத்தொட்டியில் இளவெந்நீர் ஆறு அங்குல உயரத்திற்குவிட்டு அதில் இருபதுநிமிஷம் பிரதிதினமும் ஆசனஸ்நாநஞ் செய்து வருவதால் மிக நன்மையுண்டு. அது முடிந்தவுடன் ஒருமணிநேரம் படுக்கையில் இளைப்பாற வேண்டும்.

## தனிப்பிரார்த்தனை.



கர்ப்பவதியானவள் தனிமையா யிருக்குங் காலத்தில் அடிக்கடி தன் ஸ்திதியைக் கவனிக்கிறதும், ஆண்டவரிடத்தில் மன்றாடித் தனக்குச் சுகமும் சௌக்கியமும் கிடைக்கவும், பேறுகாலமாகிய பெருங் கடலை நீந்தித் தன் உயிர்தப்பவும், தன்கர்ப்பக்கனி அஷ்ட லக்ஷணங்களும் பொருந்தி ஆயுள் விர்த்தியும் புத்திகூர்மையும் பலவிதசற்குணங்களும் நிறைந்ததாய்த் தன் உதரத்துள்ளே நாள்தோறும் வளர்ந்தோங்கும்படியாகவும் மனங்கனிந்து கடவுளைப் பிரார்த்திப்பதும் வழக்கம். ஆகையால் தனிஜெபத்தைப் பற்றிச் சில குறிப்புகள் இங்கு சொல்வதயசியம்.

நிஷ்களனது புஷ்கள கடாட்சமே தமதுபூரண மனோருட்சமமாகக்கொண்டு அந்தியும் சந்தியும் அவருக்கு மனோபூஜிதாஸ்தோத்திரம் புரிந்து வருவதே ஜெபமாகும். நாம் சிறுபிராயமுதல் சாவவல்லபமும் பொருந்திய ஜெகதீசருடைய பாதாரவிந்தங்களை நோக்கிப் பக்திவிநயத்துடன் பூஜை செய்துவரக் கற்றிருக்கிறோம். ஆனால், சிலரோ தமது வாயினால்மட்டும் கிளிப்பிள்ளையைப்போல ஜெபங்களையும் மந்திரங்களையும் ஒப்பிவிட்டுத் தாம் கடவுளுக்குச் செய்யவேண்டிய கடமை முடிந்ததென்று எண்ணுகிறார்கள். அது ஜெபமாகமாட்டாது. ஜெபத்திற்கு வேண்டியது ஊக்கமும், நாம் கேட்பது கிடைக்குமென்ற உயிருள்ள விசுவாசமுமே. இதைப் பற்றியே உலக ரக்ஷகர் "உங்களுக்குக் கடுகளவு விசுவாசம் இருந்தால் இந்த மலையைப் பார்த்து நீ பெயர்ந்து நடுசமுத்திரத்திலே போகக்கடவாயென்று சொன்னால் அப்படியே ஆகும் என்றும், கேளுங்கள், அப்பொழுது உங்களுக்குக் கொடுக்கப்படும், தேடுங்கள் அப்பொழுது கண்டடைவீர்கள், தட்டுங்கள் அப்பொழுது உங்களுக்குத் திறக்கப்படும்," என்றும் சொல்லியிருக்கிறார்,

பேபர் சக்ரவர்த்தி தன்மகனாகிய உமாயூன் வியாதியாயிருந்த போது தன் மகன் சொஸ்தமாகும்படியாகவும அவனுடைய வியாதி தனக்கு வந்து பிடிக்கவும் ஊக்கத்தோடும் உறுதியோடும் ஜெபித்துத் தன் மனதில் இடமாய் ஊன்றி விரும்பியபடியினால், அவன் விருப்பத்தின்படியே உமாயூன் சுகமானதாகவும் அவ்வியாதி பேபருக்குத் தொற்றி அவர் மரணமடைந்ததாகவும் இந்துதேச சரித்திரத்தில் வாசிக்கிறோம். இவ்விதமாக நாம் உறுதியான விசுவாசத்தோடு கேட்டுக்கொள்ளும் எந்தப் பிரார்த்தனையும் கேட்கப்படும் என்பதற்கு ஆக்ஷேபனையில்லை.

வாங்கியே விசுவாசமாகக் கொண்டால்—மருந்தென்ன
வைத்தியன் கைபட்டாற் போதும்.

என்று பெரியோர் சொல்லியிருப்பதும் உண்மையே.

விசுவாசத்தினாலுண்டாகும் சிலாக்கியங்களைப் பற்றி விவரித்துச் சொல்ல இந்த இடம் போதாதாயினும் விசுவாசத்தால் கூடாதவை மிகவும் சொற்பமென்றும் நம்பிக்கையில்லாவிடில் ஒன்றுங் கைகூடாதென்றும் சுட்டிக் காட்டுவதவசியம்.

தனிமையான நேரத்திலே தனிமையான இடத்தில் யாவரோடும் சமாதானமான இருதயத்தோடு, தேவசமூகத்தில் முழங்காற்படியிட்டு, அல்லது சாஷ்டாங்கமாய்த் தரையில் விழுந்து கும்பிட்டு, அல்லது நின்றுகொண்டு இருகரங்களையுஞ் சிரசின்மேல் குவித்து நாம் கேட்கப்போகிறதைக் கடவுள் தம் சித்தப்படியே வாய்க்கச் செய்வார் எனனும் உறுதியான விசுவாசத்தோடு ஜெபிக்கவேண்டும். சில வேளைகளில நாம ஜெபிக்கும்போது நம்முடைய எண்ணமானது கண்டமட்டும் அலையத்தொடங்கி ஜெபமுழுவதையுங் கெடுத்துவிடும். நமக்கிருக்கும் பலவீனங்களில் விசேஷித்த பலவீனம இஃதாகும். ஆதலால், ஆரம்பத்தில மனதுக்குள்ளேயே சொல்லி ஜெபிக்கிறதைவிட வாய்விட்டுச்சொல்லி அல்லது பாடல்களால் துதித்து ஜெபிப்பது, எண்ணஞ் சிதறாமலிருப்பதற்கு உதவியாகும். உனக்கு எது தேவையோ அதற்காக ஜெபி. அந்த நேரமே நீ பேசுவதைச் சற்று நிறுத்தி உன் சமீபத்திலிருக்கிற உன் தேவன் உன் ஜெபத்தைக் கேட்டுப் பதிலளித்து விட்டாரென்று நம்பி நீ கேட்டதைப் பெற்றுக்கொள்ளும்படி உன் இருகரங்களையும் ஏந்தி ஏற்றுக்கொள்.

பரமபிதா இரக்கமும், உருக்கமும்நிறைந்தவர் என்பதையறிந்து அவரைக் கிட்டிச் சேரும்போது சகலவித பயத்தையும் நீக்கி அவரை பூரணமாய் அன்புகூரக் கற்றுக்கொள். அப்பொழுது உன்

விசுவாசம் அதிகரிக்கும். உன் விசுவாசத்திற்குத் தக்க பலன் கிடைக்கும். கிடைத்துவிட்டதென்னும் நம்பிக்கை உன்மனதில் புகுந்தவுடனே ஆச்சரியப்படத்தக்க விதமாய் உன் விண்ணப்பம் கேட்கப்பட்டதைக் காண்பாய். மனஞ் சிதறாமல் மௌனமாய் ஜெபிக்கக் கற்றுக்கொள்வது மிகவும் நன்று. விசுவாசத்தோ டெழுந்துபோ. கர்த்தர் உன்னோடிருப்பார். நீ கேட்டதெல்லாம் வாய்க்கும்.

கடலமுதே தேனே யென் கண்ணே கவலைப்
படமுடியா தென்னை முகம்பார் நீ பராபரமே.

பாராயோ வென்னைமுகம் பார்த்தொருகா லென்கவலை
தீராயோ வாய்திறந்து செப்பாய் பராபரமே.

ஓயாதோ வென்கவலை யுன்னையா னந்த வெள்ளம்
பாயாதோ வையா பகராய் பராபரமே.

உள்ள மறிவா யுழைப்பறிவாய் நானேழை
தள்ளிவிடின் மெத்தத் தவிப்பேன் பராபரமே.

கன்றினுக்குச் சேதா கனிந்திரங்கல் போலவெனக்
கென்றிரங்குவாய் கருணை யெந்தாய் பராபரமே.

எண்ணாத வெண்ணமெல்லா மெண்ணியெண்ணி யேழைநெஞ்சம்
புண்ணாகச் செய்ததினிப் போதும் பராபரமே.

துன்பக் கண்ணீரிற் றுலைந்தேற் குன்னானந்த
வின்பக் கண்ணீர் வருவதென்னாள் பராபரமே.

படமுடியா தினித்துயரம் படமுடியாதரசே,
பட்டதெல்லாம் போதுமிந்தப் பயந்தீர்த்திப்பொழுதென்,
உடற்கவலை நீக்கி மிகக் களிப்பினொடு நினக்கே
உண்மையுடன் கைகுவித்து ஸ்தோத்திரங்கள் புரிய,
திடமுடனே யருள்புரிவா யென் கண்ணுண் மணியே,
தேவசிகாமணியே யென் மாணிக்கமணியே,
கடல்போலுங் காருண்ய மிகுத்த நவமணியே,
காத்திடு நன்மணியே பொன்மணியே நவராஜமணியே.

---

கடவுள் துணை.

# மானிட மர்மசாஸ்திரம்.

## ஏழாம் புஸ்தகம்.

### கர்ப்பகால நோய்களும் பரிகாரங்களும்.

மருந்தென வேண்டாவாம் யாக்கைக்
கருந்தியதற்றது போற்றியுணின்—குறள்.

இஃது

யாவர்க்கும்

சுக செல்வ நன்மைகளையும் சுகிர்த பாக்கிய
பொக்கிஷத்தையும் நீடூழி பெருகுவிக்க
விரும்பிய,

கல்கத்தா சர்வகலா சங்கத்தின் தமிழ்ப்பரீக்ஷகரும், ரங்கூன் செண்ட்
ஜான்ஸ் கல்லூரிப் பிரதமாசிரியரா யிருந்தவரும், வைத்ய சாஸ்திரம், பூமிசாஸ்
திரங்களின் கிரந்தகர்த்தாவும், மானிட மர்ம சாஸ்திரப் பிரபலாசிரியரும்,
சாமிவேல் வைத்தியசாலைத் தலைவருமாகிய

**எஸ். சாமிவேல், பி. ஏ. அவர்கள்**

**இயற்றியது.**

புதிய பதிப்பு.

சாமிவேல் பிரஸ்,

தென்சாஞ்சி, இரங்கோன்.

1920

All Rights Reserved.

கடவுள் துணை.

# மானிட மர்ம சாஸ்திரம்.

## ஏழாம் புஸ்தகம்.



### கர்ப்பக்கால நோய்களும் பரிகாரங்களும்.

கர்ப்பிணிகளுக்கு வழக்கமாய் உண்டாகக்கூடிய சில வியாதிகளைத் தாங்களே சிகிச்சை செய்து சௌக்கியப்படுத்திக்கொள்ளக்கூடிய சில சமயோசித முறைகளைப் பற்றியும் அநுசரிக்கவேண்டிய விதிகளைப் பற்றியும் இங்கு எடுத்துரைப்பது நன்மைபயப்பதாகும்.

### வாந்தி.

கர்ப்பிணிகளுக்கு முக்கியமாய்த் துவக்கத்தில் அதிகாலையில் வாந்தி உண்டாவது வழக்கம். ஆனால், காட்டில் வசிக்கிற நாகரீகமற்ற ஸ்திரீகளுக்குள் வாந்தி என்பதே கிடையாது. ஆகையால், வாந்தி பண்ணுவது இயற்கை என்று சொல்வது தப்பிதம். கர்ப்பஸ்திரீகள் தங்கள் ஆகாரத்தைப்பற்றிக் கவலையற்றிருப்பதே வாந்தி பண்ணுவதற்கு முக்கிய காரணம். கர்ப்பிணிகள் தாங்கள் சாப்பிடத் தகுந்த போஜனத்தை மாத்திரம் சாப்பிட்டு, சாப்பாட்டிற்கிடையில் மற்றெவ்விதமான பதார்த்தத்தையும் சாப்பிடாமலிருப்பதனால் இவ்வித வாந்தி வாராதபடி தடுக்கலாம்.

அதிகாலையில் படுக்கையி லிருந்துகொண்டே ஒருகோப்பை காப்பி, சுடுதண்ணீர், சுடுபால் அல்லது கஞ்சித்தண்ணீர் குடித்துப் பின்னும் சிறிதுநேரம் படுத்திருப்பது, இரவில் படுக்கைக்குப் போகுமுன் சாம்பேன் (Champagne) என்று சொல்லப்பட்ட திராட்ச ரசம் ஒரு கிளாஸ் சாப்பிடுவது, இரவில் கனத்த போஜனம் சாப்பிடாதிருப்பது, அதிகாலையில படுக்கையிலிருந்தெழுந்தவுடன் சிறிது நேரம் வெளியில் உலாவுவது, மேல்வயிற்றில் கடுகு போல்டீஸ் அல்லது ஏதாவது ஒற்றடங்கொடுப்பது, ஒரு தேங்காய் ண்டி சுண்ணும்புத் தெளிவுநீரில் காய்ச்சிய பசுவின் பால்விட்டுச் சாப்பிடுவது முதலியவற்றை சமயத்துக்குத் தகுந்த பிரகாரம் கையாடுவதனால் வாந்தியை நிறுத்தலாம். இதுவுமல்லாமல், அதிகாலையில் படுக்கையிலிருந் தெழுந்தவுடன் ஒரு கிளாஸ் குளிர்ந்த தண்ணீர் அல்லது பனிக்கட்டி ஜலமும் சோடாவும் குடிப்பதும், வாரக்கு தன் தேகமுழுவதையும் தேய்த்து ஸ்நாநஞ் செய்வதும், நல்ல சுத்த ஆகாயமுள்ள இடத்தில தேகாப்பியாசஞ் செய்வதும் அதிக பிரயோஜனமாயிருக்கும். பட்சிகளின் வயிற்றிலுள்ள கல்லுழி என்னப்படும் கல்லீரலில் இருந்தெடுக்கப்பட்ட சத்துவாகிய இங்குலிவின் (Ingluvin) என்னும் ஔஷதத்தில் ஐந்து குன்றிமணி யெடை பாலிற்கலந்து போஜனமானபின் சாப்பிட்டுவர வாந்தி நின்று உணவு ஜீரணிக்கும். கொஞ்சம் தண்ணீரில் சோடாவும் சீனியுங் கலந்து அதனோடு கொஞ்சம் எலுமிச்சஞ்சாற்றை ஊற்றி நுரையுண்டானவுடன் சாப்பிட வாந்தி சுகமாகும். அல்லது இஞ்சிக்குள் கறியுப்பு பொதிந்து சுட்டு அரைத்துத் தேனிற் குழைத்துஞ் சாப்பிடலாம்.

அதிக வாந்தியினால் சாப்பாட்டின்மேல் அருவருப்பாயிருந்தால சாப்பிடுமுன் கொஞ்சம் தேன் அல்லது நெல்லிக்காய் ஊறுகாய் சாப்பிடுவது நல்லது. சிலருக்கு வாந்தியே நிற்காமல் கஷ்டமாவதுண்டு, அப்படிப்பட்டவர்கள் எப்பொழுதும் படுக்கையிலேயே யிருந்து, பால், பனிக்கட்டி முதலிய நீர்ப்போசனங்களைச் சிறிது சிறிதாக ஒருமணி அல்லது இரண்டுமணி நேரத்துக் கொருதடவை சாபபிட்டுவர வேண்டும். கோழிக்குஞ்சு சூப்பை (Soup) வடிகட்டிச் சிறிது சிறிதாகச் சாப்பிட்டு வரவேண்டும். எந்த ஆகாரமும் அதிகமாய்ச் சாப்பிடக்கூடாது. வயிறு போகாவிடில்,



சாமிவேலின் சிங்கமார்க்கு

விரேசன பவுடர். (Purgātive Powder.)

ஒரு பொட்டலத்தை அரைகிளாஸ் தண்ணீரில் கலந்து சாப்பிடவேண்டும்.—விலை அணா 4.

நமது வாந்தி நிவாரணி இவ்வித நோய்க்கென்றே தயாரித்து வைத்திருக்கிறது.—விலை ரூ. 1.

## தின்பண்டத்திலாசை.

கர்ப்பிணிகளுக்குப் பலவித தின்டிகளின்மேல் ஆசை உண்டாவ தியற்கை. ஆனால், சுகதேகமுள்ள ஸ்திரீகளுக்கு இவ்வித ஆசை உண்டாகாது. விசேஷமாய்த் தங்கள் நேரத்தை எப்படிச் செலவழிக்கிறதென் றறியாமல் சோம்பேறிகளா யிருப்பவர்களுக்கும், தாங்கள் எதைக் கேட்டாலும் வாங்கிக் கொடுக்கக்கூடிய புருஷரையுடையவர்களுக்கும் இவ்வித ஆசை உண்டாகும். புருஷர்கள் இப்படி வாங்கிக் கொடுப்பதனால் தங்கள் பத்தினிகளின சரீர சுகத்தைக் கெடுக்கிறதுமல்லாமல் கண்டமாலை முதலியநோய்களுள்ள பிள்ளைகள் பெறுவதற்கும் இடமாக்குகிறார்கள். கர்ப்பிணிகள் எப்பொழுதும் சுறுசுறுப்பா யிருப்பதனாலும், தகுந்த சாப்பாடு சாப்பிடுவதனாலும் இவ்வித ஆசையை ஒழிக்கலாம்.

சில கர்ப்பிணிகள் சிலேற்றுப் பென்சல், சீமைச் சுண்ணாம்பு (Chalk), அடுப்புக்கரி, சாம்பல், மண் முதலியவைகளில ஆசைப்படுவதுண்டு. இது அவர்கள் சுகத்திற்குக் கெடுதலை விளைவிக்குமாதலால் எப்படியாவது இவ்வித ஆசையை நீக்கவேண்டும். இவ்வித ஆசையுண்டாகும்போது ஒரு சிநேகிதியுடன் பேசிக்கொண்டிருத்தல், வெளியில் போய் உலாவுதல், ஏதாவது கதை, பாட்டு முதலானவைகளைப் படித்தல், தையல்வேலைசெய்தல் முதலியவைகளில ஏதாவதொன்றில தன மனதைச் செலுத்தி அவ்வித ஆசையை ஒழிக்கவேண்டும். அல்லது சிறிது பயற்றை அல்லது அரிசியை வறுத்து வைத்துக்கொண்டும் சாப்பிடலாம்.

---

## மயக்கம்.

இது சிலருக்குக் கர்ப்பிணியா யிருக்குங் காலமுழுவதிலும், வேறு சிலருக்கு சமயாசமயங்களிலும உண்டாவதுண்டு. பலவீனர்க்கே முக்கியமாய் உண்டாகும். ஒரு ஸ்திரீக்கு மயக்கமுண்டானால அவளைக் குளிர்ச்சியான ஒரு தனி அறையில தலைகொஞ்சந் தணிவாகப் படுக்க வைத்து, உடுப்புகளைத் தளர்த்திவிட்டு, முகத்தில் ஜலம் எறிந்து, விசிறியால விசிறி, ஒரு கிளாஸ் ஒயின் அல்லது குளிர்ந்த ஜலம குடிக்கக் கொடுப்பதனால மயக்கம் போய்விடும். நமது ஆக்ராண உப்பைப்போன்ற அம்மோனியா உப்புகளை (Smelling Salts) முகரச் செய்தால் உடனே மூர்ச்சை தெளியும். உள்ளங்கால், உள்ளங்கைகளில் குளிர்ச்சி கண்டால், உடனே நமது மகா சஞ்சீவித் தைலம் (Magnetic Balm.) அல்லது கற்பூரத்தைலம் (Turpentine) தேய்க்க, உடனே உஷ்ணம்

காணும். மஞ்சள்பொடி அல்லது உழுந்துமாவை கற்பூரத்தோடு கலந்து தேய்க்கலாம். தைவேளை இலையையும் வெள்ளுள்ளியையும் தட்டி பெருவிரலில் வைத்துக்கட்ட குளிர்ச்சி நீங்கி உஷ்ணமுண்டாகும்.

பலமுண்டாக்கத்தக்க மீனெண்ணெய், பால், தயிர், நெய், முதலிய நல்ல ஆகாரங்களைச் சாப்பிட்டால் சரீரம் பலமடைந்து அவ்வித மயக்கமுண்டாகாது. சுக்கு, சிற்றரத்தை, லவுங்கம், சாதிக்காய், அக்ராகாரம், சன்னலவங்கப்பட்டை, பெருலவங்கப் பட்டை, சாலாமிஸ்ரி, நிலப்பனங்கிழங்கு இவைகளில் வகைக்குப் பலம் ஒன்றெடுத்து சூரணித்து வடிகட்டி வைத்துக்கொண்டு, வாதுமைப்பருப்பு, பிஸ்தாபருப்பு, அக்ரோட்பருப்பு, சாரம்பருப்பு, முதலிய பருப்பினங்களில் வகைக்குப் பலம் மூன்று எடுத்து மைப்போலரைத்து மேற்சொல்லிய சூரணத்தோடு கலந்து வைத்துக்கொள்ளவும். அதன்பின் ஆறுபடி பசுவின்பாலை சிறு தீயிலிட்டு காய்ச்சி மர அகப்பையில் துளாவி பால் திரளும் பக்குவத்தில் முப்பது பலம் சீனியைக் கொட்டி துளாவி கரைந்தபின் பதத்தில் மேலே சுத்தப்படுத்தி வைத்திருக்கும் பதார்த்தங்களைக்கொட்டிக் கிளறி வைத்துக்கொண்டு காலையில் நெல்லிக்காய்ப் பரிமாணம் சாப்பிட்டுவர இருதயம், ஈரல், இரப்பை, மூளை இவைகளுக்கு வலுவேறி, மயக்கம், மூர்ச்சை, மாரடைப்பு, மூச்சுமுட்டல் முதலியவைகள் நீங்கி தேகாரோக்கியமுண்டாகும். இந்திரியவிர்த்தி, போகசக்தி, ஞாபகசக்தி முதலிய பல நன்மைகளுண்டாகும். மீனெண்ணெயில் ஒரு மேசைக்கரண்டியளவு விட்டு அதில் 15-துளி ஜீவாமிர்தம் (Life Drops) கலந்து போஜனத்துக்குமேல் காலையிலும், மாலையிலும் சாப்பிட்டுவர மிக்க நன்மையுண்டாகும். விலை ரூ. 1.

## தூக்கமின்மை.

இது முக்கியமாய்ப் பலவீனமான ஸ்திரீகளில் சிலருக்குக் கர்ப்பிணியாயிருக்குந் துவக்கத்திலும், வேறு சிலருக்குக் கடைசியிலும் உண்டாவதுண்டு. பிரதிதினமும் ஸ்நானஞ் செய்வது, சுத்த ஆகாயமுள்ள இடத்தில் தேகாப்பியாசஞ் செய்வது, சுத்த ஜலத்தைப் பருகி, சுகமான போஜனம் புசித்து, குளிர்ந்த காற்றுள்ள இடத்தில் திரிகுவதனால் தூக்கமுண்டாகச் செய்யலாம். இதுவுமல்லாமல் படுக்கைக்குப் போகுமுன் கை, கால், முகம் முதலியவைகளை சுத்தமான குளிர்ந்தஜலத்தில் கழுவுவதனால சீக்கிரம் நித்திரை வந்துவிடும். காப்பி, தேயிலை சாப்பிடுவது அதிகமாய் நித

திரைக்குத் தடையாயிருப்பதால் அவைகளை முற்றுமே நிறுத்த வேண்டும். இரவில் நித்திரைக்குப் போகுமுன் ஒரு கோப்பைச் சுடுதண்ணீர் மாத்திரம் குடித்தால் நித்திரை நன்றாயுண்டாகும். இரவில் படுத்துக்கொண்டு தூக்கத்தைப் பற்றியே நினையாமல் தனக்கிஷ்டமான வேறொரு காரியத்தில் முழுவதுமாய் மனதைச் செலுத்தி யோசித்துக்கொண்டேயிருப்பதால், அல்லது மல்லாந்து படுத்துக்கொண்டு கண்ணைத் திறந்து தன் நெற்றிக்குச் சற்றுப் பின்னால் நேர் உயரத்திலிருக்கிற ஒரு வஸ்துவையும், தன கண்ணுக்கு முன்னாலிருக்கிற ஒரு வஸ்துவையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டு கண்ணைச் சுழற்றிக்கொண்டிருந்துவிட்டு, இரண்டு மூன்று நிமிஷத்திற்குப் பின்பு திடீரென்று கண்ணைமூடி அதற்குப் பின்னும் அந்த மாதிரிக் கண்ணைச் சுழற்றிக்கொண்டிருப்பதால் திடீரென்று தூக்கம் வந்துவிடும். அபினி முதலிய தூக்கமுண்டாகக்கூடிய மருந்துகளைச் சாப்பிடுவதனால் தாய்க்கும் பிள்ளைக்கும்கெடுதியுண்டாகும்.

---

## மலச்சிக்கு.

அடிவயிறு பெருத்துச் சிறுகுடலை நெருக்குவதனாலும், கொழுப்பான சாப்பாடு, காப்பி, தேயிலை முதலியவைகள் சாப்பிடுவதனாலும், தேகாப்பியாசஞ் செய்யாமல் சோம்பலா யிருப்பதனாலும் சிலருக்கு மலச்சிக்கல் உண்டாவதுண்டு. இது இன்னும் அனேக வியாதிகளுக்குங் காரணமாகிறது. தலைவலி, வயிற்றுவலி, நெஞ்செரிவு, குலைபதைத்தல், மயக்கம், மூலமுளை, தூக்கமின்மை முதலிய வியாதிகளுக்கும், இன்னும் கர்ப்பிணிகளுக்குண்டாகும் சகலவித ரோகங்களுக்கும், பிரசவகாலத்தில் மிக்க வேதனையைக் கொடுப்பதுடன், அகாலப் பிரசவத்துக்குங்கூட இதுவே காரணமாகும். இவ்வளவு தீமையை விளைவிக்கும் மலச்சிக்கலை மிக எளிதில் நீக்கலாம். கோதுமை நொய்யைப் பிரியமான மாதிரியெல்லாம் சமைத்துச் சாப்பிடல் உத்தமம். பலகாரம், பணியாரம், மிட்டாய், காப்பி, தேயிலை முதலியவற்றை முற்றும் நீக்கவேண்டும். அத்திப்பழம், பேரீச்சம்பழம், கிச்சிலிப்பழம், அப்பில்ஸ், திராட்சைப்பழ வற்றல், சீமை இலந்தைப்பழம் முதலிய மலத்தை இளக்கக்கூடிய பழங்களையும், காய்கறி பதார்த்தங்களையும் சாதாரணமாய் உபயோகிக்க வேண்டும். பிரியமானால் சிறிது பால் சேர்த்துக்கொள்ளலாம். ஆனால், சுத்த ஜலத்தை எப்போதும் அருந்துவதே மிக சிரேஷ்டம். இவ்வித சாப்பாட்டோடு பிரதிதினமும் தேகாப்பியாசஞ்செய்து, இடுப்புக்குத் தண்ணீர்விட்டு, இரவில் படுக்கைக்குப் போகுமுன் ஒரு புட்டி சோடா அல்லது இரண்டு கிளாஸ் குளிர்ந்த ஜலம் அருந்தி வருவார்களானால் மலச்சிக்கல் உண்டாகமாட்டாது.

மலச்சிக்கலினால் அதிக உபத்திரவப்பட்டால் சரீரத்துக்குத் தகுந்தபடி, எல்லா இங்கிலீஷ் வைத்தியசாலையிலும் கிடைக்கக்கூடிய ஏனோஸ் புருட்சால்ற் (Enos Fruit Salt.) அல்லது சீமை அதிமதுரச் சூரணம் (Compound Liquorice Powder) ஒரு மேஜைக் கரண்டியளவு ஒரு கிண்ணம் குளிர்ந்த ஜலத்தில் கரைத்து இரவில் படுக்கைக்குப் போகுமுன் சாப்பிடவேண்டும். இவைகளெல்லாவற்றையும் விட இரண்டு மேஜைக்கரண்டி ஆலிவ் எண்ணெயை (Olive Oil) தினந்தோறும் படுக்கைக்குப் போகுமுன் சாப்பிட்டு வந்தால் நல்லது. ஆமணக்கெண்ணெயைப்போல் இது வயிற்றைக் கலக்கிக் கடுத்து உபாதிசெய்யாது.

நிலவாரை, ரோஜாப்பூ, முதலியவைகளின் வெந்நீர் கஷாயம் சாப்பிட மலபந்தம் நீங்கும்.




சாமிவேலின் சிங்கமார்க்கு

மலபந்த நிவாரணி.

(Constipation Cure.)




இரவில் படுக்கைக்குப் போகுமுன் மேற்படி நிவாரணியில் ஒரு மேஜைக் கரண்டியளவு சாப்பிட்டுவர அதிகாலையில் நன்றாய் மலசுத்தியாகும்.—விலை ரூ. 1.

---

## வயிற்றுப்போக்கு.

மலச்சிக்கல் அதிககாலமாயிருந்துகொண்டே வந்தால் வயிற்றுப்போக்கு உண்டாகும். சில ஸ்திரீகளுக்கு மலச்சிக்கலில்லாமலே வயிற்றுப்போக்கு உண்டாவதுண்டு. மலச்சிக்கலுக்கு மாதிரியே இதற்கும் லேசான சாப்பாட்டுடன், இடுப்புக்கு வெந்நீர் ஊற்றுவதும் நல்லது. விளக்கெண்ணெயைக் கொஞ்சம் பாலில் கலந்து கொடுத்தால் வயிற்றிலிருக்கும் களங்கத்தை வெளியேற்றிவிடும். அதற்குப்பின் 5 குன்றுமணி எடை டோவர்ஸ் பவுடராவது (Dovers Powder,) அல்லது சாமிவேலின் சிங்கமார்க்கு குளோரடைனாவது கொடுக்கச் சுகமாகும்.—விலை ரூ. 1. இறைச்சி சிறிதுகாலம் சாப்பிடக்கூடாது.

வயிற்றில் வலியுமிருந்தால் மணலை வறுத்துக் கம்பளித் துணியில் கட்டி அல்லது சுடுதண்ணீரினால் ஒற்றடம் கொடுக்கலாம். வயிற்றுப்போக்கு நின்றுவிட்டாலும், துவக்கத்தில் லேசான சாப்பாடு சாப்பிட்டு மெள்ள மெள்ளத்தான் பழையபிரகாரம் சாப்பிடவேண்டும். எப்பொழுதும் பாதங்களைச் சூடாக வைத்துக்கொண்

டிருப்பதும், அடிவயிற்றில் ஒரு அகல கம்பளிக் கச்சையைக்கட்டியிருப்பதும் மெத்த நல்லது. பேதியைக் கட்டுவதற்கு நமது குளோராடயின் (Chlorodyne.) பத்துத் துளி சிறிது ஜலத்தில் கொடுக்கலாம். எட்டுப்பங்கு பாலும் ஒருபங்கு சுண்ணாம்புத் தெளிவு ஜலமும் கலந்து குடிக்கலாம். பட்சிகளின் வயிற்றில் கற்கள் சேர்ந்து ஜீரணமாகும் கல்லுமிழி ஒன்றுண்டு. இந்தக்கல்லுமிழியிலிருந்து எடுக்கப்படும் சத்திற்கு இங்குலிவின் (Ingluvin.) என்று பெயர். இந்த இங்குலிவின் என்னும் அவுடதத்தை மூன்றுமணிக்கொருதடவை பத்துக் குன்றுமணி யெடை எடுத்துப் பாலுடனாவது தண்ணீருடனாவது கலந்து சாப்பிட உடனே சொஸ்தமாகும்.





சாமிவேலின் சிங்கமார்க்கு

குடல்பலகாரி.

(Intestinal Antiseptic.)

இரண்டு பில்லைகளை தினம் 3 வேளையும் சாப்பாட்டிற்குமேல் சாப்பிட்டுவர, அஜீரணம், வயிற்றுப்பிசம், புளித்த யேப்பம், வயிற்றோட்டம் முதலியவைகள் நீங்கி குடல் பலப்படும். இது மகா சிறந்த ஔஷதம். நாம் அநேகமாய் அநுபவித்துக் கைகண்டது. ஒவ்வொரு வீட்டிலும கட்டாயம் இருக்கவேண்டியது. விலை ரூ. 1.

---

## மூலரோகம். (Piles)

மூலரோக முண்டாவதற்கு முக்கிய காரணம் மலச்சிக்கலே. ஆகையால் கர்ப்பிணியானவள் மலச்சிக்கல் வாராதபடி முன் கூறப்பட்ட முறைகளைக் கையாடி வருவாளாயின் இந்நோய் வரமாட்டாது. ஸ்திரீயானவள் எக்காலத்திலும் விசேஷமாய்த் தான்கர்ப்பிணியாயிருக்குங் காலத்திலும் தன் ஆகாரத்தைப்பற்றி அதிகக் கவலையாயிருப்பாளாயின், மற்றெல்லா வியாதிகளையும்விட மிகத் தொந்தரவையும் அதிக வேதனையையும் தினந்தோறு முண்டாக்கக்கூடிய இக்கஷ்டமான வியாதி வாராமல் தடுத்துக்கொள்ளலாம். இந்நோய் அதிகமாய் வருத்தினால் உஷ்ணமான ஒற்றடங்கொடுப்பதால் குணமாகும். மாசக்காய், அபினி இவ்விரண்டையுஞ் சேர்த்த களிம்பை (Ointment of galls and Opium.) மூலமுளையில் தடவி வந்தால் சொஸ்தமாகும்.

கெந்தக லேகியம் (Confection Sulphur) உள்ளுக்குச் சாப்பிடலாம்.




சாமிவேலின் சிங்கமார்க்கு
மூலரோக நிவாரணியும் களிம்பும்.
(Pile Specific and Ointment.)

வெளிமூலம், உள்மூலமாகிய சகல மூலங்களுக்கும் காரணம் மலபந்தமே. நமது மலபந்த நிவாரணி அல்லது சுகபேதி மாத்திரையைக் கிரமமாய்ச் சாப்பிட்டு மலப்பிரவர்த்தியை ஒழுங்குபண்ணிக்கொள்ளவேண்டும்.

சாப்பிடும் விதம்:—மூலரோக நிவாரணியில் இரண்டு தேக்கரண்டியளவு போஜனமானபின் சாப்பிட்டு வருவதுடன், மூலரோகக் களிம்பை 3 அல்லது 4 தடவை மூலத்தில் தடவி காலையிலும், மாலையிலும் கர்பாலிக் லோஷனால் கழுவவேண்டியது. விலை மூலரோக நிவாரணி ரூ. 3. மூலரோகக் களிம்பு ரூ. 1. கர்பாலிக் லோஷன் ரூ 1.

பத்தியம்:—காப்பி, ஒயின், பிராந்தி, மிளகு, மசாலை, வாசனை வஸ்துக்கள், கிளர்ச்சியைத் தரத்தக்க ஆகாரம், விரேசன மருந்துகள் அருந்தக்கூடாது.

மூலம் தள்ளுகிற காலங்களில் பால், முட்டை, ரொட்டி, சூப்பு முதலியவைகளைச் சாப்பிட்டு நோயாளி அமைதியாய்ப் படுக்கையிலிருக்க வேண்டும்.




சாமிவேலின் சிங்கமார்க்கு
மூலமுளைக்கு லேகியம்.
(Pile-Hulva.)

இந்த லேகியத்தை நெல்லிக்காய்ப் பிரமாணம் காலை மாலை 20 நாள் சாப்பிட உள்மூலம், இரத்தமூலம் முதலான சகல மூலவியாதியுந் தீரும்.—விலை ரூ. 2.




சாமிவேலின் சிங்கமார்க்கு
மூலத்துக்குச் சூரணம்.
(Pile Decoction.)

இந்தச் சூரணத்தில் இரண்டு மேசைக்கரண்டி யளவெடுத்து அரைப்படி தண்ணீர் விட்டுக் காய்ச்சி மாகாணிப்படியாக வற்றிய பின் இறுத்துக் கஷாயத்தை மத்தியானம் சாப்பிடவும்.

இதைச் சாப்பிடுங் காலத்தில் காலையிலும் மாலையிலும் மூலக்குடார லேகியம் நெல்லிக்காய்ப்பிரமாணம் சாப்பிடவும். விலை ரூ. 1.



சாமிவேலின் சிங்கமார்க்கு
மூலமுளைக்குப் புகைத்தூள்.
(Pile Fume.)



இந்தத்தூளில் ஒரு மேசைக்கரண்டி யளவெடுத்து, அனலில் தூவி அதன்மேல் ஒரு துவாரமுள்ள கொட்டாங்கச்சியை வைத்து மூடி அதன் துவாரத்தின் வழியாய் ஆவியை பலனை வாயிற்படிக்க சகல மூலமும், ஆசனக்கடுப்புந் தீரும்.—விலை அணா 12.

## திணவு. (Itching.)

அநேக கர்ப்பிணிகளுக்குத் திணவு உண்டாவதுண்டு. இதன் காரணமென்னவென்று சரியானபடி தெரியாவிட்டாலும் அசுத்தமே இதன் முக்கிய காரணமென்று சொல்லலாம். திணவு உண்டாகிற இடத்தை அடிக்கடி குளிர்ந்த ஜலத்தால் கழுவுதல், ஈரத்துணி, பனிக்கட்டி முதலியவைகளை அவ்விடத்தில் கட்டிவைத்தல், மஞ்சள் தூளைப்போட்டுக் கழுவுதல் முதலியவற்றால் அடைக்கலாம். சில வைத்தியர் வெண்காரத்தைத் (Borax) தண்ணீரில் கலக்கி அத்தண்ணீரினால் ஒரேநாளில் அநேகந்தடவை அவ்விடத்தைக் கழுவவேண்டுமென்று சொல்லுகிறார்கள். ஆனால் இவைகளெல்லாவற்றையும்விடக் குளிர்ந்த ஜலத்தினால் கழுவுவதே மிக உத்தமம்.

அதிக நமைச்சல் கண்டால் வைநோலியா சவுக்காரம் (Vinolia Soap.) தேய்த்துக் கழுவிச் சுத்தம் செய்வதுமல்லாமல், அரைப்படி சுத்தமான குளிர்ந்த ஜலத்தில் இரண்டு அவுன்ஸ் ஹேஸலீனைக் (Hazeline Lotion) கரைத்துக் கழுவினால் மிக்க அனுகூலத்தைக் கொடுத்துத் தவறாமல் சௌக்கியம் செய்துவிடும். லெட் லோஷனையும் (Lead Lotion) இதே பிரகாரம் உபயோகிக்கலாம். காடியும் (Vinegar) தண்ணீரும் சமபாகங்கலந்து திணவுள்ள இடத்தை ஒரேநாளில இரண்டு மூன்று தடவை கழுவவேண்டும். தண்ணீரில உப்புக் கலந்து ஆசனஸ்நானம் செய்வது அதிக நன்மையைப் பயக்கும். நாலு அங்குல உயரமுள்ள தண்ணீரில் 15-நிமிஷம் உட்காரவேண்டும். காலில் செருப்புப்போட்டுக் கொண்டு நனையாமல் தொட்டிக்கு வெளியே தரையில் வைக்கவேண்டும். மேல்துணிகளை எடுத்துவிட்டு ஒரு சிறுபோர்வையை மாத்திரம் போர்த்திருக்கவேண்டும்.



சாமிவேலின் சிங்கமார்க்கு
நமைச்சல் களிம்பு.
(Pruritis Ointment.)



தினவு உண்டாகிற யிடத்தை அடிக்கடி சோப் வெந்நீரினால் கழுவி நன்றாய்த் துடைத்துவிட்டு "நமைச்சல் களிம்பை" காலையிலும் மாலையிலும் தேய்த்துவர நமைச்சல் நீங்கிச் சுகமாகும். விலை ரூ. 1.

---

## நெஞ்செரிவு.

கர்ப்பமான துவக்கத்தில் சிலருக்கு அடிக்கடி நெஞ்செரிவு உண்டாவதுண்டு. கர்ப்பிணியானவள் தன் ஆகாரத்தைப் பற்றியும் முக்கியமாய்த் தான் புசிக்கவேண்டிய அளவைப்பற்றியும் கவனிப்பாளாயின் நெஞ்செரிவு உண்டாகவேமாட்டாது. நூற்றில் ஒருத்திதவிர மற்றவர்களெல்லாரும் மற்றக் காலங்களைவிடத் தாங்கள் கர்ப்பிணிகளா யிருக்கும் காலத்தில் அதிகம் சாப்பிடுகிறார்களென்பதற்குச் சந்தேகமில்லை. நெஞ்செரிவு இருக்கிறதென்றறிந்தவுடனே சாப்பாட்டின் அளவைக் குறைக்கவேண்டும். அதிகாலையில் நெஞ்செரிவு உண்டாயின், அதற்கு முந்தின நாள் புசித்த ஆகாரத்தை நிறுத்திவிட்டு வேறு ஆகாரம் புசிக்கவேண்டும். தேவையானால் ஒருவேளை, அல்லது இரண்டுவேளைப் போஜனத்தை நிறுத்திவிட்டு குளிர்ந்தஜலம் மாத்திரம் சாப்பிட்டுவந்தால் மெத்த நல்லது. நெஞ்செரிவு துவங்கினவுடன் இரண்டு கிளாஸ் வெந்நீர் குடித்து வாந்திபண்ணினால் உடனே சுகமாய்ப்போகும். அப்படியே வாந்திபண்ணுவிட்டாலும், அவ்வெந்நீர் வயிற்றினுள்ளேபோய் நெஞ்செரிவைக் கொடுக்கக்கூடிய வஸ்துக்களைக் கரையச் செய்யுமாதலால் உடனே நெஞ்செரிவு நின்றுபோம்.

நெஞ்செரிவு அதிகமாயிருந்தால் ஒரு தேயிலைக்கரண்டி கால்செயின்ட் மெக்னிசியா (Calcined Magnesia) அல்லது அரைத் தேயிலைக் கரண்டி கார்போனேட் சோடா (Carbonate of Soda ஒரு ஒயின் கிளாஸ் சுடுதண்ணீரில் கலந்து சாப்பிடல் நல்லது. நெஞ்செரிவு இன்னும் அதிகமாயிருந்து மலக்கட்டுண்டா யிருந்தால் கால்பலம் செயிட்லிட்ஸ் உப்பு (Seidlitz Salt) நாலுபலம் ஜலத்தில் கலந்து சாப்பிடவேண்டும்.



சாமிவேலின் சிங்கமார்க்கு
குடல்பலகாரி.
(Intestinal Antiseptic.)



ஒவ்வொரு மாத்திரை போஜனத்திற்குமேல் சாப்பிட்டுவர நெஞ்செரிவு உண்டாகவேமாட்டாது.

## முகவலி. (FACIAL NEURALGIA.)

உப்பையாவது மணலையாவது தவிட்டையாவது வறுத்து ஒரு துணியில் கட்டி வலிக்கிற இடத்தில் ஒற்ற வலி நீங்கும். கற்பூரத் தைலத்தை (Camphor spirits) அல்லது நமது மகா சஞ்சீவித் தைலத்தை (Magnetic Balm) பூசலாம். உள்ளுக்கு மருந்து சாப்பிடக்கூடாது.

முகத்தை வெந்நீரால் நன்றாய்க் கழுவிக்கொண்டு, நாலுசெங் கல்களை அடுப்புக்குள் போட்டு நன்றாய் உஷ்ணமேறினவுடன் ஒவ்வொன்றாய எடுத்து அதன்மேல ஈரத்துணியைச் சுற்றிக் குத்தெடுக்கிற பாகங்களில் ஒற்றடங் கொடுக்க அரைமணி நேரத்திற்குள் நீங்கும்.

---

## கால்கை வீக்கம். (SWELLING OF FEET & LIMBS.)

கர்ப்பமாயிருக்கும் கடைசி மாதங்களில் அந்திநேரத்தில் கால்கை வீங்கியிருப்பதாகச் சிலருக்குத் தோன்றும் இது கர்ப்பாசயம பெரிதாகி இரத்தக் குழாய்களை அழுத்துவதனால் அவைகள் சரீரத்தின கீழ்ப்பக்கத்திலுள்ள இரத்தத்தை மேல கொண்டு போவதனாலும், இரத்தம் தண்ணீராயிருப்பதனாலும உண்டாகிறது. மலச்சிக்கல் எவ்வளவுக்கு உண்டாகிறதோ அதேகாரணங்களினால்தான் இவை உண்டாகிறபடியால அதற்குச் செய்த முறைப்படியே இதற்கும் விதமாய்ச் சாப்பிட்டுத் தன்தேகத்தைப் பேணிக்கொள்ளவேண்டும். இவ்வித வீக்கங்களோடு காதிரைச்சலாவது, கண்ணின்முன் ஒளி வீசுவது போன்ற தோற்றமாவது, நெற்றிவலியாவது இருக்குமாயின் உடனே ஸ்திரீயின் சிறுநீரை ஒருபாத்திரத்தில ஊற்றிக் காய்ச்சிப் பார்க்கும்போது முட்டையின வெள்ளைக்கருபோன்ற ஒரு வஸ்து அதில் காணப்படுமானால் உடனே வைத்தியருக்குத் தெரியப்படுத்த வேண்டும். ஏனெனில, அவைகள் ஜனனிக்குக் குறிப்பாகும்.

வீங்கின பாகத்தைக் குளிர்ந்த ஜலத்தில் தேய்த்துக் கழுவுவதனாலும், நாலு அங்குல அகலமுள்ள ஒருதுணியினால் அல்லது கம்பளியினால் வீங்கின இடத்தை லேசாய்ப் பாதத்தில துவக்கி மேலே சுற்றிக் கட்டுவதனாலும் வீக்கம வற்றும். பகல்நேரத்தில் ஒரு பட்டு மேல்ஜோடு போட்டு, அதன்மேல் நீண்டு சுருங்கத்தக்க (Elastic.) ஒரு மேல்ஜோடு போடுவது நல்லது. ஒவ்வொரு நாளும இரண்டு மூன்றுதடவை குறைந்தது அரைமணிநேரம் கால கைகளைக் கீழேயிருந்து மேலே தேய்த்துக்கொண்டிருந்தால மிக

வும் நல்லது. இரவிலே நித்திரை செய்கையில் கால்களைத் தலையணைமேல் வைத்துத் தூங்கச் சுகமாகும். பகலிலும் பாதங்களை உயர்ந்த ஸ்தானத்தில் நீட்டிக்கொண்டு உட்காருவதே உசிதம்.

## பல்வலி,

கர்ப்பிணிகளுக்குப் பல்வலி உண்டாவதுமன்றிச் சில சமயங்களில் பல் சொத்தையாகிப் போவதுமுண்டு. இது சாதாரணமாய பல் அசுத்தத்திலும், அஜீரணத்திலும், வாயிலும் வயிற்றிலும் உண்டாகும் புளிப்பினாலும் உண்டாகிறது. ஆகையால் ஒவ்வொரு நேரமும் சாப்பிட்டபின்பும் சாப்பிடு முன்பும் பற்களையும் வாயையும் நன்றாய்ச் சுத்தம்பண்ணவேண்டும். பின் குறிப்பிட்டிருக்கும் நமது பல்வலி திராவகத்தை உபயோகிக்கலாம்.

பல்வலி அதிகமாய்விட்டால், சொத்தைப் பல்லிருக்கிற பக்கத்திலுள்ள காதில் கொஞ்சம் பஞ்சை வைத்து அடைத்தால் சுகமாகும். அது சித்தியாகாத விஷயத்தில் வெறும் கிளோராபாரிமில் (Chloroform) பஞ்சை நனைத்து அதை வலியுள்ள பக்கத்துக் காதினுள் வைத்து வலி நீங்கும்வரைக்கும் அடிக்கடி மாற்றி வைத்துக்கொண்டிருந்தால் சுகமாகும். இதற்கும் வலி நீங்காவிட்டால் ஒரு வெள்ளைத் துணியைப் பிராந்தியில் நனைத்து அதில் மிளகை அரைத்துப்பூசி வலியுள்ள பக்கத்துக் கன்னத்தில் மாற்றி மாற்றிப் போட்டிருக்கவேண்டும். அநேகமாய் இது நல்ல சுகத்தைக் கொடுப்பதுமல்லாமல், கடுகுபோல்றறிலைப்போல் எரிச்சலுண்டாக்காது. இதுவுமன்றி, கற்பூரத்தைத் தூள்செய்து பொட்டலமாகக் கட்டி அதைச் சிறிது ஜலமுள்ள ஒரு பாத்திரத்தில் போட்டு ஒருநாள் முழுதும் மூடிவைத்துப் பின்பு அத்தண்ணீரினால் வாய்கொப்பளித்து வரவேண்டும்.

இவைகளுக்கெல்லாஞ் சுகமாகாவிட்டால், இலங்கப்பூவும் கிளோரபார்மும் சேர்ந்த எண்ணெயில், (Oil of Cloves & of Chloroform.) அல்லது அபின் சாரமும் கிளோரபாரமுஞ் சேர்ந்த எணணெயில (Laudanum and Chloroform.) கொஞ்சம் பஞ்சை நனைத்துப் பலலிலுள்ள துவாரத்தில வைககவேண்டும். அல்லது பத்துககிரேன் சீனக்காரத்துளை அரை அவுன்ஸ் கிளோரபார்மில் கலக்கியும் போடலாம்.

பல்வலி எவ்வளவு தாங்க முடியாததா யிருந்தபோதிலும், பல்லை மாத்திரம் பிடுங்கவே கூடாது. ஏனெனில், அப்படிப் பல்லைப் பிடுங்குவதனால் சிலவேளைகளில் சூங்கண்டு அகாலப்பிரசவம்

நேரிடுவதும் உண்டு. பல்வலியினால் முகம் வீங்கியிருந்தால் அக்கோனைற் (Tincture of Aconite.) றை வீங்கின இடத்தில் பூசலாம். ஆனால், வெளிப்பிரயோகத்துக்கு மாத்திரமே இதை உபயோகிக்கவேண்டும்.




சாமிவேலின் சிங்கமார்க்கு

## பல்வலி திராவகம்.

## (Instantaneous Toothache Cure.)



பல்வலி, பல்புழு, ஈகிறுவீக்கம், பல்கூச்சம், பல்லசைவு முதலியவற்றிற்குச் சிறிது பஞ்சை ஓர் துரும்பில் சுற்றிக்கொண்டு அதைத் திராவகத்தில் நனைத்து வலியுள்ள இடத்தில் வைத்துவிட்டு உமிழ்நீரைத் துப்பிவிட வேண்டும். இப்படி இரண்டொரு தடவை வைக்க எவ்வித வலியும் உடனே நீங்கும். மகா சஞ்சீவித் தைலத்தை முகத்தின வலியுள்ள பக்கத்தில் தேய்த்து வேது ஒற்றடங் கொடுத்து குளிர்படாமல் கம்பளித்துணியால் படத்தில் காண்பித்திருப்பதுபோல கட்டி வைக்கவேண்டும். விலை அணா 10.

நமது ரெத்தின பல்தூளால் பல்துலக்கி வரவேண்டியது.




சாமிவேலின் சிங்கமார்க்கு

## ரெத்தின பல்தூள்.

## (Diamond Tooh Powder.)

சுகந்த வாசனையுள்ள இந்த மனோகரத்தூளால் பிரதிதினமும் காலை மாலை பல்துலக்கிவர பல்வலி, பல்கூச்சம், பல்லரணை, பல்லசைவு, வாய்நாற்றம், பற்புழு, ஈறு கரைந்து இரத்தம் வடிதல், முதலிய பல நோய்கள் தீர்ந்து, பற்களுக்கு உறுதியும், பிரகாசமும் உண்டாகும். பற்களிலுள்ள பூச்சிகளைக்கொன்று ஈறிலுள்ள புண்களை ஆற்றி வாய்க்குச் சுகந்த வாசனை கொடுக்கக்கூடிய அருமையான இந்தத் தூளை ஒரு தடவை உபயோகித்தவர்கள் எப்பொழுதும் உபயோகிக்க ஆசைப்படுவார்களென்பது உண்மை, பரீக்ஷித்துப் பார்க்கவும்.—விலை டப்பி 1-க்கு அணா 6.



சாமிவேலின் சிங்கமார்க்கு
பல் வேதனைக்குத் தூள்.
(Tooth-ache Powder.)



இந்தத் தூளில் சிறிதெடுத்து வேதனையிருக்கிற இடத்தில் சற்று வேளை வைத்திருந்து அதன்பின் ஒருவாய் பாக்கு வெற்றிலை துவைத்து வலியுள்ள பக்கத்தில் அடக்கி வைக்க வலி நீங்கும். பொட்டலம் 1-க்கு விலை அணா 2. டசன் ரூ. 1—4—0.

---

## தலைவலி.

முக்கியமாய்க் காப்பி தேயிலையே தலைவலிக்குக் காரணமென்று அநேக டாக்டர்கள் சொல்லுகிறார்கள். தகாத சாப்பாடு, சுத்த ஆகாயமில்லாத அறை, தேகாப்பியாசக் குறைவு, வெயிலில் திரிவது, ..த்தில நடப்பது, மழையில்நனைவது, மலச்சிக்கு, அஜீரணம் முதலியவைகளும் காரணமாயிருக்கலாம். சிலருக்கு உருளைக்கிழங்கு, வெண்ணெய் முதலிய கொழுப்பான பதார்த்தங்கள் தலைவலியையுண்டுபண்ணும்.

கர்ப்பிணியானவள் தான் நடக்கவேண்டிய விதியைக் கவனித்து நடப்பாளாயின் தலைவலி வரமாட்டாது. மருந்து சாப்பிட்டால பிள்ளைக்கும் தாய்க்கும் கெடுதியுண்டாகும். ஆனால், சுடு தண்ணீர், சுடுகிற லெமனேட் (hot lemonade) சாப்பிடுவதனால், அல்லது தண்ணீரில் உப்பைப்போட்டுச் சாப்பிடுவதனால் தலைவலி நீங்கும். இதுவுமல்லாமல, பிரதிதினமும் காலை மாலை ஆற்றங்கரை, கடற்கரைகளில் உலாவிச் சுத்த ஆகாயத்தைச் சுவாசிப்பதால் தலைவலி நீங்கும். சுரைக்காய், பூசணிக்காய், மொச்சைக் கொட்டை முதலிய மந்தம் செய்யத்தகக வாய்வு பதார்த்தங்களை சாப்பிடக்கூடாது.

பாதஸ்நானம் அதாவது பாதங்களைச் சுடுதண்ணீரில் 20 நிமிஷம் வைக்கத் தலைவலி நீங்கும்.

கொஞ்சம் வால்மிளகை நல்லெண்ணெயுடன் கலந்து கொதிக்க வைத்து நாடோறும் கொஞ்சங் கொஞ்சம் தலையில் பூசி வரத் தலைவலி நீங்கும். பீடிரியில் கடுகுபற்றிடலாம். சந்தனத்தை முலைப்பாலிற் குழைத்து நெற்றியில் பூசலாம்.

கருப்பை அழற்சி (Uterine Irritation.) யினாலும் தலைவலி உண்டாவதுண்டு, அவ்வலியினால் உச்சியிலும் பிடரியிலும் எரி

பந்த நோயெடுத்து ஞாபகச்சக்தியையும் பார்வையையுங்கூட மங்கச் செய்யும். சாயந்தரம் அதிகரித்துப் படுத்தவுடன் லேசாகும். இதற்குப் பிரதிதினமும் வெந்நீரில் ஆசன ஸ்நாநம் செய்யவேண்டும். பிடரிக்கு வேது ஒற்றடங் கொடுக்கவேண்டும். எப்போதும் சாய்ந்து உட்காரவேண்டும். தலையையும் பிடரியையும் நன்றாய்த் தேய்க்கிறதனாலும் அழுத்திப் பிடிக்கிறதனாலும் தலைவலி நீங்கும்.




சாமிவேலின் சிங்கமார்க்கு
தலைவலி பில்லை.
(Headache Tablets.)

நமது மகா சஞ்சீவித் தைலத்தை தலையில் பூசி, நமது சிங்கமார்க்கு (Samuel's Headache Cure) தலைவலி பில்லைகள் சாப்பிட்ட உடனே நிற்கும்.—விலை அணா 8.

---




சாமிவேலின் சிங்கமார்க்கு
தலைவலி பவுடர்.
(Headache Powder.)

வாயில்போட்டுச் சுடுகாப்பியாவது, தண்ணீராவது சாப்பிடத் தலைவலி நீங்கும். விலை அணா 2.

---




சாமிவேலின் சிங்கமார்க்கா
ஸ்நாநத்தைலம்.
(Medicated Bathing Oil.)

இந்தத் தைலத்தை வாரமிருமுறை தேய்த்து ஸ்நாநஞ் செய்து வந்தால் கண்காந்தல், கண்ணில் நீர்வடிதல், மேகத்தடிப்பு, பீனிசம், தலைவலி, ஜலதோஷம், கபாலசூலை, சிரசில் நீரேற்றம, கைகால் காந்தல், மேலசதி, காதுநோய், காதிரைச்சல் முதலிய நோய்கள் சுகமாகும். கெர்ப்ப ஸ்திரீகளுக்குண்டாகும கைகாலெரிவு, வீக்கம், தலைமயக்கம் முதலிய ரோகங்களும், ஸதிரீகளுக்குண்டாகும் சூதகவாய்வு முதலிய சகல ரோகங்களும் சுகமாகும். நாலு நாளைக கொருதடவை இந்தத் தைலத்தைத் தேய்த்து ஸ்நாநஞ் செய்ய மிக்க பயன்தரும்.—விலை ரூ 1.

---

## ஸ்தனங்களில் வலி.

முதல் முதல் கர்ப்பிணியா யிருப்பவளுக்கு அடிக்கடி ஸ்தனங்களில் வலி தோன்றுவதுண்டு. அப்படி வலியெடுக்கிற பாகத்தை குளிர்ந்த ஜலத்தினால் கழுவித் துணியை நனைத்து அதில் கட்ட வேண்டும். அடிக்கடி ரவிக்கைகளை இறுக்கிக்கட்டுவது அதற்கு முக்கிய காரணமா யிருப்பதால், அவைகளைத் தளர்த்தியாக இரத்த ஓட்டம் தடைப்படாதபடி கட்டவேண்டும்.

ஓடிக்கலோன், (Eau-de-Cologne.) ஒலிவ் எண்ணெய், (Olive Oil.) இரண்டையும் சமபாகமாய்க் கலந்து ஸ்தனங்களில் தேய்த்துப் புதுக்கம்பளித் துணியை அவைகளில் கட்டவேண்டும். இப்படித் தேய்க்கும்போது ஸ்தனங்களிலிருந்து பால்போன்ற வஸ்து வெளியாவதனால் அவ்வலி நீங்கும்.

வெள்ளாறுகைப் பசுவின் பால் விட்டரைத்து ஸ்தனங்களில் பூசலாம்.

---

## வலிப்பு.

அடிக்கடி நாட்டியசாலை, நாடகசாலை, பொருட்காட்சிச்சாலை முதலிய இடங்களுக்குப்போய் இரவில் அதிகநேரம் விழித்திருப்பதனாலும், காப்பி, தேயிலை அதிகமாய்ச் சாப்பிடுவதனாலும், கர்ப்பிணிகளுக்கு ஒருவித வலிப்பு வருவதுண்டு. கர்ப்பகாலத்தில் மாத்திரமேயன்றி எக்காலமும் சரியானபடி ஜீவிப்பதனாலும், எக்காலமும் தங்கள் நன்மையையும் சுகத்தையும் கருதி நடப்பதனாலும் இக்கொடூரமான வியாதிவர இடங்கொடாமலிருக்கலாம்.




சாமிவேலின் சிங்கமார்க்கு
காக்கைவலி நிவாரணி.
(Anti-Epileptic Mixture.)




காக்கைவலி திடீரென வந்து சிலருக்கு ஒரு நிமிஷம் மாத்திரம் இருக்கும். மற்றவர்கள் கீச்சுக்குரலிட்டு உரக்கக் கூவிக்கொண்டே ஸ்மரணையற்றுப் பூமியில் விழுந்துவிடுவார்கள். பின்பு உதறலும், பற்கடிப்பும், மூச்சுத்திணறலும் காணும். வாயிலிருந்து நுரைதள்ளும், விரல்கள் மடங்கியிருக்கும், கைகள் புரளும், பற்கள் கிட்டிக்கொள்ளும், நாக்கு பற்களுக்கிடையில் சிக்கிக்கொண்டு காயப்படுவதுமுண்டு. பின்பு அயர்ந்த நித்திரை பிறக்கும் அரைமணி நேரத்திற்குள் எழுந்திருப்பதுண்டு. இந்தக் குறிகள் சிலருக்கு அற்பமாயும், சிலருக்கு அகோரமாயும் காணப்படுவதுண்டு.

**ரோக நிதானம்:**—சூதக ஜன்னிக்கும், அசதி ஜன்னிக்கும், காக்கைவலிக்கும் இருக்கிற வித்தியாசங்களை நாம் கண்டுகொள்ள வேண்டியது. காக்கைவலியில், அறிவு சுத்தமாய் இல்லாமலிருக்கும்; அது நின்றபிறகு அயர்ந்த நித்திரை பிறக்கும்; வாயிலிருந்து நுரை வெளிப்படும்; முகம் குரூபமடைந்திருக்கும். சூதக ஜன்னியில் மேற்கண்ட லக்ஷணங்களிராது. அசதி ஜன்னிரோகத்தில் வியாதி தாமசித்து, குறட்டை சுவாசம் கண்டு, கைகால்கள் அசையாமலிருக்கும்.

**சிகிச்சை:**—நமது காக்கைவலி நிவாரணியைவிட இந்நோய்க்குத் தகுந்த பரிகாரங் கிடையாது. வலி காணாதிருக்குங் காலத்திலேயே இவ்வௌஷதத்தில் ஒன்றரை தேக்கரண்டியளவு காலை போஜனத்திற்கு முன்னும் 3 தேக்கரண்டியளவு படுக்கைக்குப் போகு முன்னும் ஜலங்கலந்து சாப்பிடவேண்டியது.—விலை ரூ. 3.

**குறிப்பு:**—கெர்ப்ப ஸ்திரீகள் இம்மருந்தை ஜாக்கிரதையுடனும், அளவுக்கு மிஞ்சாமலும், சமயா சமயங்களிலும் மாத்திரம் உபயோகிக்க வேண்டும். தமது சரீரத்திற்கு ஒத்துக்கொள்ளாவிடில் இதை உபயோகிக்கக்கூடாது.

**சமயோசித பரிகாரம்:**—வலிப்புக் கண்டிருக்கும்போது ஆளை அகல பஞ்சணையின்மேல் படுக்கவைத்து, தலையை உயர்த்தி, ஆடையாபரணங்களைத் தளர்த்தி, காயப்படாமல் பக்கத்திலிருப்பவர்கள் பிடித்துக்கொண்டு, பற்சந்தில் துணியாவது, கொம்பாவது வைத்து, நாக்குங் காயப்படாமல் செய்து சிரசின்மேல் ஈரத்துணியைப் போட்டு வைக்க வேண்டியது. ஜன்னல் கதவுகளைத் திறந்து காற்று செவ்வையாக வீசும்படி செய்யவேண்டியது. விசிறியினாலும் விசிறலாம். குளிர்ந்த ஜலத்தை முகத்தில் தாராளமாய்த் தெளிக்கவேண்டும் உடுத்தியிருக்கும் உடுப்புகளின் கழுத்துப் பித்தான்களை கழற்றிவிடவேண்டும்.

## எச்சி ஊறுதல்.

இது அநேக ஸ்திரீகளுக்கு உண்டாகிறது. இதற்காக அதிக கவலையெடுப்ப தவசியமில்லையாயினும், இது சிலருக்கு மிகவும் அதிகமாகி இரவில் படுக்கையிலிருந்தெழுந்து உமிழத்தக்கதாக வந்துவிடும். ஆனால், கர்ப்பகாலத்தில் தாங்கள் நடக்கவேண்டிய வழியைக்கவனித்து நடப்பவர்களுக்கு இவ்வித எச்சில் ஊறல் வரமாட்டாது. ஏதாவது துவர்ப்பு மருந்தினால் வாயைக் கொப்பளிக்கலாம்.

## நீர்க்கடுப்பு.

கருப்பையானது மூத்திரப்பையை (Bladder.) நெருக்குவதனால் கர்ப்பிணிகளுக்குத் துவக்கத்தில் நீர் தாராளமாய்ப் பிரியாமல் அதிக வருத்தத்தைக் கொடுப்பதுண்டு. இவ்வித அவஸ்தைக் கிடங்கொடாதபடி கிரமமாய் மலஜலம் கழிக்கவேண்டும். வெந்நீர் வைத்து உபஸ்தத்தை அடிக்கடிக் கழுவுவது மிகவும் நல்லது. பழம் சாப்பிடுவதனாலும், சோடா முதலிய குளிர்ச்சியான பானங்கள் அருந்துவதனாலும், அடிவயிற்றில் கட்டுப்போடுவதனாலும் நீர்க்கடுப்புச் சுகமாகும். சிலருக்கு அடிக்கடி ஜல உபாதைக்கு வருகிறதும் வழக்கம். பார்லித்தண்ணீர், (Barley-water.) அதிகமாய்க் குடிக்கவேண்டும். நீர்க்கடுப்பு அதிகமாயிருந்தால் முள்ளியிலை அல்லது பசலியிலைக் கஷாயத்தில் ஒருகொட்டைப்பாக்களவு சந்தனங் கலந்து கொடுக்கலாம். நன்னாரிவேர் அல்லது ரோஜாப் பூவைத் தண்ணீரில் அவித்துக் கொடுக்கலாம். அரைமணி நேரத்துக்கு குறையாமல் வெந்நீரில் ஆசனஸ்நானம் செய்வதும் நல்லது.

## மஞ்சட்காமாலை, (Jaundice.)

இது சாதாரணமாய் நாலாவது எட்டாவது மாதங்களுக்கு மத்தியில் உண்டாவதுண்டு. இதுவும் வயிற்றிலுண்டாகும் குழப்பத்தினால்தான் உண்டாகிறது. இரத்தத்திலுள்ள பித்தமானது பித்தாசயத்தில் சேரத் தவறிப்போனதனால், சரீரமெல்லாம் பாவிக் கண்விழி, நகங்கள் முதலியவை மஞ்சள் வர்ணமடையச்செய்யும். மூத்திரமும் மஞ்சளாயிருக்கும். இது சில சமயம் சுரங் குளிரோடு சேர்ந்து வரும். இக்குறிகள் தோன்றினவுடனே கொஞ்சநாள் மிதமாய்ச் சாப்பிட்டுத் தேவையானால் மத்தியில் ஒவ்வொருதடவை சாப்பிடாமலிருந்தும், சுத்த ஜலம் அருந்தியும், நாள்தோறும் ஸ்நாநம் செய்தும் வருவதனால் போய்விடும். இது வெகுசாய் மரணத்தை யுண்டாக்கு மாதலால் அதிகமாகுமுன் வைத்தியரை அழைத்துப் பார்க்கவேண்டும்.


நமது ஆபீசில் விற்பனையாகும், ஈரல்பலகாரியில், ஒரு தேயிலைக்கரண்டியளவு தினம் மூன்றுவேளை சாப்பிட்டுவரின் பித்தம் சரியானபடி வெளியாகி, ஜீரணசக்தியையும், மலப்பிரவர்த்தியையும், ஒழுங்குபடுத்துவதினால் மஞ்சட் காமாலை, மயக்கம், கைகால் காந்தல் முதலிய பல நோய்கள் தீரும். இது ஓர் உன்னத ஒளஷதமுறை. பலர் கையாடி பலனடைந்திருக்கின்றனர். விலை ரூ. 1—8—0.

## இரத்த வாந்தி.

கர்ப்பிணிகளுக்கு மாதவிடாய் நின்று போவதால் சிலசமயங்களில் சொற்பமாய் இரத்தவாந்தி காண்பதுண்டு. அடிவயிற்றில் ஈரத்துணியைக் கட்டுவதனாலும், இச்சாபத்தியத்தோடு போஜனத்தை விலக்குவதனாலும் நன்மையுண்டு. பால், பார்லித்தண்ணீர் (Barley-water.) பனிக்கட்டி (Ice.) மூன்றையுங்கலந்து சாப்பிடுவதுடன், மல்லாந்து அசையாமல் படுத்திருக்கவும் வேண்டும். இதற்கும் நிற்காவிடில் டாக்டருக்கு ஆளனுப்பவேண்டும்.

## தொற்றுவியாதி.

வைசூரி, ப்ளேக், விஷபேதி, சுரம் முதலிய தொற்றுவியாதிகள் கர்ப்பிணிகளுக்கு லேகு லகுவாய்த் தொற்றிக்கொள்ளுமாதலால், அப்படிப்பட்ட வியாதியுள்ள இடங்களுக்குப் போகாமலும், அங்கிருந்து மற்றவர்களைத் தங்கள் வீடுகளுக்கு வரவிடாமலுமிருக்கவேண்டும். வைசூரி குத்திக்கொள்ளக்கூடாது. அப்படியேதாவது வந்துவிடில், பிணியாளியை நன்றுபச்சுத்த ஆகாயம் பரவும் அறையில் சுத்த வஸ்திரங்களால் மூடி எளிதில் ஜீரணிக்கும ஆகாரங்களாகிய பால், சோடா, கஞ்சி, சூப்பு முதலிய ஆகாரங்களைக் கொடுத்து, டாக்டரை வரவழைக்கவேண்டும்.

## மாதவிடாய்.

சிலர் கர்ப்பந்தரித்து இரண்டு மூன்று மாதங்களுக்கு எப்போதும்போலாக வாயினும் சிறிதாகவாயினு ம மாதவிடாய் தோன்றுவதுண்டு. ஆனால், மூன்றாவது மாதத்திற்குப் பிற்பாடு தானாகவே நின்றுபோகும். அதற்குப் பிற்பாடும் வந்துகொண்டிருந்தால வைத்தியருக்குடனே தெரிவிக்கவேண்டியது. சிலருக்குக் கர்ப்பிணியா யிருக்கும் ஒன்பது மாதமும் சாதாரணமாய் மாதருது வந்துகொண்டே யிருக்கும், அதைப்பற்றிப் பயப்படவேண்டியதில்லை.

## வெள்ளை.

சிலருக்கு கடைசி மாதங்களில் வெள்ளை காண்பதாகிய உபத்திரவ மிருப்பதுண்டு. வெள்ளை யிருக்கும்போது பகலில் அதிக நேரம் ஒரு படுக்கையிலாவது மெத்தையிலாவது படுத்திருக்க வேண்டும். இரவில சீக்கிரம படுக்கைக்குப் போகவேண்டும். காலை மாலை உபஸ்தத்தை வெந்நீரில் கழுவவேண்டும். கடற்கரைப் பக்கங்களில் உலாவிக் கடற் காற்றைச் சுவாசித்தலும், பத்து நிமிஷம் கடல்ஸ்நாநம் செய்தலும் மிகவும் நல்லது.

வெள்ளை அதிகமாயிருந்தால் கிளிசரின் ஆவ் போராக்ஸ், (Glycerine of Borax.) ஐப்போமொத்த அவர்ப்பான தயிலம் உபயோகிக்கலாம். பின்வரும் ஔஷதமும் எளிதில் செய்துகொள்ளலாம். எட்டுத் தேயிலைக்கரண்டி வாஸ்லீனை (Vasline.) உருக்கி அதில் ஒரு தேயிலைக் கரண்டி சீனக்காரத் தூளைப்போட்டு வைத்துக்கொண்டு ஒரு மெல்லிய துணியில் சிறு கயிற்றைக்கட்டி அத்துணியை மேற்படி தயிலத்தில் நனைத்து வாரத்திற்கு இரண்டு அல்லது மூன்றுமுறை இராக்காலத்தில உபஸ்தத்திலுள் செலுத்தி வைத்துக் காலையில் கயிற்றைப் பிடித்திழுக்க வந்துவிடும்.

## வயிற்றில் வாய்வு திரண்டுண்டாகும் வலி.

எளிதில் ஜீரணிக்காத வஸ்துக்களைப் புசிப்பதால் குடலில் வாய்வு திரண்டு வலியுண்டாகும். இதற்கு இரண்டுபலம் சுக்குக் கஷாயத்தில் முக்காலபலம் சிற்றாமணக்கெண்ணெயைக் கலந்து சாப்பிட்டால் மலம் சுத்தியாகி, வாய்வினால் உண்டான வலி நிவாரணமாகும். வயிற்றின்மேல்தருப்பந்தைலம் (Oil of Turpentine.) அல்லது நமது மகா சஞ்சீவித்தைலம் தடவி அதன்மேல் வெந்நீரில் நனைத்துப்பிழிந்த கம்பளியால ஒற்றடங் கொடுக்கவேண்டும்.


நமது ஆபீசில் விற்பனையாகும், வயிற்றுவலி நிவாரணியில் ஒரு தேயிலைக்கரண்டியளவு இரண்டு அல்லது மூன்றுதடவை சாப்பிட்டால், அஜீரணத்தினாலும், உஷ்ணத்தினாலும் உண்டாகும் வயிற்றுவலி உடனே நின்றுவிடும். நமது மகா சஞ்சீவித் தைலத்தை வயிற்றின்மேல் லேசாய்த் தடவுவதினாலும், குணமுண்டு.—விலை ரூ 1.

## ஜலதோஷம்.

கர்ப்பிணிகள் தங்களுக்கு ஜலதோஷம் பிடிக்காதபடி எச்சரிக்கை யுள்ளவர்களாயிருந்தால், அதனால் சுரம் முதலிய மற்றநேக வியாதிகள் வாராமல் தடுத்துக்கொள்ளலாம். ஆகையால் கர்ப்பிணிகள் பனியிலுங் காற்றிலும் போகக்கூடாது. தலையில் தாழம்பூ முதலானவைகள் வைக்கக்கூடாது. ஜலதோஷத்தினால் தலைநோவாயிருக்கும்பட்சத்தில் வேகவைத்த ஓமத்தை வெள்ளைத் துணியில் கட்டி மோர்ந்துகொண்டிருப்பதுடன், சுடுசாம்பலைத் துணியில் கட்டி உச்சந் தலையிலும், நெற்றிப் பக்கங்களிலும் ஒற்ற ஒற்ற ஜலதோஷம் தீர்ந்துபோம். ஜலதோஷம் முற்றி இருமல் உண்டாகிவிட்டால் சாப்பாட்டிற்குமேல் ஜேன்ஸ் எக்ஸ்பெக்டரன் (Jayne's Expectorant.) ஒரு தேயிலைக்கரண்டியளவு ஜலத்தில் கலந்து கொடுக்கலாம்.



நமது ஆபீசில் விற்பனையாகும், தொண்டைப் புகைச்சல் நிவாரணி (Samuel's Pine Expectorant.) யில் ஒரு தேயிலைக் கரண்டியளவு ஜலத்தில் கலந்துகொடுக்க மூச்சடைப்பு, இளைப்பு, இரைப்பு, வரட்டிருமல், சுரம், தலைவலி, நெற்றி, கண்களில் தோன்றும் வலி முதலிய பலவித நுரையீரல் சம்பந்தமான நோய்கள் துரிதத்தில் நிவர்த்தியாகும்.—விலை ரூ. 2.

## இருமல்.

இது சாதாரணமாய்க் கடைசி மூன்று மாதங்களில் கர்ப்பிணிகளுக்கு அதிக உபத்திரவமுண்டாக்கும். இதற்கு ஆளிவிரைக் கஷாயத்தைக் (Linseed Tea.) குடிப்பதனால், அல்லது விளாம் பிசின், (Gum Arabic.) ஒரு சிறு துண்டைச் சப்பி விழுங்குவதனால் அல்லது கொக்கேன் (Terebene or Cocaine Lozenges.) பில்லைகளைச் சப்புவதனால் சௌக்கியமாகிவிடும்.





### சாமியேலின் சிங்கமார்க்கு
### இருமல் மருந்து.
### (Cough Tablets.)

இந்தப் பில்லைகளி லொன்றை வாயில்போட்டு அடக்கிக்கொண்டு உமிழ்நீரைமட்டும் சாப்பிட்டுக்கொண்டிருக்க தொண்டைப் புகைச்சல், இருமல், கபம் முதலிய தொண்டையைச் சேர்ந்த சகல ரோகங்களும் நிவாரணமாகும்.

20 பில்லைகளுக்கு விலை அணா 8.





### சாமியேலின் சிங்கமார்க்கு
### தொண்டைப் புகைச்சல் நிவாரணி.
### (Samuel's Pine Expectorant.)

நுரையீரலுக்குச் செல்லும் சுவாசக் குழாய்கள் வீங்குவதினால் தொண்டை புகைந்து இருமல் காணும், சுரம், தலைவலி, இளைப்பு, மூச்சடைப்பு, இரைப்பு, வரட்டிருமல் முதலிய குணங்கள் தோன்றி, சிலசமயம் இரத்தம் விழும். பின்பு அது மஞ்சள் நிறமான சளியாக வரும். நெற்றி, கண்களில் வலி தோன்றும், தாது துரிதமாயடிக்கும். ஆனால் உறத்திராது. நெஞ்சு, முதுகு பக்கங்களில் கை வைத்தால் இரைச்சல் தெரியும்.

தொண்டைப் புகைச்சல் நிவாரணி ஜலதோஷம் முற்றி இருமல் உண்டாகிவிட்டால் சாமியேலின் பைன் எக்ஸ்பெக்டோரன்ட்

ஒரு தேயிலைக்கரண்டி ஜலத்தில் கலந்து சாப்பிட சகலவித தொண்டைப் புகைச்சல், இருமல், சீதளம், முதலிய பலவித நுரையீரல் நோய்களை துரிதத்தில் நிவர்த்திசெய்யும்.—விலை ரூ. 2.

**சாப்பிடும் விதம்:**—சிறிது தண்ணீரில் வயதுக்குந் திராணிக்குந் தக்கது ஒரு தேயிலைக்கரண்டியளவு கூட்டி அல்லது குறைத்துக் கொடுக்கவேண்டும். சிறுவர்களுக்கு 5 முதல் 15 துளிவரை தண்ணீர் கலந்து கொடுக்கவேண்டும். நோயாளி அடிக்கடி ஸ்நானஞ் செய்து கம்பளித் துணிபோர்த்து வறட்சியான இடங்களில் வாசஞ்செய்வது உத்தமம். மலவிர்த்தியும் கிரமமாகச் செய்ய வேண்டும்.

சாமிவேலின் மீனெண்ணெய் விலை ரூ. 1—8—0.

இம்மருந்துகளை மிதமாய் உபயோகித்து வருவதுடன் நமது ஆபீசில் விற்பனைக்காக வைத்திருக்கும் சாமிவேலின் சிங்கமார்க்கு வேதனைபேதினி போல்றிஸை (Pain-Kill Poultice.) அத்தாம் சுற்றியிருக்கும் தாளிலுள்ள டைரக்ஷனில் சொல்லிய பிரகாரம், உஷ்ணமாக்கி, நெஞ்சை ஷ்ஷேஷமாய அளர்ச்சியும் வலியுமுள்ள பாகங்களில் அரைக்கால் அங்குல திண்ணத்துக்கு பூசி, அதற்குமேல் மெல்லிய பஞ்சை பரப்பி, நீளத்துணியினால் கட்டுப்போட்டு வைத்திருந்து இருபத்துநான்குமணி நேரத்துக்குப்பின் அவிழ்த்துப் பார்த்தால் களிபஞ்சோடு ஒட்டிக்கொண்டு வந்துவிடும். நோவு தணிகிறபரியந்தம் அந்தவிதம் செய்ய நுரையீரலில் உண்டாகும் அளர்ச்சிகள் நீங்கிச் சுகமுண்டாகும். விலை ரூ. 1—8—0.

## சுரம்.

இது மலச்சிக்கல், ஜலதோஷம், அலுப்பு முதலிய காரணங்களால் உண்டாகக்கூடியது. சுரத்துக்கு உடனே மருந்துசாப்பிடாவிட்டால் அகாலப் பிரசவ முதலிய தீங்குகளை விளைவிக்குமாதலால் உடனே மருந்து கொடுத்துச சுகப்படுத்த வேண்டும். கொயினா முதலிய கசப்பான மருந்து கொடுக்கக்கூடாது.

முற்றின இஞ்சியில் ஒரு துண்டெடுத்து அத்தோடு சிறிது சுக்கும் வெள்ளைப்பூண்டும் சேர்த்துத் தட்டிச் சாறுபிழிந்து வடிகட்டி வைத்துக்கொண்டு தேனில் சுரசம் பண்ணிக் கொடுக்க சுரம் தணியும்.

## இடுப்புநோய்.

கரு பருக்கப் பருக்கக் கருப்பையும் அதைச் சேர்ந்த நரம்புகளும் கீளுவதால் இடுப்பு நோய் உண்டாகும். அதற்கு டர்பன்டயின் தைலத்தையாவது, (Turpentine.) சவுக்காரத் தைலத்தையாவது (Soap Liniment.) அல்லது ஒரு அவுன்ஸ் கற்பூரத்தை ஆறு அவுன்ஸ் இலுப்பெண்ணெயுடன் சேர்த்துக் காய்ச்சின தைலத்தையாவது அல்லது நமது மகா சஞ்சீவித் தைலத்தையாவது, ராயல்பாமையாவது பூசி வேது ஒற்றடங் கொடுக்கச் சுகமாகும். நமது வேதனுபேதினி போல்றீஸையும் உபயோகிக்கலாம்.

## நெஞ்சுதுடித்தல்.

பலவீனமான கர்ப்ப ஸ்திரீகளுக்கு ஐந்தாவது மாதத்தில் மார்பு தடதடவென் றடித்துக்கொள்ளும். சாதாரணமாய் வாயில் நீர் ஊறுதலும் வாந்தியுமில்லாதவர்களுக்கு இந்நோய் உண்டாகும். நவச்சாரத் திராவகம (Ammonia.) ஈதர் (Ether.) இவைகளைக் கொடுக்கவேண்டும். அபசம்பந்தமான மருந்துகள் மிகப் பிரயோசனமாகும். நல்ல காற்று வீசும்படி செய்துகொள்ளுதும் நலம். கர்ப்பவதியா யிருக்கும் காலத்தில்மட்டும் இவ்விதமாய் மார்பு தடதடவென் றடிப்பதால் மோசமில்லை. ஆதலால் அதைப் பற்றிப் பயப்படவேண்டியதில்லை. சிசு உள்ளேயிருந்து வளர்வதால கர்ப்பாசயமானது சில பெரிய இரத்தக்குழாய்களில் அழுத்த இரத்தாசயத்தில் குழப்பம் உண்டாவதால் மார்புதுடிக்கும் ஸ்திரீ படுத்துக்கொண்டிருக்கும்பொழுது இது மிகுதியாயிருக்கும். காம்பவுண்ட் ஸ்பிரிட்ஸ் ஆப் லவண்டரில் (Compound spirits of lavender.) ஒருகிராம சாலவாலற்றயில் (Sal volatile) பதினொரு திராம் இவ்விரண்டையுங் கலந்து ஒரு தேயிலைக்காண்டி எடுத்து அதோடு எட்டு மடங்கு தண்ணீர் சேர்த்துக் கொடுக்க சுகமாகும். இந்த மருந்தினால் யாதொரு தீமையும் நேரிடாது. கடினமான வேலை, நெடுநேரம் விழித்திருத்தல், நெருக்கமான அறை, மனக்கிளர்ச்சி முதலிய விஷயங்களைநீக்கி வெளியில் மெதுவாய் உலாவுவதனாலும் சிநேகிதருடன் சந்தோஷமாய் வார்த்தையாடுவதனாலும் அதிக நன்மையுண்டு.

இந்நோயினால் வருந்துபவர்களின் வசதிக்காக நாம்தயாரித்து

வைத்திருக்கும் சாமிவேலின் சிங்கமார்க்கு இருதய பலகாரியில் ஒரு மாத்திரையை நாலுமணி நேரத்துக்கொருதடவை சாப்பிடவோ, இருதயம் படபடவென்று அடித்துக்கொள்வது, மயக்கம், ஆயாசம், இருதயத்துடிப்பு முதலிய சேஷ்டைகள் நீங்கி பலஹீனமடைந்த இருதயத்திற்கு வலிமையுண்டாகும். விலை ரூ. 1.

## குறண்டவாதம். (CRAMPS OF THE LEGS.)

இது கர்ப்பமான ஐந்தாவது மாதத்திற்குமேல் கர்ப்பாசய மானது நரம்புகளில் அழுத்துவதனால் விசேஷமாய்க் கால்களிலே இராக்காலங்களில் உண்டாகும் வலி. ஒரு கைக்குட்டையைக் கயிறுபோல் மடித்துக் குறண்டவாத மிருக்கிற பாகத்திற்குச் சற்று மேல்கட்டிச் சிறிதுநேரம் அப்படியேவைத்திருக்கவேண்டும். அந்த யிடத்தில் டர்பன்டயின் (Turpentine.) அல்லது நமது மகா சஞ்சீவித் தைலத்தையாவது, ராயல்பாமையாவது தடவி கையினால் அழுத்தித் தேய்க்கவேண்டும்.

சில சமயங்களில் இந்தக் குறண்டவாதம் கர்ப்பிணியின் குடல், மூத்திர, அல்லது தொடையில் வருவதுண்டு. அப்பொழுது வறுத்த உப்பை ஒரு துணியில் கட்டி ஒற்றலாம். அதற்குப் பதிலாக ரப்பரால் செய்த வெந்நீர்ப்பை அல்லது கல் போத்தலில் வெந்நீரை அடைத்து அதன்மேல் கம்பளித்துணியைச் சுற்றி வலியுள்ள இடத்தில் வைக்கலாம், சுடுசெங்கலை அதேவிதமாய்க் கம்பளித்துணியில் சுற்றியும் உள்ளங்காலில் வைக்கவேண்டும். இவற்றிற்கெல்லாம் நிராமல் வலி அதிகமாயிருந்தால் கற்பூரத் திராவகம், (Compound Tincture of Camphor.) ஒரு அவுன்ஸ் வெந்தயத் தண்ணீரில் (Dill water.) ஐந்து அவுன்ஸ் எடுத்துக் கலந்து ஒரு ஒயின் கிளாஸ் படுக்கைக்குப் போகுமுன் அவசியமானால் நாலுமணிக் கொருதடவை கொடுக்கச் சுகமாகும். காலில் குறண்டவாதம் உண்டானவுடனே எழுந்து இரண்டு நிமிஷம் நடக்கச் சுகமாகும்.

## பிண்டச்சேதம் அல்லது அகாலப்பிரசவம். (Abortion or Miscarriage.)

பிண்டச்சேதம் என்றால் குழந்தை சரியான காலஞ்சென்று பிறக்காமல் ஏழு மாதங்களுக்கு முன்னே பிறப்பது. ஏழுமாதத்திற்கும் ஒன்பது மாதத்திற்கும் மத்தியில் பிறந்தால் அகாலப்பிரசவம் என்று சொல்லப்படும். ஸ்திரீயின் சுகத்தைக் கெடுக்கக் கூடியவைகளில் அகாலப் பிரசவத்தைவிடக் கேவலமும் பயங்கரமும் வெறுக்கப்படத் தக்கதுமானது வேறொன்றுமில்லை. இது வழக்கமாய் விட்டதானால் ஸ்திரீயானவள் மறுபடியும் சுகதேகியாவாளென்பது சந்தேகமே. பிண்டச்சேதம் முக்கியமாய்க் கர்ப்பமான முதல் பன்னிரண்டாவது வாரத்திற்குள் வரும்.

பூரண பக்குவமடைவதற்கு முன், உண்டாகும் கெர்ப்பசேதத்தைப்பற்றி ஜாக்கிரதையாய்க் கவனிக்கவேண்டும். ஏனெ

னில், இந்த மாதங்களில் குழந்தையும் சரியாய் வளர்ந்திருக்க மாட்டாது. கெர்ப்ப வாயின் வாய் சரியாய் திறக்கமாட்டாது. நஞ்சானது தாய் சரீரத்தோடு பலமாய் ஒட்டிக்கொண்டிருக்கும். அதனால் ரத்தப் பிரவாகம் கண்டு, மரணத்துக்கு ஆளாகவுங் கூடும். ஆதலால் கெர்ப்ப சேதக்குறிகள் தோன்றினவுடன், கை தேர்ந்த இங்கிலீஷ் டாக்டர்களுக்கு ஆளனுப்பி தெரிவிக்கவேண்டும். அவர்களே சமயத்துக்குத் தகுந்த பரிகாரம் ஆயுதப் பிரயோகங்கள் முதலியவற்றால் சிசுக்களை வெளியேற்றவும், நஞ்சு தங்காமல் எடுத்து அதனால் உண்டாகும் தீமைகளை விலக்கவுங் கூடும்.

கஞ்சு. சிசுவும் நஞ்சும் கெர்ப்பப் பையைவிட்டு வெளியாகும் விதத்தைப்பற்றி இங்கு சுருக்கமாய்ச் சொல்லுவோம். சிசு கெர்ப்பப் பையில் வளர வளர கெர்ப்பப் பையும் விரிந்துகொண்டு வருகிறது. இவ்விதம், ஒன்பதுமாத மளவில் நடக்கும், அதற்குமேல் கெர்ப்பப் பை விரிய இடமில்லாமல் போய்விடும். ஆகவே விரிவதற்கு பதிலாக சுருங்க ஆரம்பிக்கிறது. அதனால் அதனுள்ளிருக்கும் குழந்தையும், இருக்க இடமில்லாமல், திகைத்து, தன்னை வெளியாக்கிக்கொள்ள முயற்சிக்கின்றது. மேலே ஏற இடமில்லாததனாலும், கெர்ப்பப் பை சுருங்கி அமுக்குவதனாலும், குழந்தையானது கீழே சுருங்கியிருக்கும் கெர்ப்பப்பையின் அடிவாயை திறந்து வெளியேற எத்தனிக்கிறது. அந்தச் சமயத்தில் கெர்ப்பப் பையின் வாய் வலுக்குறைந்து தளர்ச்சியடைந்திருக்கிறது. கெர்ப்பப் பையும் குழந்தை வசிக்கும் பனிக்குடமும் கெர்ப்பப் பையின் அடிவாயில் மோதுவதனால் அந்த வாயானது விரிய ஆரம்பிக்கின்றது. இப்படிக் கொஞ்சம் வாய் திறந்ததும், பனிக்குடம் இந்த வாய்க்குள் இறங்கி கெர்ப்பப்பை அதன்மேல் அமுக்கி கீழேயே தள்ளுவதனால் வெடித்து அதனுள்ளிருக்கும் நீரானது வெளியாகின்றது. பனிக்குடம் இறங்குபோதே சிசுவின் ஓர் பாகமும் (முக்கியமாய் அதன் சிரசும்) கூடவே இறங்குகின்றது. இப்படி மென்மேலும் தள்ளப்பட்டு சிசு தாய் வயிற்றைவிட்டு வெளியாகின்றது. ஒன்பதாவது மாதக் கடைசியில் பூரண கெர்ப்பமாவதால் பழுத்த பழமானது மரத்திலிருந்து தானாக விழுவதுபோல் நஞ்சும் வெளியாகிவிடுகின்றது. ஆதலால் ஒன்பதுமாதமும் சிசுவானது கர்ப்பத்தில் தரித்திருந்து வெளியானால் தாய்க்கு யாதொரு கெடுதலும் சம்பவிக்க இடமில்லை. அப்படிக்கில்லாமல் எவ்வளவுக் கெவ்வளவு சீக்கிரமாய்ப் பிரசவம் ஏற்படுகின்றதோ அவ்வளவுக்குத் தக்கதாக தாயின் சரீரத்தில் கெடுதல்கள் சம்பவிக்கும். ஆகவே, ஏழாவது எட்டாவது மாதப் பிரசவங்கள் தாய்க்கு அதிக கஷ்டத்தைக்கொடுக்காது. ஐந்தாவது ஆறுவதுமாதப்

பிரசவங்களால் தாயின் சரீரத்திற்குக் கெடுதி கட்டாயம் உண்டாகும். ஆனால் 2, 3, 4-வது மாதங்களில் ஏற்படும் பிரசவமானது தாய்க்கு நிச்சயமாய் ஆபத்துகளை உண்டாக்கும். ஏனெனில் இந்த மாதங்களில் சிசு முற்றவில்லை. கெர்ப்பப் பையின் அடிவாயும் பலமாய் சுருங்கி மூடியிருக்கும். அந்த வாயைத் திறக்க சிசுவிற்காவது கெர்ப்பத்திற்காவது சக்தி போதாது. ஏனெனில் நஞ்சானது பழுத்த பழம்போலில்லாமல் கெட்டியாய் ஒட்டியிருக்கப்பட்ட காயாக விருக்கும். இது எளிதில் வெளியாகமாட்டாது. இதை வெளியாக்க முயன்றால் இரத்தம் பெருகி ஸ்திரீக்கு மரணத்தை யுண்டாக்கக்கூடும். அப்படியே மரிக்காதேபோனாலும் அவள் உடம்பு கெட்டுப்போகும். சரீரம் வெளுத்து பலவீனமாகி இரத்தமற்று கெட்டுப்போகும்.

நஞ்சானது கெர்ப்பப் பையின் பல விடங்களில் ஒட்டிக்கொள்ளக்கூடும். கெர்ப்பப்பையின் அடிவாய்ப் பக்கத்தில் ஒட்டிக்கொண்டால் அதிகமாய் இரத்தப்பிரவாகங் கண்டு தாய்க்குக் கெடுதியை யுண்டாக்கும். இரத்தம ஜாஸ்தியாய் வெளியாவதற்கு மூன்று காரணங்கள் உண்டு. 1. கெர்ப்பமுண்டாவதற்கு முன் வெளியான மாதாந்தா முதுவே வெளியாகி வரலாம். ஆனால் இது மிக அபூர்வம். 2 முதல் ஐந்துமாதம்வரை வெளியாகும் இரத்தம் சிசுவிற்குச் சேதம் ஏற்படப் போவதைக் குறிப்பிடும் முன்னடையாளமாகலாம். 3. ஆறுவது மாதத்திற்குப் பிற்பாடு உண்டாகும் இரத்த வெளிப்போக்கு சிசு வெளியாகப் போவதைக் குறிக்கும் முன்னடையாளமாக யிருக்கலாம். அல்லது நஞ்சானது கெர்ப்பப்பையின் அடிவாயில் ஒட்டிக்கொண்டிருப்பதைத் தெரிவிக்கக்கூடும். வலியில்லாமல் இரத்தம் மட்டுமே வெளியானால் நஞ்சு அடிவாய்ப் பக்கத்தில் ஒட்டியிருப்பதையே அநேகமாய்த் தெரிவிக்கும். எப்படியிருந்தாலும் வயிற்றிலுண்டாகும் வலியையும் இரத்தப்போக்கையும் நிறுத்த முயலவேண்டியது அவசியம். இல்லாத பக்ஷத்தில் கெர்ப்பப் பையை காலி செய்யவேண்டியது. இதற்குக் கைதேர்ந்த இங்கிலீஷ் வைத்தியர்கள் தகுந்தவர்கள்.

கர்ப்பச்சேதக் காரணம்:-முக்கியமாய் அதிக பருத்த அல்லது கொழுத்த தேகத்தையுடையவர்களுக்கும், மாதவிடாய் அதிகமாய்க் காணப்படுபவர்களுக்கும், கண்டமாலை, நீர்க்கோவை, பிளவை முதலிய நோய்களை யுடையவர்களுக்கும் பிண்டச்சேதம் உண்டாகும். இதுவுமல்லாமல் சுகதேகிகளுக்கும் அதிகமாகக் காப்பி தேயிலை சாப்பிடுவதனாலும், அதிகடம்பமாக ஜீவிக்கிறதனாலும், நாட்டிய

சாலை, நாடகசாலை, காட்சிச்சாலை முதலிய இடங்களுக்குப் போய் இரவில் அதிகநேரம் விழித்திருப்பதனாலும், அடிக்கடி விநோதக் கதைகள் வாசிப்பதனாலும் எக்காலத்திலும் தங்களுடைய மாம்ச இச்சையை நிறைவேற்றும்படி கர்ப்பஸ்திரீகளோடு சம்போகஞ் செய்யும் புருஷரை யுடையவர்களுக்கும், மலச்சிக்கல், வாந்தி, உடையை இறுகத்தரித்தல், திடுக்கிட்டுப் பயப்படுதல், கீழேவிழுதல், அதிககளைப்பு உண்டாக வேலைசெய்தல் முதலியவைகளாலும் மேகவியாதி, அதிசாரபேதி, இரத்தபேதி, பலவீனம், கொயினா, (Quinine.) எர்கட் (Ergot.) கஞ்சா, வெண்காரம் முதலான மருந்து சேர்த்தல், குங்குமம், கோரோசனை, கஸ்தூரி, பெருங்காயம், மூசாம்பரம், பாலேந்திரபவளம் முதலிய உஷ்ண மருந்து சேர்த்தல் முதலிய காரணங்களாலும், மேகரோக முண்டாயிருப்பவர்களின் நோய் பிண்டத்துக்கும் தாக்குவதனால் பிண்டம் இறப்பதனாலும், ஆசனத்தில் கிருமி உற்பத்தியாவதனாலும் உண்டாகிறது. இதுவுமல்லாமல் சிலர் மருந்து சாப்பிட்டு வேண்டுமென்றே அகாலப் பிரசவத்துக்குத் தங்களை ஆளாக்கிக்கொள்கிறார்கள். இப்படிப்பட்டவர்கள் தாங்கள் செய்வது மனுஷகொலை என்பதை உணராதிருக்கிறார்களோ? இதனைப்பற்றி 5-வது புஸ்தகத்தில் விஸ்தரித்துக் கூறியிருக்கிறோம்.

இதனாலுண்டாகும் தீமைகள். அகாலப் பிரசவத்தினால் ஸ்திரீகளுக்குண்டாகுந் தீமை மிகக் கொடியதும், ஸ்திரீயின் உயிருள்ளமட்டும் நீங்காததுமா யிருக்கிறது. ஒருதடவை அகாலப் பிரசவம் நேர்ந்த பெண்ணுக்குத் திரும்பவும் அப்படியே உண்டாவது சகஜம். மாதவிடாய் மட்டுக்கு மிஞ்சி அதிகமாயும், கிரமந் தவறியும் வருவதுமல்லாமல், அதிக வேதனையையுங் கொடுக்கும். ஒருவிதமான வலிப்பும் உண்டாவதுண்டு. அதுவுமல்லாமல், இப்படி அதிக வேதனையை யடைவதால ஸ்திரீயானவள் தன் ஜீவியத்தைத் தனக்குக் கசப்புள்ளதாக்கி எப்போதும் சந்தோஷமற்றவளாகவே காணப்படுகிறாள்.

தடுக்கக்கூடிய வழிகள். ஸ்திரீயானவள் தான் கர்ப்பவதியா யிருப்பதை யறிந்தவுடனே தன்னால் கூடியமட்டும் தன் மனதையும் சரீரத்தையும் சுத்தமாயும் சுகமாயும் வைத்துக்கொள்ளவேண்டும். ஸ்திரீயானவள் தன் வயிற்றிற்கேற்ற லேசான சாப்பாடு சாப்பிட்டுச் சுத்தப்பானம் பருகித் தினந்தோறும் ஸ்நானஞ்செய்து சமுத்திரக்காற்று முதலிய சுத்த ஆகாயத்தைச்சுவாசித்து, நாடோறும் தேகாப்பியாசஞ் செய்து அதிகமாகச் சூரிய வெளிச்சத்திலேயே ஜீவிப்பவளாயும், இறகுகளினால் செய்த மெத்தை, தலையணை, அதிக காங்கையான அறை, காப்பி, தேயிலை, சாராயம் முதலான

உஷ்ண வஸ்துக்கள், வேறு எவ்விதமான மருந்து, சேர்வாளபேதி, மனத்திதில், சஞ்சலம், இவைகளெல்லாவற்றிற்கும் மேலாக புருஷரோடு கலந்திருத்தல் முதலியவைகளை நீக்கி நடப்பாளாயின், இப்படிப்பட்ட அகாலப் பிரசவம் வாராதபடி தடுக்கலாம். மற்ற ஸ்திரீகள் பிரசவிக்கும் இடத்திற்குக் கர்ப்ப ஸ்திரீ போகக்கூடாது. போனால் அதே சிந்தனை மனதிலுதித்து அகாலப்பிரசவமுண்டாவதற் கிடமாகும்.

பிண்டச் சேதக் குறிகள். (முதலாவது) ஸ்திரீயானவள் சும்மாயிருக்கும்போதே யாதொரு காரணமுமின்றித் தன் பலனும் ஆவியும் போய்விட்டதாக நினைக்கத்தக்கதாக ஓர்விதசோர்வு தோன்றும், பசி தாகமேயில்லாமல் சுறுசுறுப்பும், முதுகு, இடுப்பு, அடிவயிறு முதலிய இடங்களில் வலியும், சமயாசமயங்களில் வந்துகொண்டிருந்து வரவர அதிகப்படும். ஆனால் ஸ்திரீயானவள் அதிக பலமுள்ள தேகத்தை யுடையவளா யிருந்தால் அவளுக்கு இரத்த ஓட்டம் விரைவாயிருப்பதாகவும், நாடி விரைவாய அடிப்பதாகவும் தேகத்தில் சிறிது வெதுவெதுப்பும், தாகமும், ஆகாரத்தின்மேல் வெறுப்பும், இடுப்புவலியும், கர்ப்பத்தில் ஓர்விதமான பளுவுந் தோன்றும். இவ்வறிகுறிகள் அவரவர்கள் தேகத்துக்குத் தக்கதாயிருக்கும்; எப்படியெனில், சிலருக்கு முதுகிலும், இடுப்பிலும் சிறிது வலி விட்டுவிட்டு அநேக நாட்களாக வந்துகொண்டிருக்குமேயன்றி வேறொரு அடையாளமும் காணப்படமாட்டாது. முன்னமே ஒருதடவை அகாலப்பிரசவமான ஸ்திரீக்குத் திரும்பவும் அந்தகாலத்தில இவ்வித சிறிது வலிமாத்திரமே யிருந்தாலும், அதை அதிக ஜாக்கிரதையாய்ப் பார்க்க வேண்டும். இப்படி யிருக்கும ஸ்திரீயை ஒரு குளிர்ச்சியான அறையில ஓர் மெத்தையில படுக்கவைத்து மெல்லிய துணியினால் மூடிச் சாப்பாடின்மேல் பிரியமிருக்குமானல் குளிர்ந்த கஞ்சியும் தண்ணீரும் மாத்திரம் கொடுக்க வேண்டும். உடனே வைத்தியருக்காளனுப்பிச் சிகிச்சை செய்யவேண்டும்.

இரண்டாவது:-முன் ஒருதடவையும் அகாலப் பிரசவம் நேரிட்டிராதவர்கள் முதுகிலும் இடுப்பிலும் சிறிது வலிதான்றுவதை கவனியாதேனவேன்று நினைத்துவிடுகிறபடியினால், வரவர அவ்வேதனை அதிகமாகக் கடைசியாய இரத்தம் கட்டியாய் வெளியாகும். கருப்பையிலிருக்கும் முட்டையானது கருப்பையை விட்டுப் பிரிந்து விட்டபடியால் இப்படி இரத்தக் கட்டிகள் வெளியாகும். இதில வந்து கவனிக்கிற வைத்தியன அதிகக் கவலையாயும் ஜாக்கிரதையாயும பார்க்கிறதனாலும் ஸ்திரீயானவள் அதிக தைரியமுள்ளவளா யிருப்பதனாலும் இன்னும் நம்பிக்கைக்கு இடமுண்

டென்று சொல்லலாம். இதிலும் ஸ்திரீயானவள் வைத்தியன் வரும்வரைக்கும் முதலாவது சொன்ன முறைப்படியே படுத்திருக்கவேண்டும். அவள் அடிவயிற்றில் துணியை நனைத்து மாற்றி மாற்றிப் போட்டுக்கொண்டே யிருக்கவேண்டும். பனிக்கட்டித் தண்ணீரைப் பிச்சாங்குழல் மூலமாய் உள்ளே செலுத்தலாம். ஸ்திரீயானவள் தன் இடுப்புப்பக்கத்தைச் சிறிது உயரமாகவும் தலையையும் தோளையும் எப்போதும் தாழ்வாகவும் வைத்து மல்லாந்து படுத்திருக்கவேண்டும்.

கடைசியாக:—சிலசமயங்களில் இரத்தம் அதிகமாக வெளியாகும். அடிக்கடி அகோர வேதனையும உண்டாகும். இதனால் பிண்டமானது முழுவதுமாகக் கருப்பையை விட்டுப் பிரிந்துவிட்டதாகத் தெரியும். இப்படியிருக்கையில் அகாலப் பிரசவத்தைத் தடுக்க முடியாது. ஆகையால வைத்தியன ஸ்திரீ சுகத்துடன் பிரசவிக்கத்தக்க முறைகளைக் கையாடவேண்டும்.

இப்படி முன் சொல்லப்பட்ட விதிகளைக் கவனித்து ஸ்திரீயானவள் எப்போதும் தன் சுகத்தைப் பேணிக்கொண்டு முன்சொல்லப்பட்ட அறிகுறிகள் தன்னிடத்தில் காணப்படாதபடி கவலையாயிருந்தால், இப்பேர்ப்பட்ட பெரும் உபத்திரவத்தினின்றும் தப்பித்துக்கொள்ளலாம். முன்னமே ஒருதடவை அகாலப் பிரசவம் உண்டாயிருந்தவர்கள் திரும்பவும் அந்தகாலத்தில் சிலவாரங்களாகப் படுக்கை அல்லது மெத்தையில் படுத்துக்கொண்டு அங்கு மிகவும் அசையாமலிருக்கவேண்டும். அநேகந்தரம் பிண்டச்சேதமுண்டாகிக் கஷ்டப்பட்டவளாயிருந்தால் கர்ப்பப்பையானது பலப்படும் வரைக்கும் புருஷசம்போகமில்லாதிருந்து பிறகு கர்ப்பந் தரித்தால் அவள் பூரணதிசையடைந்து குழந்தை பெறுவதற்குச் சந்தேகமில்லை. ஆகையால், சரீர சவுக்கியத்தில் பிரியமுள்ள ஸ்திரீகள் இந்த சுலபமான சிகிச்சையைக் கைக்கொள்வார்களானால், அதனாலே அவர்களுக்கு மிகவும் நன்மை யுண்டாகும்.

அகாலப்பிரசவ காலத்தில் ஸ்திரீக்கு வயிற்றுநோயுண்டானால் நமது வயிற்றுவலி நிவாரணியை கொடுத்து வயிற்றுநோயை நிறுத்தவேண்டியது. அது கைவசமில்லாவிடில் அபினி மருந்தை இரண்டுமணிக்கொருதடவை ஒரு குன்றுமணியளவு மயக்கமுண்டாக்கச் செய்யும் வரை கொடுத்து வரலாம். அதுவுமல்லாமல், முன்சொன்னபடி ஸ்திரீயை அசையாமல படுத்திருக்கச்செய்து பத்துக் குன்றுமணி எடை சுத்தி பண்ணின பொட்டிலுப்பை இரண்டுமணிக்கொரு தடவை குளிர்ந்த ஜலத்தில் கலந்து கொடுக்க வேண்டும். இம்மருந்து வாந்திக்கிடமானால் உடனே நிறுத்தி

விடலாம். தாகமதிகமானால் பனிக்கட்டி நீர் கொடுக்கவேண்டும். முன் சொல்லியவைகளுக்குஞ் சுகமாகாமல் இரத்தப்பிரவாகம் இன்னும் அதிகமானால் பிண்டத்தை வெளிப்படுத்தும்படி எத்தனம் பண்ணவேண்டும். இதற்காகத் துணியை நனைந்து வயிற்றின் மேல்போட்டு எர்கட் எக்ஸ்டிரேக்ட் (Extract Ergot Liquid.) ஒருவேளைக்கு முப்பது துளி வீதம் கொடுக்கவேண்டும். இதிலும் ரத்தம் நிற்காத பக்ஷத்தில் ஐந்து குன்றுமணியெடை வங்க உப்பு (Plumbi Acetas.) அரைக் குன்றுமணி யெடை அபினியுடன் சேர்த்து மாத்திரை பண்ணிக் கொடுக்கவேண்டும். இதற்குங்கூட இரத்தப்பிரவாகம் நிற்காத பக்ஷத்தில கருப்பையில் மிகுந்திருக்கும பிண்டத்தைக் கையாலாவது ஆயுதங்களாலாவது வெளிப்படுத்தவேண்டும்.




சாமிவேல் வைத்தியசாலை,
தென்காஞ்சி, இரங்கோன்.

SAMUEL MEDICAL HALL,
Thingangyun, Rangoon.



உலகப் பிரசித்திபெற்ற
சாமிவேலின் சிங்கமார்க்கு
ஜீவாமிர்தம் (Life Drops.)

இந்த ரசாயனத்தில் 15 முதல் 20 துளிவரை மூன்றுவேளையும் சாப்பிட்டுவர நரம்புகளுக்கு முறுக்கேறி தாதுகட்டும். இந்திரியம் நீர்த்து தானுகவே ஸ்கலிதமாவதையும், துரித ஸ்கலிதத்தையும் உடனே நீக்குந் தன்மை இதற்குண்டு. மூளை ஸ்திரமாகி ஞாபக சக்தி அதிகரிக்கும். கெட்ட இரத்தம் சரீரத்தில் பரவுவதனு லுண்டாகும் மேகப்பரு, வேனிற்கொப்பளம், கரப்பன், சொரிசிரங்கு முதலிய சகலவித இரணங்களும் நீங்கி இரத்தம் சுத்தியாகி, தாதுபுஷ்டியும், பலனும் உண்டாகும்.



**சர்ப்பிமேகவிதம்:**—ஏறக்குறைய பதினைந்து துளிகளை மலச்சிக்கலுள்ளவர்கள ஒரு தேயிலைக்கரண்டி மீனெண்ணெயிலும் (*Cod-Liver Oil*) மலச்சிக்கலில்லாதவர்கள் அரை ஒயின்கிளாஸ் திராக்ஷரசத்தில் (*Wine*) தண்ணீர் கலந்து, அல்லது தண்ணீரில் காலை மாலை சாப்பிட நோய்களெல்லாம் பறந்துபோய் ரத்தம் சுத்தமாகித் தாதுபுஷ்டியும் திடகாத்திரமு முண்டாகும். விலை ரூ. 1.

---



சாமிவேலின் சிங்கமார்க்கு

**சிரங்குக் களிம்பு. (Itch Ointment.)**





பூதக்கண்ணாடியில் பெண்வண்டின் தோற்றம்.

பல தினுசான சிரங்குகளுண்டு. அரிகரப்பன், செங்கரப்பன், கருங்கரப்பன், மண்டைக்கரப்பன், கொள்ளிக்கரப்பன், வெடிகரப்பன், வது கரப்பன் முதலிய பலவகைச் சிரங்குகளுக்குங் காரணம் ஓர்வகை வண்டு; இதில் பெண்வண்டானது மெல்லிய ஸ்தானங்களில் குழி பறித்து முட்டை யிடுவதினால் தினவுண்டாகும். இதைச்சொறிவதனால் பல இடங்களுக்கும் பரவும். இது தொத்து நோயானபடியால், ஓர் குடும்பத்தில் சிரங்குள்ள யாவரும் ஏககாலத்தில் மருந்து போடவேண்டும். முதலாவதாக வஸ்திரங்களை அவிழ்த்து வெளியில் காற்றுப்பட உலர்த்த வேண்டும். சிரங்கின் மேலிருக்கும் அசடுபோக சோப்புத் தேய்த்து வெந்நீரால் கழுவி சுத்திசெய்து, துடைத்துச் சிரங்குக் களிம்பை காலை மாலை இருவேளையும் மூன்றுநாள் போட்டு நாலாம் நாளில் சோப்பாவது, அரப்பாவது தேய்த்து ஸ்நாநம் செய்விக்க வேண்டும்.—விலை அணு 12.

**சாமிவேல் வைத்தியசாலை,**

தென்காஞ்சி, இரங்கோன்.

கடவுள் துணை.

# மானிட மர்மசாஸ்திரம்.

## எட்டாம் புஸ்தகம்.

### மருத்துவ சாஸ்திரம்.

மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு. (குறள்)

இப்பூ
யாவர்க்கும்
சுக செல்வ நன்மைகளையும் சுகிர்த பாக்கிய
போக்கியத்தையும் நீடூழி பெருதவிக்க
விரும்பிய,

கல்கத்தா சர்வகலா சங்கத்தின் தமிழ்ப்பரீக்ஷகரும், சென்னை
ஆங்கில கலாசாலைப் பிரதமாசிரியராயிருந்தவரும், கணித சாஸ்திரம், பூமிசால
நூல்களின் கர்த்தாவும், மானிட மர்ம சாஸ்திரப் புஸ்தகங்,
சாமிவேல் வைத்தியசாலைத் தலைவருமாகிய

எஸ். சாமிவேல், பி. ஏ. அவர்கள்

இயற்றியது.

புதிய பதிப்பு.

சாமிவேல் பிரஸ்,

தென்காஞ்சி, இரங்கோன்.

1920.

All Rights Reserved.

கடவுள் துணை.

# மானிட மர்ம சாஸ்திரம்.

## எட்டாம் புஸ்தகம்.

### கஷ்டமில்லாப் பிரசவம்.



"நீ வேதனையோடு பிள்ளைபெறுவாய்" என்று நமது ஆதித்தாய்க்கு விதிக்கப்பட்ட சாபத்தினால் எல்லா ஸ்திரீகளும் பேறுகாலத்தில் வேதனைப்பட வேண்டியது கடவுளின் நிர்ணயமாதலால் அவ்வித வேதனையை நிவிர்த்தித்துக்கொள்ளும் வழிகளில்லையென்று நினைப்பதனாலே அநேகர் அதைரியமடைவதுண்டு. இது வாஸ்தவமேயென்றாலும், கடவுளின் கிருபையும், லக்ஷ்மி கடாக்ஷமும் தங்கினவர்களென்றெண்ணப்படும் ஐசுவரியமும், நாகரீகமும், கல்வி ஆராய்ச்சியும் மிகுதியான பிரபுக்கள் வீட்டிலுள்ள செல்வப் பிள்ளைகள் மட்டும் அகோரகஸ்தியடைகையில், தரித்திரம் பிடித்த நிர்ப்பந்தமான ஏழைகளும் காட்டில் திரியும் மிலேச்சரும் யாதொரு கஷ்டமுமில்லாமல் பிள்ளைகளைப்பெற்றுத் தூக்கித்தோளில் போட்டுக்கொண்டு திரிவதற்குக் காரணமென்ன? மேலும், "நீ உன் முகத்தின் வியர்வையால் ஆகாரம் புசிப்பாய்." என்று ஆதாமுக்கு இடப்பட்ட சாபத்தினால் எல்லாரும் தம் முகத்தின் வியர்வை நிலத்தில் சிந்தப் பாடுபட்டுத்தானா ஆகாரம் புசிக்கிறார்கள்? மனுஷனுடைய உழைப்பைச் சாந்தமாக்கும் பொருட்டு எத்தனையோவிதமான யந்திரங்களும், கருவிகளும், மின்சாரசக்தியின் உபயோகங்களும் கண்டுபிடித்திருக்கிறார்களன்றோ? அதேவிதமாய் "நீ வேதனையோடு பிள்ளைபெறுவாய்." என்ற சாபத்தையும் ஒருவாறு தணிக்கும் பொருட்டுப் பலவித உபாயங்களைக் கண்டுபிடித்துக் கையாடிவருகின்றனர்.

ஆகையால், பிள்ளைப்பேறு கடவுளின் சாபமென்று அதைரியமடையக்கூடாது. பிள்ளைகளைப்பெறவும், பல்கிப்பெருகிப் பூமியை நிரப்புவதற்காகவுமே ஸ்திரீயைக் கடவுள் படைத்திருக்கிறாரென்பது அவளுக்குண்டாகும் மாதாந்தர ருதுவினால் தெற்

றென விளங்கும். காரியமிப்படியிருக்க, பேறுகாலத்தில் வேதனை யடைவது, இயற்கைப் பிரமாணத்திற்குட்பட்டு நடவாததின் தண்டனையேயன்றி வேறல்ல. சுகமான ஜீவியத்திற்குரிய வழிகளைக் கண்டுபிடித்து அதன்படி நடப்பவர்களுக்கு வேதனையே யிருக்கவேண்டிய அவசியமில்லை. பேறுகாலத்தில் மோசங்கள் நேரிட்டால் அதற்குக் காரணம் ஸ்திரீ அறியாமையினால் நடப்பித்த கிரியைகளே. வேதனையில்லாமல் பிள்ளைபெறும் மிலேச்சரின் நடவடிக்கை முறைகளைக் கவனித்துப்பார்த்தால், (முதலாவது) அவர்கள் சுத்த ஆகாயமுள்ள வெட்டவெளியில் அதிகமாய் வாசஞ்செய்கிறார்கள். (இரண்டாவது) அதிகமாய்ச் சரீரப்பாடு படுவதனால் தேகத்தை ஆரோக்கியமான ஸ்திதியில் வைத்துக் கொள்ளுகிறார்கள்.

இதனால் நாம் அறிவதுயாதெனில்:—நன்றாய் வீட்டுவேலை முதலியவைகளைச் செய்து சரீரத்தைச் சுகமும் பலமுமான ஸ்திதியில் வைத்துக்கொண்டு, சுத்த ஆகாயத்தைச் சுவாசிக்கும் பொருட்டு அடிக்கடி வெளியில் உலாவித்திரிபவர்களுக்குப் பேறு காலத்தில யாதொருகஷ்டமும் நேரிடாதென்பதும், வேதனை யானது பேறுகாலத்துக்கடுத்தது என்றெண்ணுவது தப்பித மென்பதுமேயாம். ஆனால், யாதொரு நோயுமில்லாதபடி பிரசவிக்கும் நன்மையையடைய வேண்டுமானால் அதற்காகவேண்டிய சில முறைகளை நெடுங்காலம் கையாடவேண்டியது அத்யாவசியம் ஸ்திரீயானவள் தான் பிறந்த நாள் முதல் தன் பிள்ளைபிறக்கும் நாள்வரைக்கும் அனுசரித்து வந்திருக்கும் நடவடிக்கைகளும் கிரியைகளுமே அவள் பேறுகாலத்தில் யாதொருகஷ்டம் நஷ்டம் வேதனையுமில்லாமல தப்பித்துக்கொள்ளும் வகையாகும்.

"அவரவர்வினையிலவரவர் வருவாரவரவர்வினையளவுக்கே
அவரவர்போகமென்றதேயாயினுருக்கார் துணையதாகுவர்கள்."

என்று சொல்லியிருப்பதுபோல் அவரவருடைய கிரியைக்குத் தக்கதாக லாபநஷ்டங்கள் நேரிடுமெனபதையறிக. விசேஷமாக கர்ப்பவதியாயிருக்கும் காலத்தில் தாயானவள் செய்யுங் கிரியைகளுக்கும் அநுபோகத்திற்கும் தக்கதாகக் குழந்தைக்கும் பலவித மாறுதல்கள் உண்டாவதும் எளிதாய்ப் பிரசவிப்பதும் உண்டாகக் கூடியதென்பது யாவருமறிந்த விஷயமே. ஆரம்பத்திலேயே வைத்தியர்களுக்குத் தெரிவித்திருந்தால் எந்த வியாதியும் நீங்கி எளிதில் 'சௌஸ்தமாகலாமென்று ஓர் பெயர்போன டாக்டர் சொல்லியிருக்கிறார். ஆதலால், "வெள்ளம் வருமுன் அணை போட்டுக்கொள்" என்ற பழமொழிப்படி கூடிய ஜாக்கிரதை

யாய் இபற்கைக்கு விரோதமின்றி நடந்துகொண்டு வருவதாலும், இப்புஸ்தகத்தில் சொல்லியிருக்கும் விதிகளை யநுசரித்து வருவதாலும் யாதொரு கஷ்டமின்றிப் பிள்ளைகளைப் பெற்றுச் சுகித்திருக்கலாம்.

இதை வாசிக்கும் ஸ்திரீயே! நீ கர்ப்பவதியாயிருந்தால் பேறுகாலத்தைப்பற்றி விபரீதமாயெண்ணிப் பயமடையாதே. "மருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்," என்பதுபோல், பயந்திருமேலேயே அநேகருக்குச் சுகமும் பலனும் கெட்டு ஆபத்திற் காளாகிவிடுகிறார்கள். பயத்திற்குக் காரணம் அறியாமையேயாம். அறியாமையே பயமாகும். பயத்தை நீக்கும் ஔஷதம் ஆராய்ச்சியாலும் அநுபோகத்தினாலும் உண்டாகுமறிவே. தனக்கு நன்றாய் விளங்கிய காரியத்தைப்பற்றி எவர்க்கும் பயமிராது. இவ்வுலகத்தில் நீ பயப்படவேண்டிய காரியங்களில்லையென்று நம்ப ஆரம்பித்தவுடன் சகல நன்மைகளும் உனக்குக் கிடைக்கும். ஆதலால் இச்சாஸ்திரத்திற் சொல்லப்பட்டிருக்கும் விதிகளை நன்றாய்க் கற்றறிந்துகொள்வாயானால் பேறுகாலத்தைப்பற்றிய பயமெல்லாம் உன்னைவிட்டு நீங்கிச் சுகமும் பலனுமாய்ப் பிள்ளைகளைப் பெற்றுப் பெரும் பாக்கியங்களையடைவாய்.

## பிரசவச் சின்னங்கள்.



இவ்வத்தியாயத்தில் பிரசவவேதனை எப்பொழுது ஆரம்பிக்குமென்பதை யறியக்கூடிய சில சின்னங்களை விவரித்துச் சொல்வதுடன், கர்ப்பவதி அச்சமயத்தில் நடந்து கொள்ள வேண்டிய கிரமங்களைப் பற்றியும் விவரித்துக் கூறுவோம். புதிதாய்க் கர்ப்பவதியான ஒவ்வொரு ஸ்திரீக்கும் இவை மிக்க உபயோகமுள்ளதாயிருக்கும். முன்னமே குழந்தைகளைப் பெற்றுப் பேறுகாலத்தின் வருத்தங்களை யநுபவித்தவர்களுக்கு யாதொரு பயமாவது மற்றை வியாகூலமாவது உண்டாகமாட்டாது. ஆனால், தலைப் பிள்ளைகளைப் பெறப்போகும் ஸ்திரீகளோ பேறுகாலம் கிட்டிவிட்டதே! என்னமோ ஏதோ! என்று சிலசமயம பயப்படுவார்கள். ஒவ்வொரு அறிகுறிகளும் அவளுக்குப் புதிது புதிதாய்த் தோன்றும். ஆதலால், தான உள்ளபடி அடையும் வருத்தத்தைவிட அதிகமாகவே வருத்தமாயிருக்குமேயென்று பய

மூண்டாகலாம். ஆனால், பிள்ளை பிறந்தவுடன் இவ்வளவுதானா பேறுகாலத்தின் கஷ்டம். இதைப்பற்றி நாம் எப்படியெல்லாமோ எண்ணியிருந்தோமேயென்று அலக்ஷியமாய் நினைப்பாள். இவ்வுலகத்தில் தாய்மாராகும் எல்லா ஸ்திரீகளும் தங்கள் புத்திரரைப் பெறும்போது அடையுங் கஷ்டந்தானே இது. பாடில்லாமல் பலன் அநுபவிக்க முடியுமோ? புத்திரச்செல்வம் அடைய வேண்டுமானால் அதற்குரிய சில கஷ்டங்களுமிருக்கும். ஆதலால், பேறுகாலத்தைப்பற்றி விபரீதமான எண்ணங்கொள்ளாமல், இப் புஸ்தகத்தில் சொல்லப்பட்டிருக்கும் விதிகளைமாத்திரம் கையாடி வருவோர்க்குப் பிரசவ வேதனையில கிஞ்சித்தும் கஷ்டமேயிராது.

பழுத்த பழமானது செடியிலிருந்து தானாகவே விழுவது போல, கருத்தரித்த நாற்பது வாரம் அல்லது இருநூற்றெண்பது நாளைக்குப்பின முன்னூறு நாளுக்குள்ளாகக் காப்பத்திலிருந்து சிசு வெளிப்படும். இச்சமயம் உண்டாகிற நோய்க்குப் பிரசவ வேதனையென்று சொல்வார்கள். பிரசவமாவதற்குச் சில நாட்களுக்கு முன் சில குறிகள தோன்றும். சிலருக்கு யாதொரு குறியுந் தோன்றாமலும் நோய் விசேஷமாயில்லாமலும் பிரசவிப்பாாகள். சில சமயங்களில் ஸ்திரீ நடந்துகொண்டிருக்கும் போதே அல்லது உட்கார்ந்திருக்கும்போதே அல்லது தூங்கும் போதே குழந்தை பிறந்துவிடும். ஆனால சாதாரணமாய் ஏறக்குறைய பதினைந்து தினங்களுக்கு முன்னே சில குறிகள் காணப்படும். வயிறு தாழ்ந்திருக்கும். அதனால் சுவாசம விடுவதில் ஸ்திரீக்கு யாதொரு கஷ்டமுமிராது. சரீரம் லேசாயிருப்பதாக தோன்றும். போஜனம் நன்றாய்ச் சாப்பிடுவாள். சாப்பாடும் எளிதில் ஜீரணிக்கும். ஆனால், கர்ப்பாசயம் கீழே இறங்கி மூத்திரப்பையையும் அடிவயிற்றிலுள்ள மற்ற அவயவங்களையும் நெருக்கி அமிழ்த்துவதனால் சிறுநீர் இறங்கும். ஆனால், நீர் தாராளமாய் வராது. சில சமயம இருமல் நகைப்பு முதலிய காரணங்களால் துணி நனையத்தக்கதாக நீர் தானாயிறங்கும். அதோடுகூட அடிக்கடி மல விசர்ஜனமுமாகும். இவ்விதம் மலம் தாராளமாய் இறங்குவது மிகவும் நல்லது. ஏனெனில், சிறு குடலைச் சுத்தப்படுத்திக் குழந்தையின் சிரசு தாராளமாய் வெளியே வரும்படி இடம் உண்டாகிறது. பேறு காலத்திற்கு இரண்டு வாரத்திற்கு முன் இவ்விதம் மலந்தாராளமாய்ப் பிரியாவிட்டால் மலச்சிக்கலுக்கு நாம் சொல்லியிருக்கும் முறைகளைக் கையாடவேண்டும். பேறு காலத்திற்குச் சில நாளைக்கு முன் கொஞ்சம் நோயுண்டாகிச் சளிபோன்ற உதிரம் வரும். நடக்கும் போது, கால்கள் நோகும். நிஜமான பிரசவவேதனை ஆரம்பிப்ப

தற்கு இருபத்துநாலு மணி நேரத்திற்கு முன்னே யோனியி லிருந்து சளிபோலுதிரங் கலந்த திரவம வெளிப்படும். இப்படி இரத்தம் வருவதற்குக் குறிகாண்ட லென்று பெயர். இதனுடன் யோனியெல்லாம் நனைந்து, தளர்ந்து, மிருதுவாகி, அகலமாவ தற்கு ஆரம்பித்துவிடும். பிறகு பிரசவவேதனை ஆரம்பிக்கும்.

## பிரசவம்.

பிரசவமானது கிரமப்பிரசவம், கிரமாதீதப்பிரசவம் என இரண்டு பிரிவாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

கிரமப் பிரசவத்தில் தலையின் பின் உச்சி முதலில் தோன்றித் தாய்க்கும் சிசுவுக்கும் யாதொரு மோசமில்லாமல் சரியான நோக்காடுண்டாகிச் சரியான காலத்துக்குள் பிள்ளை பிறக்கும்.

கிரமாதீதப் பிரசவத்தை ஆறு பிரிவாக வகுக்கலாம்.

1. நீடித்த பிரசவம்.

2. பிரசவகாலத்தில் சிரசு தோற்றமில்லாமல் ஆசனம், கால், கை, நஞ்சுக்கொடி முதலானவைகளில் ஏதாவதொன்று தோன்று தல்.

3. ஒன்றுக்கு மேற்பட்ட சிசுக்களாலுண்டாகும் பிரசவவேதனை.

4. ஜன்னிபோடுகூடிய பிரசவம்.

5. இரத்தப் பெருக்கோடுகூடிய பிரசவம்.

6. கருப்பை அல்லது அதன் பக்கங்களிலுள்ளவை பிரசவ நோய் உண்டாகும்போது வெடித்தல்.

## கிரமப்பிரசவம்.

பிரசவவேதனை (1) சூட்டுவலி (2) பிரசவவலி என இரு வகைப்படும். இதை ஸ்திரீகள் வெகு குறிப்பாய் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டியது. சூட்டுவலி சாதாரணமாய் முன் வயிற்றில் தோன்றும். இரைப்பையாவது குடலாவது சீர்கெட் டிருத்தல், சாப்பிட்டபோஜனம் ஜீரணமாகாதிருத்தல், ஈரத்தில் நெடுநேரம் நிற்குதல், புத்தியீனமான செய்கைகளைச் செய்தல், நெடுநேரம் நடத்தல், முதலிய காரணங்களினுல் இந்நோய் கீண்ப

துண்டு. அது கிரமமாகவராது. குறி காணுவதுமரிது. எளிதில் ஜீரணிக்கத்தக்க வஸ்துக்களைப் புசித்துச் சுகபேதி மருந்துகளை யருந்துவதனால் இவ்வலிவாராமல் தடுக்கலாம். இந்நோய் பிரசவ காலத்திற்கு வெகு நாளைக்கு முன்னமே தோன்றுவதுண்டு.

சிகிச்சை. (1) இரண்டு சுக்குத்துண்டைக் கொஞ்சம் சீரகத்துடன் தட்டி வதக்கி அதில் அரைப்படி தண்ணீர் விட்டு வேக வைத்து ஆழாக்காக வற்றியவுடன் ஒரு கொட்டைப்பாக்களவு பசுவெண்ணெய் போட்டுக் குடிக்க நோய் நின்றுவிடும்.

2. ஒரு அவுன்ஸ் நல்லெண்ணெயில் ஒருதிராம் அபின் திராவகம், (Laudanum) கலந்து வயிற்றில் பூசவும்.

சரியான பிரசவவலி குழந்தை பிறக்கும் காலங் கிட்டிவிட்டதெனக்காட்டுங்குறி :—இந்நோய் முதலில் கொஞ்சம் ஆரம்பித்துப் பிறகுகொஞ்சங் கொஞ்சமாய் அதிகரித்துக் கிரமமாகத் தோன்றும். பிரசவவேதனையை மூன்றுபாகங்களாக வகுக்கலாம். (1) கர்ப்பாசயத்தின வாய், யோனி முதலான இடங்கள் விசாலமாதல், (2) சிசு உதயமாதல், (3) மாயை முதலான பிண்ட விசேஷங்கள் வெளிப்படுதல்.

முதற்பாகத்தில் கருப்பையின் முயற்சியேயுண்டு. இரண்டாம்பாகத்தில் வயிற்றுச் சதைகளும் சால்தாங்கியும், (Diaphragm) சகாயமாகும். அதுவே முக்கலுக்குக்காரணம். மூன்றாம்பாகத்தில் யோனித்தசைகள் சுருங்கி நஞ்சைவெளிப்படுத்தும்.

முதற்பாகத்தில் பிள்ளைநோய் அற்பமாய் ஆரம்பித்து வரவர விசேஷமாகும். கர்ப்பாசயம் மடித்துமடித்து சிசுவை உதைத்து வெளிப்படுத்துவதற்குச் செய்யும் எத்தனமே இவ்வலிக்குக் காரணம். அது முதுகில் தோன்றி க்கிரமமாய் அடிவயிற்றின் கீழ்ப்பாகம்வரையில் இறங்கும். வாளால் அறுப்பது போலவும் மெல்லுவது போலவுமிருக்கும். இருபது நிமிஷத்துக் கொரு தடவை நோயுண்டாகும். பிரசவநோய் அற்பமாயிருந்தால் சிசு வெளிப்படத்தாமதிக்கும். வேதனை எவ்வளவு அதிகமோ அவ்வளவுக்கனுகூலம். ஸ்திரீ படுத்திருக்காமல் அங்குமிங்கும் உலாவி சீக்கிரம் வேதனையை அதிகரிப்பது நன்று. பிரசவகாலம் கிட்டநெருங்கநெருங்க வலியதிகமாகும். மூச்சுவிடமுடியாது. பலமாய்க்கொஞ்சம் முக்குவாள். இப்போது வாந்தியாதல் நல்ல குறி. ஏனெனில், கர்ப்பாசயத்தின்வாய் விசாலமாய் விட்டபோது வாந்திகாணும். ஆனால், காப்பிப்பொடி கலந்ததுபோல் கறுப்பாய்

வாங்கியாதல் பலவீனத்தைக் காட்டும் கெட்டகுறி. இப்போது ஸ்திரீ அதைரியமடைந்து ஆயாசப்பட்டு அழுவாள். ஒவ்வொரு சமயத்தில் பிதற்றுவாள். பற்கள் ஜில்லென்று குளிரினால் கட்டும். சிசுவின் தலை கர்ப்பாசயத்தின் வெளித்துவாரத்தில் வரும்போது குளிருதறல் உண்டாகும். வலியிருக்கும்போது வயிற்றின் மேல் கையை வைத்துப்பார்த்தால், கருப்பாசயம் கல்லைப்போல் விருத்தமாய்க் கைக்குத்தட்டுப்படும். வலிநின்றவுடனே மிருதுவாயிருக்கும். ஆயாசத்தினால் தூங்கிவிடுவாள். திரும்பவும் ஒரு வலி உண்டானவுடன் விரலையோனிக்குள் செலுத்தி அங்குலப் பரீட்சையால் சிசு எவ்வளவு நேரத்திற்குள் உதயமாகுமென்றும் முதலாவது உதயமாவது சிசுவின் சிரசோ மற்றெந்தப் பாகமோ வென்றும் கண்டுபிடிக்கலாம். சாதாரணப் பிரசவத்தில் சிரசு முதலில் உதயமாகும். சில பிரசவங்களில் கால் அல்லது கை முன்னால் வரும்.



இரண்டாவது பாகத்தில், சிசுவானது நீந்திக்கொண்டிருக்கும் பனிக்குடம் உடைந்து வெளிக்கு வரும். இந்தப் பனிக்குடம் தளர்ந்தது ஸ்திரீக்குக் கஷ்ட நிவாரணமானதுபோல் தோன்றிச் சுவாசம் தாராளமாய்ச் செல்லும். சற்று நேரம் வலியில்லாதிருந்த போதிலும் சீக்கிரம் அதிகநோவும் முக்கலும் உண்டாகும். ஸ்திரீயின் முகம்வாடிக்குரல் கம்பிக்கொண்டு பேசுவாள். கையால் எந்த வஸ்துவையாவது பிடித்துக்கொண்டு காலைச் சுவரின் மேல் உதைத்துக்கொண்டு முக்குவாள். இப்போது விரல்விட்டுப் பார்த்தால் குழந்தையின் சிரசு நன்றாய் விரலுக்குத்தென்படும். வலிவந்து நிற்கும் போதெல்லாம் சிரசு வெளியேவந்து உள்ளே போய்க்கொண்டிருக்கும். தலை யோனித்துவாரத்தில் வரும்போது ஆசனத்தினின்று மலம் வெளிக்குவரும். தலை யோனித்துவாரத்திற்கு வெளியில் வரும்போது விசேஷ வலியுண்டாவதால் ஸ்திரீ ஒரு பெரியகூச்சல்போட்டுப் பெரியமுக்கு முக்கத் தலைவெளியில்

வரும். அவாசாப்பியாசஞ் செய்யும் பழக்கமுள்ள ஸ்திரீகள் நன்றாய் மூச்சடக்கி முக்கக்கூடுமாதலால் கஷ்டம் அதிகமில்லாமல் குழந்தை பிறந்துவிடும். இதைப்பரீட்சித்துப் பார்க்கவும். அதற்குப்பின் சற்றுநேரம் நோய் நின்றிருக்கும். உடனே வலிகண்டு சிசுவின் மற்றப் பாகங்கள் பூர்த்தியாய் வெளியே வந்துவிடும்.

மூன்றுவது பாகம். குழந்தை பிறந்தவுடன் சற்றுநேரம் நோய் நின்று தைரியமுண்டாகும். கால்மணி நேரத்திற்குள் சொற்பவலி கண்டு மாயை (Placenta or after-birth) விழுந்து போம். இந்த மாயையுடனே சிறிது இரத்தங்கூட வெளியில் வரும். இதோடே பிரசவ வேதனை முடிந்ததாகும். பிறகு அடிவயிற்றைக் கையால் தடவிப்பார்த்தால் கர்ப்பாசயம் தேங்காய்ப் பிரமாணம் கைக்கு அகப்படும். இதற்குப்பின்பும் இரண்டொரு தினங்களுக்கு வலியிருக்கும். இந்த வலி நல்லது. பிரசவமான ஒரு மாதத்திற்கெல்லாம் கருப்பாசயம் கரைந்து சாதாரணமாய்த் தானிருக்கும் அளவிற்குவந்து தன்னிலையில் வந்துவிடும்.

## பேறுகால ஆயத்தமும், நடந்துகொள்ளவேண்டிய விதமும்.



பிரசவகாலம் கிட்டிவிட்டதேயென்று ஸ்திரீ பயப்படாமல் தைரியமாய் கடவுளின் ஒத்தாசையை மன்றாடிக் கொண்டு அமரிக்கையாயிருந்து மருத்துவச்சியையும் வைத்தியரையும் அழைத்துவர ஆளனுப்பவேண்டும். அவர்களிருவரையும் முன்னமே நிர்மானித்து வைப்பது மிக்க நலம். அவர்கள் வேலையில் திறமையுள்ள அநுபோகஸ்தர்களாயும், வெகு சமீபத்தில் குடியிருப்பவர்களாயுமிருந்தால் வெகு உத்தமம். பேறுகாலத்திற்கு இரண்டு வாரத்திற்கு முன்னமே மருத்துவச்சியை வரவழைத்து வீட்டிலேயே வைப்பது மிக நல்லது. ஏனெனில், அவள் என்ன நேர்ந்தாலும் சமயோசித சிகிச்சைசெய்ய ஆயத்தமாயிருப்பாள். அவள் தொத்து வியாதிகளிருக்குமிடங்களிலிருந்து வரக்கூடாது. பிரசவ காலத்திற்கு அவசியமவேண்டிய எல்லா சாமான்களையும் முன்னமே ஜாக்ரதையுடன் தயார்செய்து வைத்துக்கொண்டால் மிகநல்லது. அவையாவன :—

குழந்தைக்குவேண்டிய துணிகள், குழந்தை பிறந்தவுடனே அதன்மேல்போடுவதற்கு ஒரு பெரிய கம்பளித்துணி, சிறுதுண்டுகள் அல்லது துவாலேகள் (Towels), வயிற்றைக் கட்டுகிற துணி, கூர்மையற்ற குண்டூசிகள் (Safety Pins), பிரசவித்த ஸ்திரீக்குப் படுக்கை முதலியவைபோட மெழுகுசீலை அல்லது மெழுகுத்துணி (Oil Cloth), பிரசவவலியிருக்கும்போது பிடித்துக்கொள்ளும்படி விட்டத்தில் அல்லது கட்டிலில்போட ஒரு பெரியகயிறு, குழந்தை பிறந்தவுடன் தொப்புள் கொடியை யறுக்க ஒரு மழுங்கல் கத்திரிக்கோல், தொப்புள்கொடியை இரண்டு சுற்றுப்போட்டுக் கட்டுவதற்குச் சன்னமான ஒரு நூல் கயிறு, ஒரு கார்பாலிக் சோப் (Carbolic Soap) வாஸ்லின் தைலம், (Vaseline) அல்லது விளக்கெண்ணெய் காண்டித் திராவகம், (Condy's fluid). ஆகிய இவைகள்தான் அவசியம். பிரசவம் மழை காலத்தில் அல்லது குளிர்காலத்தில் சம்பவிக்குமாயின் ஒரு அனற்சட்டி தயார்செய்து அதற்குமேல் உடுப்புகள், துண்டுகள், கம்பளி முதலியவற்றைத் தொங்கவிட்டிருந்தால் அவைகள் நன்றாய் உலர்ந்து உஷ்ணமாகவேயிருக்கும். வேண்டிய பொழுது எடுத்து உபயோகித்துக் கொள்ளலாம். வெந்நீர் குளிர்ந்த ஜலம் இரண்டும் சமீபத்திலேயே இருக்கவேண்டும்.

இரத்தப் பிரவாகம் அதிகமாகிறபோதும், பிரசவித்தபின் பலவீனத்தினால் ஸ்திரீ ஆபாசமடையும்போதும் வேறுசில அவசரங்களிலும் டாக்டர் பிராந்தி உபயோகிப்பார். ஆகையால், ஒரு பாட்டல் பிராந்தியும் வாங்கிவைத்திருக்கவேண்டும். ஆனால், டாக்டர் அதை மருந்தாய் உபயோகித்தாலன்றி வேறெந்தக் காரணத்தாலும் அதைத்தொடவேகூடாது. அப்படி உபயோகித்தால் அநேக கெடுதிகளுக்கிடமாகும்.

பிரசவ வலி ஆரம்பித்தபிறகு ஸ்திரீக்குச் சாப்பாட்டின்மேல் பிரீதியிராது. சாப்பிடச்சொல்லுவதும் தப்பிதம். ஆனால் காப்பி, அரரூட்கஞ்சி, அல்லது வேறெந்தக் கஞ்சியாவது கொடுக்கலாம்.

## பிரசவகாலத்தில் மலஜலந் தங்காமல் செய்யவேண்டிய முறைகள்.

மருத்துவச்சியானவள் ஸ்திரீக்கு மலச்சிக்க லிருப்பதாகக் கண்டால் பேறுகாலவலி ஆரம்பிக்கிற தருணத்தில் அந்த ஸ்திரீயின் குடல் சக்திக்குத் தகுந்த ஒரு காண்டி விளக்கெண்ணெய் கொடுக்கவேண்டும்.

அல்லது வெங்காயத்தைச் சிறு துண்டுகளாக நறுக்கி ஆமணக்கெண்ணெயில் வேகவைத்து, அதில் கோழிமுட்டை ஒன்றை உடைத்துவிட்டுக் கிண்டிக் குழந்தை வலி கண்டவுடன் கொடுத்தால் மலம் சுத்தியாகிக் கஷ்டமின்றிக் குழந்தை பிறக்கும்.

அல்லது, பீச்சாங்குழலி (Fountain Syringe) ஹுடன் அரைப்படி வெந்நீரில் இரண்டு கழஞ்சி சோப்புக் கலந்து ஆசனத்திற் செலுத்த மலம் சுத்தியாகும். அப்படிச் செய்வதால் எளிதில் பிரசவமாகும். அவ்விதங் குடல் சுத்தப்படுத்தா திருந்தால், குழந்தை பிறக்குஞ் சமயத்தில் மலந் தானாகவே வெளியாகி அசுசிப்படுத்தும்.

இதேமாதிரியாகப் பிரசவமாகு முன்னமே அடிக்கடி மூத்திரம் பெய்துகொள்வதும் நல்ல சுகத்துக் கேதுவாகும். வெட்கத்தினால் நீரை அடக்கினால் பிற்பாடு நீர் பிரிவது கஷ்டம்.

நீர்இறங்காவிடில், படிகாரம், வெடியுப்பு, இந்துப்பு இவற்றில் வகைக்குக் கால்கழஞ்சி எடுத்துப் பொரித்து, நீர்முள்ளிக் கஷாயத்தில் ஒருமுறை குடிக்க நீர் பிரியும். அல்லது:—

ஸ்திரீயைத் தண்ணீர்க் கரையில் நிறுத்தி அவள் கண்முன் தண்ணீரை வார்த்துக்கொண்டிருந்தால் நீர் உடனே பிரியும்.

## பிரசவ நிர்வாகம்.

ஸ்திரீ இருக்கும் அறை சுத்தக்காற்று உலாவத்தக்கதாய் விசாலமுள்ளதாயு மிருக்கவேண்டும்.

பிரசவ வேளையில் சத்தம், சந்தடி, கூக்குரல் ஆகாது. பிரசவ வேளையில் இரண்டு மூன்றுபேர் மாத்திரம் கூடியிருக்கலாமேயன்றி அநேகர் இருக்கக்கூடாது.

சிசுவின் தலை தெரியுமுன், ஸ்திரீயை முக்கும்படி பலாத்காரஞ் செய்யக்கூடாது.

வெளியுறப்பு விரைத்திருந்தால் ஒரு ஸ்திரீ வெந்நீரில் துணியை நனைத்து ஒற்றடங் கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும். அல்லது ஆட்டுக்கொழுப்பை யோனிக்குள் பூசவேண்டியது.

பிள்ளை பிறக்கும்போது விடபத்தைத் தாங்கிக்கொள்ளவேண்டும். அப்படிச் செய்யாவிடில் அதுகிழிந்து, யோனிக்கும் கடைக்குடலுக்கும் ஒரு வழியுண்டாகும்.

மருத்துவச்சி விநோதமும் விளையாட்டுமான வார்த்தைகளைப் பேசிக்கொண்டே பிரசவிக்கும் ஸ்திரீயை உற்சாகப்படுத்தி மனோ தைரியத்தை விளைவிக்கவேண்டும். "துன்பத்துக்குப் பின் இன்பம் வரும்." என்று இஸ்ரவேலின் இனிய சங்கீதக்காரனுடைய வசனங்களைப் போன்றவைகளை எடுத்துச் சொல்லி, அவளுக் காறுதலும் உற்சாகமு முண்டாகத்தக்கதாகப் பேச வேண்டும். அவற்றிற் சிலவற்றை இங்கு கூறுவோம்:—

"கண்ணீரோடே விதைக்கிறவர்கள் கெம்பீரத்தோடு அறுப்பார்கள்."

"நான் அவர்கள் துக்கத்தைச் சந்தோஷமாக மாற்றி அவர்களைத் தேற்றி அவர்கள் சஞ்சலம் நீங்க அவர்களைச் சந்தோஷப்படுத்துவேன்."

"சாயங்காலத்தில் அழுகை தங்கும்; விடியற்காலத்தில் களிப்புண்டாகும்."

"நான் உபத்திரவப் படுங்காலத்தில் அவர் எனக்கு உதவி செய்தார்."

முதலிய சில ஆறுதலான வாக்கியங்களைச் சொல்லி, அவள் தன் இனிய நற்பாலனை இன்புறுங் காலங்களில் ஏங்குங்காலஞ் சமீபித்து விட்டதென்று தேறுதல் சொல்லவேண்டும்.

மருத்துவச்சியினிடத்தில் ஸ்திரீயானவள் தன் தேகஸ்திதி, மலவிர்த்தி, பிரசவ வேதனையின் இயற்கை இவற்றைப் பற்றி அவள் கேட்குங் கேள்விகளுக்கு ஒன்றையும் ஒளியாமல் பரிஷ்காரமாய்ப் பதில் சொல்லவேண்டும்.

## சிசு உதயமாதல்.

கருப்பை சுருங்கும்போது நோயுண்டாகிறது. பேறுகால வலியானது சாதாரணமாய் ஆறுமணி நேரமிருக்கும். இதில் முதல் நாலுமணி நேரமும் கர்ப்பாசயவழி முதலியவை விரிதல், கடைசி இரண்டுமணி நேரத்தில் சிசு உதயமாதல். சிசு பிறந்தவுடன் மாயை வெளியாகிவிடும். சில சமயங்களில் ஐந்து முதல் முப்பது நிமிஷம் வரையில் செல்லும். குழந்தை பிறக்க எவ்வளவு நேரஞ் செல்லுமென்று கண்டு பிடிக்க மருத்துவச்சி தன் விரலை விட்டுப் பரீட்சை செய்யவேண்டிய தவசியமாகையால், அதற்கு ஆக்ஷேபனை செய்யாமல் தன் தலையையும் புஜங்களையும் தணிவான ஸ்தலத்திலும், தொடைகளையும் முழங்கால்களையும் மடக்கிக் கொஞ்சம் உயரமாயும் வைத்துக்கொள்ள வேண்டும். மருத்துவச்சி வாஸ்லீனை அல்லது விளக்கெண்ணெயைக் கையில் தடவிக்கொண்டு ஸ்திரீக்கு வலியுண்டாகும்போது தன் சுண்டுவிரலை யோனிக்குள் செலுத்திச் சற்றுநேரம் வைத்துக்கொண்டிருந்த பிறகு குழ

ந்தை எந்தக் கிடையி லிருக்கிறதென்றும், சிரோதயமாவதற்கு எந்நேரமாகு மென்றுஞ் சொல்வாள். கருப்பையின் வாயினுள் ஒரு விரல் செல்லத்தக்கதாக விரிந்திருந்தால் 24 மணி நேரத்திற்குள் குழந்தை பிறக்கும். இவ்விதப் பரீட்சை செய்வதில் யாதொரு உபாதையுமிராது. பிரசவ வேதனை பிரதம ஸ்திதியில் ஆரம்பித்திருக்கிறதென்றால் கர்ப்பிணி எழுந்திருந்து அறைக்குள்ளேயே உலாத்திக் கொண்டிருக்கலாம். அல்லது ஒரு நாற்காலியில் உட்காரலாம். அவளுக்கு இத்தருணத்தில் காய்ச்சினபால், இறைச்சிரசம் (Soup) அல்லது பாலுந் தேயிலைத் தண்ணீருங் கலந்து குடிக்கக் கொடுக்கலாம். இத்தருணத்தில் ஸ்திரீ வாந்தி செய்தால் அது நல்ல குறி. எனெனில், அது கர்ப்பாசயத்தின் வாயை அகன்று விரியும்படி செய்கிறது. ஆகிலும் வாந்தி அதி[illegible]ஞ்சம் சோடாத்தண்ணீர் குடிக்கக் கொடுக்க[illegible]க்கவே கூடாது. பிரசவ ஆரம்பத்தில் கர்ப்[illegible] உடைகளை யுடுத்திக்கொண்டிருக்கலாம். ஆனால் [illegible] முன்னமே உடுப்புகளைக் கழற்றி எடுத்து [illegible] மெல்லிய வஸ்திரந் தவிர மற்றொன்றும் தேகத்தி லிருக்க விடக்கூடாது. காலில் மேல்ஜோடு போட்டுக்கொண்டிருக்கலாம். பிரசவத்திற்காகப் படுக்கையின்மேல் ஒரு மெக்கின்றாஷ் துணியாவது, தார் தடவின ரெட்டுத் துணியாவது அல்லது மெழுகுத் துணியாவது விரித்திருக்க வேண்டும். (Hartman's Sanitary wood wool Towel) மிகச் சிலாக்கியமானவைகள். ஆரம்பத்திலேயே வலி அதிகமாயிருந்தால் வலி நிற்கும் வரையில் நாற்காலியிலாவது படுக்கையின் ஓரத்திலாவது சாய்ந்துகொள்ளலாம்.

பிரசவ ஸ்திரீயை வைப்பது தேசத்திற்குத் தேசம் வித்தியாசப்படும். நமது நாட்டில் சில இடங்களில் உட்கார வைக்கிறார்கள். சீனதேசத்தில் முழங்கால்மேல் நிற்க வைப்பதும், பிரான்சு தேசத்தில் மல்லாக்க வைத்து முழங்காலை முடக்கி வைப்பதும் வாடிக்கை. இங்கிலீஷ்காரர் ஸ்திரீயைக் கட்டிலின்மேல் இடது பக்கமாய்ப் படுக்க வைத்து, பிருஷ்டத்தைக் கட்டிலின் ஓரமாய் நகர்த்தி, முழங்காலை முடக்கி வயிற்றோடு அணைத்துத் தலையணையைக் கால்களுக்கு மத்தியில் வைப்பதும் வழக்கம். இது எல்லாவற்றைப் பார்க்கிலும் மிகவும் நல்லது. ஸ்திரீக்கு நோய் வரும்போது அருகிலிருப்பவர்களின் கையைப் பிடித்துக்கொள்ளும்படி செய்யலாம். பிரசவ சமீப காலத்தில் போஜனங் கொடுக்கலாகாது.

சில நாட்டு மருத்துவச்சிகள் பேறுகாலவலி உண்டான ஆரம்பத்திலேயே பிரசவிக்கிற ஸ்திரீயை மூர்ச்சை யடக்கிக்கொண்டு பலமாய் முக்கச் சொல்வார்கள். இதனால் யாதொரு பிரயோச

னமுமில்லை. ஆனால் ஸ்திரீயை களைக்கச் செய்து வீணான வருத்தமும் காலதாமதமும் உண்டுபண்ணும். மேலும் இப்படிச் செய்வதால் கருப்பை கிழிந்து அபாயம் நேரிடுவதுமுண்டு. ஜனனேந்திரிய துவாரத்தில் சிசுவின் தலை தோன்றவே, ஸ்திரீக்குத் தேகம் குளிர்ந்து சிலிர்க்கும். அப்பொழுது உஷ்ணமான கஞ்சி, வெந்நீர் அல்லது தேயிலைத் தண்ணீர் கொஞ்சங் கொடுத்தால் அவளுக்குத் தேகத்தில் உஷ்ணம் பிறந்து சுகமுண்டாகும். இப்பொழுது பனிக்குடம் உடையாமலிருந்தால் மருத்துவச்சி கை நகத்தால் அதைக் குத்திக் கிழித்துவிடுவாள். ஆனால், அனாவசியமாய்க் குத்திக் கிழிக்கக்கூடாது. அப்போது ஜலம் வெகு வேகத்துடன் வெளிப்படும். அதிக வலியிருப்பதால் ஸ்திரீ பயப்படவாவது அழவாவது கூடாது. ஆனால், வலியுண்டாகு[illegible] யடக்கி முக்கவேண்டியது. கையினால் ஏத[illegible] பிடித்துக்கொள்வது நலம். ஸ்திரீ பலமாக மு[illegible] குவதனால் சிசு கொஞ்சங் கொஞ்சமாய் வெளி[illegible] நின்று மறுபடியும் வலி காண்பதற்குள் சில நி[illegible] னால் சுகமுண்டு. பலனாகவுந் தெரியும். மருத்துவச்சி முதுகை அமுக்கினால் முதுகுவலி நின்று சுகமாயிருக்கும்.

தலை வெளிவந்ததே சில மருத்துவச்சிகள் சீக்கிரமாய்ப் பிரசவமாகுமென்றெண்ணங் கொள்வதனால் அல்லது தாங்கள் சும்மா உட்கார்ந்திருந்தால் வீட்டிலுள்ளவர்கள் மதிக்காமல் மருத்துவச்சியின் உதவியில்லாமலே குழந்தை பிறந்ததென்று சொல்வார்கள் என்ற எண்ணத்தினால் அனாவசியமாய்க் குழந்தையின் தலையைப் பிடித்திழுப்பார்கள். அப்படிச் செய்கிறது நல்லதல்ல. குழந்தை தானாய் வெளிப்பட்டால் அபாயமுண்டாகாது. அப்படியில்லாமல் தலையைப் பிடித்துப் பலவந்தமாய் இழுத்தால் யோனியிலிருந்து இரத்தப் பிரவாகமுண்டாகிப் பிராணனுக் கபாயம் வரும். ஆகையால் இயற்கையான பிரசவத்தில் மருத்துவச்சி ஒரு அபாயமுமின்றி ஜாக்ரதையாய்ப் பார்த்துக்கொள்ள வேண்டியதேயன்றிச் சுபாவமாய் நிறைவேறுகிற பிரசவத்தில் தாம் பிரவேசிக்கவே கூடாது. அப்படிப் பிரவேசித்துவிட்டுத் தாங்கள் அப்படிச் செய்யாவிட்டால் குழந்தை பிரசவமாகுதல் வருத்தமென்றும், தங்கள் சாமர்த்தியத்தினாலேயே குழந்தையைச் சீக்கிரத்தில் வெளியேற்றும்படி செய்ததாகவும், நாட்டு மருத்துவச்சிகள் அறிவில்லாத ஸ்திரீகளுக்கு வீண் டம்ப வார்த்தைகள் சொல்வதுண்டு. ஆகையால், இச்சாஸ்திரத்தைப் படித்த அறிவுள்ள பெண்கள் அறிவில்லாத நாட்டு மருத்துவச்சிகளை உபாதை புண்டாக்கும் காரியங்களைச் செய்ய இடங்கொடார்கள்.

தலை வெளிக்கு வந்த சிறிதுநேரத்தில் மற்றப்பாகங்கள் தானே வெளியாகும். அப்படி வரத் தாமதித்தால் அல்லது சிசுவின் முகம் கறுத்து இரத்தங் கட்டியிருந்தால் உடனே தாயின் வயிற்றின் மேல் ஒருத்தியைக் கருப்பையைக் கையாலழுத்திப் பிடித்துக் கொள்ளச் செய்து, கைவிரலைச் சிசுவின் அக்குளில் தூண்டுபோல் வளைத்துப் பிடித்து இழுத்தால் சிசு சுலபமாய் வெளிவரும். சிசுவைத் தீவிரமாய் இழுத்துவிட்டால் கருப்பை சீக்கிரத்தில் சுருங்காமல் இரத்தம் அதிகமாய் வெளிப்படும். குழந்தையின் சிரசு வெளியே வர வர நோய் அதிகப்படும். அப்போது ஸ்திரீ கட்டாயம் அழுவாள். பிரசவ வேதனையிலுண்டாகிற ஒவ்வொரு வலியும் வருத்தமும் மிக்க அவசியமானவைகளே. ஏனெனில், கர்ப்பாசயமும் தேகத்திலுள்ள தசை நரம்புகளும் குழந்தையை வெளியில் தள்ள முயல்வதனால்தான் அவைகள் உண்டாகின்றன. ஆகையால், ஸ்திரீயானவள் இக்காலத்தில் துயரப்படாமல் பொறுமையாகவும் தைரியமாகவு மிருக்கவேண்டும். பிரசவத்தின் இரண்டாம் பாகத்தின் கடைசியில் ஸ்திரீயின் இருதொடைகளுக்கும் நடுவிலுள்ள பாகங்களை மருத்துவச்சி தாங்கிக்கொள்வதனால் அதிக உபகாரஞ் செய்கிறாள். மருத்துவ ஸ்திரீ பக்கத்திலில்லாவிடில் திடீரென்று குழந்தை பிறந்து கீழே விழுந்துவிட்டால் குழந்தைக்கு அதிகமா யடிபட்டுப் பிராணச் சேதமானாலுமாகும். நோய் கண்டிருக்கும்போது கர்ப்பிணி கூடியமட்டுஞ் சுருண்டு படுத்திருந்தால் அதிக நன்மையுண்டு. லாகிரிப் பானங்களை அருந்தவே கூடாது. ஓர் சமயம் குழந்தையை வெளியாக்குவதற்காக வைத்தியர் இடுக்கியை (Forceps) உபயோகப்படுத்துவாரானால் அதைக் கண்டு ஸ்திரீ சற்றேனும் பயப்படக்கூடாது. இரண்டு கைகளையும் உள்ளே விடுவதற்குப் பதிலாக இடுக்கியை விட்டு எடுப்பது பிரசவ வேதனையை லகுப்படுத்தி நன்மையைக் கொடுக்கும். பிரசவ வேதனை கடினமாக விருந்தால் வைத்தியர் சிறிது க்ளோராபார்ம் (Chloroform) மயக்க வஸ்து கொடுப்பதுமுண்டு. அதில் மிகச் சிலாக்கியமுண்டு.

குழந்தை பிறந்தவுடன் வீரிட்டழுதால் அதன் சுவாசப் பை அகன்று குழந்தைக்கு மூச்சுவிட லகுவாயிருக்கும். பிறந்தவுடன் அசையாமல் கிடந்தால் அதன் கால்விரலில் சுண்டினால் அல்லது முகத்தில் குளிர்ந்த ஜலத்தைத் தெளித்தால் உடனே அழத் தொடங்கும். குழந்தை பிறந்தவுடனே அது மூச்சுவிட லகுவாயிருக்கும்படியாக மல்லாத்திக் கிடத்தவேண்டும். குழந்தையின் வாயிலிருந்து கோழையை எடுத்துக் குட்டையினால் துடைத்துவிட வேண்டியது. குழந்தை அழ ஆரம்பித்தவுடனே குழந்தையின் தொப்புளுக்கும் தாயின் கர்ப்பத்திலுள்ள மாயைக்கும் சம்பந்த

மா யிருக்கும் தொப்புட்கொடிக்கு மருத்துவச்சி ஒரு சிறு நூற் கயிற்றினால் குழந்தையின் நாபியினின்றும் இரண்டு அங்குலத் தூரத்தில் ஒரு கட்டும், அதினின்று இரண்டு அங்குலத் தூரத்தில் மற்றொரு கட்டுமாக இரண்டுகட்டு இறுக்கிக் கட்டவேண்டும். பிறகு முன்னமே தயாராய் வைத்திருக்கும் மழுங்கலான கத்தியினால் அவ்விரண்டு கட்டுகளுக்கு மிடையில் தொப்புள்கொடியைக் கத்தரித்துக் குழந்தையைத் தாயினின்றும் வேறுபடுத்திவிடவேண்டும். அப்படிக் கட்டுக் கட்டி அறுக்காவிட்டால் இரத்தம் வடிந்து குழந்தை இறந்துபோம்.

கட்டுக்கட்டாவிட்டாலும் குழந்தை ஜனித்த 20 நிமிஷத்தில் தொப்புட்கொடியின் நாடி ஓட்டம் நின்றுவிடும். அதன்பின் அறுத்துவிடலாம். சிசுவை வேறுபடுத்தின பிறகு தாயின் வயிற்றை பரிசோதித்து இரட்டைப்பிள்ளை யிருப்பதும் இல்லாததும் தெரிந்து கொள்ளவேண்டியது.

இனிமேல் குழந்தை தானாகவே மூச்சுவிட்டு ஜீவிக்கக் கூடியது. ஆதலால், அதை ஒரு கம்பளித் துணியினால் சுற்றி ஓரிடத்தில் படுக்க வைத்துவிட வேண்டியது. பிரசவித்த ஸ்திரீக்கு இப்போது சிறிது சூடான பாலாவது, தேயிலைத் தண்ணீராவது குடிக்கக் கொடுக்கலாம். ஆனால், அவள் இப்பொழுது அதிகமாய் அசையவாவது எழுந்து உட்கார்ந்துகொள்ளவாவது கூடாது. இனிக் கொஞ்ச நேரத்திற்குப் பிறகு சொற்பமாக ஒரு வலியுண்டாகி மாயை வெளியே வந்துவிடும். இப்படித் தானாகவே சீக்கிரம் வெளியே விழாவிட்டால் மருத்துவச்சி அடிவயிற்றை ஒரு கையால் அணைத்துக்கொண்டு கர்ப்பாசயத்தைப் பிடித்துக் கொண்டிருக்கவேண்டும். யோனியிலிருந்து தொங்கிக்கொண்டிருக்கும் கொடியை இடது கையால் மெதுவா யிழுத்தால் மாயையுடன் வெளிவரும். அதிக முரட்டுத்தனமா யிழுத்தால் கொடியறுந்து மாயை உள்ளே நின்றுபோய் அதிக உபத்திரவமுண்டாகப் பண்ணும். ஆகையால், கொடியில் நாடியடித்துக் கொண்டிருக்கும் வரையில் மாயை கருப்பாசயத்தில் ஒட்டிக்கொண்டிருக்கிறதென்றறிந்து அதை இழுக்கக்கூடாது. நாடி நின்றுபோய்க் கொடியில்விட்டுப் போய்விட்டால் மாயை கருப்பாசய சம்பந்தத்தை விட்டு விட்டதென்றறிந்து வலது கையின் இரண்டு விரலை உள்ளே விட்டுக் கொடியைப் பிடித்துக்கொண்டு இடது கையால் வெளியிலிருந்து மெதுவாய் இழுக்கவேண்டும். மாயை விழுந்தவுடன் அதை ஒரு சட்டியில் போட்டு வைத்திருந்து சிறிது நேரத்திற்குள் அதை எரித்துவிடவேண்டும். அல்லது புதைத்துவிடவேண்டும். அது சீக்கிரம் நாற்றமெடுத்துச் சரீர சௌக்கியத்துக்குக்

கெடுதி செய்யுமாதலால் அதைச் சூதகா கிரகத்தில் வெகுநேரம் வைத்திருக்கக்கூடாது.

இனிமேல் உடனே ஸ்திரீயின் வயிற்றைக் கட்டவேண்டியது. இந்தக் கட்டுப் போடுவதின் கருத்தென்னவெனில்:—கர்ப்பாசயத்தைச் சுருங்கச் செய்யவும் இரத்தம் பெருகாமலிருக்கவும் வயிறு கோர ரூபமாகாமலிருக்கவுமே. அதற்காகத் துணியை இரண்டு மூன்று மடிப்பாய் மடித்துக்கொண்டு, கையில் பிடித்துக்கொண்டிருக்கும் கர்ப்பாசயத்தின்மேலே மெத்தையைப்போலப் போட்டு அதன்மேல் குட்டையினால் இடுப்பைச் சுற்றிக் கட்டி வயிற்றின்மேல் துணி நன்றாய்க் கட்டவேண்டியது. நாட்டு மருத்துவச்சிகள் இடுப்புக் கத்தரித்து விழுந்துபோவதுபோல பலமாயிழுத்துக் கட்டுவார்கள். இவ்வளவு முரட்டுத்தனமாய்க் கட்டுவது அவசியமன்று. இரண்டு மூன்று சுற்றுப் போட்டுக் கட்டினால் போதும். பிரசவித்த ஸ்திரீயைப் படுக்க வைத்து ஆயாசப் பரிகாரஞ் செய்துகொள்ளும்படி விட்டுவிடவேண்டும். சிறிது கஞ்சியாவது காய்ச்சின பாலாவது சாப்பிடக் கொடுக்கவேண்டும். அவள் ஒருவருடனும் பேசக்கூடாது. எழுந்து உட்காரவாவது நடக்கவாவது எவ்வளவுங் கூடாது. அப்படிச் செய்தால் கர்ப்பத்திலிருந்து இரத்தம் அதிகமாய் விழுந்து மூர்ச்சையடைவாள். அவளுக்குக் குளிர்ந்து கூசினால் ஒரு கம்பளியைப் போர்த்தவேண்டும். அதிகப் பலவீனமாயிருந்தால் பரிமள நவச்சாரத் திராவகம் (Spiritus Ammonia Aromaticum) பதினைந்து துளி நீரில் கலந்து கொடுக்கவேண்டும். இரத்தம் விசேஷமாய்ப் போனால் எர்கட் திராவகம் (Extract Ergot liquid) முப்பது துளி கொஞ்சம் நீரில் கலந்து கொடுக்கவேண்டும். அடிவயிற்றில் நோய் அதிகமாயிருந்தால் அபினித் திராவகம (Liquor Opii Sedative) பத்துத் துளி நீரில் கலந்து கொடுக்கவேண்டும்.

குழந்தையை வெந்நீரில் கழுவிக் கம்பளி அல்லது துணி மெத்தையின்மேல் படுக்க வைக்க வேண்டியது. புத்திரனைப் பெற்றதாய் இவ்வளவு வருத்தத்துடன் தான் பெற்றெடுத்த குழந்தையைப் பார்த்தவுடன் தான் பட்டநுபவித்த கஷ்டங்களையெல்லாம் மறந்து மனமகிழ்ச்சியடைவாள்.

"நான் கர்ப்பத்தில் உற்பவித்ததுமுதல் உம்மால் ஆதரிக்கப்பட்டேன். என் தாயின் கர்ப்பத்திலிருந்து என்னை எடுத்தவர் நீரே; உம்மையே நான் எப்பொழுதும் துதிப்பேன்." சங் 71:6.

## பிரசவமானபின் உதிரப்பெருக்கில்லாமல் செய்யவேண்டிய முறை.

குழந்தை பிறந்தபின் மாயை வெளிவரும் வரைக்கும் அதிக ஜாக்கிரதையோடிருக்க வேண்டும். கஷ்டப் பிரசவம், இரட்டைப் பிள்ளைப் பிரசவம் முதலிய சில சமயங்களில் கருப்பாசயத்தில் பலமில்லாமற் போவதால் சிசு பிறந்தபின் இரத்தப் பிரவாகம் சாதாரணமாய் உண்டாகும். கருப்பாசயம் நன்றாய்ச் சுருங்காமற் போனாலும், நடுவில் மாத்திரம் சுருங்கினாலும், கருப்பையில் மாயை பலமாய் ஒட்டிக்கொண்டிருந்தாலும், அநேக குழந்தைகள் பெற்ற ஸ்திரீகளுக்கும், அதிக பலஹீனமானவர்களுக்கும், உதிரப் பெருக்காகும் சரீரத்துடையவர்களுக்கும், குழந்தை பிறந்தவுடனும் மாயை விழுவதற்கு முன்னும் இவ்வித இரத்தப் பிரவாகம் உண்டாகும். இது திடீரென்றுவது படிப்படியாவது உண்டாகி உதிரமானது வெள்ளம்போல் வெளிவந்து துணிகளையும் படுக்கைகளையும் நனைத்துக் கீழே இடமெல்லாம் பரவும். இந்தச் சமயம் அடிவயிற்றின்மேல் கை வைத்துப் பார்த்தால் கெட்டியாய் விருத்தாகாரமாயிருக்கவேண்டிய செண்டுகைக்கு அகப்படாமல் கருப்பாசயம் பெதுவாயும் தளர்ச்சியாயுமிருக்கும். இதை உடனே நிறுத்தாவிடில் நாடி விழுந்துபோம். ஸ்திரீ மூர்ச்சையடைந்து கைகளையுங் கால்களையும் அங்குமிங்குமபோட்டுப் படுக்கையில் புரளுவாள். உடம்பெல்லாம் ஜில்லென்று வியர்வையுண்டாகி மேல்மூச்செடுக்கும். இம்மாதிரியான இரத்தப்பிரவாகம் சம்பவிக்காமல் செய்யவேண்டிய விஷயங்களை இங்கு கூறுவோம்.

குழந்தை பிறந்தவுடன் கையை வயிற்றின்மேல் வைத்து அரைமணி நேரமாவது அழுக்கி அழுக்கிப் பிடிக்கவேண்டும். இப்படிச் செய்வதால் இரத்தப் பிரவாகம் அதிகமாய் உண்டாகாது. பிரசவித்தபின் பதினைந்து நிமிஷத்திற்கெல்லாம் நாடி ஒரு நிமிஷத்திற்கு நூறுதடவைக் கதிகமாய்ப் படபடவென்றடித்தல் இரத்தப்பிரவாகம் சம்பவிக்கு மென்கிற குறியாகும். ஆகையால் நாடி சரியான அளவுக்கு வருகிற வரைக்கும் வெகு ஜாக்கிரதையாய் வயிற்றை ஒரு கையினால் அமுக்கிப் பிசைந்து தேய்த்துக் கொண்டேயிருக்கவேண்டியது. மற்றொரு கையால் குளிர்ந்த ஜலத்தை அடிவயிற்றிலும் நிதப்பத்திலும் அறைந்தால் கருப்பை சுருங்கும். இப்படிச் செய்வதால் கர்ப்பத்தில் கட்டியிருக்கும் ரத்தம் வெளிக்கு வந்து விழுந்துபோம். அடிவயிற்றின்மேல் கையினால் தடவிப் பார்க்கும்பொழுது கருப்பாசயம் கைக்குத் தளர்ச்சியாய்த் தோன்றினால், உள்ளே கட்டிக்கொண்டிருக்கும் உதிரம் வெளிவந்து கருப்பாசயம் சுருங்கி இரத்தப்பிரவாகம்

நின்றுபோம். ஆனால், முரட்டுத்தனமாய் அமுக்குவதும் பிசைவதும் நன்றன்று. மாயை வெளியில் விழுந்தவுடன் எக்ஸ்ட்ரேக்ட் எர்கட் லிக்விடம் (Extract Ergotoe Liquidum) நாற்பது துளி அரைப்பலம் நீரில் விட்டுக் கொடுக்கவேண்டும். இதனால் கருப்பாசயம் நன்றாய்ச் சுருங்கி இரத்தக் கொடிகளெல்லாம் நன்றாய் இழுத்துக்கொள்ளும். இடுப்பில் சீக்கிரமாய்க் கட்டுப்போடக் கூடாது. அரைமணிநேரம் கையினால் அமுக்கியபின் வயிற்றிற்கும் இடுப்பிற்கும் துணியினால் இழுத்துக் கட்டுப்போடவேண்டியது. கருப்பாசயத்தில் இரத்தம் கட்டிக்கொண்டிருந்தால் உள்ளே கைவிட்டு எடுத்தெறியவேண்டும். இப்படிச் செய்வதால் கருப்பாசயம் சுருங்கி இரத்தம் விழுதல் நிற்கும். தலையணையை எடுத்துவிட்டு நன்றாய் விசிறவேண்டும். அறையின் ஜன்னல்களையெல்லாந் திறந்து சுத்தமான குளிர்ந்த காற்று வீசும்படி செய்யவேண்டும்.

ஆலம் விழுது, ஆலங் கொழுந்து, ஆலம் பூ, ஆலம் வேர், ஆவரை வேர் பட்டை, இவைகளைப் பசுவின் பாலிட்டு இடித்த ரசத்தில் அரைப்படி காலையில்மட்டும் சாப்பிட உதிரப் பெருக்கு நின்றுவிடும்.

பூக்காவியையும், உலர்ந்த மாதளம் பூவையும் சமமாகச் சேர்த்து சூரணஞ்செய்து ஒரு வராகனிடை இருவேளை வெண்ணெயில் கலந்து சாப்பிட்டுவரப் பெரும்பாடு முதலிய இரத்தப்பெருக்கு நிற்கும்.

## பிரசவித்த ஸ்திரீயைப் பாதுகாக்கும்முறை.

### TREATMENT AFTER DELIVERY.

கர்ப்பத்திலும் பிரசவத்திலும் உண்டாகக்கூடிய சகலவித ஆபத்துகளுக்கும தப்பித்துக் கொண்டபோதிலும், பிரசவித்த ஸ்திரீ இன்னும ஒரு மாதம் வரைக்கும் வெகு ஜாக்கிரதையுடன் தன் சரீர சௌக்கியததைக் காப்பாற்றிக்கொண்டு பிரசவித்தபின் உண்டாகும் அநேக அபாயங்களுக்கும் ஜாக்கிரதையாய்த் தப்பித்துக் கொள்ளவேண்டும்.

பிரசவித்த ஸ்திரீக்கு ஒருமணி நேரத்திற்குப்பின் ஆயாசந் தீர்ந்தவுடன் ஜனனேந்திரியத்தில் வைத்திருந்த துணிகளை எடுத்து விட்டுப் புதிதாய் உலர்ந்த வேறுதுணியை அதன்மேல் போடவேண்டும். மேலும் அவள் அடியில் கிடக்கும் துணிகளையகற்றி விட்டு உலர்ந்த திப்பட்டியை விரிக்கவேண்டும், பின்பு அவளுக்கு

நன்றாய் உலர்த்தி வைத்திருக்கிற வேறு மெல்லிய வஸ்திரத்தை உடுத்துவிக்க வேண்டும். மருத்துவச்சி இவைகளைச் செய்யும் போது பிரசவித்த ஸ்திரீ எழுந்து யிருந்தால் இரத்தப்பெருக்கு, கருப்பை வெளியில் பிதுங்குதல், சடுதி மாரணம் முதலிய மிக்க கேடுகள் சம்பவிக்குமாதலால் படுக்கையிலேயே இருக்கவேண்டும். ஒரு மருத்துவச்சியாவது புத்திசாலியான அயல்வீட்டு நண்பர்களாவது பிரசவித்த ஸ்திரீயின் பக்கத்திலிருக்கவேண்டும். ஏனெனில், பிரசவித்தவுடன் ஸ்திரீ பலவீனமடைவாள். ஆனால், சரீர பலமுள்ள ஸ்திரீகளுக்குப் பலவீனந் தோன்றாதிருக்கும். செல்லப் பிள்ளைகளாய் வளர்ந்த ஸ்திரீகளும் அதிகப் பலவீனத்தால் ஆயாசமடைவார்கள். பிரசவித்தவுடன் அநேக ஸ்திரீகள் நடுங்குவார்கள், உடனே தூங்குவார்கள். இவ்விதமான ஆயாசம் சிலருக்குப் பிரசவித்தபின் வெகுகாலமிருக்குமாதலால் அவர்களை வெகு ஜாக்கிரதையாய்க் காப்பாற்றவேண்டும். பிரசவித்தவுடனே நாடி குறைந்து நாற்பது ஐம்பது தடவை துடிக்கும். இவ்விதம் நாடி தாழ்வது நற்குணமே யல்லாது துற்குணமன்று. நாடி எண்பதுக்குமேல் அதிகப்படுமாயின் துற்குணத்தைச் சேர்ந்தது. எப்போது நாடி நிமிஷத்திற்கு நூற்றுக்கு மேற்பட்டு அதிவேகமாய் அடித்துக்கொள்ளுகிறதோ அது சந்தேகத்துக்கிடம். பிரசவ வேதனையுண்டானது முதல் பிரசவித்த சிறிதுகாலம் வரையில் உஷ்ண மதிகரித்துக்கொண்டு வரும். பின்பு உடனே உஷ்ணங் குறையும். பிரசவித்த இருபத்துநாலு மணி நேரத்திற்குப் பின் சில தினங்கள்வரை உஷ்ணம் அதிகமாகவே யிருக்கும். நாற்பத்தெட்டு மணி நேரத்திற்குப்பின் மார்பில் பால் சுரப்பதனால் சாதாரணமான உஷ்ணத்தைவிட ஒன்று அல்லது இரண்டு டிகிரி ஜாஸ்தியா யிருக்கும். இதற்குப் பால் சுரம் என்று பெயர். பால் அதிகமாய்ச் சுரந்தவுடன் இச்சுரங் குறையும். மலச்சிக்கு, மனோவியாகுலம், பத்தியக்குறைவு முதலிய காரணங்களால்கூட உஷ்ணம் அதிகமாகும். உஷ்ணம் நூறு டிகிரிக்கு அதிகப்பட்டு நாடி பதிவேகமாய்த் துடித்தால் அது துர்க்குறியாகும்.

படுக்கைக்குப் பிரம்பு அல்லது நார்க்கட்டில் உத்தமம். சிறு பாயாவது கம்பளியாவது விரிக்கலாம். கட்டிலின்மேல் தேங்காய நார் மெத்தைபோட்டு அதன்மேல் பாதிவரைக்கும் மெழுகுத் துணி போடுவதால் அடியிலிருக்கும் மெத்தை நனையாது. மெழுகுத் துணிமேல கம்பளியாவது துணியாவது விரிக்கலாம். கட்டில் ஒரு முழ உயரமிருந்தால் போதும். சூதிகா கிரகம் எவ்வளவு சுத்தமாயிருக்கிறதோ அவ்வளவு சௌக்கியமுண்டு. ஆதலால் அறை விசாலமாயும் காற்று செம்மையாய்ப் பரவத்தக்கதாயும் தரை ஈரம் நமிர்ப்பு இல்லாததாயும் இருக்கவேண்டும். அதில்

அவசியமான வஸ்துக்கள் தவிர மற்ற எல்லாசாமான்களையும் வேறு அறையில் சேர்க்கவேண்டும். அந்த வீட்டில் நெருப்பு முதலானவை போட்டு சமயல் செய்யக்கூடாது.

ஒரு சிறு உஷ்ணமறியுங் கருவியை (Thermometer) சுவரில் தொங்கவைத்திருந்தால் அறையில் எவ்வளவு உஷ்ணமிருக்குமென்பதை லகுவில் அறியக்கூடும். சூதகா கிரகத்தில் அறுபத்தைந்து முதல் எழுபது டிகிரிவரை உஷ்ணமிருக்கலாம். ஆதலால், கனலைப் போட்டெரித்து அதிக உஷ்ணமாயாவது அதில்லாமல் அதிக குளிர்ச்சியாகவாவது வைத்திருக்கக்கூடாது. பிரசவித்த ஸ்திரீக்கு உபயோகிக்கும் கைக்குட்டைகளில் உட்வுல் டயாபர்கள் (Wood Wool Diapers) மாதாந்தர உபயோகத் துண்டுகள் (Sanitary Towels) முதலியவை எந்த இங்கிலீஷ் வைத்தியசாலையிலுங் கிடைக்கும். இவைகளை உபயோகப்படுத்துவது மகா சிலாக்கியம். ஏனெனில், இவைகள் மையூறுங் காகிதம் மையை உறிஞ்சுவதுபோல் ஸ்திரீயினுடைய விசர்ஜனங்களைத் தானாகவே இழுத்துக்கொள்ளும். அவைகளை அநேகநேரம் அறையில் வைத்துக்கொண்டிருந்தால் நாற்றமெடுத்துவிடும். ஆகையால், அவற்றை அடிக்கடி அலம்பி விடுவதோடு மாற்றிக்கொண்டேயிருக்கவும் வேண்டும். மாதாந்தர ருது காலங்களிலும் உபயோகப்படுத்துவதற்கு இவை சிலாக்கியமானவை.

பிரசவித்தவுடனே கருப்பை உறுதியாய் மூடிக்கொண்டு அடிவயிற்றில் பந்துபோல் கைக்குக் காணப்படும். பந்துபோற் சுருங்காமல் தளர்ந்திருந்தால் நல்லதல்ல. பிரசவித்தவுடனே கருப்பையானது இருபது பலமும் ஒரு வாரத்துக்குப்பின் எட்டுப்பலமும் மூன்றாவது வாரத்திற்குப்பின் நாலுபலமும் நிறையுள்ளதாயிருக்கும். இரண்டு மாதத்திற்குப்பின் இயற்கையாயுள்ள நிறைக்கு வரும். பிரசவித்தது முதல் மூன்று வாரங்கள் வரைக்கும் அழுக்குத் திரவங் கருப்பையிலிருந்து வரும். முதல்நாளைக்கு இத்திரவம் இரத்த நிறமாயும் வரவரச் சிவப்பு நிறமாறி வெண்சிவப்பு நிறமாகும். ஒரு வாரத்துக்குப்பின் பசுமை நிறமாகவும் மாறி மூன்றும் வாரக் கடைசிவரை ஓரே நிறமாயிருக்கும். இது சிலருக்கு அதிகமாயும் சிலருக்குக் கொஞ்சமாயுங் காணும். இது நாற்றமடிக்கத் தொடங்கினால் கருப்பையில் இரத்தம் கட்டிக்கொண்டு அழுகியிருக்கிறதென்றறிந்து அதைப் போக்கடிப்பதற்குக் காண்டிஸ் லோஷன், (Condy's Lotion) பீச்சாங்குழலால் விட்டு மர்மஸ்தானத்தைக் கழுவிச் சுத்தி செய்யவேண்டும்.

பிரசவித்த இரண்டு மூன்று நாளானபிறகு ஸ்திரீ மண்டியிட்டுக்கொண்டு நீர்விடலாம். இப்படி மண்டியிடுவதனால் கட்டி

நிற்கும் திரவம் இலகுவாய்க் கழிந்துவிடும். பிரசவித்த மூன்று நாளைக்குப் பிறகு ஸ்திரீ அடிக்கடி படுக்கையில் உட்கார்ந்திருப்பதாலும் இத்திரவங்கள் லேசாய் வெளியாகும். அழுக்குச் சரியாக வெளிப்படாவிட்டால் அது கர்ப்பாசயத்தில் தங்கி அழுகிப்போய் இரத்தம் அசுத்தப்பட்டு விஷமித்துச் சுரத்தையுண்டாக்கும். சுரமிருந்தால் வைத்தியரை அழைக்கவேண்டியது. அழுக்குப்படாவிட்டால் குங்குமப்பூவை இரண்டு அல்லது மூன்றுமுறைகொடுக்கவும். நாட்டுப்புறங்களில் இடிமருந்து கொடுக்கலாம். பெருங்காயம், வாலந்திரம்பாளம், மிளகு, சுக்கு வகைக்கு இரண்டுவராகனிடை சேர்த்துச்செய்த கஷாயத்தில் வேளைக்கு ஆழாக்குக்கொடுத்து வர உதிரச்சிக்கல் நிவர்த்தியாகும்.

சூதகா கிரகத்திலுள்ள அசுத்தங்களெல்லாம் நீங்கும்படி போதுமான வெளிச்சமும் காற்றும் வர இடங் கொடுக்கவேண்டும். அநேகர் இருட்டறைக்குள்ளேயே பிரசவித்த ஸ்திரீயை வைப்பது அநேக கேட்டுக்குக் காரணமாகிறபடியால் இதை இவ்விடத்தில் விசேஷமாய்க் குறிப்பித்துக் காட்டுகிறோம். குழந்தை பிறந்த ஒருவாரத்துக்கு இனஜன பந்துக்கள், குழந்தை பிறந்த இடத்துக்கு வர இடங் கொடுக்கப்படாது.

அவர்கள் நல்ல எண்ணத்தோடு வந்து பார்க்கவந்தபொழுதிலும் அவர்களால் விளையும் கெடுதி அனந்தம். இக்காலத்திலுண்டாகும் வியாதிகளுக்கெல்லாம் அநேகமாய் அவர்களே காரணம். ஒரு அற்ப வார்த்தையால் அவள் மனமெல்லாம் குழம்பக்கூடியது. ஒரு அற்பக் காரணத்தினால் அவள் மனமெல்லாம் பூரித்துச் சந்தோஷமான வார்த்தைகளைப் பேசி சம்பாஷித்துக்கொண்டிருக்க ஆசைப்படுவாள். அப்படிச் செய்வதனால் தலைவலியுண்டாகி அநேக கெடுதிகள் நேரிடும். ஆகையால் ஒருவாரத்துக்குப் பிள்ளை பெற்றவள் பார்க்கவந்த சிநேகிதரிடத்தில் யாதொரு வார்த்தையும் பேசக்கூடாது; எழுந்து நடமாடவுங்கூடாது; யாதொரு வேலையுஞ் செய்யவுங்கூடாது. இக்கட்டளைகளை மீறினால் மரணத்துக்கேதுவான நோய்களுண்டாகும். தப்பினாலும், அநேக நாட்களாக அவஸ்தைப்படவேண்டியதிருக்கும்.

## பிரசவித்தபின் உண்டாகும் சுண்டுவலி.

சில ஸ்திரீகளுக்குப் பிரசவித்தபின் வலியுண்டானால் அதற்காகப் பயப்படவேண்டியதில்லை. பிரசவித்தபின் கர்ப்பாசயம் பந்துபோல இறுக்கும்போது இந்தச் சுண்டுவலி காணும். சிலருக்கு இது தோன்றமாட்டாது, வேறு சிலருக்கு அதிகமாய்க்

காணும். முதல் பிரசவத்தில் இந்நோய் வழக்கமாய்க் காணுவ தில்லை. அநேகம் குழந்தைகளைப் பெற்றவர்களுக்குத்தான் இது பலவீனத்தினால் வழக்கமாய் உண்டாகும். கர்ப்பாசயத்திலுள்ள உதிரக்கட்டிகளெல்லாம், பூரணமாக வெளிப்பட்டு கர்ப்பாசயம் சீக்கிரஞ் சென்றுபோல சிறுத்துவிட்டால் இவ்வலி இராது. இக் கட்டிகள் வெளிப்படுவதற்காகத்தான் கர்ப்பாசயம் உபாதிக்கப் பட்டுச் சுண்டுவலி காண்கிறது.

குழந்தை பிறந்த இரண்டுமணி நேரத்திற்குள்ளாகத் தாய் பால் கொடுத்தால் கர்ப்பாசயம் நன்றாகச் சிறுத்துவிடுவதுமல்லா மல், சுண்டுவலியு முண்டாகவே மாட்டாது. இவ்வலி உண்டான போதிலும் ஸ்திரீ பொறுமையுடன் இருக்கவேண்டும். ஏனெனில், சரீரத்திற்கு உபாதை யுண்டாக்குகிற இரத்தக்கட்டிகளும் மற்ற வஸ்துக்களும் கர்ப்பாசயத்தினின்றும் வெளியாவதற்காகத் தான் இவ்வலி உண்டாகிறது. இவ்வஸ்துக்கள் வெளியாகாவிட்டால் சுரமுண்டாகும். சிலருக்கு மூன்று நாட்களாகச் சுண்டுவலி யிருக் கும். பிரசவித்தபின் சுரம வாராதபடி தடுக்கவேண்டியது முக்கிய மான காரியம். பிரசவித்தவுடனே செயயவேண்டிய வேலைகளை யெல்லாஞ் செய்துவிட்டு ஸ்திரீ தூங்கும்படி செய்யவேண்டியது. சுண்டுவலி அதிகமா யிருந்தால் மேலது ஒற்றடத்திற் சொல்லிய முறையின்படி (6-ம் புஸ்தகம்) அதிகச் சூடான ஒற்றடங் கொடுப்பது நல்லது. சூயிருக்ககூடாதாகையால் வெந்நீரை விடச் சுடு செங்கல் ஒற்றடம் நல்லது. சூடான வெந்நீரில் ஆசன ஸ்நானம (6-ம் புஸ்தகம்) மகா உத்தமம். இதற்கும் வலி நீங்கா விட்டால், கஷ்டப் பிரசவமானபின் அபின் திராவகம் (Battley's Solution of Opium) பதினைந்து அல்லது இருபது துளிகள் தண்ணீரிற் கலந்து கொடுக்கவேண்டும். பிரசவித்த சில மணிக் குப் பின் வைத்தியர் கை பார்க்கவேண்டியது. மேலும் இரத்தப் பிரவாகம் இருக்கிறதா? நீர் இறங்கினதா? என்னும் விஷயங்க ளையும் அடிக்கடி விசாரிக்கவேண்டும். இவ்விதம் பதினொருநாள் வரை அதிக ஜாக்ரதையாய்ப் பார்க்கவேண்டும். நாடி துரிதமா யடித்தால் உடனே உஷ்ணமறியும் கருவியால், (Thermometer) சுரம் இருக்கிறதா இல்லையாவென்று பார்க்கவேண்டியது. சில சமயங்களில் சிலநாளவரை சிறுநீர் தாராளமாய் இறங்குகிறதில்லை, சுடுதண்ணீரில் கடற்காளானை (Sponge) நனைத்து அடிவயிற்றின் மேல ஒற்றடம்போட நீர் இறங்கும். அதற்கும் நீர் இறங்காவிடில் வயிறு உப்பி அதிக கஷ்டமாகும். அப்போது வைத்தியர் சிலாக் கைகொண்டு (Catheter) மூத்திரப்பையிலிருந்து சிறுநீரை வெளியில் இழுத்துவிடவேண்டும். இதில் சிரமம் ஒன்றுமில்லை. ஆதலால், அறியாமையா லுண்டாகும வெட்கத்தினால இப்படிச் செய்வதற்கு ஆக்ஷேபனை சொல்லக்கூடாது.

## பிரசவித்தவளின் ஆகாரம் முதலியவை

பிரசவித்த இரண்டு மூன்று நாள்வரையில் கரைத்த கஞ்சி, சவ்வரிசிக்கஞ்சி, பால், தேத்தண்ணீர், வாட்டினரொட்டி முதலியவைகள் கொடுக்கவேண்டும். மூன்றுநாட் கழிந்தபிறகு குழைந்த சாதத்தோடு மிளகு ரசம் அல்லது மாமிசரசம் சேர்த்துக் கொடுக்கலாம். இதன்பின் படிப்படியாய் வழக்கமான ஆகாரங் கொடுக்க வேண்டும்.

மற்றெந்தக் காலத்திலும்விட இக்காலத்தில் அதிக சுத்தம் அவசியம். ஏனெனில், பிரசவித்த ஸ்திரீக்கு வெளியாகும் துவாலையைக் கூடித் திரளும்படிவிட்டால் அது நாறி அழற்சி கொடுக்கக்கூடும். படுக்கையின் வஸ்திரங்களை அடிக்கடி மாற்றி ஈரம்படாமல் சுத்தமாய் வைக்கவேண்டும். ஏனெனில், குளிர்ச்சிபட்டால் ஒருவேளை வெளியாகும் அழுக்குக் கட்டிக்கொள்ளும். பிரசவித்த ஸ்திரீக்குப் போர்வையிட்டு சரீரம் உஷ்ணமாயிருக்கும்படி செய்ய வேண்டும். அதனால், துணையாள் ஒருத்தி பக்கத்திலிருந்து, பிரசவித்த ஸ்திரீயின் சுத்தத்தைப் பற்றி அதிகக் கவலையாயிருக்க வேண்டும். ஒவ்வொருநாளும் வேப்பம்பட்டை அவித்த தண்ணீரினால் மர்ம ஸ்தானத்தை இரண்டு நேரமுங் கழுவி வரவேண்டும். மர்ம ஸ்தானத்தின் வெளிப்பாகம் புண்ணாயிருந்தால் ஒவ்வொரு நாளும் அநேகந் தடவை வெந்நீரினால் கழுவவேண்டும். உட்பாகம் புண்ணாயிருந்தால் காலையிலும், மாலையிலும் வெந்நீரைப் பீச்சாங்குழலால் உள்ளே செலுத்திச் சுத்திசெய்து வரலாம்.

ஒவ்வொருநாளும் வயிற்றிலே அதிக நோயிருக்கிறதோவென்றும், நித்திரை, மலசலசுத்தி, துவாலைப்படுதல் எப்படியென்றும் விசாரித்தறியவேண்டும்.

பிரசவித்த இரண்டுநாள் வரை மலசுத்தியாகாதிருந்தால், மூன்றாம் நாள் காலையில் பிரசவித்த ஸ்திரீயின் ஸ்திதிக்குத் தகுந்தபடி ஒரு மேசைக்கரண்டி ஆமணக்கெண்ணெயைக் காப்பியில் கலந்து கொடுக்கலாம். ஸ்திரீக்கு ஆமணக்கெண்ணெயின்மேல் வெறுப்பாயிருந்தால் ஒரு தேயிலைக்கரண்டி கால்சயின்ட் மக்னிசியாவை (Calcined Magnesia) சுடுதண்ணீரில் கலந்து கொடுக்கலாம். பீச்சாங்குழலால் வெந்நீரை ஆசனவாயினுட் செலுத்திக் குடலைச் சுத்தி செய்யலாம். ஆனால் வேறெவ்வித பேதி மாத்திரைகளையும் உபயோகிக்கக்கூடாது.

பிள்ளை பெற்றபின் ஸ்திரீயின் தேகத்திலிருந்து, துவாலை, பால் என்னும் இரண்டு முக்கியமான நீர் வெளியாகும். இத்

துவாலையானது கருப்பை சுருங்கிச் சுருங்கி வருவதனாலே பெருத்திருந்த இரத்தக்குழாய்கள் நெருக்குண்டு அதிலிருந்து சுரக்கும் இரத்தமேயாம். இது சிலநாளாய்ச் செக்கிறமாயிருந்து பின்பு பசுமையாய் வெளிறிப் படிப்படியாய்க் குறைந்துபோம். மூன்று வாரத்திற்குள் முற்றிலும் நின்றுவிடும்.

பத்துப் பதினைந்து நாட்சென்றும் துவாலை அதிகப்பட்டு ஆளைப் பலவீனப்படுத்துமாகில் பிராந்தி குடிக்கக் கொடுக்கலாம்.

அல்லது டைலூட்டெட் சல்பூரிக் ஆசிட் (Diluted Sulphuric Acid) பத்துத்துளி கலாம்பாக்கஷாயம் (Infusion of Calumba) ஒரு அவுன்சிற் கலந்து ஒருநாளைக்கு இரண்டு தடவையாகச் சில நாட்கள் குடித்துவரத் துவாலை நின்றுபோம்.

ஆலம் விழுது, ஆலங் கொழுந்து, ஆலம்பூ, ஆலம்வேர், ஆவரை வேர், பட்டை இவைகளைப் பசுவின்பாலில் விட்டிடித்து அந்த ரசத்தில் அரைப்படி காலையில் மட்டுஞ் சாப்பிடத் துவாலை நின்றுவிடும்.

## சிசு கருப்பைக்குள் இறத்தல்.

குறி. சிசுவானது கர்ப்பத்தில் இறந்துபோனால் வயிறு குளிர்ந்துவிடும். பாரமான சுமை கீழே இறங்கினதுபோல் தோன்றும். வயிறு தளர்ந்து பருமன் குறையும். பிள்ளையின் அசைவு தோன்றாது. வயிற்றில் புரட்டலும் வேதனையும் உண்டாகும். வாயில் அரோசிகமுண்டாகும். மூச்சுவிடுங் காற்று நாற்றமெடுக்கும். மார்பு தளர்ச்சி கொடுக்கும். பசி குறையும். கண் குழி விழும். கண்ணைச் சுற்றி கருப்வரி யிருக்கும். பிரசவ நோய் ஆரம்பித்தால் மர்ம ஸ்தானத்திலிருந்து அதிக நாற்றமான தடித்த நீர் வடியும்.

சிகிச்சை. 1. இரண்டு வராகனிடைக் குங்குமப்பூவை தண்ணீர் விட்டரைத்து உருண்டை செய்து கொடுக்கவும்.

2. இரண்டு களஞ்சி முடக்கொற்றான் வேரை அல்லது கையாந்தகரை வேரைத் தண்ணீரில் அவித்து ஒரு முறை கொடுக்கவும்.

3. இரண்டு மருக்கைப் பிஞ்சியையும் உள்ளி இரண்டு கழஞ்சியையும தண்ணீரில் அவித்து ஒரு கிரெய்ன் அபினி உரைத்துக் கொடுக்கவும்.

4. லிக்யூட் எக்ஸ்ட்ராக்ட் ஆவ் எர்காட் (Liquid Extract of Ergot) இரண்டு கிராமை ஒரு சேரங்கைத் தண்ணீரில் கலந்து கொடுக்கவும்.

5. அரைப்பலம் சங்கம் வேரை அதனுடன் ஒரு ரூபாயெடை நாயுருவி வேரை வெந்நீரில் அரைத்துக் கலக்கிக் கொடுக்க பிரித்த பிண்டம் வெளியே வந்துவிடும்.

இந்த மருந்துகளில் எதையேனுஞ் சாப்பிட்டபின் பிரசவம் சாதாரணமாய் நடக்காமல் கஷ்டப் பிரசவமென்று தோன்றினால் குறட்டினால் (Forceps) இழுத்தால் வருமோ வாராதோவென்று நிதானித்துக்கொள்ள வேண்டியது. அதற்கும் வாராதது போல் தோன்றினால் தலையில் துவாரஞ்செய்து கெட்டிபோன்ற ஆயுதத்தினால் (Cephalotribe) தலையைக் கெட்டியாய் அழுத்தி எலும்புகளை நசுக்கிப் பிண்டத்தை வெளிக்குக் கொண்டுவருவது ஆங்கில முறை.

## நஞ்சு தங்குதல்.

நஞ்சு விழாமற் போவதற்கு மூன்று காரணங்கள் உண்டு, அவையாவன:—

1. கருப்பை பிள்ளையை உதைத்துத் தள்ளினதனால் பலவீனமடைந்து நஞ்சைப் பிரித்துத் தள்ளச் சக்தியற்றுச் சுருங்காமல் போதல்.

2. கருப்பை கிரமந் தப்பிச் சுருங்குதல்.

3. வியாதியால் நஞ்சு கருப்பையோடு ஒட்டிக்கொள்ளுதல்.

சாதாரணமாய்ச் சிசு பிறந்த அரைமணி நேரத்திற்குப் பின் நஞ்சு வெளியில் விழுந்துவிடவேண்டும். ஒருமணிக்குமேலே நஞ்சு கருப்பையில் நின்றுவிட்டால் தகுந்தசிகிச்சை செய்யவேண்டியது. இல்லாவிடில் இரத்தப் பிரவாகம் அதிகமாகி ஸ்திரீக்கு அபாயமுண்டாகும். அடிவயிற்றின்மேல் கையை வைத்துப் பார்த்தால் கருப்பை பந்துபோல் உருண்டையாய்த் தோன்றாமல் தளர்ந்து பெரிதாய் வயிற்றின் பக்க முழுதுமிருக்கிறதாகத் தோன்றும்.

இச்சமயம் நாபிக்கொடியை இழுத்தால் நஞ்சு வெளிவந்த போதிலும் கருப்பை சுருங்காமல் இரத்தப் பெருக்குண்டாகும். மேலும், கருப்பை உட்புறம் வெளிப்புறமாகிவிடும். இச்சமயம்

ஸ்திரீ இரத்தப்பிரவாகத்தால் சோர்வடைந்திருந்தால் கருப்பையில் கையைவிட்டு நஞ்சை எடுக்கலாகாது. கொஞ்சநேரம் நிதானித்து ஸ்திரீக்கு ஆயாசந் தீர்ந்தபிறகு வயிற்றைக் கையாலமர்த்தித் தேய்த்து அழுக்கிப் பிடித்துக் கருப்பையைச் சுருங்கும்படி செய்வதே முறையாகும். குளிர்ந்த ஜலத்தினால் வயிற்றின் மேற்புறத்தை நனைப்பதனாலும் இது சித்தியாகும். கருப்பைக்குள் கையை விடுவது தாய்க்கு அபாயமுண்டாக்கத்தக்கதா யிருந்தபோதிலும், வேறுவகையில் நஞ்சு விழாவிடில் அவ்விதஞ் செய்யவேண்டிய தவசியமே. இதற்கு நஞ்சுக்கொடியை இடதுகையால் பிடித்துக் கொண்டு வலது கைவிரல்களைக் கூச்சாய்க் குவித்துக் கொடிவழியாய் மர்ம ஸ்தானத்திற்குள் செலுத்திக் கருப்பைக்குள் கொண்டுபோய்க் கையைத்தொடு நஞ்சை அணைந்திருக்கிற இடத்தைத் தடவித் தெரிந்து கொண்டு கருப்பையினுட் புறத்தோடு ஒட்டியிருக்கும் நஞ்சின் பாகங்கள் திரண்டு மத்தியில் வரும்படி வலித்து இழுக்கவேண்டும். பின்பு அதை விரல்களால் பெயர்த்துச்சுருட்டி நஞ்சு முழுவதையும் மெதுவாய் வெளிக்குக் கொண்டு வரவேண்டும். காயப்படாமலும் முட்டுத்தனமில்லாமலும் நஞ்சு முழுவதையும் அப்புறப்படுத்துவதே வைத்தியனது சாமர்த்தியம்.

ஏதாவது கொஞ்சம் கருப்பையில் தங்கினால் அது அழுகிக் கருப்பையைப் புண்ணாக்கிவிடும். மேலும், அழுகின நஞ்சின் சாரம் சரீரத்திலூறி இரத்தங்கெட்டு அதனால் ஜுரம், அஜீரணம், கட்டிகள், வறட்சி முதலியவை யுண்டாகி அதிகப் பலவீனமுண்டாக்கும். நஞ்சை வெளியே எடுத்தவுடனே அடி வயிற்றைத் தேய்த்துப் பிறகு வயிற்றைத் துணியால் இழுத்துக் கட்டிவிடவேண்டும். கை உள்ளே போனதும் கருப்பாசயத்துக்கு மூடிக் கொள்ளும் பலமுண்டாகும். சில சமயம் மருத்துவச்சி வெளியில் தொங்கிக்கொண்டிருக்கும் தொப்புள் கொடியைக் கெட்டியாய்ப்பிடித்து இழுப்பதனாலும், அல்லது எர்காட் (Ergot) கொடுப்பதனாலுங்கூட கருப்பாசயம் நடுவில் மூடிக்கொள்வதனால் மாயை வெளிவராது.

இதற்கு அபின் திராவகம் (Laudanum) இருபது துளியை ஒரு சேரங்கைத் தண்ணீரில் கலந்து ஒரு முறை கொடுக்க அரைமணி நேரத்தில் சுருங்கிய பாகம் விரியும். அப்பொழுது அதன் வழியாய்க் கையைச் செலுத்தி நஞ்சை நீக்கிவிடலாம். நஞ்சின் பாகம் தங்கிக்கொண்டால் அடிக்கடி காண்டிஸ் லோஷனால (Condy's Lotion) சுத்தி செய்யவேண்டும். அடிவயிற்றின்மேல் ஆளிவிரை மாவு போல்டிஸ் வைத்துக் கட்டவேண்டியது.

## நஞ்சு விழ உபயோகிக்கும் மருந்துகள்.

1. கொடிக்கள்ளியை வாட்டி ஒரு சேரங்கைச்சாற்றில் பத்து கிரெய்ன் வெடியுப்பு சேர்த்துக் கொடுக்கவும்.

2. வேப்பங் கொழுந்து, முருக்கங் கொழுந்து, கருவேப்பிலைக் கொழுந்து வகைக்கு ஒரு பிடி, கடுக்காய் ஒரு கழஞ்சி கொஞ்சம் தண்ணீரில் அவித்து ஒருமுறை கொடுக்கவும்.

3. லிக்யூட் எக்ஸ்ட்ராட் ஆப் எர்காட் (Liquid Extract of Ergot) ஒரு கிராமை ஒரு அவுன்ஸ் தண்ணீரில் கலந்து ஒரு முறை கொடுக்கவும்.

### நீடித்த பிரசவம்.

காரணம். பலவீனம், அதிகப் பாலியம், விருத்தாப்பியம், மனோவியாகூலம், அதிக உஷ்ணம், அடிக்கடி கர்ப்பந்தரித்தல், நீர்க்கட்டு, இருபல், பனிநீர் அதிகப்பட்டிருத்தல், பனிக்குட ஜவ்வு உறுதியாயிருத்தல், பனிக்குடம் ஏற்படாமல் போதல், பக்குவ காலத்திற்கு முன் பனிக்குடம் வெளிப்பட்டுவிடுதல், கர்ப்பாசயம் இடம் மாறுதல், கிரமமாய் நோயுண்டாகாமல் போகுதல், குடி, பயம், முதலிய காரணங்களால் இப்பு நோய் நேரப்பட்டிருந்து பிறகு சிசு ஜெனிக்கும்.

அவசரப்படாமல் கொஞ்சம் நிதானித்துக் காரணத்தை யறிந்து நிவாரணஞ் செய்யச் சாலமுறை கிரமந்தில் வந்துவிடும். கொஞ்ச நேரம் வேதனையைச் சகித்துக்கொள்ளும்படி ஸ்திரீயின் மனதைத் தேற்றி உற்சாகப்படுத்திக் கூடமாகவே விளையாட்டு விஷயத்திற் காலங்கழிக்கச் செய்யவேண்டியது. மலபந்தமிருந்தால் பீச்சாங் குழல் பிரயோகத்தால் மலசுத்தி செய்யலாம்.

கருப்பையின் வாய் விரியாமலிருந்தால் ஒரு மெல்லிய இறகை அல்லது கையை வாயிலிட்டுக் குமட்டலுண்டாகச் செய்ய வேண்டியது. பனிநீர் மிகுந்திருந்தால் அதைச் செவ்வையாய்க் கண்டறிந்து நிச்சயமான பிறகு நகத்தால் கிறி நீர்க்குடத்தை உடைக்கவேண்டியது.

கருப்பாசயம் ஒரு பக்கமே ஒதுங்கியிருந்தால் மற்றொரு பக்கமாய் ஸ்திரீ படுக்கவேண்டியது. முன் பக்கம் சாய்ந்திருந்தால் மல்லாந்து படுக்கவேண்டியது.

1. அதிகப் பலவீனத்தால் நோய் பலமாய் வராவிட்டால் எர்காட் எக்ஸ்ட்ராட் (Ergot Extract) ஒரு திராமை ஒருசோற் கைத் தண்ணீரில் கலந்து கொடுக்கவேண்டும். நோயுண்டாயிருக் கும்போது இம்மருந்தைக் கொடுக்கக்கூடாது.

மேலும் கருப்பையின் வாய் நன்றாய் மலராதிருந்தால் இந்த எர்காட் கொடுக்கக்கூடாது கொடுத்தால் அபாயமுண்டாகும். ஆகையால் அந்தத் துவாரம் நன்றாய் விரிந்திருக்கிறதா இல்லையா வென்று செவ்வையாய்ப் பரீக்ஷித்துக் கொடுக்கவேண்டும்.

2. இரண்டு விராகனிடை குங்குமப்பூவைப் பெருஞ்சீரகக் கியாழத்தில் கரைத்துக் கொடுக்கலாம்.

3. வெண்காரம், லவங்கப்பட்டை, கொயினா மருந்துகள் நோயை அதிகப்படுத்திச் சிசுவை வெளிப்படுத்திக்கொண்டு வரும். இவையெல்லாவற்றிலும் எர்காட் மருந்து பிரதானமானது.

4. நோய் அற்பமா யிருக்கும்போது அடிவயிற்றைத் தட விப் பார்த்தால் பந்துபோல உருண்டையாய்த் தோன்றும். ஸ்திரீ மல்லாந்து படுத்திருக்கையில நோய் வருஞ் சமயத்திலே உள்ளங் கையினால் அந்த உருண்டையான பாகத்தை அமுக்கச் சீக்கிரம் பிரசவமாகும். ஸ்திரீ உட்கார்ந்திருந்தால் மருத்துவச்சி அவளைத் தன் மார்பி லணைத்துக்கொண்டு தன் னிரண்டு கைகளால் வயிற் றின் மேல்பாகத்தை அமுக்கினால் பிண்டம் நழுவிக் கீழே விழுந்து விடும்.

5. கருப்பையின் வாய் மலர்ந்திருக்கும்போது மேற்சொன் னவைகளால் குழந்தை பிறக்காமற்போனால் குறடு (Forceps) கொண்டு சிசுவை வெளியேற்றவேண்டும். ஆனால், தேர்ந்த வைத் தியர்கள் மட்டும் அதை உபயோகிக்கலாம்.

6. சிவனார் வேம்பை ஆமணக்கெண்ணெயில் அரைத்துத் தொப்புளின்மேல் பூசுவது நன்று.

7. நித்திரை செய்தல், ஆகாரஞ் சாப்பிடுதல், இடுப்பு, அடி வயிறு முதலிய வற்றைத்தேய்த்தல், முதலியவை வயிற்றுநோவை அதிகப்படுத்தும்.

ஸ்திரீக்குத் தலைநோய், ஆயாசம், ஜுரம், வாந்தி முதலிய குணங்களிருந்தால் சிசுவைச் சீக்கிரம் வெளிப்படுத்தவேண்டும்,

## கஷ்டப் பிரசவம்.

கஷ்டப் பிரசவத்திற்குக் காரணம் சில சிசுவால் உண்டாகின்றன. சில தாயின் கர்ப்பாசயத் துவாரத்தை அனுசரிப்பது:—

1 சிசுவின் சிரசு மிதமிஞ்சிப் பெரிதாய் இருத்தல்.
2. சிசுவின் எலும்புகள் மிகவும் பெரிதாயிருத்தல்.
3. சிரசு புரண்டிருத்தல்.
4. முகம் உதயமாகுதல்.
5. நாபிக்கொடி குழந்தையைச் சுற்றிக்கொண்டிருத்தல்.
6. சிசுவின் வயிறு விம்மியிருத்தல்.
7. தாயின் இடுப்பு; பிரஷ்டம், முதலியவற்றின் எலும்புகள் வளைந்துபோவது.
8. இடைக்குழி குறுகியிருத்தல்.
9. மூத்திரப்பையில் நீர் சேர்ந்து இடைக்குழியை அடைத்துக் கொள்ளல்—ஆகிய பல காரணங்களாம்.

இவைகளுக்கு ஆயுத உதவியின்றிச் சிகிச்சைசெய்ய முடியாதாகையால் தகுந்த டாக்டர்களை அழைக்க வேண்டியது அவசியம்.

### ஆசன உதயம். (Presentation of Breech.)



ஆசன உதயத்தில் காட்டுபலம் வெளிவரும். அபானவாய் ஜனன உறுப்புகள் முதலியவைகளாலும் அறியலாம். அநேகமாய் உதயமாகிறதை பிண்டமென்றும், சிரமென்றும் தெரியாமல் மயங்க வேண்டியதிருக்கும். மேலும் சிரசைப்போல் ஆசனம் மர்மஸ்தான மார்க்கத்தை விசாலப்படுத்தாது. இதில் ஆசனம் வெளிப்படுகிறவரையில் மருத்துவச்சி செய்ய வேண்டிய வேலை ஒன்றுமில்லை. ஆசனம் வெளிக்கு வந்தபின்பு, சிசுவை வலது கையிலேந்திக் கொண்டிருந்தால் அது தானாய்த் திரும்பி வெளிப்படும், தொப்

புட்கொடி வெளியில் தெரிந்தவுடனே அதைக் கீழே சிறிது இழுத்து நடுவில் இருக்கும்படி செய்து பத்திரப்படுத்தவேண்டியது. அதில் நாடி நடை துடிப்பாயிருந்தால் சிசு மெதுவாய் இறங்கும்படி விட்டுவிடலாம். நாடி பலவீனமாயிருந்தால் பிரசவத்தைத் தீவிரப்படுத்தி நோயிருக்கும்போது சிசுவை வெளியில் இழுக்க வேண்டியது. மார்பு வெளிப்படும்போது கைகள் அதனோடு நெருங்கியிருந்தால் மருத்துவச்சிக்குத் தொந்தரவில்லை. சிரசை அணைந்திருந்தால் விரலைவிட்டு மெதுவாய் வெளிப்படுத்திவிட வேண்டியது. பலமாய் இழுத்தால் எலும்பும், மற்றும் மிருதுவான உறுப்புகளும் முறிந்து காயப்படும். கொடியில் நாடி நடை இருக்கும்போது கைவிடலாகாது. தலை கர்ப்பாசயத் துவாரத்தில் வரும்பொழுதே இடதுகையின் இரண்டு விரல்களைத் துவாரத்தில் விட்டு மூக்கின் இருபக்கத்திலும், ஒரு விரலால் அணைத்துப் பிடித்து, தலையைக் கீழே அணைத்துக்கொண்டு, வலக்கை இரண்டு விரல்களையும் தோளின்மேல் வைத்துச் சிசுவை இழுத்தால் வெளிக்குவரும். இதற்கும் வராவிட்டால் ஆயுதப் பிரயோகம் செய்து வெளியேற்ற வேண்டும். பிரசவம் முடிகிறவரையில் ஸ்திரீயின் வயிற்றைப் பிடித்து அழுத்திக்கொண்டிருந்தால் நஞ்சு சீக்கிரமாய் வெளிப்படும்.

## பாத உதயம். (Presentation of Foot.)

சிசுவின் பாதங்களாவது முழங்காலாவது உதயமானால் ஆசன உதயத்திற்குச் செய்கிற சிகிச்சையே இவைகளுக்கும் செய்ய வேண்டியது. ஆசன உதயத்தைப் பார்க்கிலும் இவைகள் கொஞ்சம் கஷ்டத்தைக் கொடுக்கும். ஆனால், தொப்புட்கொடி நசுங்கி இரத்தவோட்டம் தடைபட்டிருந்தால் சிசுவிற்கபாயம் வாராமல் செய்வதே மருத்துவச்சியின் பிரதான முயற்சி.

## அஸ்த உதயம்.

சிசுவின் வலதுகையாவது இடதுகையாவது வெளியில் தொங்கிக்கொண்டிருக்கும். கைவரும்போது தந்திர யுக்தியால் கையைக் கருப்பைக்குள் செலுத்தி, பாதத்தையாவது முழங்காலையாவது கண்டு பிடித்துச் சிசுவைத் திருப்பி வெளிப்படுத்தாவிடில் தாயும் பிள்ளையும் அவமிருத்தாவார்கள்.

நாட்டு மருத்துவச்சிகள் இதற்குச் சிகிச்சை தெரியாதபடியால் கையைப் பிடித்திழுத்தால் குழந்தை வெளிக்கு வந்துவிடுமென்றெண்ணிக் கையைக் கழன்று வரும்வரையிலிழுத்துக் குழந்தையைக் கொன்று தாய்க்கும் அபாயம் உண்டாக்குவார்கள், இத

ற்கு முதலாவது ஸ்திரீயின் மலமூத்திர நிகளை நீக்கி இடதுபக்க மாய்ப் படுக்க வைக்கவேண்டியது. பின்பு டாக்டர் தமது வலது கையின் பின்புறத்தில் மட்டும் எண்ணெயிட்டு விரல்களைக் குவித்து, மர்ம ஸ்தானத்திற்குள் மெதுவாய்க் காயம்படாமல் செலுத்தி, கருப்பையின் வாயை மெல்ல நீக்கி, நீக்கி விரல்களை உள்ளே விடவேண்டியது. பிரசவ வேதனை நின்றிருக்கும்பொழுது கையை உபயோகித்து, வேதனை உண்டாயிருக்கிறபோது சும்மா யிருக்க வேண்டியது. மேற்சொன்ன விதமாய்க் கையைக் கருப்பைக்குள் உபயோகித்துக் குழந்தையின் முன்பக்கமாய் மார்பின்மேலும் வயிற்றின்மேலும் கொண்டுபோய்க் குழந்தையின பாதத்தைத் தடவித் தெரிந்துகொண்டு அதைப் பற்றிப்பிடித்து முன்புறமாகவே இழுத்து வெளிக்குக் கொண்டு வரவேண்டியது.

வைத்தியன் கை கருப்பைக்குள்ளிருக்கும்போது பிரசவ நோய் கண்டால் அப்போது கையை விரித்துச் சிசுவின் உடம்பின் மேல் அசையாமல் வைத்துக்கொண்டிருக்க வேண்டியது. அப்படிச் செய்யாவிட்டால் சிலசமயம் கருப்பை கிழிந்துவிடும். குழந்தையின் பாதங்களைப் பிடித்து அதன் முதுகு பக்கமாய்த் திருப்பி யிழுத்தால் பூட்டு விலகிப்போகும். ஆதலால் அப்படி இழுக்கக் கூடாது. இரண்டு பாதங்களையும் பிடித்து இழுப்பதே நலலது. ஆனால் இரண்டும் அகப்படுவது கஷ்டம். இரண்டும் அகப்படா விட்டாலும் ஒரு பாதத்தைப் பிடித்துத் திருப்பலாம். காலைக் கீழே இழுக்க, இழுக்க, கையானது மேலே ஏறிவிடும். வேதனையில்லாமலிருக்கும்போது, குழந்தையைத் திருப்பிக் காலை வெளியில் கொண்டுவந்து, பிறகு நோய்வரும்போது குழந்தையை இழுக்க வேண்டியது. சில சமயங்களில் சிசு தானே கர்ப்பத்தில் திருப்பி கையை உள்ளே இழுத்துக்கொண்டு காலெதிர்வரும், பிரசவமாகும்.

## பல பிள்ளைப் பிரசவம்.

### குறி.

1. வயிறு விசேஷமாய்ப் பருத்திருத்தல்.
2. வயிறு இருபிளவாய்ப் பிளந்திருத்தல்.
3. இரண்டு சிசுக்கள் அசைவதுபோலத் தோன்றுதல்.
4. கருப்பை தீவிரமாய் மேலே யேறுதல்.
5. ஒவ்வொரு குழந்தைக்கும் தனித்தனி பனிக்குடமும், ஞ்சு நாயிக்கொடியுமிருக்கும்.

ஒரு சிசு வெளிவந்தபிறகு வேறே சிசு இருக்கிறதோவென்று உள்ளும் புறமும் பரீக்ஷை செய்துகொள்ள வேண்டியது. இரண்டாம்பிள்ளை யிருந்தால் வயிற்றின் பருமன் முதற்பிள்ளை பிறப்பதற்கு முன்னிருந்த வண்ணமாகவே யிருக்கும். வயிறு பெரிதாயிருப்பதற்கு வேறு காரணங்களுமுண்டு. ஆகையால் உள்ளே பரீக்ஷை செய்வதவசியம். இரட்டைப்பிள்ளைப் பேற்றில் ஒன்றுக்குச் சிரசும், மற்றொன்றுக்கு ஆசனமும் பிரசன்னமாவது வழக்கம்.



முதல் சிசு பிறந்த சிறிதுநேரம் நோய் நின்று அரைமணி நேரத்தில் திரும்பவும் இடுப்பு நோய் ஆரம்பிக்கும். முதற்பிள்ளைக்குச் சென்ற நேரம் இரண்டாம் பிள்ளைக்குச் செல்லாது. மர்மஸ்தான மார்க்கம் விசாலமடைந்திருப்பதால் பிந்திவருங் குழந்தைக்குத் தடையொன்றுமிராது.

சிலசமயங்களில் இரண்டொரு தினங்கள் பொறுத்தபின் மற்றொரு குழந்தை பிரசவமாகும். முதல் சிசு பிறந்தவுடன் அதன் தொப்புள் கொடியைக் கட்டித் துண்டித்துவிட்டுப் பின்பு தாய்க்குக் கட்டியிருக்கிற வயிற்றுத் துணியைச் சிறிது பிகுப்படுத்தவேண்டியது. தொப்புட்கொடி அறுக்குமுன் மேல்கொடியையும் நூல் கயிற்றால் கட்டி வைக்கவேண்டியது. இல்லாவிடில் கர்ப்பத்திலிருக்கும் மற்றொரு குழந்தைக்கு அபாயம் வரும்.

சில சமயங்களில் கர்ப்பத் துவாரத்தில் இரண்டு தலைகளும் நெருக்கிக்கொண்டு கஷ்டப்பிரசவமுண்டாகும். இதில் ஒரு சிசுவின் தலையை மேலே தூக்கிப் பிரித்துவிட்டுக் குறட்டினுல் (Forceps) பிடித்து வெளியாக்கவேண்டும்.

தலைப்பிள்ளைப் பிரசவத்தில் இரத்தம் பிரபலமாய்க் காண்பதுமுண்டு. சுமார் அரைமணிக்குள் இரண்டாவது பனிக்குடம் உடையாவிட்டால் அதை உடைத்துவிட வேண்டியது. அதனால் கெடுதி ஒன்றுமில்லை. பனிக்குடம் உடைந்த இரண்டுமணி நேரத்திற்குள் சிசு வெளியாகாவிடில், கையைவிட்டுச் சிசுவை வெளிப்படுத்திவிடலாம்.

## தொப்புள் கொடிப் பிரசவம்.

சிசுவின் சிரசுக்குமுன் தொப்புள் கொடி யிறங்கி வெளியில் வந்தால் அச் சிசுவின் தலையால் நசுக்குண்டு இரத்தவோட்டம் நின்று சிசு இறந்துவிடும். ஆனல் தாய்க்கு அபாயமில்லை. தொப்புள் கொடியில் நாடியோட்ட மில்லாதிருந்தால் குழந்தை இறந்திருக்கிற தென்பதற்குச் சந்தேகமில்லை. அப்பொழுது பிரசவம் தானய் நடக்கும்படி விட்டுவிடவேண்டியது.

தொப்புள் கொடியில் நாடி நடையிருந்தால் சிசுவிற்கு அபாயம் வராமல் முயற்சி செய்யவேண்டியது. கருப்பைத் துவாரம் நன்றாய் மலருகிறவரையில் நீர்க்குடம் உடையாமல் வைத்திருந்து கைவிரலால் அல்லது ரப்பர் சலாக்கினல் தொப்புள் கொடியைக் கர்ப்பத்திற்குள் ஏற்றிச் சிசுவின் காலோடாவது கையோடாவது சேர்த்து வைக்கவேண்டியது. இதனலாகாவிடில் ஸ்திரீயின் கைகளை முழங்கால்மேல் வளையும்படி வைத்தால் தொப்புள் கொடி இருக்கவேண்டிய ஸ்தானத்திற் சேரும்.

சில சமயம் மர்ம ஸ்தானம் கிழிந்து அந்தத் துவார வழியாய் ஸ்திரீயின வயிற்றுக் கொடிகள் அகப்படும். அந்தக் கொடியையும் கொடிக்கும் சிசுவின் தொப்புள் கொடிக்கும் வித்தியாசம் கண்டு பிடித்துச் சமயத்துக்குத் தக்கபடி யோசித்துச் சிகிச்சை செய்து சிசுவை ரக்ஷிப்பது தேர்ந்த வைத்தியர்களின் கடமை.

## ஜன்னியோடு கூடிய பிரசவம்.

பிரசவத்திற்கு முந்தியும், பிந்தியும், பிரசவத்திலும் ஜன்னி நேரிடுவதுண்டு.

குறி. தலைக்கனம், காதிரைச்சல், கண் சிவந்திருத்தல், கண்முன் மின்மினிப்பூச்சி பறப்பதுபோல் தோன்றுதல். அடிக்கடி பெருமூச்சுண்டாகும். ஸ்திரீ அயர்ந்து குறட்டைபோட்டு நித்திரை பண்ணுவாள். இக்குறிகள் எக்காலத்தில் கண்டாலும் உடனே வைத்தியருக்குத் தெரிவிக்கவேண்டியது. உடனே வைத்தியஞ்செய்யாவிடில் மயக்கமுண்டாகி முகம் விகாரப்படும், பற்கள் கட்டிக்கொள்ளும், கண்கள் சுழலும், பிரக்ஞை தப்பிச் சற்று நேரத்தில் அறிவு தெளியும். தலைச்சன் பிள்ளைப் பெறுகிறவர்களுக்கு ஆறுமாதத்துக்குமேல் இவ்வலி வரக்கூடியது.

பரிகாரம். 1. அரை அவுன்ஸ் சவுக்காரத்தை அரைப்படி வெந்நீரில் கரைத்துப் பிச்சாங்குழல் மூலமாய் ஆசனவாய்க்குள் செலுத்தி மலத்தைப் போக்கவேண்டும்.

2. மூளையிலுள்ள இரத்தக்கட்டைக் குறைக்கும்படி சிரசையும், புயத்தையும் சரீரத்திற்கு மேலாயிருக்கும்படி உயர்த்திப் படுக்க வைக்கவேண்டும். பிராந்தி முதலிய லாகிரிவஸ்துக்கள் கொடுக்கக்கூடாது.

3. காலமெல் (Calomel) பத்து கிறெயின் நாவில் தடவி விழுங்கச் செய்யவும். உடனே நிலபாகைக் கஷாயத்தில் ஒரு அவுன்ஸ் பேதியுப்புச் சேர்த்துக் குடிக்கக் கொடுக்கவும்.

4. கற்பூரம், ஓமம், சடாயஞ்சி, குரோசாணி வகைக்கு ஒரு வராகனிடை, அபின் கால்வராகனிடை, கஸ்தூரி அரைக்கால் வராகனிடை இவைகளைச் சேர்த்து அரைத்து, குன்றுமணிப்பிரமாணம் மாத்திரைகளாகச் செய்து வைத்துக்கொண்டு வேளைக்கு இருமாத்திரை கொடுக்கவும்.

5. தலைவலி அதிகமானால் பால்சாம்பிராணி, கடுகு, மிளகு, குரோசாணி, ஓமம் இவைகளைச் சேர்த்து அரைத்துக் கொதிக்க வைத்துத் தலையில் போடவும்.

6. பெருங்காயம், யானைக்கோரோசனை, மிளகு இவைகளைச் சமமாய்ச் சேர்த்தரைத்து மிளகுப் பிரமாணம் உருட்டிக் கொடுக்கவும்.

## அற்பசுரம் அல்லது அனுதாபசுரம்.

## (Sympathetic Fever.)

இந்த அற்பசுரம் பிரசவித்த ஸ்திரீகளுக்குக் காண்பது வழக்கம். உண்டிப்பிசகு, குளிர்படுதல், இடத்தை மாற்றுதல், ஆயா

சம், கவலை, நித்திராபங்கம் முதலியவற்றால் நாடியிலும் குடலிலும் உண்டாகும் அழற்சியே இது உண்டாவதற்குக் காரணம்.

பிரசவித்த மூன்று, நான்கு நாட்களுக்குள் சுரத்துடன் தொடங்கி சிறிதுநேரங் காய்ச்சலுண்டாகி வியர்த்துவிடும். சிலருக்கு முறைக்காய்ச்சலாய் வரும். சிலருக்கு ஏழு, எட்டுநாள் வரையிற்கும். இதன் ஆரம்பத்தில் குளிர், ஆயாசம், சரீர அசௌக்கியம், மார்பு துடித்தல், தாகம், கொட்டாவி, இமிர், தலை, முதுகு, கால், ஸ்தனம் ஆகிய இவைகளில் வலி முதலியவை தோன்றி ஸ்திரீக்கு நடுக்கமுண்டாகும். பிறகு உஷ்ணங்காணும். அல்குலில் வியர்வை தோன்றும். பால் சுரப்புக் குறையும், அல்லது நின்றுவிடும். அழுக்கும் அவ்விதமாகவே யிருக்கும்.

**சிகிச்சை.** உணவின் பிசகால் உண்டானதென்று துவக்கத்திலறிந்தால் மூன்று கிரெய்ன் கலோமல் (Calomel) கொடுத்துக் கொஞ்சநேரஞ் சென்றபின்பு நிலபாகைக் கஷாயங் கொடுக்கவும். சுரம் ஒருமுறையில் நிற்காதிருந்தால் மலசுத்தியைச் சீராக்கிக் காரமற்ற மெல்லிய உணவு கொடுக்கவும்.

## விடபக்கிழிவு. (Laceration of the Perineum.)

யோனிவாசலுக்கும் அபானவாசலுக்கும் இடையிலுள்ள தோலாலாகிய பகுதி விடபமென்று சொல்லப்படும். முதற்பிரசவத்தில் விடபம் கொஞ்சமாய்க் கிழிவது வழக்கம். சிலருக்கு விடப முழுவதுமே கிழிந்துவிடும். குழந்தையின் சிரசு வெளிவரும் போது கையால் அணைக்காததனாலும் வேறு காரணங்களினாலும் உண்டாகும்.

**சிகிச்சை.** கிழிவு சொற்பமானால் முழங்கால்களைச் சேர்த்துக்கட்டி வைத்திருந்தால் பொருந்திவிடும். அதிகமாய்க்கிழிந்தால் இங்கிலீஷ் வைத்தியர்கள் கிழிபட்ட உதடுகளைச் சேர்த்துத் தைத்து எட்டுநாளைக்குப் பிறகு நூலைக் கத்தரித்து எடுப்பார்கள்.

## வியர்க்குரு உண்டாகும் சுரம் (Miliary Fever)

சிலர் சூடானபானங்களையும் காரமான ஆகார வகைகளையுஞ் சாப்பிடுவதால் உஷ்ணம் அதிகரித்து வியர்வை யுண்டாகி, தினையளவுபோன்ற வியர்க்குரு, முகம், கழுத்து, முதுகு, சில சமயம் உடல், கை, கால்களிலுமுண்டாகும். இவ்விதச் சுரத்திற்குப் பேதியுப்புச் சாப்பிட்டுச் சுத்தமான காற்றில் உலாவிக் குளிர்ச்சியான உணவு உட்கொள்ளல் க்ஷேமமாகும்.

## பிராணாபாய மூர்ச்சை. (Fatal Syncope.)

சில சமயம் ஸ்திரீகள் பிரசவித்த இரண்டு மூன்று தினத்திற்குள் ஸ்நாநம் முதலியவற்றிற்காக எழுந்து நடமாடுவதால் மூர்ச்சையுண்டாகிக் கீழே விழுந்து மரணஞ் சம்பவிப்பதுண்டு. சிலருக்குப் பிரசவித்த ஒருமணி நேரத்துக்குள் வயிற்றில் நோயும், வாய்க்குமட்டலும், களைப்பும் உண்டாகி மூர்ச்சை அடங்கும். முகவாட்டங் கொடுக்கும், நாடி விட்டுவிட்டு அடிக்கும். அட்டல் புரட்டல் உண்டாகும். நாக்கு உள்ளே இழுத்துக்கொள்ளும். இதற்கு உடனே பரிகாரஞ் செய்யாவிடில் உடனே மரணமுமுண்டாகும்,

சிகிச்சை. ஒரு அவுன்ஸ் பிராந்தியில் சரி பங்கு தண்ணீர் கலந்து கொடுக்கவும்.

(Aromatic Spirit of Ammonia; ஒரு கிராம் எடுத்து ஒரு சேரங்கைத் தண்ணீரில் கலந்து இரண்டரைமணி நேரத்திற் கொருதடவை இரண்டு அல்லது மூன்றுமுறை கொடுக்கவும்.

## கருப்பை உட்புறம் வெளிப்புறமாதல். (Inversion of the Womb.)

நஞ்சை வெளிப்படுத்த நாட்டுப்புறத்து ஸ்திரீகள் முரட்டுத்தனமாய் இழுப்பதனால் இந்த சம்பவம் நேரிடும். இதை உடனே டாக்டர்களுக்குத் தெரிவித்துக் கருப்பையை முன்னிருந்தமாதிரி அதன் ஸ்தானத்தில் திருப்பிவிடவேண்டும். தள்ளிவிட்டவுடன் கொஞ்சம் தண்ணீரை உட்செலுத்திக் கையைக் கொஞ்சநேரம் வைத்திருக்கவேண்டும். இல்லாவிட்டால் மறுபடியும் கருப்பை திரும்பிவிடும்.

## கருப்பை கீழுக்கு இறங்கிவிடுதல்.

பலவீனத்தினால் கருப்பையைத் தன்னிலையில் கட்டி வைத்திருக்கும் ஜவ்வுகளும், நரம்புகளும் தளர்ந்திருக்கும் சமயத்தில் பிரசவித்த ஸ்திரீயை அடிக்கடி உட்கார வைப்பதனாலும், எழுந்து நடமாட விடுவதனாலும் கருப்பை தன் இடத்தைவிட்டுக் கீழுக்கு இறங்கிவிடும். சிலருக்கு வெளியில் வந்துவிடும்.

சிகிச்சை. ஸ்திரீயை இடதுபக்கம் படுக்கவைத்து முழங்கால்களை மடக்கி வயிற்றோடணையும்படி செய்து வெளிவந்திருக்கும் கருப்பைக்குமேல் எண்ணெய் தடவி உள்ளுக்கு மெது

வாய்த் தள்ளிவிடவேண்டியது. மறுபடியும் இறங்காமல் பஞ்சையாவது, துணியையாவது துவர்ப்புக் கஷாயங்களில் நனைத்துக் கருப்பையின் வாயில் வைத்துவிடவேண்டும். இதைப் பிரதிதினமும் மூன்று நான்குதடவை எடுத்துத் தண்ணீரில் கழுவிவிட்டுப் பின்னும் முன்போல் வைக்கவும்.

## பிரசவப் பயித்தியம்.

சிலருக்கு, பிரசவிக்குமுன், சித்திர பங்கம், முகம் வாடுதல், மிரட்சியான பார்வை, கண் பிரகாசம், சிரசு பிதுவாய்க் கட்டியிருந்ததுபோ லிருத்தல், இக்குறிகள் கண்டால் பிரசவித்தபின் பயித்தியம் போன்ற ஓர்வித மருட்சி காணும். மனந்தடுமாறும். சந்தோஷமாவது, விசனமாயது இருக்கும். ஆடல், விடாப்பேச்சு அல்லது மௌனம் உண்டு. குழந்தைக்கும் தன் புருஷனுக்கும் ஏதோ அபாயம் நேரிட்டதென்று எண்ணுவாள். எல்லாரையும் சமுசயமாய்ப் பார்ப்பாள். குழந்தையின்மேல ஞாபகம் இல்லாமல போவதுண்டு. காதில இரைச்சல இருக்கும். தேகம் இளைக்கும். முகம் வெளுக்கும். நாக்கு வெளுத்து அழுக்குப் படிந்திருக்கும், தூக்கம் அற்பமாயிருக்கும், தாகம் அதிகம். நாடி துர்ப்பலமாய் நடக்கும். மலம கட்டுப்பட்டிருக்கும். இவ்விதக் குறிகளுடன் சுரமாவது, கருப்பையில் வியாதியாவது கண்டால் இந்நோய் தீரமாட்டாது. சுரங் காணாதிருந்தால் சுகமாக்கலாம்.

சிகிச்சை. வாந்திக்குக் கொடுப்பது நல்லது. பிறகு போவர்ஸ் பவுடர், செலீன மிகஸர் இவைகளில ஒன்றைக் கொடுக்கவும். நல்ல ஊட்டமும், மாமிசமும், ஒயின் முதலியவைகளும் கொடுத்து ஆதரிக்கவேண்டியது. அன்னியரை அருகல் விடாமலும். அதிக தொந்தரவு பேச்சுக்கிடம வைக்காமலும் இருட்டான இடத்தில் வைத்துச் சிரசில் ரோமத்தை நீக்கி ஈரத்துணியைப் போட்டு வைக்கக் கடவுள் கிருபையால் தீரலாம்.

## விஷ சுரம். (Puerperal Inflammation·)

பிரசவ வேளையில் வயிற்றை அதிகமாய்ப் பிசைதல், நஞ்சுக் கொடியைப் பலமாய் இழுத்தல், குளிர்பிடித்தல், ஒழுங்கீனமான உணவு முதலியவற்றால பிரசவித்த இரண்டாம் மூன்றாம நாளில காய்ச்சலும் கடுதலும் உண்டாகும். பால சுரக்காது. துயில் இராது. வயிறு பொருமும். கையையாவது வஸ்திரத்தையாவது வயிற்றின்மேல் தாங்கமுடியாது. சொற்ப அசைவுங்கூட வருத்தமாய் இருக்கும், கடின காய்ச்சல் இருக்கும, முழங்கால்களை

மடக்கிக்கொள்வாள். மலக்கட்டும், மலக்கழிச்சலும், கடுமையான வாந்தியும், நெஞ்சில்நோயும், இளைப்பும், பெருமூச்சும் மயக்கமுங் காணும்.

## ஸ்தனங்கள்.



குழந்தை பிறந்து இரண்டு மூன்றுமணி நேரத்திற்குள் தாய்க்குக் களைப்புத் தீர்ந்து இலகுவானவுடன் ஸ்தனங்களைக் கவனிக்க வேண்டும். விசேஷமாய்த் தலைப்பிள்ளைப் பேறுகாலத்தில் முதல் மூன்றுநாள் பாலிருக்கமாட்டாது. ஆனால், மூன்றாம்நாளிலோ ஸ்தனங்கள் விம்மிப்பருத்து வீங்கிக் கடினமாகி உபத்திரவந் தோன்றும். சில சமயம் பால் சுரமுங் காணும். இச்சமயம் பார்த்துக் கவனிக்காவிடில், ஸ்தனங்களில் கட்டி புண்டாகிச் சில மாதங்களுக்குத் தாய்ப் படுத்த படுக்கையாய்க் கிடக்கவேண்டியது நேரிடும். முலைக்காம்பைக் கையால் பிடித்துப் பார்த்துப் பாலிருக்கிறதாகக் கண்டால் குழந்தையை ஸ்தன்னியபானம் செய்விக்க வேண்டும். குழந்தைக்கு முதல் முதல் பால் கொடுக்குமுன்னமே தாயின் முலைக்காம்புகளை இளவெந்நீரால் கழுவித் துடைக்கவேண்டும். அப்படிச் செய்வதால் முலைக்காம்புகள் கனிந்து மிருதுவாகிக் குழந்தை உற்சாகத்துடன் இலகுவாய்ப் பால் குடிக்க ஏதுவாகும். அவ்விதங் கழுவாமல் வியர்வை நாற்றம் முதலியவை இருந்தால் சில குழந்தைகள் பால் குடிக்கவேமாட்டா. கழுவிச் சுத்தஞ் செய்தபின்பும் பால் குடிக்காதிருந்தால் கொஞ்சம் சர்க்கரைப்பாகை முலைக்காம்பில் தடவிப் பால் குடிக்கச் செய்யவேண்டும்.

முலைக்காம்பு வெடித்துப் புண்ணாகாதபடிக்குக் குழந்தை பால் குடித்துவிட்டவுடன் தன் விரல்களால் காம்பிலுள்ள பாலைப் பிதுக்கிவிட்டுக் கழுவி நன்றாய்த் துடைத்துவிடவேண்டும்.

ஸ்தனங்கள் விம்மிப் பருத்துக் கல்போல் உறுதியாயிருந்து வலியெடுத்தால் கொஞ்சம் ஆமணக்கெண்ணெயை லேசாய்ச் சூடவைத்து ஸ்தனங்களில் தடவி மெதுவாய்த் தேய்த்துவிடவேண்டும். வெந்நீர் ஒற்றடம் அடிக்கடி கொடுத்து எப்பொழுதும் உஷ்ணமாக வைத்துக் கொள்வதால் அதிக நன்மையுண்டு. ஸ்தனங்கள் விம்மிப் பருத்துத் தொங்கினும் ஒரு துணியை இரு



## உலகப்பிரசித்திபெற்ற சாமிவேலின் சிங்கமார்க்கு ஸ்தன்யரோகப் பிரயோகம்.



## (Cracked Nipple Paint.)

மூலைக்காம்பும் அதைச் சுற்றியுமிருக்கிற தோலையும் உலர்ந்து கரகரப்பாயிருக்கும். பிறகு அவைகள் வெடித்து ரணமாகும். சிலருக்கு மூலைக்காம்பைத் தின்றுவிடும். இரத்தம் வடிகிறது முண்டு. பால் கட்டிக்கொண்டு உபத்திரவமுண்டாகலாம். இவைகளெல்லாவற்றிற்கும் நமது ஸ்தன்யரோகப் பிரயோகத்தைத் தடவி வர கூடிய சீக்கிரத்தில் சுகமுண்டாகும்.—விலை அணு 12.

## ஸ்தனங்களில் பால் கட்டிக்கொண்டால் செய்யும் சிகிச்சை.

தாய்க்குப் பால் ஜாஸ்தியாய் வருகிறதாயிருந்தால் ஒரு சோடா போத்தலில் சுடு தண்ணீர் விட்டு ஐந்து நிமிஷம் வைத்திருந்து பின்பு தண்ணீரைக் கொட்டிவிட்டு அதன் வாயினுள் மூலைக்காம்பை நுழைத்து வைக்க, பால் தானாகப் போத்தலினுள் வடிந்துவிடும். இதற்குப் பதிலாக நாய்க்குட்டிகளையாவது வேறு பிள்ளைகளையாவது விட்டுப் பால் குடிக்கச் செய்யும் வழக்கம் மிகக்கெடுதி யுண்டாக்கும். இக்காலத்தில் தாய் தன் போஜனத்தை மட்டுப்படுத்தி, கஞ்சி, பால், உப்பு முதலிய பால் சுரக்கக்கூடிய தண்ணீர் சேர்ந்த வஸ்துக்களைச் சாப்பிடக்கூடாது. பனிக்கட்டியை (Ice) ஒரு துணியில் சுற்றி ஸ்தனங்களில் ஒற்றுவதால் பால் சுரப்பு நின்றுவிடும். கற்பூர எண்ணெயையும் ஒரு துணியில் நனைத்துப் போடலாம்.

## பால் சுரப்பிக்குந் தந்திரம்.

பால் மிகு சொற்பமாய் வருமானால் ஆமணக்கிலைகளை வதக்கி அவற்றை உஷ்ணமாயிருக்கும்போதே ஸ்தனங்கள்மேல் வைத்துக் கட்டினால் பால் அதிகமாய்ச் சுரக்கும். ஓரிலைத் தாமரையை ஒரு கொட்டைப்பாக்களவு அரைத்துப் பசுமோரில் கலக்கிக் காலை மாலை எட்டுநாள்வரையில் கொடுக்கப் பால் ஊறும். அல்லது கருஞ்சீரகம் சாப்பிட்டுவரப் பால் ஊறும். இக்காலத்தில் தாய்க்குக் கொக்கோ, முட்டை, பால் சேர்ந்த புஷ்டியான ஆகாரம் கொடுக்க வேண்டும். இரத்தவோட்டம் நன்றாய்ச் செல்லும்படி, ரவிக்கை முதலிய துணிகளினால் ஸ்தனங்களை இறுக்கிக் கட்டக்கூடாது.

நன்றாய் ஜீரணிக்கத்தக்கதும் தாதுபுஷ்டியைக் கொடுக்கக் கூடியதுமான ஆகாரங்களையுங் கறிவகைகளையுஞ் சாப்பிடவேண்டும். பீர், எல் முதலிய மதுபான வஸ்துக்களைச் சாப்பிடுவதனால் பால் அதிகரித்தபோதிலும் அவற்றினால் தாய்க்கும் பிள்ளைக்குங் கெடுதியேயன்றி நன்மையல்ல.

கெல்லாக் (Kellogg) என்னும் அமெரிக்கன் டாக்டர் பால் சுரப்பிக்குந் தந்திரமாக எழுதுவதை இங்கு கூறுவோம். "பால் சுரக்கும் விதமாக முலைக்காம்பைக் கை விரல்களினால் மெதுவாய்ப் பிடித்துக்கொண்டிருந்தால் அநேகமாய்ப் பால் சுரந்துவிடும். பிள்ளை பெறாத அநேக ஸ்திரீகளும், சிறுபெண்களும், ஆண் பிள்ளைகளுங்கூட இவ்விதமாகச் செய்வதால் பால் சுரந்து குழந்தைகளுக்குப் பால் கொடுத்து வளர்த்திருக்கிறார்கள். ருஷியா தேசத்தில் அநேகம் ஆண்கள் இவ்விதம் பால்கொடுத்துக்கொண்டு வருகிறார்கள். நான் சில வருஷங்களுக்குமுன் ஒரு காப்பிரி அடிமையைப் பார்த்தேன். அவனுடைய மார்புகளில் ஏராளமான பால் சுரக்கத் தன் எஜமாட்டியின் பிள்ளைகளுக்கெல்லாம் அவனே பால் கொடுத்து வருவானாம்."

## பால் கொடுக்குங் காலத்தில் மாதாந்தர ருது தோன்றல்.

பால் கொடுத்துக் கொண்டிருக்குங் காலங்களில் ஸ்திரீயானவள் கர்ப்பமாகமாட்டாளென்பது சிலருடைய கொள்கை. ஆனால் அக்காலத்தில் மாதாந்தர ருது தோன்றிவிட்டால் அவள் எப்படியாவது கருத்தரிப்பாளென்பது நிச்சயம். ஆகையால் அப்படிப்பட்ட ஸ்திரீயானவள் தன சுகத்தையும் தன் குழந்தையின சுகத்தையும் விரும்புவாளாயின், அவள் தன் புருஷனைவிட்டுப் பிரிந்திருக்கவேண்டியது அவசியம். ஏனெனில், அவள் சீக்கிரம் கருத்தரிப்பதால் பிள்ளைக்குச் சரியான காலமட்டும் பால்கொடுக்க முடியாமற் போவதுமல்லாமல் அடிக்கடி குழந்தை பெறுவதனால் தன் சொந்த சரீரத்தையும் பலவீனப்படுத்திக்கொள்ளுகிறாள்.

சிலர் மாதாந்தருது தோன்றினவுடனே இனிமேல் தங்கள் பாலினால் குழந்தைகளுக்கு வியாதியுண்டாகுமென்று பால்கொடுப்பதை நிறுத்திவிடப் பிரயாசப்படுகிறார்கள். இது மகா தப்பிதம். ஏனெனில் மாதாந்தர ருது வெளியாகிற நாட்களில் தவிர மற்ற நாட்களில் அந்தப் பாலினால் குழந்தைக்கு யாதொரு வியாதியுமுண்டாகாது. ஆகையால் ஸ்திரீயானவள் ருதுகம் வெளியாகும் நாட்களில் மாமிசம் சேர்க்காமல் தன் சாப்பாட்டையும் மட்டுப்படுத்தினால் குழந்தைக்குச் சுகமுண்டு.

## கர்ப்பிணிக்கு ஓர் வேண்டுகோள்.

இந்த புஸ்தகத்தை வாசிக்கும் பெண்மணியே! உன் அருமையான ஜீவனையும் உன் கர்ப்பக்கனியின் உயிரையும் காப்பாற்றும் பொருட்டு இப்புஸ்தகத்தை வாங்கி வாசிக்கிறாய். உனக்கு நான் சொல்வதைக் கேள். நீ எந்த ஸ்திதியில் இருந்தாலும் சரி, நாட்டு மருத்துவச்சிகளி-த்திலும் அம்பட்டச்சிகளிடத்திலும் உன் அருமையான உயிரை ஒப்புவிக்காதே. நம்மைப்போன்ற ஸ்திரீ ஜாதியை ரட்சிக்கும்பொருட்டு டப்ரின் பெருமாட்டி (Lady Dufferin) யின் வேண்டுகோளினாலும் பிரயாசத்தாலும் சர்க்கார் ஒவ்வொரு பெரிய நகரிலும் தர்ம வைத்தியசாலைகள் ஏற்படுத்தி அவற்றில் சாஸ்திர நிபுணரும் கைதேர்ந்த அனுபோகஸ்தருமான ஸ்திரீ வைத்தியர்களை (Lady Doctors) க் கொண்டு மருத்துவம் பார்க்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அங்கே இந்நூலில் சொல்லியவண்ணம் சகலமும் ஒழுங்காய் நடக்கும். அங்கே போய்ப் பிள்ளை பெறுவது இழிவன்று. நீ எவ்வளவு சீமாட்டியாயினும் அங்குள்ள வசதி உன் வீட்டிலிருக்காது. ஆதலால், நான் சொல்வதை நம்பி அங்கு சென்று யாதொரு விக்கினமுமின்றிச் சுகத்துடன் பிள்ளை பெற்றுப் பத்தாவது நாளில் உன் வீட்டிற்கு வந்து உன் பர்த்தாவு-னும் இனஜனப் பந்துக்களுடனும் கடவுளை நன்றியறிதலோடு ஸ்துதிப்பாயாக.



உலகப் பிரசித்திபெற்ற சாமிவேலின் சிங்கமார்க்கு
தொண்டைப் புகைச்சல் நிவாரணி.



(Bronchitis Cure.)

சாமிவேலின் தொண்டைப் புகைச்சல் நிவாரணி சகலவித தொண்டைப் புகைச்சல், இருமல், சீதளம் முதலிய நுரையீரல் ரோகங்களைத் துரிதத்தில் நிவர்த்தி செய்யும்.—விலை ரூ. 2.

சாமிவேல் வைத்தியசாலை,

தென்காஞ்சி, இரங்கோன்.

SAMUEL MEDICAL HALL,

Thingangyun, Rangoon.

கடவுள் துணை.

# மானிட மர்மசாஸ்திரம்.

## ஒன்பதாம் புஸ்தகம்

### சிசு பரிபாலனம்.

“வட்டிலிலுந் தொட்டிலிலு மார்மேலுந் தோள்மேலும்
கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து—முட்டச்
சிறகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டுந் தாய்.” —பட்டணத்தார்.

இஃது

யாவர்க்கும்

சுக செல்வ நன்மைகளையும் சுகிர்த பாக்கிய
பொக்கிஷத்தையும் நீடூழி பெறுவிக்க
விரும்பிய,

கல்கத்தா சர்வகலா சங்கத்தின் தமிழ்ப்பரீக்ஷகரும், ரங்கூன் செண்
ஜான்ஸ் கல்லூரிப் பிரதமாசிரியரா யிருந்தவரும், கணித சாஸ்திரம், பூமிசாஸ்
திரங்களின் கிரந்தகர்த்தாவும், மானஸ மர்ம சாஸ்திரப் பண்டிதரும்,
சாமிவேல் வைத்தியசாலைத் தலைவருமாகிய

எஸ். சாமிவேல், பி. ஏ. அவர்கள்

இயற்றியது.

புதிய பதிப்பு.

சாமிவேல் பிரஸ்,

தென்காஞ்சி, இரங்கோன்.

1920

All Rights Reserved.

கடவுள் துணை.

# மானிட மர்ம சாஸ்திரம்.

## ஒன்பதாம் புஸ்தகம்.

### சிசு பரிபாலனம். (Care of Infants.)

குழந்தை பிறந்தவுடனே வெளிக்காற்று அதன்மேல் படவே வீர்வீரென்றழுது மூச்சுவிடும். அவ்வாறு அழாதிருந்தால் உடனே பிரஷ்டத்தின்மேல் அல்லது பாதத்தில் ஒருவிரலால்தட்டவேண்டும் அல்லது சிறிது பிராந்தி சரீரத்தில் பூசினால் சுவாசம் வரும். இதற்கும் மூச்சு வராவிட்டால் ஒரு பாத்திரத்தில் வெந்நீரும் மற்றொரு பாத்திரத்தில் குளிர்ந்த ஜலமும் வைத்து முதலில் வெந்நீர்ப் பாத்திரத்தில் சிசுவை முழுக்காட்டிப் பின்பு குளிர்ந்த ஜல பாத்திரத்தில் முழுக்காட்டி இவ்வாறு விரைவில் மாற்றி மாற்றி முழுக்காட்டினால் சுவாசம் வரும். இதற்கும் சுவாசம் வராவிட்டால், குழந்தையை மல்லாக்கப் படுக்கவைத்து அதன் முழங்கைகளை மருத்துவச்சித் தன்னிரண்டு கைகளாலும் பிடித்துக் கொண்டு அவைகளைக் குழந்தையின் தலைக்குமேல் தூக்கவேண்டும், இப்படிச் செய்வதால் குழந்தையின்மார்பு அகன்று விஸ்தாரமாய்க் காற்று நாசித் துவாரத்தின் வழியாய் உள்ளே சுவாசாசயத்திற்குள் செல்லும். பின்பு அதன் கைகளை மறுபடியுந்தணித்து அவற்றால் குழந்தையின் மார்பின் இரு பக்கங்களிலும் மெதுவாக அமுக்க வேண்டும். இப்படிச் செய்வதால் உள்ளே சென்றிருக்குஞ் சுவாசம் வெளியில் வரும். இவ்விதமாக நிமிஷத்திற்குப் பதினைந்து தடவை குழந்தையின் கைகளைத் தூக்கித் தூக்கி அமர்த்த, சுவாசம் உள்ளே பிரவேசித்து



வெளியில் வந்துகொண்டிருக்கும். இப்படிச் சிறிதுநேரஞ் செய்த பிறகு நன்றாய் மூச்சுவிட்டுப் பிழைக்கும். குழந்தை பிறந்தவுடனே அதன் இமைகளை ஓர் சுத்தமான மெல்லிய துணியினால் துடைக்கவேண்டும். அப்படிச் செய்யாவிடில் குழந்தைக்குக் கண் பொங்கிக் கண் நோயுண்டாகும். அதன்பின் குழந்தைக்கு வைனோலியா (Vinolia) சவுக்காரந் தேய்த்து நன்றாய்க்கழுவி வெந்நீர் ஸ்நானம் செய்வித்து ஓர் மெல்லியதுணியினால் நன்றாய்த் துடைக்கவேண்டும். ஓர் சிறிய வெள்ளைத் துணியை நெருப்பில் எரித்து அது பாதி வெந்தவுடன் அணைத்து அந்தக்கரித்துணியால் தொப்புள் கொடியைச் சுற்றிக் கட்டவேண்டியது. பிரதிதினமும் இதே மாதிரிப் புதிது புதிதாய்க் கட்டிக்கொண்டுவர ஒரு வாரத்தில் தொப்புள்கொடி விழுந்துபோம். கொடியினின்றும் அதிகமாய் இரத்தம்வரின் ஓர் மெல்லிய துணியால் தொப்புள்கொடி நுனியைக் கட்டினால் இரத்தம் நின்றுவிடும். கொடியை அறுத்துவிட்டால் மெதுவாயும் ஜாக்ரதையாயும் கட்டவேண்டும். தொப்புள் கொடி விழுந்துபோனபின் தொப்புள்மேல் ஒரு குட்டையை மடித்துப் போட்டுக் கட்டினால் தொப்புள் பெரிதாகாது.

இதன்பின் குழந்தைக்கு உடுப்புப் போட்டுத் தாய்ப் பக்கத்தில் மிருதுவான படுக்கையின்மேல் படுக்க வைத்து மெல்லிய கம்பளியினால் முகந் தவிரச் சரீர முழுவதையும் போர்க்க வேண்டும். பின்பு, தாய் தன் குழந்தைக்குப் பால் கொடுக்கவேண்டும். பிறந்த இரண்டுமணி நேரத்திற்குள் பால் கொடுப்பதனால் தாய், சிசு இருவருக்கும் நன்மையுண்டு.

(முதலாவது) குழந்தை சரியாய்ப் பால் குடிக்குமாயின் தாயின் கர்ப்பாசயம் சீக்கிரம் சுருங்கிவிடுமாதலால் உதிரப் பெருக்கு உண்டாகாது. ஸ்தனங்களில் பால் கட்டாது. குழந்தைக்குப்பால் கொடுக்கத் தாமதம் நேரிட்டால் பால் கட்டுவதனாலே ஸ்தனங்கள் கல்லைப்போலிறுகி, முலைக்காம்புகள் சிறுத்து உள்ளே போய்விடும். பிற்பாடு குழந்தை முலைக்காம்பை இழுக்க முயன்றாலும் தாய்க்குச் சகிக்கமுடியாத வலியுண்டாகி முலைக்காம்பின் மிருதுவான மேற்றோல் வெடித்துப் புண்ணாகிவிடும். குழந்தைக்கும் பால் குடிக்க முடியாது. பால் சுரங் கண்டு குளிர், நாவறட்சி, தலைவலி இவைகள் உண்டானால், ஸிட்லிஸ், (Seidlitz) பவுடரில் ஒரு தேயிலைக்கரண்டி வெந்நீரில் கலந்து நாளொன்றுக்கு ஒன்று அல்லது இரண்டு தடவை சாப்பிட்டு வந்தால் எவ்வித சுரமும் நீங்கும்.

(இரண்டாவது) முதலில் சுரக்கும் சீம்ப்பாலுக்கும் பிறகு சுரக்கிற பாலுக்கும் மெத்த வித்தியாசமுண்டு. சீம்ப்பாலைக் குடிப்பதனால் குழந்தையின் வயிற்றில் நிறைந்து தங்கியிருக்கும் கறுத்த பசளை நிறமான மலம் வெளியாகும். இந்தப் பால் குடிக்காவிட்டால் மலச்சுத்தி ஆகாது. "கல்லினுள் தேரைக்கும், கர்ப்பத்துப் பிள்ளைக்கும் கருத்துடனமுதளிக்கும்" கருணாகரன் குழந்தை பிறந்தவுடனே அதன் சரீரத்துக்கும் ஸ்திதிக்கும் தகுந்த ஆகாரத்தைத் தாயின் முலையில் அமைத்து வைத்திருக்கிறார்.

அப்படியிருக்க, அநேக நாட்டு மருத்துவ ஸ்திரீகள் வெற்றிலை ரசம், கள்ளிரசம் முதலிய பிரவர்த்தி மருந்துகளைக் கொடுத்துப் பிள்ளையின் வயிற்றைக் கெடுத்துவிடுகிறார்கள். ஐயோ பரிதாபம்! வாயில்லா ஜெந்துக்களை இவ்விதம் அவஸ்தைக்குள்ளாக்குகிறவர்களுக்குக் கொடிய தண்டனை விதிக்கப்பட வேண்டியது. இவ்வித ஔஷதங்களால் வயிற்றுவலி, வயிற்றுப்பிசம முதலியவை உண்டாகும். ஆனால், குழந்தையை ஸ்நானஞ் செய்வித்தவுடன் இரண்டு மூன்று தேயிலைகரண்டி குளிர்ந்த ஜலம் கொடுத்து வந்தால் வாய் சுத்தமாகிப் புண்ணாகாதபடி செய்யும். ஆகையால், இத்தேவிதம் பிரதிதினமும் குளிர்ந்த ஜலபானம் பண்ணுவிப்பதால் அநேக நன்மைகளுண்டு. குழந்தையின் பசியையும் ஒருவாறு தணிக்கும். இவ்விதஞ் செய்வதால் குழந்தை அமைதலாய் நித்திரை செய்யும். அதற்குள் தாயுந் தன் களைப்புத் தீர்ந்து பால் கொடுக்க ஆயத்தமாகிவிடுவாள். தாய் அவ்விதம் ஆயத்தமில்லாமலிருக்கும்பொழுதும் குழந்தை தூங்கும்பொழுதும அனாவசியமாய் அதை எழுப்பித் தொந்தரவு செய்யக்கூடாது.

அநேக ஆட்டுக்குட்டிகள் பிறந்த இரண்டு, மூன்று, நான்கு நாட்களாக ஒன்றுந் தின்னாமல் துள்ளிக்கொண்டு திரிவதை நாம் பார்க்கிறோம். ஆகையால் உன்குழந்தை உன்பக்கத்தில அமைதலாய்ப் படுத்துக்கொண்டு, மெலசாய் மூச்சுவிட்டுத் தூங்கினாலுஞ் சரி, தூங்காவிட்டாலுஞ் சரி, அது சுகமாயிருக்கிறது. அது தானாய்ப் பசியினால் அழுமவரை அதைத் தொந்தரவு செய்யக்கூடாது. பிறந்த இருபத்துநாலு மணிநேரத்திற்குள் அது பசியினால் அழும். அப்பொழுது பால் கொடுத்து உடுப்புமாற்றித் திரும்பவும தூங்கச் செய்யவேண்டும். இவ்விதஞ் செய்வதால சிசுவானது நன்றாய்த் தூங்கிச் சீக்கிரம் புஷ்டியாகும். குழந்தை பிறந்து இரண்டு மூன்று நாள் வரையில் தாய்ப்பாலையே குடித்துக் கொண்டு வந்தால் வேறு பிரவர்த்தி மருந்துகள் ஒன்றும் அவசியமில்லை. ஆனால் கஷ்டப் பிரசவத்தினால் தாய்க்குக் களைப்பு நேரிட்டுக் குழந்தைக்குப் பால்கொடுக்கச் சக்தியற்றிருக்கின், சர்க்கரை

யைத் தண்ணீர் விட்டுக் காய்ச்சி அதில் சில கரண்டியளவு குழந்தை பிறந்த ஒரு மணி நேரத்திற்குப் பிறகு கொடுக்கலாம். இவ்விதமே மூன்றுமணிக் கொருமுறை சேர்வைவார்க்கலாம். இரண்டு மூன்று நாளவரை தாய் பால்கொடுக்கச் சக்தியற்றவளா யிருந்தால் பசுவின் பாலுடன் தண்ணீரும் சாக்கரையும் கலந்து காய்ச்சிக் கொடுக்கலாம். இதற்குப் பதிலாகப் பசுவின்பாலைத் தாய்ப்பால்மாதிரி செய்யும் முறையைக் கையாடுவது மிக உத்தமம். குழந்தை பிறந்த முதல்வாரத்தில் தாய் ஒரு பக்கமாய்ச் சாய்ந்து படுத்துக்கொண்டு குழந்தைக்கு ஸ்தன்யபானம் செய்விக்கலாம். முதல் மூன்றுநாளும் குழந்தைக்குப் பால்குடிக்கத் தெரியாமல் வெகு சொற்பமாய்க் குடிக்குமாகையால் அதற்கு அடிக்கடி முலை கொடுக்கவேண்டும். குழந்தையின் சக்திக்குத் தக்கது ஒன்று, இரண்டு அல்லது மூன்றுமணிக் கொருதடவை பால் கொடுக்க வேண்டும். ஆனால் காலக்கிரமந் தப்பாமல் கொடுக்கவேண்டும். பகலில் சரியான வேளையில் பால் கொடுத்து வந்தால் இரவில் இரண்டொரு தடவைக்குமேல் பால் கொடுக்கவேண்டியதில்லை. ஆனால் முதலமாதம் இரவில மூன்றுதடவை பால் கொடுக்கலாம். அதற்குப்பின் இரவில் பால் கொடாமலே தூங்கச் செய்வது மிகவும் நலல வழக்கம். குழந்தை அழும்போதெல்லாம் பால்கொடுப்பது நல்லதல்ல. சில சமயம் தாகத்தால் அழும். அதற்குக் குளிர்ந்த ஜலம் குடிக்கக் கொடுக்க வேண்டும். குழந்தை பால குடிக்க மறுக்கும்போது தண்ணீர் அவசியம் குடிக்கும். இவ்விதம் தண்ணீர் குடிப்பது ஜீரணசக்தியை விர்த்தியாக்கும். குழந்தை ஒருவயதாகும் வரைக்கும் தாய்பாலைவிடச் சிறந்த ஆகாரம் வேறில்லை.

குழந்தை அழும்போதெல்லாம் பால் கொடுத்தால் குழந்தைக்கு அஜீரணம், வயிற்றுநோய், வயிற்றுப்போக்கு முதலானவை உண்டாவதுமன்றித் தாயும் பலவீனமடைவாள். ஒரு மாதம் கழிந்தபின் பகலில் மூன்றுமணிக் கொருதரமும் இரவில் தாய் படுக்கைக்குப் போவதற்குமுன் ஒருதடவையும் மறுபடியும் விடியல் சாமத்திற்கு ஒருதடவையுங் கொடுத்தால் தாய்க்கும் குழந்தைக்கும் ஆரோக்கியமுண்டாகும். இப்படிச் செய்வதால் தாய்க்கு ஆறு, அல்லது ஏழுமணி நேரம் நித்திரை கெடாமல் தேகாரோக்கிய முண்டாகும். இதனடுவில் குழந்தைக்கு ஆகாரம்வேண்டுமென்று தோன்றினால் ஒரு காண்டி பசுவின்பாலில் ஒரு கரண்டி தண்ணீர் சேர்த்துக் காய்ச்சிக் கொடுத்தால் போதும்.


சுகதேகியின்பால்.


நோயாளியின்பால்.

## செவிலித்தாய் அனுசரிக்க வேண்டிய ஒழுங்கு.

தாய்க்குப் பாலில்லாமல் குழந்தைக்கு வேறு பால்கொடுக்க நேரிட்டால் அப்போது ஒரு தாதியை ஏற்படுத்தவேண்டும். தாதியானவள் சுகதேகியும், பலமுள்ளவளும், இளம்பருவமுடையவளும், நன்னடக்கையுள்ளவளும், மேக சம்பந்தமான வியாதியில்லாதவளும், மூன்று நான்கு மாதத்துக்கு முன்தான் குழந்தை பெற்றவளுமாய் இருக்கவேண்டும். தாதியின் சொந்தக் குழந்தை நோயால் மெலிந்திராமல் பருத்திருந்தால் அவள் பாலில் நலல சத்து இருக்கிறதென்று அறியலாம். தாதிக்குப் புஷ்டியான ஆகாரம் பால், பாற்கஞ்சி முதலியவை யதேஷ்டமாய்க் கொடுக்கவேண்டும். மேலும் அவள் நல்ல காற்றில் உலாவிப் பிரதிதினமும் தேகாப்பியாசஞ் செய்து வந்தால் குழந்தைக்கு ஆரோக்கியமுண்டாகும். ஓயின், சாராயம், பிராந்தி முதலான போதை வஸ்துக்களைத் தாதி சாப்பிட்டால் ஒருவேளைப் பால் அதிகப்பட்டபோதிலும் அதன் குணங் கெட்டுக் குழந்தையின் சரீரத்திற்கு நஞ்சு சென்று அதன் சுகத்தைக் கெடுக்கிறதுமல்லாமல் குணத்தையுங் கெடுத்துக் குடிகாரனுக்கிவிடும். அதெப்படியெனில:—ஓர் சிறு செடியின் பட்டையில் ஒரு எழுத்தைக் கத்தியினால் வெட்டிவைப் போமாயின் செடி வளர வளர அந்த எழுத்தும் விரிந்து செடி பெரிய மரமானவுடன் எழுத்தும் பெரிதாகிவிடும். இதே மாதிரி பால் கொடுக்கிறவளுடைய சுபாவமும் தன்மையும், அவள் கொடுக்கும் பாலின் மூலமாய் சிசுவினுட்சென்று பதிந்து விடுமாதலால், தெய்வ பக்தியும், சற்குணமும், புத்தி தீக்ஷண்யமுமுடைய மாதைச் செவிலித் தாயாகத் தெரிந்துகொள்ள வேண்டும். தாதியானவள் மீனெண்ணெய் (Cod Liver Oil), முத்துச்

சுன்னங் கலந்த மால்ட் (Malto Phosphate of Lime) முதலிய வற்றைச் சாப்பிட்டு வரத் தனக்கும் பிள்ளைக்கும் புஷ்டியும் பலமும் உண்டாகும். செவிலித்தாய் அளவுக்கு மிஞ்சிப் போஜனம் பண்ணினால் பிள்ளைக்கு அஜீரணமுண்டாகி வயிறு உப்பி மாந்தம் முதலான வியாதிகள் உண்டாகுமாதலால் பத்தியமாகவேயிருந்து கடலை, மொச்சை, கெட்டுப்போன மீன் முதலிய வாய்வு பதார்த்தங்களைச் சாப்பிடக்கூடாது.

பால் கொடுத்துவரும் ஸ்திரீ பிரதிதினமும் தான் சாப்பிடும் போது முத்து பஸ்பம் (Phosphate of Lime) இதில் இரண்டுவிரலால் ஒரு சிட்டிகை எடுத்து வெண்ணெயில கலந்து ரொட்டியோடு சேர்த்துச் சாப்பிடவேண்டியது. இச்சுண்ணும்பு தாய்க்குச் சௌக்கியத்தைக் கொடுப்பதுடன் பாலின் குணத்தையும் விர்த்தி செய்து குழந்தையின் தேகத்தைப் பலப்படுத்துகிறது. குழந்தைக்கு வாந்தி அல்லது பச்சை நிறமாய்க் கழிதல் முதலிய அஜீரண நோய்கள் உண்டாகுங் காலத்தில் தாய் இந்த முத்துப் பஸ்பத்தைச் சாப்பிட்டு வருவதால் குழந்தைக்குச் சுகமுண்டாகும்.

## பாலில்லாக் குழந்தைகளைக் காப்பாற்றும் வகை.



சரியான செவிலித்தாய கிடையாதபட்சத்தில் கழுதைப் பால் அல்லது வெள்ளாட்டுப்பாலில் கொஞ்சம் சர்க்கரையும் மூன்றிலொருபாகம் வெந்நீரல்லது சுண்ணும்புத் தெளிவுநீர் கலந்துகொடுக்கவேண்டும். இவை கிடையாத பக்ஷத்தில் பசுவின் பாலில் மூன்றிலொரு பங்கை இருபங்கு வெந்நீரில் கொஞ்சம் சர்க்கரையுங் கலந்து கொடுக்கலாம். மாந்தம், வயிற்றுப்போக்கு முதலியவை உண்டானல் வெந்நீருக்குப் பதிலாகச் சுண்ணும்புத் தெளிவுநீர் சேர்ப்பதனல் குழந்தைக்கு ஆரோக்கியமுண்டாகும். குழந்தைக்கு யாட்டுப்பால கொடுக்கும் காலமெல்லாம் ஒரே பசுவினின்றும்

சார்ந்த பாலைக் கொடுப்பது நல்லது. அந்தப் பசு நாலு வயதுக்குக் கீழ்ப்படாததும், பத்து வயதுக்கு மேற்படாததும், ஒன்று அல்லது இரண்டு மாதத்திற்குமுன் கன்று போட்டதும், சுகதேகமும், சாந்தமான குணமுடையதுமாய் இருக்கவேண்டும். அதைத் தினந்தோறும் குளிப்பாட்டி நல்ல தீனி போட்டு வெகு பத்திரமாய்ப் பார்த்து, ஒரே ஆள் குறித்த நேரங்களில் காலையும் மாலையும் பால் கறக்கவேண்டும். சில பசுக்களின் பால் குழந்தையின் சரீரத்திற்கு ஒத்துக்கொள்ளாது. மேற்சொன்ன பிரகாரம் அதிகக் கவலையோடு பால் கறந்தபொழுதிலும் அதை உடனே போத்தல்களில் அடைத்துச் சீல்போட்டு வைக்காவிடில் அநேக கிருமிகள் அதிலுற்பத்தியாகிக் குழந்தைக்கு அசௌக்கியத்தை உண்டு பண்ணும்.

ஆரம்பத்தில் பசுவின்பால் ஒருபங்கும் சுத்தஜல மிருபங்கும் சேர்த்தபோதிலும் நாட் செல்லச் செல்லப் பாலை அதிகப்படுத்திக் கொண்டு வரவேண்டும். நாலு மாதமானவுடன் பாலுந் தண்ணீரும் சமபாகங் கலந்து காய்ச்சிச் சர்க்கரை சேர்த்துக் கொடுக்க வேண்டும். நல்ல பசுவின்பால் அகப்படாவிட்டால் தகரத்தில் அடைத்து வருகிற கட்டிப்பாலை (Milk Maid Brand Condensed Milk) உபயோகப்படுத்தலாம். ஆனால், எதாவ தொருவிதப் பாலைத் தவிர வேறொன்றையும் ஆகாரமாகக் கொடுக்கக்கூடாது. தேவையானால் மூன்று மாதத்திற்குப்பின் மெல்லின்ஸ் பூட் (Mellin's food) அல்லது ஆலன் பரிஸ்பூட் (Allenbury's Food for Infants) அல்லது ஹார்லிக்ஸ் மால்டட மில்க (Horlick's Malted Milk) என்னும் பால்மாவைக் கொடுக்கலாம்.

குழந்தை பால் குடித்தானவுடன் பால் கொடுக்கும் புட்டியில் மிகுதியா யிருக்கும் பாலைக் கொட்டிவிட்டுப் புட்டியையும் ரப்பர் குழாய் அடைப்பான் முதலியவைகளையும் நன்றாய்க் குலுக்கிக் கழுவித் துடைத்துவிட்டுத் திருப்ப உபயோகிக்கும் வரையில் தண்ணீருள்ளேயே போட்டு வைக்கவேண்டும். இப்படிப் பால் புட்டியைச் சுத்தம் செய்யாவிடில் பால் புளித்துப்போய்க் குழந்தையின் வயிற்றில் நோய் உண்டாகும்.

குறித்த நேரங்களில் மட்டுமே குழந்தைக்குப் பால்கொடுக்க வேண்டும். பல் முளைக்கும்வரை இவ்விதம் புட்டிப்பால் கொடுத்து வரலாம்.

---

## பசுவின் பாலைத் தாய்ப்பால் மாதிரி செய்யும் விதம்.



குழந்தைக்குத் தாய்ப்பால் கொடுக்க முடியாத சமயங்களில் பசுவின்பாலைத் தண்ணீரும் சர்க்கரையுங் கலந்து காய்ச்சிக் கொடுப்பது வழக்கமா யிருந்தபோதிலும், இது அநேகங் குழந்தைகளுக்கு ஒத்துக்கொள்ளாமல் மாந்தம், வாய்ப்புண், முதலியவற்றை உண்டாக்குகிறது. டாக்டர் பிராங்கிலேன் Dr. Frankland ஸ்திரீயின் பால், கழுதைப்பால், பசுவின் பால் முதலிய பாலகளை வெகு திட்ப நுட்பமாய்ப் பரீக்ஷித்துப் பார்த்துப் பசுவின் பாலுக்கும் தாய்ப்பாலுக்கும் உள்ள வித்தியாசங்களைக்கண்டு பிடித்ததுடன், பசுவின்பாலைத் தாய்ப்பால் மாதிரியாக்கும் விதத்தையுங் கண்டு பிடித்திருக்கிறார். அவர் கண்டு பிடித்திருப்பது யாதெனில்:—

| | ஸ்திரீ. | கழுதை. | பசு. |
|---|---|---|---|
| காசேய்ன் (Casein) | 2·7 | 1·7 | 4·2 |
| வெண்ணெய் | 3·5 | 1·3 | 3·8 |
| பாலின்சர்க்கரை (Milk Sugar) | 5·0 | 4·5 | 3·8 |
| உப்பு | ·2 | ·5 | ·7 |

மேலே குறிக்கப்பட்ட அட்டவணையினால் பசுவின் பாலிலிருந்து மூன்றிலொரு பாகம் காசேய்னை (Casein) எடுத்துவிட்டு மூன்றிலொரு பாகம் பால் சர்க்கரை (Milk Sugar) சேர்ப்பதினால் அது ஏறக்குறைய மனுஷப் பாலுக்குச சரியாய வரும். அதைச் செய்யும் விதமாவது:—

ஒரு பாத்திரத்தில் ஆழாக்குப் பசுவின்பாலைப் பன்னிரண்டு மணிநேரம் விட்டுவைத்து அதன்மேல் தங்கும் பாலேட்டை எடுத்து அந்த ஏட்டைப் புதிதாய்க்கறந்த இரண்டு ஆழாக்கு பசுவின் பாலில் போட்டு வைக்கவேண்டும். ஏட்டை எடுததுவிட்ட ஒரு ஆழாக்குப் பாலோடு ஒரு சதுர அங்குலம் ரன்னற (Rennet) துண்டு சேர்த்து இந்தப் பாலிருக்கும் பாத்திரத்தை வெந்நீரில் போட்டுப் பால் கட்டிப்போகும்வரை பத்து அல்லது பதினைந்து நிமிஷம் வரைக்கும் வைத்திருக்கவேண்டும்.

பால் கட்டியாகத் தொடங்கினவுடனே அந்த ரன்னற் துண்டை எடுத்து ஒரு கோப்பையில் போட்டு வைத்தால் இதேமாதிரி இன்னும் ஒன்று அல்லது இரண்டு மாதம் அதை உபயோகிக்கலாம்.

கட்டிப்போன பாலை நன்றாய்க் கடைந்து மோரை எடுத்து அதை ஒரு பாத்திரத்தில் விட்டுக் கொதிக்கக் காய்ச்சினால் இன்னும் கொஞ்சம் காசேய்ன் திரளும். அப்படிக் கொதிக்கிற மோரை எடுத்து மெல்லீஸ் துணியினால் வடிகட்டினால் தெளிந்த நீர் இறங்கும்.

இப்படித் தெளிந்த நீரில் 110 குன்றுமணி யெடை பால் சர்க்கரைத் தூள் (Milk Sugar) கலந்து முன் எடுபோட்டு வைத்திருந்த இரண்டு ஆழாக்குப் பாலோடு கலந்தால் அது முலைப் பாலுக்குச் சமானமான பாலாயிருக்கும். இந்தப் பாலைக் காய்ச்சின பன்னிரண்டு மணிக்குள் உபயோகிக்க வேண்டியது. அதற்குமேல் வைத்து உபயோகிக்கக்கூடாது. இந்தப் பால் செய்வதில் உபயோகிக்கப்படும் பாத்திரங்களை யெல்லாம் வெகு சுத்தமாய் வைத்துக்கொள்ளவேண்டும்.

இது முதலில் கஷ்டம்போல் தோன்றினாலும் சற்று கை பழகிக் கொண்டால் வெகு எளிதில் செய்யலாம். இதை முதலில் கரண்டியினால் கொடுக்கலாம். குழந்தைக்குப் பால் புட்டியில் குடிக்கத் தெரிந்தவுடன் இரண்டு பால்புட்டி உபயோகிக்கவேண்டும். அதில் ஒன்றை உபயோகித்தவுடன் ரப்பர் காம்பை எடுத்து விட்டுச் சோடாத் தூள் கலந்த தண்ணீரில் போட்டுவைக்கவேண்டும். வேண்டியபொழுது அதைத் தண்ணீரிலிருந் தெடுத்துக் குலுக்கிவிட்டால் சுத்தமாகிவிடும். ரப்பர் காம்பைக் கையினால் சுத்தம் செய்யவேண்டும். ரப்பர் குழாயுள்ள பால்புட்டி உபயோகிக்கக்கூடாது.

## நாலு வயதுவரைக்கும் குழந்தையின் ஆகாரம்.
## (Infant's Food up to four years of Age.)

முன்பல் இரண்டு முளைத்தவுடன் மெல்லின்ஸ்பூடும் (Mellin's Food) பாலும், ரொட்டியும் முலைப்பாலுடன் கொடுத்து வரலாம். பதினெட்டு மாதமானவுடன் அரைவேக்காடாய்ச் சமைத்த கோழிமுட்டை, நல்ல பால், ரொட்டி, கொக்கோ, அரோரூட்மாவு அல்லது கான்ப்ளவர் சேர்ந்த கஞ்சி, ரவை, ஜவ்வரிசிக்கஞ்சி, புழுங்கலரிசி நொய்க்கஞ்சி, கேழ்வரகுக் கஞ்சி முதலியவைகளைக்











கொடுத்து வரலாம். இரண்டு வயதானபின் நன்றாய்ச் சமைத்த சாதத்தில் குழைந்த பாகத்தை யெடுத்து மிளகு ரசம், பருப்பு ரசம் அல்லது மாமிச ரசத்தில் பிசைந்து இரண்டுவேளை கொடுக்கலாம். பிஸ்கோத்தும் கொடுத்துவரலாம். மூன்று வயதாகுமுன் குழந்தைகளுக்குப் பெரியவர்களைப்போல் ஆகாரங் கொடுப்பது மிக்க மதியீனமும் கெடுதியை யுண்டாக்கத்தக்க பாவமுமா யிருக்கிறது. ஏனெனில், அப்படிச் செய்வதால் குழந்தைகளுக்கு இரைப்பை, குடல், நரம்புகள் முதலியவைகளைப் பற்றிய அநேக வியாதிகள் உண்டாகும். நாலு வயதாகுமட்டும் மாமிசபோஜனம் கொடுக்கவே கூடாது. அப்படிக் கொடுப்பதனால் குழந்தைகளின் சுகம் கெட்டுப்போவதுமன்றி அவர்கள் குணத்தையுங் கெடுத்துக் கோபம், மூர்க்கம், சண்டை, சச்சரவு செய்தல் முதலிய சுபாவங்களை யுண்டாக்கும். கேசன் என்னுமிடத்தில் (Giessen) என்னுமிடத்தில் பல பொருட்காட்சிச்சாலையில் (Museum) ஒரு காடிக்குட்டிக்கு ரொட்டி மட்டும் கொடுத்து வளர்த்த காலத்தில் மிகச்

சாந்தமும் அமைதியுமாய்ச் சிறு பிள்ளைகளோடு விளையாடிக் கொண்டிருந்ததாம். ஆனால் மாமிச போஜனம் சாப்பிட்ட சில நாட்களுக்குள் மிக மூர்க்கமும் வெறியுமுண்டாகிக் கேடு விளைவித்ததாக வாசித்திருக்கிறோம்.

குழந்தைகளுக்குச் சர்க்கரையால் செய்த சூப்பி, வெல்லம், மிட்டாய், பாலேடு, பால்கட்டி, பித்தளை அல்லது தகரப் பாத்திரங்களில் அதிகநேரம் வைத்திருந்த பால் முதலியனவைகளைக் கொடுக்கப்படாது. குழந்தைகள் சில சமயம் வயிறு நிறைந்திருக்கும் பொழுது கள்ளப்பசியால் அழுது தொந்தரவுபடுத்துவதுண்டு. அதை நிறுத்தும்பொருட்டுப் பால் கொடுக்காமல் ஒரு காய்ந்த ரொட்டித்துண்டைக் கையில் கொடுத்தால் அதைக் கடித்துக் கொண்டிருந்து அழுகை நின்று பசியைப் பற்றிய எண்ணம் மாறிப்போகும்.

## பால் கொடுக்கத் தகாத காலம்.

தாயின் ஸ்தனங்களில் அதிகமாய்ப் பால் கட்டியிருக்கும் போது அந்தப் பாலின் தன்மை கெட்டுப்போய் மிக்க ஜலமாகவேயிருக்குமாதலால் குழந்தையின் குடலைக் கெடுத்துவிடும். அதற்குப் பதிலாகப் புட்டிப்பால் கொடுப்பதே நலம். மேலும் ஒரு ஸ்தனத்தில் கட்டியுண்டாகியிருந்தால் அதிலுள்ள பாலைக் கொடுக்காமல் மறு ஸ்தனத்தில் ஸ்தன்யபானம் செய்விக்கவேண்டும். மேலும், தாய் கடும் பிரயாணஞ் செய்தவுடனும், திடீரென்று சந்தோஷ செய்தி கேட்டவுடனும், அதிக விசனம், கோபம், கவலை, வெறுப்பு, திகில், பயம், நடுக்கம், மனக்கிலேசம் முதலியவைகளிலிருக்கும் போதும் குழந்தைக்குப் பால் கொடுக்கவே கூடாது. அநேக ஸ்திரீகள் மற்றவர்களோடு சண்டைபோட்டுக் கொண்டிருக்கும்பொழுதே பால் கொடுக்கிறார்கள். இவ்விதமாய் ஆவேசத்துடனும் கோபத்துடனும் தன் சரீரத்திலுள்ள உதிரமெல்லாங் கொதித்துக் கொண்டிருக்கும்போது பால் உடனே விஷமாக மாறிவிடும். அவ்வித பாலைச் சாப்பிட்ட பிள்ளைகளில் அநேகர் பாலைக் குடித்துக் கொண்டிருக்கும்போதே மூர்ச்சையடைந்து பிராணனை விட்டிருப்பதை நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். தாய்க்கு மார்பு துடித்தல், க்ஷயரோகம், தோலில் இரணம் முதலிய மேக சம்பந்தமான வியாதிகள், மிக்க பலவீனம், முதலிய ஸ்திதியிலிருந்தால் அவள் பால் கொடுக்கவே கூடாது. தாய்க்குச் சுரம், வைசூரி, பிளேக் முதலிய தொற்றுவியாதிகளிருக்கும் பொழுதும், குழந்தை யுண்டாயிருக்கும்பொழுதும் பால் கொடுக்கவேகூடாது.

## பால் மறப்பிக்குங் காலம்.









சிசுவானது எவ்விதமாய்த் தன் மாதாவின் உதரத்தினுள் ஒன்பது மாத காலமிருந்து வளர்ந்து விர்த்தியாகின்றதோ அதே விதமாக இவ்வுலகத்தில் தோன்றியபின்னும் ஒன்பது மாதங்களுக்குத் தன் அன்னையின் முலைப்பாலை அருந்தி விர்த்தியாக வேண்டுமென்பது சிருஷ்டி கர்த்தரின் நியமம். ஆதலால், ஒன்பது மாதத்திற்கு முன் குழந்தையைப் பால் மறப்பித்தால் அதற்குச் சரியான பலனும் தேகபுஷ்டியும் உண்டாகா. அதேவிதமாய் ஒன்பது மாதமானபிறகும் பால்கொடுத்து வருவதால் குழந்தை வெளிறிப் பலவீன மடைவதுமன்றி அஜீரமுண்டாகி, மூளையில் சக்தி குறைந்து, மந்த புத்தியும், சில சமயங்களில் பைத்தியமு முண்

டாகும். தாய்க்கும் முதல் ஒன்பதுமாத மட்டும் குழந்தைக்குப் பால் கொடுப்பதால் கர்ப்பாசய சம்பந்தமான வியாதிகள் அணுகாமல் ஆரோக்கியமா யிருப்பாள். ஆனால் அதற்குப் பின் பால் கொடுத்துவரின் தாய்க்குச் சரீர சௌக்கியங் குன்றி, நரம்புத் தளர்ச்சி யுண்டாகி, கண்ணொளி மழுங்கி, செவிமந்தமாகி, வாய்ப் பேச்சு முதலாய்க் குளறிப்போகும். ஆனால் தாயின் சக்திக்கும் குழந்தையின் பலனுக்கு நந் தக்கதாகச் சில மாதங்களைக் கூட்டி அல்லது குறைத்துக் கொள்ளலாம். உதாரணமாக:—தாய் அதிகப் பலவீனமா யிருந்தால் ஆறு மாதத்தில் பால் மறப்பிக்கவேண்டும். குழந்தை பலவீனமா யிருந்தால் பத்து அல்லது பன்னிரண்டு மாதம் வரையில் பால் கொடுக்கலாம். ஒரு வருஷத்திற்கு மேல் பால் கொடுப்பதால் தாய்க்கும் பிள்ளைக்கும் கெடுதி நேரிடுமே யன்றி நன்மை உண்டாகமாட்டாது.

ஆனால் திடீரென்று பாலை நிறுத்தாமல் சிறிது சிறிதாகப்பால் குடி மறப்பிக்க வேண்டும். ஆறுமாதமானவுடன் பாலை ஒவ்வொரு நேரங்களில் நிறுத்தி அதற்குப்பதிலாக மெல்லின்ஸ்பூட் (Mellin's Food) கொடுத்து வரலாம்.

## பால் வற்றச் செய்யவேண்டிய முறை.

பால் வற்றச் செய்யுங் காலத்தில் சில சமயம் பால் கட்டிக் கொண்டு மார்பு வீங்கிச் சுரம் வரும். ஆதலால் அக்காலத்தில் தாயானவள் சாப்பாட்டை வெறுத்துத் தண்ணீர் குடிக்கக்கூடாது. ஒரு மெல்லிய துணியை ஓடிக்கலான் (Eau-De-Cologne) திராவகத்தில் நனைத்து மார்பில் கட்டி வைக்க வேண்டும். இதற்குப் பதிலாக ஓடிக்கலானும் ஒலிவ் எண்ணெயுங் கலந்தும் மார்பில் போடலாம். இல்லாவிட்டால் பெல்லொடோனா, (Extract Belladona) என்னும் மருந்தை கிளிசரின், (Glycerine) என்னு மெண்ணெயில் கலந்து மார்பில் பற்றுப் போட்டால் மார்பு வீக்கத்தின் நோய் தீரும். பெல்லொடோனா பிளாஸ்றரை (Belladona Plaster) அல்லது சோப்பிளாஸ்றர் (Soap plarter) வெளியில் வரத்தக்கதாக நடுவில் சிறு துவாரஞ் செய்து ஸ்தனத்துக்குப் போடப் பால் வற்றிவிடும். சிலர் மல்லிகைப்பூ, கோஸ்கீரை, வேப்பிலை முதலியவற்றை வைத்துக் கட்டுவார்கள். வெற்றிலையை வதக்கிவைத்துக் கட்டினாலும் பால் வற்றிவிடும். கரியபோளத்தையு மரைத்துப் பூசலாம்.

பால் கட்டிக்கொண்டு தொந்தரை உண்டானால் ஒரு உப்பு பேதிக்குக் கொடுக்க வேண்டும். எப்ஸம் சால்ற், (Epsom salt) சுக்குக் கஷாயத்தில் கலந்து காலையில் கொடுத்தால் ஐந்தாறு தட-

வை நன்றாய்ப் பேதியாகிப் பால் வற்றிவிடும். பாலை வற்றச் செய்யும்படி வாயினாலாவது அல்லது வேறெந்தக் கருவிகளினாலாவது பாலை உறிஞ்சி எடுத்தால், பால் அதிகமாய்ச் சுரந்து கட்டியுண்டாகும்.

இக்காலத்தில் குழந்தை பால்குடிக்க ஆசைப்பட்டால் தாய் முலைக்காம்பில் வேப்பெண்ணெய் அல்லது கரியபோளத்தை அரைத்துப் பூசினால் அவற்றாலுண்டாகும் கசப்பால் பிள்ளை பால் குடி மறந்துபோம். குழந்தையைத் தாயின் பக்கத்தில் அடிக்கடி வரவிடாமல் பிரித்து வைக்கவேண்டும். பால்குடி மறந்த பிள்ளையைத் திரும்பப் பால் குடிக்கச் செய்வது மதியீனம். கற்பூரத்தைத் தேங்காயெண்ணெயில் கலந்து இளஞ்சூடுண்டாக்கித் தினந்துக்கு மூன்றுதடவை அடியிலிருந்து காம்புக்கு நேராகத் தடவிவிட வேண்டும்.

## குழந்தை தூங்கவேண்டிய கிரமம்.

ஆரம்பத்தில் சில மாதங்களுக்குக் குழந்தையைப் பால்குடிக்கும் சமயந் தவிர மற்ற நேரங்களிலெல்லாம் தாயின்படுக்கைக்குச் சமீபத்திலுள்ள ஒருகட்டில் அல்லது தொட்டிலில் தூங்கவைக்க வேண்டும். ஏனெனில் தனிமையாய்ப் படுத்திருப்பதால் சுத்த ஆகாயம் எளிதில் சுவாசிக்கலாம். தாயுடன் குழந்தையைப் படுக்க வைப்பது மிகக் கெடுதி. குழந்தைகளைத் தூங்க வைக்கும்படிப் பால் கொடுப்பதும், தொட்டிலில் விட்டுத் தாலாட்டித் தூங்கப்பண்ணுவதும், கையிலாவது மடியிலாவது வைத்து ஆட்டித்தூங்கச்செய்வதும், தூங்கும்படி மருந்துகள் கொடுப்பதும் நல்ல வழக்கங்களல்ல. குழந்தையைத் தொட்டிலில் கிடத்தி, அது தானாகவே தூங்கும்படி செய்யவேண்டும். ஆரம்பத்தில் அழுதாலும் அதைக் கவனிக்கக்கூடாது. அப்பொழுது அது தானே யழுது வாய்மூடித் தூங்கிவிடப்பழகும். அது தூங்கினபின் அதை எழுப்பவே கூடாது. குழந்தையைக் குறித்த நேரங்களில் கிரமமாய்த் தூங்கும்படி நாம்பழக்கினால் அதுவே வழக்கமாகிவிடும். தாய்க்கும் தன் வீட்டுக் காரியங்களைக் கவனிக்க நேரங் கிடைக்கும். இரவில் வெகுநேரம் குழந்தையைத் தூக்கமின்றி வைத்திருக்கக் கூடாது. மாலை ஆறு ஏழு மணிக்கெல்லாம் படுக்கையில் விட்டுவிட வேண்டும். குழந்தை படுக்குங் கட்டிலின் தலைப்பக்கம் ஜன்னலுக் கெதிரா யிராமல் அதன் சமீபத்திலிருக்கவேண்டும். ஏனெனில் குழந்தை பிறந்த இரண்டு, மூன்று வாரங்களுக்கு அதன் கண் அதிகம் வெளிச்சந் தாங்காது. விழித்திருக்கும்போது இருக்கிறதைவிடத் தூங்கும்போது உடுப்புகள் அதிகத் தளர்த்தியாயிருக்கவேண்டும்.

## குழந்தையின் உடை.

குழந்தையின் கை, பாதம் இரண்டையும் எப்பொழுதும் அனலாகவே வைத்திருக்க வேண்டும். ஆதலால், அதன் கை, கால், தோள் முதலியவற்றைக் கம்பளி உடுப்பால் மூடி வைக்கவேண்டும். மேலும், குழந்தையானது கைகளையும் கால்களையும் லகுவாய் ஆட்டி யசைக்கத்தக்கதாக உடுப்பு தளர்த்தியா யிருக்க வேண்டும். பாதங்களிற்போடும் கம்பளிமேல்ஜோடும் பெரிதாயும் தளர்வாயு மிருக்கவேண்டும். எந்தக் காரணத்தினாலும் குழந்தைகள் ஈரமான உடுப்புகளோ டிருக்கவே கூடாது. குழந்தைகளுக்குப் போடும் உடுப்பு அதிக முரடா யிராமல், லேசானதா யிருக்க வேண்டும்.

பிள்ளைகளுக்குக் குண்டூசி, சேவ்றி பின், (Safety Pin) முதலியவைகளை உபயோகிக்கவே கூடாது. ஏனெனில், அவைகளினால் அதிகத் தீங்கு உண்டாகலாம். அதைவிடத் தாயானவள் ஒவ்வொரு பாகத்தையும் நூலினால் சேர்த்து வைத்துத் தைத்துவிடல் நன்று.

ஒவ்வொரு நாளும் உடுப்பு மாற்றவேண்டும். அப்படித் தினந்தோறும் மாற்ற முடியாவிட்டால் இரவில் படுக்கைக்குப் போகுமுன், பகலில் போட்டிருந்த உடுப்பைக்கழற்றி அதிலுள்ள வியர்வை நாற்றம் முதலியவைகள் போகத்தக்கதாகச் சுத்தஆகாயமுள்ள இடத்தில் விரித்துப் போட்டுவிட்டு, அதிகாலையில் எடுத்துத் திரும்பவும் உபயோகிக்கலாம்.

குழந்தைகளுக்குத்தலையில் தொப்பி போடவேண்டியது அவசியமில்லை. ஏனெனில் அவர்களின் தலை எப்பொழுதும் குளிர்ச்சியா யிருத்தல் நல்லது. அதுவுமல்லாமல், தொப்பி போடுகிறதனால் தலையில் அதிக வியர்வையுண்டாகி ஜலதோஷம் பிடிக்க ஏதுவாகும். ஆனால் குளிர்காலங்களில் பிள்ளைகளுக்கு ஜலதோஷமுண்டாகாதபடிக்கு, மெல்லியகம்பளித்துணியைத் தொப்பிமாதிரியாகத் தைத்துத் தலைக்குப் போடுவது நல்லது.

## குழந்தையின் ஸ்நாநம்.

குழந்தைக்குப் பிரதிதினமும் அல்லது ஒன்றுவிட்டு ஒரு நாள் இளம் வெந்நீரில் வைநோலியா சோப், (Vinolia Soap) போட்டு ஸ்நாநம் செய்விக்கவேண்டும். குழந்தைக்குப் பால்கொடுத்த வுடனே ஸ்நாநம் செய்விக்கக்கூடாது. ஐந்து நிமிஷத்திற்கு




சாமிவேலின் சிங்கமார்க்கு

## பாலாமிர்தம். (Infant Preservative.)

குழந்தைகள் உண்ணும் ஆகாரம் எளிதில் ஜீரணிக்காததால் அவர்களுக்கு அஜீரணம், வயிற்றுப்பிசம், நெஞ்செரிவு, வயிற்றுப பொருமல், வாந்தி, மலச்சிக்கல், வயிற்றோட்டம், வயிற்றுவலி, வாய்நாற்றம் பல ரோகங்களுண்டாகின்றன. இந்த உத்தம ஔஷதத்தை உபயோகிப்பாடி வருவதால் குழந்தைகளின் குடலையொட்டிய பல ரோகங்களையும், வாய்ப்புண், பச்சையாய்க் கழிதல் முதலியவைகளையும் நிவாரணஞ்செய்து, குழந்தைகளுக்கு அழகையும் வலுவையுந் தரும். பல் முளைக்குங் காலத்தில இதைக் கையாடி வருவதினால் அநேக நன்மைகளுண்டு. ஒவ்வொரு வீட்டிலும் இருக்க வேண்டிய அத்யாவசியமான ஔஷதங்களில் இந்தப் பாலாமிர்தமும் ஒன்று.

சாப்பிடும் விதம்:—ஒருவாரத்திற்குட்பட்ட குழந்தைகளுக்கு 2 முதல் 4 துளி, ஒரு வாரத்திற்குமேல் 3 முதல் 6 துளி, ஒரு மாதக் குழந்தைகளுக்கு 5 முதல் 10 துளி, மூன்று மாதக் குழந்தைகளுக்கு 10 முதல் 20 துளி, ஆறு மாதக் குழந்தைகளுக்கு 20 முதல் 30 துளி, ஒரு வருஷக் குழந்தைகளுக்கு 1 தேயிலைக் கரண்டி, ஒரு வருஷத்திற்குமேல் 1 முதல் 2 தேயிலைக்காண்டி வரை பாலில் கலந்து கொடுக்கவும். பெரியவர்களுக்கு 2 தேயிலைக் கரண்டி.

---

விலை ரூ. 1.



சாமிவேலின் சிங்கமார்க்கு

## பாலர் இருமல் நிவாரணி. (Children's Cough Relief)

இந்த மகா அருமையான ஔஷதம் ஓயாத இருமல், சளி, கக்குவான், வாந்தி, அஜீரணம், தலைவலி, வாய்வு, தெக்கத்திக்கணை முதலிய ரோகங்களை வெகு எளிதில் சுகமாக்கும். இதில் விலையுயர்ந்த பல அருமையான சரக்குகள் சேர்ந்திருந்தபோதிலும், இதனால் பலனடையும் குழந்தைகளின் நன்மையைக் கருதி சொற்ப விலைக்குக் கொடுக்கிறோம்.

சாப்பிடும் விதம்:—பெரியவர்களுக்கு ஒரு தேயிலைக்கரண்டி. ஒரு வாரத்துக்குட்பட்ட குழந்தைகளுக்கு 2 துளி, ஒரு வாரக் குழந்தைக்கு 4 துளி. ஒரு மாசக் குழந்தைக்கு 7 துளி. மூனறு மாசக் குழந்தைக்கு 15 துளி. ஆறுமாசக் குழந்தைக்கு 20 துளி. ஒருவருஷக் குழந்தைக்கு 30 துளி. இதைத் தண்ணீரில் கலந்து கொடுக்கவும்.

---

சீசா 1-கு விலை ரூ. 1.



சாமிவேலின் சிங்கமார்க்கு

## பாலர் சுர நிவாரணி. (Children's Fever Cure)

குழந்தைகளுக்குண்டாகும் ஜலதோஷத்தோடு கூடிய சுரம், சுவாசம், இருமல், கோழை, கபம் முதலியவைகளை நிவாரணம் செய்யக்கூடியது. 1 மணி நேரத்திற்கொரு பில்லை வீதம் ஆறுதடவை கொடுத்தபின் இரண்டு அல்லது மூன்றுமணி நேரத்திற் கொருதடவை ஒவ்வொரு பில்லை கொடுத்துவரவேண்டியது.—விலை அணா 8.

கடவுள் துணை.

# மானிட மர்மசாஸ்திரம்.

## பத்தாம் புஸ்தகம்.

புத்திரச் செல்வம், ஆண் பெண் மலடு.

குழலினிது யாழினிதென்பர் தம்மக்கண்
மழலைச் சொற் கேளாதவர்.—குறள்.

இஃது
யாவர்க்கும்
சுக செல்வ நன்மைகளையும் சுகிர்த பாக்கிய
போக்கிஷத்தையும் நீடூழி பெருதவிக்க
விரும்பிய,


கல்கத்தா சர்வகலா சங்கத்தின் தமிழ்ப்பரீக்ஷகரும், ரங்கூன் செண்
ஜான்ஸ் கல்லூரிப் பிரதமாசிரியரா யிருந்தவரும், கணித சாஸ்திரம், பூமிசாஸ்
திரங்களின் கிரந்தகர்த்தாவும், மானஸ மர்ம சாஸ்திரப் பண்டிதரும்,
சாமிவேல் வைத்தியசாலைத் தலைவருமாகிய

எஸ். சாமிவேல், பி. ஏ. அவர்கள்


இயற்றியது.

புதிய பதிப்பு.


சாமிவேல் பிரஸ்,
தென்காஞ்சி, இரங்கோன்.

1920.



All Rights Reserved.

கடவுள் துணை.

# மானிட மர்ம சாஸ்திரம்.

## பத்தாம் புஸ்தகம்.





### புத்திரச் செல்வம்.

பகவானால் இப்பூமியின் கண்ணே சிருஷ்டிக்கப்பட்ட சகல சிருஷ்டிகளுக்கும் மேலானது மானிடப் பிறவியே. இந்த அருமையான மானிடப் பிறவிக்குக் கிடைக்கக்கூடிய எல்லாச் செல்வங்களிலும் மேலான செல்வம் புத்திரச் செல்வமே.

காஞ்சிப்புராணம்.

" *மகவேமேலாங்கதியாக்குமகவானுலகத்தனைவெல்லு*
*மகவின்மகவான்முடிவின்மையெய்துமகவின்மகவழித்த*
*மகவான்மேலைப்பதமுறுந்தென்புலத்தார்கடனைமாற்றுவது*
*மகவானன்றியில்லையெனவகுத்தான்றெரித்துக்கண்ணுவனே*."

## நளவெண்பா.

"பொன்னுடையரேனும் புகழுடையரேனு மற்
றென்னுடையரேனு முடையரோ—இன்னடிசில்
புக்களையுந் தாமரைக் கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களை யிங்கில்லாதவர்."

"சொன்னகலையின் றுறையனைத்துந் தோய்ந்தாலும்
என்ன பயனுடைத்தா மின்முகத்து—முன்னம்
குறுகுதலைக் கிண்கிணிக்காற் கோமக்கள் பால்வாய்ச்
சிறுகுதலைக் கேளாச் செவி."

## சீகாளத்திப்புராணம்.

"கண்ணில்யாக்கையுந் திங்களில்கங்குலுங்கண்போ
லண்ணன்மந் திரியில்லரசாட்சியுமருளி
நிண்ணெஞ்சமும்புலவரிலவையுமொண்டீம்பால்
வண்ணவாயினமக்களில்வாழ்வுமொப்பாமால்."

## திருக்கூவப்புராணம்.

"மெத்துகின் றவிழுமியசீர்த்தியோ
டெய்த்தலின் றியிருமையின்புந்தரும்
புத்திரற்பெறும்புண்ணியவாழ்க்கைதா
னத்தவத்தினுமாற்றச்சிறந்ததே."

## திருக்கழுக்குன்றப்புராணம்.

"இறைவர் ஞானமுமேதமிலாமையும்
பொறையும்பூண்டபுதல்வர்ப்பெறுவரேன்
மறவரேனுமவரையவ்வல்வினை
பிறவியேழினும்பின்றொடராதரோ."

## காசி காண்டம்.

"எத்திருவுடையரேனுமின்கனிமழலைச்செவ்வாய்ப்
புத்திரனிலாதோரென்றும்பொறியிலாரயவாற்றான்
மெய்த்தவம்புரிந்துமைந்தர்ப்பெறுவதேவிழைவர்யாரு
முய்த்தான்மகவுமோரேழ்பான்மையாயுரைப்பர்மேலோர்."

"மனைவிதன்கொழுநற்கீன்றோன்மற்றவனருளினாலே
யனையவனயலாற்கீன்றோனரும்பொருள்கொடுத்துக்கொண்டோ
னினிதுறுதெத்துமைந்தன்மகவெனப்புகுந்தமைந்தன்
றனையேசெய்தன்னுலாவியுய்ந்தவன்றனையராவார்."

## பிரமோத்தரகாண்டம்.

"உந்துநீர்கடலுடுத்தபார்முழுவதுமொருங்கே
வந்துதாடொழுமரசியல்வளமெலாம்பெறினு
மிந்திராதியர்பெரும்பதத்திருக்கையெய்திடினு
மைந்தரின்றியேவாழ்வதுவாழ்வுமற்றன்றே."

## நீதிநெறிவிளக்கம்,

"கற்புடைத்தன்புமுடைத்துநாண்மெய்ப்பூசி
நற்குணநற்செய்கைபூண்டாட்கு—மகட்பே
றென்பதோர்செல்வமுமுண்டாயினில்லன்றே
கொண்டாற்குச்செய்தவம்வேறு.'

## வில்லிபாரதம்:

"கல்லாமழலைக்கனியூறல்கலந்துகொஞ்சுஞ்
சொல்லாலுருக்கியழுதோடித்தொடர்ந்துபற்றி
மல்லார்புயத்தில்விளையாடிமகிழ்ச்சிமைந்த
ரில்லாதவர்க்குமனைவாழ்வினினிமையென்னும்."

"மெய்தானம்வண்மைவிரதந்தழல்வேள்விநாளுஞ்
செய்தாலுஞாலத்தவர்நற்கதிசென்றுசேரார்
மைதாழ்தடங்கண்மகவின்முகமன்னுபார்வை
யெய்தாதொழியிற்பெறுமின்பமிவணுமில்லை."

## வளையாபதி,

"பொறையிலாவறிவுபோகப்புணர்விலாவிளமைமேவத்
துறையிலாவசனவாவிதுறவிலாக்கோலத்தூய்மை
நறையிலாமாலைகல்விநலமிலாப்புலமைநன்னர்ச்
சிறையிலாநகரம்போலுஞ்சேயிலாச்செல்வமன்றே."

## நாலடியார்.

"சிதலைதினப்பட்டவாலமரத்தை
மதலையாய்மற்றதன்வீழூன்றியாங்குக்
குதலைமைதந்தைகட்டோன்றிற்றான்பெற்ற
புதல்வன்மறைப்பக்கெடும்."

## நீதிவெண்பா.

"கண்ணுக்கினியசபைக்குமணிகற்றோரே
விண்ணுக்கினியமணிவெய்யோனே—வண்ணநறுஞ்
சந்தமுலையார்சயனத்தினியமணி
மைந்தன்மனைக்குமணி."

## திருக்குறள்.

"மக்கண்மெய்தீண்டலுடற்கின்பமற்றவர்
சொற்கேட்டலின்பஞ்செவிக்கு."

ஆகையால், இவ்வுலகத்தில் எவ்வித இன்பத்தையும் வைபவத்தையும் உடையவர்களாயிருந்தபோதிலும் இல்லற இன்பத்தின் ரகசியமாகிய புத்திரபாக்கியமில்லாதவர்கள் நடைப்பிணத்துக்கொப்பாவார்கள். "புத்திரரில்லா வீட்டில் போஜனம் செய்யக்கூடாது." என்பதும் "கொள்ளிக்குப் பிள்ளையற்றவன் சொத்து எவர் கைக்குப் போனாலும் விருத்தியாகாது." என்பதும் இந்துக்களின் கொள்கை. மேலும் இவ்வுலகத்தவர் ஆடையாபரணம் உண்டி முதலிய விஷயங்களில் தங்களுக்கு வேண்டியதற் கதிகமாய்க் கிடைத்தாலும் அவை "அளவிற்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சாம்" என்று சொல்லி வெறுத்துத் தள்ளுகிறார்கள். ஆனால் தெவிட்டாத தெள்ளமுதாகிய தமது கர்ப்பத்தின் கனிகள் மட்டும் எத்தனை உதித்தாலும் "கொம்புக்குச் சுரைக்காய் கனக்குமோ ?" என்று சொல்லி அவற்றை வளர்க்கும்பொருட்டு இரவும் பகலும் கண் விழித்துப் பத்தியம் பிடித்துப் பாலூட்டித் தாலாட்டிச் சீராட்டிப் பக்குவமாய் வளர்த்து அவற்றின் அமிர்தமொழுகும் வாயினின்று புறப்படும் இங்கித பாஷையின் சங்கீத வோசையைக் கேட்டு ஆசை மேலிட்டு ஆனந்த மகிழ்ச்சியால் பூரித்திருப்பானன்றோ ?

## புறநானூறு.

"படைப்புப் பல படைத்துப் பலரோடுண்ணு
முடைப்பெருஞ் செல்வராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறு கை நீட்டி
யிட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்து
நெய்யுடை யடிசின்மெய்ப்பட விதிர்த்து
மயக்குறு மக்களை யில்லோர்க்கும்
பயக்குறை யில்லைத் தாம் வாழுநாளே."

ஆகவே "கடந்த ஞானியுங் கடப்பரோ மக்கள்மேல் காதல்."

## குறள்.

"குழலினிது யாழினிதென்பர் தம்மக்கண்
மழலைச் சொற் கேளாதவர்."

எனச் சான்றோரும் அறைந்திருக்கின்றனர். நமது ஆதித்தாய் தகப்பன்மாருக்கு, நமதாண்டவர் கொடுத்த ஆதிக்கட்டளைகளி

லொன்று "நீங்கள் பல்கிப் பெருகிப் பூமியை நிரப்புங்கள்." என்பதே. இந்த அருமையான கட்டளையை நிறைவேற்றுவதில் அளவிடப்படாத ஆனந்தப் பெருக்கை அமைத்து வைத்திருக்கின்றனர். "நெல்லுக் கிறைத்த நீர் வாய்க்கால் வழியோடிப் புல்லுக்கு மாங்கே பொசியுமாம்." என்றபடி ஒவ்வொரு ஜீவராசியும் விர்த்தியாவதற்காகப் பகவானால் அமைக்கப்பட்ட இந்த ஏற்பாட்டை மானிடர் தங்கள் மாமிச இச்சையை நிறைவேற்றுவதற்காகவும் உபயோகித்துக்கொள்ளுகிறார்கள். இத்தெய்வக் கட்டளையை அறிந்தும் அறியாமலும் மீறி நடப்பதால புருஷனுக்கும் பெண்சாதிக்கும் பாசத்தை மூட்டி வளர்க்கும் ஹேதுக்களாகிய புத்ர பாக்யமில்லாதவர்களாய் அநேகர் விசனத்தி லமிழ்ந்து மனோவியாகுல மடைகின்றனர். இதை நீக்கும் வழியுண்டோவென்றறியும் பொருட்டு நாம் பிரசித்திபெற்ற அநேக ஆங்கிலேய டாக்டர்களெழுதிய நூற்களை வெகுநுட்ப நுட்பமாய் ஆராய்ச்சி செய்து அவற்றின் சாராம்சத்தை இங்கு கூறியிருக்கின்றோம்.

## பெண் மலடு.

ஸ்திரீ புருஷாள் கூடிச் சம்போகஞ் செய்தபோதிலும் சந்தானமில்லா திருப்பதற்கு அநேக காரணங்கள் உண்டு. அவற்றில் ஜனனேந்திரியங்களில் இயற்கையா யமைந்த அங்கவீனத்தால் உண்டாகக்கூடிய மலட்டை நிவிர்த்திப்பது அசாத்தியமாயிருந்தபோதிலும், மற்றநேக காரணங்களால் உண்டாகக்கூடிய மலட்டுத் தன்மையை ஓர்விதமாய் நிவர்த்திக்கலாம். ஆனால், அநேக ஸ்திரீகளோ தாங்கள் குழந்தையில்லாதிருப்பதற்குக் காரணம் தங்கள் ஜனனேந்திரியங்களில உண்டாயிருக்கும் நோய்களென்றறியாமல், தங்களைச் சுகதேகிகளாகப் பாவித்து ஈஸ்வரசித்தத்தால் அல்லது விதி வசத்தால் தமக்குப் புத்ரபாக்கியமில்லையென்று எண்ணித் தாம் புத்திரரை அடைவதற்கு வேண்டிய வழிகளைத் தேடாதிருந்துவிட்டு தேவஸ்தலங்களுக்கு மாதாந்தம் போய் வருவதாலும், தீர்த்த யாத்திரை செய்வதாலும் குழந்தை ஜனிக்குமென்று எண்ணித் தமது வாழ்நாளையும் காசையும் வீணில் விரயமிடுகின்றனர். அவ்விதம் மாதாந்தம் நடந்து கால் சலித்த ஓர் ஸ்திரீ சொல்லி யழுததாவது:—

மாதமாதந்தோறும், நான்பாவி நான்தோஷி, மாதாந்தம்போனாலும்—என்
மன்னவனுரில்லாமல் மாயாண்டியோர் மைந்தன் கொடுப்பாரோ.

ஆனால், அவர்கள் தேர்ந்த வைத்தியர்களிடம் தங்கள் ஸ்திதியை விளக்கிச் சொல்வார்களாயின், அவர்கள் சொல்லும் யோசனைகளினாலும் உபாயங்களினாலும் புத்ர பாக்கியமடைந்து ஆனந்த முறுவர் என்பதற்குச் சந்தேகமில்லை.

விவாக நிலைக்குட்பட்டும் பிரௌடையானது முதல் மாத ருது நின்றுபோகுங் காலம்வரை குழந்தை யில்லாதிருப்பதே மலடென்னப்படும். பெண்மலடென்பது விவாகமானது முதல் குழந்தையேயில்லா திருந்தலென்றும், விவாகமானபின் இரண்டொரு குழந்தைகளைப் பெற்றுவிட்டுப் பின்பு அநேக வருஷங்களாகக் குழந்தையில்லா திருந்தலென்றும் இருவகைப்படும்.

பலமும் தேகாரோக்கியமு முடைய அநேகர் விவாகமான துவக்கத்தில் மிதமிஞ்சி அடிக்கடி சம்போகஞ் செய்வதே இதற்கு முதற்காரணம். இவர்கள் சரீர தத்வ சாஸ்திர விதிகளை முன்னமே யறிந்திருந்தார்களானால், இவ்விதமா யளவுக்கு மிஞ்சிச் சம்போகித்துத் தங்கள் சௌக்கியத்தையும் பலனையும் கெடுத்துப் புத்ர பாக்கியத்தையு மிழந்து அகால மரணத்திற்கும் ஆளாகமாட்டார்கள். இப்படிப்பட்டவர்கள் சுகாதார விதிகளையுங் கவனியாமல், கண்டதே காட்சி பெற்றதே பேறென்று நினைத்தவேலையெல்லாம் தங்கள் மாமிச இச்சைக்கு இடங்கொடுத்து அடிக்கடி தரித்த கருவையும் அழித்துவிடுகின்றனர். காசுக்கு ஆசைப்பட்டு இரவும் பகலும் தங்கள்சரீரத்தை மற்றவர்கட்கு விற்கும் விலைமாதாக்குச் சந்தானமே யில்லாதிருக்கும் நிலைமையே இதற்கு அத்தாட்சி.

இப்படிப்பட்டவர்களுக்குச் சிறிது காலத்திற்குப் பின் கருப்பையில் உஷ்ணந்தாக்கி அழற்சியுண்டாகி (Inflammation of the Womb) க் கருப்பையின் வாய் திரட்சியாகி சுருங்கிவிடுமாதலால் சுக்கிலக்கிருமி உட்செல்ல ஹேதுவிராது. அதனால் கருத்தரிக்காமலே போய்விடும். இவ்வித காரணங்களால்தான் அநேகர் கலியாணமாகியும் நாலைந்து வருஷம் பிள்ளையில்லா திருக்கிறார்கள்.

இன்னுஞ் சிலர் விவாகமான துவக்கத்தில் தமது இன்பத்துக்கிடையூறு நேரிடுமென்னு மெண்ணத்தால் பிள்ளைப்பேற்றை விரும்புகிறதே யில்லை. மேற்கூறிய காரணத்தால் அவர்கள் விருப்பமும் நிறைவேறுகிறது. ஆனால், சில வருஷங்களுக்குப் பின் மக்கள்மேல் காதல் கொண்டு பிள்ளைப்பேற்றை விரும்புகிறார்கள். ஆனால் தாங்கள் முன் நடப்பித்த அக்கிரமக்கிர்த்தியங்களுக்குத் தகுந்த தண்டனையாக அநேகமாய்க் கர்ப்பம் அடைபட்டுப்போவதுண்டு.

வேறு சிலர் எவ்வளவாய் மிதமிஞ்சிய போகஞ் செய்தபோதிலுங் கருத்தரிப்பதுண்டு. ஆனால் இரண்டொரு பிள்ளைகளுக்குப் பின் நின்றுபோம். இதற்குக் காரணம் கருப்பையின் வாய் கிழிந்து போவதே. இப்படிப்பட்டவர்களுக்கு மாதாந்தர ருது வெளியாகும்போது அதிக வேதனையுண்டாவது மல்லாமல் ஏராளமாய் வெள்ளையுங் காணும்.

வேறு சிலருக்கு வயிற்றை இறுக்கி ஒட்டியாணம் போடு வது, அசுத்த ஆகாயம் உட்கொள்வது, தேகாப்பியாசமின்மை முதலிய பல காரணங்களால் கருப்பாசயத்தின் தசைநாம்புகள் தளர்ச்சியடைந்து, பலவீனமாகிப் போவதால் தரித்த கருவானது கருப்பையில் தங்காமல் நழுவிவிடுகிறது.

வெள்ளை காணும்போது கருத்தரிப்பது அசாத்தியம். சொகு சான ஜீவியம் பண்ணும் அநேக ஸ்திரீகளின் கர்ப்பாசயத்தின் வாயில் இரணமுண்டாவதால் அவர்கள் மலடாவார்கள்.

நெடுங்காலம் கெட்ட பழக்கங்களை அப்பியாசித்து வரும் ஸ்திரீகளுக்குப் புருஷர்மேலாசையில்லாமல் தங்கள் பூர்வ பழக் கங்களிலேயே ஆசையுண்டாகும். அப்படிப்பட்டவர்களுக்கும் பிள்ளையே பிராது.

மேலும் சரீர ஆரோக்கியம், மனோதீக்ஷணியம், சன்மார்க்க ஒழுக்கம் முதலியவற்றிற்கு அநுசரிக்க வேண்டிய ஆசாரவிதி களைக் கைக்கொள்ளாமல் போவதனால் ஸ்திரீகளுக்குள் சாதாரண மாய்ப் பலவீனமுண்டாகிக் கருப்பையும் பலத்தாட்சியடைந்து தன் நிலைபிசகிப் பின்பக்கமாவது முன்பக்கமாவது மடங்கிக் கிடப் பதால், சுக்கிலம் அதன்வாயினுட் செல்வதற்கிடமில்லாமல் அநே கர் மலடாகிவிடுகிறார்கள். இப்படிப்பட்டவர்களுக்கு மாதவிடாய் காலத்தில் கருப்பையின் தசைநாம்புகள் வெகு கடினமாயுழை த்து, அங்கு சேர்ந்திருக்கும் உதிரத்தை அதிக கஷ்டத்தோடு வெளியாக்குவதால் அகோர வேதனையுண்டாகும்.

கருப்பை தன் நிலையை விட்டுப்பிரிந்து வெளியே தள்ளிக் கொண்டிருப்பதாலும் குழந்தை உற்பத்தியாகாது. கர்ப்பாசயத் தின் வாய்ப்பக்கத்திலுள்ள ஜவ்வு (Hymen) கிழிபடாதிருப்பத னாலும், அதன் அருகில் தசை வளர்ந்து மூடிக்கொள்வதனாலும், வெள்ளை, வெட்டை முதலிய வியாதிகளால் பிடிக்கப்படுபவர்களு க்கு அந்த ரோகங்கள் சுகமானவுடன் கருப்பையின் வாய் சுரு ங்கி இறுகிக்கொள்வதனாலும், சினைப்பையிலிருந்து கருப்பைக்கு முட்டைக் கருவைக் கொண்டுவந்து சேர்க்கும் சினைக்குழல் (Fallopian tube) கிழிந்து போவதனாலும், சினைப்பையானது மேகவியாதி முதலான காரணங்களால் தனது தொழிலை நிறை வேற்றச் சக்தியற்று அண்ட உற்பத்திக்குப் பங்கம் நேரிடுவதனா லும், இயற்கையிலேயே கருப்பையாவது சினைப்பையாவது முற் றிலுமில்லாமல் போவதனாலும் ஸ்திரீகள் மலடாவார்கள்.

இவ்விதமாய்ப் பல காரணங்களாலும் ஸ்திரீகள் மலடாவதற்கு விசேஷித்த காரணம் வெளிக்குத் தோன்றாத மேகரோகங்களே யென்று நொக்ராத் (Dr Noeggarrath) என்னும் அமெரிக்க டாக்டர் சொல்லுகிறார். மேலும், அவருடைய அபிப்பிராயமென்னவெனில், ஓர் மனுஷன் மேக சம்பந்தமான வியாதியால் எக்காலத்திலேனும் ஒருதடவை பிடிக்கப்பட்டு வெளிக்கு மாத்திரம் சொஸ்தமடைந்ததாகத் தோன்றினபோதிலும் அவ்வியாதி அவன் உயிருள்ள பரியந்தம் அவனைவிட்டு நீங்காமல் உள்நோயாகவே யிருக்கும். அந்த நோய்கண்டு சொஸ்தமாகி எத்தனை வருஷங்களானபோதிலும் அவன் விவாகஞ் செய்தவுடன் தன் மனைவிக்கு அந்த ரோகத்தை விட்டுவிடுவதால் அவள் மலடாகிறாள். பிள்ளை பெற்றாலும் அந்தப் பிள்ளைக்கும் அந்நோய் தாவும். சில சமயங்களில் அவன் செய்த மூடத்தனத்திற்கும் பாவத்திற்கும் தண்டனையாகச் சந்ததி உற்பத்தியாக்குந் தன்மையை அவன் இழந்துவிடுகிறான்.

மாதாந்தர ருதுகாலங்களில் மிதமிஞ்சிய இரத்தப் பிரவாகங் கண்டு கஷ்டப்படுகிறவர்களுக்கும், கொழுத்த சரீரமுடையவர்களுக்கும் குழந்தையில்லாமல் போகலாம். குழந்தை உண்டானாலும் அகாலப் பிரசவம் உண்டாகும்.

## பொதுவான சிகிச்சை.

மேற்குறித்த பலவித மலட்டிற்கும் பொதுவான சிகிச்சையாதெனில், எந்தெந்த நோய்களின் காரணமாகக் குழந்தையில்லாமற் போகிறதோ அந்தந்த நோய்களுக்குப் பரிகாரம் தேடவேண்டும். அப்படிப்பட்டவர்கள் மிதமிஞ்சிய சம்போகத்தை நிறுத்தி, மாதவிடாயாகுமுன் சிலநாட்களிலும், மாதவிடாய் ஆகினின்றபின் சிலநாட்களிலும் மட்டும் சம்போகஞ் செய்யவேண்டும்.

## கருப்பையின் உட்பாகம் வீங்கியிருத்தல்.
## (Endometritis)

குறிகள். பலவீனம், தாதுதளர்ச்சி, முகம் வெளிறியிருத்தல், ஜீரணசக்திக்குறைவு, கண் மங்கலாகிக் கண்ணைச்சுற்றி ஓர் வித கறுப்பு வட்டந் தோன்றுதல், தலைநோய், முதுகு பலவீனம், நீர்போன்ற திரவம் வெளியாதல், மாதாந்தர ருது சரியாய்க் காணுதல் சொற்பமாய்க் காணுதல், இல்லாவிடில் தடைப்பட்டிருத்தல், ருதுகாலவலி முதலியவைகளே.

**காரணம்.** உடையை இறுகக் கட்டுதல், மாதாந்தர ருது காலத்தில் ஜலதோஷம் பிடித்தல், மிதமிஞ்சிய சம்போகம், அக்கிரமக் கிர்த்தியங்கள் முதலியவைகளாலும், குழந்தை பிறந்தவுடன் பால்கொடாமலிருப்பதனாலும் கருப்பையின் உட்பாகத்தில் வீக்கங் காணும்.

**நிவாரணம்.** காரணத்தையறிந்து அதை நிவிர்த்திக்கவேண்டும். லாகிரி வஸ்துக்களை உபயோகிக்கக்கூடாது. எளிதில் ஜீரணிக்கத்தக்கதும் சரீரத்துக்குப் பலத்தைக் கொடுக்கக்கூடியதுமான ஆகாரஞ் சாப்பிடவேண்டும். பழங்கள், தானியவகைகள், முட்டை, பால் ஏராளமாய் உபயோகிக்கவேண்டும். ஓடுதல், குதித்தல் பளுவான வஸ்துக்களைத் தூக்குதல் முதலியவை ஆகாது. ஆனால், பிரதிதினமும் அதிகநேரம் சுத்த ஆகாயமுள்ள வெளியிடங்களில் சாந்தமான தேகாப்பியாசம் யதேஷ்டமாய்ச் செய்துவர வேண்டும். இச்சாபத்தியம் மிக அவசியம். மல சுத்திக்கான ஏதுக்களை உபயோகித்து வரவேண்டும். உதாரணமாக, பழவர்க்கங்கள், காய்கறிவகைகள் முதலியவற்றைப் புசிப்பதனாலும், பிரதிதினமும் வயிற்றைக் கையினால் பிசைந்து வருவதனாலும், மல சுத்தியைக் கிரமப்படுத்திக் கொள்ளவேண்டும்.

பிரதிதினமும் அல்லது இரண்டுநாளுக் கொருமுறை அரை மணி நேரத்துக்குக் குறையாமல் வெந்நீரில் ஆசனஸ்நானம் செய்து வரவேண்டும். ஆசனஸ்நானம் செய்யும்போதே, ஆசனஸ்நானத்துக் குபயோகிக்கும் வெந்நீரைவிடக் கொஞ்சம் சூடான வெந்நீரில் பாதஸ்நானமும் செய்யவேண்டும்

நூறு டிக்ரிக்குக் குறையாத சூடுள்ள வெந்நீரைப் பீச்சாங்குழல் வழியாய் மர்மஸ்தானத்துள் செலுத்திச் சுத்திசெய்து வரவேண்டும். ஆனால், மாதாந்தர ருதுகாலத்தில் ஆசனஸ்நானமாவது பீச்சாங்குழலாவது உபயோகிக்கக்கூடாது; மருந்துகளை பீச்சாங்குழல் மூலமாய் உபயோகிப்பதால் அநேக மோசங்களுண்டு. ஆதலால் மருந்துகள் உபயோகிக்கக்கூடாது.

## கருப்பையின் அழற்சி. (Metritis·)

**குறிகள்.** கருப்பை வீங்கியிருத்தலுக்குரிய குறிகளெல்லாம் இதற்குந் தோன்றும். ஆனால் அதிகமாயிருக்கும். கருத்தரித்த ஆரம்பத்தில் காணப்படும் தோற்றங்களும் உண்டாகும். சரீரத்தைச் சுற்றிலும் முதுகின் கீழ்ப்பக்கத்திலும் வலியுண்டாகும். குடல்கள் கீழே இழுக்கிறதுபோல் பளுவாய்த் தோன்றும்.

**காரணம்.** மிதமிஞ்சிய சம்போகம், அக்கிரமக்கிர்த்தியங்கள், கருத்தரிக்காதபடிப் பல கருவிகளை உபயோகித்தல், உடையை இறுகத் தரித்தல் முதலிய காரணங்களாலும், விசேஷமாய்க் குழந்தை பிறந்த சிறிது நாட்களுக்குள் எழுந்து நடமாடுவதனால் கருப்பையானது சரியானபடி சிறுத்துத் தன் நிலைக்கு வாராமல் வீங்கியிருத்தலினாலும், கருப்பையில் அழற்சியுண்டாகி, வீங்கிப் பளுவாகிச் சிலசமயம் உறுப்பு கீழே இறங்கிவிடும். இல்லாவிடில் கருப்பை பளுவாயிருப்பதால் முன்பக்கத்தில் அல்லது பின்பக்கத்தில் மடங்கி விழுந்து கிடக்கும். இவ்விதமாகக் கருப்பையானது படத்தில் காண்பித்திருக்கிறபிரகாரம், ஸ்தானம் மாறிக்கிடக்கும்.




**நிவாரணம்.** கருப்பை வீக்கியிருத்தலுக்குரிய நிவாரணங்களாகிய ஆசன ஸ்நானம், பீச்சாங்குழலால் வெந்நீரை மர்மஸ்தானத்துள் செலுத்துதல், அதிக உழைப்பின்றி இளைப்பாறியிருத்தல், இச்சாபத்தியம், மோகத்தை மூட்டிவிடக்கூடிய விஷயங்களை நீக்கிவைத்தல் முதலியவைகளே இதற்கு நிவாரணங்களாகும். வெந்நீரையன்றி குளிர்ந்த ஜலம் உபயோகிக்கக்கூடாது. மர்மஸ்தானத்திலிருந்து திரவம் வெளியாகிக்கொண்டு இருக்குமாயின் வெந்நீரில் உப்பு அல்லது சீனக்காரம் போன்ற துவர்ப்பான வஸ்துக்களை கலந்து பீச்சாங்குழலால் மர்மஸ்தானத்தில் செலுத்திச் சுத்திசெய்யவேண்டும்.

**கருப்பையின் வாய் வீங்கியிருந்தால் நிவாரணம்.** ஆசனஸ்நானம், துவர்ப்பு மருந்து, வெந்நீர் முதலியவற்றை உபயோகிக்க வேண்டும். அதோடு கிளிசரினை (Glycerine) தனிமையாய் அல்லது டானினை (Tannin) யுடன் கலந்து அதில் ஒரு சிறு பஞ்சு உருண்டையை நனைத்து ஒரு நூலினால் கட்டி மர்மஸ்தானத்துக்குள் செலுத்தி வைக்கலாம். ஒருநாள் இப்படி வைத்திருந்து பின்பு நூலைப் பிடித்திழுக்கப் பஞ்சு வந்துவிடும். பிறகு வேறு பஞ்சை இவ்விதமாய் உபயோகிக்கக் குணமுண்டாகிறது.

## கருப்பையின் உறுப்பு தள்ளுதல்.




**குறி.** சிற்சில சமயங்களில் முதுகின் கீழ்ப்பக்கம் வலியும், மர்மஸ்தானத்துள் ஓர்வித உணர்ச்சியும், சலாசயம், ஆசன பாகங்களின் உட்பக்கம் எரிச்சலுமுண்டாகும். நடக்கும்பொழுது அல்லது வேலை செய்யும்பொழுது அசௌக்கியமாகத் தோன்றும். மாதாந்தர ருது ஏராளமாக அல்லது வலியுடன் காணும்.

**காரணம்.** குழந்தை பிறந்த சிறிது நாளைக்குள் மெத்தைப் படிகளில் ஏறி இறங்குவது, சாமான்களைத் தூக்குவது, ஓடி ஆடி வேலை செய்வது முதலிய பலகாரணங்களால் கருப்பையானது தானிருக்கும் நிலை தவறி மர்மஸ்தானத்தினுள் நகர்ந்துவிடும்.

நிவாரணம். முதலாவது. ஆசன ஸ்நானம், பீச்சாங் குழலால் வெந்நீரைச் செலுத்துவது முதலிய விதங்களால் கருப்பையில் உண்டாகும் வீக்கத்தைத் தணித்து வேதனையை நீக்கவேண்டும். கருப்பையை வெளியே தள்ளவிடாமல் தன் ஸ்தானத்தில் நிறுத்தி வைக்கும் பெஸ்ஸாரி (Pessary) முதலிய கருவிகளை இங்கிலீஷ் ஷாப்புகளில் வாங்கி உபயோகிக்கலாம். அது கிடைக்காத பக்ஷத்தில் நோயாளியைப் படுக்க வைத்து கருப்பையைத் தன் ஸ்தானத்துள் செலுத்தி அது தன்னிலைக்கு வந்தவுடன் கிளிசரீனில் தோய்த்த பஞ்சுருண்டையால் நூல்கட்டிக் கருப்பையின் வாயில் திணித்து அடைத்து வைக்கலாம். நோயாளி தானே உபயோகித்துக்கொள்ளலாம். இவைகளெல்லாவற்றிற்கும் மேலாக, மர்மஸ்தானத்துள் தசைநரம்பு பலமடைந்து கருப்பையை தன்னிலையில் தாங்கிக் கொள்ளத்தக்கதாய், உறுதியுண்டாக்கக்கூடிய கசரத்து முதலிய தேகாப்பியாசங்களை செய்து வரவேண்டும். அவற்றில் சிலவற்றை இவ்விடம் கூறுவோம்:—

நோயாளி தரையில் பாய்விரித்துப் படுத்துக்கொள்ளவேண்டும். பின்பு, பாதங்களைச் சரீரத்தின் பக்கத்திலிழுத்துத் தரையில் மிதித்துக்கொள்ள வேண்டும். இப்போது நோயாளி தன இடுப்பைத் தரையில் படாதபடி உயர்த்திக்கொண்டு பாதங்களும் தோள்களுமட்டும் தரையில் படச் செய்யவேண்டும். இவ்விதம் இரண்டொரு நிமிஷம் நின்று களைப்பானவுடன் இடுப்பைத் தரைக்குக் கொண்டு வரலாம். அதிகக் களைப்புக்கு இடம் கொடுக்கக்கூடாது. பிற்பாடு சில நிமிஷங்களுக்கும் அப்படியே செய்து வரவேண்டும். நோயாளியின் சக்திக்குத் தக்கது இருபது, அல்லது முப்பது நிமிஷம் வரை இந்த அப்பியாசத்தைச் செய்துவரவேண்டும். இவ்விதமாய் இடுப்பை உயர்த்துவதால் அடிவயிற்றிலுள்ள இயந்திரக் கருவிகள் தத்தம் நிலையில் உறுதியாய் நிற்கும். முதல் நாளிலேயே இதன் பிரயோசனம் தெரியும். பிரதிதினமும் இரண்டு மூன்று தடவையாகச் சில நாட்களுக்கு இந்த அப்பியாசம் செய்து வந்தால் விசேஷித்த நன்மையுண்டாகும்.

இன்னுமொரு அப்பியாசம் யாதெனில்:—நோயாளி தன் நெஞ்சு தரையில் படத்தக்கதாக முகங் குப்புறப் படுத்துக்கொண்டிருக்கையில் வேறொரு ஸ்திரீ அவளுடைய காலையும், இடுப்பையும் உயரத் தூக்குவதனால் அடிவயிற்றுத் தசை மாமிசம் உறுதியாகும். வேறுமநேக அப்பியாசங்களும் செய்யலாம். உதாரணமாக:—முன்னுக்கும், பின்னுக்கும், பக்கங்களிலும் குனிவது. அடிவயிற்றைக் கையினால் பிசைந்துகொள்வது. படுத்துக்கொண்

டிருக்கும்போது ஏதாவது பளுவான வஸ்துக்களைக் கைகளினால் தலைக்குமேல் நீட்டுவது முதலிய அப்பியாசங்களைச் செய்துவரலாம். மேலும், நோயாளி படுத்திருக்கும்பொழுது தன் வசதிக்குத் தக்கதாக இடுப்பைச் சற்று உயரத்தில் வைத்துத் தூங்குவதனால் சுகமுண்டு.

டாக்டர்கள் மின்சார சக்தியினால் இவ்வித வியாதியைச் சுகமாக்குவது வழக்கம். பிரதிதினமும் இரவில் படுக்கைக்குப்போகுமுன் மேற்கூறிய தேகாப்பியாசங்களைச் செய்து பின்பு டானிக்காம் அல்லது டானின், (Tannin) கருவேப்பட்டை முதலிய துவர்ப்பு வஸ்துக்களில் ஏதேனுமொன்று கலந்த வெந்நீரினால் மர்மஸ்தானத்தைச் சுத்திசெய்து வருவதனால் சுகமுண்டு.

## இந்து சாஸ்திரங்களில் சொல்லி யிருக்கும் பெண் மலட்டின் குணங்களும் அவை நீங்கிச் சந்தானம் உண்டாகத்தக்க ஔஷத முறைகளும்.

நாயகன் நாயகியோடு சேரும்போது நாயகிக்குத் தலைவலி காணில் கருப்பாசயத்தில் பாசிபற்றி யிருப்பதனால் கருத்தரிக்கவில்லையென்றும்; சம்போகிக்கும் போது நாயகிக்குச் சரீர முழுவதும் வலிக்குமாயின் கருப்பாசயத்தில் வாய்வு நிறைந்திருப்பதனால் கருத்தரிக்கவில்லையென்றும்; சுரத காலத்தில் நாயகிக்கு நெஞ்சு வலி காணுமாயின் கருப்பாசய மார்க்கத்தைத் தசை மூடியிருப்பதனால் கருத்தரிக்கவில்லையென்றும்; சம்போகிக்கும் போது நாயகிக்கு முதுகு நோயுண்டாகுமாகில் கருப்பாசயத்தில் கிருமிகள் நிறைந்திருப்பதனால் கருத்தரிக்கவில்லையென்றும்; சம்போக காலத்தில் நாயகிக்குக் கெண்டைச் சதையில் நோய்காணுமாகில் கருப்பாசயத்தில் கெட்ட உதிரம் திரண்டிருப்பதனால் கருத்தரிக்கவில்லையென்றும்; சையோகத்தில் நாயகிக்கு வெப்பமுண்டானால் கருப்பாசயத்தில் கொழுப்படைந்திருப்பதனால் கருத்தரிக்கவில்லையென்றும் அறிந்துகொள்ளவேண்டும்.

**சிகிச்சை.** கருப்பாசயத்தில் பாசு பற்றியிருப்பின் பருத்தி விரைப் பருப்பும் கோழிப்பித்தும் சமன் சேர்த்தரைத்து இருவர் அந்தரங்க ஸ்தானங்களிலும் பூசி உலர்ந்தபின் சம்போகிக்கலாம். கருப்பாசயத்தில் வாயவு நிறைந்திருப்பின் கல்லுப்பைப் பசுநெய்யோடு பெருங்காயத்தைச் சேர்த்தரைத்து முன்போல் பூசிவரலாம்.

கருப்பாசயத்தில் தசை மூடியிருப்பின் திப்பிலி, சூடன் கோழிப்பித்து இவை சேர்த்தரைத்து முன்போல் பூசிவரலாம்.

கருப்பாசயத்தில் கிருமி நிறைந்திருப்பின் இந்துப்பு, பெருங்காயம், தாளகம் சேர்த்து வெந்நீர் விட்டரைத்து முன்போல் பூசிவரவும். (எரிந்தால் நெய் தடவவும்.)

கருப்பாசயத்தில் கெட்ட உதிரம் திரண்டிருப்பின் கடுக்காய், சர்க்கரை, பச்சைக் கற்பூரம், புனுகு இவை சமன் வெந்நீர்விட்டரைத்து முன்போல் தடவி வரலாம்.

கருப்பாசயத்தில் கொழுப்படைந்திருந்தால் அதிமதுரம், குங்குமப்பூ, சீரகம் வெந்நீர் விட்டரைத்து முன்போல் தடவி வரவும்.

## ஆண்மலடு.

கருத்தரிப்பதற்கு மூலாதாரங்களாகிய சுக்கில சுரோணிதங்களில் ஏதாவது பேதமுண்டானால் கருவுயிர்க்கத் தடையுறுவதே மலடெனப்படும். அவற்றிலே ஜனனேந்திரியங்களில் இயற்கையாயுண்டாயிருக்குங் குறைவுகளினால் விபாக நிலைமைக்கு அருகாவோர் சுபாவ மலடென்னப்படுவர். அவ்வித அங்கவீனங்களை நிவர்த்திக்க ஔஷதங்களில்லை,

ஆனால், சுக்கில சுரோணிதத்திலும் ஜனனேந்திரியங்களிலும் செய்கைப் பிசகுகளால் யாதேனும் தோஷங்களுண்டாகுமாயின அது அசுபாவ மலடென்னப்படும். அவ்வித மலட்டிற்கு நிவாரணமுண்டு. அதிலும் ஸ்திரீயின் ஜனனேந்திரியங்களிலும் சுரோணிதத்திலுமே அநேகவித தோஷங்கள் அணுகக்கூடுமாதலால் பெண்மலடே விசேஷமாய் மலடென்று சொல்லப்படும்.

எண்பத்தைந்து தொண்ணூறு வயதுவரை ஆண்களின் சுக்கிலத்தில் கிருமிகள் தென்படுவதால் ஆண் மலடென்பது அபூர்வம். ஆனால், பலவித சீர்கேட்டினாலும், மேகரோகத்தினாலும், விருத்தாப்பியத்தினாலும் விந்து விளைவு குறைவதனால் சுக்கிலக் கிருமிகளின் விர்த்தி குறையுமேதாடு அவற்றின் வால்களின் நீளமும் குறைந்து விடுவதனால் அவற்றைச் சுழற்றியடித்து முன்னேக சக்தியற்றுப் போகின்றன. இவ்விதமாய்ச் சந்தான சக்தியற்றுப் போவதே மலடென்னப்படும்.

## நபுஞ்சகத்தன்மை. (Impotency.)

இளம்பிராயத்தில் புத்தியீனமாய் அக்கிரமக் கிருத்தியங்கள் நடப்பிப்பதால் புருஷ சின்னத்திற்குப் போக சக்தியற்றுப் போவதே பேடித்தனம் அல்லது நபுஞ்சகத் தன்மை என்னப்படும்.

மனுஷனுடைய சரீர சௌக்கியத்திற்கும், திடகாத்திர தேஜசுக்கும், மனோவுற்சாகத்திற்கும், வீரிய காம்பீரத்திற்கும், விவேக நிக்ஷணயத்திற்கும் மூலாதாரமானது அவனுடைய சுக்கிலமே. அந்த சுக்கிலத்தில் ஒருதுளியானது எண்பது துளி இரத்தத்தின் சாரமென்றும், சரீரத்தை ஊடுருவிச் செல்லும் சகலவித நரம்புக் கூட்டங்களும் புத்திநிக்ஷணயத்துக் கிருப்பிடமாகிய மூளையுஞ்சுக்கிலத்தோடு சம்பந்தப்பட்டிருக்கிறதென்றும் முன் ஒரு புஸ்தகத்தில் முன்னமே கவனித்தோம். ஆகையால், மனுஷ தேகத்தில் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டிருக்கும் உதிரம், நரம்பு, தசை, தாது முதலியவைகளில் ஏதேனுமொன்றுக்கு அற்பக் கெடுதி உண்டாகுமாயின் தேக முழுமையுமே வாதனை யடையும்.

அவ்வித மனுஷனுக்கு நாட் செல்லச் செல்ல நரம்புகள் தளர்ச்சி யடைவதால் கோசவெழுச்சிக்குப் பங்கம் நேரிட்டுப் போக சக்தியற்றவனாவதால் நபுஞ்சகத் தன்மை யடைகிறான்.

காரணம். 1. நெடுங்காலமாக மிதமிஞ்சிச் சம்போகஞ் செய்து வருவதால், சுக்கிலத்தில் ஜீவோற்பத்திக்குரிய சக்திகுறைந்து ஒருவன் பேடியாகலாம். இப்படிப்பட்டவன் சிலகாலங்களாக ஸ்திரீயை விட்டுப் பிரிந்து சம்போகத்திலாசையை ஒழித்திருப்பதால சுக்கிலமானது சரியானபக்குவமடைந்து புத்திரோற்பத்திக்குரிய சக்தியை யடையலாம்.

2. முஷ்டிமைதுனம், ஆசனப் புணர்ச்சி முதலிய அக்கிரமக் கிருத்தியங்களால் ஆண்குறியின் நரம்புகள் தளர்ச்சியடைந்து சுக்கில வீரியங் குறைந்து புருஷச்சின்னம் அடி சிறுத்து வளைந்து பலமற்றுப் போவதனாலும் நபுஞ்சகத் தன்மையடையலாம்.

3. மேகரோகம் முதலிய கொடுமையான நோய்களால் சரீரத்தில் பெலனற்றுப் போவதனாலும், ஜனனேந்திரியங்கள் அழிந்து போவதனாலும் நபுஞ்சகத்தன்மை யடையலாம்.

4. தலையில் வெட்டுக் காயங்கள், முள்ளந்தண்டை யூடுருவச் செல்லும் நரம்புகள் பழுதுபடுவது, சுக்கிலகோளம் முதலியவை நசுங்கிப் போவது முதலிய காரணங்களினால் விந்து வெளிப்படத் தடையுண்டாகி நபுஞ்சகத்தன்மை யுண்டாகலாம்.

5. நெடுநாள் ஸ்திரீபோகத்தை நீக்கிவிட்டதனால் புருஷ சின்னத்திற்குச் சரியான இரத்தவோட்டம் தடைப்பட்டுச் சுக்கிலத்தின் சுரப்புக் குறைந்துபோவதனால் போகசக்தியற்றுப் போகலாம்.

6. சிலர் தம் சரீரத்தையும், மனதையும், மூளையையும் ஓயாத உழைப்பில் செலுத்துவதனாலும், பயம், குரோதம், வியாகூலம் முதலிய காரணங்களினாலும் போகசக்தி குறைவுபடலாம்.

7. சிலருக்குக் கொழுப்பு அதிகரித்திருப்பதினாலும் ஆண் தன்மை குன்றிப் போகலாம். அப்படிப்பட்டவர்கள் மிதமாய்ச் சாப்பிட்டுத் தேகாப்பியாசஞ் செய்யவேண்டும்.

8. இவை எல்லாவற்றிலும் மேலாக ஒருவன் போக சக்தியில் யாதொரு குறைவில்லாத திடகாத்திரனாயிருந்தபோதிலும் அவனுடைய மனதின் ஸ்திதிக்குத் தக்க பேடித்தனமை யடையலாம். உதாரணமாக, சில வாலிபர் தாதுபுஷ்டி லேகியம் முதலியவற்றின் விற்பனைக்காக எழுதப்பட்டிருக்கும் பிரசுரப் பத்திரிகைகளை அடிக்கடி வாசிதுப் பார்ப்பதனால் தமக்கும் ஆண்தன்மை இருக்கிறதோ இல்லையோ என்ற சந்தேகம் மேலிட்டுப் போக சக்தியற்றுப் போகலாம்.

ஒரு ஸ்திரீயைப் பார்த்தவுடன் அவள் உயர்ந்த ஜாதிப்பெண்ணாயிற்றே, மகா ரூபவதியாயிருக்கின்றாளே, பராக்கிரமசாலியாயிற்றே, காமகலா வல்லவளாயிற்றே, இவளுக்கு நாம் எம்மாத்திரம் என்று நினைப்பதனால் போக சக்தி குறைவுபடும். மேலும், இவள் விகார ரூபமாய் இருக்கிறாளே, அசுசியான ஆடையாபரணங்கள் அணிந்தவளாயிருக்கின்றாளே, நீச ஜாதிப் பெண்ணாயிற்றே, இவள் சரீரத்தில் துர்நாற்றம் வீசுகிறதே, இவள் பேய்பிடித்தவளாமே, கெட்ட நக்ஷத்திரத்தில் புஷ்பித்தவளாமே, இவளோடு சம்போகித்தால் என்ன விளையுமோ, இந்த யிடத்தில் யார் வந்து விடுகிறார்களோ, இங்கே குலதெய்வம் குடிகொண்டிருக்கிறதாமே, இதில் சம்போகஞ் செய்தால் என்ன சம்பவிக்குமோ என்ற எண்ணங்களில் ஒன்றேனும் இன்னும் இவைபோன்ற மற்ற எந்த எண்ணங்களும் மனதில் உதிக்குமாயின் போகத்திலிச்சையும், போக சக்தியும் குறைந்துபோகும்.

இப்படிப்பட்டவர்களுக்கு தாதுபுஷ்டி அதிகமாயும், புருஷ சின்னங்கள் முதலிய போகத்திற்குரிய கருவிகளில் யாதொரு விகர்ப்பமு மில்லாதிருந்தும், அதைரியத்தினாலும், ஆத்ம சக்திக் குறைவினாலுமே போக சக்தியற்றுப் போகிறது. ஆத்ம சக்திக் குறைவினாலுண்டாகும் தாதுநஷ்டமே எல்லாவிதத் தாதுநஷ்டங்களிலும் மிகப்பெரிதாகையால் எவ்வித காரணத்தினாலும் அதைரியப்படாமல் பூரண மகிழ்ச்சியோடும், தீரத்வத்தோடும் பலவித லீலைகள் செய்து ஆனந்த சாகரத்தில் அமிழ்ந்து, புளஹாங்கித

இருதயத்தோடு இருவரும் மனமொத்துச் சம்போக கேளிக்கைகள் செய்யப் போகசக்தி விர்த்தியாகிச் சந்தான விர்த்தியுமுண்டாகும். ஆதலால் சம்போகத்திற்கு முன் ஸ்திரீ புருஷர் சந்தனம், ஜவ்வாது, புனுகு, அத்தர், பன்னீர் முதலிய பரிமளாதிகளைப் பூசிக்கொள்வதனுலும், நறுமண மிகுந்த புஷ்பாதிகளைச் சூடிக்கொள்வதனுலும், கந்தாதி வஸ்துக்களையும், தாம்பூலாதிகளையும் வாயிலிட்டு மனதிற்கு வெறுப்பைத் தரத்தக்க வாய்நாற்றம், வியர்வை நாற்றம், கற்றுழை நாற்றம் முதலியவற்றை நீக்கிப் பள்ளியறை, தமது சரீரம், வஸ்திரம் முதலியவற்றைச் சுத்தஞ் செய்து சம்போகத்திற்கு முன் இரத்தவிர்த்தியும் வீரிய விர்த்தியுமுள்ள ஆகாராதிகளை உட்கொள்ளுவதனுலும் இருவர் மனதிற்கும் சந்தோஷமும் மகிழ்ச்சியு முண்டாகச் செய்து கொள்ளவேண்டும்.

நபுஞ்சகத் தன்மையை நிவர்த்திப்பதற்கு ஸ்திரீகளே தகுந்த வைத்தியர். "ஊடுதல் காமத்திற்கின்பம் அதற்கின்பம் கூடி முயங்கப் பெறின்." என்று திருவள்ளுவர் சொல்லியதுபோல நாயகியானவள் புருஷனுடைய இச்சைக்கு உடனே இணங்காமல் ஏதோ ஓர் அற்பக்குற்ற மிருக்கிறதாகப் பாவித்து, கோபக்குறிகள் காட்டி, அவனோடு சண்டைசெய்து, அவனைவிட்டு ஓடிப்போவாளாயின், அவனுக்குக் காமாக்கினி மூண்டு அவள் கோபத்தைத் தணிக்கும்படி பலவித சரச சல்லாப உல்லாச வார்த்தைகளாடிப் பலவித கிரியைகளினுலும் அவளை வசப்படுத்தி மேற்கொள்ளப் பார்ப்பான். கருமால காமத்தினுல் (Lust) மிருகங்களைப்போல் சேர்ந்து அடையும் இன்பத்தைவிட இவ்விதமாய்ப் பிணக்கு நீங்கிக் கலவிமேற்கருத்தாகிக் கட்டித்தழுவி முத்தமிட்டு அகமும் புறமும் குளிர உண்டாகும் ஆனந்தப் பெருக்கோடு (Love) சம்போகஞ் செய்வதனுலுண்டாகும் சுகபோக வின்பமே சகலவித லௌகீக இன்பங்களிலும் மேலானதென்று காமநூலாசிரியர் கூறுகின்றனர்.

இப்படிப்பட்டவர்களுக்கு மதுபானத்தினுலும் பிரயோசனமுண்டு.

## போகாந்த தாக சாந்தினி.

வெள்ளை நிறமான வெங்காயச் சாற்றோடு இரண்டு மடங்கு தேன் சேர்த்துக் காய்ச்சிப் பாகுபதத்தி லிறக்கி வைத்துக்கொண்டு ஒவ்வொரு நாளும் படுக்கைக்குப் போகுமுன் ஒரு பலஞ் சாப்பிட்டு வருவதனுல் போகத்தின் பின்னுண்டாகும் களைப்பு துர்ப்பலம் முதலியவை நீங்கும்.

சம்போகத்திற்குப் பின் பாலில் தேன்விட்டுச் சாப்பிட்டு வருவதனுலும் நன்மையுண்டு.

## சிகிச்சை.

இவ்வித நபுஞ்சகத் தன்மைக்கு ஔஷதப் பிரயோகங்களினால் அதிகப் பிரயோசனமுண்டாக மாட்டாது. எவ்வித தாது புஷ்டி லேகியங்களும் க்ஷணப் பரிகாரங்களேயன்றி நெடுநாளைக்குப் பயன்படா. அவைகளால் பின்னுக்குக் கெடுதியேயன்றிப் பிரயோசனமில்லை. ஆதலால் நபுஞ்சகத் தன்மையுள்ளவர்கள் செய்யவேண்டிய விஷயங்கள் யாதெனில்:—

1. **போகம்.** சிலகாலத்திற்கு இச்சாபத்தியமிருந்து எவ்வித காரணங்களினாலும் மனதிற்குக் கிளர்ச்சியுண்டாகாமல் ஆறுதலாகவும் அமைதலாகவும் இருக்கவேண்டும்.

2. **தேகாப்பியாசம்.** பிரதிதினமும் ஸ்திரீயும் புருஷனும் சூரியகாந்தி தங்கள் மேல் படத்தக்கதாக வெட்ட வெளியில் ஜீவித்து, தேகாப்பியாசமும் சுவாசாப்பியாசமும் செய்துவர வேண்டும். குதிரை, பைசைக்கில் முதலியவைகளில் சவாரிசெய்வதும் மிக்க அனுகூலத்தைக் கொடுக்கும்.

3. **ஸ்நானம்.** பிரதிதினமும் குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானஞ் செய்து எப்பொழுதும் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். வாரத்திற் கிருமுறையாவது குளிர்ந்த ஜலத்தில் பத்து நிமிஷம் ஆசன ஸ்நானஞ் செய்து வரவேண்டும்.

4. **நித்திரை.** அதிகநேரம் விழித்திராமல் குறித்த நேரங்களில் படுக்கைக்குப் போய் எழுந்திருக்கவேண்டும்.

5. **போஜனம்.** தாதுபுஷ்டியைக் கொடுக்கத்தக்க வஸ்துக்களாகிய பால், பாலாடை, நெய், புதியமுட்டை, ரொட்டி, மச்சம், மாமிசம், மூளை, கோழிக்குஞ்சு, காடை, கௌதாரி, அடைக்கலான் குருவி, சூப்பு, பழவர்க்கங்கள் முதலியவைகளை நோயாளியின் ஜீரணசக்திக்குத் தக்கதாக அடிக்கடி கொடுத்து வரவேண்டும். ஒரே நேரத்தில் அதிகமாய்ச் சாப்பிடாமல் அடிக்கடி கொஞ்சங் கொஞ்சமாகச் சாப்பிட்டு வரவேண்டும். மாமிசம் சாப்பிட்ட இரண்டு மணி நேரத்திற்குப் பிற்பாடுதான் பால் சாப்பிடலாம். சூப்பில் மிதக்கும் எண்ணெயை நீக்கிவிடவேண்டும். மாமிசத்தோடு கடுகு ஏராளமாய்ச் சேர்த்துச் சாப்பிடலாம்.

6. **நீக்க வேண்டியவை.** பன்றி இறைச்சி, நத்தை, நண்டு, கடைமுட்டை, கொழுத்த மாமிசம், புதுரொட்டி, பொரித்த இறைச்சி; உப்புக்கண்டம், கருவாடு, லாகிரி வஸ்துக்கள், ருசிக்

(Tonic.) தாதுபுஷ்டி லேகியங்கள், ஊறுகாய்வகைகள், வாழைப் பழம், எளிதில் ஜீரணமாகாத வஸ்துக்கள் முதலியவைகளை நீக்க வேண்டும்.

7. **மேல் பிடித்தல்.** பிரதிதினமும் படுக்கைக்குப் போகுமுன் சரீரத்தை நன்றாய்ப் பிசைந்து மேல் பிடித்தலினால் மிக்க பிரயோசனமுண்டு.

8. **ஔஷதங்கள்.** இயற்கைக்கு விரோதமாகப் போகசக்தியை அதிகப்படுத்திக்கொள்ளும் பொருட்டு ஔஷதங்கள் சாப்பிடுவது அயுக்தமென்றே சொல்லவேண்டும். இயற்கையில் அச்சக்தியில்லாதவர்கள் விவாகஞ் செய்துகொள்ளா திருத்தலே உத்தமம். விவாகமான பிறகு அதை இழக்கப் பெற்றவர்கள் அந்தரங்கமாக வைத்தியரிடத்துத் தம் குறையை வெளிப்படுத்திப் பரிகாரம் தேடிக்கொள்ளவேண்டும். ஔஷதங்கள் சாப்பிடுவது க்ஷணப் பரிகாரமேயல்லாமல் நீடித்துப் பலன் தரமாட்டாது. என்றாலும் பரிகாரத்தை நாடுவது மனுஷிக தன்மையாயிருப்பதனால் சில ஔஷதப் பிரயோகங்கள் இங்கு கூறுவோம்.

1. வாலிபத்தில் ஆண் தன்மை யிழந்தவர்கள் நமது ராஜவீரிய மாத்திரையை உபயோகித்து வரலாம்.

2. நமது (Life Drops) ஜீவாமிர்தம் என்ற ஔஷதத்தில் பத்து முதல் இருபது துளி வரை காலையிலும் மாலையிலும் சாப்பாட்டிற்கு மேல் சாப்பிட்டுச் சம்போகஞ் செய்ய வீரிய விர்த்தி உண்டாகும். இம்மருந்தை அதிகமாகச் சாப்பிட்டால் ஆண்குறி அதிகமாய் எழும்பி வேதனையுண்டாக்கும். நடுவயதுள்ளவர்களுக்கு இது நல்ல மருந்து. இதில் பொன்வண்டு (Spanish Fly) என்று சொல்லப்படும் காந்தாரிடிஸ் (Cantharides), தீனும் தீ மூருகல் என்னப்படும் பாஸ்பரஸ் (Phosphorus), நக்ஸ் வாமிக்கா (Nux-Vomica,) அயத்திராவகம் முதலிய அனந்த சிறந்த வீரிய விர்த்தி ஔஷதங்கள் அடைக்கப்பட்டிருக்கின்றன.

3. வயது செல்லச் செல்ல சிரப்பெரி ஐயோடிட் (Syrup Ferri Iodide) டைப்போலொத்த இரும்புசேர்ந்த ஔஷதங்களை புஷ்டியான ஆகாரத்தோடு சாப்பிட்டு வருவதால் பலன் உண்டு.

4. மின்சார சக்தியினால் டாக்டர்கள் சுகமாக்குவதுண்டு.

5. மிதமிஞ்சிய சம்போகத்தினாலுண்டாகும் தாது நஷ்டத்திற்கு டிங்ஜர் ஆவ் காந்தாரிடிஸ் (Tincture of Cantharides)

பத்துமுதல் இருபது துளியை டிங்ஜர் குளோரயிட் ஆவ் ஐயர்ன், நக்ஸ் வாமிக்கா (Tincture Chloride of Iron, Nux Vomica) முதலியவற்றோடு கலந்து சாப்பிடச் சந்தான விர்த்தியுண்டாகும். நமது ஆபீஸில் விற்பனையாகும் ஜீவாமிர்தத் (Life Drops) தில் மேற்குறித்த ஔஷதங்களு டடங்கி யிருக்கின்றன.

6. தங்கத்தை அடிக்கடி சாப்பிட்டு வருவதனால் ஆண்களுக்குத் தாதுவிர்த்தி உண்டாவதுமன்றி, பெண்களுக்கும் சூதகம் தடைப்படல் நீங்கிச் சம்போக விருப்பம் உண்டாகும். கோசத் தளர்ச்சிக்கு இது நல்ல மருந்து. தங்க குளோரயிட்டில் (Gold Chloride) $\frac{1}{16}$ கிரெயினைத் தண்ணீரில் கலந்து சாப்பிடலாம். ஆனால் இது நஞ்சு ஆதலால் வெகு பத்திரமாய்க் கொடுக்கவேண்டும். இதை அதிகமாய்ச் சாப்பிட்டுவிட்டால் முட்டையின் வெள்ளைக்கரு, பால் முதலியவற்றை மாற்றாகச் சாப்பிடலாம்.

7. மேற்கூறிய ஔஷதங்களுடன் மிருகங்களின் மூளை, பீஜம், சினைப்பை முதலியவற்றிலிருந்து செய்யப்பட்டிருக்கும் (Cerebrim, Spermin, Oophorin) முதலிய சத்துக்களில் ஏதேனும் ஒன்றை முப்பது முதல் ஐம்பது கிரேயின் சாப்பிட்டுவரத் தாதுபுஷ்டி யுண்டாகி, கோசமெலிவும் சோர்வும் நீங்கும்.

8. இவைகளில் விசேஷித்தது முட்டையின் மஞ்சள் கரு. இந்திரியம், நரம்பின் அணுக்கள் முதலியதுகளுக்குள்ள வஸ்துக்களிலிருந்து இறக்கப்பட்ட சத்தாகிய லெசிதின் (Lecithin) எனனும் ஔஷதம். எவ்வித நரம்புத் தளர்ச்சி, பலஹீனம், கோசத் தளர்ச்சி முதலியவைகளுக்கும் கொடுக்கலாம். இதை மருந்து ஷாப்புகளில் கிளிசிரால் ஆவ் லெசிதின் (Glycerol of Lecithin) என்று சொல்லி புட்டிகளில் அடைத்து விற்பார்கள். இதை வாங்கி ஒரு நேரத்திற்கு அரைத் தேயிலைக்கரண்டியளவு பாலில் விட்டுப் பிரதிதினமும் மூன்றுவேளை சாப்பிட்டுவரச் சகலவித நரம்புத் தளர்ச்சிகளும் நீங்கி வீரிய விர்த்தியுண்டாகும்.

9. நிலப்பனைக்கிழங்கு, தண்ணீர்விட்டான் கிழங்கு இவற்றைப் பச்சையாக எடுத்து, அவற்றோடு முள்ளில்லாத இலவம் பிசின், நெருஞ்சில்வித்து, நீர்முள்ளிவித்து, பெரும்பூனைக்காலி வித்து, சர்க்கரை முதலியவற்றைச் சமனிடையாகச் சேர்த்து நசுக்கிப் பாலில் போட்டுக் காய்ச்சி இரவில் படுக்கைக்குப்போகுமுன் சாப்பிட்டு வருவார்களாயின் புருஷர்களுக்குச் சுக்கில விர்த்தியுண்டாகும்.

10. சிறு நெரிஞ்சிவிதை, சிறு பூனைக்காலிவிதை, நிலப்பனைக் கிழங்கு, தண்ணீர்விட்டான்கிழங்கு, முளையிலவன் பிசின், அதிமதுரம், சர்க்கரை, தேன் சமன்சேர்த்து இடித்துப் பிசைந்துகொண்டு கொட்டைப்பாக்குப் பரிமாணம் இருவேளையும் சாப்பிட்டுவர இந்திரியக் கட்டுண்டாகும்.

11. (a) கோசத்தளர்ச்சிக்கு வெள்ளெருக்கன்பூ ஐம்பதைப் பசுவின் பாலில்போட்டுக் காய்ச்சி, பூக் குழைந்தவுடன் வடிகட்டி எடுத்துவிட்டு, பின்பு பாலை நன்றாய்க் காய்ச்சி உறை ஊற்றி வைத்து மறுநாள் கடைந்தெடுத்த வெண்ணெயோடு, கோரோசனை, பச்சைக்கற்பூரம், புனுகு இவற்றைச் சமனாகக்கூட்டி, லிங்கத்திற் பூசிச் சம்போகஞ் செய்ய விந்திறங்காமல் ஆண்தன்மை அதிகரிக்கும்.

11. (b) அக்கராகாரம், லவங்கம், லவங்கப்பட்டை, பூநாகம், (நாக்குப்பூச்சி) இந்திரகோபம் (மழைகாலத்திலூரும் செம் பூச்சி) இவை வகைக்கு ஒரு பங்கு, ஆமணக்கெண்ணெய், எருமைப்பால் இவை வகைக்கு மூன்று பங்குக் கணக்காயெடுத்து, பாலையும் எண்ணெயையும் சிறுகச் சிறுக நன்கு சாயம் விட்டரைத்து வைத்துக் கொண்டு லிங்கத்தின்மேல் பூசிவரத் தளர்ச்சி மெலிவு முதலியன தீரும்.

12. மேனாட்டவரும் வெளிப்பிரயோகத்திற்காக பலவித ஆயுதங்களைக் கண்டுபிடித்து ஆண்மையை அதிகரிக்கச் செய்து வருகிறார்கள். அவைகளில் விசேஷித்தது போலோன் (Bologene) பட்டணத்தில் சிவில் எஞ்ஜினீராய் வேலைபார்த்துவந்த பால்கஸன் (Paul Gassen) என்பவரால் கண்டு பிடிக்கப்பட்ட எரெக்டர் (Erector) கம்பிரெசர் (Compressor) குமுலேட்டர் (Cumulator,) அல்டிமா (Ultima) முதலிய கருவிகளே. இவற்றில்:—

(a) (Erector) எரெக்டரினால் புருஷசின்னத்தை யோனிக்குள் செலுத்திய பிற்பாடு சம்போகத்தினால் கோபவெழுச்சி யுண்டாகச் செய்யலாம்.

(b) (Compressor) காம உத்தீபனத்தால் இயற்கையில் சிலருக்குக் கோசவெழுச்சி உண்டானவுடன் கம்பிரசரை மாட்டிக்கொள்வதால் ஆண்குறிக்கு வந்த இரத்தம் திரும்பப் போய்விடாமல் தடுக்கப்பட்டுக் கோசமானது தளர்ச்சியுறாமல் எவ்வளவு நேரமானாலும் சம்போகஞ் செய்யலாம்.

(c) (Cumulator) க்யுமுலேட்டர் என்ற குழாயை ஆண் குறியில் மாட்டி அதனுள்ளிருக்கும் காற்றை வெளியாக்குவதனால் கோசத்தில் ஏராளமான இரத்தம் பாய்ந்து எழும்பிவிடும். இதைக் காம உத்தீபனமே யில்லாதவர்களுங்கூட உபயோகிக்கலாம். ஆத்ம சக்திக் குறைவினால் போகசக்தியை யிழந்த ஓர் வாலிபன் இந்தக் கருவியில்லாத நேரத்தில் தனக்குக் கிளர்ச்சியே யுண்டாகிறதில்லை யென்றும், அதை அவசரமானால் உபயோகித்துக் கொள்ளலாமென்று தன் பக்கத்தில் வைத்திருக்கும்போது இயற்கையான கிளர்ச்சி உண்டாகிவிடுவதால் அதைத்தான் ஒருபோதும் உபயோகிக்கவில்லை யென்றுஞ் சொன்னதாக (Dr. Vekhi) சொல்லுகிறார்.

(d) (Ultima.) அல்டிமா என்பது ஒரு ரப்பர் குழாய். இதிர் வாதம் முதலிய கஷ்டமான நோய்களில் அழுந்துபவர்களுங்கூட இக்கருவியை உபயோகிக்கலாம்.

(e) (Electric Vacuum Developer.) எலக்டிரிக் வெக்கூம் டிவெல்பர். இந்தக் கருவியினுள் கோசத்தைச் செலுத்தி அதிலிருக்கும் ஆகாயத்தை நீக்கிவிட்டு மின்சார சக்தியை அதனுள் விடுவதனால் இரத்தம் ஏராளமாகச் சென்று கோசத்துக்கு வலிவுண்டாகும். இவ்விதப் பிரயோகத்தோடு சுகாதார விஷயங்களையும் கவனித்து நடந்து சரியான ஔஷதங்களைச் சாப்பிட்டுவருவதால் மிதமிஞ்சிய போகத்தினாலாவது, இதிர்வாதம் முதலிய கொடிய ரோகங்களினாலாவது, அக்கிரமக்கிரத்தியங்களினாலாவது குறைவுற்றிருக்கும் கோசம் பூர்த்தியான ஸ்திதிக்கு வரும்.

(f) (Pollution Ring.) ஸ்கலித மோதிரம். இந்த மோதிரத்தின உட்பாகத்தில் கூரிய முட்களிருக்கும். நித்திரைக்குப் போகும்போது இதைக் கோசத்தின்மேல் அணிந்துகொண்டால் இராவொழுக்கு நேரிடுஞ் சமயத்தில் கோசவெழுச்சி யுண்டாக அதை அந்தக்கூரிய முட்கள் குத்துவதனால் உடனே விழித்துக் கொள்ளலாம்.

# சாமிவேலின்

சிங்க  மார்க்கு


# ஔஷதங்கள்.

உத்தம சஞ்சீவிகளென உலகப்பிரசித்தி பெற்றவை.

---

### சிங்க வீரிய மாத்திரை (The Lion Tonic Pills)



நாம் அநேக சாஸ்திரங்களை ஆராய்ச்சி செய்து அநேகம் பெரும் பிரயாசையுடன் கண்டுபிடித்ததும், அநேக தாது விர்த்தி ஔஷதங்களை ஒன்று சேர்த்து உண்டாக்கியதுமான சிங்கவீரிய மாத்திரைகளில் ஒன்று அல்லது இரண்டைத் தினம் மூன்றுவேளையும் போஜனமான கால்மணி நேரத்திற்குப் பின் சாப்பிட்டுவரின் மிதமிஞ்சிய சம்போகத்தினாலும் அளவிற்கு மிஞ்சிய மனோமுயற்சி செய்வதனாலும், நித்திரை பங்கத்தினாலும், நெடுநாள் வியாதியினாலும், நெடுநாள் பசித்திருப்பதனாலும், வெயிலில் அதிகநேரம் சஞ்சரிப்பதனாலும், லாகிரி வஸ்துக்களை அதிகமாய்ப் பானஞ் செய்வதனாலும், சிறுபிராயத்தில் அறியாமையால் செய்த அக்கிரமக் கிருத்தியங்களினாலும், உண்டாகும் மேகச்சூடு, மூளை, இருதயமாகிய இவைகளிலுள்ள ஆண்மைசக்திக்குறைவு, தாதுநஷ்டம், துர்தத்தில் சுக்கிலம் வெளிகண்டு விடுதல். போகிக்க ஆரம்பித்துக் குறிகள் பொருந்துவதற்கு முன்னமே கோசந்தளர்ந்து விந்து வெளிப்படுதல், ஆண்குறியில் உணர்ச்சி குறைந்து போகம் இன்பமாய்த் தோன்றாமல் போதல், போகசக்தி குறைதல், புணர்ச்சிக்குப் பின் ஆயாசமுண்டாவதுபோல் காணப்படுதல், சிலருக்கு இருதயத்துடிப்பு, தாகம் இவைகளுண்டாயிருத்தல், போகத்தில் விருப்பமில்லாமை, நீரிழிவு முதலிய

முதல துர்க்குறிகளும் நீங்கி மனோற்சாகம், ஞாபகசக்தி, வீரிய விர்த்தி, போக சக்தி, இந்திரியக்கட்டு, தேகபலம், சரீராரோக்கியம், முதலியன வுண்டாகும். மறதி, சோம்பல், அசதி, துர்ப்பலம், பசிமந்தம், அஜீரணம், இடுப்புவலி, துரிதஸ்கலிதம் முதலியவை நீங்கும். பரீட்சித்துப் பார்க்கவும். புஷ்டியான ஆகாரம் சாப்பிடுவது அவசியம். மருந்து சாப்பிடுவதற்கு முன்னும் சாப்பிட்ட பின்னும் அரைமணி நேரத்திற்குப் புகையிலை உபயோகிக்கலாகாது. இதற்கு வேறு பத்தியமே கிடைக்காது. இது (Gross) என்ற ஓர் அமெரிக்க ஆயுள்வேத பண்டிதர் கையாடி வந்த அருமையான முறை. 42 மாத்திரைகளடங்கிய சீசா 1 க்கு விலை ரூ 3.

## சாப்பிடும் விதம்.

1. இந்த மாத்திரைகளை எந்தக் காலத்திலும் போஜனஞ் செய்த கால்மணி நேரத்திற்குப் பின் சாப்பிடலாம். ஆனால் தூட் பண்ணியாவது தண்ணீரில் கரைத்தாவது சாப்பிடக்கூடாது. ஒவ்வொருவரும் தம்தம் தேகஸ்திதியை அறிந்து அதற்குத்தக்கவாறு வேளைக்கு ஒன்று அல்லது இரண்டு மாத்திரைகள் சாப்பிடலாம்.

2. துரித ஸ்கலிதத்தால் தேகம் இளைத்து மெலிந்து இருதயத்துடிப்பு, மறதி, சோம்பல், அசதி, இடுப்புவலி, அஜீரணம், பசிமந்தம் முதலிய குணங்கள் தோன்றுபவர்கள் காலையில் பசியாறிய பின் சிங்கவீரியமாத்திரைகளில் இரண்டை வாயில்போட்டுத் தண்ணீர் சாப்பிடவேண்டியது. மத்தியான போஜனஞ் செய்த கால் மணி நேரத்திற்குப் பின்பும் அதே பிரகாரம் சிங்கவீரிய மாத்திரைகளில் இரண்டை வாயில்போட்டு தண்ணீர் சாப்பிடவேண்டியது.

## எவ்வளவு காலஞ் சாப்பிடவேண்டியது?

"சிங்கவீரிய மாத்திரையை" எவ்வளவு காலம் சாப்பிட்டுவந்தால் மேற்குறித்தகுணங்கள் தோன்றுமென பலர் கேட்கின்றனர். நோயாளியின் வயதுக்கும், சரீரத்திற்கும், நோயின் தன்மைக்கும், காலத்திற்கும் தக்கது பூரண சுகத்தின் குறிகள் 10 நாள் முதல் 3 மாதத்திற்குள்ளாகத் தோன்றும். கரசுரதம் முதலிய தன்னைத் தானழிக்கும் கிரியைகளை அநேக வருஷங்களாக அப்பியாசித்து வந்ததினால் கெட்டு மெலிந்த சரீரமுடையவர்களுக்கு இரண்டொரு பாடல் மருந்து சாப்பிடுவதனால் பூரணசுகமுண்டாகக் கூடுமோ? என்றாலும் ஒரு பாட்டல் சாப்பிட்டு முடிந்தவுடன் சுகம் தெரியுமென்று உறுதியாய்ச் சொல்வோம். "சிங்கவீரியமாத்திரைகளை" எக்காலத்திலும் எந்தச் சமயத்திலும் போஜனத்திற்குக் கால்மணிக்குப் பின்பு சாப்பிடலாம். பூரணசுகமுண்டாகிறவரை இரண்டு அல்லது மூன்று மாதங்களுக்குக் கிரமமாய் இம்மாத்திரைகளைச் சாப்பிட வேண்டிய தவசியம். ஆதலால் எப்பொழுதும் சில மாத்திரைகளைக் கையில வைத்திருந்து கிரமமாய்ச் சாப்பிட்டு வருவது உத்தமம்.

கடவுள் துணை.

# மானிட மர்மசாஸ்திரம்.

## பதினோராம் புஸ்தகம்.

ஆண்மையின் அழிவும் அதன் ப[illegible]யும்

மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்
செவ்வி தலைப்படுவார் — குறள்.

இஃது

யாவர்க்கும்

சுக செல்வ நன்மைகளையும் சுகிர்த பாக்கிய
போக்கிஷத்தையும் நீடூழி பெருதவிக்க
விரும்பிய,

கல்கத்தா சர்வகலா சங்கத்தின் தமிழ்ப்பரிக்ஷகரும், ரங்கூன் செண்ட்
ஜான்ஸ் கல்லூரிப் பிரதமாசிரியரா யிருந்தவரும், கணித சாஸ்திரம், பூமிசாஸ்
திரங்களின் கிரந்த கர்த்தாவும், மானிட மர்ம சாஸ்திரப் பண்டிதரும்,
சாமிவேல் வைத்தியசாலைத் தலைவருமாகிய

எஸ் சாமிவேல், பி. ஏ. அவர்கள்

இயற்றியது.

புதிய பதிப்பு.

சாமிவேல் பிரஸ்,

தென்காஞ்சி, இரங்கோன்.

1920.

All Rights Reserved.



ஆண்மையின் அறிவும் அதன் மீக்ஷியும்.

# ஆண்மையின் அழிவும் அதன்மீக்ஷியும்.
## (THE LOSS OF MANHOOD & ITS RESCUE.)

நமது பிரசுரப் பத்திரிகையை வாசித்த சில நண்பரின் வேண்டுகோளின் பிரகாரம் வாலிபப் பிராயமானவுடன் ஒவ்வொரு ஆண்பிள்ளையும் அறியவேண்டிய ஆண்மையின் மாண்பைப் பற்றியும், அநேகர் அறிவீனத்தால் அக்கிரமத்துக்குள்ளாகி ஆண்மையை யிழந்து, புருஷத்துவங்குன்றி பெண்ணிலும் பேதையராய்த் திரிவதற்குக் காரணங்களைப்பற்றியும், அவற்றிற்கு நிவாரணங்களைப்பற்றியும் இதில் எழுதத்துணிந்தோம்.

ஐயோ! அறியாமையினாலன்றோ ஆயிரக் கணக்கான மானிடர் தமது சொந்தக் கரங்களினால் தம்மைத் தாமே கொலைசெய்து நன்னெறி மார்க்கங்களை நாசமாக்கிவிடுகின்றனர். அவர்களுக்கே இது.

அண்ட சராசரங்களிலும் நிறைந்திருக்கும் அற்புத ஜோதியே உன் அருள் ஒளி எங்கே? அந்தோ! அந்தகாரத்தில் மடியும் அநாதப் பாவியின் நெஞ்சில் அக்கிரமக் கிருத்தியங்களின் ஆபாசத்தைப்பற்றிய நினைவையும், இப்பாதகப் படுகுழியில் பாழ்போகாமல் மீளும் வகையையும் எவ்வண்ணம் எடுத்துரைப்பேன் ஏழையேன்? பெற்றோரே! பிதாக்களும் மாதாக்களுமானவர்களே! இன்னும் எவ்வளவு காலம் உங்கள் அசதியில் நித்திரைகொள்வீர்கள்? ஐயோ! அறியாமையாலன்றோ உங்கள் அருமைப் புதல்வர் அக்கிரமத்தில் அழிந்துபோகின்றனர்! உன் பிள்ளை இயற்கையிலேயே சுகிர்தகுணம் வாய்ந்ததென்று எண்ணுகின்றனையோ? மோசம் போகாதே. ஜாக்கிரதையாயிரு உன் பிள்ளையின்மேல் எப்போதும் கண்ணோக்கமாயிரு. அவன் ஸ்நேகிதன்யார் என்றுபார். பன்றியோடு சேர்ந்த கன்றும் மலந்தின்னுமே. உன் பிள்ளை விளையாடுகையிலும் தூங்குகையிலும் நீ அதன்மேல் கவனமாயிருக்கிறாயா? ஆயிரமாயிரம் வாலிபர் பட்டணங்களிலும், கிராமங்களிலும், பள்ளிக்கூடங்களிலும், வெளிகளிலும் துஷ்ட சகவாசத்தினால் கெட்டுப் பிஞ்சில் பழுத்த பழங்களாய் மாண்டுபோகின்றார்களென்பதை மனதில்வைத்து எச்சரிப்புடன் பிள்ளையை வளர்க்கவேண்டும். பன்றி பலகுட்டி போட்டதுபோல் பிள்ளைகளைப் பெற்றுவிட்டு, நிர்விசாரமாயும், கவலைத்தாட்சியாயும் இருப்பாயாகில் உன் பிள்ளைகளின் தோஷங்கள் உன் தலைமேல் சுமையாகும். இவ்வுலோகத்திலும் மறு லோகத்திலும் கடவுள் உன்னிடத்தில் கணக்குக் கேட்பார்.

உபாத்தியாயரே! போதனாசிரியரே! உங்கள் பள்ளிக்கூடங்களில் தன்னைத் தானழிக்கும் கிரியைகள் பரவும் விதத்தை அறியீர்களோ? அறிந்த பின் அதைப்பற்றி எச்சரித்தீர்களோ? உங்களுக்கு வெட்கமோ? உங்கள் கைக்குள் வாசிக்கும் அறியாப்பாலகர் தமது சிநேகிதரால் கெட்டுப்போகிறதை அறியீர்களோ? பாடம் படித்துக்

கொடுப்பதுமட்டும் போதுமென்றிருக்கிறீர்களோ? பக்தியும் புத்தியும் போதிப்பது உங்கள் கடமையன்றோ? கடவுளிடத்தில் கணக்குக் கொடுக்கும் நாளொன்றிருக்கிறதென்பதை யெண்ணி, ஜாக்கிரதையுடன் எச்சரித்துச் சன்மார்க்க வழியில் நடத்துவீர்களாக.

---

## வாலிபருக்கு ஓர் வார்த்தை.

வாலிபனே! உன் பலத்திலும், அழகிலும், தாஷ்டீக சரீரத்திலும் பிரியப்படுகிறாயா? உன் வழிகளில் உன்னைச் சீர்ப்படுத்த நானென்ன செய்யலாம் ஆத்திரத்துடன் உன்னிடம் பேசுகிறேன். உன்னைப் போன்ற வாலிபருடன் சஞ்சரிப்பதே என் தொழில். உன் வழிகள் எனக்குத் தெரியும். நீ கெட்டவனென்று நான் சொல்ல வரவில்லை. உன் மனோசக்திகளில் விசேஷித்த மாறுதல்கள் உண்டாகுங்காலமிது. நீ இனிமேல் சிறு பையனல்ல. தாஷ்டீக புருஷனாகிறாய். சீக்கிரத்தில் ஓர் குடும்பத்தைப் பரிபாலிக்கவேண்டிவரும். உன் சிநேகிதரில் சிலர் வீரபராக்கிரம தீரர்களாயிருக்கின்றனர். சிலரோ மெலிந்து தாழ்ந்து கூனிக்குனிந்து பலவீனராயிருக்கின்றனர். சிலர் புத்தி தீக்ஷண்ணியமுள்ள சிகாமணிகளாய் இருக்கிறார்கள். மற்றவர்களோ மந்தப்புத்தியுள்ள மடையர்களாயிருக்கிறாகள். சிலர் முன்னுக்கு வரவேண்டுமென்னும் ஆவலுடன் விடாமுயற்சியாய் இரவும் பகலும் உழைத்து அரிய பல வித்தைகளைக் கற்றுக்கொள்ளுகின்றனர் மற்றவர்களோ சோம்பேறிகளாய்த் தேம்பித் திரிந்து இரவும் பகலும் தின்பதும் உண்பதும், உறங்குவதும், விளையாடுவதும், ஊர் சுற்றுவதுமே, தொழிலாய்த் திரிகின்றனர். பிற்காலத்தில் இவர்களில் எவர்களுக்கு மற்றவர்களை அடக்கியாண்டு வழிநடத்தும உத்தியோகங்களும், எவர்களுக்கு மற்றவர்களுக்கு அடங்கி ஆளப்படும் அடிமைத் தொழிலும் கிடைக்குமென்பது உனக்கு நன்றாய்த் தெரியும். உனக்கு எது பிரியம்? எஜமானுக ஆளவோ அலலது அடிமையாக உழைகக வோ? திடகாத்திரவீரிய சம்பன்னனாய் விளங்கவோ அல்லது பெண்ணிலும் பேதையான பேடியாய்த் திரியவோ? உன் பிற்கால ஸ்திதியை நிர்ணயிக்குஞ் சமயம் இதுவே. ஏனென்று கேட்பாயோ? இக்காலத்தில்தான் ஜீவரத்னமாய் விளங்கும நாதவிந்துவானது உன்னிடத்துதிக்கின்றது. இதில் ஒரு துளி உன் உதிரத்தின் எண்பது துளியின் சாரமாம். மனுஷனுடைய லக்ஷணத்துக்கும், தீரத்துக்கும், வீரகாய்பீரத்திற்கும், புத்தி சாதுரியத்திற்கும் ஆதிமூலம் இதுவே. இதற்குத் தாதுவென்றும், சுக்கிலமென்றும், இந்திரியமென்றும் பல பெயர்களுண்டு. ஆகா! இதன் வல்லமையை என்ன சொல்லுவோம் இது இருக்குமிடததிலின்பம், போகும்போதுமின்பம், போனவிடத்துமின்பம், போய்விட்டாலோ துன்பம்.

"சிற்றின்பம் முற்பயக்கும் சின்னீர இன்பத்தின்—முற்றிழாய் பிற்பயக்கும் பீழை பெரிது."

இது ஒருவன் சரீரத்திலிருக்கும்பொழுது அவனுக்கு ஆண் தன்மை அதிகரித்துத் தேகபலமும், சித்தவலிமையும், நரம்புகளின் வலிமையும், தேகாரோக்கியமும் சகல ரூபலாவண்யமும் உதிக்கும். இது வெளிஏறிவிட்ட சரீரத்திலோ நோய், சோம்பலம், பலவீனம், துன்பம் முதலியவை குலவையிட்டுக்கொண்டுவந்து குடியிருக்கும்.

குழந்தை பிறக்கும்பொழுதே அதை ஆணோ பெண்ணோவென் றறியக்கூடிய குறிகளுண்டு. ஆனால் பன்னிரண்டு வயதாகுமட்டும் மற்ற அவயவங்களெல்லாம் பூரணாஸ்திதிக்கு வரினும் ஜனனேந்திரியங்கள் மட்டும் பக்குவ நிலைமைக்கு வருகிறதில்லை. அக்காலத்தில் சுக்கிலோற்பத்தியான போதிலும், இருபத்தைந்து வயது பரியந்தம் சிருஷ்டித் தொழிலைப் பூர்த்தியாய் நிறைவேற்றத்தக்க பூரணபக்குவ நிலைமைக்கு வருகிறதில்லை. ஐம்பது வயதுக்குமேல் காமாக்கினி தணியவாரம்பிக்கும். இவ்விஷயங்களை ஒருவன் கவனித்து நடப்பானாயின், அவனுக்குத் தீர்க்காயுளோங்குவதுடன், சரீரதாஷ்டீகமும், சௌக்யமும், சந்தோஷமும் நீடூழி நிலைத்தோங்குமென்பது நிச்சயம்.

சற்றேகவனி, எண்பத்துநாலு வயதில் ஆங்கிலேய அரசாட்சியின் அருமையான ராஜ்யபாரத்தைத் தன் சிரசின்மேல் தாங்கிவந்த கிளாட்ஸ்டன் (Gladstone.) மகா பிரபுவின் சரித்திரத்தை வாசித்திருப்பாய். சென்னை கிறிஸ்டியன் காலேஜில் நம் பாலியர்க்கு ஞானாமிர்தத்தை ஊட்டுவதிலேயே தம் காலமுழுவதையும் செலவிட்ட மில்லர் துரை (Dr. Miller) யைப்பற்றியும் உனக்கு நன்றாய்த் தெரியும்.

இன்னும் இதோ பார்! இந்தப்படம் யாருடையது?



தயாதாக்ஷிண்ணிய தைரிய சௌரியாதி சகல கல்யாண குண பூரண காருண்ணிய சாக்ஷாத் ஜகதீசனின பாதாரவிந்தத்தை யனுதினமும் தியானித்து ஞான நிஷ்டையிலிருந்தவரும், அருள்பெற்ற பேர்க்கெல்லாம் ஒழிபெறச்செய்யும் வேத நீதி சாஸ்திரோபதேசப் பீடமாகிய சர்வகலாசாலைகளை இந்தியாவின் பற்பல இடங்களிலு மமைத்து நம்பாலியர்க்கு ஞானாமிர்தத்தை யூட்டிக் கீர்த்தி நிரம்பப் பெற்றவரும், சீமையிலிருந்து தென்னிந்தியாவுக்குக் கலெக்டராக வரும் ஐரோப்பியருக்குத் தமிழ், தெலுங்கு முதலிய பாஷைகளைக் கற்பித்ததே

யன்றித் தமது நாட்டவர்களின் சன்மார்க்க பக்திவைராக்கிய சற்குணங்களை வெகுவாய்ப் பிரசாரஞ்செய்து ஆங்கிலேயர் மனதில நம் நாட்டவரைப்பற்றி நல்லெண்ணம புகச்செய்து வந்தவரும் சைவ சித்தாந்தம் என்னப்பட்ட இந்து வேதாகம தத்துவநூலின் சமயக் கொள்கைகளை எடுத்துவிவரிக்கும் அரியநூல்களையும், மாணிக்க வாசக சுவாமிகள், திருவள்ளுவநாயனார் முதலிய மகாத்துமாக்களின் திவ்விய சரித்திரங்களையும், இன்னும் திருவாசகம், திருக்குறள், நாலடியார், தனிப்பாசுரத்தொகை, இலக்கண சூஸ்திரமுதலிய அரிய நூல்களையும ஆங்கிலேய பாஷையில் தமதன்போடுபாடி அச்சிட்ட வருமாகிய மகாமகத்துவந்தங்கிய வேத சாஸ்திரியார் கனம் G U. போப்பையருடையது இவர் 1280-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 24-ந் தேதி யன்று நோவாஸ் கோஷியாவில் பிறந்தார். இவரது தகப்பனார் பிளிமவுத் கப்பலின் சொந்தக்காரரும் வர்த்தகருமாயிருந்தார். டாக்டர் போப்பையர் 1840-ம் வருஷம் நமது நாட்டைச்சேர்ந்த திருநெல்வேலி ஜில்லாவில கல்விக்கு உறைவிடமாயிருந்த சாயல்புரத்தில தமது வேலையை ஆரம்பித்தார். பின்பு 1851-ம் வருஷம் தஞ்சையில் St. பீற்றர்ஸ் காலேஜை ஸ்தாபித்தார். அதன்பின்பு உதகமண்டலத்திலுள்ள ஓர் பாடசாலைக்குத் தலைமைப் போதகாசிரியராகப் பத்து வருஷம் வேலைசெய்தார். இக்காலங்களில் விடாமுயற்சியுடன் தமிழ்ப் பாஷையைக்கற்று விற்பன்னரானார்.

1860-ம் வருஷத்தில் தமது நாற்பத்தோராவது வயதில் கடைசியாய் இங்கிலாந்துக்குச் சென்று அவ்விடத்தில் ஆக்ஸ்போர்ட் (Oxford.) சர்வகலாசாலையில் தமிழ், தெலுங்கு பாஷைகளுக்குப் போதகாசிரியராயிருந்தார். இக்காலங்களில் தமிழ்ப்பாஷையைக் கற்பதிலேயே ஓர்விதப் பிரீதியுண்டாகி, பூர்வீக கிரந்தங்களனைத்தையும் நன்கு ஆராய்ச்சிசெய்து வந்ததுடன், குறள், நாலடியார், திருவாசகம் முதலிய அபூர்வ கிரந்தங்களுக்கு வியாக்கியானமும், இங்கிலீஷ் உரையும் செய்திருக்கின்றார். இவருடைய சிறிய இலக்கணத்தின் மூலமாக இவருடைய பெயர் தமிழ்நாட்டுப் பிள்ளைகள் ஒவ்வொருவர்க்குந் தெரியவரும். தமிழ்ப்பாஷை விர்த்திக்காகவும், தமிழ் நாட்டவர்களுக்குள்ளிருக்கும் சாஸ்திரரத்தினங்களின் மேன்மையை ஆங்கிலேயர் அறியும் பொருட்டாகவும், ஆங்கிலத்திலும் பாடலாகப் பாடியிருப்பதோடு இவ்வித சாஸ்திரங்களையே ஆபரணமாகப் பூண்டிருக்கும் தமிழ்நாட்டவரின் நாகரீகமும் உயர்ந்ததாகவே யிருக்குமென மெச்சிப்பேசி எழுதியிருக்கிறார்.

இவர் ஸ்தாபித்த சாயல்புரம் வித்தியாசாலையின் அறுபதாம் வருஷக் கொண்டாட்டத்தில் அக்கல்லூரியின் மாணாக்கரில் சிலர் சேர்ந்து 1000 ரூபாய்வரை சேர்த்து, இரங்கோன் கனதன வர்த்தகராயிருந்த கனம் பெ. மா. மதுரைப்பிள்ளை யவர்களின் ஆதரவால்

1093-ம் வருஷத்தில் கனம் போப்பையருக்கு நன்கொடையாக அனுப்பியபோது அவர் இந்நூலாசிரியருக்கு எழுதிய பதிலாவது :—

"The Gift is especially valuable, since Tamil Publications in England cannot fail to entail very heavy expenses and my work has left me a poor man, especially since I have no pension whatever. I tell you this because I wish you all to feel that, in this respect I am your debtor, even as in other respects you are kind enough to say that you owe me something...............My own past life, now drawing to a close, seems like a dream, and I alone know how unprofitable it has been; but one thing I can affirm that I have never wavered in my affection for the Tamil people, their language and literature. I have hoped to help, in some humble way, to bring East and West nearer to one another and to prepare the way for His coming, who is "King of Kings and Lord of Lords." Pray for me that I may endure even to the end..............................................................................

I am now engaged in a final revision of my Kural, which I trust to make a thoroughly exhaustive work on that most valuable of all Tamil Publications, "The Sacred Kural." I should like to publish this entirely under the Patronage of the Chiefs of the Tamil People, with a dedication to the whole race, and to make it a really splendid monument of Tamil genius, but this seems difficult of realisation."

இவர் 1908-ம் வருஷம் பெப்ரவரிமாதம் 12-ம் தேதி உயிர்துறந்தார். இவர் சாகுமளவும் திருக்குறளின் புதிய பதிப்பை ஆங்கிலேயத்தில் மொழிபெயர்த்து அதை அச்சிட்டுக்கொண்டு வந்தாரென்று கேள்விப்படுகிறோம். இவ்வளவு திடாத்திர காம்பீர சம்பன்னனுக்கிருக்கும் ஆண்மையின் மாண்பையும், நமது நாடுகளில் இருபத்தைந்து வயதாகுமுன்னமே தங்க பஸ்பங்களும் டானிக்குகளும (Tonic.) தேடும் ஆண் சிங்கங்களின் ஆண்மையழிவையும் ஒத்துப்பார்.

ஆம்! வாலிபருக்கு இன்பத்தில் அதிகப் பிரீதியுண்டு. அவர்களுக்குச் சாலக் களிப்புற்றுத் துள்ளித் துடுக்குடன் கொக்கரித்துத் திரியும் ஆவல் அதிகமாயுண்டு. ஆடுவதும், ஓடுவதும், அலைவதும், திரிவதும், மல்யுத்தஞ் செய்வதும் ஒருவன் சரீரத்தைக் கெடுக்க மாட்டாது. ஒழுக்குமட்டுமே அவனைக் கெடுத்துவிடும். சிற்றின்பப் பிரியத்தினால் ஜீவரத்தினத்தை ஒழுக்கி விடுகிறவன் மட்டுமே தன் ஜீவன் சத்துக்குறைந்து திரிவான். ஐயோ! அம்மாணை நதி வெகு ஆழமும் வெகு துரிதமுமாய் இருளின் பள்ளத்தாக்கில் அவனைக் கொண்டுபோய்ச் சேர்க்கும். ஓ! பயங்கரம்! பாவத்தைப்பறவை நிழல்போல்விடாமல் தொடர்ந்து வரும் ஆக்கினைகளின் கனபாரத்தை உனக்குணர்த்தத்தக்க சக்தி உனக்கில்லையே. யாதொரு முட்டைப் பொறியை எடுப்பதற்கு முன்னமே அதனைக் கிளப்பித்தூக்கி, தங்

கள் சத்துவத்திற்கு அதன் பளுவு மிஞ்சினதோ ஒத்ததோவென்று கவனமாய்ப் பரீட்சித்தறிந்தபின் அதனைத் தூக்கிக்கொள்வார்கள் உலகத்தவர். அதுபோல் பாவச்செயல்களின் பயங்கரபளுவை நீ அறிந்து விலகும்படி அவற்றை ஒளிக்காமல் உனக்கு விளக்கிவிடுகிறேன். அதன்பின் உன்னிஷ்டம்

## கரசுரதம். (Masturbation.)

ஹஸ்தப் பிரயோகத்தினால் கோசத்தை இயக்கி ஆனந்திக்கும் தொழிலாகிய கரசுரதம் அல்லது முஷ்டிமைதுனம் என்னும் தொழிலை அப்பியாசித்து வருவதனால் ஆண்குறியின் நரம்புகள் தளர்ந்து, கோசவெழுச்சிக்குக் காரணமாகிய ஏராளமான இரத்தத்தை அங்கேயே நிறுத்துஞ் சக்திபற்றுப்போய், சுக்கில விளைவுங் குறைந்து போகத்தின்மேல ஆசையில்லாமல் போவதோடு, இரைப்பை, சால இருதயம் குண்டிக்காய், சுக்கிலக் குமிழ், ஸ்கலிதக் குழல் பீஜம், ஆண்குறிமுதலிய உறுப்புகளிலும் பலவித பேதங்களுண்டாகி அதனால் அநேகதுன்பங்கள் விளைகின்றன. இப்படிப்பட்டவர்



களுக்கு அடிக்கடி தலைவலி, மறதி, மயக்கம், மந்தபுத்தி, மனக்கவலை உற்சாகமின்மை, ஊக்கமின்மை, அதைரியம், சோம்பல், அசதி, அஜீரணம், வயிற்றுச்சிக்கல், வயிற்றுவலி, நெஞ்செரிவு முதலிய நோய்கள் அடிக்கடி உண்டாவதுடன், தம்முடைய உயிரின் பேரிலேயே ஓர்வித வெறுப்பும், ஸ்திரீகளைக் கண்டால் ஓர்வித நடுக்கமும் உண்டாகும், பாரிசவாய்வும் உண்டாகும். இதுமட்டுமோ? இராஜநீதிப் பிரமாணத்தை மீறி நடந்தவர்கள் மனுஷரின் கண்களுக்குத் தப்பித்துக்கொள்ளலாம், ஆனால் தெய்வத்தால் நியமிக்கப்பட்ட இயற்கைப்

பிரமாணத்தை ஒருதடவை மீறினவன் அதற்குரிய தண்டனையை அநுபவிக்காமல் தீராது.

இந்த மகா கொடியபேயின் வாயிலகப்பட்டவன் தன்னைமீட்டுக் கொள்ள சக்தியற்றவனைப் பின்வரும் கஷ்ட நஷ்டங்களைப் பற்றிச் சற்றுங் கவனிக்காதவனாய், தன்னை அழிக்கும் அக்கினியின் பிரகாச காந்தியா லிழுக்கப்பட்டுத் தன்னுயிரை மாய்த்துக் கொள்ளும் விட்டிலைப்போல் திரும்பத் திரும்பத் தனது ஆபாச அக்கிரமக்கிர்த்தியங்களை நடத்திவருகிறான். ஐயோ! பயங்கரம்! அவன் முடிவென்ன! * அவனுடையநேத்திரங்களிரண்டு மழுங்கி, முள்ளந்தண்டின் உறுதி நீங்கிப் போவதால் உட்காரச் சக்தியற்று, இடுப்புவலி, முதுகுவலி, நீரடைப்பு, கல்லடைப்பு, இராவொழுக்கு, காக்கைவலி, மஞ்சட்காமாலை, க்ஷயரோகம் முதலிய நோய்களுக்கு அவன் சரீரம் வாசஸ்தலமாகிவிடும்.



அப்பொழுது அவன் சரீரத்திலும் மனதிலுமுண்டாகும் வேதனையை என்னென்று சொல்வேன். புருஷத்துவம் தன்னைவிட்டு நீங்கிப்போனதை நினைக்க நினைக்க தன்னுயிரைத்தானே போக்கிக்கொள்ள நினைப்பானொருசமயம். ஆனால் கலியாணத்தைப்பற்றியும் தன் தேகஸ்திதியைப்பற்றியும் நினைக்கும்போது மனதிலொருவித பயங்கரமுண்டாவதால் இருபதுவயது வாலிபனாயிருந்தபொழுதிலும் கலியாணப் பேச்செடுத்தவுடன் டானிக்கு (Tonic.) களையும், தங்கபஸ்பங்களையும், மன்மதபாணலேகியம், தாதுபுஷ்டிலேகியம், காமகேசரிக்குளிகை, வீரியஸ்தம்பனக்குளிகை முதலியவைகளையுந் தேடிப்பிடித்துபயோகிக்கிறான். இவ்வித க்ஷணப்பரிகாரங்களினால் நரப்புகளில் முறுக்கேறி. விசேஷ போகத்தின் மேலாசையுண்டாக எல்லாஞ்சோர்ந்து ஐயாவைப் பேடியாக்கிவிடுகின்றன. அளவுகடந்த போகத்தை அநேகந்தடவை செய்து அல்லல் படுபவனைவிட அதிகமான வாதனையடைந்து இறுதியில் பாரிசவாய்வு முதலிய பலத்த ரோகங்களால் பீடிக்கப்படுறான்.

## காரணங்கள்.

இவ்வளவு கெடுதியையும் உண்டாக்கத்தக்க ஹஸ்தப்பிரயோக முதலிய தன்னைத்தானழிக்குஞ் செய்கைகளைச் சிறுவர் அப்பியாசித்து வருவதற்கு காரணங்களை இங்கு கூறுவோம்.

* தன்னைத் தானழிக்குஞ் செயல்களால் இவ்வித ரோகங்களுண்டாகுமென்று நாம் சொல்வதால் இவ்வித ரோகமுள்ளவர்களெல்லாம் அவ்விதத்தொழிலுடையவர்களென்பது நம்கருத்தல்ல.

1. முதற்காரணம் தாய்தந்தையரே. குழந்தை உற்பத்தியாகும் காலத்தில் தாய்தந்தையர் மிதமிஞ்சிய போகத்திற் கிடங்கொடுப்பதால் அக்காலத்தில் தாயின் கர்ப்பத்தில் உற்பத்தியாயிருக்குங் குழந்தையும் காமாதுரனுகிறான். "இதோ நான் துர்க்குணத்தில் உருவானேன். என் தாய் என்னைப் பாவத்தில் கர்ப்பந்தரித்தாள்." என்று இஸ்ரவேலின் இனிய சங்கீதராஜன் சொல்லியிருக்கும் வண்ணம், பெற்றோரின் காமக்கிரியைகள் பிள்ளைக்குக தாவிவிடுவதால் அவர்களுக்குப் பிறக்கும் பிள்ளையும் பத்து பன்னிரண்டு வயதானவுடன் தாதுவினுடைய தன்மை இப்படிப்பட்டதென்றும், அதுவே உயிர் நிலையென்றும், அதைக்காப்பாற்றுவதனாலேயே புருஷோத்தமனென்று விளங்கலாமென்றும் அறியுமுன்னமே இயற்கை வாசனையாலும், துஷ்டருடைய சகவாசதோஷத்தாலும் தம்மைத் தாமழிக்கும் செய்கையை அப்பியாசிக்கப் பழகிப் பிஞ்சிலேயே பழுத்த பழமாகிவிடுகின்றனர்.

2. குழந்தைகள் சாப்பிடும் சாப்பாடு. சிறுபிராயத்தில் வாய்க்கு ருசியானவைகளும், தாதுபுஷ்டியை உண்டாக்கக்கூடிய முட்டை, மாமிசம், நெய், மிட்டாய், அதிகமான உப்பு, தேயிலை, காப்பி, பால் முதலிய ஆகாரங்களை யூட்டுவதனால் பத்து வயதிலேயே காமக்கிளர்ச்சியுண்டாகி, அறியாப் பருவத்தில் அழிவுக்குரிய தொழிலைச்செய்ய ஆரம்பித்து விடுகின்றனர்.

3. அடிக்கடி ஸ்நானஞ் செய்யாமல் அசுசியாயிருப்பதனாலும், பஞ்சணை மெத்தைகளில் தூங்குவதனாலும், மற்றவர்களோடுகூடத் தூங்குவதனாலும், வீட்டிற்குள்ளேயேயிருப்பதனாலும், சுத்த ஆகாயம் பாவாத அறைகளில் தூங்குவதனாலும், தூங்கும்பொழுது கம்பளிப்போர்வையைப் போர்த்துக்கொள்வதனாலும், அஜீரணத்தினாலும், வயிற்றில் கிருமிபற்றியிருப்பதனாலும், மூத்திரத்தையடக்குவதனாலும், இரவில் அதிக நேரஞ்சென்று போஜனம் செய்வதனாலும், சிறுவயதிலேயே சுருட்டு முதலிய லாகிரிவஸ்துக்களைக் குடிக்கப்பழகுவதனாலும், தூங்கும்பொழுது மல்லார்ந்து படுத்திருப்பதனாலும் சிறுபிராயத்திலேயே ஜனனேந்திரியங்களுக்குக் கிளர்ச்சியுண்டாகித் தன்னைத் தானழிக்கும் அக்கிரமக் கிருத்தியங்களுக்கு ஆளாக்கிவிடுகின்றன.

4. அநேக பெற்றோர் தமது மூடத்தனத்தால் தமதுபிள்ளைகள் சிறுவர்களா யிருக்கும்பொழுதே விளையாட்டுப் பாவனையாக அவர்களிடத்தில் பெண், மாப்பிள்ளைப்பேச்சு பேசுவதனாலும், அவர்கள் முன்னுகவிருந்தே தாங்கள் சந்தான சந்தோஷ கேளிக்கைகள் செய்வதனாலும், போதனையினாலும், சாதனையினாலும் தமதருமைக் குழந்தைகளைக் கெடுத்துவிடுகிறார்கள்.

5. பெற்றோர்க்குச் சிநேகிதரெனவும், பாந்தவ்யரெனவும் பா...ய மணாள பிரபுக்களின் மக்கள் பலர் அவர்களருமைப் பிள்ளைகளின்

ஜனனேந்திரியங்களைப் பிடித்து விளையாடுவதனால் அறியாப் பருவத்தில் அழிவுக்கு ஆளாகும் வழிகளைக் காட்டிவிடுகின்றனர்.

6. செவிலித் தாய்மாரும், தாதிகளும் பிள்ளைகளின் அழுகையை நிறுத்தும் பொருட்டு அவர்கள் ஜனனேந்திரியங்களை அழுத்துவதனால் ஈனப் பழக்கங்களைக் கற்றுக்கொடுத்துவிடுகின்றனர்.

7 [illegible] த்தியாதி காரணங்களால் பழக்கப்பட்ட சிறுவர் அறி [illegible] லேயே தம்மைத் தாமழிக்கும் துர்க்கிருத்தியங்களைச் [illegible] ய்விடுவார்களென்பதை அறியாமல், அநேக பெற்றோர் [illegible] தையா யிருந்துவிட்டு, தம் புத்ர புத்திரிகள் இயற்கையி [illegible] மாசற்ற சுகிர்தகுணம் வாய்ந்தவர்களென்றும், அவர்களுக்கு யாதொரு புத்திமதியும் அவசியமில்லையென்றும் எண்ணுகிறார்கள். இதுமகா தப்பிதம். வெகுஜாக்கிரதையுடனும் எச்சரிப்புடனும் பிள்ளைகளை வளர்க்கவேண்டியது பெற்றோரின் கடமை. ஆதலால் அவர்களுக்குப் பிரயோசனமாகத் துஷ்டக் கிருத்தியங்கள் செய்யப் பழகின பிள்ளைகளின் தன்மைகளைப்பற்றிச் சில குறிப்புகளை இங்கு வரைவோம்:—

## குறிப்புகள்.

1. தன்னைத் தானழிக்குந்தொழிலை அப்பியாசித்துவரும் பிள்ளைகள் சிறியோராயினும் பெரியோராயினும் பெருந்தீனிக்காராயிருந்த போதிலும் ஒருநாள் அதிக பசியும், மறுநாள் பசியின்மையும், சாதாரண சாப்பாட்டில் வெறுப்பும், உயர்ந்ததும், ருசியுள்ளதுமான சாப்பாட்டின்மேல் விருப்பமுமுள்ளவர்களா யிருப்பார்கள். இவ்விதமாய்ச் சாதாரண சாப்பாட்டை வெறுக்கிற பிள்ளைகள் துஷ்ட கிருத்தியங்களுக்கு ஆளானவர்கள் என்பது முதல் குறிப்பு. அவர்கள் இஷ்டப்படும் சில வஸ்துக்களைப் பெற்றோர் அறியும்பொருட்டு இங்கு கூறுவோம்:—

ஓர் பெண்குழந்தை சுவரிலுள்ள சுண்ணாம்பை எடுத்துத் தின்கிறதையும், சிலேற்றுப் பென்சிலைக் கடித்துத் தின்கிறதையும் கண்டால் அவள் துஷ்டப்பிள்ளையென்று உடனே அறிந்துகொள்ளலாம். அதேமாதிரியாக ஒருபையன் வெறும் உப்பை எடுத்துத் தின்றுகொண்டிருப்பானானால் அல்லது சாப்பாட்டில் அதிகம் உப்பு சேர்த்து சாப்பிடுவானானால், அல்லது சுருட்டை வழக்கமாய் உபயோகிப்பானானால், அல்லது ஏலம், கிராம்பு, லவங்கப்பட்டை, குடிவகை முதலியவைகளை உபயோகிக்கப் பழகியிருப்பானானால், அவன் தன்னைத்தானழிக்கும் தொழில்செய்யப் பழகினவன் என்றறிந்து கொள்ளலாம். இவ்விதமாய், விசித்திரப் பழக்கங்களும் விசேஷித்த வஸ்துக்களின்பேரில் அவாவும் ஒரு பையனுக்கு அல்லது பெண்ணுக்கு உண்டாகுமாயின் அவர்கள் இவ்வித கெட்ட பழக்கங்களையுடையவர்களென்றறிந்து கொள்ளலாம்.

2. இன்னுமொரு குறிப்பு யாதெனில் :—தான் அப்பியாசித்துவரும் துர்ப்பழக்கம் தப்பிதமானதென்று அவன் மனச்சாட்சி அவனை அடிக்கடி வாதித்துக் கொண்டிருப்பதால், அவன் தனது பெற்றோர் அல்லது பெரியோர் முகத்தில் விழிக்க வெட்கமுற்று எப்பொழுதும் தனிமையாயிருக்க விரும்புவதுடன், பெரியோர் முன்வந்தால் நேராய் எதிர்த்துப்பார்த்து வார்த்தையாட வெட்கி விழிகள் ஆட்டுக்கண்பட்டு, கீழ் நோக்கிய பார்வையுடன் நிற்பதைக் காணலாம். இவ்விதக் குறிப்பைக் கண்டவுடன் பெற்றோர் இதைக் கவனித்துப் பையனை மூர்க்கமாய்த் தூஷணவார்த்தைகளால் கோபிக்காமல் வெகு பட்சத்தோடும், சாந்தத்தோடும் அவனைத் தனிமையாய் நிறுத்தி இவ்வித செய்கைகளாலுண்டாகும் கஷ்டங்களை ஒவ்வொன்றாய் உதாரணத்துடன் எடுத்துக்காட்டி அது குற்றமென்று வற்புறுத்துவது பெற்றோரின் கடமை.

3. இன்னுஞ் சில குறிகள் எவையெனில் :—இவ்வித கிரியைகள் செய்யும் பிள்ளைகளுக்கு முகம் வெளிறிச் சிலசமயம் மோகப் பருக்கள் தோன்றுவதுண்டு. கைகள் குளிர்ந்து வியர்வைகாணும். வார்த்தைகள் குளறி ஞாபகசக்தி குறையும். இன்னும், சரீரம் முழுவதிலுமே அசௌக்கியமாகிவிடுவதால் வேலைசெய்யவாவது, படிக்கவாவது சக்தியற்றவனாவான். சிலகாலமாக இத்தொழிலை அப்பியாசித்தபின், தான் செய்வது துர்க்கிருத்தியமெனக்கண்டு அத்தொழிலை நிறுத்தப் பிரயாசப்படுவான். ஆனால் அக்காலத்தில் இரவில் தூங்கும்பொழுது சொர்ப்பனங்கண்டு இந்திரியம் தானாகவே ஸ்கலிதமாகி விட்டதைப் பார்த்துத் திகிலும் பயங்கரமும் உண்டாகும். இன்னும் நாட்செல்லச்செல்ல சொர்ப்பனங் காணாமலே ஸ்கலிதமாகும். இவ்விதமாகச் சரீரம் பலவீனமடைவதால் பகலிலுங்கூட ஒழுக்கு நேரிட்டு வஸ்திரத்தைக் கெடுக்கும். இதனால் இளைப்பும் களைப்பு முண்டாகும். அப்பொழுது அவன் அதிகார வேதனையடைந்து நடு நடுங்கி, தன் சரீரத்தைப்பற்றிய நம்பிக்கையற்றுப்போய், அடிக்கடி கோபமடைவதுமன்றி, தனக்குப் பாரத்தையும் வருத்தத்தையுங் கொடுக்கும் தன சரீரத்தை எவ்விதமாய்த் தொலைத்து விடுகிறதென்று எண்ணி எண்ணி ஏங்கித் தியங்கி மயங்கி நிற்பான்.

அவ்வித உபத்திரவங்களுக்காளாகி அவதிப்படும் வாலிபர் நமக்கு எழுதிவரும் ஆயிரக்கணக்கான கடிதங்களில் சிலவற்றைமட்டும் மற்றவர்களுக்கு எச்சரிப்பாக இந்த 11-ம் புஸ்தகத்தின் கடைசியில் பிரசுரித்துக்கொடுக்கிறோம்.

## பாமர வைத்தியர்கள்.

இப்படிப்பட்டவன் இந்தசமயம் பாமர வைத்தியர்கள் கையிலகப்பட்டு, அகாதமான பச்சைவெட்டு மருந்துகளைச் சாப்பிட்டுத்

தன் பொருளை நாசமாக்குவதுமல்லாமல் சரீரத்தையுங் கெடுத்துக் கொள்ளுகிறான். ஏனெனில், தன் பெற்றோரிடத்திலாவது, குடும்ப வைத்தியர்களிடத்திலாவது தன் நிர்ப்பந்த ஸ்திதியைப்பற்றியும் துர்வழக்கங்களைப் பற்றியும் வெளியிட வெட்கப்படுகிறான். ஆதலால் வர்த்தமானப் பத்திரிகைகளில் பிரசுரஞ்செய்திருக்கும் மருந்துகளை வாங்கும்பொருட்டு வீணாய்த் தன் காசை அழித்து மோசம்போகிறான். அவ்விதமாய் மோசம்போன ஒருவர் நமக்கெழுதிய கடிதத்தை மற்றவர்களின் உபயோகத்திற்காகத் தெரிவிப்போம்.

"ஐயா"

தாங்கள் சிலோன் முஸ்லிம் நேசன் பத்திரிகையில், "சிசுவுற்பத்தி சிந்தாமணி" என்னும் "மானிட ஜனன மர்ம சாஸ்திரம்," பிரதி ஒன்றுக்கு ரூபாய் 5 என்றும், முன்பணம் அனுப்புவோர் புஸ்தகத்தைக் கட்டாயம் இனாமாகப் பெற்றுக்கொள்ளும்படி நாம் செய்திருக்கும் சுலபமான ஏற்பாட்டை நமக்கு எழுதித் தெரிந்துகொள்ளலாமென்றும் எழுதியிருக்கிறது. புஸ்தகம் இனாமாகக் கிடையாது. சமயத்தவறினாலென்பது எனக்கு கொஞ்சமும் விளங்கத்தெரியவில்லை. அதின் இரகசியத்தை உறுதிமொழியாக எழுதினால் மட்டிலும் ரூபாய் 5 மணியார்டர் செய்யப்படும். இல்லாவிடில் செய்யப்பட மாட்டாது. என் புத்திக்கு ஒன்றும் புலப்படவில்லை. இதை எழுதுவதற்குக் காரணம் இந்தப்பிரகாரம் முஸ்லிம் நேசன் பத்திரிகையில் அநேக சாமான்கள் பிரசுரித்ததை எழுதி வருத்தி நான் மோசம்போயிருக்கிறேன். கல்கத்தா டேபிஸ் கம்பனியில், (Canadian Gold) கனேடியன் கோல்ட் மோதிரம் வருத்தியும், மோசம்போயிருக்கிறேன். அதைப்பற்றி முஸ்லிம் நேசனுக்கு மோசடியானதை ஏன் பிரசுரித்தீர், என்பதாய்க கேள்விகேட்டதில் காசைக்கொடுத்தால் பிரசுரிப்பது நமக்குவேலை, அதின் விவரந்தெரியாது, என்று எழுதியிருக்கிறார்கள்."

பாமர பண்டிதர்களின் பிரகடனங்களை வாசிக்க வாசிக்க ஓர்வித பயமும் திகிலும் உண்டாகி உள்ளபெலனையும் இழந்துவிடுகிறான். ஆதலால் அப்படிப்பட்ட துர்க்கிர்த்தியங்களுக்காளானவர்களுக்கு நாம் சொல்லும் உபதேசமாவது :—

அறியாமையினால் அக்கிரமக் கிர்த்தியங்களுக் காளாகி அவஸ்தைப்படும் அருமைக்குழந்தாய்! "துன்மார்க்கன் தான்செய்த துன்மார்க்கத்தைவிட்டு நியாயத்தையும் நீதியையும் செய்வானேயாகில் அவன் தன் ஆத்துமாவைப் பிழைக்கப் பண்ணுவான்." ஆதலால் முதலாவது உன் அக்கிரமங்களை விட்டுவிலகு. அதுவே சிறந்த ஔஷதம், அதில்லாமல் ஔஷதத்தால் பிரயோசனமில்லை, சிலர் நிறுத்த முடியவில்லையே என்னலாம், நிறுத்த முடியும், மனத்திட-

யிருந்தால் வழியுமுண்டாகும். ஆதலால் திடசித்தத்தால் உன் வழிகளைச் செவ்வைபண்ணு. கற்புள்ள மங்கையரைக் கெடுக்கவாவது, வேசியர் வீட்டில் செல்லவாவது விருப்பமில்லாத அநேக பக்திமான்களும், மரியாதையுள்ள மாணக்கர்களும் இத்துர்ப் பழக்கத்துக்காளாகிக், கடைசியில் தங்கள் உயிர் குறைவதைக் காணவே அதை மீட்கும்படி தங்கத்தைக் கொட்டிக்கொடுக்க ஆயத்தமாயிருக்கிறார்கள். அவர்கள் பாமரர் இடத்தில் மோசம் போகாமல் திடசித்தத்தோடு தம்மைக் கட்டிக்கொண்டு கைதேர்ந்த வைத்தியர்களிடம் தமது விஷயத்தைத் தெரிவிக்க நிவாரணமுண்டு.

---

## பூர்வீக வழக்கம்.

இத்துர் வழக்கம் மோசேயின் காலத்திலிருந்ததாகவும் அதற்கு அக்காலத்திலேயே சில ஏற்பாடுகள் செய்யப்பட்டதாகவும் தெரிய வருகிறது, உதாரணமாக:—

லேவியாகமம் 15:16,17. "ஒருவனிலிருந்து இந்திரியம் கழிந்ததுண்டானால், அவன் தண்ணீரில் முழுகவேண்டும்; சாயுங்காலமட்டும் அவன் தீட்டுப்பட்டிருப்பானாக, கழிந்த இந்திரியம்பட்ட வஸ்திரமும் தோலும் தண்ணீரினால் கழுவப்பட்டு சாயுங்காலமட்டும் தீட்டாய் இருக்கவேண்டும்."

உபாகமம் 23:10,11. "இராக்காலத்தில் சம்பவித்த தீட்டினாலே அசுத்தமாயிருக்கிற ஒருவன் உங்களிடத்தில் இருந்தால், அவன் பாளயத்திற்கு வெளியே போய்ப் பாளயத்திற்குள் வராமல், சாயுங்காலத்திலே ஜலத்தில் ஸ்நானம்பண்ணி, சூரியன் அஸ்தமிக்கும்போது பாளயத்திற்குள் வரக்கடவன்."

இவைகளிலிருந்து நாம் அறிவது யாதெனில், இந்திரிய ஸ்கலிதமானது அசுசியானதென்றும், சுத்த ஆசாரமுள்ள வெளி இடங்களில் தேகாப்பியாசஞ் செய்வதும், ஸ்நானஞ் செய்வதுமே அதற்குப் பரிகாரமாக உபயோகப்பட்டு வந்ததென்பதுமே.

இத்துர் வழக்கத்தைக் கண்டிக்கும்பொருட்டு ஆங்கிலேயத்தில் அநேக கிரந்தங்கள் எழுதப்பட்டிருப்பதுடன், இவ்வித சீர்கேட்டை திருத்துவதே சுயதேச நன்மையை ஸ்தாபிப்பதற்கு அஸ்திபாரமென அறிந்து அநேக பிரசங்கிகள் எழும்பி வாலிபராய்ச் சிறுவர்களுக்குப் பிரசங்கம் செய்து வருகின்றார்கள், சுதேச விர்த்தியை அபேக்ஷிக்கும் நம் நாட்டவர்மட்டும் இந்தப் பாவத்தொழில் பரவுதற்கு இடங்கொடுத்து அஜாக்கிரதையாய் இருப்பது தகுதியாகுமோ? இதைப்பற்றி (Dr. Adam Clarke) டாகடர் ஆடம் கிளார்க் என்பவர் சொல்வதை இங்கிலீஷ் படித்த வாலிபருக்குப் பிரயோசனமாக ஆங்கிலத்திலேயே கூறுவோம்:—

"The sin of self-pollution is one of the most destructive evils ever practised by fallen man. In many respects it is several degrees worse than common whoredom, and has in its train more awful consequences. It excites the powers of nature to undue action, and produces violent secretions which necessarily and speedily exhaust the vital principle and energy; hence the muscles become flaccid and feeble, the tone and natural action of the nerves relaxed and impeded, the understanding confused, the judgment perverted, the will indeterminate and wholly without energy to resist, the eyes appear languishing and without expression, and the countenance vacant; nutrition fails; tremors, fears and terrors are generated, and thus the wretched victim drags out a miserable existence, till, superannuated even before he had time to arrive at man's estate, with a mind often debilitated even to a state of idiotism, his worthless body tumbles into the grave and his guilty soul-guilty of self-murder-is hurried into the presence of its Judge.

## ஓர் கேள்வி.

ஒருவன் சிற்றின்பச் சிந்தனை என்பதே இல்லாமல் இருப்பது சாத்தியமாகுமா? மனுஷனுக்கிருக்கும் சுபாவங்களிலெல்லாம் மகா வலிமையுள்ளது சிற்றின்ப பிரியமே. இப்பிரியத்தை அளவற்ற ஞானமுடைய ஆனந்த சொரூபி நமக்குள் ஸ்திரமாய் நாட்டாதிருப்பாரானால், இப்பூமியின் கண்ணே ஜனசமூக விர்த்தி குறைந்து சீக்கிரத்தில் நாசமாகிவிடும். ஆதலால் நம்மைப்போல ஓர் ஆன்மாவைச் சிருஷ்டிப்பதற்கு மூலகாரணமான சுகப்பாக இன்பமே ஒருவனுக்கு உண்டாகும் சகலவித லௌகிக இன்பங்களிலும் மேலானதாய் இருக்கவேண்டுமென்பது சிருஷ்டி கர்த்தாவின் திருச்சித்தம். அதற்கு மாறுதலாகச் சரீரத்தைக் கட்டுப்படுத்துவது மகா கஷ்டமே. என்றாலும், பால் மகாமுனிவர் சொல்லியதுபோல "என் சரீரத்தை அடக்கி ஆண்டு வருகிறேன்." என்று சொல்லக்கூடிய சமர்த்துடைய மகாத்மாக்களும் உண்டு.

எத்தனையோ ஆயிரக்கணக்கான வாலிபர் வாய்மையும் தூய்மையும் பொருந்தினவர்களாய் விவாகமாகுமட்டும் தம்மைத் தாம் அடக்கி ஆண்டு வருகின்றனர். எத்தனையோ தபோநிதிகள் சரியான நிடகாத்திர புருஷர்களாயிருந்தும் போகத்தை முற்றிலுமே தொலைத்துவிட்டுத் தேகசுகங்கெடாமலே தீர்க்காயுளுள்ளவர்களாயிருக்கிறார்கள். அதற்குக்காரணம் அவர்கள் சிறு பிராயத்திலேயே தமது சரீரத்தைக் கட்டியாண்டு ஜெயசீலராயதன் உச்சித மேன்மையைப்

பற்றிக் குரு உபதேசம் பெற்றவர்கள். மற்றவர்களோ துஷ்ட சகவாசத்தினாலும் சிற்றின்பக் கதைகள் வாசிப்பதனாலும் மனக்கிளர்ச்சி உண்டாகி மனம்போன போக்கெல்லாம்போய்க் கெட்டுப்போகின்றனர். எண்ணெயை வார்த்தால் நெருப்பு அவியுமோ?

ஒருவன் விவாகஞ் செய்யுமளவும் சம்போக இச்சையே இல்லாமல் தன் சரீரத்தை அடக்கியாளும்படிக் கைபாடவேண்டிய சில விஷயங்களை இப்பொழுது கூறுவோம:—

1. ஒருவன் தான் பரிசுத்தனா யிருக்கவேண்டுமென்னும் திடசித்த வைராக்கிய முடையவனாயிருத்தலே முதல் உபாயம். சில சமயந் தவறி விழுந்தாலும் அதைரியப்படாமல் சுத்த ஜீவியஞ் செய்ய அடிக்கடிப் பிரயாசப்படின் அதுவே வழக்கமாகிச் சுத்த ஜீவியம் எளிதாகிவிடும். ஆதலால் ஆரம்பத்திலேயே தன் மாமிச இச்சையை எதிர்த்து உறுதியான வைராக்கியத்தோடு போராடவேண்டும், எவ்வளவு பிரயாசையெடுத்தும் துர்வழக்கங்களை விட்டுவிடச் சாத்தியப்படவில்லையேயென்று போக்குச் சொல்லுவாயோ? வேறெவ்வித உபாயத்தினாலும் உனக்கு மீக்ஷியில்லை. அக்கிரமக்கிர்த்தியம் ஒன்றில் நிலைத்திருக்குமட்டும் எந்தவித அவிழ்தத்தினாலும் பிரயோசனமுண்டாகாது. ஞானியாகிய சாலமோன் எழுதிய நீதி மொழிகள் ஐந்தாம் அதிகாரத்தை அடிக்கடி வாசித்துப்பார். அவர் சொல்வதைக்கேள். நீதி-5:20,22,23.

"என் மகனே, நீ பரஸ்திரீயின்மேல் மயங்கித் திரிந்து அந்நியஸ்திரீயின் மார்பைத் தழுவவேண்டியதென்ன?

துன்மார்க்கனை அவனுடைய அக்கிரமங்களே பிடித்துக்கொள்ளும், தன் பாவக்கயிறுகளால் கட்டப்படுவான்:"

"அவன் புத்தியைக் கேளாததனால் மடிந்து தன் மதிகேட்டின் மிகுதியினால் மயங்கிப்போவான்."

2. மதியூகி தனக்குவரப்போகும் தீங்கை முன்னமேயறிந்து விலகிக்கொள்வான். மூடனோ அகப்பட்டுக்கொள்வான். ஆயுதபாணியான ஓர் திருடன ஒரு வீட்டினுள் புகுந்தால் ஓடினவன் பிழைப்பான, எதிர்த்தவன் சாவான். ஆதலால் சோதனைக்கு விலகி, எப்போதும் உன சரீரத்தையும் மனதையும் வேலையில் செலுத்து. இரவில் தூங்கும்போது துர் எண்ணம் உன மனதினுள் புகுந்தால் உடனே படுக்கையை விட்டெழுந்து இரண்டொரு நிமிஷம் உலாவி விட்டுக் குளிர்ந்த ஜலத்தினால் ஜனனேந்திரியங்களைச் சுத்தஞ்செய்து உட்கார்ந்து ஞான ராஜனின் யூக மொழிகளை வாசி,

3. பொல்லாத நினைவுகள் உன் மனதில் பிரவேசிக்கவிடாதே. ஏனெனில் "விறகு நெருப்பை வளர்ப்பதுபோல் நினைவுகள் ஆசைகளை வளர்க்கும்." அவ்வித எண்ணங்கள் வரின் உடனே உலகத்தை வெறுக்கவும் தெய்வத்தை நேசிக்கவும் தூண்டிவிடும் பாடல்களைப் பாடுவதனாலும், சன்மார்க்க புஸ்தகங்களை வாசிப்பதனாலும், சரீரத்தை உழைப்பில் செலுத்துவதனாலும் மனதைச் சுத்தமாய் வைத்துக் கொள்ளலாம்.



4. சாலமோன் ஞானி சொல்வதுபோல் "பட்டணத்தின் வீதிகளில் பல பக்கங்களிலும் கண்ணைச் செலுத்தாதே. இடங்கள் தோறும் உலாவித் திரியாதே. சோடனை அலங்காரமுள்ள ஸ்திரீயை நோக்காமல் உன் கண்களைத் திருப்பிக்கொள். அந்நிய ஸ்திரீயின் அழகை இச்சையோடு பாராதே." ஏனெனில் கண்களே அநேக கேட்டிற்குக் காரணம். ஏவாளைக் கெடுத்ததுங் கண்ணே. ஆதியாகமம் 3:6. அவள் அந்த விருட்சம் புசிப்புக்கு நல்லதும், பார்வைக்கு இன்பமும், புத்தியைத் தெளிவிக்கிறதற்கு இச்சிக்கப்படத்தக்க விருட்சமுமாயிருக்கிறதென்று கண்டு அதின் கனியைப் பறித்துப் புசித்துத் தன் புருஷனுக்குங் கொடுத்தாள். அவனும் புசித்தான்.

தாவீதைக் கெடுத்ததுங் கண்ணே. அவன் தாமரை மலர்போன்ற வதனமும், பிறைச்சந்திரன்போல் வில்லாகிருதமான நெற்றியும், கயல்போன்ற கண்களும், பொன்மயமான மேனியும் பொருந்தின ரூபலாவண்ணியமுள்ள ஓர் சுந்தரமாது நிர்வாணமாய் ஸ்நானஞ் செய்வதைத் தன் கண்களால் பார்த்தான். உடனே விரகாக்கினியால் வெந்தெரிந்து பயங்கரமான பரதார குற்றம், துர்மாதிரி, கொலைபாதகங்களாகிய முக்குற்றங்களுக்காளானான்.

யோபு மகாத்மாவோ தமது காலத்தை வேலைகளில் இடைவிடாமல் செலுத்தித் தமது நேத்திரங்களை யடக்கிக் காப்பதில் வெகு ஜாக்கிரதையா யிருந்ததாக வாசிக்கிறோம். அவர் தேகப் பிரகிருதி சாஸ்திரத்தையும் சுகாதார முறைகளையும் பூரணமாய்க் கற்றறிந்தவர்போல் ஞானம் பேசுகிறார். உதாரணமாக:- யோபு 31:1,9-15. என் கண்களோடே உடன்படிக்கை பண்ணின நான் ஒரு கன்னிகையின்மேல் நினைப்பாய் இருப்பதெப்படி? என் மனம் யாதொரு ஸ்திரீயின்மேல் மயங்கி அயலானுடைய வாசலை நான் எட்டிப்பார்த்ததுண்டானால் அப்போது என் மனைவி வேறொருவனுக்கு மாவரைப்பாளாக. வேற்று மனிதர்கள் அவள்மேல் சாய்வார்களாக. அது தோஷம். அது நியாயாதிபதிகளால் விசாரிக்கப்படும் அக்கிரமமாமே. அது பாதாளபரி

யந்தம் பட்சிக்கும் அக்கினியாய் என் சம்பத்தையெல்லாம் நிர்மூலமாக்கும். என் வேலைக்காரனானாலும், என் வேலைக்காரியானாலும், என்னோடு வழக்காடும்போது அவர்கள் நியாயத்தை நான் அசட்டை பண்ணியிருந்தால், தேவன் எழும்பும்போது நான் என்ன செய்வேன். அவர் விசாரிக்கும்போது நான் அவருக்கு என்ன மறு உத்தரவு சொல்வேன். தாயின் கர்ப்பத்தில் என்னை உண்டுபண்ணினவர் அவனையும் உண்டுபண்ணினாரல்லவோ? ஒரேவிதமான கர்ப்பத்தில் எங்களை உருவாக்கினாரல்லவோ? இவ்வாக்கியங்களில் யோபு மகான் "கண்களே பாவத்தின் வழி" என்பதைக் குறிப்பிடுகிறார். லோத்தின் மனைவியும் சோதோமைத் திரும்பிப்பார்த்து அழிந்தாள். தினாளும் தேசத்துப்பெண்களைப் பார்க்கும்படி போனவிடத்தில் கற்பழிந்து தீமைக்குள்ளானாள்.

ஆதலால் அசுத்த எண்ணங்கள் உன் மனதில் பிரவேசியாமலிருக்க வேண்டுமென்றால் அசுத்தமான எந்த வஸ்துவையும் பாராதபடி உன் கண்களைக் காட்டு. ஓ! உன்னத ஏற்பாடு :—அசங்கியான புஸ்தகங்கள், அசங்கியான ஆடல் பாடல்கள், அசங்கியான நாடகங்கள் முதலிய சகலவித துர்விஷயங்களையும் உன் கண்களுக்கு விலக்குவதோடு, உன் மனதைக் கறைப்படுத்தக் கூடியதும், துரிச்சையையூட்டக் கூடியதுமான எந்த வஸ்துவையும் உன் கண்களால் ஏறெடுத்துப் பாராதே.

5. துர் இச்சை மனதில் புகவிடாமல் உன் பஞ்சேந்திரியங்களையும் அடக்கி, கண்களினால் கெட்டவிஷயங்களைப் பாராமலும், காதுகளினால் சிற்றின்பக் கதைகள், பாடல்கள் துர்விஷயங்கள் முதலியவற்றைக் கேளாமலும், உன் வேலையிலேயே முழுமனதையுஞ் செலுத்தி, முன்னுக்கு வரவேண்டுமென்னும் ஆவலிலேயே உன் மனஞ் செல்லட்டும்.

6. ஓர் மந்திரம், எல்லாவற்றிற்கும் மேலாக உனக்குச் சோதிக்கும் பொழுதெல்லாம், "தெய்வம், மோட்சம், நரகம், மாதா, சகோதரி, மனையாள், பிள்ளை." இந்த ஏழு வார்த்தைகளையும் பிரணவ மந்திரமாக உச்சரிக்க, பிசாசின் கெட்ட எண்ணங்கள் உன் மனதை விட்டு ஓடிப்போய்விடும். ஒரு ஸ்திரீயை இச்சையோடு பார்க்க மனந்தூண்டும்போது உன் தாயையும், சகோதரியையும், மனையாளையும், பிள்ளையையும் வேறொருவன் அப்படிப் பார்ப்பானென்று எண்ணு. உன் சரீரத்தைத் தீட்டுப்படுத்தும் செய்கைக்கு உன் கையை எடுக்கும்போது உன் மனையாளையும் பிள்ளையையும் நினை. எல்லாவற்றிலும் விசேஷமாய்க் "கர்த்தருக்குப் பயப்படுவதே ஞானத்தின் ஆரம்பம். அதனால் மரணக் கண்ணிகளுக்குத் தப்பித்துக் கொள்ளும் வழிகளுண்டு."

7. மேற்சொல்லிய விஷயங்களோடு உழைப்பு, தேகாப்பியாசம், இளைப்பாறுதல், தூக்கம், ஜீரணமாகத்தக்க வஸ்துக்களை புசித்தல், முதலிய விஷயங்களைக் கவனித்து வருவதனால், தன்னைத் தானழிக்கும் கிரியையால் அழிந்த சரீரத்தைத் திரும்பவும் கட்டக்கூடும்.

8. மதுபானம். சாராயம் முதலிய லாகிரிவஸ்துக்களை உபயோகிப்பதால் சுயசித்த சுயாதீனத்தை யிழந்து, சமயத்துக்குத் தக்கது உற்சாகமும் உத்தியனமும் அதிகரித்து, தகாத விஷயங்களைச்செய்ய ஏவி, சரீரத்தையும் தாதுவையும் கெடுத்துவிடுகிறது. இப்பழக்கத்தைத் திடீரென்று நிறுத்தமுடியாது. ஆதலால் சிறிது சிறிதாகக் குறைத்து மெள்ளமெள்ள முற்றிலும் நீக்கப் பிரயாசப்பட வேண்டும். முள்ளின்மேல் துணியைப் போட்டவன் மெள்ள மெள்ளத்தான் எடுக்கவேண்டும்.

9. புகையிலை. புகையிலையை உபயோகிப்பதும் சரீரத்திலுள்ள இரத்தத்தைக் கெடுத்து, கண்திருஷ்டியை மங்கடித்து, காதுமந்தமாகி, கன்னத்திற் குழிவிழுந்து, சுவாசங்கெட்டு, ஜீரணசக்திக் காதாரமான உமிழ்நீரை அடிக்கடி வெளியாக்குவதால் அஜீரணமுண்டாகி, தாதுவினுடைய தன்மையைக் கெடுத்து நீராக்கி உடைத்து வெளியாக்கிவிடும்.

"தண்புகையும் நெஞ்சலரும் கைகாலயர்ந்துவிடும்
சொல்லரிய மேனி வெளுத்துவிடும்—மெல்லமெல்ல
ஈரல் கருகிவிடும் இந்திரிய நஷ்டமாம்
பாரப்புகையிலையின் பண்பு." என்று கூறினர் பெரியோரும்

ஆதலால் புகையிலையை உபயோகியாமலிருப்பது உத்தமமாகும்.

10. தன்னைத்தானழிக்கும் கிரியையைச் செய்யத் தூண்டிவிடும் விசேஷ காரணம் ஒருவன் சரீரத்திலேயே உண்டு. அது யாதெனில்:—மலச்சிக்கலே. ஏனெனில் சுக்கிலாசயம் ஜலாசயத்திற்கும் மலக்குடலுக்கும் நடுவில் இருக்கிறது. மலக்கட்டிருக்கும் பொழுது சுக்கிலாசயத்தை அழுத்துவதால் அதன் நரம்புகளுக்குக் கிளர்ச்சியுண்டாகி இந்திரியம் தானகவே வெளியாகிவிடும். ஆதலால் காய்கறி பதார்த்தங்கள், பழவகைகள் முதலியவற்றைச் சாப்பிட்டுக் குடலில் அழுக்குத் தங்காமல் காத்துக்கொள்ள வேண்டும். யாதொரு விரேசன மருந்துகளுஞ் சாப்பிடாமலே குடலைச் சுத்தமாக வைத்துக்கொள்வதற்கு ஓர் உபாயமுண்டு. அதாவது மருந்து ஷாப்புகளில் (Fountain Syringe.) என்று சொல்லப்படும் பீச்சாங்குழல் சொற்பவிலையில் கிடைக்கும். அதில் கைதாங்கக்கூடிய சூடுடைய வெந்நீரை விட்டு ஆசனவாயினுட்

செலுத்த வயிற்றினுள்ளிருக்கும் அசடுகள் நீங்கிப்போகும். அனேகப்படி சுடுதண்ணீரைத் தாராளமாய் யாதொரு பயமின்றி உள்ளே செலுத்தலாம்.

மலச்சிக்கல் அதிகமாயிருந்தால் மோலாசஸ் (Molasses.) அல்லது காஸ்டீயில் சோப் (Castile Soap.) தண்ணீரில் கலந்துகொள்ளலாம். ஆரம்பத்தில் கொஞ்சம் கஷ்டமாகத் தோன்றும், ஆனால் சற்றே பழகிக்கொண்டால் பிறகு இதை எக்காலத்திலும் சாப்பிட மனம் வாராது. இந்திரிய ஸ்கலிதம், மூலமுளை, நீர்க்கடுப்பு, மதுமேகம் முதலிய நோய்களுண்டாயிருக்கும்பொழுதும், சுக்கிலாசயம், சுக்கிலைச்சுரப்பி, நீர்த்தாரை, ஜலாசயம் முதலியவைகளில் உண்டாகும் அழற்சி, வீக்கம் முதலியவற்றை நீக்குவதற்கு வெந்நீர்ப் பிரயோகத்தைப்போல் சீக்கிரத்தில் சுகங்கொடுக்கக் கூடிய அமிர்தம் வேறில்லை.

மேற்கூறிய (Fountain Syringe.) என்ற பீச்சாங்குழலால் அரைப்பாகச்சுக் குறையாத வெந்நீரை ஆசனஸ்தானத்துட் செலுத்துவதால் மேற்கூறிய அவயவங்களுக்கு உஷ்ணந் தாக்கி அழற்சியையும் வீக்கத்தையும் உடனே நீக்கும். ஐம்பது வயதுக்கு மேற்பட்டவர்களுக்குச் சாதாரணமா யுண்டாகிற மூலமுளை, நீர்க்கடுப்பு, மேகரோகங்களுக்கு வாரத்துக்கிருமுறை இப்பிரயோகத்தை உபயோகித்துவரின், தளருப பருவத்தி லவர்களுக்குண்டாகக் கூடிய ரோகங்கள் நீங்கிச் சுகஜீவியமடைவார்கள்.

11. பிரதிதினமும் காலையில் குளிர்ந்த ஜலஸ்நானம் செய்து வருவதுடன் மாலையில் ஆசனஸ்நானமுஞ் செய்துவரவேண்டும்.

12. அதிகாலையில் சுத்த ஆகாயமுள்ள வெளிப்பிராந்தியத்தில் உலாவிவருவதும் சுவாசாப்பியாசம் செய்து வருவதும நன்மை பயக்கும்.

13. மிட்டாய், மச்சம், பன்றியிறைச்சி, லாகிரி வஸ்துக்கள் முதலியவைகளைக் கட்டோடே நீக்கவேண்டும்.

14. பிரதிதினமும் காலையில பத்துநிமிஷமும் மாலையில் ஐந்து நிமிஷமும் டம்பல் (Dumbells.) அப்பியாசஞ் செய்து வரவேண்டும்.

15. இரவில் தூங்கும்போது போர்த்துக்கொள்வதற்காகத் துணி உபயோகிக்கக்கூடாது.

16. மெத்தை முதலியவைகள் போடாமல் பாயில் படுத்துத் தூங்குவதே நலம்.

17. காலையில் விழிப்புத் தோன்றினவுடனே படுக்கையிலிருந்து எழும்பிவிடவேண்டும்.

18. இவையெல்லாவற்றிற்கும் மேலாக உன் ஜனனேந்திரியங்களைப் பற்றிய எவ்வித எண்ணமும் உன் மனதில் தோன்ற இடங்கொடாதே. அவற்றின் தன்மையையும் விசேஷத்தையும் பற்றி படிப்பதவசியம். படித்தபின் அவைகளைக் கவனிக்கக் கூடாது. உறுதியான நம்பிக்கையோடு பிரம்மசரியத்தைச் செய்யப் பிரயாசப்படு. அப்பொழுது உன் ஆண்மையின் மாண்பு இன்னதென்றறிவாய்.

19. தூங்கும்பொழுது மல்லார்ந்து படுக்கவே கூடாது. வலதுகையைத் தலைக்குக் கீழ் வைத்துச் சாய்ந்து சரிந்து படுப்பது மகா உத்தமம். யோகாப்பியாசிகளின் முறையும் இதுவே.

---

## இந்திரிய ஸ்கலிதம்.

பிராயமானவுடன் ஒவ்வொருவர்க்கும் பீஜங்களிலிருந்து சுக்கிலம் விர்த்தியாகி, இந்திரிய நாளவழியாய் ஜலாசயத்திற்கு மேலாகச் சென்று, ஜலாசயத்திற்கும் மலக்குடலுக்கும் நடுவிலிருக்கும் சுக்கிலாசயத்தில் சேருகிறது. இவ்விதச் சுக்கிலச் சுரப்பு அவரவரின் சரீர திடத்திற்கும், சாப்பிடும் ஆகாரத்திற்கும், மற்ற ஸ்திதிக்குந் தக்கது அதிகமாக அல்லது குறைவாக இருக்கும். சிலருக்கு இருபத்துநாலு மணி நேரத்தில் ஒரு அவுன்ஸ் சுரக்கும். மற்றவர்களுக்கு ஒரு மாதத்தில் அதேயளவு சுரக்கும். அந்த மாதிரியாய் ஒருவனுக்கு ஒரு சமயம் ஒரேநாளில் ஒரு அவுன்ஸ் சுரந்தாலும், மற்றச் சமயங்களில் அவன் ஸ்திதிக்குத் தக்கது ஒரு மாதத்தில் அவ்வளவு சுரப்பது கஷ்டம்.

சுக்கிலாசயத்தில் சுக்கிலம் நிறைந்தவுடன் அது வெளியாகும் வழி தேடுவது இயற்கைப் பிரமாணம். விவாகமாகாத சிலருக்கு இரவில் தூங்கும்போது சொர்ப்பனங்கண்டு சுக்கிலம் வெளியாவதுண்டு. அப்படி வெளியாகாதவர்களுக்கு சுக்கிலாசயத்தின் சுவரிலுள்ள இரத்தத்தாரைகளின் மூலமாய் இரத்தத்தோடு கலந்து சரீரத்துக்குத் தாஷ்டீகத்தையும் பளபளப்பையுங் கொடுப்பதுடன், நரம்புகளுக்கு உறுதியையும் வலிமையையுமுண்டாக்கும். அப்படிப்பட்ட மனுஷர் உலகத்தில் அபூர்வம்.

இருபது வயதுக்குப்பின் அநேகமாய் இராவொழுக்காகவே வெளியாகிவிடும். தேகத்தைச் சரியாய்க் கட்டுப்படுத்தித் தேகாப்

பியாசஞ் செய்து வருவதுடன், மனதையும் சத்விஷயங்களில் செலுத்துவோருக்கு சமபாசமபங்களில் இராவொழுக்குண்டானை போதிலும் அதனுல் பலக்குறைவும் ஆயாசமுஞ்தோன்றுது. ஆனுல் தன்னைத்தானழிக்கும் செய்கையை புடையவன் அதை நிறுத்தப் பிரயாசப்படும்பொழுது இராவொழுக்கு அடிக்கடி உண்டாகி, அதனுல் தேகபலங்குன்றி, ஞாபகசக்தி குறைந்து, அசதி, மயக்கம், அஜீரணம் முதலியவைகளுண்டாகி, முகம் கறுத்து, கண் வெளுத்து, குழிவிழுந்து, பார்வை மங்கிப்போய், வெட்கி நடைப் பிணமாய்த் திரிவான்.

ஒருதடவை வெளியேறின இந்திரியம் எப்பொழுதும் வெளியேறுவதிலேயே நோக்கமாயிருக்கும். ஆரம்பத்திலேயே அதி ஜாக்ரதையாயிருந்து, சிற்றின்ப சிந்தனைகளை முற்றிலும்வெறுத்து சுத்த ஆகாரமும் லேசான சாப்பாடும் உட்கொண்டு, தமது சரீரத்தைச் சீர்திருத்திக்கொள்ளப் பிரயாசப்படவேண்டும். தவறினுல் பின்பு எவ்வித ஔஷதத்தினுலும் சீரடைவது கஷ்டம். இவர்களுக்கு ஆசனஸ்நானத்தினுல் அதிகப் பிரயோஜனமுண்டு. வயது செல்லச் செல்லப் பைத்தியம், க்ஷயரோகம், பாரிசவாய்வு, காக்கைவலி, நபுஞ்சகத்தன்மை முதலிய பல ரோகங்கள் பிடிக்கும்.

---

## சிகிச்சை.

1. நித்திரைக்குப் போகுமுன் மலஜலங் கழித்துக்கொள்ள வேண்டும். இரவிலும் காமக்கிளர்ச்சி தோன்றினுல், உடனே எழுந்திருந்து நீர்பெய்துவிட்டுக் குளிர்ந்த ஜலத்தினுல் ஜனனேந்திரியங்களைக் கழுவவேணடும்.

2. படுத்திருக்கும்பொழுது "இன்றைக்கு நான் கெட்ட சொர்ப்பனங் காணமாட்டேன். இந்திரியம் ஸ்கலிதமாகாது. என் சரீரம் பலமாகிவிட்டது." என்று தன் மனதிலேயே நூறுதடவை சொல்லிக் கொண்டு உறுதியான தீர்மானத்தோடு படுத்திருக்க வேண்டும். விழித்திருக்கும் பொழுது நம்மனதில் எதைத் தீர்மானித்திருக்கிறுமோ அதுவே தூக்கத்தில நடந்தேறும்.

3. படுத்திருக்கும் மெத்தை அதிகக் கனதியாயிருக்கக்கூடாது. எவ்வளவு மெல்லியதோ அவ்வளவும் நன்று. கம்பளிப் போர்வையால் மூடுவதும் நன்றன்று.

4. மல்லாந்து படுப்பதும் நன்றன்று. ஏனெனில் முள்ளந்தண்டை ஊடுருவிச் செல்லும் நாம்புகளுக்குப் படுக்கையின் உஷ்

ணந் தாவிக் காமக்கிளர்ச்சியை யுண்டாக்கும். மேலும் ஜலாசயத்தில் நீர்பெருகி, அதற்கும் மலக்குடலுக்கும மத்தியிலிருக்கும் சுக்கிலாசயத்தை நெருக்குவதால் கிளர்ச்சியுண்டாகும். ஆகலால் ஒரு பக்கமாய்ச் சாய்ந்து சரிந்து படுக்கவேண்டும். அப்படி வழக்கமில்லாதவர்கள் துணியினால் ஒரு சிறு பந்து செய்து, அதை ஒரு நூலில்கட்டி, பந்து முதுகுப் பக்க மிருக்கத்தக்கதாக வைத்து அந்த நூலை இடுப்பில் கட்டிக்கொண்டால் மல்லாந்து படுக்கும் வழக்கம் நின்றுபோகும்.

5. பிரதிதினமும் குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானஞ்செய்து, ஜனனேந்திரியங்களையும் குளிர்ந்த ஜலத்தில் கழுவவேணடும்.

6. ஔஷதங்கள். மிதமிஞ்சிய சம்போகத்தினாலும், தன்னைத் தானழிக்கும் அக்கிரமக் கிர்த்தியங்களினாலு முண்டாகும் இந்திரிய ஸ்கலிதத்திற்கு ஈஸ்டன்சிறப (Easton's Syrup.) அல்லது பாஸ்பிரஸ் பில்ஸ், (Phosphorus Pills) எனபவைகளில் ஒவ்வொரு மாத்திரை ஒருநாளைக்கு மூனறுவேளை சாப்பிட்டுவர சுகமாகும்.

வயிற்றில் கிருமி பற்றியதால் உண்டாகும் இந்திரிய ஸ்கலிதத்திற்கு சன்டோனயின், (Santonine.) சாப்பிட்டுக கிருமிகளை நீக்கச் சுகமாகும. ஆக்சைட் ஆப் ஓர்ப்மென்ற் (Oxide of Orpiment.) நில் நோதத்துக்கு ஒரு கிரெயின் வீதம இரும்வேளை சாப்பிட்டுவர இராவொழுக்கு, பகலொழுக்குகள் நீங்கி வீரிய விர்த்தியுண்டாகும். தனனைததானழிககும செய்கையை நெடுங்காலமாய் அப்பியாசித்து வருவதால் பிஜபபைகள் குளிர்ந்து ஊனமடைந்து, ஆண்குறி சிறுத்துப்போய வீரிய விர்த்துக்குறைவாயிருக்குமாயின் நமமுடைய சிங்க வீரிய மாத்திரையால் தப்பாமல சுகமடையலாம்.

இதில் குறிப்பிட்டிருக்கும் ஔஷதங்களை எந்த இங்கிலீஷு ஔஷத சாலையிலும் வாஙகலாம். தவறினால் இந்நூலாசிரியருக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம.

இந்திரிய ஸ்கலிதத்தை நிறுத்தும்பொருட்டு மருந்தொன்று தயாரித்தனுப்பும்படி அநேகர் கேட்டுககொண்டதின்பேரில ஸ்கலித ரக்ஷிணியைத் தயாரித்து தெனகாஞ்சியிலுள்ள சாமிவேல் வைத்தியசாலையில் ரூ. 1—8—0க்கு விறபனை செய்துவருகிறோம்.

சாப்பிடும் விதம்:—காலை, மாலை, போஜனமானபின் வேளைககு ஒரு மாததிரை வீதம் 12 நாள சாபபிட்டுவர இந்திரியஸ்கலிதம நிவர்த்தியாகும், அதன்பின ஒருவாரம மருந்தை நிறுத்திவிட்டுப் பின்பு சிங்கவீரிய மாத்திரையை மூன்றுவேளையும போஜனத்திற்கு மேல ஒன்று அல்லது 2 மாத்திரை வீதம சாப்பிட்டுவர வேண்டியது. சிங்கவீரிய மாத்திரை சீசா 1-க்கு ரூ. 3.

## பிரமேகம். (Gonorrhœa.)

இதுவரையில் ஒருவன் தானாகவே தனக்குண்டாக்கிக்கொள்ளும் ரோகங்கள், அவற்றின் பரிகாரம் முதலியவற்றைப்பற்றிக் கவனித்தோம். இனிமேல் மற்றவர்களோடு சம்பந்தப்படுவதால் உண்டாகும் நோய்களைப்பற்றிப் பேசுவோம்.

கூசாமல் சாவான பாவத்தைத் துணிந்து கட்டிக்கொள்ளு பவனே! பாவமே இன்பமில்லையென்று யெண்ணி, அதையடுத்துச் சூழ்ந்து தொடரும் பரிவாரங்களாகிய தீங்குகளுக்கெல்லாம் உள்ளாக உடன்படுகின்ற நிர்ப்பாக்கியனே! நீ உன்மேல் சுமத்திக் கொள்ளும் எடுபடாப் பாரச் சுமைக்கு உன் பலம்பற்றுமோ, பற்றாதோவென்று முந்திப் பரிசோதித்துப்பார். இல்லாவிடில் நசுங்கிப்போவாய். சாலமோன் ராஜா சொல்வதைச் சற்று கவனி.

நீதிமொழிகள், 5-3-14. "பரஸ்திரீயின் உதடுகள் தேன்கூடு போல் ஒழுகும்; அவள் வாய் எண்ணெயிலும் மிருதுவாயிருக்கும். அவள் செய்கையின் முடிவோ எட்டியைப்போலக் கசப்பும், இருபுறமும் கருக்குள்ள பட்டயம்போல் கூர்மையுமாயிருக்கும். அவள் காலடிகள் மரணத்துக்கு இறங்கும்; அவள் நடைகள் பாதாளத்தைப் பற்றிப்போகும். நீ ஜீவமார்க்கத்தைச் சிந்தித்துக் கொள்ளாதபடிக்கு அவளுடைய நடைகள் மாறி மாறி விகாரப்படும்; அவைகளை அறியமுடியாது. ஆதலால் பிள்ளைகளே இப்பொழுது எனக்குச் செவிகொடுங்கள்; என் வாயின் வசனங்களைவிட்டு நீங்காதிருங்கள். உன் வழியை அவளுக்குத் தூரப் படுத்து; அவளுடைய வீட்டின் வாசலைக் கிட்டிச்சேராதே. சேர்ந்தால் உன் மேன்மையை அந்நியர்களுக்கும், உன் ஆயுள் காலத்தைக் கொடூரருக்கும் கொடுத்துவிடுவாய். அந்நியர் உன் செலவத்தினால் திருப்தியடைவார்கள்; உன் பிரயாசத்தின் பலன் புறத்தியாருடைய வீட்டில் சேரும். முடிவிலே உன் மாமிசமும் சரீரமும் உருவழியும்போது நீ துக்கித்து, ஐயோ! போதகத்தை நான் வெறுத்தேனே, கடிந்துகொள்ளுதலை என்மனம் அலட்சியம் பண்ணினதே! என் போதகரின் சொல்லை நான் கேளாமலும், எனக்கு உபதேசம பண்ணினவர்களுக்கு என் செவியைச் சாயாமலும் போனேனே! சபைக்குள்ளும், சங்கத்துக்குள்ளும் கொஞ்சங் குறைய எல்லாத் தீமைக்கு முள்ளானேனே! என்று முறையிடுவாய்."

துன்மார்க்க ஸ்திரீகளுடன் சம்போகஞ் செய்வதால் அவர்களிடத்திலுள்ள விஷநீர் சரீரத்தில் தாக்கி, பிரமேகம் (Gonor-

rhœa.) கொறுக்கு (Syphilis.) முதலிய மேகரோகங்களுண்டாகும். பிரமேக ரோகமானது வெள்ளை, வெட்டை, சீழ்மேகம், தந்திமேகம், பிரமியம், மேககாங்கை, மேகச்சூடு எனப் பலவகைப்படும்.

ஆண்களுக்கு நீர்த்தாரையிலும், பெண்களுக்கு மர்மஸ்தானத்திலுமிருந்து வெள்ளைநிறமான நீர் வடிவதற்கு வெள்ளையென்று பெயர். (1) துன்மார்க்க ஸ்திரீயோடு சேர்ந்த நாள்முதல் எட்டாவது நாள்வரை எந்தநாளிலாவது வெள்ளைகாண ஆரம்பிக்கும். சிலருக்கு இரண்டொரு வாரங்களுக்குப் பின்பு காண்பதுண்டு. இந்த வியாதியினால் நீர்த்துவாரம் புண்ணாகிப்போவதால் ஆரம்பத்தில் நமைச்சலெடுத்து நீர்க்கடுப்புத் தோன்றும். பின்பு ஜலம் வடியும். அதை உடனே நிறுத்தாவிடில் சீழ் வடியும். (2) பின்பு மூத்திரப்பை, சுக்கிலக்குழாய் முதலிய பாகங்களிலுண்டாகும் புண்ணிலிருந்து சீழ்வடியும். அது சிலருக்கு வெள்ளையாய், சிலருக்குப் பச்சையாய், வேறு சிலருக்கு மஞ்சள், சிவப்பு நிறமாய்த் தோன்றும். அக்காலத்தில் கோசமும், மூத்திரத் துவாரத்திலுள்ள சளிச்சவ்வும் வீங்கிவிடுவதால் நீர்த்துவாரத்தில் எரிச்சலுண்டாகி நீர் அதிக வேதனையோடு இறங்கும். அடிக்கடி நமைச்சலுண்டாகிக் கொண்டிருப்பதால் அவ்வித ரோகிகளின் கை எந்த நேரமும் ஜனனேந்திரியங்களுக்கு நேராகவே போய்க்கொண்டிருக்கும். அவர்கள் வஸ்திரங்களிலும் வெள்ளைபிறங்கிக் கறையாகும். இரவில் கோசம் விம்மி நோவெடுப்பதால் நித்திரைக்குப் பங்கம் நேரிடும். இந்த வியாதியைத் தொட்ட கையினால் கண்ணைத் தொட்டால், கண் கெட்டுப்போகும். ஆதலால் எச்சரிக்கை. (3) "வெட்டை முற்றினாற் கட்டை." என்பதுபோல், நாட் செல்லச் செல்ல வெள்ளை மூக்குச்சளிபோல் மாறிவிடும். அதற்குத் தந்திமேகமென்று பெயர். இதில் உபத்திரவக்குறிகள் அதிகமிரா. ஆனால் கவலைத்தாட்சியா யிருக்கலாகாது. சிலருக்கு மூத்திரத் துவாரத்திலிருந்து இரத்தம் வடியும். அதற்கு இரத்தப் பிரமேகமென்பார்கள். முழங்கால் முதலிய பூட்டுகள் வீங்கினால் மேகப்பிடிப்பு அல்லது வாதரோகமென்றும், அரையில் நெறிகட்டினால் அரையாப்பென்றுஞ் சொல்லப்படும்.

சிலருக்குச் சீழ்வடியாமல் மூத்திரம் விடும்போது மாத்திரம் எரிவுங் கடுப்பும், மூத்திரத்துவாரம் வீங்கிச் சிவந்து மிருக்கும். அதற்கு வறட்சிமேக மென்று பெயர். ஒருவனுக்கு வெள்ளை அடிக்கடி கண்டால் நீர்த்துவாரம் அடிக்கடி புண்ணாகிச் சுருங்கிவிடுவதால் நீர்விடச் சக்தியற்று நீரடைப்பு காணும்.

ஸ்திரீகளுக்கு மர்மஸ்தானம், கருப்பையின் வாய், நிதம்பம் முதலிய இடங்களிலிருந்து மேகநீர் உண்டாவதால் மிகுந்த உபத்திரவமிராது. ஆனால் அவர்களுக்கு அதிக நமை உண்டாவதால் எத்தனையோ ஆயிரம் வாலிபரை இன்ப மொழிகளாலிழுத்து ஆசையை மூட்டி அவர்கள் காசைப்பறித்துக்கொண்டு அதற்குப் பதிலாய் மேகரோகத்தைக் கொடுத்துவிடுகிறார்கள். இந்தப்பொல்லாத விஷநீர் ஒருதடவை ஒருவனுடைய சரீரத்தில் பரவினால், அது ஆயுள்பரியந்தம் அவனைவிட்டு நீங்காமல் பதுங்கியிருந்து, மாசற்ற அவன் மனையாளிடஞ் செல்வதுமன்றி, பிள்ளைகளிடத்திலும் மூன்றும் நான்காம் தலைமுறைமட்டும் பரவும். அவன் சரீரத்திலும் பலமிருக்கிறமட்டும் பதுங்கியிருந்து, பலம் குறையுங் காலத்தில் மூலரோகம், நீர்க்கடுப்பு முதலிய பலரோகங்களாய்த் தோன்றும்.

---

## சிகிச்சை.

மேகரோகமுள்ள ஸ்திரீயுடன் சேர்ந்தவுடனே நீர்விடுவதனாலும், பிச்சாங்குழலால் நீர்த்தாரையில் நீரடித்துக் கழுவி விடுவதனாலும், லிங்கத்தை ஜலம்விட்டுக் கழுவுவதனாலும் பெரும்பாலும் ரோகம் அணுகாது.

1. மேக ரோகங்களுக்கெல்லாம் ஆரம்பத்தில் பலத்தைக் கழித்துக் குடலைச் சுத்திசெய்து கொள்ளவேண்டியது அவசியம். ஔஷதங்களைவிட (Fountain Syringe.) பிரயோகத்தினால் வெந்நீரை ஆசனவாயினுட் செலுத்திக் குடலைச் சுத்தஞ்செய்வது மிக நன்று.

2. பிரதிதினமும் இளவெந்நீரில் பத்துநிமிஷம் ஆசனஸ்நானஞ் செய்யவேண்டும்.

3. வெள்ளை கண்டிருக்கும்போது ஸ்திரீகளைப் பார்ப்பதும், அவர்களை நெருங்குவதும், காமநூல்களையும் பாடல்களையும படித்தலும் கேட்டலும் கூடாது. மேலும் காப்பி, தேயிலை, சாராயம் வாய்வு பதார்த்தங்கள், காரப்பண் பதார்த்தங்கள், மாப்பண்டங்கள், காரமான கறிவகைகள், புஷ்டியைத்தரும் போஜனம், மது, கோழிக்கறி, மச்சம், புளி, புகையிலை முதலியவற்றை நீக்கி, காய்கறி பதார்த்தங்களோடு பால் சேர்த்துச் சாப்பிடுவது நன்று. ஆகாரத்தைச் சுருக்கி எளிதில் ஜீரணிக்கத்தக்க வஸ்துக்களையே சாப்பிடவேண்டும். கஞ்சியான ஆகாரம் மிக நன்று.

4. [illegible] காணும்போது இரவில் ஆண்குறிக்கு எழுச்சியுண்டாகிச் சகிக்கக்கூடாத வேதனையுண்டானால், எண்ணெயில் அல்லது குளிர்ந்த ஜலத்தில் நனைத்துப் பிழிந்த துணியைச் சுற்றி வைக்கலாம். நீர்த்துவாரத்தில் எரிச்சலுண்டானால் விளக்கெண்ணெய் தடவலாம்.

5. நீரெரிச்சல் தணியும்பொருட்டு சோடாவாட்டர், பார்லியரிசிக் கஞ்சி, சப்ஜா, வெண்டை, துளசி, ஸ்ரீதால் இவைகளின் விரையிலொன்றை ஊறவைத்த ஜலம், வெடியுப்பு சேர்த்த கஞ்சித் தண்ணீர், யானைநெருஞ்சில் ஊறவைத்த ஜலம், முதலிய கொழுகொழுப்புள்ள ஜலங்களை (Mucilaginous drinks.) அடிக்கடி குடித்துக்கொண்டிருக்க வேண்டும். இராத்திரியில் வேதனை அதிகமாயிருந்தால் ஆண்குறியை அடிவயிற்றோடு சேர்த்து உயர்த்திக் கட்டிக்கொள்ளவும். மிளகுத்தூளில் 10 குன்றுமணியெடை சாப்பாட்டில் கலந்து அல்லது தனியாகச் சாப்பிடுவது உத்தமம்.

6. ஆரம்பத்தில் தண்ணீர்விட்டான் கிழங்கு, நிலப்பனைக் கிழங்கு, துளசிவிரை, அரிசிவிரை, யானைநெருஞ்சி, செருப்படை, அத்திவேர் இவைகளைத் தனித்தேனும் சேர்த்தேனும், கஷாயமிட்டுச் சாப்பிட மூத்திரச்சுருக்கு நிற்கும்.

7. ஆரம்பத்திலேயே சில்வர் நைற்றிரேட் (Silver Nitrate) அல்லது சிங்குளோரயிட் (Zinc Chloride) இவைகளொன்றில் ஒரு குன்றுமணியெடையெடுத்து நாலு அவுன்ஸ் தண்ணீரில் கலந்து வைத்துக்கொண்டு இடதுகையால் ஆண்குறியைப் பிடித்துக்கொண்டு, பிச்சாங்குழலால் அந்த ஔஷதத்தை நீர்த்தாரையில் செலுத்திச் சற்றுப் பொறுத்து வெளிவிடவேண்டும். நமது ஆபீசில் தயாரித்து விற்பனையாகும் பிரமேக பிஸ்காரி (Injection for Gonorrohea) பில்லைகளிலொன்றை ஆறாக்கு ஜலத்தில் கரைத்து பிஸ்காரி குழாயால் நீர்த்தாரையிலுட் செலுத்த நீர்த்தாரையிலுள்ள புண் ஆறி பிரமேக நோய் சுகமாகும்.

20 பில்லைகளுக்கு அணா 8.

பிஸ்காரி குழாய் (Syringe) புருஷருக்கு விலை அணா 8.

ஷை ஸ்திரீகளுக்கு விலை அணா 12.

வியாதியின் ஆரம்பத்திலும், நெடுநாள் சென்றபிறகுமேயன்றி நடுவில் ஆண்குறி வேதனையெடுக்கிற காலத்தில் பிச்சாங்குழல் பிரயோகம் செய்தால் நீரடைப்பு நோயுண்டாகும்.

8. ஆரம்பத்தில் சுகமாகாமல் ஆண்குறி வீங்கி, அதிக வேதனையைக் கொடுக்குமாயின், மூன்றுமணி நேரத்துக் கொருதடவை (Aconite) அக்கோனைபிற அல்லது கன்றுரிஸ் (Cantharis.) என்ற அவிழ்தம் சாப்பிட்டுவர வீக்கம் நீங்கிச் சுகமாகும்.

9. இதற்குள் சுகமாகாமல். வியாதி நீடித்து மூன்றும் பருவமாகிய தந்திமேகஸ்திதியில் வந்துவிடில் சந்தனத்தைலம் (Sandal oil.) (Copaiba) முதலியவற்றில் 5-முதல் 8-துளியை ஓயினில் கலந்து ஒருநாளைக்கு மூன்றுதடவை சாப்பிட்டுவரத் தந்திமேகம் முற்றிலும் நீங்கிப்போகும்.

இவ்வௌஷதங்களை ஆண்குறி வீங்கியிருக்கிற காலத்தில் சாப்பிட்டால் வியாதி சுகமானாலும், பிற்பாடு அரையாப்பு, வாதம் முதலிய ரோகத்தை உண்டாக்கும்.

10 மூன்றுவது பருவத்திலும் சுகமாகாமல் நாட்பட்ட வெட்டை (Gleet.) யாகிவிட்டால் (Zinc Sulphur.) ஒரு கிரேயினை அல்லது நமது பில்காரி பில்லைகளிலொன்றை ஒரு அவுன்ஸ் தண்ணீரில் கலந்து, பிச்சாங்குழலால் நீர்த்தாரையினுள் செலுத்தி, கைவிரலால் அடைத்து வைத்துக்கொண்டிருந்து பின்பு வெளியாக்கச் சுகமாகும். உளளுக்கு (Nux Vomica) அல்லது கெந்தகம் (Sulphur.) சாப்பிட்டு வரவேண்டும்.

11. நெடுநாள் பட்ட வெட்டை நோயினால், வெளிக்கு அதிகக் கஷ்டம் தோன்றாது. ஆதலால் அநேகர் அஜாக்ரதையாய் இருப்பதுண்டு. ஆனால் "வெட்டை முற்றினால் கட்டைதான்." என்பதுபோல, இந்த நோய்பின்னுக்கு நீரடைப்பு, பேடித்தன்மை முதலியவைகளைக் கொண்டுவரும். ஆதலால் மிகு ஜாக்ரதையுடன் தேர்ந்த வைத்தியர்களிடம் சொல்லி அவிழ்தம் சாப்பிடுதல் அவசியம்.

நமது நண்பர் பலரின் வேண்டுகோளின் பிரகாரம் வெள்ளை, வெட்டை, தந்திமேகம் முதலிய மூர்நீர் சம்பந்தமான நோய்களை ஆச்சரியமான விதமாய் சுகமாக்கக்கூடிய சில ஔஷதங்களைத் தயாரித்து நமது சாமிவேல் வைத்தியசாலையில் விற்பனையாக்கி வருகிறோம். அவற்றின் விபரமாவது:—

1. பிரமேகதடை:—(Gonorrhoea Preventive.) பரஸ்திரீயுடன் சேர்வதற்குமுன் இந்த வெண்ணெயை ஆண்குறியிலும், மலரிலும் பூசிக்கொள்ள வேண்டும். புணர்ச்சிக்குப் பின்பும் ஆண்குறியில் காண்டிஸ் புளுயிட் (Condy's Fluid.) விட்டுக் கழுவி

நீர்த்துவாரத்தைப் பிச்சாங்குழலால் சுத்திசெய்துவிட்டால் ரோகம் பெரும்பாலும் அதிகமாகாது. பிரமேகத்தைக் கண்டவுடன் பூர்த்திசெய்வதற்கு வேண்டிய பெர்மாங்கனேற் ஆவ் பொட்டாஷ் (Permagnate of Potash.) இவைகளை உபயோகிக்க வேண்டிய விபரம் முதலியவை அடங்கிய டப்பா 1-க்கு ரூ. 2.

பிரமேக நிவாரணி:—(Gonorrhœa Mixture.) வெள்ளை கண்ட சில தினங்களுக்குள் இதை உபயோகித்தால் இரண்டொருவேளை மருந்திலேயே சௌக்கியம் பிறக்கும். வைகண்டது. விலை ரூ. 3.

பிரமேக நிவாரண குளிகை:— Gonorex.) இதுவும் நீர் சம்பந்தமான நோய்களை ஆச்சரியமான விதமாய் சொஸ்தமாக்கக் கூடியது. நாட்பட்ட பிரமேகத்துக்கும் இது நல்ல ஔஷதம். விலை ரூ. 2—8—0.

பிரமேக பிஸ்காரி பில்லை:—(Injection for Gonorrohea.) தந்திமேகம் அல்லது நாட்சென்ற பிரமேகத்துக்கும் ஸ்திரீகளுக்குண்டாகும் வெண்துவாலை முதலிய ரோகங்கட்கும் இந்த பில்லைகளி லொன்றை ஆழாக்கு ஜலத்தில் கரைத்து பிஸ்காரி குழாயால் ஒருநாளைக்கு ஒருதடவை நீர்த்தாரையிலுள் செலுத்த நீர்த்தாரையிலுள்ள புண் ஆறி சுகமாகும். நீர் பிச்சும்போது மூத்திரப்பையி லிறங்காமல் பீஜத்திற்கடியிலிருக்கிற தண்டை அமுத்தி பிடித்துக் கொள்ளவேண்டியது. அதில் நீர் இறங்கினால் வெப்பங்கொண்டு வேதனையுண்டாகும். தந்திமேகம் சிகிட்சைக்குட்படுவது மிகக் கஷ்டமே. ஆதலால் மருந்தை வெகுநாள் உபயோகித்துவரவேண்டும்.

மது, மாமிசம், மச்சம், புளி, புகையிலை, போகம் முதலியவற்றை நீக்கி பிரமேக நிவாரண குளிகையும் உட்கொண்டு வருவதால் ரோகம் சுகுணத்திற்கு வரும்.

பரஸ்திரீகளோடு வியாபாரம் செய்து தேகமெலிவுற்றதற்கு கமது சிங்கலீரிய மாத்திரையை உட்கொண்டு சத்துள்ள போஜனம் அருந்தி சமுத்திரக் காற்றில் உலாவி வந்தால சௌக்யம் பிறக்கும். 20 பில்லைகளுக்கு விலை அணு 8.

பிஸ்காரி குழாய் (புருஷருக்கு) ,, 8.

ஷை (ஸ்திரீகளுக்கு) ,, 12.

எச்சரிப்பு:—பிரமேகவெள்ளை, வெட்டை நோய்களில் உபத்திரவப்படுகிறவர்கள் அவ்வித விஷநீரைத் தொட்ட கையை உடனே சுத்திசெய்யவேண்டும், ஏனெனில் அந்த கையால் கண்களைத் தொட்டால், அந்த விஷநீர் கண்களில் பரவி, கண் வீக்கமுண்டாகிக் கண்ணைக் கெடுத்துவிடும்.

## அரையாப்பு.

அரையில் சாதாரணமாய்க் கட்டும் நெறிக்கும் துன்மார்க்கத்தினால் உண்டாகும் அரையாப்புக்கும் வித்தியாசம் யாதெனில்:— அரையின் மடிப்புக்குக் கீழ் இரண்டு மூன்று மாமிசக் குமிழ்கள் வீங்கி நோவெடுப்பதால் அதற்கு நெறி என்று பெயர். அரையாப்பு அரையின் மடிப்புக்குமேல் ஒரேநெறியாய் மாத்திரம் பற்றியிருக்கும்.

அரையாப்புக்கு ஆரம்பத்தில் அசையாமலிருக்கச் செய்து பேதிக்குக் கொடுத்துப் பின்பு கட்டி கரைந்து உள்ளடங்கும்படியான முயற்சி செய்யவேண்டியது. அதற்கு வசப்படாவிட்டால் பின் குறிப்பிட்டிருக்கும் ஔஷதங்களி லொன்றை வைத்துக் கட்டி, கட்டியைப் பழுக்க வைத்துக் கீறி, சீழை வெளிப்படுத்தி, மேகாரணக் களிம்பு போட்டு ஆற்ற வேண்டியது.

பேதி மருந்துக்குப் பதிலாய் (Fountain Syringe.) என்னும் பீச்சாங்குழலால் வெந்நீரை ஆசனத்துட் செலுத்தி குடலைச் சுத்தஞ் செய்யவேண்டும். பிரதிதினமும் காலையும் மாலையும் இளவெந்நீரில் ஆசனஸ்நானம் செய்துவரவேண்டும். ஆரம்பத்தில் அதிகமாய் அசைவாடித் திரியாமல் படுக்கையிலேயே யிருந்து, மது, மாமிசம், மச்சம் முதலியவற்றை நீக்கி, லேசான ஆகாரம் சாப்பிட்டுவரக் கட்டி கரைந்து உள்ளடங்கிப்போகும்.

## கட்டிகரைக்கிற பற்றுகள்.

1. கட்டியின்மேல் நீல ஆயின்ற்மென்ற் (Blue Ointment.) தடவ வற்றும்.

2. சேங்கொட்டையில் சுண்ணாம்பு தடவி, உலரவிட்டு, விளக்கில் காட்டி, அதிலிருந்து வடியும் தயிலத்தை எடுத்துக் கட்டியின்மேல் பூசவும். உடைந்தால் பிகர்ந்துகொள்ளும்.

3. கோழிமுட்டையின் வெள்ளைக்கருவை நன்றாய்க் கடைந்து, அதனோடு சுண்ணாம்பு, அப்புப் புகையர், பனைவெல்லம் இவைகளைக் கலந்து உடனே போடவேண்டும். ஆரம்பத்திலேயே போட்டால் ஒரே நேரத்தில் வற்றிப்போகும்.

4. கால்பலம் நவச்சாரத்தை அரைப்படி ஜலத்தில்கரைத்து அதில் துணியை நனைத்துக் கட்டியின்மேல் போட்டு நனைத்துக் கொண்டேவரக் கட்டிகரையும்.

5. தேன், சுண்ணாம்பு, அரிசிமா இவை கலந்துபோடக் கட்டி கரையும்.

6. வெந்நீர் முதலிய ஒற்றடங்கொடுக்க வேதனை தணியும். அதன்பின் நம்மிடத்திலிருக்கும் அரையாப்புக் களிம்பை கட்டியின்மேல் தடவி துணியை மடித்தாவது, சப்பிலிலை அல்லது ஒட்டுப் பில்லையை வைத்தாவது இறுகக்கட்டி வைக்கக் கரைந்துவிடும். ஆரம்பத்தில் நமது சைவசமிருக்கும் சர்வரோக சஞ்சாரி மாத்திரையைக் கொடுத்து மூன்றுநாள் உப்பில்லாப பத்தியமாக கட்டி கரையும்.

7 இலுப்பைக்கட்டியோடு வெள்ளுள்ளி சேர்த்துப் பூசலாம்.

8. பச்சைக்கொடிவேலி வேர்ப்பட்டை (சித்திர மூலவேர்) யையும் சுண்ணாம்பையும் சமனிடை அரைத்துப் பூச வற்றும். எரிந்தால் விளக்கெண்ணெய் தடவவும்.

9. கோவையிலையையாவது, சிற்றாமணக்கு கொழுந்தையாவது, அவுரியிலையையாவது அரைத்துப் பசுவின் வெண்ணெயில் மத்தித்து வீக்கத்திற் கட்ட மாறும்.

10. வெங்காயம், வெள்ளுள்ளி, அமுக்காரக்கிழங்கு இவை சமனிடை அரைத்துப்போட்டு கட்டி கரையும்.

11. விராலியிலை, பத்திராக்ஷியிலை, புகையிலை இவை சமன் சேர்த்தரைத்துப் போட கட்டி கரையும்.

12. வெள்ளைப்பூண்டும் எருக்கன் பிஞ்சும் ஓர் நிறையாய் உமிக்காந்தலில் வெதுப்பி அரைத்துப்போட கட்டி கரையும்.

13. பெலடோனா பிளாஸ்டர் (Belladona plaster.) நோவுள்ள இடத்தில் போட கட்டி அமுங்கிவிடும். சோடி சாலிசைலற் (Sodi Salicylate.) உள்ளுக்குச் சாப்பிடவேண்டும்.

14. அரையாப்புக் கட்டியின்மேல் சுத்திசெய்து அட்டையைக் கடிக்கவிட்டு உடனே எடுத்துவிடாமல் பத்திரமாயப் பார்த்து வெகுநேரம் சென்று எடுத்தால துர்நீர் வெளியேறி கட்டி கரைந்துவிடும்.

15. பழம்புளி பலம் ஒன்று, சேங்கொட்டை 10, இவைகளைப் பஞ்சுபோல் தட்டி வீக்கத்தில் வைத்துக் கட்ட மாறும்.

16. வெள்ளைப்பூண்டும் வெள்ளருகும் அரைத்து வீக்கத்தில் கட்ட மாறும்.

17. முடக்கொத்தான் இலை, சுண்ணாம்பு, வெல்லம் ,இவைகளை அரைத்துப்பூச வீக்கம் வற்றும்.

18. ஆதலே வேவரா தைய்யத்தட்டி வைத்துக் கட்டத் தீரும்.

19. பெருங்காயத்தில் நல்ல பால்காயம் தெரிந்தெடுத்து அதை உமிழ்நீரில் உரசி வெற்றிலையில் தடவி கட்டியின்மேல் வைத்துக் கட்ட, பிளேக் கட்டி முதல் சகலவிதமான கட்டிகளும் அமுங்கிப்போகும். (இது என் தாயாரின் அனுபோகமுறை.) மேற்காட்டிய பற்றுகளில் ஒன்றைப் போட்டு நமது ஆபீசில் விற்பனையாகும் சர்வரோக சங்காரி யெண்ணெயை உள்ளுக்குக் கொடுத்து பத்தியங் காத்துவர சகலவித கட்டிகளும் கரைந்துபோகும்.

20. கட்டியைக் கரைப்பதற்கான இங்கிலீஷ் முறைகள். டிஞ்சர் ஆவ் ஐயோடின் (Tincture of Iodine,) காம்பவுண்ட் ஐயோடின் ஆயின்மென்ட், எம்பிளாஸ்ட்ரம் பொட்டாஸி ஐயோடைட், எம்பிளாஸ்ட்ரம் ரிஸினி (ஸ்டிகிங் பிளாஸ்டர்,) எம்பிளாஸ்ட்ரம் பிளம்பி, அன்குவண்டம் பிளம்பி அயோடிடி, புளு ஆயின்மென்ட், ஸிரேட்டம் ஐட்டார்ஜரி கம்பாஸிட்டம், எம்பிளாஸ்ட்ரம் ஹைட்ரார்ஜரி முதலியவைகளை கட்டியின்மேல் போடவும்.

---

## கட்டிபழுக்கிற மருந்துகள்.

1. சாம்பிராணியோடு கற்பூரம் சமம் சேர்த்து, அரைக்க மெழுகாகும். அதைத் துணியிற்றடவி கட்டியின்மேல் போட்டு வந்தால் கட்டி பழுத்து உடையும்.

2. ஆளிவிரைக்களி, அரிசிமாவின்களி, கோதுமைமாக்களி, புளித்த சோறு, அரைத்த எள்ளு முதலியவற்றை அல்லது ஆமணக்கிலை, புளிச்சகீரை, சேப்பங்கிழங்கு, ஊமத்தன் இலை, முள்ளுக்கீரை இவைகளிலொன்றை வதக்கிக் கட்டிக்கொண்டு வந்தால் கட்டி பழுத்து உடையும்.

3. வெந்தயமும் ஆமணக்கு முத்தும் அரைத்துப் போடக் கட்டி பழுத்து உடையும்.

4. துத்தியிலையும், கரியபோளமும் அரைத்துக் கட்டினால் கட்டி பழுத்து உடையும்.

5. திராக்ஷைப்பழத்தைச் சாரயத்திலரைத்துப் பூசக்கட்டி கரையும் அல்லது உடையும்.

6. காட்டுக்கிழங்கு, மஞ்சள், முள்ளங்கிழங்கு, பெருங்காயம் இவைகளிலொன்றை எருக்கன்பாலா லரைத்துப்போட வற்றும், அல்லது பழுக்கும்.

7. சாமந்திப்பூ, செம்பையிலை இவை அரைத்துப்போடக் கட்டி கரையும் அல்லது பழுக்கும்.

8. தேள்கொடுக்குஇலை, நொச்சியிலை, கரியபோளம் இவை அரைத்துப்போட பழுக்கும்.

9. கஞ்சாயிலை, மஞ்சள், விழுதியிலை, சவுக்காரம், இவை கலந்துபோட கட்டி பழுக்கும்.

10. கருஞ்சீரகத்தை வெந்நீரிலரைத்துக் கட்டிவர, கட்டி பழுத்து உடையும்; பிள்ளைகளின் சிறுநீரிலரைத்துப்போட வீக்கம கட்டி கரையும்.

11. கறிஉப்பும் சவுக்காரமும் சமன் சேர்த்து காடிவிட்டரைத்துப் பற்றிட கட்டி உடையும். வீக்கம் வாடும்.

12. மஞ்சளோடு முருங்கையிலை சேர்த்தரைத்து விளக்கெண்ணெயிட்டு வதக்கி கட்டியின்மேற் போட கட்டி சீக்கிரம் பழுத்து உடையும்.

13. விளக்கெண்ணெயில் முலைப்பால்விட்டுக் குழப்பி அதில் பருத்திப்பஞ்சு தோய்த்து கட்டியின்மேல் போட்டுக்கொண்டு வந்தால் சீக்கிரம் பழுக்கும்.

14. சவுக்காரம், குண்டுமணிபருப்பு, தாளித்து வடித்த ஈரசுண்ணாம்பு, மைசாக்ஷி, குங்கிலம் வகை 1-க்கு கால் சேர்; சேராங்கொட்டை 3 கலந்து எருக்கன்பால்விட்டு, 2 நாள் அரைத்து, உருண்டைகள் செய்து வைத்துக்கொண்டு, தேவையானபோது தண்ணீரில் தேய்த்து கட்டிமேல் தடவி அனல்காட்டவும். பிய்ந்துக் கொள்ளும்.

---

## மேகரணக் களிம்பு.

1. இரண்டுவிராகனிடை ரசகற்பூரத்தை ஏழுவிராகனிடை ஆட்டுக்கொழுப்பு அல்லது பன்றி நெய்யோடு சேர்த்து அரைத்துப்போடச் சகல மேகரணமும் மாறும்.

2. தேங்காயெண்ணெயில் தேன்மெழுகு சமம் சேர்த்து உருக்கி அதில் ஆறுபலம் எடுத்துக்கொண்டு அதோடு ஒரு பலம் ரசகற்பூரமும், அரைப்பலம் சுண்ணாம்பும் சேர்த்து அரைத்துப் போடச் சகல ரணமும் ஆறும்.

3. வெள்ளைக்குங்கிலியம், தான்றிக்காய், மாச்சக்காய், கடுக்காய், காசுக்கட்டி, ரசகற்பூரம, லிங்கம், மிர்தார்சிங்கி இவைகளைச் சமனிடை எடுத்து, பசுவின் வெண்ணெயிட்டு, மைப்போலரைத்து

உருட்டி, ஜலத்தில் ஒருநாள் ஊறவைத்து எடுத்து, அரையாப்பு, கண்டமாலை, விப்புருதி, பிளவை முதலிய எந்த ரணங்களின் மேலும் போட்டு இலவம்பஞ்சைப்போட மேகரணங்களெல்லாம் சருகுபோல் வாடிப்போகும். இதை நமது வைத்தியசாலையில் அணு 12-க்குப் பெற்றுக்கொள்ளலாம்.

4. மிர்தார்சிங்கி, கந்தகம், துத்தம், துருசு, ரசம், கற்பூரம், ரசகற்பூரம், ஏலம், கஸ்தூரி மஞ்சள், கார்போக அரிசி, நீரிடிமுத்துப் பருப்பு, காட்டுச்சீரகம் இவற்றை வகைக்கு கால்ரூபாயெடை எடுத்துத் தூள்செய்து ஒருபடி தேங்காய்ப்பாலில் விட்டுச் சிறு நெருப்பு எரித்துப் பக்கத்தில் வடித்து வைத்துக்கொண்டு சர்வ மேக ரணங்களுக்கும் உபயோகிக்கலாம்.

5. பரங்கிச் சாம்பிராணி, மெழுகு, நல்லெண்ணெய் சமனிடை சேர்த்து சிறு தீயிட்டு உருக்கி வடிகட்டிக்கொண்டு மேக ரணங்களுக்கு உபயோகிக்கலாம்.

---

## மேக சஞ்சீவி.

1. சர்வரோக சங்காரி (Cure-all-oil) ஆயுர்வேதிய சாதுக்களால் பரம்பரையாக உபயோகிக்கப்பெற்ற அதி யற்புத மகிமை பொருந்திய இந்த சர்வரோக சங்கார யெண்ணெயானது மானிட தேகத்தில் நோய்களுண்டாவதற்குக் காரணமான சகல அசுத்தங்களையும் நீக்கி இரத்தத்தைச் சுத்தி செய்வதால் சர்வ ரோகங்களையும் நிவிர்த்தியாக்கும்.

இதைக் கண்டமாலை, யோனிப்புற்று, அரையாப்பு, பவுத்திரம், பரங்கிப்புண், கிரந்தி, மேகவூரல், கண்ரோகை, கன்னப்புற்று, பிளவை, தடிப்பு, சூலை, நீர்ப்பிடிவு, வெள்ளை, வெட்டை, குலைவாய்வு, மற்றும் சகல வாய்வுகள், முடக்கு வாதம், கடுக்குவாதம், மற்ற வாதங்களுக்கும் தொண்டைப்புண், காப்பன், கெர்ப்பப்பூச்சி, கெர்ப்பசூலை, மலடு முதலியவற்றிற்கும் உபயோகிக்கலாம்.

அளவு:—அவரவர் தேகதிடத்திற்குத் தக்கது 5-முதல் 12-துளிவரையிலும் அதிகாலையில் உள்ளங்கையில் விட்டு நக்கிவிடவும். மருந்து சாப்பிட அரோசிகந் தோன்றினால் மருந்து சாப்பிட்டவுடன் சிறிது அரிசியை வாயில் போட்டுக்கொள்ளலாம். வியாதியின் கடுமைக்குத் தக்கது 1-முதல் 7-நாள் வரை சாப்பிடலாம். மருந்து சாப்பிட்டு 1-மணி நேரத்திற்குப்பின் வெந்நீர் சாப்பிட நன்றாய்ப் பேதியாகும். பேதி அதிகமானால் அரிசிக்கஞ்சியில்

சிறிது உப்புச் சேர்த்துச் சாப்பிட பேதி நின்றுவிடும். மத்தியானத்திலும் அதேமாதிரி அரிசிக்கஞ்சியும் பருப்புத் துவையலும் சாப்பிடவேண்டியது. இரவில் வெள்ளாட்டிறைச்சி, அல்லது மேற்படி சூப் சேர்த்துக்கொள்ளலாம். இவ்வித மேகவியாதியின் அகோரத்திற்குத் தக்கது 7-நாள்வரை சாப்பிட்டு வரலாம். பல ஹீனமாகத் தோன்றினால் மருந்தை இரண்டு நாளைக்கு நிறுத்தி அதன்பின் சாப்பிடலாம்.

பத்தியம்:—மருந்து சாப்பிடும் காலத்தில் ஸ்நானம் செய்யலாகாது. நல்லெண்ணெய், கடுகு, புளி, புகையிலை, புலால், போகம், காரப்பதார்த்தம் நீக்கவும். பசுவின்பால், வெண்ணெய், அரிசிக்கஞ்சி, துவரம்பருப்பு, சிறுபயறு, தாராளமாய் உபயோகிக்கலாம்.

மருந்து சாப்பிட்டு முடிந்த மறுநாள் பசுவின் நெய்யை அல்லது நமது ஸ்நானத்தைலத்தைத் தேய்த்து வெந்நீர்ஸ்நானம் செய்ய வேண்டியது.—விலை ரூ. 1.

2. (Syrup Ferri Iodide.) சிரப் பெரி ஐயோடிட் இரண்டு திராம், பொட்டாஷ் ஐயோடிட் (Potash Iodide.) முப்பத்திரண்டு கிரெய்ன், டிக்சாக்ஷன் ஆப் சார்சாபரில்லா கட்டு ஆவுன்ஸ் இவைகளைச் சேர்த்து வேளைக்கு ஒரு அவுன்ஸ் வீதம் தினம் இரு முறை சாப்பிட்டுவர சகல மேகரணங்களும் குணமாகும்.

3. பூரக்கட்டியை வேலிப்பருத்திச் சாற்றில் ஏழு தடவை சுருட்டுக்கொடுத்து மைபோலரைத்துக்கொண்டு, ஆமணக்கெண்ணெயில் உரசி மூன்று நாள் காலை கொடுத்துவர அரையாப்பு, வெள்ளை, வெட்டை முதலிய சகலவித மேகரோகங்களும் தீரும். இம்மருந்தை வெள்ளை கண்ட ஆரம்பத்தில் கொடுத்தால் வெகு பலன்படும்.

4. நாம் பிரசுரித்திருக்கும் அரிய ஔஷத முறைகள் 1-ம் பாகம் இரண்டாம் பக்கத்தில் எழுதப்பட்டிருக்கும் முறைகளையும் கையாடலாம்.

---

## பரங்கிரோகம். (SYPHILIS.)

மேகரணமானது கொறுக்கு, மேகப்புண், பரங்கிப்புண் என பலவகைப்படும். இக்கொடிய ரோகம் இருநூறு வருஷங்களுக்கு முன் இந்தியாவில் இல்லை. ஆதலால் சித்தர்கள் நூல்களில் இதைப் பற்றிய பேச்சுகளே கிடையாது. பரங்கிக்காரர்களால் இந்

நோய் இந்தியாவுக்குக் கொண்டு வரப்பட்டதால் இதற்குப் பரங்கிப்புண் என்று பெயர். பிரமேக வெள்ளைக்கும் பரங்கி ரோகத்திற்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. பரங்கி ரோகமுள்ளவர்களோடு சகவாசம் பண்ணி, அவர்கள் ரணங்களிலுள்ள விஷநீர், சரீரத்திலுள்ள காயங்கள் மூலமாய் இரத்தத்தோடு கலப்பதனாலும், பெற்றோரிடத்திலிருந்தும், பரங்கிரோகம் பரவுகிறது.

முதல் பருவப் பரங்கி ரோகம் (Primary Syphilis.) இந்த ரணம் ரோக ஸ்திரீயைச் சேரும்போது அவளுடைய மர்மஸ்தானத்திலிருக்கிற மேகரண விஷநீர் கோசத்தின்மேல் எவ்விடத்தில் படுகின்றதோ அந்த ஸ்தானத்தில் பிறக்கும். சையோகித்த 3-நாள் முதல் 20-நாளைக்குள் மலரின் மேலாவது, மலருக்கடியில் இருக்கும் ஜவ்வு மடிப்பிலாவது மலரை மூடிக்கொண்டிருக்கும் தோலுக்குள்ளாவது காண்பது வழக்கம். அடிக்கடி மேகரணங் கண்டு மேகநீரில் ஊறி இருக்கிற சரீரத்தில் மறுபடியும் கண்டால் அவ்வளவு கோஷ்டமாய் இருக்காது. ஸ்திரீகளுக்கு மேகரணம் அதிக உபத்திரவத்தை உண்டாக்காது.

மர்ம ஸ்தானத்தினுள் வெகுதூரத்தில் இருக்குமாயின் வெளிக்குத் தோன்றாது. ஸ்திரீயும் சுகதேகிபோல்தான் தோற்றுவாள். இவளின் கண்ணிக்குள் அகப்பட்டு மடிகிறவர்களுக்கு ஐயோ! மேக விஷநீரைப்போலச் சரீரத்தைக் கெடுக்கக்கூடியதும், தாதுக்களையும் உள்ளுறுப்புக்களையும் உடைக்கக்கூடியதுமான கொடிய ரோகம் உலகத்தில் வேறில்லை. இந்த நீர் சரீரத்தில் பரவவே மேகச்சொரி, மேகச்சிரங்கு, மேகவூரல், மேகப்படை, மேகச்சூலை, கிரந்தி, அஸ்திரோகம், நேத்திரரோகம், சிரோரோகம், கண்டமாலை, விப்புருதி, ஆண்மலடு, பெண்மலடு, கருவழிவு, நீரடைப்பு, நீரிழிவு, கல்லடைப்பு, தசையடைப்பு, குஷ்டம் முதலிய மானிட சரீரத்திற்கு வரக்கூடிய சகலவிதமான ரோகங்களும் உண்டாகும். பரங்கி ரோகமுடைய புருஷனுடைய வியாதி பெண்சாதிக்குத் தொடர்ந்திருக்கும்போது அவளுக்குக் கருத் தரித்தால் அக்கருவிற்கும் விஷநீர் பரவி, நாலைந்துமாதங்களில் பிண்டம் வயிற்றினில் மரித்து வெளிப்படும். இவ்வியாதியுடைய ஸ்திரீகளுக்குக் கருத் தரிக்காது. தரித்தாலும் கருவழிந்துபோம். குழந்தை பிறந்தாலும் சுகதேகமுடையதாயிருக்காது. பிறந்த ஒருமாதத்தின் பிறகாவது மேகநீர் தோன்றி ஆசனம் மர்மஸ்தானம் ஆகிய இடங்களில் தாம்பிர நிறமான ரணங்களும் வாயில் வாய்ரோகமுங் காணும். அவ்விதக் குழந்தைக்குப் பால்கொடுக்கிற தாதிக்குங்கூட அந்த வியாதி தொடர்ந்து முலைக்காம்பில் ரணங்காணும். பின்பு தேகமெங்கும் மேகச்சிரங்கும், படைகளும் எழும்பும்.

வேசிகள் வீட்டை நாடித்தேடி அந்தரங்கத்தில் செல்லும் ஆடவர்க்கு ஆண்டவரால் அளிக்கப்பட்ட அரியபாத முத்திரை பரங்கி ரோகங்களாம். வேசிகளின் வீட்டுக்குப்போய் விஷநீர் வாங்கிக்கொள்ளாத மனுஷன், புலி, காடி, சிங்கம்முதலிய துஷ்ட மிருகங்களும், சர்ப்பங்களின் புதர்களும் நிறைந்த காட்டினுள் சென்று உயிரோடு மீளவும் வந்தவனுக்குச் சமானமாவான். ஒரு தரம் இவ்விஷநீர் சரீரத்திலுட்சென்றால் அது அவன் உயிருள்ள பரியந்தம் அவனைவிட்டு நீங்காமல் பற்பல காலங்களில் பற்பலவித மாய்த் தோன்றிக்கொண்டே வரும்.

மேகரணங்கள் நான்கு வகைப்படும். ஒருவகை ரணத்துக் கடியில் கட்டியாய் கல்போலிருக்கும். மற்றொருவகை ரணம் மிருதுவாய் இருக்கும். இன்னொருவகை ரணம் வெகு சீக்கிரத் தில் பரவிவிடும். நான்காவது வகை ரணம் அழுகித் துர்மாமிசம் உண்டாகும். இந்த ரோகமுள்ளவன் முற்றிலும் சுகமாகுமட்டும் விவாகஞ் செய்யவே கூடாது. செய்தால் அவனுங்கெட்டு அவ னுக்குக் கழுத்து கொடுத்தவளும் நாசமாகி அவனுக்குப்பிறக்கும் பிள்ளையும் அழிந்துபோகும்.

சிகிச்சை. 1. ஒருநாள்விட்டொருநாள் வேர்வை ஸ்நானம் (Vapour Bath.) செய்யவேண்டும். இரவில ஒன்பது மணிக்கு முன்னமே ஆசன ஸ்நானம் செய்துவிட்டுச் சீக்கிரம் படுக்கைக்குப் போகவேண்டும்.

2. மது, மாமிசம், மச்சம், காப்பி, தேயிலை, புகையிலை முத லியவற்றை நீக்கிக் காய்கறி பதார்த்தத்துடன் எளிதில் ஜீரணிக்கத் தக்க கஞ்சி சாப்பிடவேண்டும்.

3. பிரதிதினமும் சாப்பிடுவதற்கு இருபது நிமிஷத்திற்கு முன் மூன்றுவேளையும் ஒருகோப்பை வெந்நீர் சாப்பிடவேண்டும்.

4. காப்பிக்குப் பதிலாக உலர்ந்த நந்தியாவட்டையையும் ரோஜாப் பூவையும் கஷாயஞ்செய்து பாலும் சர்க்கரையும் கலந்துசாப்பிட்டு வர மேகச்சூடு தணியும்.

5. பரங்கிரோகம் கண்ட மாத்திரத்தில் (Silver Nitrate.) அல்லது (Nitric Acid.) ஐல் புண் உண்டாகிய இடத்தில்சுடுவத னால் புண் காய்ந்து விழுந்துவிடும். விஷநீரும் அதோடு செத்துப் போம். ஆனால் அது பரவ ஆரம்பித்துவிட்டால் உள்ளுக்கு மரு ந்து சாப்பிட்டுத்தான் எடுக்கவேண்டும்.







நமது ஆபிசில் விற்பனையாகும்
சாமிவேலின் சிங்கமார்க்கா

## பரங்கிரோக மாத்திரை.

## (Anti-Syphilitic Pills.)

பரங்கிரோகத்தினால் இரத்தங்கெட்டு மேகரணங்கள் உண்டாகும். சகலவித இரணங்களுக்கும் காரணமானது சுத்தமில்லாமலும் போதுமான போஷணையில்லாமலும் இருப்பதே. இந்தப் பரங்கிரோக மாத்திரைகளைச் சாப்பிடுவதினால் இரத்தம் சுத்தமாகி ஜீரணசக்தி அதிகரித்து, குடல் ஒழுங்காய்த் தன் தொழிலை நடத்தி மலவிருத்தியாகும். இவைகள் இரத்தத்திலுள்ள விஷங்களையும், அழுக்குகளையும் நீக்கி நீர்சம்பந்தமான சகல மேகரணங்களையும் ஆற்றும்.

சாப்பிடும் முறை:—போஜனத்திற்குப் பின் ஒரு மாத்திரை விதம் தினம் மூன்று வேளை சாப்பிடவேண்டும்.—விலை ரூ. 2—8—0.

---







சாமிவேலின் சிங்கமார்க்கா

## பரங்கிப்புண் களிம்பு.

## (The Syphilitic Sores Ointment.)

இக்களிம்பு நீர்சம்பந்தத்தாலுண்டாகும் சகலவித மேகரணங்கள், நீராத பரங்கிப்புண், அழுகி நாற்றமெடுக்கும் துர்மாமிசம், நெருப்புப்பட்ட காயம், அரையாப்பு, கண்டமாலை, ராஜபிளவை முதலிய சகலவித கொடிய ரணங்களையும் வெகு சீக்கிரத்தில் சுகமாக்கும்.—விலை ரூ. 1.

பரங்கி ரோகத்திற்கு உள்ளுக்குக் கொடுக்கும் மருந்துகளில் விசேஷித்தது ரசமே. பாமரப் பண்டிதர்கள் இதைச் சரியாய்ப் பக்குவஞ் செய்யாததால் ஆயுள் பரியந்தம் அழுந்தத்தக்க சில வியாதிகளுக்கிடமாக்கி விடுகிறார்கள். ஆனால் (Homeopathic.) ஔஷதங்களில (Mercurious Sol.) என்ற ஔஷதத்தைச் சாப்பிடச் சுகமுண்டு. ஆனால் நாட்பட்டு இரண்டாவது பருவத்திற்கு (Secondary Syphilis.)வந்துவிட்டதானால்(Nitric Acid, Iodium Arsenicum, Sarsaparilla,) என்னுரி முதலிய ஔஷதப் பிரயோகஞ் செய்யவேண்டும். இந்த இரண்டாம் பருவம் முதல் மூன்று வருஷத்திற்கு நிற்கும். அதற்குப் பிற்பாடு மூன்றாவது பருவமடையும் (Tertiary Syphilis.) இக்காலத்தில் இந்தப் பயங்கரமான

ரோகம் கண், காது, மூக்கு, நாக்கு, கால், நுரையீரல், எலும்பு முதலிய பல அவயவங்களையுந் தாக்கும். அப்போது சரீரம் அழுகி இயாத உபத்திரவமும் வேதனையு முண்டாகும். எலும்பு முதலாய் அழுகித் துண்டு துண்டாய்விழும். கல்கேறியா (Calcaria.) கந்தகம முதலிய ஔஷதங்கள் இதற்கு உபயோகமாம். இவ்வியாதிகளில் கஷ்டப்படுவோர் தேர்ந்த ஆயுள்வேத பால்கா பண்டிதர்களிடம் தமது தேகபலத்தையும் அதன் சரித்திரத்தையும் பூராவாகச் சொல்லி அவர்கள் கொடுக்கும் ஔஷதத்தைச் சாப்பிடவேண்டும்.

## மேக வாதரோகம்.

துர் வியாபாரத்தினால் விஷநீர் சம்பந்தமாகி முழங்கால் முதலிய மூட்டுகள் வீங்கினால் அதற்கு மேக வாதரோகம் என்று பெயர். இதில் மூட்டுகள் வீங்கி சுரமுங் காணும், கை கால் பிடிப்புண்டாகி அசைக்கக்கூடாமலிருக்கும். இதற்கு மேகப்பிடிப்பு, முடக்குவாதம், மேகவாயு, சூலைக்கட்டு எனப் பல நாமமுண்டு. இந்த வியாதியில் வேதனையானது இடம்விட்டு இடம் மாறி மூட்டிலிருந்து மற்றொரு மூட்டுக்கு நிமிஷத்தில் போய்ப் பின்பு பூர்வ ஸ்தானத்திற்கு வருவதுண்டு, மலமும் பந்தப்படும்



சாமிவேலின் சிங்கமார்க்கா

வாதசங்காரன்.

(Rheumatism Mixture.)



சிகிச்சை. இதற்கு நம்முடைய கைவசமிருக்கும் வாதசங்காரன் என்னும் ஔஷதம் கைகண்ட முறை. இதை எமக்குக் காண்பித்த சித்தர் ஔஷதங்களின் பெயரை வெளியாக்கக் கூடாதென்று கேட்டுக்கொண்டமையால் அதை (Patent Medicine.) ஆக ரூபாய் 3 அனுப்பினவர்களுக்கு மட்டிலும் ஔஷதமாக அனுப்புவோம். தேவையானவர்கள் வாங்கிப் பரீக்ஷித்துப் பார்க்கலாம். பலரால் புகழப்பட்ட ஔஷதமிது.

மேகவாத ரோகத்தினால் மூட்டுகள் வீங்கி, கைகால் பிடிப்புண்டாகி அசைக்கக் கூடாமலிருக்கும், மேகப்பிடிப்பு, முடக்குவாதம், மேகவாய்வு, சூலைக்கட்டு, மலபந்தம், வேதனையானது இடம் விட்டு இடம் மாறுதல், முதலிய ரோகங்களைக் கண்டித்து இரத்த புஷ்டியையும் தாதுவிர்த்தியையும் உண்டாக்கும் சஞ்சீவி.

சாப்பிடும் விதம்:—ஒரு மேசைக்கரண்டி யளவு மருந்தை இருமடங்கு தண்ணீரில் விட்டு தினம் இரண்டுமுறை சாப்பிடவேண்டும்.

இதைச் சாப்பிடுங் காலத்தில் வாதநாசத் தைலத்தை வலியுள்ள இடங்களில் தேய்த்து வருவதால் உடனே சுகங்காணும்.

எச்சரிப்பு:—மருந்து சாப்பிடுமுன் பேதியை நன்றாய்க் குலுக்கிச் சாப்பிடவேண்டும்.

பத்தியம்: மருந்து சாப்பிடுகையில் வெந்நீர் ஸ்நானம் செய்யவேண்டியது. புளி, புகையிலை, மது, மாமிசம் நீக்கி மரக்கறிவகைகள் பசுவின்பால், நெய் உபயோகித்து வருவதால் சீக்கிரம் பலனடையலாம்.

---




சாமிவேலின் சிங்கமார்க்கா

## வாதநாசத்தைலம்.

## (Rheumos Ready-Relief.)

வாதரோகிகளின் உபயோகத்திற்கென்று மிக்க விலையுயர்ந்த வஸ்துக்களால் செய்யப்பட்ட இத்தைலத்தைக் காலையிலும், மாலையிலும் உபயோகித்துவர உடனே சுகங்காணும்.

உபயோக விபரம்:—எந்த யிடத்தில் உளைச்சலும் வேதனையும் இருக்கின்றதோ அந்தயிடத்தில் நன்றாய்ச் சோப்புத்தேய்த்து வெந்நீரினால் கழுவி கம்பளித்துணியை வெந்நீரில் நனைத்துப் பிழிந்து விட்டு ஒற்றடங் கொடுத்தபின் நன்றாய்த் துடைத்துவிடவேண்டும். அல்லது மணலை வறுத்து ஒற்றடங் கொடுக்கவேண்டும். அதன்பின் ஓர் சுத்தமான மெல்லிய துணியை தைலத்தில் நனைத்து வேதனையுள்ள பாகத்தில் மெதுவாய் ஐந்து நிமிஷம் தேய்க்கவும். பின்பு அந்த துணியை வேதனையுள்ள இடத்தில் விரித்து அதன்மேல் கம்பளித்துணியால் சுற்றிக் கட்டி வைக்கவும். மறுநாட் காலையில் தைலத்தை மாத்திரம் மெதுவாய்த் தேய்த்து கட்டி வைக்க வேண்டியது. கழுவுவது அவசியமில்லை.—விலை ரூ. 2—12—0.

---




சாமிவேலின் சிங்கமார்க்கா

## மகா சஞ்சீவித் தைலம்.

## (Magnetic Balm.)

1. துடிவாதம், நடுக்குவாதம், முடக்குவாதம், தலைநோய், சிரோபாரம், மயக்கம், மலச்சிக்கல், வாய்வு, ருதுகாலவலி, ஜலதோஷம், கைகால்பிடிப்பு, உளைசல், சுளுக்கு, வலி, கைகால் குளிர்ச்சி முதலியவைகளுக்கு வறுத்த உப்பு, மண் அல்லது தவிடு

சுடுசோம்பல் முதலியவற்றால் ஒற்றடங்கொடுத்து இந்த சஞ்சீவித்



தைலத்தை நோயுள்ள இடத்தில் நன்றாய்த் தேய்த்து கம்பளித்துணியை சுற்றி வைக்க கால்மணி நேரத்திற்குள் வியர்வை கண்டு உடனே சுகமாகும். பல்வலிக்கு சிறிது பஞ்சில் தோய்த்து பல்லிலுள்ள துவாரத்திலுள் செலுத்திவைக்கவேண்டியது. துவாரமில்லாவிடில் சிறிது தைலத்தை வலியுள்ள பக்கத்திலும் கன்னத்திலும் தடவி வேது ஒற்றடங் கொடுத்துக் காற்றுப்படாதபடி கம்பளித் துணியால் கட்டி வைக்க வேண்டும். காதுவலிக்கும் அதேபிரகாரம் காதின்கீழ் தைலத்தைத் தேய்க்கவேண்டும்.

2. ஒற்றைத் தலைவலி, மண்டையிடி, தும்மல், பீனிசவலி, முதலியவைகளுக்குச் சிறிது கன்னப்பொரியிலும் நெற்றியிலும் தடவி மூகந்துபார்க்க அந்நோய்கள் சூரியனைக்கண்ட பனிபோல் ஓடும்.

3. தொண்டைப் புகைச்சல், சளி, இருமல், காசரோகம், மூக்கடைப்பு, நெஞ்சில் சளிகட்டிக்கொண்டு மூர்ச்சைவிட முடியாமல் திட்டுமுட்டடித்தல், முதலியவைகளுக்கு ஒரு வெற்றிலையில் சிறிது தைலத்தை (சுண்ணாம்புக்குப் பதிலாக) வைத்து வாயிலடக்கிக்கொண்டு உமிழ்நீரைச சாப்பிட்டுக்கொண்டிருக்க கபக்கட்டு நீங்கி நன்றாய் சுவாசிக்கக்கூடும். மேலும் நெஞ்சிலும் முதுகிலும் நமது தைலத்தைத் தடவி காற்றுப்படாமல் கம்பளித்துணி போட்டு ஓர் சீசாவில் வெந்நீர் நிறைத்து முன்பக்கத்திலும் பின்பக்கத்திலும் போட்டு வைப்பதுடன், ஒரு சிறு துணியில் தைலத்தைத் தடவி மூக்கினால் முகர மூக்கடைப்பு விடும்.—விலை நெ 1.

---



சாமிவேலின் சிங்கமார்க்கா



## வாதசங்காரக் குளிகை.

## (Gout and Rheumatic Pills.)

ஒவ்வொரு மாத்திரையைக் காலையிலும் மாலையிலும் சாப்பிட்டு மகாசஞ்சீவித் தைலத்தை நோயுள்ள பக்கத்தில் தேய்த்து அதன்

மேல் வேது ஒற்றடம் கொடுத்து கம்பளித்துணியால் சுற்றி வைக்க அடியில் கண்ட வியாதிக ளதமாகுமென்பது திண்ணம்.

1. தேகமெங்கும் துடிக்கும் துடிவாதம், நடுக்குவாதம், கைகால் பிடிப்பு, தேகமெங்கும் ஓடி ஓடி குத்தும் ஓடுவாதம், கைகால்களை நீட்டவும் முடக்கவும் முடியாது படுக்கையில் கிடத்தும் முடக்குவாதம் முதலியவைகளையும்,

2. குன்ம வியாதியால் சாதம் ஜீரணமாகாதிருந்தால் உண்டாகும் குன்மக்கட்டி, குன்மசூலை, குன்மவாய்வு, குன்மமேயப்பம், குன்ம அஜீரணம் இவைகளையும் இன்னும் பல ரோகங்களையும் இம்மாத்திரையால் சுகப்படுத்தலாம்.—விலை ரூ 1.

சர்மிவேல் வைத்தியசாலை,

தெங்காஞ்சி, இரங்கோன்.




SAMUEL MEDICAL HALL,

Thingangyun, Rangoon.

கடவுள் துணை.

# மானிட
# மர்மசாஸ்திரம்.

## பன்னிரண்டாம் புஸ்தகம்.

சமயோசித சஞ்சீவி.

இஃது

யாவர்க்கும்

சுக செல்வ நன்மைகளையும் சுகிர்த பாக்கிய
போக்கிஷத்தையும் நீடூழி பெருதவிக்க
விரும்பிய,

கல்கத்தா சர்வகலா சங்கத்தின் தமிழ்ப்பரிக்ஷகரும், ரங்கூன் செண்
ஜான்ஸ் கல்லூரிப் பிரதமாசிரியரா யிருந்தவரும், கணித சாஸ்திரம், பூமிசாஸ்
திரங்களின் கிரந்தகர்த்தாவும், மானிட மர்ம சாஸ்திரப் பண்டிதரும்,
சாமிவேல் வைத்தியசாலைத் தலைவருமாகிய

எஸ். சாமிவேல், பி. ஏ. அவர்கள்

இயற்றியது.

புதிய பதிப்பு.

சாமிவேல் பிரஸ்,

தென்காஞ்சி, இரங்கோன்.

1920.

All Rights Reserved.





சாமிவேலின் சிங்கமார்க்கு

## சிந்தாமணிபரிமள கூந்தல்தைலம்

## (Chintamony Hair Oil)

இந்த அருமையான தைலம் கூந்தலை வளரச் செய்வதில் மிக ஆச்சரியமான குணமுடையது. இதைக் காலை மாலை தடவிவர மயிர்க்கால்களுக்குக் குளிர்ச்சியையும் போஷிப்பையும் தந்து, கூந்தலை அதி விரைவில் கருமையாயும், செழிப்பாயும், அடர்த்தியாயும் வளரச்செய்து, கண், மூளை, இவைகளுக்குக் குளிர்ச்சியையும் தந்து, பித்த மயக்கம், கண்ணில் நீர்வடிதல், இரேக காந்தல் முதலிய ரோகங்களையும் நிவர்த்தி செய்யும். சுகந்த வாசனையுள்ள இந்தத் தைலத்தை உபயோகித்துவரின் பருவம் வருமுன்; பித்தத்தால் நரைத்த மயிர்களும் நாளடைவில் கறுக்கும்.—விலை அணா 12.

---



சாமிவேலின் சிங்கமார்க்கு

## முடிவளர்கிருதம்.

## (Hair Cosmetic.)

பூச்சி, புழு வெட்டியதினாலேனும், வேறெந்தக் காரணத்தினாலேனும் உரோமம் உதிர்ந்துபோனால் அந்த இடத்தில் காலையிலும் மாலையிலும் இதைத் தேய்த்துவரின் உரோமம் அடர்ந்து வளரும்.—விலை ரூ. 1—8—0

---



சாமிவேலின் சிங்கமார்க்கு

## உரோமசங்காரி.

## (Hair Destroyer.)

இந்த மருந்தில் கொஞ்சம் எடுத்துத் தண்ணீரில் கலந்து உரோமமுள்ள இடத்தில் மொத்தமாய்த் தடவி ஒரு கடிதாசிக் கார்டினாலாவது, மொட்டைக் கத்தியினாலாவது பனையோலைத் துண்டினாலாவது வழித்தால் ரோமங்கள் முழுவதும் இலகுவாய் நீங்கிவிடும்.—விலை ரூ 1.

**சாமிவேல் வைத்தியசாலை,**

**தென்காஞ்சி, இரங்கோன்.**

SAMUEL MEDICAL HALL,

Thingangyun, Rangoon.

# மானிட மர்ம சாஸ்திரம்.

## பன்னிரண்டாம் புஸ்தகம்.

### சமயோசித சஞ்சீவி முறைகள்.

வைத்தியம் செய்வது வைத்தியர்களின் தொழிலா யிருந்தபோதிலும் ஒவ்வொருவர்க்குமே தத்தம் சுகத்தைப் பேணிக்கொள்ளக்கூடிய வைத்யமுறைகள் கொஞ்சம் தெரிந்திருக்கவேண்டியது மிகவும் அவசியம். ஏனெனில் வைத்தியர் வருமுன்னமே மோசம் நேரிடக்கூடிய சம்பவங்களுமுண்டு. திடீரென்று ஏற்படக்கூடிய ஆபத்துகளை நீக்கவும், நோயாளிகளுக்கு வேண்டிய சௌகர்யங்கள் செய்யவும் அவர்களைப் பாதுகாக்கவும் ஒவ்வொருவர்க்கும் விசேஷமாய் ஸ்திரீகளுக்குத் தெரியவேண்டியது அவசியம். இதற்காக ஸ்திரீகள் அறியவேண்டிய விஷயங்களாவன:—

(1) நோயுண்டாவதின் காரணங்களும் அவற்றிற்கான சமயோசித பரிகாரங்களும்.

(2) வீட்டைச் சுத்தமாகவும் தமது அந்தஸ்திற்குத் தகுந்த வண்ணம் அலங்கரித்தும் வைக்கவேண்டும்.

(3) பாலர் பரிபாலன வகைகளும் பலவித ஆகார வஸ்துக்களைத் தயார் செய்யும் வகைகளும் தெரிந்திருக்க வேண்டும். பொதுவாக மற்றவர் உதவியை நாடாமல் தானே தனது வீட்டுக் காரியங்களை நடத்தவும் வேலைக்காரரிடத்தில் வேலை வாங்கவும் உற்ற சமயத்தில் மந்திரியைப்போல் தன் கணவனுக்குச் சகலவித உதவிகளையும் புரிந்து சோபற்று வாழும் வகைகளைக் கையாளவும் தெரிந்திருக்க வேண்டும்:

ஒவ்வொரு வீட்டிலும் அவசியம் இருக்கவேண்டிய சாமான்களாவன:—

(1) தேயிலைக்கரண்டி (Tea-spoon) பெரிய தேயிலைக் கரண்டி (Dessert-spoon) மேஜைக்கரண்டி (Table-spoon.)

(2) அவுன்ஸ் கிளாஸ், மினிம் கிளாஸ், டம்ளர், [illegible] [illegible] கிண்ணம்.

(3) முனையினின்று கூர்மையற்ற கத்தரிக்கோல், சிறுகத்தி மேசைக்கத்தி, சவரக்கத்தி.

(4) பவுண்டன் சிரிஞ்சு Fountain syringe) அல்லது இரிகேற்றர் (Irrigator) என்ற கருவி, காய்ச்சல் குச்சி (Thermometer,) மருந்து நிறுக்கும் நிராசுப்பெட்டி, (Feeding Cup) என்னும் கோப்பை, (Bed-pan) கடற்காளான் (Sponge) வெந்நீர்ப்பை, (Hot-water bag) ஐஸ் பை (Ice-bag)

இவற்றோடு வீட்டில் எப்பொழுதும் தயாராய் வைத்திருக்க வேண்டிய ஔஷதங்களாவன:—

(1) ஜாதிக்காய், மாசக்காய், கடுக்காய், சுக்கு, மிளகு, சித்திரத்தை, வசம்பு, கடுகு, தேங்காயெண்ணெய், சிற்றாமணக்கெண்ணெய், பெருங்காயம்.

(2) டிஞ்சர் ஐயோடின் (Tincture Iodyne) நமது குளோராடயின் (Chlorodyne) நமது மகா சஞ்சீவித்தைலம் (Magnetic Balm) கார்பாலிக் ஆயில் (Carbolic Oil) டர்பன்றயின் (Turpentine) பினயில் (Phenyl) சோடா உப்பு (Soda Bicarb) கார்பாலிக் சோப்புக்கட்டி. சுத்தமான மெல்லிய வெள்ளைத் துணிகள், போரிக் பவுடர் (Boracic acid) கடைகளில் விற்கும் தூய்மையான பஞ்சு (Absorbent cotton.)

---

## இரிகேற்றர். (Irrigator.)



இது ஒவ்வொரு வீட்டிலும் இருக்க வேண்டிய அவசியமான கருவி. சகல இங்கிலீஷ் வைத்திய ஷாப்பிலும் கிடைக்கும். நமது வைத்தியசாலையிலும் வாங்கலாம். இதில் ஜலம் விடும் பாத்திரமும் அதிலிருந்து வரும் ஒரு ரப்பர்குழாயும் உண்டு. அந்த ரப்பர் குழாயின் முனையில் இணைத்திருப்பது வஜைனல் டியூப் (Vaginal Tube) என்ற ஓர் கருவி. இதில் ஜலம் வெளிபாக ஐந்தாறு கண்களுண்டு. ஸ்திரீ

பின் ஜனனேந்திரியத்தைச் சுத்தப்படுத்துவதற்கு இது பிரயோஜனமுள்ளதாகும். அதற்குப் பதிலாய் பக்கத்தில் காட்டியிருக்கும் ரெக்டல் (Rectal Tube) டியூப் என்ற குழாயை ஆசனவாயிற்குள் செலுத்தி மலக்கட்டை நீக்க உபயோகிப்பதுண்டு. இதில் ஜலம் வெளியேற ஒரே கண்தானுண்டு. இவைகளைத் தவிர யூற்றரயின டியூப் (Uterine Tube) என்ற மற்றொரு குழாயுமுண்டு. கெர்ப்பப் பையைச் சுத்தஞ் செய்வதற்காக இது மிகவும் நீளமாயிருக்கும். இந்த மூன்று குழாய்களில் எது அவசியமோ அதை ரப்பர் குழாயில் இணைத்து உபயோகித்துக்கொள்ள வேண்டும். இது மிகவும் பிரயோஜனமுள்ள கருவியாயிருப்பதால் இதன் உபயோகத்தைப் பற்றிச் சற்று விபரமாய்ச் சொல்லுவோம்.

1. எனிமா :மலக்கட்டினால் வயிற்றுவலியும் வயிற்றுப்பொருமலுமுண்டாகி கஷ்டப்படுபவர்களுக்கு மலபிரவிர்த்தி அவசியமாயிருந்தால் ரெக்டல் டியூவை ரப்பரில சேர்த்து எனிமா கொடுக்க வேண்டும். இதற்கு உபயோகப்படும் ஜலம் பலவகையுண்டு. அவைகளாவன:—(1) 1-அல்லது 2-பைன்ட் இளவெந்நீரும் சோப்பும். (2) வெந்நீரில் சோப்பைக் கரைத்து அதில் ஒரு மேசைக்காண்டி சிற்றாமணக் கெண்ணெய் கலந்தது. (3) இளவெந்நீரில் சோப்பைக் கரைத்து அதில் இரண்டு மேசைக்காண்டி டர்பண்டயின் (Turpentine) தைலம் கலந்தது.

1. மலக்கட்டினல் வயிற்றில் வேதனையுண்டானல் ஒரு பைன்ட் இளவெந்நீரில் சிறிது சோப்பைக்கரைத்து ஆசனவாயின் வழியாய இந்த ஜலத்தைச் செலுத்தினல் சிறுகுடல் பெருங்குடல் இவைகளை அலம்பிவிடும்.

2. இரண்டொருதரம் பேதியாக வேண்டுமானல் இரண்டு பைன்ட் இளவெந்நீரில் சோப்பு ஒரு சிறு கட்டியைக் கலந்து அதில் இரண்டு மேசைக்காண்டி ஆமணக்கெண்ணெயைக் கலந்து உபயோகிக்க வேண்டும்.

3. மலக்கட்டினல் வயிற்றுப்பொருமல் உண்டாகி காற்று வெளியாகாமல் வயிற்றுவலி முதலியவை உண்டானல் இளவெந்நீர் இரண்டுபைன்ட், சோப்புக்கட்டி ஒரு சிறு துண்டு, டர்பன்டயின் இரண்டு மேசைக்காண்டி கலந்து உபயோகிக்கலாம்.

**எனிமா கொடுக்கும் மாதிரி:**—சாதாரண ஜனங்கள் இதை ஜாக்கிரதையுடன் உபயோகிக்கவேண்டும். பெரிய ஆட்களுக்கு

மட்டும் உபயோகிக்கலாம். முதலில் தனி வெந்நீரை விட்டு பாத்திரம் குழாய் முதலியவைகளை உள்ளும் வெளியும் நன்றாய்ச் சுத்தம் செய்து அதன்பின்புதான் உபயோகிக்கப் போகும் ஜலத்தை விடவேண்டும். ஜாஸ்தி சூடும் ஆகாது. குளிர்ச்சியும் ஆகாது. இளவெந்நீரே நன்று.

குடலுக்குள் ஜலமானது மெல்லசாகச் செல்லவேண்டும். ஜாஸ்தி வேகமாகச் செல்லவிடக்கூடாது. இதற்காக இரிகேடர் பாத்திரத்தை நோயாளிக்கு அதிக உயரமான இடத்தில் வைக்காமல் படுக்கைக்கு இரண்டடி உயரத்தில் சுவர்களிலுள்ள ஆணியில் தொங்கவிடலாம். அல்லது யாராவது ஒருவர் உயர்த்திப் பிடித்துக்கொண்டிருக்கலாம். நோயாளி இடது பக்கமாகப் படுத்திருக்க வேண்டும். ஆசனவாய்க்குள் நுழைக்கும் குழாயில் சிறிது ஆமணக்கெண்ணெயைத் தடவிக்கொண்டு ஸ்டாப் காக்கைத் திறந்து கொஞ்சம் ஜலம் வெளியாகும்படியாய்ச் செய்து, ஜலம் வெளியில் ஓடிக்கொண்டிருக்கும்போதே அடைத்துவிட வேண்டும். இப்படிச் செய்யாமல் போனால் குழாய்க்குள் காற்றுத் தங்கியிருந்து குடலுக்குள் சென்றுவிடும். காற்று உள்ளே தங்கினால் மோசம் உண்டாகும். இதற்குப் பின்புதான் ஆசனவாய்க்குள் குழாயை நுழைத்து (Stop-cock) ஸ்டாப் காக்கைத் திறந்தால் இரிகேடரில் உள்ள ஜலமானது குடலுக்குள் செல்லும். ஜலம் சென்று கொண்டிருக்கும்போது நோயாளி முக்கக்கூடாது. இரிகேடரிலுள்ள ஜலம் முழுதும் காலியாகும்வரை வைத்திருக்கவும்கூடாது. ஐந்து அவுன்ஸ் ஜலமிருக்கும்போதே ஆசனத்திற்குள்ளிருக்கும் குழாயை எடுத்துவிட்டால் ஐந்து நிமிஷத்திற்குள் மல சுத்தியாகி வயிறு சுத்தமாகிவிடும்.

---

## கிளிஸரின் சிரிஞ்சு. (Glycerine syringe.)

இது ஒருவித பிச்காரி குழாய். இதன் முனையானது நீண்டு வளைந்திருக்கும். குழந்தைகளுக்கு மலச்சிக்கலினால் காய்ச்சல், வயிற்றுப்பொருமல், மாந்தம், திட்டுமுட்டுதல், மாந்தவலிப்பு முதலிய பயங்கர வியாதிகள் உண்டானால் பேதி மருந்துகளை உள்ளுக்குக் கொடுப்பது கொஞ்சநேரம் சென்றுதான் மலவிர்த்தியை யுண்டாக்கும். ஆதலால் அதற்குப் பதிலாக கிளிஸரின் என்ற மருந்தில் ஒரு மேசைக்கரண்டி யளவு எடுத்து அதை சிரிஞ்சில் விட்டு ஆசனவாயினுட் செலுத்திவிட்டால் உடனே மலங்கழிந்து வியாதி நின்றுவிடும்.

---

## 3. காய்ச்சல் குச்சி. (Thermometer.)




இந்த உஷ்ணமறியும் கருவி ஒவ்வொரு வீட்டிலு மிருக்க வேண்டிய முக்கிய வஸ்துக்களில் ஒன்று. இது கண்ணாடியினால் செய்யப்பட்டது. இதனுள் ரசம் அடைத்திருக்கிறது. சுகதேகிகளுக்கு நாவின் கீழ் வைத்துப் பார்த்தால் 97½ முதல் 98½ வரையிருக்கும், 99 முதல் 100 டிகிரி வரை காங்கையென்றும், 100-முதல் 102 வரை லேசான சுரமென்றும், 102 முதல் 104 வரை கொடிய சுரமென்றும், 104-க்கு மேல் ஜன்னி ஏற்படக்கூடிய சுரமென்றும் சொல்லலாம். அதேபிரகாரம 97½ முதல் 96½ வரை குளிர் ஜன்னி ஏற்பட்டிருக்கிறதென்றும் சொல்லலாம். 96½-க்குக் கீழ் அல்லது 106-க்கு மேல் இருந்தால் ஆள் ஜீவிப்பது அசாத்தியம்.

97½ டிகிரிக்குக் கீழும் 105 டிகிரிக்கு மேலும் செல்லவிடக் கூடாது. சுரம் அதிகமாயிருந்தால் அதைத் தணிக்கும் வகைக்காவது நமது வியர்வைப் பவுடரைப்போன்ற வியர்வை யுண்டாக்கும் மருந்துகளைக் கொடுத்து சுரத்தைத் தணிக்கலாம். அல்லது ரப்பரினால் செய்த ஐஸ் பையில் (Ice-bag) பனிக்கட்டியை உடைத்துப் போட்டு நன்றாய் அடைத்துக்கொண்டு தலையணைக்குமேல் ஒரு மெல்லிய துணியை விரித்துக்கொண்டு அதன்மேல் நோயாளியைப் படுக்க வைத்து தலையின்மேல் ஒரு துணியை வைத்து அதன்மேல் ஐஸ் பையை வைக்க சுரம் சன்னஞ்சன்னமாய் இறங்கும். 102 டிகிரிக்கு வந்தவுடன் பையை எடுத்துவிடவும். இது சுரத்தைத் தணிக்கும் சுலபமான முறை. எவ்வித அபாயமும் நேரிடாது, பயப்படாமல் செய்யலாம். இந்த ஐஸ் பை எந்த இங்கிலீஷ் வைத்தியசாலையிலும் வாங்கிக்கொள்ளலாம். நமது ஆபிசிலும் கிடைக்கும்.

குளிர்ச்சி அதிகமாகிவிட்டால், கை, கால்களில் உஷ்ணம் உண்டாகும்படி நமது மகா சஞ்சீவித் தைலம், அல்லது ஈயல்பாம, அல்லது டர்பன்றயின், அல்லது கர்ப்பூரத்தைலம், அல்லது வேப்பெண்ணெய் சுடர்தைலம் முதலியவைகளில் சமயத்துக்குக்கிடைக்கக் கூடிய ஏதாவதொன்றை கைகளிலும், கால்களிலும் நன்றாய்த் தேய்த்து உஷ்ணம் பிறப்பிக்கவேண்டும். வெள்ளைப்பூண்டையும் தைவேளை இலையையும் தட்டிப் பெருவிரல்களில் வைத்துக் கட்டினால் அனல் பிறக்கும். இருதயம் தன் தொழிலைச் சரியானபடி நடத்திக்கொண்டு வரும்பொருட்டு அதிக காப்பித்தூள் வெந்நீரில் போட்டு சாரம் இறக்கி அதில் பிராந்தியைக் கலந்து அடிக்கடி கொடுத்து வரவேண்டும். ஷாப்புகளில் விற்கும் சிக்கன பிராத், அல்லது சாதாரண கோழிக்குஞ்சு சூப்பில் சிறிது பிராந்தி சேர்த்தும் கொடுக்கலாம். மணல், சாம்பல், தவிடு, உப்பு முதலானதை வறுத்து விலாப் பக்கங்களிலும் அடிவயிற்றிலும் ஒற்றடம் போடலாம்.

சரீரத்தில் காய்ச்சல் குச்சியை வைத்துப் பார்க்கக் கூடிய இடங்களாவன:—நாவின் அடிப்பாகம், அக்கிள்கள், ஆசனவாய், யோனித்துவாரம், கால்முட்டு, மடிப்பு, அரையிடுக்குகள். நாவுக்கடியில் வைத்து பல்லால் கடிக்கவிடாமல் உதடுகளை மூடிக்கொள்ளச் செய்து பார்ப்பதுதான் உத்தமம். இதனால் டிகிரி துல்லியமாய்த் தெரியும். ஆனால் ஜன்னி கண்டு ஸ்மரணையற்றிருப்பவர்களுக்கும் குழந்தைகளுக்கும் நாவுக்கடியில் வைத்துப் பார்க்கவே கூடாது. ஏனெனில் வாயில் இந்தக் குச்சியை வைத்துப் பார்க்கும்போது பல்பட்டு குச்சி உடைந்துவிட்டால் கண்ணாடிச் சில்லுகளாலும் வாயில் சிதறிக்கிடக்கும் ரசத்தாலும் அநேக கெடு

தல்கள் ஏற்படலாம். ஆகையால் அவர்களுக்கு அக்குளில் வைத்துப் பார்ப்பதுதான் நலம். இது அவ்வளவு துல்லியமாகக் காட்டாவிட்டாலும் சேதமுண்டாவதற் கிடமில்லை. குழந்தைகளுக்கு ஆசனவாயினுட் வைத்துப் பார்ப்பது இதைவிட உத்தமம்.

காய்ச்சல் குச்சியை உபயோகிக்குமுன் அதில் ரசம் எத்தனை டிகிரி யிருக்கிறதென்று பார்த்து குச்சிப் பக்கத்தைப் பிடித்துக் கொண்டு உதறினால் ரசமானது 95 டிகிரிக்குக் கீழ் இறங்கிவிடும். அதன்பின்பு ரசமடங்கிய பாகத்தை அக்குளின் மடிமத்தியில் வைத்து புஜத்தை உடம்போடு சேர்த்துப் பிடித்துக்கொண்டால் ஒரு நிமிஷத்திற்குள் ரசம் இத்தனை டிகிரியென்று கண்டுகொள்ளலாம்.

---

## மருந்து நிறுக்கும் நிறைகள்.

1. நிறுத்தலளவை :—

| | | |
|---|---|---|
| 1 | கிரேயின் | = 1 உளுந்தெடை |
| 2 | ,, | = 1 குன்றிமணி |
| 4 | ,, | = 1 மஞ்சாடி யெடை |
| 60 | ,, | = 1 கிராம் |
| | ,, | = 1 வராகனெடை |
| 10 | வராகனெடை | = 1 பலம் அல்லது 3 ரூபாயிடை |
| 80 | கிரேயின் | = 1 களஞ்சி |
| 20 | ,, | = 1 ஸ்க்ருப்ள் |
| 1 | கிராம் | = ⅜ களஞ்சி |
| 8 | கிராம் | = 1 அவுன்ஸ் |
| 1 | அவுன்ஸ் | = 2½ ரூபாயெடை |
| 16 | அவுன்ஸ் | = 1 ராத்தல் (பவுண் |
| 1 | ராத்தல் | = 40 ரூபாயெடை |
| 1 | வீசை | = 120 ரூபாயெடை |

## 2. முகத்தலளவை அல்லது திராவகங்களின் அளவு

| | | |
|---|---|---|
| 1 | மினிம் | = 1 துளி |
| 60 | துளி | = 1 கிராம் |
| 1 | கிராம் | = 1 சிறு தேக்கரண்டி |
| 2 | கிராம் | = 1 டிசட் ஸ்பூன் அல்லது 1 பெரிய தேக்கரண்டி யளவு (Dessert spoon) |
| 4 | கிராம் | = 1 மேசைக் கரண்டி யளவு |
| | ,, | = அரை அவுன்ஸ் |
| 8 | கிராம் | = 1 அவுன்ஸ் (2 மேசைக்கரண்டியளவு |
| 1 | அவுன்ஸ் | = 3/16 ஆழாக்கு |
| 1 | ,, | = அரை ஒயின் கிளாஸ் |
| 2 | ,, | = ⅜ ஆழாக்கு |
| | ,, | = ஒரு ஒயின் கிளாஸ |
| 4 | ,, | = ¾ ஆழாக்கு 2 ஒயின் கிளாஸ் |
| 6 | ,, அல்லது 3 ஒயின் கிளாஸ் | = 1 ஆழாக்கு |
| 12 | அவுன்ஸ் | = கால்படி |
| 24 | ,, | = அரைப்படி |
| 48 | ,, | = ஒருபடி |
| 12 | ,, | = ஒரு பயிண்டு |
| | | = அரை சேர் |
| 24 | ,, | = 1 சேர் |
| 8 | பயிண்டு | = 1 காலன் |

## மினிம் கிளாஸ் (Minim Glass.)



இந்தப்படம் ஒரு மினிம் கிளாஸ் தண்ணீரில் விரலை நனைத்து வெளியே எடுத்தால் ஜலம் சொட்டு சொட்டாக கீழே விழுமல்லவா? இந்த சொட்டுக்கு மினிம் என்று பெயர். 60 சொட்டு ஜலம் கொண்டது ஒரு தேயிலைக்கரண்டி அல்லது ஒரு டிராம் என்று சொல்லப்படும்.

## அவுன்ஸ் கிளாஸ். (Ounce Glass.)




இந்தப்படம் ஒரு அவுன்ஸ் கிளாஸ். ஒருபக்கத்தில் டிராம் அளவும், மற்றொரு பக்கத்தில் அவுன்ஸ் அளவும் போட்டிருக்கின்றது. எட்டு டிராம்கொண்டது ஒரு அவுன்ஸ்.

குறிப்பு:—இக்காலத்தில் கரண்டிகளும், ஒயின் கிளாஸ்களும் பல மாதிரியாய்ப் பெரிதும் சிறிதுமாகச் செய்து விற்கப்படுவதால் கிரமமாக மேலே சொல்லிய அளவுள்ள கரண்டி, கிளாஸ்கள் வாங்கி உபயோகிக்க வேண்டும். அல்லது தகரத்தில் இவைகளைச் செய்து வைத்துக்கொள்ளவேண்டும்.

குழந்தையின் வயதுக்குத் தக்கதாக மருந்து கொடுக்க வேண்டிய திட்டத்தைக் காட்டும் அட்டவணை.

ஒரு வருஷத்திற்குட்பட்ட குழந்தைக்குக் கொடுக்கவேண்டிய அளவை ஒன்று ஆக வைத்துக்கொண்டால், அதாவது ஒரு வருஷத்திற்குட்பட்ட குழந்தைக்குக் கொடுக்க வேண்டிய பிரமாணம், ஒரு துளி அல்லது ஒரு கிரேயின் அல்லது ஒரு டிராம் அல்லது ஒரு அவுன்ஸ் ஆக வைத்துக்கொண்டால்

| | | | | |
|---|---|---|---|---|
| 1-க்கு மேல் | 3 | வயது | வரை | 1½ |
| 3 வயது முதல் | 5 | ,, | ,, | 2 |
| 5 ,, ,, | 7 | ,, | ,, | 3 |
| 7 ,, ,, | 14 | ,, | ,, | 4 |

ஆக அளவில் இப்பிரமாணத்தின்படி அதிகப்படுத்திக் கொடுக்க வேண்டும்.

குறிப்பு:—நாலு மாதங்களுக்குட்பட்ட குழந்தைகளுக்கு அபின் சேர்ந்த மருந்துகள் கொடுக்கலாகாது. ஆனால் சாம்சேர்ந்த ஔஷதங்கள் அதிகமாய்க் கொடுத்தபோதிலும் கெடுதி செய்யாது.

## நஞ்சுகளும் அவைகளுக்கு முறிவும்.

## (Poisons, Antedotes & Emergency Remedies.)

வீடுகளில் பல உபயோகங்களுக்காக நஞ்சு வஸ்துவை வைத்திருக்கலாம். அநேக ஔஷதங்களும் அளவுக்கு மிஞ்சினால் நஞ்சாக முடியும். மேலும் மேற்பிரயோகத்திற்காக வைத்திருக்கும் தைலங்களில் அபின், அக்கோனைற், பெல்லடோனா முதலிய நஞ்சு மருந்துகளுமுண்டு. அவைகளில் ஏதாவது அறியாமையினாலாவது கைப்பிசகினாலாவது அளவு தெரியாமலாவது சாப்பிட நேரிடலாம். தற்கொலை செய்துகொள்ள எண்ணங்கொண்டு விஷத்தைச் சாப்பிட்டிருக்கலாம். அல்லது கொலை செய்வதற்கான நோக்கத்துடன் மற்றவர்களால் கொடுக்கப்பட்டிருக்கலாம். விஷம் இன்னதென்று கண்டு பிடித்து அதற்குத் தகுந்த வைத்தியத்தைச் செய்யவேண்டும்.

1. சுகதேகியான ஒருவனுக்குத் திடீரென்று மயக்கம், அசதி, புலம்பல், வாந்தி முதலான குறிகள் கண்டால் உடனே அந்தச் சமயத்தில் அவன் உட்கொண்ட ஆகாரம், பானம் இன்னதென்று கண்டு பிடிக்கவேண்டும். இதற்காக பக்கங்களில் கிடக்கும் சகல சாமான்களையும் டாக்டருக்குக் காண்பிக்கவேண்டும்.

அப்பேர்ப்பட்ட சமயங்களில் சமயோசிதமாய் செய்யவேண்டிய சில பக்குவங்களை அடியிற் கூறுவோம்:—

## 2. சகல நஞ்சுகளுக்கும் பொதுப் பிரயோகம்.

காலதாமதஞ் செய்யக்கூடாது. ஆத்திரப்படவும் கூடாது. கர்பாலிக் ஆசிட், (Carbolic acid) சல்பூரிக் ஆசிட் (Sulpuric acid) முதலிய வாயில் புண்களை உண்டாக்கக்கூடிய நஞ்சுகளை சாப்பிட்டிருந்தால் வாந்திக்குக் கொடுக்கக்கூடாது. ஆனால் பால், முட்டையின் வெள்ளைக்கரு முதலிய பசபசப்புள்ள வஸ்துக்களைக் குடிக்கக் கொடுக்கவேண்டும்.

## 3. Antedotes we should always keep on hand.

நாம் எப்பொழுதும் கைவசம் வைத்திருக்கவேண்டிய விஷ முறிவுகள் யாதெனில்:- சோடா, (Soda,) மக்னிசியா, (Magnesia) சீமைச்சுண்ணாம்பு, (Chalk.) முட்டை, பால், சோப்பு, கொழுப்பு, (Lard) சீனாக்காரம், (Alum,) கடுகு, (Mustard) தேயிலை, காப்பி, எலுமிச்சம்பழம், காடி, (Vinegar) சணல்விரை (Flax seed) முதலியவைகள் எப்பொழுதும் மருந்துப்பெட்டியில் கைவசமிருக்க வேண்டும். அதோடு மயில்துத்தத்தைத் தூள்செய்து இரண்டு கிரேய்ன் வீதம் எடுத்துத் தாள்களில் மடித்து வைத்திருக்க வேண்டும். நெருப்புக் குச்சிகளிலுள்ள பாஸ்பரஸ் (Phosphorus) ஐ பிள்ளைகள் தின்றுவிட்டால் அதை உள்ளுக்குக் கொடுக்கலாம்.

எந்த நஞ்சை உட்கொண்டாலும் உடனே வாந்திசெய்யும்படி வேண்டிய முயற்சி செய்து வயிற்றை வெறுமையாக்குவதே முதற் சிகிச்சை. வயிறு முற்றிலும் வெறுமையானபின் தான் அந்தந்த மருந்துக்குரிய முறிவுகளைக் கொடுக்கவேண்டும். வயிற்றில் ஒன்றுமில்லாவிட்டாலும் பாலைக் குடிக்கக் கொடுத்து வாந்திவரச் செய்யவேண்டும். எந்த நஞ்சைப் புசித்தாலும் உடனே தொண்டைக்குள் விரலைவிட்டுக் கூச்சமுண்டாக்கி வாந்தி செய்யலாம். அல்லது கறியில் போடும் உப்பை வெந்நீரில் அதிக கைப்பாகக் கரைத்து வயிறுகொண்ட மட்டும் குடிக்கக் கொடுத்தால் உடனே வாந்தியாகும்.

இரண்டு தேயிலைக் கரண்டி சீமைக்கடுகை கொஞ்சம் வெந்நீரிலரைத்துக் கொடுத்தால் வாந்தியாகும். ஆனால் உதடு, நாக்கு, வாய் முதலிய உறுப்புகள் உட்சென்றிருக்கும் வஸ்துவினால் வெந்து போயிருக்கிறதாகத் தெரிந்தால் வாந்தியை உண்டாக்கக்கூடிய வஸ்துக்களை உள்ளுக்குக் கொடுக்கக்கூடாது. வாந்தி எடுக்கும் போது வெளியாகும வஸ்துவையும் நோயாளியின் பக்கத்தில் கிடக்கும் வஸ்துவையும் டாக்டருக்குக் காண்பிப்பதற்காகப் பத்தோபஸ்துசெய்து வைக்கவேண்டும்.

உட்சென்றிருக்கக்கூடிய விஷம் இன்னதுதானென்றறிய முயலவேண்டும். இதற்குள் டாக்டரை விரைவாய் அழைத்துவர ஆட்களை அனுப்பவேண்டும்.

4. நோயாளிக்கு உயிர் போய்விட்டதுபோல் தோன்றினால் மறுபடியும் உயிர்ப்பிக்க வேண்டிய முறைகளைக் கையாடவேண்டும். மூர்ச்சையாய்க் கிடந்தால் நமது ஆக்கிராண உப்பு

(Smelling salt) அல்லது (Carbonate of Ammonia) என்னும் மருந்தை நாசியில் காட்டவேண்டும். குளிர்ந்த ஜலத்தைப் பலமாய் முகத்திலும் நெற்றியிலும் அடிக்கவேண்டும். தூங்கி விழுந்துகொண்டிருந்தால் தூங்கவிடக்கூடாது. அப்படியே தூங்கவிட்டால் ஒரே தூக்கமாக முடிந்தாலும் முடியும். ஆகையால் அசதி உண்டாகாமல் கையைப் பிடித்து நடத்திக்கொண்டேயிருக்க வேண்டும். நடக்க சக்தியில்லாமல் போனாலும் முன்னும் பின்னுமாக இழுத்துக்கொண்டேயிருக்கவேண்டும். விழிப்பாயிருக்கும்படி அடிக்கடி உடலைத் தட்டி அசைக்கவேண்டும். பேசச் செய்யவேண்டும். சூடான காப்பியை அடிக்கடி ஏராளமாகக் குடிக்கக் கொடுக்கலாம். அசதி கொஞ்சம் தெளிந்தபின் கால்களை வெந்நீரில் வைக்கலாம். இப்படிப் பலவிதத்தாலும் தூங்காமலிருக்கச் செய்யவேண்டும்.

5. இழுப்புகள் வந்துகொண்டிருந்தால் முகத்திலும், தலையிலும், நெற்றியிலும் குளிர்ந்த ஜலத்தை எடுத்து அடிக்கவேண்டும்.

6. வாய், நாக்கு, உதடு முதலிய பாகங்கள் புண்ணாயிருந்தால் ஆமணக்கெண்ணெய், பால் முதலிய வஸ்துக்களை உள்ளுக்குக் கொடுக்கவேண்டும்.

7. உடம்பு குளிர்ந்து ஜாஸ்தியாக வியர்வை கண்டால் உடம்பைத் தேய்த்துக் கம்பளியைப் போர்த்து வெந்நீர் சீசா முதலானவைகளை கால்களுக்கு வைத்துச் சூடுண்டாக்கவேண்டும்.

இவ்விதம் டாக்டர் வரும்வரை நோயாளியைக் காத்துக்கொண்டிருந்து அவர் வந்தவுடன் நடந்த விஷயங்கள் யாவற்றையும் தெளிவாக சொல்லவேண்டும். முடிந்தால் நோயாளியையே சொல்லும்படி செய்யவேண்டும். நஞ்சு இன்னதென்று தெரிந்தவுடன் அதற்குத் தகுந்த சிகிச்சை செய்யவேண்டும்.

வீடுகளில் சாதாரணமாய் உபயோகிக்கப்படும் விஷங்களாமான்களைப் பற்றி மட்டும் இங்கு கவனிப்போம்.

1. அபின்: குறிகள்: தூக்கங்காணும். வர வர அதிகமாகும். அப்படியே தூங்கவிட்டால் அது ஒரே தூக்கமாக முடிந்தாலும் முடியும். முகம் வெளுத்திருக்கும். உடம்பு குளிர்ந்திருக்கும். வாயில் அபின் வாசனை தோன்றும். கண்மணியானது மிகவும் சுருங்கியிருக்கும்.

சிகிச்சை:—நோயாளியைத் தூங்கவிடவே கூடாது. அசதி கண்டாகுமுன் கையைப் பிடித்து நடத்திக்கொண்டு போகவேண்டும். நடக்க சக்தியில்லாதிருப்பினும் முன்னும் பின்னும் இழுத்துக் கொண்டாவது இருக்கவேண்டும். அடிக்கடி முதுகில் தட்டி எழுப்பவேண்டும். முகத்தில் குளிர்ந்த ஜலத்தைத் தெளிக்க வேண்டும்.

2. பெல்லடோனா (Belladonna) அபினுக்குப் போலவே இதற்கும் செய்யவேண்டும்.

3. அக்கினித் திராவகங்கள் என்று சொல்லப்படும் கர்பாலிக் ஆசிட், கெந்தகத் திராவகம், நைற்றிரிக் ஆசிட், ஹைட்ரோகுளோரிக் அல்லது முறியாட்டிக் ஆசிட், அசற்றிக் ஆசிட் முதலியவைகளுக்கு:—

அடையாளங்கள்:-உதடு, வாய், நாக்கு, தொண்டை, வயிறு இவைகளில் மகா எரிச்சலுண்டாகும். வாந்தி யுண்டாகும். மூச்சு முட்டும். வாய் புளிப்பாயிருக்கும். உதடு, நாக்கு, வாய் முதலான பாகங்கள் புண்ணாயிருக்கும். நாடி படபடத்து மெது வாய் அடிக்கும் நோயாளி எதையும் விழுங்க முடியாது.

சிகிச்சை:—வாந்திக்குக் கொடுக்ககூடாது. அவைகளால் மோசமுண்டாகும். ஆனால் சோடா, சிமைச்சுண்ணும்பு, (Chalk) மகனிசியா அல்லது சோப்பை சுமார் இரண்டு ரூபா யெடை அரைக்கால்படி ஜலத்தில் கரைத்து சிறுகச் சிறுக அவ்வளவையும் கால்மணி நேரத்திற்குள்ளாகக் கொடுத்துவிட வேண்டும். இவைகள் கிடைக்காவிட்டால் நாட்டுச் சுண்ணும்பையாவது அல்லது சுவரிலிருக்கும் சுண்ணும்பையாவது கொஞ்சம் கலந்து அந்த ஜலத்தைக் கொண்டு வாயலம்பச் செய்ய வேண்டும். சிமைச் சுண்ணும்பு கொடுத்தால் கொஞ்சம் எடுத்துப் பொடி செய்து பாலில் கரைத்து உள்ளுக்குக் கொடுக்கவேண்டும். முட்டையின் வெள்ளைக்கருவையும் கொடுக்கலாம். இவைகளைச் சாப்பிட்டபின் வாந்தியுண்டாகும். வாந்தியானபின் ஆமணக்கெண்ணெய், நல்லெண்ணெய், தேங்காயெண்ணெய், நெய் முதலிய எண்ணெய்த் திரவங்களில் ஏதாவது இரண்டு மூன்று கரண்டி கொடுக்கவேண்டும்.

4. பாஷாணம், அடையாளங்கள்:—உட்சென்ற கால்மணி நேரத்திற்குள் விஷக்குறிகள் தோன்றும். நாவறட்சி யுண்டாகும். தாகமதிகரிக்கும், நாக்கு சிவந்திருக்கும், மேல்வயிற்றில் எரிச்சல்

உண்டாகும். மயக்கங் காணும். வாந்தியுண்டாகும். வெளியாகும் வஸ்து ஊதா அல்லது பச்சைநிறமாயிருக்கும். இரத்தக் கலப்புமிருக்கும். வயிற்றுப்போக்குடன் மலம் வெளியாகும் போது முக்குவான். கை கால்கள் இழுக்கும். வலியிருக்கும். தொண்டை உலர்ந்துபோகும். மூச்சு முட்டும். உடம்பு குளிர்ந்திருக்கும். வயிறு முழுமையும் புண்பட்டதுபோல் தொடமுடியாமல் வலிக்கும். நாடி ஒழுங்கில்லாமலும் பலவீனமாயும் ஓடும்.

சிகிச்சை:—இதற்குத் தானாகவே வாந்தியாகும் குணமுண்டு. என்றாலும் அதுவரை காத்திராமல் உடனே கொஞ்சம் வெந்நீரையாவது பாலையாவது கொடுத்து அந்த விஷத்திலேயே வாந்தி செய்விக்கவேண்டும். வாந்தியானபின் பாலில் முட்டையையாவது மாவு தினுசுகளில் ஏதையாவது குழம்பாகக் கரைத்து இடைவிடாமல் கொடுத்துவரவேண்டும். பாலில்லாவிடில் தண்ணீரில் கலந்து கொடுக்கலாம். அடுப்புக்கரியைத் தூள்செய்து ஜலத்தில் கலந்தும் கொடுக்கலாம். சிற்றாமணக்கெண்ணெயையும் குளிர்ந்த சுண்ணாம்பு ஜலத்தையும் கலந்து அடிக்கடி குடிக்கச் செய்யலாம். மிளகும் சிறுகீரையையும் கஷாயம் செய்து கொடுக்கலாம். தயிரில் சந்தனத்தைக் கரைத்து உடம்பில் பூசினால் பாஷாணத்தின் விறு தணியும். ஜவ்வரிசி முதலான பால் கலந்த கஞ்சிகளைக் கொடுக்கவேண்டும். சரீரம் பலத்தாட்சியடையுமுன் ஒரு தேயிலைக் கரண்டி பிராந்தியும் ஜலமும் கலந்து ஒரு மணி நேரத்திற்கொரு தடவை கொடுக்கவேண்டும். கோழிமுட்டையை உடைத்துப் பாலோடு கலந்து கொடுக்கவேண்டும்.

5. சவ்வீரம். பாஷாணத்துக்குச் சொல்லிய முறிவுகள் இதற்குமாகும். ஆனால் முட்டையும் பாலுமே இதற்குச் சிலாக்கியமானது.

6. எட்டிக்கோட்டை. (Nux vomica, Strychnine) எட்டிக்கொட்டையின் சத்திற்கு (Strychnine) ஸ்டிரிக்டனைன் என்று பெயர். எலி, நாய் முதலிய ஜந்துக்களைக் கொல்லுவதற்காக ஷாப்புகளில் விற்கும் பிஸ்கட்டுகளில் ஸ்டிரிக்ட்னைன் (Strychnine) கலந்திருக்கும்.

அடையாளங்கள். கண்மணிகள் மிகவும் பெரிதாயிருக்கும். சுவாசம் சரியாய்விடமாட்டான். வாயில் கசப்பு இருக்கும். கால் கைகளும் சதைகளும் உறைத்திருக்கும். முகத்தில் பயங்கரதோற்றமுள்ள சிரிப்பு காணும். தாடை அசைக்க முடியாது. பிடரி மரத்திருக்கும். சரீர முழுவதுமே நடுங்கிக்கொண்டிருக்கும்.

சிகிச்சை. உடனே வாந்தியை உண்டாக்கவேண்டும். உள்ளுக்குப் பாலைக் குடிக்கக் கொடுக்கவேண்டும். காப்பியை வெகு காரமாகச் செய்து குடிக்கக் கொடுக்கவேண்டும். அதன்பின் வாந்தி உண்டாவதற்காகக் கடுகு அல்லது சீனைக்காரத் தூளை தண்ணீரில் கலந்து குடிக்கக் கொடுக்கலாம். அல்லது கோழி இறகை தொண்டையில விட்டு வாந்தியைப் பிறப்பிக்கலாம். பல் கிட்டிக் கொள்ளாதபடி ஓர் கட்டையை பல்லினிடையில் திணிக்கவேண்டும். எப்ஸம் ஸால்டை (Epsom salt) தாராளமாய்க் கொடுத்துப் பேதியை உண்டாக்கலாம். அல்லது (Irrigator) இறிகேட்டர் என்ற குழாயினால் சோப்புத் தண்ணீரை வயிற்றினுள் செலுத்தி பேதியாக்கலாம். ஜன்னி இழுப்புக்கு (Chloroform) க்ளோரோபாரம் நுகரச் செய்வது நல்லது. புகையிலை இதற்குத் தகுதியான முறிவு. புகையிலைக் கஷாயம் வைத்து அதில் அரை அவுன்ஸ் எடுத்து அதோடு கொதிக்கக்காய்ந்த சுத்தஜலத்தில் 20 அவுன்ஸ் கலந்து அடிக்கடி கொஞ்சம் கொஞ்சமாக கொடுத்துக் கொண்டு வந்தால் வலி குறைந்துபோகும். நிகோடின் (Nicotine) என்ற புகையிலை ரசத்தில ஒரு துளி எடுத்து கொதிக்கிற வெந்நீரில் ஷெரிவைனோடு (Sherrywine) கலந்துகொடுத்தால் முறிந்துவிடும். கோழிமுட்டை, அவுரி, கடுக்காய், கடுகு, பொட்டாஸ் புரோமைட் (Potash Bromide) முதலியவைகளும் அனுபவமான முறிவுகளாகும்.

7. ஊமத்தை, (Datura.) இலை காய் முதலியவைகள் மருந்துக்கு உபயோகப்படுகின்றன. இவைகள் அளவுக்கு மிஞ்சினால விஷமிருக்கும், வாய், தொண்டை, உதடு முதலானவை உலர்ந்துபோகும, உமிழ்நீர் சுரக்காது, தொண்டை வலியால் எதையும விழுங்கமுடியாது, தாகம் அதிகரிக்கும், முகம் சிவந்து கண்கள் நன்றாய் திறந்து பயங்கரமா யிருக்கும், கண்மணிகள் சிவந்திருக்கும, பார்வை மங்கிப்போகும், உரத்த சத்தத்தோடு புலம்பலுண்டாகும், நடை தடுமாறும், சரீரம் உலர்ந்து மதத்துப் போயிருக்கும், வேர்வை கசியவே மாட்டாது, அடிக்கடி நீர் பிரிக்க விருப்பமுண்டாகும்.

சிகிச்சை, வாந்தி எடுக்கச் செய்யவேண்டும். சூடுள்ள காப்பி, தேயிலைத் தண்ணீர் முதலானவைகளை ஏராளமாய்க் கொடுக்க வேண்டும. பிராந்தியும் ஜலமும் கலந்து அடிக்கடி கொடுத்துக் கொண்டிருக்கவேண்டும். கால் கைகளில் சூடுண்டாகும்படி செய்ய வேண்டும. வெந்நீரில் ஒரு துணியை நனைத்துப் பிழிந்து கொஞ்சநேரம் லேசாய் அடிக்கவேண்டும். அதன்பின்பு குளிர்ந்த ஜலத்தில் ஒரு துணியை நனைத்துப் பிழிந்துவிட்டு அதேமாதிரி உடம்பு

முழுவதும் லேசாய் அடிக்கவேண்டும். இவ்விதமாக மாறி மாறி செய்துகொண்டிருக்க வேண்டும்.

8. மண்ணெண்ணெய். (Kerosine Oil). முகம் வெளுத்திருக்கும். தாகம் அதிகரிக்கும். அடிக்கடி பெருமூச்சு உண்டாகும். உடம்பு கைகால்களில் குளிர்ச்சி உண்டாகும். உதடு, நாக்கு, வயிறு, வாய் முதலிய இடங்களில் எரிச்சல் உண்டாகும்.

சிகிச்சை. வாந்தியை உண்டாக்கவேண்டும். காப்பி, தேயிலை, பிராந்தி முதலிய வஸ்துக்களை கொடுத்து உடம்பில் சூடு உண்டாக்க வேண்டும். உள்ளுக்கு சிற்றாமணக்கெண்ணெய் கொடுத்து மலத்தை வெளியாக்கினால் அதோடு மண்ணெண்ணெயும் சேர்ந்து வந்துவிடும். சுண்ணாம்புத் தெளிநீர் அடிக்கடி கொடுத்துவரவேண்டும். அப்பால் பாலும் முட்டையும் கலந்து கொடுத்து வரலாம்.

9. சீனக்காரம். (Alum) இதைக் கற்கண்டு என்று குழந்தைகள் தின்றுவிடுவது சகஜம். இதற்கு சோடா, மக்னீஷியா, நாட்டுச்சுண்ணாம்பு, ஜலம் முதலியவைகளில் ஏதாவது கொடுக்கலாம்.

10. தீமுருகல். (Phosphorous) தீக்குச்சி மருந்து, எலி கொல்லி, (Rat Paste) முதலியவை இதனால் செய்யப்படுகிறது. குழந்தைகள் தீக்குச்சிகளை வாயில் வைப்பதால் இதன் விஷக் குறிகள் தோன்றும். வாயை முகர்ந்து பார்த்தால் வெள்ளைப் பூண்டு வாசனை இருக்கும். தாகம் உண்டாகும். வாந்தியாகும். நீர் சரியாய் இறங்கமாட்டாது. புலப்பம் இருக்கும். ரத்தம் கூட வாந்தி செய்வான். வாந்தியான வஸ்துவை இருட்டில் கொண்டுபோய்ப் பார்த்தால் பளபளப்பாய் இருக்கும்.

சிகிச்சை. வாந்தி அதிகரிக்கவேண்டும். எண்ணெய்களையாவது, கொழுப்பு, வெண்ணெய், நெய் முதலிய வஸ்துக்களையாவது கொடுக்கக்கூடாது. ஆனால் பிரெஞ்சு டர்பண்டயின் என்ற மருந்தில் அரைத்தேயிலைக் கரண்டியளவு அரைமணி நேரத்திற்கொரு தடவை கொடுக்கலாம். ஜர்மன், அமெரிக்கன் டர்பண்டயின் இதற்கு உதவாது. மயில் துத்தம் இரண்டு அல்லது மூன்று கிரேன் எடுத்து கால்மணி நேரத்திற்கு ஒருதடவை தண்ணீரில் கலந்து கொடுத்து வாந்தியை பிறப்பிக்க வேண்டும். இதுவே தீமுருகலுக்கு முறிவுமாகும். பால்துத்தம் (Zinc Sulphate) இருபது கிரேய்ன் எடுத்து தண்ணீரில கலந்து கொடுத்து, வாந்தியை பிறப்பிக்கலாம். பேதி உப்பு என்ற மக்னீசியம் சல்பேட் கொடுத்து மல

த்தை வெளியாக்கலாம். முட்டையின் வெள்ளைக்கரு, பால் முத லியவைகளையும் உள்ளுக்குக் கொடுக்கலாம்.

11. சூடம் அல்லது கற்பூரம். (Camphor) மயக்கம், ஆயாசம், காதில் இரைச்சல், புலம்பல், வலிப்பு, திருஷ்டி குறைவு, மூச்சு முட்டுதல், உடம்பு குளிர்ச்சி, ஆண் பெண் குறிகளில் எரிவு முத லிய குணங்கள் காணும்.

சிகிச்சை:—சாந்தி அதிகரிக்கவேண்டும். சிரசில் குளிர்ந்த ஜலத்தையும் வெந்நீரையும் மாற்றி மாற்றி விடவேண்டும். நன் றாய்த் தூங்கி வியர்த்துவிட்டால் சொஸ்தமாகிவிடும்.

12. கஞ்சா. (Indian Hemp.) புத்தி தடுமாறி வாயில் வந்தபடி பிதறறச் செய்யும். பலவிதமாய் சத்தம் போடுவான். பாடுவான் தலை பாரமாய் இருக்கும். சுவாசம் மிகவும் விரை வாய் எடுக்கும். நீர் ஜாஸ்தியாய்ப் பிரியும்.

சிகிச்சை:—வாந்தியை உண்டு பண்ணவேண்டும். எலுமிச் சம்பழ ரசம், காடி, சுடவைத்த பிராந்தியை தண்ணீரில் கலந்து கொடுக்கலாம். தலையில் குளிர்ந்தஜலத்தை குடம் குடமாய் வார்க்க வேண்டும். ஈருள்ளி ரசமும் காடியும் கலந்துகொடுக்கலாம்.

13. ஜாதிக்காய். (Nut-Meg) மயக்கம், தலைசுற்றுதல், தாகம், புலப்பம் முதலியவை உண்டாகும். மூச்சு முட்டும். வாந்தி யுண்டாகும். ஒரு இடத்தில் இருக்கமாட்டான். காப்பி தேயிலை தண்ணீர் முதலியவைகளை அடிக்கடி கொடுக்கவேண்டும்.

14. டர்பன்டயின் அல்லது கற்பூரத்தைலம். மூச்சு முட் டும். வலிப்பு உண்டாகும். மூத்திரப்பை, ஆண் பெண் குறிகளில் எரிச்சல் உண்டாகும்.

சிகிச்சை:—வாந்தி மருந்துகளையும் கொடுத்து வாந்தியுண் டாக்கவேண்டும். மக்னீஷியம் சல்பேட் ஒரு அவுன்ஸ் எடுத்து ஒரு டம்ளர் தண்ணீரில் கலந்து கொடுத்து பேதியுண்டாக்கவேண் டும். பின்பு சுண்ணாம்புத் தெளிநீர் கொடுக்கவேண்டும். கோழி முட்டையை உடைத்துப் பாலோடு கலந்து கொடுக்க வேண்டும். பார்லி அரிசிக் கஞ்சியைக் கொடுப்பதும் உத்தமம்.

15. அம்மோனியா. காடியுந் தண்ணீரும் கலந்து கொடுக் கலாம்.

16. அயோடின் திராவகம். மாவு திணுசுகளில் எதையா வது தண்ணீரில் கலந்து கொடுக்கலாம். வடிகஞ்சியும் கொடுக்க லாம்.

17. ஈய திராவகம், ஈய பஸ்பம்: எப்ஸம் உப்புத்தண்ணீரில் கரைத்துக் கொஞ்சம் காடி கலந்து கொடுக்கலாம்.

18. சுண்ணும்பு. சாமயும் ஜலமும் கலக்கு கொடுக்கலாம். எண்ணெய் திணுசுகளில் எதையாவது கொடுக்கலாம்.

19. காடிக்காரம். (Silver Nitrate or Lunar-Caustic) கறிஉப்பைத் தண்ணீரில் கரைத்துக் கொடுக்கவேண்டும். பால், முட்டையின் கரு, குழகுழப்பான பதார்த்தங்களைக் கொடுத்து வயிற்றிலிருக்கும் விஷத்தை நீக்கலாம்.

20. அன்றிமோனி. (Antimony Tartar Emetic) காசுக்கட்டித்தூள், மாச்சக்காய்த்தூள் முதலியவைகளை அரைத்தேக் கரண்டி எடுத்து அரைக்கோப்பை தண்ணீரில் கலந்து கொடுக்க லாம். காரமான தேயிலைத் தண்ணீரும் கொடுக்கலாம். போதிக்கு விளக்கெண்ணெய் கொடுத்து ஏராளமான வெந்நீர் குடிக்கவேண் டும். பிராந்தி உஸ்கி நல்லது.

21. பால் துத்தம். சோடாவைத் தண்ணீரில் கலந்து கொடுக்க வேண்டும்.

22. நேர்வாளம். காட்டாமணக்கின் பருப்பு முதலியவை களுக்கு: புளித்தமோரில் எலுமிச்சம்பழ ரசத்தைக் கலந்து கொடுக் கலாம். பாஷாணத்துக்குரிய முறிவுகளைக் கொடுக்கலாம்.

23. பேற்பூசுத் தைலங்கள். இவைகளில் நஞ்சுச்சரக்குகள், அதிகமாகக் கலந்து இருந்தாலும் சொற்பமாகத்தானிருக்கும். அதுவும் வாந்தியில் வந்துவிடும். அவசியமானால் அபின், பெல்ல டோனா முதலியவைகளுக்குச் செய்ய வேண்டிய சிகிச்சையே இவைகளுக்கும் செய்யவேண்டும்.

24. காவிகிழங்குக்கு. சிறுகீரையும், மிளகும் கஷாயம் செய் து கொடுக்கலாம்.

25. சிவதைவேருக்கு. வேலம்பட்டைக் கஷாயம்.

26. மருதோன்றிக்கு. தான்றிக்காய் கஷாயம்.

27. அவுரிக்கு. கடுக்காய் கஷாயம்.

28. குன்றிமணிக்கு. பொரித்த வெங்காரம்.

29. கள்ளிப்பாலுக்கு. வாழைப்பட்டை ரசம்.

30. எருக்கம்பாலுக்கு. வேலம்பட்டைக் கஷாயத்தில் மோரைக் கலந்து கொடுக்கலாம்.

31. சேங்கொட்டைக்கு. புளியைக் கரைத்து அதில் நல்லெண்ணெயைக் கலந்து கொடுத்து, தான்றிக்காயும் புளியிலையும் ஓர் நிறையாய் அரைத்து உடம்பில் பூசினால் விறு தணியும்.

(அவுரி. நீலியமரம் இதன் இலைக்கு ஜன்னி, பாம்புவிஷம் முதலிய மற்ற எல்லா விஷங்களையும் நீக்கும் குணமுண்டு.)

32. ஆகார தினுசுகள். (Cheese, meats, cenned goods) தற்காலத்தில் தகரங்களில் அடைத்துவரும் மீன், மாமிச வகையறுக்கள், பால்கட்டி முதலியவைகள் நாட்சென்றவுடன் கெட்டு விஷமிருக்கும். அவைகளைச் சாப்பிட்டால் வாந்தி குமட்டல், அரோசியம், வயிற்றில் நோவு, ஆயாசம், பேதி முதலியவை சம்பவிக்கலாம்.

சிகிச்சை:—கடுகுத்தூள், படிகாரத்தூள், உப்பு அல்லது கொழுப்பு முதலியவற்றில் எதையாவது கொடுத்து வாந்தி செய்விக்கவேண்டும். அதன்பின்பு பேதி உப்பில் 1 அவுன்ஸ் தண்ணீரில் கலந்து மலத்தைக் கழிக்கவேண்டும். உஸ்கி அல்லது பிராந்தியைக் கொடுத்து தைரியம் கொடுக்கவேண்டும்.

33. காளான்கள். சாப்பிடுவதினால் கைகால்கள் குளிர்ந்து வாந்தி காணலாம். இதற்கு வெந்நீரில் ஏராளமான உப்பைக்கரைத்து வாந்திக்குக்கொடுத்து அதன்பின்பு காரமானகாப்பி (Strong Coffee) உஸ்கி பிராந்தி முதலியவைகளைக் கொடுக்கவேண்டும்.

34. புகையிலை. குழந்தைகள் புகையிலையைத் தின்றுவிட்டால் வாந்தி, மயக்கம், திருஷ்டி குறைவு, நாடி பலவீனம் உண்டாகி உடம்பு குளிர்ந்து இருக்கும். வியர்வை உண்டாகும்.

சிகிச்சை:—வாந்தியை ஜாஸ்தியாக்கி நோயாளியை பேசாமல் படுத்திருக்கச் செய்யவும். டீ, காப்பி முதலிய வஸ்துக்களைக் கொடுத்து உடம்பில் சூடுண்டாக்கவேண்டும்.

## சில சுளுவான முறைகள்.

## SOME SIMPLE HOME REMEDIES.

உப்பு (Common Salt) கறியுப்பு, கடலுப்பு, கல்லுப்பு என்று சொல்லப்படும். இது யாவரும் எப்பொழுதும் உபயோகித்துவரும் சாதாரண வஸ்துவாயிருப்பினும் இதன் அருமையான உபயோகங்களைப் பற்றி சிறிது சொல்லுவது அவசியம்.

1. பல்வலி, காதுவலி, முகக்குத்தல் முதலியவைகளுக்கு உப்பை வறுத்து ஓர் துணியில் பொதிந்து வேதனையுள்ள இடங்களில் ஒற்றடங் கொடுக்க உடனே சுகங் காணும்.

2. நுரையீரல் குடல்களிலிருந்து இரத்தம் வெளிப்படுவதற்கு:—இரண்டு தேயிலைக்கரண்டி உப்பை வாயிலேபோட்டு மென்று தின்னவேண்டியது. அதற்கு முடியாவிடில் உப்பைத் தண்ணீரில் திரமாய்ப் போட்டுக் குடித்துவிட, உதிரப்பெருக்கு நின்றுவிடும். இரத்தவாந்தியும் சுகமாகும்.

3. சிசுக்களுக்கு உண்டாகும் ஈளை, மாந்தம் (Croup) முதலியவைகளுக்கு. ஒரு தேயிலைக்கரண்டி உப்பை சமபாகம் தேனில கலந்து கொடுக்க மிக்க அனுகூலமுண்டு. இந்த மருந்தினால் நன்மையேயன்றி கெடுதி நேரிடாது. அனுபவித்துப் பார்க்கலாம்.

4. வயிற்றோட்டம், வயிற்றுக்கடுப்பு முதலியவைகளுக்கு. (Diarrhoea & Dysentery) சுடுதண்ணீரில் காடி (Venegar) கலந்து அதில் உப்பைக் கரைத்துக் கொடுக்க வயிற்றோட்டம், சீதபேதி முதலியவை நின்றுவிடும். இதைக் கொடுப்பதற்கு முந்தின நாள் ஒரு மேசைக்கரண்டி ஆமணக்கெண்ணெய் கொடுத்தால் கட்டாயம் குணம் காணும். கைகண்டமுறை.

5. விஷபேதிக்கு. (Cholera Morbus) முன்சொன்னபிரகாரமே வெந்நீரில காடியைக் கலந்து அதில உப்பைக்கரைத்து அதில் ஒரு தேயிலைக்கரண்டியளவு காரமான மிளகைத் தூள் செய்து கலக்கிக் கொடுக்கச் சுகமாகும்.

6. அஜீரணம், வயிற்றுப்பிசம் முதலியவைகளுக்கு. (Dyspepsia and Stomach Troubles) வயிற்றிலுள்ள நோய்களுக்கு உப்புசிலாக்கியமானது. அரைத்தேயிலைக் கரண்டி உப்பை குளிர்ந்த ஜலத்தில் கரைத்துக் காலைப் போஜனத்திற்கு முன் சாப்பிட வயிற்றிலுள்ள நோய்களெல்லாம் பறந்துபோகும்.

7. வயிற்றுவலிக்கு (Colic) ஒரு தேயிலைக்கரண்டி உப்பை அரைகோப்பை குளிர்ந்த ஜலத்தில் கரைத்துக் கொடுக்க வயிற்றுவலி உடனே தீரும்.

8. வீரிய (Tonic) விர்த்திக்கு. உப்பு மிக்க பிரயோஜனமானது.

9. பேதிக்கும் குடலைச் சுத்தம் செய்வதற்கும். (Purgative, Internal Antiseptic, & External Stimulant) உப்பில் நாலு முதல ஆறு டிராம் (தேயிலைக்கரண்டி) வரையில் கொடுக்க பேதியாகும். குடல் சுத்தமாகி பெலப்படும்.

10. தீபனகாரி. 10 முதல் 20 கிரேயின் வரை தண்ணீரில் கலந்து கொடுக்க பசி தீபனம் அதிகரிக்கும்.

11. வாந்திக்கு (Vomiting) 2 அவுன்ஸ் உப்பை வெந்நீரில் கலந்து கொடுக்க வாந்தியாகும்.

12. கிருமிகளுக்கு. (Worms) உப்பு கலந்த தண்ணீரை ஆசனவாயினுட பீச்ச, வயிற்றிலுள்ள கிருமிகள் வெளிப்படும்.

13. வீக்கம், வாதம், கீல்வாதம், சந்துவாதம், வலி முதலியவைகளுக்கு உப்பை வறுத்து ஒற்றடமு கொடுக்கலாம்.

14. நஞ்சு முறிவு. (Antedote for Poisons) காடிக்காரத்தை (Silver nitrate) விஷமிக்குமபடி தின்றவர்களுக்கும், மதுசாரம் Alcohol) மிதமிஞ்சி உண்டவர்களுக்கும் உப்பைக் கொடுக்க விஷம் முறிந்துவிடும்.

15. சமுத்திர ஸ்நாநம். (Sea-bath) சமுத்திர ஸ்நாநம் செய்யவேண்டியவர்கள் அரை... உப்பை ஒரு தொட்டி ஜலத்தில் கரைத்து ஸ்நாநம் செயவதால் சுத்தமாகி அழகும் பலமும் உண்டாகும்.

16. பல் துலக்க. (Tooth-wash) உப்பு பல்லிலுள்ள அழுக்கை (Tartar) அகற்றும். உப்பையும் சோடாவையும் சமபாகம் கலந்து பல் துலக்குவதற்காக உபயோகிக்கும பல்பொடியாக்கலாம்.

17. வாய் கொப்பளிக்க. (Mouth-wash) உப்பை ஜாஸ்தியாய்த் தண்ணீரில் கலந்து வாய் கொப்பளித்தால் ஈறுகளுக்கு உறுதியுண்டாகும்.

18. சுளுக்கு வீக்கங்களுக்கு. (Sprains & Swellings) உப்புத்தண்ணீரை தாராளமாய் விட்டுக் கழுவ வீக்கம் வற்றி சுளுக்கு நீங்கிப்போகும்.

19. முடிவளர். (Hair Tonic) உப்புத் தண்ணீரினால் முடி நன்றாய் வளரும்.

20. பீனிசத்திற்கு. (Catarrh) உப்புத் தண்ணீரைக் கையில் விட்டுக்கொண்டு நாசியினால் உறிய பீனிசம் நிவர்த்தியாவதுடன் இன்புளூயென்சா எனப்பட்ட சுரங்கள் வரவொட்டாது. பார்த்தால் வெளிக்கு அற்பமாகத் தோன்றும். இம்முறை பீனிசத்தை நிவர்த்தியாக்கும் உன்னத ஔஷதமென்பதை அறியவும்.

21. கண் கழுவ. (Eye-wash) கண்வலி, கண் வீக்கம், முதலியவைகளுக்கு அடிக்கடி உப்புத் தண்ணீரினால் கழுவி வந்தால் வியாதி நீங்கி பார்வை தெளிவாகும். பரீக்ஷித்துப் பார்க்கவும்.

22. சீத சுரத்திற்கு. (Ague) அரை அவுன்ஸ் உப்பைத் தண்ணீரில் கரைத்துக் கொடுக்கவும்.

23. ஈழை ரோகத்தாலுண்டாகும் (Hives) நமைச்சலுக்கு உப்புத் தண்ணீரில் ஸ்நாநம் செய்ய நீங்கும்.

24. நெஞ்சேரிவுக்கு. (Heart-burn) சிறிது உப்பை வாயில் போட்டு உமிழ்நீரைக் குடித்துக் கொண்டிருந்தால் நெஞ்செரிவு விட்டுவிடும்.

25. தொண்டைப்புண். (Sore-throat) உப்புத் தண்ணீரை வாயில் விட்டுக் கொப்பளித்துக் கொண்டிருந்தால் தொண்டைப் புண் மாறிவிடும். வேறு ஔஷதம் தேவையில்லை.

26. உரம். (Manure) நஞ்சை, புஞ்சை, தென்னமரம் முதலியவற்றிற்கு உப்பை உரமாக உபயோகிப்பது உலகவழக்கம்.

27. தீனிக்கு. மனிதரின் ஆகாரங்களில் உப்பைச் சேர்த்துக் கொள்வதுபோலவே ஆடு மாடுகளின் தீனியிலும் உப்பைச் சேர்த்தால் தீனியின் ருசி அதிகரிக்கும். இரத்தம சுத்தியாகும். மலஜலம் நன்றாய் வெளியாகும் வியாதி அணுகாது. வயிற்றிலுள்ள பூச்சிகள் மடியும். ஆட்டுக்கு வரும் வைக்கை நோய் வாராது. சொறி, மயிர் உதிர்தல் முதலியவை யிராது. பால் அதிகரிக்கும். பசுமாட்டிற்குத் தீனியோடு உப்பைக் கலந்து போட்டால் பால் விர்த்தியாகும்.

## கெரோசின் எண்ணெய். (Kerosine Oil.)

1. விஷ முறிவு. நஞ்சான பூண்டுகளை உட்கொண்டவர்களுக்கு விஷம் நீங்குமளவும் மண்ணெண்ணெயை சரீர முழுவதிலும் தேய்க்க சுகங்காணும்.

2. பொடுகு. (Dandruff) சிறிது மண்ணெண்ணெயுடன் கிளிசரின் (Glycerine) கலந்து பூச்சிவெட்டிய இடத்தில் தேய்த்து வர பொடுகு நீங்கிவிடும்.

3. பேன். (Lice) பேன்பற்றிய இடத்தில் மண்ணெண்ணெய் தேய்க்க பேன் முதலிய ஜந்துக்கள் அழிந்துபோகும்.

4. தொண்டைப் புண், ஈளைக்கு. (Quincy, Croup, Diphetheria) மண்ணெண்ணெயை உள்ளும் புறம்பும் உபயோகிக்கலாம்.

5. சுவாசசயப் புண்ணுக்கு. (Sore-Lungs) மண்ணெண்ணெயில் பத்து துளியை தினம் மூன்று அல்லது நான்கு தடவை உள்ளுக்குச் சாப்பிட்டு வருவதுடன், ஓர் துணியில் மண்ணெண்ணெயைத்தோய்த்து இரவில் படிக்கப்போகுமுன் மார்பில் சுற்றிக் கட்ட நுரையீரலின் அழற்சி நீங்கி புண் ஆறும்.

6. ஜலதோஷம். (Colds) சர்க்கரைக் கட்டியில் ஒரு சிறு துண்டெடுத்து அதில் பத்து துளி மண்ணெண்ணெயைவிட்டு இரண்டு அல்லது மூன்று மணிக்கொருதடவை சாப்பிட்டு வருவதுடன், தொண்டையிலும் மார்பிலும் மண்ணெண்ணெயைத் தேய்க்க சுகமாகும்.

7. பல்வலிக்கு. (Tooth-ache) சிறிது பஞ்சை மண்ணெண்ணெயில் நனைத்து சொத்தைப் பல்லின் துவாரத்தில் அமுக்கி வைக்க பல்வலி நீங்கும்.

8. பாம்பு கடிக்கு. (Snake-bite) கடித்த விடத்தை மண்ணெண்ணெயில் அமிழ்த்தி வைக்க விஷம் வெளியாகிவிடும்.

9. சொரிசிரங்கு முதலிய சர்ம ரோகங்களுக்கு:- மண்ணெண்ணெயும் ஒலிவ எண்ணெயும் சமன கலந்து தேய்க்க சரீரத்தின் மேலுண்டாகும் சொரி, சுண்டு, தினவு முதலிய சர்வ சர்மரோகங்களும் நீங்கும்.

10. தேமற்படை, படர்தாமரை, வண்கேடி, முதலிய மேகப்படைகளுக்கு:—சுத்தமான மண்ணெண்ணெயை அடிக்கடி மேலில் தடவி சில மணி நேரங்களுக்குப் பின் சவுக்காரம் வெந்நீர் முதலியவைகளினால் எண்ணெய் தடவிய பாகத்தைச் சுத்திசெய்து வர பிரயோஜனமடையலாம்.

11. எறும்புப் புற்றுக்கு:—சிறிது மண்ணெண்ணெயை விட்டால் காரந் தாங்காமல் எறும்புகள் மாண்டுபோகும். மூட்டைப் பூச்சிகளு மப்படியே.

12. தூர்க்கந்தம் நிறைந்த சாக்கடைகளில் மண்ணெண்ணெயை ஊற்றினால் மலேச்சுரம், பிளேக் முதலியவைகளைப் பிறப்பிக்கிற விஷக்கிருமிகளைக் கொல்லும் சக்தி இதற்குண்டு.

13. வாதரோகத்திற்கு. (Rheumatism) நோயுள்ள இடத்தில் மண்ணெண்ணெயைத் தாராளமாய்விட்டுத் தேய்க்க வேதனை அடங்கும்.

14. மூட்டைப்பூச்சி கொல்லி. (Bed-bug Destroyer) (Oil of Pennyroyal) ஆயில் ஆவ் பென்னிராயல் ஒரு அவுன்ஸ், ஸ்பிரிட் ஆவ் டர்பன்டைன் (Spirit of Turpentine) ஒரு பெரிய சீசா (quart.) மண்ணெண்ணெய் 3 பெரிய சீசா இவைகளைக் கலந்து வைத்துக்கொண்டு எந்தெந்த இடங்களில் மூட்டைப் பூச்சி வாசஞ்செய்து முட்டையிடுமோ அந்தந்தயிடங்களில் விட்டுவர அவைகள் அடியோடு நாசமாகும். முட்டைகளும் அழிந்து போகும்.

15. (Kerosine Emulsion) கெரோசின் எமல்ஷன் சாதாரண சோப் (Common Soap) அரைப்பவுண், தண்ணீர் இரண்டு பெரிய சீசா (Two quart) கெரோசின் எட்டுப் பெரிய சீசா. சுத்தமான ஜலத்தில் சோப்பைச் சீவிப்போட்டு அது முழுவதும் கரையும்வரை அடுப்பேற்றி நெருப்புப் போடவும். அதன்பின்பு சோப்புத் தண்ணீரை அடுப்பிலிருந் திறக்கி வெகு தூரத்திற் கப்பால் வைத்து சூடிருக்கும்போதே எட்டு பெரிய சீசாவிலுள்ள மண்ணெண்ணெயைச் சன்னஞ் சன்னமாய் விட்டுக் கிளறிக்கொண்டே யிருக்கவேண்டியது. அதன்பின்பு அதை நன்றாய்க் கடைந்து கொண்டிருந்தால் வெண்ணெய்போல் முழுவதும் மாறிவிடும். இந்த எமல்ஷனில் ஒருபாக மெடுத்து பதப்பாகம் தண்ணீர் விட்டு நன்றாய்க் கலந்து விட்டுப்பக்கங்களிலுள்ள கோழிக்கூண்டு முதலிய பூச்சிகள் உண்டாகக்கூடிய இடங்களில் தெளித்தால்

பூச்சிகளெல்லாம் செத்து சுத்தமாகும். டல் பூண்டுகளிலும் பூச்சிகள் விழுந்தால் இதைத் தெளிக்கலாம். மேற்படி கலப்போடு ஒரு பயிண்டு கர்பாலிக் ஆசிட் (Crude Carbolic Acid) கலந்து வைத்துக்கொண்டால் பினைலுக்குப் பதிலாக வீடுகள் சாக்கடைகள் கக்கூசுகள் முதலியவைகளைச் சுத்தம் பண்ணுவதற்கு உபயோகிக்கலாம்.

## கருநொச்சி.

வீட்டுத் தோட்டங்களில் இருக்கவேண்டிய செடிகளில் இது ஒன்று. அது இருக்கும் இடங்களில் விஷப் பூச்சிகள் அணுகாது. இலையை துணிகளோடு வைத்தால் பூச்சிகள் சேராது. அரிசி மூட்டையில் போட்டு வைத்தால் வண்டுகள் அணுகாது. பிரசவித்த ஸ்திரீகளுக்கும் சுரம் முதலியநோய்களில் அழுந்தி சுகமானவர்களுக்கும் கொஞ்சம் நொச்சியிலையை ஒரு தவலை தண்ணீரில் காய்ச்சி ஸ்நானம் செய்து வைப்பது நாட்டுவழக்கம். இதனிலையை வதக்கி சில்வாதம், கை கால்களில் திமிர் முதலிய வாதங்களுக்கு ஒற்றடமிடலாம். நொச்சிச் சாற்றை கட்டிகளின்மேல் பற்றப் போட்டு வந்தால் கரைந்து வீக்கங்கள் தணியும். நொச்சிச் சாற்றை தலைநோய், பிடரி, நரம்பிழுப்பு முதலிய சீதளத்தால உண்டாகும் வியாதிகளுக்குத் தடவி நன்றாய்த் தேய்ப்பதினால் நிவர்த்தியாகும். வீடுகளின் மூலைகளில் போட்டு வைத்தால் சில்லரைப் பூச்சிகள் அணுகாது. படுக்கைக்குக் கீழ் பரப்பி வைத்தால் மூட்டைப் பூச்சிகள் வாராது.

---

## காயங்கள் (Wounds.)

திடீரென்று ஏற்படக்கூடிய ஆபத்துகளில் காயப்படுதல் ஒன்றாகும். ஆதலால் அவைகளுக்கு சமயோசித சிகிச்சை தெரிந்திருக்க வேண்டும். காயங்கள் இருவகைப்படும் அதாவது:—

1. உட்காயங்கள். அதாவது, சரீரத்தினுட் பாகத்தில் ஏற்படக்கூடியவைகள் வெளிக்குத் தோன்றாது.

2. வெளிக்காயங்கள். அதாவது, தோல்கிழிந்து சரீரத்திற்கு வெளியில் இரத்தம் பாயும்.

காயத்திலிருந்து இரத்தம் கசிந்து கொண்டிருக்குமாயின் சுத்தமான துணியைக் குளிர்ந்த ஜலத்தில் நனைத்துப் போட்டுக் கொஞ்சநேரம் அமுக்கிப் பிடித்துக்கொண்டிருந்தால் இரத்தப் போக்கு நின்றுவிடும். அப்படி நிற்காத பக்ஷத்தில் அவ்விரத்தம்

வரும் பிரதான இரத்தக் குழாய் எதுவோ அதைத் துணியினால் லேசாகக் கட்டி உயர்த்திப் பிடித்துக் கொண்டிருந்தால் இரத்தம் வெளியாகாமல் நிற்கும். காயத்தில் மண் முதலிய அழுக்கு ஒட்டியிருந்தால் இளவெந்நீரினால் அதைக் கழுவிப் போடவேண்டும். பெரிய இரத்தக்குழாய்கள் சேதப்பட்டு இரத்தம் பீறிட்டு வெளியானால் காயத்தின்மேல் விரல்களை வைத்துப் பலமாய் அமுக்கிப் பிடித்துக்கொள்வதுடன், காயப்பட்ட இடத்திற்குச் சமீபத்திலுள்ள இரத்தக்குழாயைத் துணியினால் கட்டவேண்டும். கயிற்றினாலாவது அதிகம் இறுக்கியாவது கட்டக்கூடாது. இதற்காக ஒரு பங்கு கர்பாலிக் ஆஸிடில் 40 பங்கு சுத்த ஜலம் கலந்து அதில் சுத்த மெல்லிய துணியை நனைத்து காயத்தின்மேல் வைத்துக் கட்டுவது உத்தமம். ஆனால் இதைத் தயார் செய்யுமுன் காலதாமதமில்லாமல் சுறுசுறுப்புடன் கிடைக்கக்கூடிய சுத்த துணியை சுத்தஜலத்தில் நனைத்தாவது கட்டி இரத்த ஓட்டத்தை நிறுத்தப் பிரயாசப்படவேண்டும். ஏனெனில் இரத்தமே உயிர். இரத்தம் வெளியேறிக் கொண்டிருந்தால் உயிர்க்குச் சேதமாகும். ஆகையால் தைரியத்துடனும் ஜாக்கிரதையுடனும் இரத்தத்தை நிறுத்தவேண்டும். அதன்பின் டாக்டருக்கு அனுப்பவேண்டும்.

டாக்டர் இல்லாத இடத்திலுள்ளவர்கள் கர்பாலிக் ஜலத்தில் நனைத்துப் பிழிந்த பஞ்சினால் காயத்தைச் சுத்தம் செய்து ஏழு பங்கு பொராசிக் ஆசிட் (Boracic Acid) உடன் ஒருபங்கு ஐடோபாரம் (Iodoform) கலந்த பொடியைக் கொஞ்சம் பஞ்சினால் எடுத்துக் காயத்தில் தூவி அதன் வாயைப் பொருந்தும்படியாய் அழுத்தி மூடி அதற்குமேல் கர்பாலிக் ஜலத்தில் நனைத்துப் பிழிந்த மெல்லிய துணியில் ஒன்றின்மேலொன்றாய் ஐந்தாறு துண்டுகளைப் போட்டு மூடி அதன்மேல் பஞ்சை வைத்துத் துணியினால் கட்டவேண்டும். துணியைக் கட்டும்போது காயத்தின்மேல் போட்டிருக்கும் துணியாவது பஞ்சாவது நகர்ந்து போகாமல் பிடித்துக் கொள்ள வேண்டும். அதன்பின் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோகவேண்டும்.

காயத்தின்மேல் இரத்தம் கட்டி உறைந்திருந்தால் அதைக் கழுவக்கூடாது. ஏனெனில், அவைகளே இரத்த வெளிப் போக்கை நிறுத்தும்.

காயங்களின்மேல் சீனி, சர்க்கரை, இஞ்சி, காப்பிப்பொடி, மண்தூள், பச்சிலைகள் முதலியவற்றைப் போடுவதனால் அவைகளிலுள்ள விஷக்கிருமிகள் இரத்தத்தில் தாவி ஜன்னி பிறப்பிக்கலாம். ஆதலால் அவைகளை உபயோகிப்பது நன்றன்று. காயப்

பட்டவர்களுக்கு பிராந்தி முதலான லாகிரி வஸ்துக்களைக் கொடுத்தால் இரத்தக் குழாய்கள் விரிந்து இரத்த வெளிப்போக்கை ஜாஸ்தியாக்கும். ஆதலால் லாகிரி வஸ்துக்களைக் கொடுக்கக் கூடாது.

காயங்கள் சீக்கிரம் ஆறாமல் சீழ் வைப்பதற்குக் காரணம் அசுத்தங்களே யாதலால் கர்பாலிக் தண்ணீரை அதிகமாய் உபயோகிப்பதுடன் காயங்களைக் கைகளால் தொடுமுன், நமது கைகளையும் கர்பாலிக் தண்ணீரில் கழுவிக்கொள்ளவேண்டும்.

தற்காலத்தில் நடந்த ஐரோப்பிய யுத்தத்தில் காயங்களுக்கும், சதைமுறிவுகளுக்கும், சுளுக்குகளுக்கும், டிங்சர் அயோடின் (Tincture Iodine) உபயோகித்து வந்ததாக வாசிக்கிறோம். ஆதலால் கர்பாலிக் ஆசிட்டுக்குப் பதிலாக டிங்சர் அயோடின், பிளையர்ஸ் பால்ஸம் என்று சொல்லப்பட்ட நமது வெட்டுக் காய மருந்தை (Soothing Balsam) யாவது உபயோகிக்கக் கூடுமானால் அதிசீக்கிரத்தில் குணங் காணலாம்.

உட்காயம் கண்டவர்களை அக்கம் பக்கம் அசையாமல் மல்லாந்து படுக்க வைக்கவேண்டும். அடிக்கடி குளிர்ந்த ஜலத்தைக் குடிக்கக் கொடுக்கவேண்டும். ஐஸ் கட்டித் துண்டுகளைத் தின்னச் செய்வதும் நல்லது. ஜன்னல்களையும் கதவுகளையும் திறந்துவைத்து காற்றோட்டம் இருக்கும்படியாய்ச் செய்வதுடன், விசிறியால் விசிக்கொண்டிருப்பதும் நன்று. நோயாளி பேசக்கூடாது. பேசாமல் அமர்ந்து படுத்திருக்கவேண்டும். பிராந்தி முதலிய லாகிரி வஸ்துக்களையும், காப்பி முதலான பானங்களையும் குடிக்கக் கூடாது.

## எலும்பு முறிவு (Fracture.)

எலும்பு முறிந்திருந்தால் நாம் செய்யவேண்டிய விஷயங்களாவன :—

1. முறிந்த எலும்பின் நுனிகள் சதையைக் கிழித்துப் போடும். ஆதலால் முறிவுபட்ட எலும்பைப் பந்தோபஸ்து செய்யும் வரை நோயாளி கொஞ்சமாகிலும் அசையாமல் இருக்கவேண்டும். இடம்விட்டுப் பெயரக்கூடாது.

2. முறிவுபட்ட இடத்தில் வெளிக்காய மிருந்து அதன்வழியாய் இரத்தம் வெளியாகிக் கொண்டிருந்தால், இரத்தப்போக்கை

நிறுத்தவேண்டிய உபாயங்களைக் கையாடு. இரத்தப்போக்கை நிறுத்தினபின்புதான் எலும்பின் முறிவைப்பற்றிக் கவனிக்க வேண்டும்.

3. முறிவுபட்ட இடத்திலுள்ள துணிகளைக் கிழித்து அல்லது கத்தரித்து எடுக்கவேண்டும். கை, கால் முதலான இடங்கள் முறிவுபட்டிருந்தால் முறிவுபட்ட எலும்பின் மேல்பாகத்தையும் கீழ்பாகத்தையும் பிடித்து இழுத்துவிட்டால் எலும்புகள் தன்னிலைக்கு வரும். அப்பொழுது அதை ஒருவர் பிடித்துக் கொள்ள மற்றவர் முறிபட்ட எலும்பின் மேல்முனை முதல் கீழ் முனைவரை நீளமுள்ளதும் இரண்டு மூன்று அங்குல அகலமுள்ளதுமான இரண்டு பலகைத் துண்டுகளை எடுத்து உள் வெளிப்பாகங்களில் பக்கத்துக்கொன்றாக வைத்து பலகை அசையாதபடி துணியினால் கட்டவேண்டும். பலகைத் துண்டுகள் உடனே கிடைக்காவிடில் பக்கத்திலுள்ள ஏதாவது கம்புகள், கழிகள், குடைகள் முதலிய எந்த வஸ்துவையும் உபயோகிக்கலாம்.

---

## சுளுக்கு. (Sprains.)

இதை நரம்பு சுருண்டுகொண்டதென்று சாதாரண ஜனங்கள் உருவி நீட்டி விடுகிறதுண்டு. இது தப்பிதம். கைகால் விரல்களில் அனேகம் சிறு எலும்புகளை ஒன்றோடொன்று இணைக்கும் ஜவ்வுகளும் நரம்புகளும் உண்டு. இவைகளில் ஏதாவது அறுந்து அல்லது கிழிந்து போவதுண்டு. அதனால் அந்த பாகங்கள் வீங்கி அவ்விடத்தில் இரத்தக்கட்டிப் போவதினால் அந்தப் பாகத்தில் தடவிப் பார்த்தால் சற்று தடிப்பாயிருக்கும். இதை நரம்பு சுருண்டிருக்கிறதென்று எண்ணி உருவுவதினாலாவது மந்திரிப்பதினாலாவது சுகமாகமாட்டாது.

**சிகிச்சை.** சுளுக்கின பாகம் முழங்கை அல்லது முழங் காலுக்குக் கீழே யிருந்தால் ஒரு பாத்திரத்தில் பொறுக்கக்கூடிய வெந்நீரை வார்த்து சுளுக்கின பாகத்தை அதில் கால்மணி நேரமும் அப்புறம் அதைக் குளிர்ந்த ஜலத்தில கால் மணி நேரமும் வைத்திருந்து எடுக்கவேண்டும். வலி அதிகமாயிருந்தால் அபின் திராவக (Laudanam) த்தில் ஒரு துணியை நனைத்து வலியுள்ள பாகத்தில் வைத்து அதன்மேல் கம்பளித் துணியை நனைத்துக் கட்டி வைக்கவேண்டும். சுளுக்குள்ள பாகத்தை தொங்கவிடாமலும் எப்பொழுதும் அசையாமலும் வைத்துக்கொண்டிருந்தால் வீக்கம் சீக்கிரம் வற்றி வலி நீங்கும். சாமந்திப்பூவை வதக்கி ஒற்றடமிடலாம். அழவண யிலையை அரைத்துப் போல்டிஸ் கட்டலாம். டிஞ்சர் அயோடினையும் (Tinc-Iodine) உபயோகிக்கலாம்.

## முறிப்பெயர்வு. (Dislocation.)

ஒரு எலும்பின் முறியானது தன் ஸ்தானத்தை விட்டு நிலை பெயர்ந்து போகும்பொழுது அதைதப்பற்றி தகுந்த அறிவுள்ள டாக்டர்களுக்குத் தெரிவிக்கவேண்டும். துணியைக் குளிர்ந்த ஜலத்தில் நனைத்து முறியைச் சுற்றி வைத்துவிட்டால் அதிக வீக்கம் உண்டாகமாட்டாது. வலியும் குறையும். முறியைத் தேய்க்கவாவது உருவிவிடவாவது கூடாது. ஆயாசமிருந்தால் காப்பி, டீ, கஞ்சி முதலிய சூடுள்ள பானங்களை குடிக்கக் கொடுக்கலாம். தகுந்த டாக்டர்களே முறிபெயர்வுக்கு வைத்யம் செய்யக்கூடியவர்கள்.

## மூர்ச்சை யடைதல். (Fainting.)

ஒருவன் மூர்ச்சையடைந்துவிட்டால் உடனே டாக்டருக்கு ஆளனுப்பிவிட்டு குளிர்ந்த தண்ணீரை நெற்றியிலும் முகத்திலும் அடிக்கவேண்டும். கார்பொனேற் அம்மோனியா (Carbonate of Ammonia) என்னும் மருந்தை அல்லது நமது ஆக்கிராண உப்பை (Smelling Salt) யாவது மூக்குப்பக்கத்தில் வைத்து முகரச் செய்யவேண்டும். உடம்பிலுள்ள துணிகளைக் கழற்றி விடுக்காற்றோட்டமுள்ள இடத்தில் கிடத்தி, விசிறிகளால் விசிற வேண்டும். நோயாளியை உட்காரவாவது, நிற்கவாவது, ஜாஸ்தியாய் அசையவாவது விடக்கூடாது. ஜனங்களும் பக்கத்தில்கூடி சத்தமிடக்கூடாது. ஞாபகம் வந்ததும், காப்பி, டீ முதலான வஸ்துக்களைக் குடிக்கக் கொடுக்கவேண்டும். மூர்ச்சை யடைந்தவனுக்கு ஞாபகம் வரும்வரை உள்ளுக்கு ஆகாரமாவது, மருந்தாவது. கொடுக்கக்கூடாது. மூர்ச்சையின் காரணத்தை யறிந்து அதற்குத் தகுந்த சிகிச்சை ஏதாவது செய்யவேண்டும்.

## தீப்பட்ட காயங்கள். (Burns and Scalds.)

கட்டியிருக்கும் துணியில் தீப்பற்றிவிட்டால் ஓடக்கூடாது. உடனே கைகளினால் தேய்த்து அணைக்கவேண்டும். அல்லது ஒரு முரட்டுத் துப்பட்டியை அல்லது சாக்கைச் சுற்றிக்கொண்டால் ஜ்வாலை அணைந்துபோகும். மேலாய் அவிழ்த்தாவது கிழித்தாவது துணியை எறிந்துவிடக்கூடுமானால் அப்படிச் செய்யலாம். பக்கத்தில் ஜலமிருந்தால் கொட்டி யணைக்கலாம். அங்கு மிங்கும் ஓடுவதற்குப் பதிலாய்த் தரையில் படுத்துப் புரண்டால் அணைந்து போகும். புத்திசுவாதீனத்தைக் கைவிடாமல் தைரியமாய்ச் செய்யவேண்டிய சமயோசித முறைகளைக் கையாடி வரவேண்டும்.

நெருப்புப்பட்டவர்களுக்கு காயத்தின் வேதனையைத் தணித்து அதனாலுண்டான அதிர்ச்சியின் குணத்தை மாற்றி அதன் பின்புதான் இரணம் ஆறும்படியான பிரயத்தனம் செய்யவேண்டும். இரணத்தின்மேல் காற்றுப்படவிட்டால் வேதனையும் எரிச்சலும் அதிகரித்து இரணம் விரியும். ஆகையால் உடுப்புகளை மெல்ல இரணத்தில் படாமல் எடுத்துவிடவேண்டும். இரணத்தின்மேல் படிந்து பிடித்திருக்குந் துணிகளை அப்படியே விட்டுவிடவேண்டும். பின்னால் அதை எடுத்துக்கொள்ளலாம். மற்றத் துணிகளைக் கத்தரியினால் வெட்டி எடுத்துவிடவேண்டும். கொப்புளித்திருந்தால் அவைகளை ஊசியினால் குத்தி ஜலத்தை வெளிப்படுத்த வேண்டும். தோலைக் கிழித்துவிடக்கூடாது. அப்பால் ம்ஷுபர் பவுடர், காண்புளோர், அரூட்மாவு, அல்லது நன்றாய்த் தெள்ளிய அரிசி, அல்லது கோதுமை மாவு முதலியவைகளில் ஏதாவது மேற்படி இரணங்களில் காலணைக் கனம் அடர்த்தியாகத் தூவி அதன்மேல் சுண்ணாம்பு தெளிநீர், தேங்காயெண்ணெய் அல்லது நல்லெண்ணெய் சமபாகங் கலந்து அதில் இரண்டு சொட்டு கர்பாலிக் ஆசிட் விட்டு நன்றாய் அடித்து வரும் வெண்ணெயைத் தாராளமாகப் போட்டுப் பருத்திப் பஞ்சு அல்லது வாழைக்குருத்து முதலான மிருதுவான வஸ்துக்கள் போட்டு மூடி துணியினால் லேசாய்க் கட்டவேண்டும். வேக்காட்டின் அதிர்ச்சியினால் அதிக வருத்தம் நேரிட்டால் மேலே சொல்லிய பிரயோகங்களைச் செய்யுமுன் கொஞ்சம் ஒயினாவது, பிராந்தியாவது தண்ணீர் கலந்து கொடுக்கவேண்டும். கிடைக்காவிடில், கொஞ்சம் காப்பித்தூள் அதிகமாய்ச் சேர்த்துக் கஷாயம் இறக்கிக் கொடுக்கலாம்.

சீதளங் கண்டு கைகால் குளிர்ந்திருந்தால், படுக்கையின்மேல் கம்பளியை விரித்து அதன்மேல் கிடத்தி மேலேயும் மெல்லிய கம்பளியினால் போர்த்தி மூடவேண்டும். வெந்நீர் அடைத்த சீசாக்களை கம்பளித்துணியில் சுற்றி கால்களின் ஓரமாயும், பக்கங்களிலும் வைப்பது நலம். மூன்று வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு வயதுக்கு அரைத்துளி வீதம் அபின் திராவகம் முதல்தடவை கொடுக்கும் பிராந்தி அல்லது ஒயினுடன் கலந்து கொடுக்கலாம். இரணத்திலிருந்து துர்வாசனையாவது, சீழ் வடிவது உண்டாகாதிருந்தால் முதல்தடவை போட்ட பஞ்சை மூன்று நான்கு நாள்வரை எடுக்கக்கூடாது. திரும்ப மருந்து போடுகிற சமயத்தில் காண்டிஸ் புளுயிட் (Condy's Fluid) அல்லது கர்பாலிக் ஜலத்தினால் இரணத்தின்மேல் போட்டிருக்கும் பஞ்சை நன்றாய் நனைத்து ஊறவிட்டு ஒரு பக்கமாயிருந்து கொஞ்சங் கொஞ்சமாக எடுத்து, அந்த இடத்திலுள்ள அழுக்கை சுத்தமான ஈரத்துணியினாலாவது, பஞ்சியினாலாவது ஒத்திச் சுத்தி செய்து உடனே மறுபடியும்

தேங்கா யெண்ணெயும் சுண்ணாம்புத் தெளிநீரும் கலந்த காரன் (Carron Oil) எண்ணெய், அல்லது தைமாலும் லின்சீட் ஆயிலும் சேர்ந்த நமது நெருப்புக்காயத் தைலத்தைப் (Burns and Scalds Cure.) போட்டுப் பஞ்சினால் மூடிவிட சுகமுண்டு.

ஒரே சமயத்தில் காயம் முழுவதிலுமுள்ள பஞ்சை எடுத்து விட்டு சுத்தி செய்யக்கூடாது. அப்படிச் செய்தால் அதில் காற்றுப்பட்டு புண் கொதிப்புக் கண்டு விசாலிக்கும். ஆற நாட்செல்லும். தீச்சுட்ட புண்களுக்கும் வெந்நீர் ரணங்களுக்கும் காற்று சத்துரு. ஆதலால் காற்றுப்படாமல் சிறுகச் சிறுக எடுத்துச் சுத்திசெய்து உடனே மருந்துபோட்டு மூடி வந்தால் அதிசீக்கிரத்தில் குணமாகும். ரணம் ஆறிவரும்போது வெள்ளைப் பிளாஸ்திரி (Simple Ointment) யுடன் தேங்கா யெண்ணெய் சேர்த்து உருக்கிக் குழம்பாகச்செய்து அதில் மெல்லிய துணியைத் துவைத்து இரணத்தின்மேல் போட்டு வரலாம். துர்மாமிசம் வளர்ந்தால் மயில் துத்தத்தைத் தடவ கரைந்துபோகும். முழிகளில் அல்லது அவைகளுக் கருகில் இவ்விரணங்கள் நேரிட்டால் ஆறினபின் தழும்பு சுருங்கி, முழிகள் நீட்ட மடக்க முடியாமல் போவதுமுண்டு. அப்படி யாகாதபடி மூன்றுவிரல் அகலமுள்ள மூங்கில் பத்தைகளின்மேல் துணியை மடித்து வைத்து முழிகளை நீட்டி அம்மூங்கில்பத்தைகளின்மேல் வைத்துக் கட்டி வைக்கவேண்டும். இக்கட்டுகள் சுமார் இரண்டு மூன்று மாசங்களுக்கிருப்பது நலம். கட்டு அழுக்கானால் சுத்தமான துணி மாற்றி வைத்துக் கட்ட வேண்டும்.

தீயாவது வெந்நீராவது பட்டவுடன் தேனை அல்லது கறுப்பு மையை (Ink) அவ்விடத்தில் நன்றாய்த் தடவினால் கொப்பளமாகி ரணமாகாமல் உஷ்ணத்தின் குணம் மாறிவிடும். புளியங்கொட்டையின் மேல்தோலை முற்றின தேங்காயைத் திருகின பூவுடன் சேர்த்துப் பிசைந்து பிழிந்தால் தைலமிறங்கும். இத்தைலத்தைக் காரன் எண்ணெய்க்குப் பதிலாக உபயோகிக்கலாம்.

இரணம் ஜாஸ்தியாயிருந்து அதனால் வேதனை சகிக்கக்கூடாமல் அகோரமா யிருந்தாலும், அல்லது வேதனையைப் பாராட்டாமல் பிரமைகொண்டதுபோ லிருந்து முகம் கறுத்து அடிக்கடி குளிர்ந்த ஜலங் கேட்டால் இவை பிராணனுக்கு அபாயத்தைக் காட்டும் குறிகளென் றறிய வேண்டும்.

ஒருவன் சுண்ணாம்புக்குள் விழுந்து வெந்தால் காடி (Vinegar) யில் தண்ணீரைக் கலந்து பூசவேண்டும். கண்ணுக்

குள் சுண்ணும்பு விழுந்தால் காடியில் ஏராளமான தண்ணீர்விட்டுச் கலந்து கண்ணைக் கழுவவேண்டும். கண்ணுக்குள் அக்கினித் திராவகங்கள் விழுந்தால் சுண்ணும்புத்தெளிநீரை அல்லது பிசைச் சுண்ணும்பு (Chalk) அல்லது சுவரிலுள்ள சுண்ணும்பு அல்லது சோடாமாவைத் தண்ணீரில் கலந்து கண்ணைக் கழுவவேண்டும்.

கந்தகத் திராவகம் (Sulphuric Acid) பட்டால் தோல் கறுத்துவிடும்.

வெடியுப்புத் திராவகம் (Nitric Acid) பட்டால் மஞ்சள் நிறமாகும்.

கறியுப்புத் திராவகம் (Hydrochloric Acid) பட்டால் வெண்மை கொள்ளும்.

தீ முருகல் பாஷாணம் (Phosphorus) பட்டால் வெந்து போகும்.

சிகிச்சை. பட்ட இடத்தை சவுக்காரம், சாம்பல், அவரைப்பு இவைகளிலொன்றை வெந்நீரில் கலந்து அதனுல் கழுவி, பிறகு மெழுகு களிம்பு போடவேண்டியது. களிம்பையுந்தும் கட்டலாம்.

புதிதாய்ச் சுட்ட சுண்ணும்பு நவச்சார ஜயநீர் இவைகள் பட்டால் வெந்நீருங் காடியுங் கலந்து அதனுல் கழுவி, களிம்பு போடவேண்டியது. சவ்வீரத்துக்கு கோழிமுட்டையின் வெள்ளைக் கருவும், காடிக்காரத்துக்கு கறியுப்பு ஜலமும் விட்டுக் கழுவி பிறகு போடவேண்டியவைகளைப் போடலாம். காரமான பூண்டுகள் (Vegetable Irritants) பட்டு காணுகிறவர்க்கு துணியை வெந்நீரில் நனைத்துப் போட்டு, பிறகு களிம்பு இடவேண்டியது. காஞ்சொறி பட்டதற்கு புகையிலை ஜலம்விட்டுக் கழுவினுல் சுகமடையும்.

---

## விஷக்கடிகள். (Poisonous Bites.)

இவைகளில் முக்கியமானவை, (1) பாம்புக்கடி. (2) நாய், நரி, பூனை, எலி, ஓநாய் முதலிய மிருகங்களின் கடி. (3) தேனீ. தேள், நட்டுவக்காலி, குளவி முதலியவற்றின் கொட்டு.

இந்தியாவில் 213 தினுசுப் பாம்புகளிருக்கின்றன. அவைகளில் விஷமுள்ளவை 33 தினுசுகள் மாத்திரமே. அவைகளிலும்





கூட 2 இனுசுப் பாம்புகளின் கடிதான் மகா விஷமுடையது. அவையாவன; நல்ல பாம்பு. இது படமெடுத்து ஆடும சக்தியுடையது. மற்றொன்று விரியன் பாம்பு. இதற்குக் கூழவாலும் முக்கோணத் தலையுமுண்டு. எல்லாப் பாம்புகளின் நாசித்துவாரத்திற்குமேல் பூப்போல் மடிந்திருக்கும் செதிளுண்டு. இந்த இரண்டு விஷப்பாம்புகளுக்கு மாத்திரம் அவை கிடையாது. விஷப்பாம்புகளுக்கு மேல்தாடையில் இரண்டுபற்களுண்டு. அவைகளில் துவாரமுண்டு. அத்துவாரங்களின் மூலமாய் விஷத்தை ஆழப்பதிக்கும சக்தியுடையது.

விஷப்பாம்புகள் கடித்தால் இரண்டு பற்கள் ·· இவ்விதமாகப் பதிந்திருக்கும். இரண்டு பற்களுக்குமேல் ⁝⁝ இவ்விதமாகப் பதிந்திருந்தால் அவைகள் விஷப்பாம்புகளன்று. அல்லது விஷப் பற்களினால் உண்டான கடிகளல்ல.

இந்தியாவில் வருஷந்தோறும் சுமார் 2000 ஜனங்கள் பாம்புக் கடியினால் மரணமடைகிறார்கள். ஆதலால் பாம்பின் விஷத்திற்குத் தற்கால ஆங்கில டாக்டர்கள் உபயோகித்துவரும் ஔஷதங்களை இங்கு குறிப்பிடுவோம்.

குறிகள் :—பாம்பு கடித்தால் உண்டாகும் குறிகளாவன:— வாந்தி, குளிர்ச்சி, தோல் மஞ்சள் நிறமாவது, நாசியில இரத்தம் வடிதல், தாது மெதுவாகவும் ஒழுங்கீனமாகவும் அடித்தல், கடைசியில் ஜன்னிகண்டு பிரக்ஞையற்றுப் போகுதல், கடிபட்ட இடம் ஜல்லியில் தடிப்புண்டாகி பரவுதல், வேதனையும் அதிகமுண்டாதல்.

பரிகாரம். பாம்புதான் கடித்திருக்க வேண்டுமென்றெண்ணுவதற்கிடமிருந்தால் உடனே கையாடவேண்டிய சமயோசித சிகிச்சைகளாவன:—

1. கடிபட்ட இடத்திற்குச் சிறிது தூரத்திற்குமேல் ஒரு சிறு மரத்துண்டை வைத்து உறுதியான கயிற்றினால் இறுகக் கட்டிப் பின்பு அந்த மரத்துண்டைக் கையில் பிடித்து இரண்டு மூன்று தடவை முறுக்கி விஷம் சரீரத்தில் பரவவிடாமல் தடுக்கலாம்.

2. ஓர் கூர்மையான கத்தியை அக்கினியில் காயவைத்து சிலுவை மாதிரி கடிபட்ட இடத்தில் அறுத்து இரத்தம் வெளியேறும் வரை பிதுக்கவேண்டும்.

3. வாயில் புண்ணாவது வெடிப்பாவது இல்லாதிருக்குமானால் கடிபட்ட இடத்திலுள்ள இரத்தத்தை வாயினால் உறிஞ்சித் துப்பிவிடவேண்டும். இரத்த நாளங்களில் விஷம் ஏறினாலன்றி வேறெவ்வித மோசமும் உண்டாகாது.

4. எவ்வளவு இரத்தத்தை வெளியேற்றக்கூடுமோ அதைப் பிதுக்கி வெளியேற்றிவிட்டு பெர்மாங்கனேற் ஆவ் போட்டாசியத்தில் (Permanganate of Potash) சிறிதை காயத்திலுள் செலுத்தித் தேய்க்கவேண்டும்.

5. காயத்திலிருந்து இரத்தம் வடிதல் நின்றபின் அதை விரித்துப் பிடித்துக்கொண்டு பழுக்கக் காய்ச்சின இரும்பினால் காயத்தை நன்றாகச் சுடவேண்டும். அல்லது நெருப்புத் தணலை அதன்மேல் வைத்துச் சுடலாம். அல்லது துப்பாக்கி மருந்தை வைத்துக் கொளுத்தலாம். அல்லது கார்பாலிக் ஆசிடாவது, அக்கினித் திராவக மெனப்படும் நைட்ரிக் ஆசிடாவது ஐந்தாறு துளி அதிலுள் விடலாம். கார்பாலிக் ஆசிட் விஷத்திற்கு முறிவானதால் அதுவே சிலாக்கியம்.

6. கயிறு கட்டக்கூடாத விடத்தில் கடிபட்டிருக்குமானால் கடிவாயை யிழுத்துப் பிடித்துக்கொண்டு நாலுபுற அகலமும் அரையங்குலஆழமுமுள்ள பாகத்தை அறுத்து எடுத்துவிட்டு அப்பால் 5-வது நம்பரில் சொல்லிய பக்குவத்தைச் செய்யவேண்டும்.

7. நோயாளியை அசக்கையாகப் படுக்க வைத்து 30 துளி பிராந்தியும், 30 துளி ஸ்பிரிட்ஸ் அம்மோனியாவும் (Spirits of Ammonia) ஒரு தேக்கரண்டி ஜலத்தில் கலந்து கால்மணி நேரத்திற்கொருமுறையாக நாலைந்துதட்வை கொடுக்கவேண்டும். ஆனால் நோயாளிக்கு மயக்கமுண்டாகக்கூடிய அளவு கொடுக்கக்கூடாது.

8. விஷத்தின் குணம் அரைமணி நேரத்திற்குள்ளாகக் காணாத விஷயத்தில மேலேயிருந்து கட்டுகளைக் கொஞ்சங் கொஞ்

சமாகத் தளர்த்திவிட்டுப் பார்க்கவேண்டும். கட்டு தளர்ந்தவுடன் விஷமேறுவதா யிருந்தால் விஷத்தின் குணம் மாறும்வரையாவது அல்லது கட்டுகளி னடிப்பாகம் இரத்த ஓட்டமின்றி குளிர்ந்து கறுத்துப்போகும் வரையாவது திரும்பக் கட்டுகளை இறுக்கி வைக்கவேண்டும்.

9. தாது விழுந்து தேகத்தில் சீதளங்கண்டால் கெண்டைக் கால்களிலும் நெஞ்சிலும் கடுகுப் போல்ற்றீஸ் கட்டிப் பாதங்களிலும் விலாப்பக்கங்களிலும் வெந்நீரடைத்த சீசாக்களைக் கம்பளியிற் சுற்றி வைக்கவேண்டும். நோயாளிக்குத் தைரியஞ் சொல்லி உற்சாகப்படுத்த வேண்டும். இந்நாட்டு வழக்கப்படி தலைமயிரை விரித்துப் போட்டு நோயாளியைச் சுற்றி உட்கார்ந்து, மார்பிலும், வாயிலும், தலையிலும் அடித்து அழக்கூடாது. அதிக ஆத்திரத்தையும் துக்கத்தையுங் காட்டவுங் கூடாது.

10. பல இடத்தில் குத்திப் பார்த்து விஷமில்லையென்று தீர்மானித்துக்கொண்ட பிறகுதான் கட்டுகளை அவிழ்க்கவேண்டும். பல யிடத்தில் கீறிப் பார்ப்பதினால், அல்லது புண்வாயை முதலில் கத்தியினால் பெரிதாக்கிக் கொண்டு இரத்தத்தை வெளியாக்குவதினால், அல்லது புண்ணைத் தீயினால் அல்லது அக்கினித் திராவகத்தினால் சுடுவதினால் நோயாளி மரித்துவிடமாட்டான். விஷத்தை எடுக்காமல் ஏறவிட்டுவிட்டால் நிச்சயமாய் மரிப்பான். ஆகையால் மேற்சொன்ன உபாயங்களை பயமில்லாமலும், சுறுசுறுப்பாகவும், காலதாமத மின்றியும் செய்ய வேண்டும். எவ்வளவு சீக்கிரமாய் செய்கிறோமோ அவ்வளவு நன்மை உண்டாகும். மனிதனும் ஜீவிக்க இடமுண்டாகும். "ஆபத்துக்குப் பாவமில்லை" யென்றபடி ஜீவனுக்கு அபாயமிருக்கும்போது முன்பின் யோசிக்காமல் செய்யவேண்டும்.

இதனடியிற் கண்ட மருந்துகளையும் உபயோகிக்கலாம். உள்ளுக்கு சாராயம், நவச்சார ஜயநீர் (Liquor Ammonia) யூடிலூயின் (Eu De Luce) இவைகளில் ஒன்றை கடியுண்டவன் நிர்வகிக்கும் படியான அளவுக்கு கொடுத்துச் சுகமாவதுமுண்டு. சிலர் கடுகை அரைத்துக் கொடுத்து வாந்தியாகும்படி செய்கிறார்கள். பாம்பு கடித்த விடத்தில் கோழியின் தொடையில் ஒரு பாகத்தை யறுத்து அந்தக் கோழியை ஒட்டி வைத்தால் விஷம் கோழியில்தாவி அது செத்துப்போகும். அதன்பின்பு மறுகோழியையும் அப்படியே செய்து விஷத்தை இறக்கி ஆளைப் பிழைப்பித்ததாய்ச் சிலர் சொல்லுகிறார்கள். கடியுண்டவன் உச்சியைக் கீறி தும்பையிலை ரசத்தை அதில் விட்டுத் தேய்த்து உள்ளுக்குங் கொடுக்கலாம்.

ஆடு தீண்டாப் பாளையை அரைத்து வெள்ளாட்டுப்பாலில் கலக்கி உள்ளுக்குக் கொடுத்தால் விஷம் இறங்கிவிடும். எருக்கம்பாலை கடித்தவிடத்தில் தடவி, ஏழு முதல் பத்து துளியை மோரிலாவது தண்ணீரிலாவது கொடுத்தால் விஷம் இறங்கும்.

நொச்சி, தும்பை, குப்பைமேனி, நாய்வேளை, எருக்கிலை முதலிய இலைகளில் ஒன்றை வதக்கி ரசத்தை நசியம் செய்வது நாட்டு வழக்கம். துளசியிலை ரசத்தைக் கண்ணுக்கு அஞ்சனமிடுவதும் உண்டு. பத்திராசிக் கிழங்கு அல்லது கசப்புக் கோவைக்கிழங்கை வாங்கித் தூள் செய்து இரண்டு காசிடை எடுத்துத் தண்ணீரில் கலந்து கொடுத்தால் சாந்தியாகும்.

அருதாசெடி:—இதின் முற்றின வேரை பாம்பின் முன் போட்டால் படமெடுக்காமல் அடங்கிக்கொள்ளும். அதைக்கொண்டு தான் பாம்பாட்டிகள் பாம்பைப் பிடித்துக்கொள்ளுகிறார்கள்.

மண்ணுளிப் பாம்பு கடித்தால் நல்லெண்ணெயும் கூழும் கலந்து ஒருவாரம் வரையில் உள்ளுக்குக் கொடுப்பதுண்டு.

பச்சைத் தவளை மாமிசத்தை உப்பு, நல்லெண்ணெய் அல்லது வெண்ணெயுடன் கலந்து தின்றால் சகல பாம்பு விஷமும் தீரும். மறுதினம் வரையில் நித்திரை கூடாது.

2. மிருகங்களின் கடி:—நாய், நரி, பூனை, ஓநாய் முதலிய மிருகங்கள் பயித்தியங் கொண்டிருக்கும்போது மாத்திரம் கடித்தால் விஷமேயன்றி மற்றப்படி கடித்தால் விஷமிராது. ஆதலால் கடித்த ஜந்துவை உடனே கொன்றுவிடாமல் பிடித்துக் கட்டி வைத்து பைத்தியங் கொண்டதோ அல்லவோ என்று அறிய வேண்டியது அவசியம்.

சிகிச்சை:—பாம்புக்கடிக்குச் சொல்லியிருக்கும் சிகிச்சையைப் போல இதற்குஞ் செய்யலாம். பேய் நாய் கடித்தால் அதின் விஷம் நாலு நாள் முதல் இரண்டு வருஷம் வரை கடித்த இடத்தில் தங்கியிருந்து அதன் குணத்தைக் காட்டுந் தன்மையுள்ளதாகையால், பாம்பு விஷத்திற்குச் செய்வதுபோல் இதற்குக் கட்டை வெகு நேரம் இறுக்கி வைத்திருக்க வேண்டிய அவசியமில்லை. சிறு வயதுள்ளவர்களுக்கு சீக்கிரத்தில் குறிகள் காணும். கழுத்து, மார்பு, இவ்விடங்களிலிருக்கிற சதைகளுக்கு இசிவு காணும். தண்ணீரைக் கண்டால் பயமுண்டாகும். ஆகையால் ஜலரூபமாய் எதையும் கொடுக்கலாகாது. அரட்டல், புரட்டல், ஏக்கம், விகாரம், தளர்ச்சி, நித்திராபங்கம், தலைவலி முதலியவைகள் கண்டு, முடிவில்

மரணமுண்டாகும். ஆகலால் கடித்த உடனே சிகிச்சை செய்ய வேண்டும். அல்லது இதற்காக காருண்ய கவர்ன்மெண்டார் பற்பல இடங்களில் ஸ்தாபித்திருக்கும் நாய் கடி வைத்யசாலை என்னும் (Pasteur Institute) க்குக் கொண்டுபோய் சிகிச்சை செய்ய வேண்டும். அப்படி செய்யாவிடில் இந்த அசாத்திய ரோகம் சுகமாகாது. உயிருக்கு மோசமுண்டாக்கும்.

கடித்தவுடன் காயத்தை ஏராளமான சுத்த ஜலத்தினால் சுத்தம் செய்து காடிக்காரத்தை (Silver Nitrate or Lunar Caustic) வைத்துச் செவ்வையாய்த் தேய்க்கவேண்டியது. காயத்தின் ஆகாரம் சிறிதாயிருந்தால் கத்தியினால் கீறி சற்றுப் பெரிதாக்கிக் கொள்ள வேண்டும். அல்லது காடிக்காரத்தைத் தூள்செய்து உள்ளே செவ்வையாகச் செலுத்தலாம். காடிக்காரம் கைவசமில்லாதே போனால் இரும்புக் கம்பியைப் பழுக்கக் காயவைத்துக் கடிவாயினுள் செலுத்த வேண்டும். அல்லது கர்பாலிக் ஆசிட் (Carbolic Acid) போடலாம்.

வேதனையைத் தணிப்பதே முக்கிய பிரயத்தனமாதலால் குளோரபாரத்தை ஆக்கிராணம் செய்து வைக்கலாம். அபின், பிருசிக் ஆசிட், கஞ்சா இவைகளில் எதையேனும் கொடுக்கலாம். எருக்கம்பால் அல்லது கள்ளிப்பால் தடவுகிறதும், காயத்தின்மேல் பைசாவை வைத்து பாதரசத்தால் அடித்து, பிரண்டையுடன் மஞ்சளைச் சேர்த்தரைத்து காயத்துக்குக் கட்டுவதும நாட்டு வழக்கம். கடித்த நாயின் தலையை அக்ஷணமே யறுத்து கடிபட்டவன் சிரசின்மேல் வைத்து 101 குடம் பச்சை ஜலம் விடுவது மலையாள சிகிச்சையாம். இந்த அசாத்திய ரோகத்துக்கு, நாயுருவி முளைகளைச் சர்க்கரை சேர்த்துப் பிசைந்து கொடுத்தால, சவுக்கியப்படுமென்று சொல்லுகிறார்கள்.

எலிகடி விஷம்:—எலிகள் ஒன்றோடொன்று சண்டைசெய்து கோபமாயிருக்கையில் தேகத்தின்மேல் விழுந்து கடித்துவிட்டால் அதில் ஓர்வகை விஷமுண்டு. அதினால அமாவாசைதோறும் தேகமெங்கும் வீங்குவதும், சாமடிப்பதும், தேகத்தில் தடிப்புகள் காண்பதும் உண்டு.

சிகிச்சை:—இதற்கு உடனே கடித்த இடத்திலுள்ள காயத்தை மேற்சொல்லியபடி காடிக்காரத்தினால அல்லது பழுக்கக் காய்ச்சின இரும்புக் கம்பியினால் சுட்டு கிரமப்படி ரணத்தை ஆற்ற வேண்டும். கவலைத் தாழ்ச்சியினால் விஷம் தேகத்தில் வியாபித்து மேலே சொல்லிய துர்க்குணங்களைக் காட்டினால் பின்குறித்த மருந்தை நாள்படக் கொடுத்து வரவேண்டும்.

| | |
|---|---|
| அய திராவகம் (Steel Drops) | 1 திராம் |
| குயினை (Quinine) | 5 கிரேயின் |
| பேதி உப்பு (Epsom Salts) | 1 திராம் |
| இப்பிக்காக் ஒயின் (Vin Ipecac) | 1 திராம் |
| ஸ்பிரித் குளோரபாம் (Spts-Chloroform) | 30 துளி |
| காஞ்சிரத் திராவகம், எட்டிக்கொட்டைத் திராவகம் (Tinct-Nucis Vomic) | 40 துளி |

சுத்த ஜலம் சேர்த்து 3 அவுன்ஸ் கலந்து 2 திராம் அளவு தினசரி நான்குவேளை கொடுக்கலாம்.

குறிப்பு:—இந்த ஒளஷதத்தை சாக்கடையுடன் கூடிய வயிற்றுப்போக்கிற்கும், காய்ச்சல் கட்டியின்பேரில் வீக்கத்திற்கும் கொடுக்கலாம்.

ஓணான், அரணை:—முதலிய ஜெந்துக்களை குழந்தைகள் பிடித்து விளையாடுவதுண்டு. இவைகள் கடித்தாலும் ஒர்வித விஷம் கடிவாயில் இலகாலமிருந்து அப்பால் தேகத்தில் செல்லும் பாவுவதினால் கடித்த இரண்டொரு தினங்களுக்குள்ளாக உடம்பெல்லாம் தடித்து முள்ளை எடுத்து விடுவதுபோல் கடித்த இடத்தில் காடிக்காரமாவது, காஸ்டிக்காவது கொண்டு சுடுவதே க்ஷேமமான சிகிச்சையாகும்.

தேள், கட்டேக்காலி, தேனீ, குளவி முதலியன கொட்டினதற்கு:—கொட்டினவுடன் கொடுக்கை எடுக்காமல் கயிற்றால் கட்டிவிட்டு அடியிற் கண்ட மருந்துகளில் எதையாவது உபயோகிக்கலாம்.

நம்மில் அவாரமுள்ள ஒருசாகியின் அவாரத்தை கொட்டின இடத்தின்மேல் வைத்து அழுத்தினால் ஓடிந்த கொடுக்கு மேலே கிளம்பிவிடும். காடிக்காரம், (Silver Nitrate or Lunar Caustic) நவச்சார ஜபசீர், (Lint. of Ammonia) வெடியுப்புத் திராவகம் (Potash Nitrate) இவைகளில் வொன்றைத் தடவினால் விஷம் முறிந்துவிடும். விஷம் மேலுக்கு ஏறிவிட்டால் எதுவும் பிரயோஜனமிராது. இப்பிகாக் தூளை காரமான அம்மோனியா திராவகமிட்டுக் குழைத்துக் கொட்டின இடத்தில் பூசலாம். மேலும், மின்சாரக்கம்பியை (Electric Shock) வைத்தாவது கொட்டின விடத்தில் பிடித்தாலும் இரண்டொரு நிமிஷத்தில் நின்றுபோகும். சுத்த ரோஜா என்னப்படும் லில்லி (Lily) வெண்

புஷ்பங்களைப் புஷ்பிக்கும் செடியின் கிழங்கை உரசி கொட்டின வாயில் பூசி, நெருப்புச் சூட்டில் பிடித்தால் இரண்டொரு நிமிஷத்தில் வலி, கடுப்பு முதலிய சகலஉபத்திரவமும் நிற்கும். இதை விட சிலாக்கியமான ஔஷதம் வேறில்லை.

இதைத் தவிர, நாயுருவிப் பூண்டின் கொழுந்தைக் கசக்கித் தேய்க்கலாம்.

சுண்ணும்பு, ஓட்டடை இவைகளைச் சேர்த்து அரைத்துப் பூசலாம்.

புளியங்கொட்டையைத் தோல் நீக்கிப் பருப்புத் தெரிகிற வரையில் தேய்த்து, கொட்டின வாயில் வைத்தால் ஒட்டிக்கொள்ளும். விஷம் அதில் இறங்கின பிறகு விரையின் நிறம் மாறி விழுந்து விடும்.

உருளைக்கிழங்கைக் கத்தியினுல் சீவி அரைத்துப் போடுவதும் உண்டு.

பெருங்காயம் பூசலாம்.

கால், கைகளில் கொட்டி யிருக்குமாகுல் ஒரு பாத்திரத்தில் பொறுக்கக்கூடிய வெந்நீரை வார்த்து அதில் ஒரு சேரங்கை உப்புப் போட்டு அதனுள் கொட்டின பாகத்தைச் சற்றுநேரம் வைத்திருந்தால் வலி, கடுப்பு நீங்கும்.

தீக்குச்சிகளின் அடியில் இருக்கும் சிவந்த மருந்தை ஜலத்தில் உரைத்துப் போட்டாலும் வலி நீங்கும்.

கோழியின் மலப்புகையைக் கொட்டின இடத்தில் கொடுக்கலாமென்றும், வெள்ளை குண்டுமணி வேரை வெந்நீரில் விட்டரைத்து, பிழிந்து வடிகட்டி, பஞ்சியில் நனைத்துக்கொண்டு இடது பக்கம் கொட்டினுல் வலது மூக்கிலும், வலது பக்கம் கொட்டினுல் இடது மூக்கிலும் நசியம் பண்ணத் தீருமென்றும், நட்டுவக்காலி கொட்டலுக்கு, எட்டிவேரின பட்டையை அரைத்து பெரிய நெல்லிக்காய்ப் பிரமாணம், அரை ஆழாக்கு வெந்நீரில் கரைத்து உள்ளுக்குக் கொடுத்து, கொட்டின இடத்தில் கத்தரிக்காயைச் சுட்டுக் கட்டும்படியாயும், ஜீவரக்ஷாமிர்தத்தில் கண்டிருக்கின்றது. குளோராபாரமாவது, ஈதர் என்னும் மருந்தாவது தடவினுல், சில் விட்டு வேதனை வெகு சீக்கிரத்தில் தணிந்துவிடும். கைகண்டது.

## ஜலத்தில் அமிழ்ந்தினவர்களுக்கு சிகிச்சை.

ஜலத்தில் தவறி விழுந்தவர்கள் தமது உயிர் தப்பும்படி கைகளையும் கால்களையும் அசைப்பதினால் சீக்கிரம் களைப்புண்டாகி தண்ணீரைக் குடித்து அமிழ்ந்து விடுகிறார்கள். அப்படிக்கில்லாமல் மூர்ச்சை உள்ளடக்கி நிமாகியாய் மல்லாந்து படுப்பதுபோல் பாவனை பண்ணினால் மிதந்துகொண்டே யிருக்கலாம். இதற்கிடையில் பக்கத்திலுள்ள ஏதையாவது பிடித்துக் கரையேறலாம். இவ்வித ஆபத்துகளுக்கிடமில்லாமல் சிறுபிராயத்திலேயே நீந்தப் பழக்குவிப்பது பெற்றோரின் கடமை.

ஜலத்தில் அமிழ்ந்தினவர்களுக்கு உயிர்ச்சேதம் ஏற்பட்டுவிட்டதென்று நினைத்துவிடக்கூடாது. கால்மணி, அரைமணி நேரம் வரை ஜலத்தில் அமிழ்ந்தி யிருந்தவர்கள் பிழைத்திருப்பதாகவும் தகுந்த அத்தாட்சி யிருக்கிறது. உடனே டாக்டருக்கும், கம்பளி, துப்பரவான வஸ்திரங்களுக்கும் ஆளனுப்பிவிட்டு, சுவாசம் விடச் செய்வது முதல்காரியமாகச் செய்யவேண்டும். அதன் பின்பு உஷ்ணமுண்டாகி, இரத்த வோட்டம் பாவுதற்கான வழிகளைச் செய்யவேண்டும்.

1. நோயாளியைக் குப்புறக் கிடத்தி அவன் நெற்றியை அவனது வலது முன்னங்கையில் வைத்து வாய் வழியாக ஜலம் வெளியேறும்படி இரண்டொரு நிமிஷம் அப்படிக் கிடக்கச் செய்ய வேண்டும்.

2. ஒரு பெரிய துணியை எடுத்து மடித்து, அல்லது ஒரு தலையணையை நெஞ்சிற்கும் வயிற்றிற்கும் அடியில் வைக்க வேண்டும்.

3. நாசித்துவாரங்களையும், வாயையும் நன்றாய்த் துடைத்துச் சுத்தம் செய்துவிட்டு வாயைத் திறந்து நாக்கைப் பிடித்து வெளியே யிழுத்து, ஒரு துணியினால் அதைத்தாடையோடு சேர்த்துக் கட்ட வேண்டும். நாக்கு நழுவி மறுபடியும் வாயிற்குள் போகும்படியாய் விட்டுவிடக்கூடாது.

4. அதிசீக்கிரமாக நனைந்த துணிகளைத் தளர்த்திவிடவேண்டும். கூடுமானால் அவற்றை எடுத்துவிட்டு வேறு வஸ்திரம் போடவேண்டும்.

5. பிற்பாடு நுரையீரலினுள் சுவாசக்குழாயின் வழியாய்ப் போய்த் தங்கியிருக்கும் தண்ணீரானது வெளியேறத் தக்கதாக

அவன்மேல் முட்டுப்போட்டு அல்லது அவனுடைய விலாப்பக்கங்களைக் கையினால நன்றாய் அமுக்கி ஆறு எண்ணும்வரை வைத்திருந்து பிற்பாடு அவனை உருட்டி அப்படியே அமுக்கவேண்டும். இப்படித் திரும்பத் திரும்ப அமுக்குவதனால் சுவாசப்பை, சுவாசக் குழாய்கள், நெஞ்சு, வயிறு முதலான யிடங்களிலுள்ள ஜலம் வெளியேறும். ஜலமை வெளிபேறும்வரை இப்படிச் செய்ய வேண்டும்.

## 6. உயிர்ப்பித்தல். (Artificial Respiration.)

(1) சரீரத்திற்குள் சென்றிருக்கும் ஜலம் வெளியானதும் சுவாசமுண்டாகவும், நாடிகள் அடிக்கச் செய்யவும் முயற்சிக்க வேண்டும். இதற்காக நோயாளியை மல்லாந்து படுக்க வைக்க வேண்டும். தலைக்கடியில் ஒன்றும் வைக்கக்கூடாது. கால்களைச் சிறிது உயர்த்தி வைக்கவேண்டும்.

(2) சரீரத்தின் மேலுள்ள எல்லா உடைகளையும் நீக்கிவிட வேண்டும்.

(3) ஒரு தலையணையை முதுகுப் பக்கத்தில் இரண்டு தோள் பட்டைகளுக்கும் நடுவில் வைத்து தோள்களை உயர்த்தவேண்டும்.

(4) நோயாளியின் தலைப்பக்கத்தில் முழந்தாளிட்டின்றுகொண்டு நோயாளியின் முழங்கைகளைப் பிடித்துக்கொண்டு நேரே தலைக்கு மேலாக மெதுவாய் உயர்த்தி ஒரு விநாடி வைத்திருந்து திரும்ப அவைகளைக் கீழே விலாப் பக்கமாகக் கொண்டு வந்து அவைகளை இரண்டொரு நிமிஷம் விலாவுடனே அமுக்கவேண்டும். இவ்விதமாக ஒரே அளவாய் நிமிஷத்திற்கு பன்னிரண்டு, பதினைந்து தடவை செய்யவேண்டும். இப்படிச் செய்வதால் கையைத் தலைக்குமேல் உயர்த்தும்போது சுவாசம் நுரையீரலுக்குள் தாவிச் சென்று, கைகளைக் கீழே கொண்டு வந்து விலாவோடமுக்கும் போது சுவாசம் வெளியே போகும். இவ்விதமாகச் செய்து வரவே, பத்து அல்லது பதினைந்து நிமிஷத்தில் சுவாசம் சுயமாக ஸ்தாபகமாகி விடுவதுமுண்டு சுபாவ சுவாசம் வந்துவிட்டதென்று நிறுத்திவிடக்கூடாது. சுபாவ சுவாசமும் நம்முடைய முயற்சிகளும் ஒன்றுபோல் நடக்கவேண்டும்.

7. இவ்விதமாகச் செய்து சுவாசம் உண்டானவுடனே பக்கத்திலுள்ள சிலரைக் கொண்டு, கால், தொடை, வயிறு, விலா முதலான பக்கங்களை மேல்நோக்கித் தேய்க்கச் சொல்லவேண்டும்.

மற்றொருவரை கார்பனேட் ஆவ் அம்மோனியா (Smelling Salt) என்ற மருந்தை எடுத்து நாசித்துவாரங்களில் அடிக்கடி காட்ட வேண்டும். வேறொருவர் குளிர்ந்த ஜலத்தை எடுத்து அடிக்கடி முகத்திலும் நெற்றியிலும் பலமாய் அடிக்கவேண்டும்.

சுய சுவாசம் சரியானபடி ஏற்பட்ட பிறகு அரை அவுன்ஸ் பிராந்தியை அரை அவுன்ஸ் ஜலத்தோடு கலந்து கொஞ்சங் கொஞ்சமாய் வாயில்விட்டுக் குடிக்கச் செய்ய வேண்டும். கம்பளியினால் நோயாளியை மூடி வைக்கவேண்டும். அநேக பெரிய சீசாக்களில் வெந்நீர் நிரப்பி நன்றாய் மூடி கால்களினிடையிலும் வெளிப் பக்கத்திலும் வைக்கவேண்டும். இப்படிச் செய்வதினால் உடம்பில் சூடுண்டாகும். சீசாக்கள் கிடைக்காத பக்ஷத்தில் செங்கல் கட்டிகளைக் காயவைத்து, அல்லது மணலை வறுத்துக் கட்டிப் பக்கங்களில் வைக்கலாம். ஆனால் சரீரத்தில் பட்டுப் புண்ணாகிவிடாமல் ஜாக்கிரதையாய் வைக்கவேண்டும்.

9. இனிமேல் நோயாளியை நித்திரை செய்யவிடலாம். கூச்சலிட்டு ஒருவரும் பேசக்கூடாது. ஆள் கூட்டமும் ஆகாது.

10. குறைந்தது நாலைந்துமணி நேரம்வரை ஆட்கள் கூடவிருந்து பார்த்துக்கொண்டிருக்க வேண்டும். ஏனென்றால் மூச்சு மறுபடியும் நின்றுவிடக்கூடும். அப்படி நின்றுவிடில் மறுபடியும் முன்போல் ஆரம்பித்துச் செய்யவேண்டும்.

## தகாத வஸ்துக்களால் நேரிடும் அபாயங்கள்.
## (Accidents with Foreign Substances.)

குழந்தைகள் தமது கையில் அகப்படும் வஸ்துக்களை தமது வாயில் போடுவது வழக்கம். சில சமயங்களில் அவற்றை விழுங்கி விடுவார்கள். ஆகலால் நாணயங்கள், ஊசிகள், பொத்தான்கள், சிப்பிகள், பேனாக்கத்திகள், உருண்டைக் கற்கள், திமபள், கோலி வகைகள், புளியங்கொட்டை முதலிய வஸ்துக்களை எடுத்து வாயில் வைக்கும் வழக்கத்தைப் பெற்றோர் கவனிக்கவேண்டியது அவசியம். இவற்றில் ஏதேனும் தொண்டைக்குள் சென்றுவிட்டால் வாயைத் திறந்து ஒரு மரச் சக்கையைப் பற்களின் ஒரு பக்கத்தில்கொடுத்து வாயை விரிவாக்கித் தொண்டைக்குள் விரலை விட்டுப் பார்த்தால் விழுங்கின வஸ்து விரலில் மாட்டிக்கொண்டு வந்துவிடலாம். அல்லது அதனால் வாந்தியுண்டாகி அத்துடனே மேற்படி வஸ்துவும் வந்துவிடலாம். வாந்திக்கும் வெளியாகாமல் அந்த வஸ்து வயிற்றிற்குள்ளே போய்விட்டால் அதை மலத்துட

ன் வெளிப்பேற்ற வேண்டும். இதற்காகப் பேதிக்குக் கொடுப்பது நாட்டு வழக்கம். இது மகா தப்பிதம். அப்படிக்கொடுப்பதால் மலம் கரைந்து வெளிப்பேற நாணயம் முதலியவை உள்ளே தங்கிக் கொள்ளும். திரும்பப் பேதிக்குக் கொடுத்தால் பலவீனமுண்டாகும். ஆகையால் பேதிக்குக் கொடாமல் அதற்கெதிரிடையாக மலங்கட்டும்படி ஏற்பாடு செய்யவேண்டும். இதற்காக ஜாதிக்காயைப் பாலில் உரைத்துக் கொடுக்கலாம். ஆரோரூட்மா முதலிய மாவுக்களஞ்சிகளைக் கெட்டியாகக் காய்ச்சிக்கொடுக்கலாம். ரொட்டி, சோறு முட்டை முதலியவைகளையும் கொடுக்கலாம். இவற்றால் மலம்பெருகி இறங்கும்போது அதனுள்ளே மேற்படி வஸ்துவும் சேர்ந்து வந்துவிடும்.

மீன்முள், ஊசி, ஆணி முதலிய கூர்மையான வஸ்துக்களை விழுங்கிவிட்டால் தொண்டையில் கைவிட்டு மெல்ல எடுக்கவேண்டும். இரும்பு வஸ்துக்களை ஊசிக்காந்தத்தினால் வெளிப்பேற்றலாம். வயிற்றுக்குள் போய்விட்டால் மலங்கட்டும்படி முன்சொல்லிய பிரகாரம் செய்து மலத்துடன் வெளிப்பேற்றலாம். இப்படிச் செய்வதினால் குடலுக்கு அபாயமிராது. ஜாதிக்காய் உபயோகிப்பதுடன் பெரிகாரிக் (Peregoric or Tinc. Camp. compound) ஐந்து துளி ஒருதேக்கரண்டி ஜலத்தில் தினம் நாலைந்துவேளை கொடுத்துக்கொண்டு வந்தால் மலம் இறுகும்.

சுண்ணாம்பை விழுங்கிவிட்டால் உடனே வாயில் ஒதுங்கியிருக்கும் சுண்ணாம்பை எடுத்துவிட்டு காடி (Vinegar) யில் ஒரு பெரிய தேக்கரண்டி யளவு உள்ளுக்குக் கொடுக்கவேண்டும். காடி கிடைக்காவிடில் எலுமிச்சம்பழரசம் அதேயளவு கொடுக்கலாம். அதுவும் கிடைக்காவிடில் சுத்தமான நெய்யாவது நல்லெண்ணெயாவது ஒரு கரண்டி கொடுக்கலாம். அதிகம் சுண்ணாம்பு விழுங்கியிருந்தால் திரும்பவும் கால்மணி நேரஞ் சென்று அதே பிரகாரம் கொடுக்கலாம். வாய் வேக்காட்டிற்கு நல்லெண்ணெயைத் தடவவேண்டும் அல்லது கரிமஞ்சளை அரைத்துப் பூசலாம்.

வெந்நீர் அல்லது சூடான எந்த வஸ்துவையும் விழுங்கிவிட்டால் உடனே கோழிமுட்டையையும் பாலையும் சர்க்கரை கலந்து அடித்து, கால்மணி நேரத்திற் கொருதடவை ஒருமேசைக்கரண்டி யளவு கொடுத்துவர வேக்காடு தணியும்.

## தொண்டையில் அந்நிய வஸ்துக்கள் சிக்கிக்கொள்ளுதல்.

(Foreign Substances in the Throat and, Air-Passages.)

தொண்டையில் இரண்டு குழாயுண்டு. ஒன்று போஜனம் செல்வது மற்றொன்று சுவாசக்குழாய். போஜனம் செய்யும்போது திடமென்று ஏதேனும் ஆகாரம் சுவாசக்குழாயில் சென்றுவிடும். இதற்குப் புறமேறுகிறது என்று சொல்லுவார்கள். சில சமயங்களில் வாயிலுள்ள போஜனம், அல்லது ஏதாவது வஸ்து திடீரென தொண்டைக்குள் மாட்டி சுவாசத்தை நிறுத்துவதுண்டு. சுவாசக்குழாய் திடமென்று அடைபட்டுப் போனால் பிராணனுக்கு அபாயமே. ஆதலால் உடனே வாயினுள் விரலைவிட்டு வாயிலுள்ள வஸ்துவை எடுத்துவிட வேண்டும். புறமேறினால் முதுகில் கழுத்துப் பக்கமாக குத்தவேண்டும், உச்சந்தலையிலும் தட்டலாம். இதற்கும் சரிப்படாவிடில் டாக்டரை வரவழைக்கவேண்டும். அவர் கழுத்தை யறுத்து அதிலுள்ள வஸ்துவை எடுத்து உயிர் கொடுக்கக் கூடியவர். அப்படிச் செய்யாவிடில் மூச்சு முட்டி உடனே உயிர் போய்விடும்.

## செவி, மூக்குகளில் அந்நிய வஸ்துக்கள்.

(Foreign Substances in the Ear and Nose.)

காது, நாசித்துவாரங்களில் குழந்தைகள் சிலேற்றுப் பென்சல், புளியங்கொட்டை, குன்றிமணி, ஆமணக்குக்கொட்டை, கடலை முதலிய வஸ்துக்களை செலுத்தி விடுவதுண்டு. இவற்றை எடுப்பது சிரமம். ஆதலால் உடனே டாக்டர்களிடத்தில் கொண்டு போய் விட்டால் அவர்கள் இவற்றிற்காக வைத்திருக்கும் ஆயுதங்களினால் லேசாய் வெளியே எடுத்துவிடுவார்கள்.

இரண வைத்யர் கிடைக்காத இடங்களிலுள்ளவர்கள் இரண்டொருநாள் தேங்காயெண்ணெயாவது, கிளிசரினாவது இரண்டு மூன்று துளி காலையிலும், மாலையிலும் காதுக்குள் விட்டு அடைத்து வரவேண்டும். அப்பால் சுடுதண்ணீரில் சோப்பைக் கரைத்து அந்த ஜலத்தைப் பிஸ்காரி குழாயினால் காதினுள் செலுத்தி காதை கால்மணி நேரமாவது சுத்தம் செய்து கொண்டிருக்க அழுக்கு முதலியவை முதலாவது வெளியேறி, பிறபாடு உள்ளிருக்கும் வஸ்துவும் வந்துவிடும். அப்படி வாராவிடில் பற்றுக்குறட்டினால் இலேசாய் மெதுவாய் இழுத்துவிடலாம்.

நாசித்துவாரத்தில் ஏதாவது வஸ்துவை இட்டுக்கொண்டால் வாயினுள் விரலைச் செலுத்தி நாசியின் உள்துவாரத்தை அடைத்துக்கொண்டு அடைபட்டிராத மறு நாசித்துவாரத்தில் வாயை வைத்துப் பலமாக உறிஞ்சினால் அடைபட்டிருக்கும் வஸ்து உடனே வெளியே வந்துவிடும். நமது நாட்டு ஸ்திரீகளில அநேகர் இப்பழக்கம் தெரிந்தவர்கள்.

---

## யாவரும் எளிதில் செய்யக்கூடிய கைகண்ட சில ஔஷத முறைகள்.

---

### மேகரணக்களிம்பு.

ஆமடா துரிசு துத்தம் பொரிகாரந்தான்
அப்பனே சாம்பிராணி கற்பூரத்தோடு
ஏமடா எரண்ட எண்ணெயிட்டு
இயல்பாக அரைத்திடவே களிம்பதாகும்
தாமடாபின் வளித்துச் சிமிளில் வைத்து
தப்பாமல் இலவிஞ்ச பஞ்சிலூட்டே
ஊட்டப்பா நாள்மூன்று போட்டாயானால்
உத்தமனே நீரும்வகை சொல்லக்கேளாய்
போமடா அரையாப்பு கண்டமாலை
கொடிதான நகச்சுற்று பிளவையெல்லாம்
தாமடா கண்டவுடன் சருகுபோலே
பறக்குமடா இதுஉறுதி திண்ணந்தானே.

(எரண்ட எண்ணெய்—ஆமணக்கெண்ணெய்.)

### இரத்த சுத்திக்கு.

கெட்ட இரத்தம் சரீரத்தில் பரவுவதனாலுண்டாகும் மேகப்பரு, வேனிற்கொப்பளம், காப்பன், சொரிசிரங்கு முதலிய சகல இரணங்களும் நீங்கி இரத்தம் சுத்தியாகி, தாதுபுஷ்டியும் பலமுமுண்டாகும்படி இரும்புத் திராவமாகிய (Syrup Ferri Iodide.) என்னும் மருந்தில் ஒரு அவுன்ஸ் வாங்கி அதில வயதிற்குத் தக்கது ஏறக்குறைய பதினைந்து துளியை மலச்சிக்கலுள்ளவர்கள் ஒரு தேயிலைக்கரண்டி மீனெண்ணெயிலும் (Cod Liver Oil) மலச்சிக்கலில்லாதவர்கள் அரை ஒயின்கிளாஸ் திராக்ஷாசத்தில் (Wine) தண்ணீர் கலந்தும் காலை மாலை சாப்பிட இரணங்களெல்லாம் பறந்து போய் ரத்தம் சுத்தமாகித் தாதுபுஷ்டியும் திடகாத்திரமுமுண்டாகும்.

## அஜீரணத்திற்கு.

வயிற்றுப் பொருமல், உப்பிசம், அஜீரணம், வயிற்றோட்டம் முதலிய நோய்களுக்கு மேற்சொன்ன சிரப்பெரி ஐயோடிட் (Syrup Ferri Iodide) டில் பத்துமுதல் பதினைந்து துளிவரை வயதுகருத் தக்கது அரை ஒயின் கிளாஸ் திராக்ஷரத்தில் தண்ணீர் கலந்து சாப்பிடச் சுகமுண்டாகும். சிறு பிள்ளைகளுக்கு (Chlorodyne) கிளோரடையின் அல்லது ஓமத்திராவகம் கொடுத்தல் நலம்.

## கண் புருவத்தி லுண்டாகும் மைக்கட்டிக்கு.

ஒருசிறு வெள்ளைத்துணியில் ஒரு தேயிலைக்கரண்டி சோடாத்தூள் எடுத்து அதைக் கொஞ்சம் வெந்நீரில் நனைத்து இராமுழுவதும் கண்கட்டி இருக்கும் கண்ணில் கட்டி விடியற்காலத்தில் எடுத்துப் பார்த்தால் கொஞ்சங்குறைய முழுவதும் சுகமாய்ப் போகும்.

## காதுவலிக்கு.

கொஞ்சம் கொடிக்கள்ளி இலையை விளக்கில் வாட்டிக் காதினுள் பிழிவதினால் அல்லது திருநீற்றுப் பச்சையிலையின் சாற்றை காதினுள் விடுவதினால் காதுவலி நீங்கும்.

## நெருப்புப்பட்ட புண்ணுக்கு அல்லது கொதிக்கிற நீரை கை கால்களில் கொட்டிக்கொண்டால்.

உடனே தேங்காயெண்ணெய் அல்லது நல்லெண்ணெயில் சமபாகம் சுண்ணாம்புத் தெளிநீர் விட்டு அடிக்க உண்டாகும் வெண்ணெயைப் போட சுகமாகும். நமது நெருப்புக்காயத் தைலத்தை உபயோகித்தால் உடனே சுகமுண்டாகும். விலை ரூ. 1.

## கண்ணில் தூசி விழுந்தால்.

கண்ணில் ஏதாவது தூசி துரும்பு விழுந்து உண்டாகும் கண்கரிபபை நீக்குவதற்கு இரண்டுநிமிஷம் கண்ணை மூடிக்கொண்டிருக்கவேண்டும். அப்போது உண்டாகும் கண்ணீர் தூசினை ஒரு பக்கத்தில் கொண்டுபோய்ச் சேர்த்துவிடும். அல்லது கண்ணைக் கையால் திறந்து பிடித்துக்கொண்டு இலவம் பஞ்சினால் துடைக்கக் கண்கரிப்பு நீங்கும்.

## வெறிநாய்க் கடிக்கு.

வெறிநாய் ஒருவனைக் கடித்துவிட்டால் உடனே கர்பாலி (Carbolic) என்னும் திராவகத்தினால் அக்காயத்தைச் சுடவே

டும். அதை ஒரு பஞ்சியில் தோய்த்து காயத்தின் உள்ளேவிட்டுப் பின்பு கொஞ்சம் வெந்நீரினால் அதை நன்றாய்க் கழுவவேண்டும். கர்பாலிக் திராவகத்திற்கு புண் உள்ளே எப்பக்கமும் ஊடுருவிச் சென்று,காயத்திலிருக்கும் நஞ்சை அழிக்குஞ் சக்தியிருக்கிறது. கர்பாலிக் திராவகத்திற்குப் பதிலாக பினயில், (Crude Phynyle) நன்றாய்த் தடவலாம். (Caustic Potash, Caustic Soda, Nitrate of Silver, Nitric Acid) முதலியவைகளில் ஒன்றை உபயோகிக்கலாம். ஆனால் அவைகள் அதிக வேதனையைக் கொடுக்கிறதுமல்லாமல் ஆழ்ந்த தழும்புகளையும் உண்டாக்கும். இப்படி வெறிநாய் கடித்த உடனே சுடுவதால் வேதனை சுகமாகி நஞ்சு முழுவதும் வெளியாகிவிடும்.

அக்காயங்களைச் சுடுகிறதற்கு வேண்டிய ஏதுக்கள் சமீபத்திலில்லாவிட்டால், உடனே கொஞ்சம் உப்பை நல்ல தண்ணீரில் கலந்து அதைக்கொண்டு அக்காயத்தைக் கழுவவேண்டும். காயப்பட்ட இடத்தின் மேற்பாகத்தைக் கயிற்றினால் கட்டவாவது, காயத்திலிருக்கும் நஞ்சை வாயினால் உறிஞ்சி எடுக்கவாவது, அல்லது கத்தியினால காயப்பட்ட இடத்தைச் சுரண்டவாவதுகூடாது. உறிஞ்சி எடுக்கும்போது ஒருவேளை உறுஞ்சுகிற ஆளுக்கே அந்நஞ்சு தொற்றிக்கொள்ளும். கத்தியினால் சுரண்டுவதனாலும் அவ்விஷநீர் சுரண்டப்பட்ட இடங்களிலெல்லாம் பரம்பிவிடும்.

## வாய்வுக்கு.

இஞ்சியைத் தோல் நீக்கிச் சிறுபில்லைகளாக நறுக்கிவைத்துக்கொண்டு, அதோடு வெள்ளைப்பூண்டு அரிசியையும், திராக்ஷப்பழத்தையும் சேர்த்து, மூன்றையும் சட்டியில் போட்டு வறுத்து சுரசம் பண்ணின தேனுக்குள் போட்டு, கொஞ்சம் சீனியையும் சேர்த்து ஒரு சிறு ஜாடியில் அடைத்து வைத்துக்கொண்டு, கரண்டியினால் எடுத்துக் காலை மாலை சாப்பிட்டுவர, வாய்வுநீங்கி, வயிற்றோட்டம், அஜீரணம் முதலியவை சுகமாகும்.

## சுரத்துக்கு.

கொச்சி இலையோடு ஒரு துண்டு வசம்பு சேர்த்து உரலில் போட்டு இடித்துப் பிழிந்து சாரெடுத்து காலை மாலை சாப்பிட சுரம் நீங்கும்.

பத்தியம்:—உப்பில்லாக் கஞ்சி.

## கேடோட் சென்ற சுரத்துக்குக் குடிநீர்.

நிலவேம்பு, பேய்ப்புடல், இஞ்சி, கொத்தமல்லி, சுக்கு, திராக்ஷப்பழம், மிளகு, வெள்ளைப்பூண்டு இவைகளைச் சேர்த்து ஒன்று இரண்டாய்த் தட்டி இரண்டுபடி ஜலம்விட்டு இரவில் ஊறப் போட்டு அதிகாலையில் இறுத்துச் சாப்பிட கெடோட்பட்ட சுரம், பித்தசுரம் முதலியவை நீங்கிவிடும்.

சிலருக்கு இம்மருந்து சாப்பிட வாந்தியும் பேதியுங் காணும். அதைநீ பயப்படக்கூடாது. இது என் தாயாரின் கைகண்ட அவிழ்தம்.

### ரணங்களுக்கு.

1. கரியபோளத்தோடு ரூமிமஸ்தகி சமன் சேர்த்து சமன் வெண்ணெயில்விட்டு அரைத்துப்போட சர்வ ரணங்களும் ஆறும்.

2 ஆட்டுக் கொழுப்பும், மஞ்சள் மெழுகும் உருக்கி அதில் குந்திரிக்கத்தைச் சேர்த்துக் காய்ச்சிப் போட்டுவர சகல மேகரணமும் காய்ந்துபோகும்.

### சுகபேதி மருந்துகள்.

1. சிற்றாமணக்கெண்ணெய் அல்லது நிலவாரை வெந்நீர்க் கஷாயமாவது சிறு அளவு சாப்பிட பேதியாகும்.

2. கொஞ்சம் எப்ஸம்சால்டை ஜலத்தில் கரைத்துச் சர்க்கரை சேர்த்துச் சாப்பிடலாம். அல்லது, (Eno's Fruit Salt) ஏனோஸ் புருட்சால்ட் இரண்டு காண்டியளவு ஜலத்தில் போட்டுச் சாப்பிடலாம்.

3. கொஞ்சம் கற்கண்டுத் தூளை மூன்றுபலம் வெந்நீரில் கலந்து சாப்பிடலாம்.

4. அரைப்பலம் தேனை நான்குபலம் வெள்ளாட்டுப்பாலில் அல்லது பசுவின்பாலில் கலந்து குடிக்கலாம்.

5. ஆமணக்கெண்ணெயில் நாலுதுளி எஸன்ஸ் ஆவ் பெப்பர்மின்ற் (Essence of Peppermint) விட்டுச் சாப்பிட மனதிற்கு ஆரோக்கியமான சுகபேதி அவிழ்தமாகும்.

## கை காலெரிவுக்கு.

திராக்ஷப்பழத்தைப் பிழிந்தெடுத்த ரசத்தில், இரண்டத்தனை சீனிகலந்து, காய்ச்சி ஷர்பத் செய்து வைத்துக்கொண்டு, வேளைக்கு இரண்டு ரூபாயெடை இருவேளையும ஜலத்தில் கலந்து சாப்பிட பித்தச்சூடு, கைகாலெரிவு நீர்ந்து குளிர்ச்சியுண்டாகும்.

## உஷ்ண சாந்தி.

எலுமிச்சம் பழங்களைக் கால்மணி நேரம் வெந்நீரில் போட்டெடுத்துப் பிழிந்த ரசம் ஒருபங்கும, கற்கண்டுப்பொடி அல்லது சீனி மூன்றுபங்கும் சேர்த்துப் பாகுபதமாய்க் காய்ச்சி வைத்துக்கொண்டு வேளைக்குக் கொஞ்சம்விட்டு இருபங்கு தண்ணீர் கலந்து சாப்பிட உஷ்ணம் தணியும். கீல்வாதம் தீரும். சுரத்தினால் உண்டாகும் தாகத்திற்கு சுரமிருக்கும்போதும் கொடுக்கலாம்.

## தேமற்படைக்கு.

பொன்னுவரைவேரோடு சந்தனங்கூட்டிப் பூசத் தேமற்படை மாறும்.

## கீல்வாதத்திற்கு.

எலுமிச்சம்பழச் சாற்றில் சீரகத்தை ஊறவைத்து எடுத்து உலர்த்தி வைத்துக்கொண்டு காலை மாலை வெருகடிப் பிரமாணம் சாப்பிட்டு வரப் பித்தக்காங்கை, கைகாலெரிவு, கீல்வாதம் முதலிய ரோகங்கள் தீரும்.

## ஸ்நாந நறுமணத்தூள்.

பூலாங்கிழங்கு, கஸ்தூரி மஞ்சள், சந்தனம், பச்சிலை, சடாமாஞ்சி, வாய்விளங்கம், கசகசா, கார்போக அரிசி, கிச்சிலிக்கிழங்கு, கோரன்கிழங்கு இவை சமன் சூரணித்து, ஸ்நாநம் செய்கையில் சமபங்கித்தைலம அல்லது பன்னீர் தைலத்தில் குழைத்துப் பூசி ஸ்நாநஞ் செய்துவர கற்றாழை நாற்றம் முதலிய துர்வாசனை நீங்கும்.

## மண்ணெண்ணெய் விளக்கெரிய.

இவ்விளக்குகள் சிலசமயங்களில் புகைந்தும் மங்கியும் எரிவதுண்டு. அதற்குக் காரணம் திரிகளிலடைந்திருக்கும் அழுக்கே. அவ்வழுக்கை நீக்க திரி நின்றெரியும் தகளியைச் சோடாப்பொடி கலந்த வெந்நீரில் சிறிதுநேரம் ஊறவைத்து எடுத்துக்கொள்வதுமன்றித் திரியையுங் காயவைத்து எடுத்துக்கொண்டால் பிரகாசமாய் எரியும்.

## உரத்த கபால இடிக்கு.

1. காரமான தேயிலைக் கஷாயத்தில் சிறிது எலுமிச்சம் பழச் சாற்றை யூற்றிக் குடிக்கக் கபால இடி தீரும்.

2. கஸ்தூரியஞ்சனைச் சாம்பிராணியுடன் அரைத்துப் பற்றுப் போட்டால் தலைவலிக்குத் திரமான மருந்தாகும்.

3. நொச்சிச் சாற்றை நன்றாய்த் தேய்ப்பதினால் நிவர்த்தியாகும்.

## தலைவலிக்கு ஆவி.

தும்பையிலை, வேப்பிலைக்கு, நொச்சியிலை, பேய்ப்பீர்க்கு இலை, உத்தாமணி இலை, எருக்கலம் பழுப்பு, சிறுகீரைவேர், இவைகளை சமன் நிறையாய் எடுத்து இடித்துத் தண்ணீரில் போட்டு வேக வைத்திறக்கித் தலையில் மூக்காடிட்டு ஆவிபிடித்து, ஆவி அடங்கினதின் பின் ஒரு செங்கல்லைப் பழுக்கச் சுட்டு அதிற் போட்டு மறுபடியும் முன்போல் ஆவி பிடித்தால் தேகம் வேர்த்துத் தலைப் பாரம் நீங்கும். ஆவி பிடித்தபின் காற்றில் போகலாகாது.

## ஒருத்தலைவலிக்குப் பத்து.

1. மிளகை முலைப்பாலில் அரைத்துக் கொதிக்க வைத்து பூச மாறும்.

2. எலுமிச்சம்பழத்தைச் சுட்டுச் சாறு பிழிந்து அதிற் சுக்கு, மிளகு, திப்பிலி சமன் நிறையாய் அரைத்து நெற்றியிலும் உச்சியிலும் பூசத் தீரும்.

## கைகாலி லடிபடுவதா லுண்டாகுஞ் சுளுக்குக்கு.

ஒரு சிறு துணியில் உப்பைக்கட்டி அதை நல்லெண்ணெயில் போட்டுக் காய்ச்சி, அந்தப் பொட்டலத்தை எடுத்து வேதனையுள்ள இடங்களில் ஒற்ற சுகமாகும்.

## பல் அசைவுக்கு.

அரையாழாக்கு உப்பில் பாதி எடுத்து ஒரு அகலில் போட்டு அதன்மேல் ஒரு சோரங்கொட்டையை வைத்து அதன்மேல் மறுபாதி உப்பையும் போட்டு ஒரு ஓட்டினால் மூடி, சீல் செய்து இருபது எருவில் புடமிட்டு அவ்வுப்பை எடுத்து, தினந்தோறும், பல் துலக்கியவுடன் ஆலம்விளரினால் உடனே பல்துலக்கிவர பல்லாட்டம், பல்வலி நிற்கும். பல்லும் விழுகிறதில்லை என்று கேள்விப் படுகிறோம்.

## சகல கழிச்சலுக்கு.

ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, இலவங்கம், ஏலம், அதிமதுரம், அதிவிடயம், அபின், கஞ்சா, குரோசாணி, முத்தக்காசு, வெந்தயம், சீரகம், சிறுநாகப்பூ, புளியாரை, காட்டகத்திப்பூ, மாதுளம்பிஞ்சு, வாழைப்பூ சமன் கட்டி யிடித்து அடுப்பிலேற்றி பிட்டவியலா யவித்தெடுத்து வாழைப்பூச் சாற்றிலாவது, மாதுளம்பூச் சாற்றிலாவது அரைத்து, மிளகுபோல் உருண்டைசெய்து சர்க்கரையில் கொடுக்கத் தீரும்.

(2) புளியாரை, வாழைப்பூ சமனாய் இடித்துப் பிட்டவியலாய் அவித்துச் சாறுபிழிந்து தேன் ஒரு துளிவிட்டுக் கொடுக்கத் தீரும்.

## கக்குவானுக்கு.

நாதுவலைச்சாறும், ஆவினெய்யும் சமன் கலந்து கோஷ்டம் ஒரு விராகனிடை தட்டிப்போட்டுப் பதமாய்க் காய்ச்சிக் கொடுக்கத் தீரும். மயிலிறகு, மிளகு, சாம்பல் சமன் கட்டி பொடி செய்து ஆவினெய்யில் மத்தித்துக் கொடுக்கத் தீரும்.

## சுகபேதி எண்ணெய்.

சதுள்ளி, முருங்கப்பட்டை, மூக்கரைச்சாறணை வேர் இவை கள்ச் சமனெடுத்து தட்டிச் சாறுபிழிந்து அதற்குச் சமன் விளக்கெண்ணெய் சேர்த்துக் காய்ச்சிக் கொடுக்கக் கரப்பன், சொரிசிரங்கு, மலபந்தம் தீரும்.

## மாலைக்கண்ணுக்கு.

1. மின்னிட்டான் பூச்சியையும் வெற்றிலையையும் கசக்கிக் கண்ணில் பிழியத் தீரும்.

2. மின்னிட்டான் பூச்சி, துருசு, வெள்ளைச்சாரணை வேர் சமன் நிறை எடுத்து சதாப்பிலைச் சாறு விட்டரைத்து, திரிபோல் உருட்டி முலைப்பாலில் உரைத்துப் போட்டால் தீரும்.

3. வேப்பிலையை மைப்போலரைத்துக் கோழிப்பித்திற்குக் கவசம் செய்து உமிக்காந்தலிற் சுட்டு கவசம் நீக்கி உள்ளுக்குக் கொடுத்தாலும் அல்லது மேற்படி பித்தை முன்போல்] வெதுப்பி எடுத்து மூன்றுநாள் கண்ணில் தூவினாலும் தீரும்.

4. வெள்ளாட்டுப் பித்தில் மிளகு சிலவற்றைப் போட்டு 40-நாள் கட்டித் தொங்கவிட்டு அதன்பின் மிளகை எடுத்து உரசி கண்ணில் போடத் தீரும்.

5. இலுப்பைப் பூவையாவது, காட்டாமணக்கின் முத்தையாவது, அழிஞ்சி விலரயையாவது, மகிழ வித்தையாவது முலைப் பாலில் உரைத்துப் போடத் தீரும்.

## கிருமிகளுக்கு.

புரசம்விரை இரண்டெடுத்து சாணத்தில் பொ து வைத்துக் காலையிலெடுத்து மேல் தோலை நீக்கிப் பசுவின் பில் அரைத்துக் கொடுக்கப் பேதியாகும். வயிற்றிலுள்ள பூச்சிகள் கூட்டோடு விழும்.

## சிறு கிருமிகளுக்கு.

மிதிப்பாவையிலை ஒருபிடி எடுத்து அதோடு ஆறு மிளகு வைத்து நிகழ அரைத்துக் கெச்சக்காய் பிரமாணம் கொடுக்கச் சிறுகிருமிகளெல்லாம் வெளியாகும்.

## கண்ணொளி மங்கலுக்கு.

முசலின் புளுக்கைகளையச் சுட்டுச் சாம்பலை எடுத்துப் பசுவின் நெய்யில் மத்தித்துக் கண்ணில் தீட்டிவரத் தீரும்.

## கண் புகைச்சலுக்கும் கண்ணில் ஜலம் வருகிறதற்கும்.

பொன்னாங்கண்ணிக் கீரையைச் சமைத்துச் சாப்பிட்டுவரத் தீரும்.

## மாந்தத்திற்கு.

நொணாவிலையைக் கஷாயம் வைத்துக் கொஞ்சம் சர்க்கரை சேர்த்துச் சாப்பிட்டால் மாந்தத்தை நீக்கும். சிறு பிள்ளைகளுக்குக் கொடுக்கச் சுரம், மாந்தம், புண் முதலியவைகளை நிவர்த்தியாக்கும்.

## சிரங்கிற்கு.

நீரிடிமுத்தின் பருப்பைத் தயிரில் ஊறவைத்து எலுமிச்சம் பழச் சாற்றில் அரைத்து உடம்பில் பூசி வைத்திருந்து இலுப்பைப் புண்ணாக்குத் தேய்த்துக் குளிக்க நமைச்சல், சொரியாவும் தீரும்.

## கால் வெடிப்புக்கு.

கடல்நுரை, புருயெச்சம், அரக்கு, மெழுகு, மஞ்சள், ஆலம்பால் சமனெடுத்துக் காடி விட்டரைத்துப் போத்தலில் வைத்துக் கொண்டு தினம் பூசிவர வெடிப்பு மாறும். அல்லது அரைப்படி பசுவின் பாலில் சமபாகம் தண்ணீர் சேர்த்து அதில ஒருபடி சுண்ணாம்புக் கல்லைக் கொட்டி அடுப்பேற்றிக் கொதிக்க வைத்திறக்கி

காலுக்கு வேது பிடிக்கவும். இப்படி மூன்றுநாள் காலை மாலை இருவேளை வேதுபிடிக்கக் கால் வெடிப்பு மாறும்.

## மெழுகு பிளாஸ்திரி. (Wax Ointment.)

மெழுகு 2 அவுன்ஸ், தேங்காயெண்ணெ 5 அவுன்ஸ் இவ்விரண்டையும் ஒரு பாங்கு சட்டியிலிட்டு சிறு நெருப்பின்மேல் வைத்து நன்றாய் கரையுமட்டும் அடிக்கடி விடாமல் கலக்கி பின்பு சட்டியுடனே இறக்கி வைத்துக்கொள்ளவாவது அதைச் சூடுடனே வேறொரு பாத்திரத்தில் விட்டு வைத்துக்கொள்ளவாவது செய்யலாம். இதை புண்கள் தோலுரிவு, நீப்பட்ட புண் முதலியவைகளுக்கெல்லாம் அவைகள் சவுக்கியப்பட ஆரம்பிக்கிற சமயம் சீலையில் தடவி இட்டுக்கொள்ளவும்.

## கூகைநீறு. (Arrow-root.)

கூகைநீறில் செய்யும் குழம்புபோன்ற கஞ்சி அனேக வியாதிகளில் நோயாளிக்கு தேகத்தில பெலன உண்டாவதற்கு உபயோகமாய் இருக்கின்றது. அதைச் செய்யும் விதம் எப்படியெனில், சுப்பரவும, நன்மையும், வெண்மையுமான கூகைநீறு 1 மேசைக்கரண்டி அல்லது அரை அவுன்ஸில் கொஞ்சம் ஜலத்தை விட்டு நன்றாய்ப் பிசைந்துகொண்டு அதின்பின் காய்ச்சிய கொதிக்கிற ஜலத்தை கிரமமாய் கொஞ்சம் கொஞ்சம்விட்டு முழுவதும் நன்றாய்க் கலக்கி மறுபடியும இரண்டு மூன்று மினிட்டு நேரம் அடுப்பில வைத்து மறுபடியும் கலக்கிப் பின்பு இறக்கி வைத்து அதில் கொஞ்சம் பஞ்சதாரையும் வாசனை கொடுக்கும்படியாய் கொஞ்சம் ஜாதிக்காய் அல்லது கறுவாயின் தூளும் சேர்க்கவும். ஜலத்தில் வட பசுவின் பாலில் செய்தில் பெலனை மிகுதியாய்க் கொடுக்கும், ஆனால் இது நன்றாய் ஜீரணமாகாவிட்டால் தண்ணீரே நலம். மேற்காட்டியபிரமாணம பிராயமானவர்கள் தினம் இரண்டு மூன்றுதரம் சாப்பிடலாம். அதைத் தேவையான பொழுதெல்லாம் உடனுடன் செய்துகொள்ள வேண்டும்.

## சவ்வரிசி. (Sago.)

இது நோயாளிக்கும் பலட்சியமுள்ளவனுக்கும் மிகவும் பெலனைக் கொடுக்கிற ஆகாரமா யிருக்கின்றது. அதை கீழ் சொல்லியிருக்கிற பிரகாரம் செய்யவும். அரை அவுனஸ் நல்ல சவ்வரிசியை ஆரைப்புட்டி ஜலத்தில இட்டிருந்து இரண்டுமணி நேரஞ் சென்றபின் அடுப்பில் வைத்துக் கால்மணி நேரம் வரையும் விடா

மல் கலக்கி வேக வைக்கவும். அதன்பின் கொஞ்சம் பசுவின் பாலும் பஞ்சதாரையும் அல்லது இன்பமான வாசனை கொடுக்கும் படியாய்க் கொஞ்சம் ஜாதிக்காயின் தூளையாவது அல்லது கறுவாப்பட்டையின் தூளையாவது சேர்த்துக் கொள்ளவும். அதை எப்பொழுதும் தேவையானபோதெல்லாம் உடனுடன் செய்து கொள்ளவும்.

## கோழிக்குஞ்சின் சாறு. (Chicken-Broth.)

இது எந்தக் காரணத்தினாலாவது பெலவீனத்தில வருத்தப்படும் நோயாளிக்கு பெலன்கொடுக்க உபயோகமானதாயிருக்கின்றது. அதைக் கீழ்ச்சொல்லிய பிரகாரம் சரியாய்ச் செய்யவேண்டும். ஒரு முதிர்ந்த பெட்டைக்கோழியாவது, அல்லது சேவலாவது கொண்டுவந்து அதனை இறகுகளையும் உள்ளிருக்கும் குடல் முதலியவைகளையும் நீக்கிப் பிறகு அதை ஒரு கடுக்காயின் பருப்பத்தில் துண்டுகள் செய்து இதில் ஒரு புட்டி குளிர்ந்த ஜலத்தை விட்டு ஒரு மணிநேரம் வரையும் வைத்திருந்து அப்புறம் அதில் எட்டு அல்லது பத்து வெண்டைக்காய்களைச் சிறு துண்டுகளாக அரிந்து கூடப்போட்டுச் சிறு தீயிட்டு அரைப்புட்டியாக வற்றினவுடன் வடிகட்டி அதில் பிணியாளிக்கு ருசி கொடுக்கத் தக்கதாய் உப்பும் சேர்த்து ஆறவைத்து நன்றாய் வெந்த சாதத்தில் விட்டுச் சாப்பிடவும். இதைத் தினந்தோறும் புதிதாய்ச் செய்துகொள்ளவும். குழந்தைகளுக்குப் பாதி வளர்ச்சியான கோழி ஏற்றதாயிருக்கும்.

## ஆட்டிறைச்சியின் சாறு. (Mutton-Broth.)

இது உண்டாக்குவது கோழிக்குஞ்சின் சாறு செய்வது எப்படியோ அப்படியே செய்யவேண்டும். ஒரு ருத்தல் ஆட்டிறைச்சியைப் பொடிப் பொடியாய் வெட்டி அரைப்புட்டி தண்ணீரில் இட்டு வேக வைத்துக் கொள்ளவும். இது குழந்தைகளுக்கு கோழிக்குஞ்சின் சாற்றைவிட நல்லதல்ல.

## வஸ்திரங்களில் படும் கறை முதலியவற்றை எடுக்க.

வஸ்திரங்களில் படும் கறைகளை உடனே நீக்கிவிடுவது உத்தமம். நாட்செல்லச்செல்ல அவைகள் வஸ்திரத்தில் உறுதியாய்ப் பற்றிக்கொள்வதால் பின்பு நீக்குவது கஷ்டம்.

மைக்கறை. துணிகளில் மைக் கொட்டிவிட்டால் உடனே யதைப் பாலில் ஊறவைத்துக் கசக்கினால் போய்விடும். அப்படிப் போகாத பட்சத்தில் எலுமிச்சம்பழத்தையும் உப்பையும் கறை பட்ட இடத்தில் அழுத்தித் தேய்க்கவேண்டும். மெல்லிய வஸ்திரங்களுக்கு டர்பன்றயின் (Turpentine) உபயோகிக்கலாம்.

பழக்கறை. பழக்கறை பட்டவுடன் கொதிக்கிற பாலில் துணியை முக்கி கொஞ்சநேரம் வைக்கக் கறை போய்விடும்.

இன்னொருமுறை. பழக்கறையின்மேல் உப்பைத் தேய்த்து ஓர் கோப்பையின்மேல் துணியை விரித்துக்கொண்டு அதன்மேல் கொதிக்கிற ஜலத்தை ஊற்றிக் கொண்டிருந்தால் கறை நீங்கி விடும். பழக்கறையை உடனே எடுக்காவிட்டால் நாட்செல்லச் செல்லத் துணிகளைக் கெடுத்துப்போடும். திராவகங்களால்மட்டுமே நீக்கவேண்டியது வரும்.

தேயிலை அல்லது காப்பிக்கறை. இதைச் சோப்பினால் கழுவினால் அதிகக் கறையாக்கிவிடும். துணியை மேற்சொன்ன பிரகாரம் ஓர் பாத்திரத்தின்மேல் விரித்து கொதிக்கிறஜலத்தை ஊற்றவேண்டும். ஜலத்தில் வெண்காரஞ் சேர்த்துக் கொண்டால் நலம்.

வர்ணமைக்கறை. டர்பன்றயின் (Turpentine) தைலத்தைக் கறையின்மேல தேய்த்து, ஜலம் சவுக்காரங்களால் சுத்தி செய்யலாம்.

இரத்தக்கறை. மண்ணெண்ணெயைக் கறையுள்ள இடத்தில் தேய்த்துச் சிறிதுநேரம் சென்றபின் வெந்நீரில் கசக்கவேண்டும்.

கொழுப்புக்கறை. மரச்சாமான்களில் கொழுப்புள்ள பதார்த்தங்கள் ஏதாவது பட்டால் சிறிது வெடியுப்பைத் தண்ணீரில் கலந்து அதில் தெளிக்கப் போய்விடும்.

## ஞாபகத்தில் வைக்கவேண்டியவை.

1. எந்தவித்தைப் புசித்தாலும் அதோடு உப்புச் சேர்த்துப் புசித்தால் சீக்கிரம் ஜீரணமாகும்.

2. பாலை அதிகநேரம் வைத்திருந்தால் வெண்ணெய் கசப்பாயிருக்கும்.

3. இரும்புச் சாமான்களில் துருப்பிடித்திருந்தால் அதன் மேல் மெழுகினால் துடைத்தால் சுத்தியாகும்.

4. சோடா குடிப்பதனால் அஜீரணத்தினால் உண்டாகும் தலைவலி, வயிற்றுவலி நீங்கும்.

5. வெங்காயம் தின்றபின்னிருக்கும் வாய்நாற்றமானது ஒரு கோப்பை காப்பி குடிக்க நீங்கும்.

6. இறைச்சி அதிகக் கடினமாயிருந்தால் சமைக்கும்போது சிறிது காடி ஊற்றினால் மெதுவாகும்.

7. படுக்கை அறையில் சுத்த ஆகாயம் உலாவச்செய்வதால் காலையில் தலைவலி, மயக்கம் முதலியவை வரமாட்டாது.

8. ஏதாவது ஓர் துர்க்கந்தம் கையில்பட்டால் கையைக் கடுகுத் தண்ணீரில் கழுவ நீங்கும்.

9. மயக்கம் வந்தால் மல்லாக்கப் படுக்கவைத்துத் துணியைத் தளரவிட்டு தனிமையாய் வைத்து சுத்த ஆகாயத்தைச் சுவாசிக்கச் செய்தால் மயக்கம் நீங்கும்.

## நோயணுகாவிதி. (தேரையர் வெண்பா.)

பாலுண்போம் எண்ணெய் பெறின் வெந்நீரில் குளிப்போம்
பகல் புணரோம் பகல் துயிலோம் பயோதரமும் மூத்த
வேலஞ்சேர் குழலியரோடு இளவெயிலும் விரும்போம்
இரண்டு அடக்கோம் ஒன்றைவிடோம் இடதுகையில் படுப்போம்
மூலம்சேர் கறி நுகரோம் மூத்த தயிருண்போம்
முதல்நாளில் சமைத்தகறி அமுதெனினும் அருந்தோம்
ஞாலந்தான் வந்திடினும் பசித்தொழிய உண்ணோம்
நமனார்க்கு இங்கு ஏது கவலை நாம் இருக்கும் இடத்தே.

உண்பது இருபொழுதொழிய மூன்றுபொழுது உண்ணோம்
உறங்குவது இராவொழியப் பகல் உறக்கம் செய்யோம்
மண் பரபு கிழங்குகளில் கருணை அன்றிப் புசியோம்
வாழை இளம்பிஞ்சு ஒழியக் கனி அருந்தல் செய்யோம்
பெண்கள் தமைத திங்களுக்கு ஓர் காலன்றி மருவோம்
பெருந்தாகம் எடுத்திடினும் பெயர்த்து நீர் அருந்தோம்
நண்பெற உண்டபின்பு குறு நடையும் கொள்வோம்
நமனார்க்கு இங்கு ஏது கவலை நாம் இருக்கும் இடத்தே.

ஆறு இங்கட்கு ஒருதடவை வமன மருந்து அயில்வோம்
அடர் நான்கு மதிக்கு ஒருகால் பேதியுறை நுகர்வோம்
தேறும் மதி ஒன்றரைக்கு ஓர் தரம் நசியம் பெறுவோம்
திங்கள் அரைக்கு இரண்டுதரம் சவளவிருப்பு உறுவோம்
வீறுசார் நாட்கு ஒருக்கால் நெய் முழுக்கைத் தவிரோம்
விழிகளுக்கு அஞ்சனம் மூன்று நாட்கொருக்கால் இடுவோம்
நாறுகந்தம் புட்பம் இவை நடுநிசியின் முகரோம்
நமனூர்க்கு இங்கு ஏது கவலை நாம் இருக்கும் இடத்தே.

பகற் றுழுக்கு மர்த்ரயங் காந்துடைப்பம் இவைத்தூள்
படநெருங்கோம் தீபமைந்தர் மர நிழலில் வசியோம்
சகப் புணர்ச்சி அசனப் பசனத் தருணம் செய்யோம்
துஞ்சல உணவு இருமலம் சையோகம் அழுக்கு ஆடை
வகுப்பு எடுக்கில் சிந்து கசம் இவை மாலை விடுப்போம்
வறசலம தெய்வம் பிதுர் சற்குருவை விடமாட்டோம்
நகச்சலமு மூளைச்சலமும் தெரிக்கும் இடம் அணுகோம்
நமனூர்க்கு இங்கு ஏது கவலை நாம் இருக்கும் இடத்தே.

வாழி.

வாழ்க மாதவர் மாநில மன்னவர்
வாழ்க பேரின்ப பாரத மாதாவும்
வாழ்க இல்லற வாசிகள் யாவரும்
வாழ்க நீடூழி வாழி யனைத்துமே.

எல்லோரும் வாழ்க எம் நாடும் வாழ்கவே
இந்த மானிட மர்ம சாஸ்திரம் வாழ்க
இதை வாசிப்போரும் கேட்போரும் வாழ்ந்திட
ஈசனே க்ருபைசெய்யும் நீர் தஞ்சமே.






BOOK I. முதலாம் புஸ்தகம். (பக். 49—308.

மானிட ஜீவியத்தின் நான்கு பருவங்கள். (ஓர் உபந்நியாசம்.)

(THE FOUR STAGES OF LIFE.)

1. கீச்சிக் கீச்சிப் பருவம். (Early Education.)

2. கீயாக் கீயாப் பருவம். (வளரும் பருவம்) வாலிபப்பருவத்தின் மோசங்களும் அவைகளின்று நீங்கும் வழிகளும்—கமுகும் குஞ்சியும்—மூவகை மாணாக்கர்—கல்வியறிவின் இன்பமும் பிரயோஜனமும்—கடவுள் மகிமை—விடாமுயற்சி—பகீரதப்பிரயத்தனம்—சுயநம்பிக்கை—அறுவேமலை—தாழ்மையின் மேன்மை—மேலானநோக்கம்—மௌனத்தின் ஆதாயம்—நான்கு வாசல்கள்—இனிமையின் ஆனந்தம்—தைரியம்—பரித்தியாகம்—தேசாபிமானம்—ஜாதி—நன்றி—பெற்றோர்—சங்கீதம்—அன்பு.

3. மாச்சி மாச்சிப் பருவம். (தளரும் பருவம்.) செல்வம்—பொருள் சம்பாதிக்கும் விதமும் செலவழிக்கும் வகையும்—ஈகை—கீர்த்தி—ராய்பஹதூர் பெ. மா. மதுரைப்பிள்ளை, ஸ்ரீ சாது சுந்தர் சிங், கால்ட்வெல் அத்தியக்ஷர், டாக்டர் சுப்பிரமணிய ஐயர், ஸர் ரபேந்திரநாத் டகோர், லோகமான்ய திலகர், மகாத்மா காந்தி, கவுண்ட் லியோ டால்ஸ்டாய், டாக்டர் லாமேக்—உலோபம்—தரித்திரம்—கடன்—மூடன்—துஷ்டன்—பேராசை—புண்ணியா புண்ணியம்—குடிவெறி—காமத்தின் கெடுதியும் மேற்கொள்ளும் விதமும்—மாதர் கண்கள்—கோபம்—காய்மகாரம்—துன்பம்—இன்றைக்கே—இளமை நிலையாமை—மனித ஆயுளின் அளவு.

4. மாயா மாயாப் பருவம். உலக வைபவங்களும், சிறு பிள்ளைகள் விளையாட்டே—துறவறவாசிகளின் கொள்கை—பத்தி நெறி, முத்திநெறியின் பக்குவ நிலைமை.

BOOK II. இரண்டாம் புஸ்தகம். (பக். 1—112.)

இல்லற இன்ப ரகசியம். (The Secret of a Happy Home.)

---

துறவறம்.—ராஜயோகம்—தேவாரம்—தியானமாலை — ஹத யோகம்.

இல்லறம்.

இன்பரகசியம். சிற்றின்பம்—ஐஸ்வரியத்தினின்பம்—கீர்த்தியா லுண்டாகு மின்பம்—மெய்யான இன்பம்.

கல்யாணம்.—விவாகத்தின் நோக்கம்—க்ஷேமநிதி—விவாகஞ் செய்யத் தகாதவர்கள்—விவாகம் செய்யும் வயது—சிசு விவாகம்—விவாகப் பொருத்தம்—அந்தஸ்துப் பொருத்தமும், ஆஸ்திப் பொருத்தமும்—விவேகப் பொருத்தம்—குணப் பொருத்தம்—மனப் பொருத்தம்-நளன் தமயந்தி, சித்திராங்கதை, சகுந்தலை, ஸ்ரீராமர் சீதை, திரௌபதி—குடும்பப்பொருத்தம்—இலட்சணப் பொருத்தம்—பிராயப் பொருத்தம்—பக்திப் பொருத்தம்—தரப் பொருத்தம்—ராசிப் பொருத்தம், ஜோதிடம்—நன்மனைவி கிடைப்பதற்காக ஓர் பக்தன் செய்த விண்ணப்பம்—மணமக்களின் ஆயத்தம்—கலியாணச்செலவு—கடன்—கலியாணச் சடங்குகள்—ஆங்கிலேயரிடத்தில் இல்லாததும் இந்துக்களிடத்தில் விசேஷித்ததுமான ஓர் சிறந்த சடங்கு.

புருஷ பாரியின் பொதுக் கடமைகள்—அந்நியோந்நிய ஐக்கியம்—புருஷ பாரியா பூவும் மணமும்—பிரியாமை—பொறுமை—சகிப்பு—தன்னயம்—சமாதான மில்லாமை—பிடிவாதம்—தர்க்கம்— ஓர் புண்ணியவானும் தாசியும்—ஓர் புருஷனும் மனைவியும் செய்து கொண்ட உடன்படிக்கை—புதிதாய் விவாகஞ் செய்த புருஷ பாரியருக்கு ஓர் குருவின் உபதேசம்.

புருஷரின் கடமைகள்.—புருஷனின் வாக்கு—ஆசை அறுபது நாள் மோகம் முப்பது நாளா—ஸ்திரீகள் அடிமைகள்—பிள்ளை பெறும் யந்திரங்கள்—கடவுள் மனைவியைக் கொடுத்ததின் நோக்கம்—சிவபிரானும் உமாதேவியும்—பெண்களை இழிவாய்ப்பேசும் பாடல்களும் அவற்றிற்குக் காரணமும்—அன்பே அன்பை வளர்க்கும்—அன்பத்தி லாறுதல்—புகழ்ச்சியும் இகழ்ச்சியும்—அன்பு நாளுக்கு நாள் குறைவதற்குக் காரணம்—மனைவியைச் சீர்படுத்தும் விதம்—ஆகாத பெண்சாதி—உத்தியோகக்கவலை—மனைவியை மற்றவர்கள் மதியாததற்குக் காரணம்—நம்பிக்கையின் நன்மை—சிறுசேட்டு—சம்பாதிக்கும் மனைவிகளையுடைய புருஷர்—ஓர் சற்புத்திரனின் லக்ஷணம்.

உத்தம மனைவியின் கடமைகள்.—கற்புடைய மனைவி—நல்ல பெண்ணின லக்ஷணங்கள்—நல்ல மனைவி வீட்டோரங்களில் கனி தரும் திராக்ஷச் செடி—ஞானியாகிய சாலமோன் ராஜா நன் மனையாளைப் பற்றிச் சொல்வது—இன்னும் வேதவாக்கியங்களில் சொல்லி யிருப்பது—தெய்வ பக்தி—புருஷ பக்தி—கற்பு—கற்பிற்சிறந்த இணையிலா இந்திய ஸ்திரீ ரத்னங்கள் ஐந்துபேர்—நீக்கவேண்டிய துர்ச்சுபாவங்களும அநுசரிக்க வேண்டிய நற்சுபாவங்களும்—புருஷன் கோபமா யிருக்குஞ் சமயத்தில் நடந்துகொள்ள வேண்டிய விதம்—புருஷனின துர்க்குணங்களைச் சீர்திருத்துந் தந்திரங்கள்—எதிர்த்துப் பேசுதல்—ஓர் அஷ்டக் கயாவிஞ்ஞரும் இன்பமாய் வாழ்ந்த பெண்கள் நாயகத்தின் சரித்திரமும புத்திமதியும்—பொன் கட்டாறினது போன்ற மறதியின் மேன்மை—வீட்டுச் சண்டையைப் பற்றி பிறரிடம் ஆவலாதி சொல்வது—அறநறம பெண்டிர் கற்றெனத் தகுப—தன்மயிரின் பயன—தலையணை மந்திரம்—பொறுமையான சகிப்பு—தன் பெற்றோருக்கும் புருஷனையிட்டாருக்கும் மனஸ்தாபம் உண்டாகும் காலங்களில் நடந்துகொள்ள வேண்டிய விதம்—ஸ்திரீ பேசும விதம்—மாமி மருமகள் வாழ்க்கை—அன்னியர் தன்கணவனோடு பேசிக்கொண்டிருக்கும்போது நடந்துகொள்ள வேண்டிய ஒழுக்கம்—அக்கிரமமாய்ப் பேசுகிறவர்களிடத்தில் நடந்துகொள்ள வேண்டிய விதம—புருஷனை விட்டுப் பிரியாதிருத்தல்—நாகத்தினிடம் படிக்க வேண்டிய நற்குணங்கள்—புருஷனைப் போஷித் துபசரிக்கும் விதம—இல்லற இனபத்துக்கு முக்கிய காரணமான ரகசியம—திருவள்ளுவ நாயனாரின் இல்லற ஒழுக்கங்கள்—வேற்று மனுஷரோடு நடந்துகொள்ளும விதம—வீட்டுச்செட்டு—ஆடையாபரணங்களால் அலங்கரிக்கும் விதம்—தாமஞ் செய்யும் விதம்—விருந்தோம்பல்—நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு—தகுந்த துணையில்லாமல் தனிமையாய் இருததல்—பெண்களுககுத் தாய் தந்தையர் சொல்லும் புத்தி—ஆகாத மருமகள்—மாமிக்குகந்த மருமகள்—மாமி நாத்தி முதலானவர்களின கொடுமையைப் பற்றி ஓர் ஸ்திரீ முறையிடுதல்—தலைவனே கதியென்று தலைவி சொல்வது—பெண் பார்க்கத் தூதனுப்புதல்—தூதர் பெண் பார்த்துச் சொல்லல்.

## BOOK III. மூன்றும் புஸ்தகம். (பக். 1—58.)

### ஜனனேந்திரியங்களின் அமைப்பும் அற்புதமும்.

### (ORGANS OF GENERATION AND THEIR WONDERS)

சிறுவர்களுக்கு ஜனனேந்திரியங்களி னறிவினாலுண்டாகும் பயன—பதினாறு வயதுவரை சிறுவர்களுக்குப் போதிக்க வேண்

டிய விஷயங்கள்—பதினைந்து பிராயமானவுடன் பெற்றோரும் குருமாரும் போதிக்க வேண்டியவை—அறியாமையால் அக்கிரமக் கிர்த்தியங்கள் செய்பவர்களுக் குண்டாகும் நோயும் பரிகாரமும்.

ஜீவராசிகள் விர்த்தியடையும்படி சிருஷ்டி கர்த்தாவால் ஏற்படுத்தப்பட்ட இயற்கைப் பிரமாணம்—தாவர சங்கங்களின் விர்த்தி—சிப்பிகள் விர்த்தியாகும் விதம்—மச்சம், தவளை, ஆமையின் விர்த்தி—ஊரும் ஜீவராசிகள் விர்த்தியாகும் விதம்—பக்ஷிகளின் விர்த்தி—மிருகங்களின் விர்த்தி—இருவகை மிருகங்கள்—இவைகளிலிருந்து நாம் அறியவேண்டிய நான்கு விஷயங்கள்.

ஆணின் ஜனனேந்திரியங்கள்—ஆண் குறி—பீஜம்—நீர்த்தாரை—சுக்கிலாசயம்—சுக்கிலக் குழாய்—சுக்கிலக் கோளங்கள்—சுக்கிலம்.

ஸ்திரீயின் ஜனனேந்திரியங்கள்—கடிதடம்—நிதம்பம் அல்லது உதடு—பூரம்பு—மூத்திரத்தாரை—யோனித் துவாரம்—கருப்பை—சினைப்பைகள்—சுரோணிதம்.

மாதவிடாய்—பூர்வீக ருஷர் இந்துக்களின் அபிப்பிராயம்—தற்கால டாக்டர்கள் சொல்வது—யானை முதலிய மிருகங்களுக்கு மாதவிடாய் இல்லாததற்குக் காரணம்—மதம் பொழியும் காலம்.

ருதுகாலம்—ஜனனேந்திரியங்கள் தம் தொழிலை நிறைவேற்றத் தாமதிப்பதின் காரணம்—ஆணின் ருதுகாலம்—சிறுவர் பிராயமானவுடன் உண்டாகும் மாறுதல்களும் அக்காலத்தில் பெற்றோர் நடத்த வேண்டிய விதமும்.

பெண்ணின் ருதுகாலம்—பெண்கள் புஷ்பவதியானவுடன் உண்டாகும் மாறுதல்களும் அக்காலத்தில் அநுசரிக்க வேண்டிய விஷயங்களும்—ருதுவாகாத பூப்பிலிகள் காரணம், நிவாரணம்—சூதகக்கட்டும் நிவாரணமும்—சூதகம் தடைப்படல் மூன்றுவிதங்களும், பரிகாரங்களும்—குத்தோடு கூடிய சூதகமும் பரிகாரமும்—விகாரச் சூதகத் தோற்றமும் பரிகாரமும்—சூதகப் பெரும்பாடும் சிகிச்சையும்—சூதக ஜன்னியும் நிவாரணமும்—சூதக சூலையும் சிகிச்சையும்—வெண்துலாவையும் நிவாரணமும்.

## BOOK IV. நான்காம் புஸ்தகம். (பக். 1—50.)

### மாதாவின் மாக்ஷிமை. (The Dignity of Mother-hood.)

ஆடுகள் தனக் கிஷ்டமான குட்டிகளை ஈனும்படி யாக்கோபு செய்த தந்திரம்.

தாயும் பிள்ளையும்.—மாதாவின் உதரத்தில் சிசுவின் வளர்ச்சி—புருஷர் தம் அருமைக் காதலிகளைத் துன்பப்படுத்தாமல் காப்பாற்றுவதற்கு உபாயம்—தாய்க்கும் பிள்ளைக்கும் உள்ள பந்தம்—மாதாவின் உதிரத்தில் உருவாக்கத் தக்கது, உயிர் கொடுக்கத் தக்கதுமான ஓர் சக்தியின் மகிமை—விக்டோரியா ராணியின் மாட்சிமை.

சிசுவினது போஷணை—தாயினது உதிரம்—அதன் உற்பத்தி—அங்கவீனம், அவலக்ஷணம், நோயுள்ள குழந்தைகள் பிறப்பதற்குக் காரணம்—ஒவ்வொருவருக்கும் இருக்கும் விருப்பு வெறுப்புகளுக்குக் காரணம்—ஸ்திரீ இரத்த சுத்திக்காகச் சாப்பிடவேண்டிய வஸ்துக்களும் நீக்கவேண்டிய வஸ்துக்களும்—நோய் கொண்ட பலமுள்ளவர்களின் பிள்ளைகள்.

தாயின் தன்மைகள் பிள்ளைக்குப் படிதல்.—சரீரத்தின் தன்மை—ஆத்மாவின் தன்மை—தாயின் உதரத்தில் பதுங்கியிருக்கும் அநேக வியாதிகளும்—சிசுவின் பாலால் விருத்தியாகக்கூடிய பிள்ளைகளும் விருத்தியாகாத பிள்ளைகளும்—கண்டமாலை, பிளவை, ஜயரோகம், தாயினிடமிருந்து பிள்ளைக்குத் தாவும் விதம்—ஏககாலத்தில் ஒரே தாயினிடத்தில் பிறக்கும் இரண்டு குழந்தைகளின் பேத விளக்கம்—சுகதேகியான தீர்க்காயுளுள்ள தாய்க்குப் பிறக்கும் குழந்தைகளுக்கு ஜயரோகம் உண்டாவதின் காரணம்—குழந்தைகளுக்குச் சுறுசுறுப்பு, பலம் முதலியவையுண்டாகும்படி தாய் அனுசரிக்க வேண்டிய விதிகள்—ஆயிரமாயிரங் குழந்தைகள் சிறுவயதிலேயே மடிவதற்குக் காரணம்—குழந்தைகளின் அபூர்வத்தைத் தாயின் வயிற்றிலிருக்கும்போதே நிர்ணயிக்கும் விதம்—ஓர் வியாபாரியின் மனைவியும் குழந்தைகளும்—மனுஷரின் புத்தியும் ஆலோசனையும் வெவ்வேறு தொழில்களை நோக்குவதற்குக் காரணம்—ருக்மணியின் சரித்திரம்—மோட்சம், நரகம், நீதி, அநீதி முதலியவற்றைப் பற்றிச் சகல ஜாதியாருக்குள்ளுமிருக்கும் ஒரே கொள்கையின் காரணம்—ஆத்மாவும் சரீரமும் ஒன்றிற்கொன்று உதவி செய்வதற்கும், ஆத்மாவிற்கும் மாமிசத்திற்கும் போராட்டமுண்டாவதற்குங் காரணம்.

சிசுவின்மேல் தாய்க்கிருக்கும் வல்லமை.—தாயே உபாத்தியும், நியாய சாஸ்திரியும், சித்திரக்காரியும், குருவும், இரட்சகரும்—இயற்கைப் பிரமாணங்களை நமது சரீரத்தில் புகட்டியவர் யார்?—தாய் தந்தையரை நமஸ்கரித்தல்—தீமைக்குத் தீமைசெய்யும் சுபாவம் பதிந்த விதம்—தன் குழந்தைக்கு நடக்கப் போகும் சங்கதிகளை முன்னறியுஞ் சக்தி—தேவமாதா தன் உதரத்தில் ஜனித்த

தேவபாலனின் மகிமையைப் பற்றிச் சொன்ன தீர்க்கத் தரிசனம். இவ்வுலகத்திலேயே மோக்ஷமும் நரகமும், அதற்குக் காரணம்—பகதியுடனே பாலனையேந்தி பரலோகத்தின் ஏணியில் செல்.

புருஷரின் கடமை—நற்புதல்வரைப் பெறும்படி புருஷனறிய வேண்டிய இரகசிய விஷயங்கள்—புருஷனுக்குக் கீழ்ப்படியக்கூடாத சமயங்கள்—மனைவி தன்னிடம் வைத்திருக்கும் அன்பும், பாசமும் அதிகரிக்கச் செய்யும் விதம்—புருஷரின் ஓர் சிறந்த குணம்—அதுவே இல்லற இன்ப ரகசியம்—ஸ்திரீ புருஷாள் அற்பமாயெண்ணி நடப்பிக்கும் கிரியைகளினா லுண்டாகிற பிரமாத விஷயங்கள—ஸ்திரீ தன கணவனிச்சைக் கிணங்கும் காரணம்—அதன் முடிவு—குழந்தையின் ரூபபேத விளக்கம்—பந்தய ஓட்டத்திற் கவசியமான ஆயத்தம்—தீர்க்காயுளுள்ள சந்ததி தரிக்கும் விதம்—சித்திரக்காரன் சித்திரம வரையும் விதம்—வீடு கட்டுமுன் ஆயத்தம்—குயவன் களிமண்ணைப் பானை சட்டியாகவேனும், சாமி சுரூபங்களாகவேனும செய்வதுபோல், ஓர் துளியினால் ராஜா, மந்திரி, மூடன், பைத்தியக்காரன் செய்யப்படும் விதம்—தவப்பயனான பிள்ளைகள்—நானே தானே செய்கைகளால் பிறக்கும் பிள்ளைகள்—சிற்றின்பப் பிரியரான பிள்ளைகள்—துர்க்குணங்களின் மூலங்கள்—ஸ்திரீ தன் ஆத்ம சரீரத்தைப் புருஷனுக்கே தத்தம் செய்தல்—தெய்வம் மனுஷனிடத்தில் முகமுகமாய்ப் பேசும் விதம்—இவ்வுலகத்தில் நாகரீகம் லேசாய்ப் பரவும்படி செய்யத்தக்க சுளுவான தந்திரம்—இகபர இன்பத்துக்காளாகும் விதம்—தற்கால நியாய சட்டங்களும் இராஜ கட்டளைகளும் அனுவசியம்—துஷ்டநிக்கிரகமும் சிஷ்டபரிபாலனமும் மாறிப்போகுங் காலமும் விதமும்—மனுஷ சுபாவத்துற்காதிமூலம்.

## BOOK V. ஐந்தாம் புஸ்தகம். (பக். 1—14.)

### சிசுவுற்பத்தி. (Conception.)

முட்டையில் கருவளர்ச்சி.—கோழி தன் முட்டையைப் பொட்டியவைப்பதன் காரணம்—அடை வைத்த முதல்நாள் முட்டையிலுள்ள கருவின் தோற்றம்—இரண்டாம் நாள் தோற்றம்—மூன்றாம் நாள்—நான்காம் நாள்—ஐந்தாம் நாள்—பதினான்காம் நாள்—இருபதாம் நாள்.

கருத்தரிக்கும் விதம்.—சிசு உற்பத்திக் காலம்—கர்ப்பக்குறி—கர்ப்பாசயத்தில சிசு இருக்கும் நிலை—கருவுற்ற ஸ்திரீயின் நிலைமை—2, 3, 4, 5 பிள்ளைகள் பிறக்கும் விதம்—இரேதைப் பிறவிகள்—

விநோத சம்பவங்கள்—கருப்பைகள் மாறிமாறி வேலை செய்தல்—பிறக்கப் போகும் குழந்தை ஆணோ பெண்ணோவென்று குறி சொல்லுதல்—ஜாதக கணித வாய்ப்பாடு—பொய்க்கர்ப்பம்.

கர்ப்பத்தில் சிசு வளருதல்.—3-வது வாரத் தோற்றம்—முதல் மாதத் தோற்றம்—இரண்டாம் மாதம்—மூன்றாம் மாதம்—நான்காம் மாதம்—ஐந்தாம் மாதம்—ஆறாம் மாதம்—ஏழாம் மாதம்—எட்டாம் மாதம்—ஒன்பதாம் மாதம்.

கருத்தரித்தபின் கருப்பையின் மாறுதல்—மாயை—ஆகாரமும் ஆகாயமும் சிசுவுக்குள் பயன்படுமவிதம்—எந்தவித அழுத்தங்களும் அடியும் சிசுவைத் தாக்காதபடி பாதுகாக்கப்படும் விதம்—நாபிக் கொடி—பனிநீர்.

கருப்பையில் சிசு நிற்கும் நிலை.—சிசு தலைகீழாய்க் கிடப்பதற்குக் காரணம்—பேறுகால வலிக்குக் காரணம்—பேறுகால வலியை முற்றிலுமில்லாமல் நீக்கும் விதம்.

ஆண் பெண் சிசுவுற்பத்தி.—பலரின் அபிப்பிராயங்களும் ஆட்சேபனைகளும்.

சிசு ஆணோ பெண்ணோவென்றறியும் வகை.—ஆண் சிசுவுள்ள கர்ப்ப அடையாளம்—பெண் சிசுவுள்ள கர்ப்ப அடையாளம்.

சிசுவின் ரூபபேதம்—ஒரு வெள்ளைக்கார துரைசானிக்குக் கருங் குரங்கைப்போல பிறந்த பிள்ளை—திர்தராஷ்டிரன் குருடனாய்ப் பிறந்ததற்கும், பாண்டுவின் சரீரம் வெளுத்திருந்ததற்குங் காரணம்—அவலக்ஷணமான பெற்றோர்க்கு அஷ்ட லக்ஷணமும் பொருந்திய சுகுண சுந்தர சிசுபிறப்பிக்கும் விதம்—ஜாதக மூலம்.

பிரசவிக்கும் நாளைக் கணித்தல்—கொக்கு, வாத்து, எலி, முயல், சிங்கம், பன்றி, ஆடு, மான், குதிரை, ஒட்டை, யானை முதலிய மிருகங்களுக்கும் பட்சிகளுக்குமுரிய கர்ப்பகால அளவு.

சிசுவுற்பத்தியைப் பற்றி இந்து சாஸ்திரங்களில் கூறியுள்ளது.

மிதமிஞ்சிய சம்போகத்தின் கேடுதி.

சம்போகங்கூடாத சமயங்கள்.

கருவழித்தல்.—பூர்வீகக் கிரேக்கர்களின் வழக்கம்—அமெரிக்கர், ஐரோப்பாவிலுள்ளவர்களின் வழக்கம்—கருவழித்தலின்

முடிவு—கருவழித்தவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள்—கரு வழிக்கும் மருந்துகளின் சக்தி.

கருத்தரிக்காதபடி செய்யும் விதம்.—அமெரிக்காவின் பூரணஸ் தர்—பாரம்பல் காலத்துள்ள வழக்கம்—பிரான்சு தேசத்தில் மல்தூஸின் கருவிகள்—மற்றக் கருவிகள்—மருந்துகள்—இங்கி லீஷ் டாக்டர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டு வரும் முறை—மற்ற முறைகள்—யாதொரு கெடுதியுமுண்டாக்காத நல்லமுறை.

சில கேள்விகளுக்கு விடை.

BOOK VI. ஆறும் புஸ்தகம். (பக். 1—20.)

கர்ப்பகால சுகாதார விதிகள். (Hygiene in Pregnancy.)

சுத்த ஆகாயமும் சூரிய வெளிச்சமும்.

ஸ்நானம்—ஆசனஸ்நானம் (Sitz Bath)—ஆட்வர்க்கும் இந்த அற்புத சஞ்சீவியா லுண்டாகும் பலன்—கால்ஸ்நானம்—எண் ணெய் ஸ்நானம்—பாத ஸ்நானம் (Footbath.)—துருக்கி ஸ்நானம் என்னப்படும் உஷ்ணஸ்நானம், (The Turkish or Thermal Bath.)—வாதரோகம், கொப்புளம்.

தேகாப்பியாசம்.—வீட்டுவேலை—தோட்ட வேலை—சுவாசாப் பியாசம், மெத்தைப்படியில் ஏறி இறங்குவது—மேல்பிடித்தல், (Massage.)

வேது ஒற்றடம். (Hot fomentations.) செய்யும் வகை களும் எச்சரிப்பும்.

வேறு ஒற்றடங்கள்.

சுவாசாப்பியாசம். (Breathing Exercise.) யோகாப்பியா சஞ் செய்வோரின் முறை—நவத்திறமெல்லாம் மேலான தவபட் ஸ்திரீபோக முறை.

கருவுற்றிருப்பவர்களின் ஆகாரம்.—இஷ்டமாய்ச் சாப்பிடவே ண்டியவை—மிதமாயச் சாப்பிடவேண்டியவை—முற்றும் நீக்கவே ண்டியவை—முட்டை பழ ஆகாரம்.

கர்ப்பிணிகள் அநுசரிக்க வேண்டிய விதிகள்.—தொற்றுவியாதி யுள்ளவர்—உடை—ஸ்நானம்—தனிப்பிரயாதத்தில்.

## BOOK VII. ஏழாம் புஸ்தகம். (பக். 1—32.)

### கர்ப்பகாலரோகங்களும் பரிகாரங்களும்

### (Disorders of Pregnancy and their Treatment.)

வாந்தி. பரிகாரம்—அபாத வாந்திக்குப் பரிகாரம்—இவ்வண்டத்தில் ஆசை, மயக்கம், தூக்கமின்மை, மலச்சிக்கு; வயிற்றுப்போக்கு, மூலரோகம், தினவு (Itching.) நெஞ்செரிவு, முகவலி, கால் கை வீக்கம்; பல்வலி, தலைவலி, ஸ்தனங்களில் வலி, வலிப்பு, எச்சி யூறுதல்; நீர்க்கடுப்பு, மஞ்சட்காமாலை, இரத்தவாந்தி, தொற்றுவியாதி, மாதவிடாய், வெள்ளை, வயிற்றில் வாய்வு திரண்டுண்டாகும் வலி, ஜலதோஷம், இருமல், சுரம, தூக்கப்புநோய், நெஞ்சு துடித்தல், குறண்டவாதம்.

பிண்டச்சேதம், அல்லது அகாலப்பிரசவம், காரணம்—அதனாலுண்டாகுந் தீமைகள்—தடுக்கக்கூடிய வழிகள்.

கர்ப்பச் சிதைவின் குறிகள்—ஔஷதங்கள்.

## BOOK VIII. எட்டாம் புஸ்தகம். (பக். 1—42.)

### மருத்துவ சாஸ்திரம். (Midwifery.)

கஷ்டமில்லாப் பிரசவம். பேறுகாலத்தின் மோசத்திற்குக் காரணம் ஸ்திரீயின் அறியாமையே—மிலேச்ச ஜாதியாரின் வழக்கங்கள்—வெள்ளம் வருமுன் அணை போட்டுக்கொள்—பயத்தை நீக்கும் ஔஷதம்—ஆராய்ச்சியாலும் அநுபோகத்தாலுமுண்டாகும் அறிவின் பயன்.

பிரசவ சின்னங்கள்.

பிரசவம்.—க்ரமப் பிரசவம்—கூட்டுவலிக்கும், பிரசவ வலிக்கும் வித்தியாசம்—பிரசவ வலிக்குக் காரணம்—சிசு எவ்வளவு நேரத்தில உதயமாகுமென்பதைக் கண்டு பிடிக்கும் விதம்—முதற் பாகம் (பிரசவவலி)—இரண்டாவது பாகம் (ஜனனம்)—மூன்றாவது பாகம் (மாயை) வெளிவருவது.

பேறுகால ஆயத்தமும் நடந்துகொள்ள வேண்டிய விதமும்.—பருத்துவச்சியைத் திட்டம் பண்ணுவது—தேவையான சாமான்கள் சேகரிப்பது.

பிரசவகாலத்தில் மலஜலந் தாங்காமல் செய்யவேண்டிய முறைகள்.

பிரசவ நிர்வாதம். சூதகா இரகம்—மருத்துவச்சியின் வேலை.

சிசு உதயமாதல்—பிரசவ வேதனையின் ஆரம்பத்தில் நடந்து கொள்ள வேண்டியவிதமும், உண்ண வேண்டிய ஆகாரமும்—இச் சமயத்தில் ஸ்திரீ வாந்திசெய்வதன் பயன்—பிராந்தி—உடை—மருத்துவச்சி செய்ய வேண்டியவைகளும் செய்யக்கூடாதவைகளும்—கம்பட்ட மருத்துவச்சிகளின் அபாயம்—நிடுக்கியின் பிரயோகம்—பிரசவ வேதனையை முற்றிலும் நீக்கும் ஓர் சஞ்சீவி—அழாத குழந்தையை அழச் செய்யும் வகை—தொப்புள்கொடி—மாயை வெளிவருவது—ஸ்திரீயின் வயிற்றைக் கட்டும்விதம்—குழந்தை பிறந்தவுடன் செய்யும் சிகிச்சை.

பிரசவித்தபின் உதிரப் பெருக்குண்டாகாமல் செய்யவேண்டிய முறை. இரத்தப்பிரவாக முண்டாவதற்குக் காரணம்—குறிகள்—உடனே நிறுத்த வேண்டிய தவசியம்—நிறுத்தும் விதம்—கர்ப்பாசயத்தில் இரத்தம் கட்டிக்கொண்டால் செய்யவேண்டிய முறை.

பிரசவித்த ஸ்திரீயைப் பாதுகாக்கும் முறை. பிரசவித்த ஸ்திரீ எழுந்து உட்காருவதின் மோசம்—ஆயாச முண்டாவதின் காரணம்—நாடி தாழ்ந் தடிப்பின் நன்மை—பால்சுரம்—படுக்கையின் விவரம்—படுக்கையறைக்கவனிப்பு—பிரசவித்தபின் கருப்பையின் மாறுதல்—பிரசவித்தபின் ஒருவாரத்துக்கு ஸ்திரீ கவனிக்கவேண்டிய அத்யாவசிய விதிகள்—இனஜன பந்துக்கள் பார்ப்பதாலுண்டாகும் லாப நஷ்டம்.

பிரசவித்தபின் உண்டாகும் சுண்டுவலி. காரணம்—சுண்டுவலியின் நன்மை—சுண்டுவலி அதிகமாயிருந்தால் செய்யவேண்டிய முறை—பிரசவித்தவளிடத்தில் கவனிக்க வேண்டிய குறிகள்—சிறுநீரிறங்காவிடில் இறங்கச் செய்யும் வகை.

பிரசவித்தவளின் ஆகாரம் முதலியவை.

சிசு கருப்பைக்குள் இறத்தல்.—குறி—சிகிச்சை.

நஞ்சு தங்குதல்.—மூன்று காரணங்கள்—நிவாரணம்.

நஞ்சுவிழ உபயோகிக்கும் மருந்துகள்.

திடித்த பிரசவம்.—காரணம்; சிகிச்சை.

## BOOK IX. ஒன்பதாம் புஸ்தகம். (பக். 1—18.)

### சிசு பரிபாலனம். (Care of Infants.)

வேண்டியவை—நீக்கவேண்டியவை—சாப்பிடக்கூடாதவை—குழந்தைக்கு வாந்தி, வயிற்றோட்டம் முதலிய அஜீரணமுண்டானால் தாய் சாப்பிடவேண்டிய ஓர் சிறந்த ஔஷதம்.

தாய்ப்பாலில்லாக் குழந்தைகளைக் காப்பாற்றும் விதம்.—பால் கொடுக்கும் பசுவைப் பாதுகாக்கும் விதம்—பசுவின்பாலால் அஜீரண முண்டாகாதபடி செய்யும்விதம்—நல்ல பசுவின்பால் அகப்படாவிட்டால் உபயோகப்படுத்த வேண்டியது—பால்புட்டி சுத்தி செய்யும் விதம்.

பசுவின்பாலைத் தாய்ப்பால் மாதிரியாக்குந் தந்திரம்.—நாலு வயது வரைக்கும் குழந்தையின் ஆகாரம்—முன் பல் முளைத்தவுடன் கொடுக்கவேண்டியது—பதினெட்டு மாதத்தில் கொடுக்கும் ஆகாரம்—கொடுக்கக்கூடாதவை—பெரியவர்கள் சாப்பிடும் ஆகாரங் கொடுக்குங் காலம்—மாமிசப் போஜனம் கொடுக்குங் காலம்—மாமிசத்தா லுண்டாகுங் கெடுதி—ஓர் காடிக்குட்டியின சரித்திரம்—கள்ளப பசியைத் தீர்க்கும் விதம்.

பால் கொடுக்கத் தகாத காலம்.

பால் மறப்பிக்குங் காலம்—அதிகக் காலம் பால் கொடுப்பதால் தாய்க்கும் பிள்ளைக்கு முண்டாகுங் கெடுதி—பால் மறப்பிக்கும் விதம்—பால் வற்றச் செய்யவேண்டிய முறைகள்—பால் கட்டிக்கொண்டு தொந்தரவு உண்டாக்கினால் நீக்கும் விதம்.

குழந்தை தூங்கவேண்டிய கிரமம்—குழந்தையால் தாய்க்குத் தொந்தரவில்லாதிருக்கச் செய்யும் விதம்—குழந்தையின் படுக்கையைப் போடவேண்டிய இடம்.

குழந்தையின் உடை.

குழந்தையின் ஸ்நாநம்—ஸ்நாநம் செய்விக்கக்கூடாத நேரமும் காலமும்—பலவீனமான குழந்தைகளுக்கு ஸ்நாநத்துக்குப் பதில் உபயோகிக்க வேண்டியது—புண்ணுண்டாகாமல் செய்யும் விதம்.

குழந்தைகளுக்குத் தேவையான காற்று. குழந்தையை வெளியில் கொண்டு போகக்கூடிய காலம்—கூடாதகாலம்.

குழந்தையின் தேகாப்பியாசம். குழந்தை பிரண்டுழுங்காலம்—உட்காரவும் நடக்கவும் படிக்குங் காலம்.

## BOOK X. பத்தாம் புஸ்தகம். (பக். 1—24.)

### ஆண் பெண் மலடு. (Sterility and Impotence.)

புத்திரச் செல்வம்.

பெண் மலடு—மலட்டிற்குக் காரணம்—நீக்கக்கூடாத மலடு—நீக்கக்கூடிய மலடு—இரண்டொரு குழந்தை பெற்றபின் உண்டாகும் மலடு—பிள்ளையில்லாதிருப்பதற்கு அநேககாரணங்களும் பரிகாரங்களும்.

மலடு மலட்டிற்கும் பொதுவான சிகிச்சை.

கருப்பையின் உட்பாகம் வீங்கியிருத்தல்—குறிகள்—காரணம்—நிவாரணம்.

கருப்பையின் அழற்சி—குறிகள்—காரணம்—நிவாரணம்—கருப்பையின் வாய் வீங்கியிருத்தல்—நிவாரணம்.

கருப்பையின் உறுப்பு தள்ளுதல்—குறி—காரணம்.

இந்த சாஸ்திரங்களில் சொல்லியிருக்கும் பெண்மலட்டின் குணங்களும் அவை நீங்கிச் சந்தானம் உண்டாகத்தக்க ஔஷத முறைகளும்.

ஆண்மலடு—நபுஞ்சகத்தன்மை—எட்டுவகை காரணங்கள்.

சிகிச்சை.—போகாந்த காகசாந்தினி—போகம்—தேகாப்பியாசம்—ஸ்நானம்—நித்திரை—போஜனம்—நீக்க வேண்டியவை—மேல் பிடித்தல்—ஔஷதங்கள்—உள்ளுக்குச் சாப்பிடவேண்டியவை—வெளிப்பிரயோக ஔஷதமும்—கருவிகளும்—சங்கவிரிய யாத்திரை.

## BOOK XI. பதினோராம் புஸ்தகம். (பக். 1—40.)

### ஆண்மையின் அழிவும் அதன் மீட்சியும்.

(The Loss of Man-hood and its Rescuc.)

அக்கிரமக்கிரியைகள் பரவுங்காரணம்.

வாலிபருக்கு ஓர் வார்த்தை—ஸிமாட்ஸ்டன்—டாக்டர் மில்லர்—டாக்டர் பேப்பையர்,

கசகுரதம்.—காரணங்கள்—குறிப்புகள்—பாமர வைத்தியர்கள்—பூர்வீக வழக்கம்—1 r. ஆடம்கிளார்க் சொல்லுவது—ஓர் கேள்வி—தன்னையடக்கி ஆளும்படி கையாடவேண்டிய விஷயங்கள்—நன்மையுண்டாகும் கெடுதி—ஓர் மந்திரம்—மதுபானம்—புகையிலை—மலச்சிக்கல்.

இந்திரியஸ்கலிதம்.—சிகிச்சை—சிங்கவீரிய மாத்திரை.

பிரமேகம்.—மூன்று விதங்கள்—சிகிச்சை.

அரையாப்பு—கட்டிகரைக்கிற பற்றுகள்—கட்டி பழுக்கிற மருந்துகள்—மேகராணக்களிம்பு—மேகசஞ்சீவி-சர்வரோக சங்காரி.

பரங்கிரோகம். (Syphilis.) மூன்று பருவங்கள்—சிகிச்சை மேகவாதரோகம்—வாதசங்காரன்.

## BOOK XII. பன்னிரண்டாம் புஸ்தகம். (பக். 1—40.)

## சமயோசித சஞ்சீவி. (Emergency Treatment.)

சமயோசித சஞ்சீவி முறைகள்.ஸ்திரீகள் அறியவேண்டிய விஷயங்கள்—ஒவ்வொரு வீட்டிலும் அவசியம் இருக்க வேண்டிய சாமான்கள்.

இரிகேற்றர்.எனிமா—எனிமா கொடுக்கும் மாதிரி—கிளிஸரின் சிரிஞ்சு.

கர்ப்பச்சல் குச்சி.

மருந்து நிறுக்கும் நிறைகள்—நிறுத்தலளவை—முகத்தலளவை அல்லது திராவகங்களின் அளவு.

மினிம் கிளாஸ்—அவுன்ஸ கிளாஸ்.

நஞ்சுகளும் அவைகளுக்கு முறிவும். சகல நஞ்சுகளுக்கும் பொதுப்.பிரயோகம்—நாம் எப்பொழுதும் கைவசம் வைத்திருக்க வேண்டிய விஷ முறிவுகள்.

அபின். குறிகள்—சிகிச்சை.

பெல்லடோனா. குறிகள்—சிகிச்சை.

அக்கினித் திராவகங்கள். குறிகள்—சிகிச்சை.

பாஷாணம். அடையாளங்கள்—சிகிச்சை.

சவ்வீரம். அடையாளங்கள்—சிகிச்சை—எட்டிக்கொட்டை—ஊமத்தை—மண்ணெண்ணெய்—சிறுக்காரம்—திமுருகல்—சூடம் அல்லதுகற்பூரம்—கஞ்சா—ஜாதிக்காய்—டர்டன்டயின்—அம்மோனியா—அயோடின் திராவகம்—ஈயத் திராவகம், ஈய பஸ்பம்—சுண்ணாம்பு—காடிக்காரம்—அன்றிமோனி—பால்துத்தம்—நேர் வாளம்—காட்டாமணக்கின் பருப்பு—மிளகுப்பூச்சுந் தைலங்கள்—நாவிக்கிழங்கு—சிவதை வேர்—மருதோன்றி—அவுரி—குன்றிமணி—கள்ளிப்பால்—எருக்கம்பால்—சேங்கொட்டை—ஆகார விஷங்கள்—காளான்கள்—புகையிலை-இவை ஒவ்வொன்றிற்கும் தனித்தனியே குறிகளும்—முறிவுகளும்.

சில சுளுவான முறைகள்.

உப்பின் பிரயோஜனங்கள். பல்வலி, காதுவலி, முகக்குத்தல், நுரையீரல், குடல்களிலிருந்து இரத்தம் வெளிப்படுதல், சிசுக்களுக் குண்டாகும் சளி, மாந்தம் முதலியவைகளுக்கு—வயிற்றோட்டம், வயிற்றுக்கடுப்பு—விஷபேதிக்கு—அஜீரணம், வயிற்றுப்பிசம்—வயிற்றுவலி—வீரிய விர்த்தி—பேதிக்கு—தீபனகாரி—வாந்திக்கு—கிருமிகளுக்கு—வாதம்—நஞ்சுமுறிவு—சமுத்திர ஸ்நாநம்—பல் துலக்க—வாய் கொப்பளிக்க—சளுக்கு வீக்கங்களுக்கு—முடி வளர—பீனிசத்திற்கு—கண் கழுவ—சீதசுரம்—நமைச்சல்-நெஞ்செரிவு—தொண்டைப்புண்—பாரம்—தினிக்கு.

கெரோசின் எண்ணெய். விஷமுறிவு—பொடுகு—பேன்—தொண்டைப்புண்—சுவாசாசயப்புண்—ஜலதோஷம்—பல்வலி—பாம்புக்கடி—சொறிசிரங்கு, தேமற்படை, படர்தாமரை—வண்டு கடி—எறும்புப்புற்று—விஷக் கிருமிகளைக் கொல்ல—வாதரோகத்திற்கு—மூட்டுப்பூச்சி கொல்லி—கிரோசின் எமல்ஷன்.

கருநொச்சி. விஷக்கிருமிகளைக் கொல்ல—பிரசவித்த ஸ்திரீகளின் சுரம்—வாதம்—தலைநோய்—நரம்புப் பிடிப்பு—மூட்டுப் பூச்சிக்கு.

காயங்கள். உட்காயங்கள்—வெளிக்காயங்கள்-செய்யவேண்டிய முறைகள்.

எலும்பு முறிவு. செய்யவேண்டிய விஷயங்கள்.

சுளுக்கு. சிகிச்சை.

முழிப் பெயர்வு. செய்யவேண்டிய முறைகள்.

மூர்ச்சையடைதல். பரிகாரம்.

தீப்பட்ட காயங்கள். செய்யவேண்டிய பரிகாரங்கள்—சுண்ணாம்புக்குள் விழுதல்—கந்தகத் திராவகம்—வெடியுப்புத் திராவகம்—கறியுப்புத் திராவகம்—தீ முருகல் பாஷாணம் முதலியவற்றிற்கு சிகிச்சை.

விஷக் கடிகள். பாம்பு, நாய், நரி, பூனை, எலி, ஓநாய் முதலியவற்றின் கடிகளுக்கு—குறிகளும் நிவாரணங்களும்.

மிருகங்களின் கடி. சிகிச்சை.

எலிகடி விஷம். சிகிச்சை.

ஓணான், அரணை, தேள், நட்டுவக்காலி, தேனீ, குளவி முதலியவற்றின் விஷக்கடிகளும் நிவாரணங்களும்.

ஜலத்தில் அமிழ்ந்தினவர்களுக்கு சிகிச்சை. முதல் செய்யவேண்டிய வியாபகங்கள்—உயிர்ப்பித்தல்.

தகாத வஸ்துக்களால் நேரிடும் அபாயங்களும் நிவாரணமும்.

தொண்டையில் அந்நிய வஸ்துக்கள் சிக்கிக் கொள்ளுதல்.

செவி மூக்குகளில் அந்நிய வஸ்துக்கள்.

யாவரும் எளிதில் செய்யக்கூடிய சில ஔஷத முறைகள்.

ஸ்நானமருமனைத்துள்—மண்ணெண்ணெய் விளக்கெரிய—உரத்த கபால இடிக்கு—தலைவலிக்கு ஆவி—ஒருத்தலைவலிக்குப் பத்து—கைகாலி லடிபடுவதா லுண்டாகுஞ் சுளுக்குக்கு—பல் அசைவுக்கு— சகலசுறிச்சலுக்கு—கக்குவானுக்கு—சுகபேதி எண்ணெய்—மாலைக்கண்ணுக்கு—கிருமிகளுக்கு—சிறு கிருமிகளுக்கு-கண்ணொளி மங்கலுக்கு—கண் புகைச்சலுக்கும் கண்ணில் ஜலம் வருகிறதற்கும்—மந்தத்திற்கு—சிரங்கிற்கு—கால் வெடிப்புக்கு, மெழுகு பிளாஸ்திரி—கூகைநீறு—சவ்வர்சி—கோழிக் குஞ்சின் சாறு—ஆட்டிறைச்சியின் சாறு.

மேகரணக் களிம்பு.
இரத்த சுத்திக்கு மருந்து.
கண் புருவத்திலுண்டாகும் மைகட்டு
காதுவலிக்கு.
நெருப்புப்பட்ட புண்ணுக்கு.
கண்ணில் தூசி துரும்பு விழுந்தால்.
வெறி நாய்க்கடிக்கு.
வாய்வுக்கு.
சுரத்துக்கு.
நெகோட்பட்ட சுரத்துக்குக் குடிநீர்,
இரணங்களுக்கு.
சுகபேதி மருந்துகள்.
கை காலெறிவுக்கு.
உஷ்ணசாந்தி.
தேமற்படைக்கு.
கீல் வாதத்திற்கு.
வஸ்திரங்களில் படுங்கறை முதலியவற்றை போக்க—மைக் கறை—பழக்கறை—காப்பி அல்லது தேயிலைக்கறை—வர்ணமைக் கறை—இரத்தக்கறை—கொழுப்புக்கறை.
ஞாபகத்தில் வைக்கவேண்டிய விஷயங்கள்.
தேரையர் கோபனுகாவிதி.
வாழி.


உலகப் பிரசித்திபெற்ற

சாமிவேலின் சிங்கமார்க்கு

# சிங்கவீரிய மாத்திரை.

உலகப் பிரசித்திபெற்ற இம்மாத்திரையை உபயோகித்தவர்களுக்கே இதன் அருமை நன்கு விளங்கும்.

42 மாத்திரைகளடங்கிய சீசா 1-க்கு விலை ரூ. 3.
,, 3-க்கு விலை ரூ. 8.
,, 6-க்கு விலை ரூ. 15.

சாமிவேல் வைத்தியசாலை, ஊர்
தென்காஞ்சி, இரங்கோன்.

# சித்திரப் படங்களின் ஜாப்தா.

நெ. பெயர். பக்கம்.

## முதலாம் புஸ்தகம்.

## மூன்றாம் புஸ்தகம்.



## நான்காம் புஸ்தகம்.

[illegible]

# சாற்றுக்கவிகள்.

---

அநேக புஸ்தகங்கட்குக் கிரந்த கர்த்தாவும்,
திரிசிரபும் பிரஜானுகூலன் பத்திராதிபரும், பாலபாஸ்கரரும் ஆகிய
ஸ்ரீயுத, எஸ். ஜி. இராமாநுசலு நாயுடு அவர்கள்
இயற்றியது.

திருமருவுந் தாம்பிரவருணி வளஞ்சேர்தென் பாண்டித்தேயந் தன்னுள்
அருமை மிகுமுயர் ஆற்றுக்குடி மறவநகர்ப் போதகாசான் பூவிற்
பெருமை மிகும் ஆயுள்வேதத்துறை மாந்திரிக நிலைபெரிது மோர்ந்த
தருவை நிகர் புலியப்பத் தேவ ருபதேச முறை தழைத்தே சீடன்

சங்கீத சாஹித்ய வித்வ சிகாமணி யிறைவன்றாளைப் போற்றி
மங்காத புகழுடை சத்தியநாத தேசிகரின் மைந்தனை
பொங்காழி யெனத்தமிழு மாங்கிலமுங் கற்றுணர்ந்த புலவன் சீடர்
பங்கான ரோய்களை மெஸ்மெரிஸத்தால் ஆங்கவைத்துப் பாறச்செய்வோன்

இன்னாட்டு மின்னாட்டு நூல்களையு மேனாட்டு மெழில் மேனாட்டு
முன்னாட்டு நூல்களையும் சந்தேகமற உணர்ந்து முதிர் சாரத்தைக்
கன்னாட்டு நவநீதமெனப் பாகின் சுவை பெருகக் கனிந்து தந்தான்
வின்னாட்டும் சிசுவுற்பத்திச் சிந்தாமணி சாமிவேல் மகானே.

இப்பெரிய நூற்பயன் யாதெனி லெழின்மின்னாரை மணந்தின்ப மேவிச்
செப்பரிய புத்திரப் பேறடைந்து பாவீட்டினிலே தெரிந்து வாழ்தல்
ஒப்பிதனுக் குரைத்திட விவ்வுலகிடை யிந்நாள்வரையு முதிக்கக் காணோம்
செப்பிதற் கொருநூலும், தேவ ருச்சிமேல் வைத்துச் சிறப்பிப்பாரே.

---

மதுரை நான்காம் தமிழ்ச்சங்கத்தில் பி. ஏ. பட்டம்
பெற்றவராகிய காங்கயம் சிலேடைச் சிங்கம் அஷ்டாவதானம்
ஸ்ரீயுத, வி. சேஷாசல நாயுடு அவர்கள்
இயற்றியது.

கலையெலா முணர்ந்தோ ராங்கிலங் கற்றுக் கசடறப் போதனை செய்யும்
நிலைமிகு மறவபுரிச் சத்திய நாதர் சேர்தவத் துதித்திடும் சேயன்
மலைவறச் சிசுவுற்பத்தியின் சிந்தாமணியினை யுலகினுக் களித்தான்
விலைமதித் தறியாமணியென்ச் சாமிவேல் இகபர சுகம் பெறவே.

---

கோயமுத்தூர் ஜில்லா உடுமலைப்பேட்டை
ம-ள-ஸ்ரீ அ. முத்துசாமி சரப கவிராயர்.
அவர்கள் சொன்ன
அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

௧. பருவம் பெறுமுன் பெண்ணையொரு பயலுக்கேதான் மணமுடித்து
வருவம் புகலூற் சிக்கிரத்தில் மரணமாக்கு மதிபிலிகாள்
உருவம்புகு மானுடச் சிசுவின் உற்பத்தி சிந்தாமணியாற்
கருவந் தடைந்தபின் செய்யுங் கருமந் தெரிந்து வாழ்வீரே.

நெஞ்சின் காதல் மிகுந்து நேர்ப்ப சேர்ந்து பின்னரடியோடே
பஞ்சிற் கனலாவர் சிசுவுற்பத்தி சிந்தாமணி பாரார்
பிஞ்சிற் பழுத்த தம்பதிகள் பிள்ளைப் பேற்றை விரும்பினுமே
கொஞ்சிக் குதலையுடன் வாழ்வார் குறித்திந் நூலைப் படித்தவரே.

பூவாமடவார் பூத்து வந்து புணர்ந்து கருவைச் சுமந்து வெம்பிச்
சாவா விதமும் வயிற்றிருந்து தடைப்பட்டதோ அடைப்புடனே
நோவா விதமுஞ் சிசுவை வெளிநோக்கி மகிழக் கருத் துடையோர்
மாவார் சிசுவுற்பத்திச் சிந்தாமணி நூல் விலைக்கு வாங்குவரே.

ஏதோ புணர்ச்சி யாயினபின் னிருக்க விருக்கப் பெருத்த தும்பி
மாதோர் சிசுவை வருத்தமின்றி வழங்கு முறையை மனதுகொண்டப்
பாதோர்களுக்குத் தகுஞ் சிசுவுற்பத்தி சிந்தாமணி நூலைத்
தீதோட்டிட வூடாடியுற்றுத் தெளிவீர் குறைவு சேராதே.

ஓங்கு துயரக் கற்பமுற்ற ஒருத்தி பிழைக்க மருத்துவத்துக்
கேங்கு முயற்சியா லலைவீரிலையே விழவுபட்டுழவீர்,
வாங்கு சிசுவுற்பத்தி சிந்தாமணி நூற்பொருளை கண்ணுணர்ந்தால்
தாங்கு புகழ்ச் சந்தானமுண்டு சற்பாக்கியமுந் தழைப்பீரே.

முந்து தமிழ் நூலாங்கிலியர் முறை சேர் பலநூல் வைப்புகளில்
தந்த கருத்தை யொருங்கு நன்கு சுகமே யுய்யத் தந்தனதால்
வந்த சிசுவுற்பத்தி சிந்தாமணி மானுட சாத்திரமிதுதான்
எந்த விதத்து முமக்குதவி யிங்காயின தென்றுணர்வீரே.

பாலர் முதலாவிருத்தர் வரைப் பகருந் தாத்தி னெவர்களுக்குங்
கால நலத்தையுடற் பாதுகாப்பைப்பற்றி விரித்துரைக்கும்
நூலையறிந்தால் வயது வளர் நூற்றின் மேலு மகிழ்ந்திருப்பீர்
ஏலவிகமும் பரமுமிதிலின்பம் புதைய லென்பாமே.

வைத்திய நிபுணன் மந்திரத் தலைவன் மறவமாநகரிற் போதகர்கோன்
சித்தியல் பொருந்தே தெளிபுலியப்பத் தேவனுக்ககமகிழ் சிடன்
நத்திய சுசசங்கீத சாஹித்திய நாவல னெனவரும் கீர்த்திச்
சத்தியநாத தேசிகன் குமரன் சாமிவேலிதனைத் தந்தனனே.

---

தொண்டைமண்டலம் வல்லகாளத்திநகர் வீ. அயோத்திதாசக்
கவிராஜப் பண்டிதரவர்கள் புதல்வரும், இரங்கோன்
ராய்பாதூர பெ. மா. மதுரைப்பிள்ளை அவர்களின்
சமுகவித்வான்களிலொருவரும், சங்கீத சாஹித்ய
ஜோதிஷப் பண்டிதருமாகிய மஹா வித்வசிங்கம்
வீ. அ. இராமச்சந்திர புலவரவர்கள் விளம்பின

விருத்தம்.

பாரேறுந் தமிழருமைத் தெரிந்துபா வாணர்களைப் பரிந்தன்பாகச்
சீரேறுங் காத்தமா! மதுரைபாண்டியன் பதியிற் றிகழ்வி லாசத்
தாரேறுந் தற்றக்குடி நகர்வாசக் கெம்பீர தருமு தாரப்
பேரேறுஞ் சத்திய நாததே சிகசெம்மல் பெட்பாய்த் தந்த

